...தவிஷயாந்தர:) ஆழ்வாரையொழிந்த விஷயங்களிலே ...பண்ணி யறியாரென்கிறது. (க) "சிந்தைமற்றொன்றின் ...ல்லா" (உ) "மற்றொன்றினைக்காணுவே" (ங) "ஹாவொ... ...ருதி - பாவேநாந்யத்ரகச்சதி" என்னக்கடவதிறே. ... விஷயாந்தரங்களாகிறது - பாட்டுக்கேட்கு மிடமான பர...யம், கூப்பீடுகேட்கு மிடமான வ்யூஹவிஷயம், குதித்தவிட...ன விபவவிஷயம், வளைத்தவிடமான அர்ச்சாவதாரவிஷயம்; ...ல்லாம் வகுத்தவிடமான ஆழ்வாரேயாகையாலே மற்றொரு விஷயங்களையு மறியாதேயிருப்பர்.

(ச) "ஶா தாவி தா - மாதாபிதா" (ரு) "அன்னையாயத்தனாய்" (சு) "ஸவ-ஃமயெஃவ - ஸர்வம்யதேவ" என்று ஸமஸ்தஸாம்ஸாரிக விஷய ஸங்கங்களும் சடகோபாசார்யரென்றறுதியிட்டு ததந்யங்களை யறியாதவரென்னுமாம்.

ஆழ்வார், (சு) "எல்லாம் கண்ணன்" என்றிருக்குமாபோலே, (எ) "கோயில்கொள் தெய்வமெல்லாம் தொழவைகுந்தம கோயில் கொண்ட குடக்கூத்தவம்மான்—கோயில் கொண்டா... தன்னுடைமென்னெஞ்சகம்" என்றும், (அ) "மொய்த்தேதிரைமோதா தண்பாற்கடலுளான், பைத்தேய் சுடர்ப்பாம்பணைநம்பரனை-வைத்தேன் மதியால்" என்கையாலே, (கூ) "அவன் கிடந்தும் - என்னெஞ்சகலான்" என்றும், (க0) "உருப்பிணி நங்கையணிநெடுந்தோள் புணர்ந்தான் என்றுமெப்போது மென்னெஞ்சம் துதிப்பவுள்ளே ...க்கின்ற பிரான்" என்றும், * கண்கள் சிவந்திலபடியே... ...வனடியேனுள்ளான்" என்றும், (கஉ) "திருப்பேர் நகரான் திருமா...லிருஞ்சோலை பொருப்பேயுறைகின்ற பிரானின்று வந்து இருப்பேனென்றென்னெஞ்சுநிறையப்புகுந்தான்" என்றும், (கங) "விண் ...திருப்பாய்" என்கிறவைந்தும் "எனதாவியுள்மீதாடி" என்று...

(க) தி-வா எ-க0-க0 (சு) தி-வாய் சு-எ-க (கக) தி-வாய்-அ-அ-...
(உ) அமல-க0 (எ) தி-வாய்-அ-சு-ரு (கஉ) தி-வாய்-சு-க0-அ-சு
(ங) ரா-உத்-சு0-கரு (அ) தி-வாய்-அ-எ-க0 (கங) தி-வாய்-ச-கூ-ரு
(ச) ஸ்தோ-ர-ரு (கூ) பெரியதிருவ ரூரு
(ரு) கண்ணி ச (க0) தி-வாய்-எ-க0-ச

(க) "தேவர்கோலத் தொடுமானான்" என்கிற தெய்வவுருவிலே இவர்க்கு எல்லா முண்டாகையாலேயாய்த்து * கரியகோலத்திருவுருக காண்பனென்றதும்.

"அவிதிதவிஷயாந்தரஸ்ஶடாரே:" என்கையாலே சடாரியைக் காட்டிலும் அறியாமலிருப்பதான அந்யவிஷயங்களை யுடையவரென்கிறது. அதாவது - ஆழ்வார்கழிக்குமது - இளந்தெய்வதையாய்த்து. இவர்கழிக்குமது - கழிபெருந்தெய்வமாய், *கருந்தேவனெம்மான் கண்ணனை பெருந்தேவனையாய்த்து. "கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனென்னப்பனில் நண்ணி" என்றாரிறே. (உ) "உன்னித்து மற்றொருதெய்வம் தொழாள்" (ங) "ஒருமாதெய்வம் மற்றுடையமோயாமே" "தேவுமற்றறியேன்" என்றாய்த்து இவர்கள் பேச்சிருப்பது. இப்படி ஆழ்வாரில் வ்யாவ்ருத்தராயிருக்கிறவர்.

"ஶடாரேருபநிஷதாமுபகாந மாத்ரபோக:" என்கையாகிறவது - நாட்டியல்வொழிந்து சடரையோட்டின சடகோபன் * மொழிபட்டோடும் கவியமுதமான * யாழினிசைவேதத்தின், *பண்ணார் பாடலின் அநுபவரஸஜ்ஞராய், "பாவினின்னிசை பாடித்திரிவனே" "நாவினால் நவிற்றின்பமெய்தினேன் மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே" என்றிருக்கை யென்றபடி. இத்தால், அவரோபாதி அவர்ஸம்பந்தமுடையதும் உத்தேஶ்யமென்றாய்த்து இவர்விரும்புவது.

"அவிதிதவிஷயாந்தரஸ் ஶடாரே:" என்று - ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யம்சொல்லிற்று, "அபிசகுணவஶாத் ததேகஶேஷீ" என்று குணக்ருததாஸ்யமு முண்டென்கிறது. (அபிச) கீழ்ச்சொன்ன வளவன்றிக்கே, பின்னையும், குணவஶாத் தம்மை யெழுதிக்கொள்ளுகையாலே "ததேகஶேஷீ" என்கிறது. "குணவஶாத்" என்று த்ருதீயார்த்தே பஞ்சமியாய்க் கிடக்கிறது "ஆதலில், அன்னையாயத்தனா யென்னையாண்டிடும் தன்மையான் சடகோபனென்னம்பியே" என்றும், "பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல் நன்றாகத்திருத்திப்பணிகொள்வான், குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி" என்று மநுஸந்தித்த வாத்ஸல்யாதிகுண பூர்த்தியாலும், * குணைர்த்தாஸ்ய முபாகதராய் ததேகஶேஷியா யிருப்பாராய்த்து

(க) தி-வாய்-ரு க-க (உ) தி-வாய்-ச-கூ-க0 (ங) திருவாசிரி-எ

ஏவம்பூதரான மதுரகவிகள் "அண்ணிக்கு மமுதூறுமென்னு வுக்கே" என்னும்படியான வாங்மாதுர்யத்தை யுடையவர். (மம - ஹ்ருதயே) மதுரகவிகள் நிஷ்டையை அபேக்ஷிக்கிற வென்மநஸ்ஸிலே, அன்றிருந்து பட்டோலைகொண்ட நிலையோடே. (ஆவிரஸ்து) ஆவிர்ப்பவிக்கக்கடவர்; ஸந்நிதாநம் பண்ணக்கடவர். இத்தால் அநுகூலரான ஆசார்யபாரதந்த்ரர் ஆதரணீயரென்னு மர்த்தம் சொல்லிற்றாய்த்து. (க)

மூ;—வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூ—ரேறெங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியாரெம்மை
யாள்வாரவரே யரண். (உ)

அவ;—(வேறொன்றும் நானறியேன்) ஆழ்வாரை யொழியத் தேவுமற்றறியாத மதுரகவிகள் நமக்கு ஸ்வாமியும் ரக்ஷகருமென்கிறது.

வ்யா;—"வேறொன்றும் நானறியேன், வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபன் வண்குருகூரேறெங்கள் வாழ்வாமென்றேத்தும் மதுரகவியா ரெம்மையாள்வார்" என்னுமளவும் மதுரகவி சொல்லை யநுஸரித்துச் சொல்லிபடி ; மேல் ஏவம்விதரானவர் நமக்கு சேஷியும் சரண்யருமென்கிறது.

"தேவுமற்றறியேன்" என்றதை - "வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபன்" என்றது. "காரிமாறப்பிரான்" "சடகோபனென்னம்பி" என்றத்தை "மாறன் சடகோபன்" என்றது. "பெரிய வண்குருகூர் நகர்நம்பிக்காளுரியனு யடியேன் பெற்றநன்மையே" என்றத்தை "வண்குருகூரே றெங்கள்வாழ்வாம்" என்றது. "எழுமையுமெம்பிரான் நின்று தன்புகழேத்த வருளினன்" என்றத்தை "ஏறெங்கள் வாழ்வா மென்றேத்தும் மதுரகவியார்" என்றது. "என்னையாண்டிடும் தன்மையான்" என்றத்தை "எம்மையாள்வார்" என்கிறது. அவரை யாளுகிறவர் ஆழ்வார்; நம்மையாளுகிறவர் இவர். அவரே, அரண் - ரக்ஷை. "சரண்" என்று பாடமான போதும் ரக்ஷையென்றே அர்த்தம். மதுரகவிகளுக்கு எல்லாம் ஆழ்வாரேயானாப்போலே நமக்கு எல்லாம் மதுரகவிகளென்கிறது.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

தனியன் வ்யாக்யாநம்

முற்றிற்று.

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:.

## நஞ்சீயாருளிச்செய்த

## கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம்.

# அவதாரிகை.

---

ஆத்மாவுக்கு உத்தமம் மத்யமம் அதமமென்ற புருஷார்த்தங்களாவன - சிதசிதீஶ்வர தத்வத்ரயங்கள். அவற்றில் அல்பாஸ்திரத்வாதி தோஷங்களாலே ப்ராக்ருததத்வம் அதமபுருஷார்த்தம். ஜந்மமரணாதிஷட்பாவவிகாரரஹிதமாய் நிரதிஶயஸுகரூபமாயிருந்ததேயாகிலும் பகவதேகாந்தமான கல்யாணகுணவைதூர்யத்தாலே *தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பமான ஆத்மாநுபவம் மத்யமபுருஷார்த்தம்.

ஸர்வேஶ்வரன் புருஷார்த்தமென்னுமிடத்தில், கரும்புதின்பார் வேர்ப்பற்றையும் நுனியையும் கழித்து நடுவைக்கொள்ளுமாபோலே ஶ்ரீவைகுண்டநாதனையொழிய க்ருஷ்ணாவதாரமே புருஷார்த்தமாகவும், அதிலே கம்ஸவதத்துக்கு பின்பாகக்கழித்து, முன்பு வெண்ணெய் களவுகண்டு யசோதைப் பிராட்டியார்கையாலே கட்டுண்டு அவளுக்கஞ்சிநின்ற அவஸ்த்தையையுடைய க்ருஷ்ணனே உபாயமும் உபேயமும் விரோதிநிரஸகம் பண்ணுவானும் மற்றுமெல்லாமென்றும் அவனுடைய ஸௌந்தர்யஶீலாதிகளிலே அகப்பட்ட ஶ்ரீவைஷ்ணவர்களே இவ்வாத்மாவுக்கு நாதபூதரும் நிரதிஶய புருஷார்த்தபூதருமென்று ஆழ்வார்நிர்ணயித்தார்.

ஶ்ரீமதுரகவியாழ்வார் ஶ்ரீஶத்ருக்நாழ்வானைப்போலே அத்தைப்பூர்வபக்ஷமாக்கி, எம்பெருமான் பக்கலிலும், ஶ்ரீவைஷ்ணவர்கள் பக்கலிலும் ஆழ்வார்பண்ணினதடைய ஆழ்வார் திருவடிகளிலேயாக்கி அதுருசித்து அத்தைப்பேசி அநுபவிக்கிறார்.

அவதாரிகை முற்றிற்று.

---



ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு நம்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யாநம்.

# அவதாரிகை.

---

ஐஶ்வர்யம் முதலாக ஸகலபுருஷார்த்தங்களையும் விதிக்கிற ஶாஸ்த்ரமர்யாதையிலே நின்றார்கள் ருஷிகள். ஶாஸ்த்ர தாத்பர்யமாய் உத்தமபுருஷார்த்த லக்ஷணமான பகவத்ப்ராப்தியிலே நின்றார்கள் ஆழ்வார்கள். இப்புருஷார்த்தத்தினெல்லைநிலமான ததீய ஶேஷத்வத்திலே நின்றார் ஸ்ரீமதுரகவிகள். இதுதான் இவர்க்கு வந்தவழியென்னென்னில் ; ஆழ்வாரை, * பொய்ந்நின்ற ஞானம் துடங்கி * அவாவற்று வீடுபெற்றவளவும் செல்ல அநுவர்த்தித்தவிடத்தில், அவர் தமக்கு உத்தேஶ்யமாகத் திருவாய்மொழியிலே * பயிலுஞ்சுடரொளி, * நெடுமாற்கடிமையிலே புருஷார்த்த காஷ்ட்டையாக ததீயஶேஷத்வத்தையே அறுதியிடுகையாலே அவருடைய ருசிபரிக்ருஹீதமான வர்த்தத்தையே பற்றுகிறார் இவர்.

இதுதான் ஸ்ரீராமாயண புருஷர்களில் ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பக்கலிலே காணலாம். (க) "வெதொவ வெூஹணாய-ாய தாவ ஹாஹய தயூஷ பை: - வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயதப்ரபு:"என்கிறபடியே வேதோபப்ரும்ஹணார்த்தமாகப் பிறந்த ஸ்ரீராமாயணத்தில் தர்மஸம்ஸ்தாபநார்த்தமாக அவதரிக்கையாலே ஸ்ரீராமாயண புருஷர்கள் நால்வரும் நாலுதர்மத்தை யநுஷ்டித்துக் காட்டினார்கள்

"ஒருவன் சொல்விற்று ஒருவன் செய்யக்கடவன்" என்கிற தர்மம் நேராகவழிந்து கிடக்கையாலே பித்ருவசந பரிபாலநாதிகளாலே ஸாமாந்யதர்மத்தை யநுஷ்டித்தார் பெருமாள். (உ) "விதுவ-வ ந நிெதஶாத் -பிதுர்வசந நிர்த்தேஶாத்" (ங)"அமஹூவவநாத் - அகஸ்த்யவசநாத்" (ச) "ஸஹீவவநாத் -

---

(க) ரா-பா-ச-ரு (உ) ரா-பா-க-உச (ங) ரா-பா-க-சஉ

(ச) ரா-பா-க-ஊ௦

ஸுக்ரீவவசநாத்" (க) "ஸமுத்ரவசநாத் - ஸமுத்ரவசநாத்" என்றிறே இவருடைய அநுஷ்டாநங்கள்.

"ஶேஷபூதன் ஶேஷியைக்குறித்து கிஞ்சித்கரிக்கக்கடவன்" என்கிற விசேஷதர்மத்தை யநுஷ்டித்தார் இளையபெருமாள் (உ) "குருஷ்வமாமநுசரம் - குருஷ்வமாமநுசரம்" (ரு) "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்றிறே இவருடைய அநுஷ்டாநம்.

(ச) [ராஜ்யஞ்சதவரக்ஷ்யமஹம் வேலேவஸாகரம் ப்ரதிஜாநாமிதேவீர மாபூவம் வீரலோகபாக் - ராஜ்யஞ்சதவ ரக்ஷ்யமஹம் வேலேவஸாகரம் - ப்ரதிஜாநாமிதேவீர மாபூவம்வீர லோகபாக்] [ராஜ்யஞ்சதவரக்ஷ்யம்] (ரு) "ரக்ஷாதர்மேணபாலந - ரக்ஷாதர்மேணபாலந" என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகையன்றிக்கே உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன். எனக்கு தாதர்த்யம் ஸ்வரூபமானாலும், உம்மால் என்னை மீறவொண்ணாதுகாணும் [அஹம்வேலேவஸாகரம்] கடலுக்குக் கரை ஶேஷமாயிருக்கச்செய்தேயும் கரையை அதிக்ரமிக்கமாட்டாதிறே கடல். அப்படியே நீர்பெரியீரென்ன, உம்மால் என்னை விஞ்சவொண்ணாது காணும். [ப்ரதிஜாநாமி] நான் இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். [தேவீர] ஒருகோழைமுன்னேயோ ப்ரதிஜ்ஞைபண்ணுகிறது. ப்ரதிஜ்ஞை பண்ணிறல் அத்தைத் தலைக்கட்டித்தரவல்ல ஆண்பிள்ளைத் தனமுடைய உம்முடைய திருமுன்பேயன்றோ?. [மாபூவம்] இப்படி செய்திலேனாகில் உம்முடைய ஸந்நிதியில் வர்த்திக்கப் பெறாதொழிகையன்றிக்கே உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப்பெறாதவனாகிறேன் [வீரலோகபாக்] உம்மை முடிசூடி அநுபவிக்கப் பாரித்து அது பெறாதேபோன சக்ரவர்த்திபுக்க லோகம் புகுகிறேனென்கிறபடியே நிர்ப்பந்தித்தடிமை செய்கையன்றிக்கே, ஶேஷியுகந்தவடிமை செய்யக்கடவதென்னுமிடத்தை யநுஷ்டித்தான் ஸ்ரீபரதாழ்வான்.

அப்படியிருக்கிற இவனையல்ல தறியாதேயிருக்கையாலே பகவச்சேஷத்வ காஷ்டையான ததீயஶேஷத்வத்தை யநுஷ்டித்

(க) ரா-பா-க-அ௦ (உ) ரா-அயோ-ருக-உஉ (ரு) ரா-அயோ-ருக-உரு
(ச) ரா-அயோ-உரு-உஅ (ரு) ரா கிஷ்-க-கஉஅ

தான் ஶ்ரீஶத்ருக்நாழ்வான். (௧)[𑌗𑌚𑍍𑌛𑌤𑌾 𑌮𑌾𑌤𑍁𑌲𑌕𑍁𑌲𑌂 𑌭𑌰𑌤𑍇𑌨 𑌤𑌦𑌾𑌨𑌘𑌃 । 𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑍋 𑌨𑍀𑌤𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍁𑌰𑌸𑍍𑌕𑍃𑌤𑌃 - கச்சதா மாதுலகுலம் பரதேநததாநக: । ஶத்ருக்நோ நித்யஶத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:] .

"கச்சதா" என்கிற வர்த்தமாந நிர்த்தேஶத்தாலே தனக்கொரு ப்ரயோஜநமுண்டாயாதல், பூர்வக்ஷணத்தில்போகுகைக்கு நினைவுண்டாயாதலின்றியே அவனையொழிய ஜீவிக்கமாட்டாமையாலே போனானென்கை. [மாதுலகுலம்]யுதாஜித்து அழைத்துவந்ததும் அவனையாகையாலே போக்கிலுத்தேஶ்யம் அவனுக்கு; இவனுக்கு அவன்பின்போகை உத்தேஶ்யமாய்ப் போனானென்கை. [பரதேந] (௧) "𑌭𑌰𑌤 𑌇𑌤𑌿 𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍍𑌯 𑌭𑌰𑌣𑌾𑌤𑍍 - பரத இதிராஜ்யஸ்யபரணாத்" என்கிறபடியே சக்ரவர்த்தியும்துஞ்சி, பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப்போய், இளையபெருமாளும் தொடர்ந்தடிமை செய்யவேணுமென்றுபோய், ஶ்ரீஶத்ருக்நாழ்வானும் தன்னையல்லதறியேனென்றிருக்கிற தசையிலே ராஜ்யத்தை வஹித்துக் கொண்டிருந்தானென்கை.

(ததா) இருவரும் ராஜபுத்ரர்களாய் நக்ஷத்ரபேதமு முண்டாயிருந்தால் பிரித்து முஹூர்த்தமிட்டுப் போகப்ராப்தமாயிருக்க, அவன்போனதுவே தனக்கு முஹூர்த்தமாகப் போனானென்கை [அநக:] அக (வ) மில்லாதது இவனுக்கிறே. அல்லாதார்க்கு ராமபக்தியும் கலசியிருக்கையாலே பாபமிஶ்ரஜீவநமென்கிறது. ராமபக்தியைப் பாபமென்னப்போமோ வென்னில், பாபத்தில் புண்யம் நன்றாயிருக்க மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும் (௨) "𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑍇 𑌵𑌿𑌧𑍂𑌯 - புண்யபாபேவிதூய" என்றுகொண்டு பாபஶப்தவாச்யமாகாநின்றது. ஆகையாலே பரதாநுவ்ருத்தியாகிற உத்தேஶ்யத்துக்கு விரோதியாகையாலே ராமபக்தியும் பாபமாயித்தனை.

(ஶத்ருக்ந:) பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமம் சாத்துகிற வஸிஷ்டபகவான் பெருமாள் கண்டாரை அழகாலே துவக்கவல்லரென்று தோற்றியிருக்கையாலே ராம

(௧) ரா அயோ-௧ ௧ (௨) (௩) முண்ட-௩-௧ ௩

னென்றும், இளையபெருமாளுக்கு கைங்கர்யமே நிரூபகமாகத் தோற்றுகையாலே லக்ஷ்மணனென்றும், (க) "பாத இதிராஜ்யஸ்யபாணுத்" என்று தோற்றியிருக்கையாலே ஸ்ரீபாதாழ்வானென்று திருநாமம்சாத்தி, இவனுடைய ஸந்நிவேஶத்தைக் காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படியிருக்கக் காண்கையாலே ஶத்ருக்நனென்று திருநாமம் சாத்தினான்.

[நித்யஶத்ருக்நः] பாஹ்யஶத்ருக்களை யன்றிக்கே ஆந்தரஶத்ருவான இந்த்ரியங்களையும் ஜயித்திருக்குமென்கை. இந்த்ரியஜயத்துக்கு எல்லை யெவ்வளவென்னில், (உ) "புஂஸாந்த்ருஷ்டி சித்தாபஹாரிணம் - பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்கிற ராமஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணாதிருக்கை. அதாவது - பெருமாளைப்பற்றும்போதும் தன்னுகப்பாலன்றியே அவனுகந்த விஷயமென்று பற்றுகை.

[நீதः] ராஜாக்கள் போம்போது உடைவாள் மற்றொன்று கொண்டுபோமாபோலே அவன்கொண்டுபோகப் போனான். த்ரவ்யத்துக்கு த்ரவ்யாந்தரங்களோட்டை ஸம்யோகம் உபயநிஷ்டமாயிருக்கும். அதுபோலன்றியே ஜாதிகுணங்களோபாதிபோனான். [ப்ரீதிபுரஸ்க்ருதः] "தமயன்பின்னே தம்பிபோகக்கடவன்" என்கிறமுறையாலே போனானல்லன். (ங) "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்ற இளையபெருமாளைப்போலே எல்லாவடிமைகளும் போனவிடத்திலே செய்யலாமென்று பாரித்துக்கொண்டு ப்ரீதிப்ரேரிதனாய்ப் போனான். படைவீட்டிலிருந்தால் பரதாநுவ்ருத்தி, ஒருவர்க்கிட்ட சோற்றைப் பகிர்ந்துண்பாரோபாதி ஒ (ஹ) கரியாயிறேயிருப்பது.

பாஷ்யகாரர், "அநகः" "நித்யஶத்ருக்நः" என்றவிதுக்கு ப்ரமேயமாக சொல்கட்டிலே "ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி அவனையல்லதறியாத ஸ்ரீபாதாழ்வானையல்லதறியாதபடியானான்" என்றருளிச்செய்வர். இதுவே ப்ரயோஜநமானால் சொல்லும்மிகையெல்லாம் பொறுக்குமிறே. "அநகः" "நித்யஶத்ருக்நः" என்று பாவநத்வத்தாலும் போக்யதையாலும் அவ

(க) (உ) ரா அ-ங-உக (ங) ரா-அயோ-ஙக-உரு

னைப்பற்றினென்னவுமாம், இப்படி இவனைப்போலே யிருப்பா ரொருவர் ஸ்ரீமதுரகவிகள்.

இனி ததீயர் உததேஸ்யரென்னுமிடத்தில் முதலடியிலே அஜ்ஞாதஜ்ஞாபநத்தாலே பகவத்விஷயத்திலே மூட்டியும், இவன் பகவத்விஷயத்திலே அவகாஹித்து குணாநுஸந்தாநத்தாலல்லது செல்லாதபடியானால் (க) "போதயந்த: பரஸ்பரம்" என்கிறபடியே போதுபோக்குகைக்கு உசாத்துணையாயும், ப்ராப்திதசையில் வந்தால் (உ) "யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்திதேவா:" என்கிறபடியே ஸாத்யவிவ்ருத்திருபத்தாலும் புருஷகாரபாவத்தாலும் உத்தேஸ்யராவர்கள். இப்படி ஸர்வாவஸ்தையிலும் ததீயரே உத்தேஸ்யரென்று அத்யவஸித்துத் தமக்கு உபகாரகரான ஆழ்வார்தம்மையே பற்றுகிறார்.

நம்பிள்ளை ஈட்டின் அவதாரிகை

முற்றிற்று.

---

(க) கீதை க0-கூ (உ) புருஷஸூ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு
## பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை
## யருளிச்செய்த வ்யாக்யாநம்

# அவதாரிகை.

(க) "த்ரைகுண்ய விஷயா வேதா: - நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந" என்கிறபடியே ஐஸ்வர்யாதி ஸகலபுருஷார்த்தங்களையும் யதாதிகாரம் விதிக்கிற வேதமர்யாதையிலே நின்றார்கள் ரிஷிகள்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநத்தின்
## அ ரு ம் ப த ம்.

## அவதாரிகை.

திருமந்த்ரார்த்த ப்ரதிபாதகங்களான திவ்ய ப்ரபந்தங்களை வ்யாக்யாநம் செய்தருளுகிற பரம காருணிகரான பெரியவாச்சான்பிள்ளை தம்முடைய பரம க்ருபையாலே * வேதத்துக் கோமென்னுமதுபோலுள்ளதுக்கெல்லாம் சுருக்கான திருப்பல்லாண்டுக்கும் * மத்திமமாம் பதம்போல் சீர்த்த மதுரகவி செய்கலைக்கும், த்ரிதீய பதார்த்த ப்ரதிபாதகங்களான மற்றுமுள்ள திவ்ய ப்ரபந்தங்களுக்குமுள்ள தாத்பர்யங்களை யறிந்து எல்லாருமுஜ்ஜீவிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, அதில் மத்யம பதார்த்த நிஷ்டா ப்ரதிபாதகமான கண்ணிநுண்சிறுத்தாம்பின் பொருளை யறிவிக்கக் கோலி, வக்த்ருவைலக்ஷண்யத்தையும் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தையும் அருளிச்செய்யவே ப்ரபந்த வைலக்ஷண்யம் அர்த்தஸித்தமாமாகையாலே ப்ரதமம் வக்த்ரு வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் (த்ரைகுண்யேத்யாதி - இருப்பாரொருவராய்த்து ஸ்ரீமதுரகவிகள், என்னுமளவும். 'இனி" இத்யாதி வாக்யங்களில் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யமென்று கண்டுகொள்வது.

அதில் வக்த்ரு வைலக்ஷண்ய ஸித்த்யர்த்தமாக ருஷிகளுக்கும் ஆழ்வார்களுக்குமுள்ள நெடுவாசியை யுபபாதிக்கிறார் (த்ரைகுண்யேத்யாதி), "த்ரயோகுணா:-த்ரைகுண்யம்-ஸத்வரஜஸ்தமாம்ஸி, ஸத்வரஜஸ்தம: ப்ரசு

(க) கீதை-உ-சரு

அதாகிறது - வேதோபப்ரும்ஹண முகத்தாலே சேதநருடைய குணாநுகூலமாக ஐஶ்வர்யாதி க்ஷுத்ரபுருஷார்த்தங்களையும், பரமபுருஷார்த்த லக்ஷணமான மோக்ஷத்தையு முபதேஶிக்கை. (௧)“𑌪𑍍𑌰𑌾𑌜𑌾𑌪𑌤𑍍𑌯𑌂 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 - ப்ராஜாபத்யம் க்ருஹஸ்தாநாம் ப்ராஹ்மம் ஸந்யாஸிநாம் ஸ்ம்ருதம்” என்று தொடங்கி கேவலாஶ்ரமாநுஷ்டாநங்களையே ஐஶ்வர்ய விஶேஷங்களுக்கு ஸாதநமாக வுபதேசித்து, (௨) “𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑌮𑍃𑌤𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑌨𑍍𑌤𑍋𑌷𑌕𑌾𑌰𑌿𑌣𑌾𑌮𑍍-யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணும்” என்று கைவல்ய நிஷ்டர்க்கு ஆத்மப்ராப்தியை யுபதேசித்து (௩)“𑌏𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌨𑌃 𑌸𑌦𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌧𑍍𑌯𑌾𑌯𑌿𑌨𑍋 𑌯𑍋𑌗𑌿𑌨𑍋 𑌹𑌿 𑌯𑍇 । 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌯𑌦𑍍𑌵𑍈 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑍂𑌰𑌯𑌃 - ஏகாந்திநஸ்ஸதா ப்ரஹ்மத்யாயிநோ யோகிநோ ஹியே। தேஷாம்தத்பரமம் ஸ்தாநம் யத்வை பஶ்யந்தி ஸூரய:” என்று நித்யஸத்வஸ்தர்க்கு பகவத்ப்ராப்தியை உபதேஶித்தானிறே ஶ்ரீபராசரபகவான்.

இனி ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்களுக்கு நெடுவாசியுண்டு. எங்ஙனேயென்னில், வேததாத்பர்யமாய் உத்தமபுருஷார்த்தமான பகவத் ப்ராப்தியிலே நிஷ்டராய், பிறர்க்கு உபதேஶிக்குமிடத்திலும் ஶாஸ்த்ரஸித்தமான ஐஶ்வர்யாதிகளையும் த்யாஜ்யமாக உப

---

ரா: புருஷா:-த்ரைகுண்ய ஶப்தேநோச்யந்தே, தத்விஷயாவேதா: - 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌗𑍁𑌣𑌾𑌃. 𑌤𑍍𑌰𑍈𑌗𑍁𑌣𑍍𑌯𑌂 𑌸𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌾𑌂𑌸𑌿; 𑌸𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌃 𑌪𑍍𑌰𑌚𑍁𑌰𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌃 𑌤𑍍𑌰𑍈𑌗𑍁𑌣𑍍𑌯𑌶𑌬𑍍𑌦𑍇𑌨𑍋𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇; 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌾 𑌵𑍇𑌦𑌾𑌃” என்றிறே பாஷ்யம். இத்தை யுட்கொண்டு (யதாதிகாரம் விதிக்கிற) என்கிறது.

கீழ்வாக்ய விவரணம் (அதாகிற தித்யாதி), இப்படி யுபதேஶித்தார்களோவென்ன, ருஷிகளில் தலையான ஶ்ரீ பராஶர பகவான்றானே சொன்னானென்று காட்டுகிறார் ப்ராஜாபத்ய மித்யாதி). (ப்ராஜாபத்யம்) ப்ரஜாபதிலோகம் (ப்ராஹ்மம்) ப்ரஹ்மலோகம்.

“எடுத்திலம்” “அண்டக்குலம்” என்கிற பாட்டுக்களையும், ஒருநாயகம் முதலான திவ்யஸூக்திகளையும் நோக்கி வாசியை யுபபாதிக்கிறார் (வேத

---

(௧) வி-பு-௧ ௬-௩௭ (௨) வி-பு-௧ ௬-௩௮ (௩) வி-பு-௧-௬-௩௯

தேசிக்குமவர்களிறே. இவ்வாழ்வார்களுக்கும் மதுரகவியாழ்வார்க்கும் நெடுவாசியுண்டு, எங்ஙனே யென்னில், இவ்விலக்ஷண புருஷார்த்தத்தினுடைய காஷ்டையான ததீயஶேஷத்வத்தளவிலே வரப்புகுராநின்றார் ஸ்ரீமதுரகவிகள்.

இவர்க்கு இவ்வேற்றம் வந்தபடி யெங்ஙனேயென்னில், ஆழ்வார் * பொய்ந்நின்ற ஞானம் தொடங்கி "அவாவற்று வீடுபெற்ற" என்னுமளவும் செல்லவநுபவித்த விடத்தில் ஆழ்வார்தமக்குப் புருஷார்த்த காஷ்டையாக அபிமதமான ததீய ஶேஷத்வத்தைப் பற்றினார். "ஆசார்யருசி பரிக்ருஹீதமான வர்த்தமே ஸாத்விகர்க்குப் பரிக்ராஹ்யம்" என்னுமிடம் மஹாபாரதஸாரமான ஸ்ரீஸஹஸ்ரநாமாத்யாயத்தில் சொல்லிற்றிறே.

ஸ்ரீபீஷ்மர்பக்கலிலே ஸகலார்த்தங்களையும் குறைவறக்கேட்ட தர்மபுத்ரன் "இவர்தமக்கு உத்தேஶ்யமாக ஸ்வீகரித்த தத்வஹிதங்களே நமக்கு உத்தேஶ்யம்" என்று நினைத்து, (க) கோய ஊ-லுவ-யஊ-ாணா० ஹவ தஃ வாஉோஊ தஃ - கோதர்மஸ்ஸர்வதர்மாணாம்பவதஃ பரமோமதஃ" என்று கேட்க, "ஊஷஃஃ ஸவ-யஊ-ாணா० யஃஊ-ாயிக தஃஊஊ தஃ - ஏஷமேஸர்வதர்மாணாம் தர்மோதிகதமோமதஃ" என்று தன்னுடைய ருசிபரிக்ருஹீதமானவர்த்தத்தை யுபதேசித்தாரிறே. த்ரிபுராதேவியாரை "ப்ராமண ப்ராபல்யத்தாலேயோ 'எம்பெருமானே ஆஶ்ரயணீயன்' என்று நீங்

தாத்பர்யமித்யாதி ஆழ்வார்களிலும் இவருக்குண்டான தன்னேற்றம் காட்டுகிறார் (இவ்விலக்ஷணேத்யாதி. (ததீயஶேஷத்வத்தளவிலே) ததீயஶேஷத்வ மாத்ரத்திலே,

(ஆழ்வார்தமக்கு) முழுச்சொல், (ததீயஶேஷத்வத்தை) என்ற வநந்தரம் "மதுரகவிகள்" என்று கூட்டிக்கொள்வது, ஆழ்வாருக்கு அபிமதமானால் இவர்க்கு அத்தைப்பற்ற வேணுமோவென்ன (ஆசார்யேத்யாதி).

ஸ்ரீ ஸஹஸ்ரநாமாத்யாயத்திலே சொன்னப்ரகாரமேதென்னவருளிச்செய்கிறார் (ஸ்ரீபீஷ்மரித்யாதி), "ஆசார்ய ருசி-ரிக்ருஹீதமான வர்த்தமே பரிக்ராஹ்யம்" என்னு மதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்ய மருளிச்செய்கிறார் (த்ரிபுரா தேவியாரித்யாதி), (த்ரிபுராதேவியார்) ராஜ

(க) ப்ார-ஸஹஸ்ரநாமா.

கள் பற்றிற்று" என்ன, "அதுவொன்று மன்று, எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தேவதையை யாஸ்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கும் ஆஸ்ரயணீய வஸ்துவாகக்கடவது" என்றாள். அந்த ந்யாயத்தாலே ஆழ்வார் தமக்குத் தஞ்சமாக நினைத்திருக்கும் ததீயஸேஷத்வத்தையே இவரும் தமக்குப் புருஷார்த்தமாக அத்யவஸிக்கிறார்.

இதுதான் ராமாயண புருஷர்களில் ஸ்ரீஸத்ருக்நாழ்வான் பக்கலிலே அநுஷ்டாநஸேஷமாகக் காணப்பட்டது. எங்ஙனேயென்னில், (க) "வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:" என்கிறபடியே வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான ஸ்ரீராமாயணத்தில் ராமாயண புருஷர்கள் நால்வரும் தர்மஸம்ஸ்த்தாபநார்த்தமாக அவதரிக்கையாலே நால்வரும் நாலர்த்தத்தை யநுஷ்டித்துக்காட்டினார்கள்.

(உ) "கர்த்தாகாரயிதாசஸ:" என்

பத்நி (காடிச்சால்மூலை) ஈஸாநபதிக்கு, அவ்விடத்துக்கு தேவதை-ருத்ரன். அவனை இப்படிச்சொன்னது பேர்சொல்லவும் அஸஹ்யமாகையாலே, உக்தத்தை ப்ரக்ருதோபயோகியாக்குகிறார் (அந்தந்யாயத்தாலே யித்யாதி).

கீழ்ப்ரமாண முகத்தாலும் ஐதிஹ்ய முகத்தாலும் ஸித்கித்தவர்த்தத்தின் அநுஷ்டாநமும் காட்டுகிறார் (இதுதானித்யாதி), (அநுஷ்டாந ஸேஷம் என்றது பஹுவ்ரீஹி, இத்தால் செய்தற்றதென்றபடி, ஸத்ருக்நாழ்வா னநுஷ்டாநந்தான் உபாதேயமானபடி யென்னென்ன, (வேதோப ப்ரும்ஹணேத்யாதி,) தர்மஸம்ஸ்த்தாபநார்த்தம் நால்வரு மவதரிக்கையாலே ஸ்ரீ ஸத்ருக்நாழ்வானதுவும் உபாதேய மென்று கருத்து. [தௌ-குஸலவௌ ப்ராபு:-வால்மீகி:, அக்ராஹயத-க்ரஹிப்பித்தான்] மற்றை மூவர்படியுமன்றிக்கே ஸ்ரீ ஸத்ருக்நாழ்வான்படியை அநுஷ்டிக்கைக்கு நியாமக மென்னென்கிற ஸங்கையிலே இதுவே பரம தர்மமென் றருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி தாரதம்யம் காட்டுகைக்காக, ப்ரயோஜநகதநமுகேந பெருமாள் ப்ரகாஸிப்பித்த வம்ஸமின்னதென்கிறார் (கர்த்தா

(க) ரா-பா-ச-ச. (உ) ரா-ஸ்-ரு-கக.

கிறபடியே அநுஷ்டிப்பிக்கைக்காக "ஒருவன் சொல்லிற்றை ஒருவன் செய்யக்கடவன்" என்கிறமுறை நேராக அழிந்து கிடக்கையாலே பித்ருவசந பரிபாலநாதிகளாலே ஸாமாந்யதர்மத்தை யநுஷ்டித்தார் பெருமாள். (௪)"பிதுர்வசந நிர்த்தேஸாத்" (௨) "அகஸ்த்ய வசநாத்" (௩) "ஸுக்ரீவவசநாத்" என்றிறே இவாநுஷ்டாநம்.

"நிருபாதிக ஶேஷியைக்குறித்து ஶேஷபூதன் கிஞ்சித்கரித்துத்தான் உளனாகக்கடவன்" என்கிற விஶேஷதர்மத்தை யநுஷ்டித்தார் இளையபெருமாள். (௫) "குருஷ்வமாமநுசரம்" (௬) "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" (௭) "ஸப்ராதுஃ" இத்யாதி.

(௭) "ராஜ்யஞ்சத வாபேக்ஷ்ய மஹம்வேலேவஸாகரம் - ப்ரதிஜாநாமிதேவீர மாபூவம் வீரலோகபாக்" என்கிறபடியே நிர்ப்பந்தித்தடிமை செய்கையன்றிக்கே "ஶேஷியுகந்தவடிமையே ஶேஷபூதனுக்கு கர்த்தவ்யம்" என்னுமிடத்தை யநுஷ்டித்தார் ஸ்ரீபாதாழ்வான். தன் செல்லாமையைப்பாராதே ஶேஷியுடைய ஹ்ருதயத்தைப் பார்த்து (அ) "ஆநந்தோஹ ரதம்ஹ்ருஷ்டஃ" என்று ப்ரீதியோடே மீண்டானிறே.

---

வித்யாதி), (முறை) மர்யாதை. அநுஷ்டித்தாரென்கைக்கு ப்ரமாணங்கள் (பிதுர்வசநேத்யாதி).

ராமாநுஜ ஸித்தாந்தத்தை ஸப்ரமாணமாகக் காட்டுகிறார் (நிருபாதிகேத்யாதி).

இளையபெருமாள் வ்ருத்தியைக் காட்டிலும் ஸ்ரீ பாதாழ்வானுடைய அநுஷ்டாநத்துக்கு வைலக்ஷண்யம் காட்டுவாராக. இளையபெருமாள் படிக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (ராஜ்யஞ்சேத்யாதி)

---

(௧) ரா-டா-௧-௨௪. (௪) ரா-அயோ-௩௧-௨௨ (௭) ரா-அயோ-௨௩-௨௮.
(௨) ரா-டா-௧-௪௨. (௫) ரா-அயோ-௩௧-௨௫ (அ) ரா-அ-௪௩-௧
(௩) ரா-பா-௧-௭௦. (௬) ரா-அயோ-௩௧-௧.

[ராஜ்யஞ்சதவரக்ஷேயம்] (க) "ராக்ஷயசேனைண வயே ந - ரக்ஷதர்மேண பலேந" என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகையன்றிக்கே, உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கட வேன். எனக்குதாதார்த்யம் ஸ்வரூபமானாலும் உம்மாலென்னை மீறவொண்ணாதுகாணும். [அஹம்வேலேவஸாகரம்] கடலுக்குக்க ரை சேஷமாயிருக்கச் செய்தேயும் கரையை அதிக்ரமிக்கமாட்டா திறேகடல்; அப்படியே நீர் பெரியீரென்று உம்மாலென்னை விஞ்ச வொண்ணாதுகாணும் [ப்ரதிஜாநாமி] நான் இப்படி ப்ரதிஜ்ஞை யைப் பண்ணுகிறேன். [தேவீர] ஒருகோழை முன்னேயோ ப்ரதிஜ்ஞை பண்ணிற்று. ப்ரதிஜ்ஞை பண்ணினால் அத்தைத்தலைக் கட்டித்தரவல்ல ஆண்பிள்ளைத்தனமுடைய உம்முடைய முன்னே யன்றோ? [மாபூவம்] இப்படிச் செய்திலேனாகில் உம்முடைய ஸந் நிதியில் வர்த்திக்கப் பெறுதொழிகையுமன்றிக்கே உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப் பெறுதவனாகிறேன். [வீரலோகபாக்] உம்மை முடிசூடிய நுபவிக்கப் பாரித்து அதுபெறுதேபோன சக்ர

---

ப்ரதீக க்ரஹணபூர்வகமாக வ்யாக்யாநம் (ராஜ்யமித்யாதி), ச (வு) கா ரத்தை அநுக்தஸமுச்சயமாக்கி அர்த்தமருளிச்செய்கிறார் (ரக்ஷேத்யாதி) "தவராஜ்யஞ்சரக்ஷேயம்" என்கையாலே ஶேஷத்வம் தோன்றுகையா லே ஶேஷபூதனை நீ என்னை ரக்ஷிக்கை யாவதென்னென்கிற ஶங் கையிலே "ரக்ஷேயம்" என்கிற லிங்கை ஆவஶ்யக கார்யகர ப்ராவர்த்தக நிமந்த்ரணத்திலே யாக்கியருளிச் செய்கிறார் (எனக்கித்யாதி). (மீறவொ ண்ணாது) அதிக்ரமிக்க வொண்ணாது, ரக்ஷியாதே போகேனென்கை. இது க்கு பக்திபரமான த்ருஷ்டாந்த கதநத்துக்கு பாவமருளிச்செய்கிறார் (கட லுக்கித்யாதி வாக்யத்வயமும்).

"ராம" என்னாதே, "வீர" என்றதுக்கு ப்ரதிஜ்ஞா நிர்வஹணம் பண் ணவல்லையோவென்கிற ஶங்கா பரிஹார பரமாகத் தாத்பர்ய மருளிச்செ ய்கிறார் (ஒருகோழை யித்யாதி வாக்யத்வயத்தாலே), (கோழை) அசது ரன். இப்படி சக்ரவர்த்தியும் ப்ரதிஜ்ஞை பண்ணவில்லையோ வென்கிற ஶங்கைக்கு உத்தரமாகத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இப்படி யித் யாதி வாக்யத்வயத்தாலே), இதில் "நோசேத்மாபூவம்" என்று கூட்டி அஸத்தாகக் கடவனென்று பொருளாக்கி, இதுக்குத் தாத்பர்யம் (இப்படி செய்திலேனாகி லித்யாதி), (வர்த்திக்கப் பெறுதவனாகிறேன்) என்கை

---

(க) ரா-கிஷ் க கஉ அ.

வர்த்தி புக்கலோகம் புகுகிறேன்" என்கிறபடியே நிர்ப்பந்தித்தடிமை செய்கையன்றியே "ஶேஷிபுகந்தவடிமை செய்யக்கடவன்" என்னுமிடத்தை யநுஷ்டித்தார் ஸ்ரீபரதாழ்வான்.

தன் செல்லாமையைப் பாராதே ஶேஷியினுடைய ஆதரத்தையேபார்த்து (க) "ஆஜ்ஞாஹாரயம்ஹ்ருஷ்டஃ - ஆஜ்ஞாஹரதம் ஹ்ருஷ்டஃ" என்று ப்ரீதியோடே மீண்டானிறே.

இப்படியிருக்கிற விவனையல்லதறியாதே யிருக்கையாலே பகவச்சேஷத்வ காஷ்டையான ததீயஶேஷத்வத்தை யநுஷ்டித்தான் ஸ்ரீஶத்ருக்நாழ்வான். (உ) "ஶத்ருக்நோ நித்யஶத்ருக்நோ நீதஃ ப்ரீதிபுரஸ்க்ருதஃ" ... கச்சதாமாதுலகுலம் பரதேந ததாநகஃ। ஶத்ருக்நோநித்யஶத்ருக்நோநீதஃ ப்ரீதிபுரஸ்க்ருதஃ"

யாலே அஸத்கல்பனாகிறேனென்று கருத்து. "வீரலோக பாக்பவேயம்" என்று கூட்டி, வீரபதத்துக்கு சக்ரவர்த்தி பரமாகபாவம் (உம்மையித்யாதி) யத்வா, "வீரலோகபாக்மாபூவம்" என்று ஒருவாக்யமாய், ப்ரதிஜ்ஞையைப்பண்ணிச்செய்யாத தஶரதன் லோகமடையக் கடவேனல்லேனென்று ஸப்தார்த்தமாகையாலே, நானும் செய்யாவிடில் அவன் லோகத்தை யடைந்து, தேவரீர்ஸந்நிதியிலும் ராஜ்யத்திலுமிராதேபோகக் கடவேனென்று சபதம் பண்ணுகிறதாகத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி வாக்யத்வயத்தாலே), (புக்கலோகம்) புகக்கடவலோகம். "நதேவலோகாக்ரமணம்" என்ற இளையபெருமாளுக்கு வீரஸ்வர்க்கம் அநுத்தேஶ்யமாகையாலே ப்ரதிஜ்ஞை பண்ணின வர்த்தத்தைப் பண்ணாவிடில் வீரஸ்வர்க்கத்தை யடையாதவனாகக் கடவேனென்ற ஶபதம் இவர் ப்ரதிஜ்ஞைக்குச் சேராது, ஆகையாலே தஶரதன் புக்கலோகமென்று வ்யாக்யாநம் செய்தாரென்று கண்டுகொள்வது.

இது ஶேஷி உகந்தவடிமை யென்கைக்கு ஸூசகமென்னென்ன (தன் செல்லாமை யித்யாதி), (தன் செல்லாமை) ராமவிரஹக்லேஶம் ஸஹியாமை,

உக்தத்தை ஸ்ரீஹநுவாக்கிக்கொண்டு ஸ்ரீஶத்ருக்நாழ்வான் படியைக் காட்டுகிறார். (இப்படி யித்யாதி). உக்தார்த்தத்தில் ப்ரமாணம் (கச்சதேத்யாதி),

(க) ரா-அயோ-ககூ ச-     (உ) ரா-அயோ-க-க

[கச்சதா] என்கிற வர்த்தமாந நிர்த்தேசத்தாலே போகிற விடத்தில் தனக்கொரு ப்ரயோஜநமுண்டாயாதல், இங்கே மாதா பிதாக்களைக் கேள்விகொள்ளுதல், பூர்வஜரான பெருமாளைக் கேள்விகொள்ளுமிவ்வளவுமின்றிக்கே, அவனையொழிய ஜீவிக்கமாட்டாதபடியாலே போனானென்கை. [மாதுலகுலம்] யுதாஜித்தழைத்தது அவனையாகையாலே போக்கிலுத்தேஶ்யதையும் அவனுக்கு, இவனுக்கு அவனுத்தேஶ்யனாய்ப் போனானென்கை.

[பாதேந] சக்ரவர்த்தியுந்துஞ்சி, பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப்போய், இளையபெருமாளும் "தொடர்ந்தடிமை செய்ய வேணும்" என்று போய், ஶத்ருக்நாழ்வானும் "நின்னையல்லதறியேன்" என்றிருக்கும் தஶையிலே "ராஜ்யத்தை பரிக்கக்கடவன்" என்றுப்பத்து ஶ்ரீவஸிஷ்டபகவான் திருநாமம் சாத்திற்று. (க) "ஹத ஜிதராஜ்யஸ்ய ஹரணாத் -பரத இதி ராஜ்யஸ்ய பாலநாத்" என்றானிறே ஶ்ரீஶதாநீகன். [ததா] இருவரும் ராஜபுத்ரர்களாய்

இந்த ஶ்லோகார்த்த விவரணம் (கச்சதாவென்கிற) என்று துடங்கி, (எம்பெருமானு ரருளிச்செய்தாரென்னு மளவும்.) வர்த்தமாந நிர்த்தேஶத்தாலே இருவருடைய கமநகாலமும் ஏகமாகத் தோன்றுகையாலும், ஶ்ரீஶத்ருக்நாழ்வான்கமநத்துக்கு விளம்பநிவ்ருத்தி தோன்றுகையாலும், விளம்பஹேதுக்களை வ்யாவர்த்திப்பித்துக்கொண்டு தந்நிவ்ருத்தியையுபபாதித்து கமநஹேதுவையும் சொல்லுகிறார் (கச்சதாவென்கிற வித்யாதி), (குலம்) க்ருஹம், யதாஜித்குலமென்னாதே "மாதுலகுலம்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (யுதாஜித்தித்யாதி,. (அவனை) பரதாழ்வானை. "ப்ருஞ் பரணே" என்கிற தாதுவை யுட்கொண்டு பாதபத தாத்பர்யம் (சக்ரவர்த்தியு மித்யாதி). (துஞ்சி) நஶித்து, 'ராஜ்யத்தைப் பொகட்டுப்போய்" என்று "துஞ்சி" என்ற வநந்தரம் சொல்லுகையாலே ஶ்ரீ பரதாழ்வான் "ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி" என்றுகொண்டு, மீளுவரோவென்னும் நசையாலே ஶ்ரீ சித்ரகூடத்தளவும் செல்ல, பெருமாள் ராஜ்யத்தை இவர்மேல் பொகட்டுப்போனவப் போதென்றுகருத்து. (நின்னை) என்றது ஶ்ரீ பரதாழ்வானை; த்ரிகாலஜ்ஞனாகையாலே இப்படி திருநாமம் சாத்தினனென்று கருத்து. இப்படி தாமருளிச்செய்ததுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (பரத இத்யாதி).

நக்ஷத்ர பேதமுமுண்டாயிருந்தால் பிரித்து முஹூர்த்தமிட்டுப் போகப்ராப்தமாயிருக்க, அவன் போனதுவே முஹூர்த்தமாகப் போனானென்கை. "கச்சதா" என்றதிலே அர்த்தஸித்தமன்றோ? "ததா" என்றதென்னென்னில், அங்கு மமதா நிவ்ருத்தியைச்சொல்லிற்று; இங்கு அதுக்காஶ்ரயமான அஹங்கார நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஆகையாலே புநருக்திதோஷமில்லை. ஶேஷத்வ விரோதியிறே இரண்டும்.

[அகம்] அகமில்லாதது இவனுக்கேயிறே. அகமாவது - உத்தேஶ்யவிரோதியிறே. இவ்விடத்தில் அகமாவது - ராமபக்தி-

---

ப்ரகாராந்தரேண வருகிற காலபேத ஶங்கையைப் பரிஹரித்துக் கொண்டு ஶப்தார்த்தம் (இருவருமித்யாதி), பாரதந்த்ர்யத்தாலே போனானென்றபடி. (க) "ஸஹஷ ஜாதஸ்ஸ ஹிதஃ - புஷ்யேஜாதஸ்து பரத:" "ஸார்ப்பே ஜாதௌ து ஸௌமித்ரீ - ஸார்ப்பேஜாதஸ்து ஸௌமித்ரி:" என்றபதங்களை யுட்கொண்டு (நக்ஷத்ரபேதம்) என்றது. இப்பாரதந்த்ர்யம் "கச்சதா" என்கிற விடத்தில் தானே சொல்லலாமே யென்று ஶங்கித்து கோபலீவர்த்தந்யாயத்தாலே பரிஹரிக்கிறார் (கச்சதேத்யாதி), அங்கு மமதா நிவ்ருத்தியும், இங்கு அஹங்கார நிவ்ருத்தியுமாகச் சொல்லுகைக்குக் கருத்து - முந்துற அஹங்கார நிவ்ருத்தி சொல்லில், தத்கார்யமான மமதாநிவ்ருத்தி அர்த்த ஸித்தமாகையாலே "ததா" என்றதுக்கு ப்ரயோஜநம் ஸித்தியாதென்று கண்டுகொள்வது. மமதாநிவ்ருத்தி சொன்னால் போராதோ, அஹங்கார நிவ்ருத்தி சொல்லவேண்டுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஶேஷத்வேத்யாதி),

வக்ஷ்யமாணத்தைத் திருவுள்ளம்பற்றி நஞர்த்தத்தை யருளிச்செய்துகொண்டு வித்த (ஐ) ராகிறார். (அகமில்லாததித்யாதி), அகபதார்த்தமருளிச் செய்கிறார் (அகமாவதித்யாதி) அஹங்கார மமகார நிவ்ருத்தி சொன்னபோதே பாபராஹித்யம் ஸித்தமன்றோ? புந: சொல்லவேண்டுமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவ்விடத்தி லித்யாதி), ராமபக்தி உத்தேஶ்ய மென்னலாயிருக்க, உத்தேஶ்ய விரோதியாக்கிச் சொல்லப் போமோ வென்கிற சங்கையை யநுவதித்து த்ருஷ்டாந்தமுகேந பரிஹரி

---

(க) ரா-பா-கஅ-கரு.

இத்தைப் பாபமென்னப்போமோவென்னில்; பாபத்தில் புண்யம் நன்றாயிருக்க, மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும் (க) "க்ஷீ ஜவெணாகாணி வியஹுயவாவெழ - அப்வஇவரோமாணி விதூய பாபம்" என்று பாபஶப்தவாச்யமாயிற்றிறே; ஆகையாலே பரதா நுவ்ருத்தியாகிற வுத்தேஶ்யத்துக்கு விரோதியாகில் ராமஸௌந் தர்யத்தில் கால்தாழுமதுவும் பாபமாயித்தனையிறே. (உ) "ராமே வ்ருவமாகாஷீஃ - ராமேப்ரமாதம்மாகார்ஷீ:" என்று ராமாநு வ்ருத்திக்கும் இடைச்சுவராகச் சொல்லிற்றிறே ராமஸௌந்தர் யத்தை; பரதாநுவ்ருத்திக்கு இடைச்சுவரென்னுமிடம் சொல்ல வேண்டாவிறே.

[ஶத்ருக்நஃ] பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமம் சாத்துகிற ஸ்ரீவஸிஷ்டபகவான், பெருமாள்கண்டாரை அழகாலே துவக்கவல்லாராகத் தோற்றுகையாலே ராமனென் றும், இளையபெருமாளுக்கு கைங்கர்யமே நிரூபகமாகத் தோற்று கையாலே லக்ஷ்மணனென்றும் திருநாமம்சாத்தினாப்போலே, இவ ருடைய ஸந்நிவேஶத்தைக்காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும் படி யிருக்கையாலே ஶத்ருக்நனென்று திருநாமம் சாத்தினான்.

[நித்யஶத்ருக்நஃ] பாஹ்யஶத்ருக்களை யன்றிக்கே ஆந்தரஶத் ருக்களான இந்த்ரியங்களையும் ஜயித்திருக்குமென்கை. அவ்விந்த்ரி யஜயத்தினெல்லை யெவ்வளவென்னில்; (ங) வுஂஸாஂஜ்ரூஷி சித்தாவஹாரிணம் - பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்கிற

க்கிறார். (இத்தை யிச்யாதி வாக்யத்வயத்தாலே), ஸௌந்தர்யத்தில் கால் தாழ்கையே ராமபக்தி. இது பரதாநுவ்ருத்திக்கு விரோதியென்னுமிடத் தைக் கிம்புநர்ந்யாயத்தாலே ஸாதிக்கிறார் (ராமேப்ரமாதமித்யாதி), (இடைச்சுவர்) ப்ரதிபந்தகம்.

அப்ராப்த விஷயப்ராவண்யமாகிற வஸிஷ்டத்தை அநாதியாக ஜநிப் பிக்கையாலே நித்யஶத்ருவென்று இந்த்ரியங்களாக வருளிச்செய்கிறார். (பாஹ்யேத்யாதி), (ச) "ஶத்ருபக்ஷஶத்ருமாதே - ஶத்ருக்நஶ்சத்ரமா தகே" என்றும், (ரு) ராமமேவாநுசிந்தயந் - ராமமேவாநுசிந்தயந்' என்றுமிருக்க, ஸௌந்தர்யத்தில் துவக்குண்ணாமையை சொல்லக்கூடுமோ

(க) (உ) ரா-அயோ-சo-ரு. (ங) ரா-அயோ-ங-உக.
(ச) ரா-யுத்-கஙக-உஅ (ரு) ரா-

ராமஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணுகிருக்கை. அதாகிறது - பெருமாளைப் பற்றும்போதும், தன்னுகப்பாலே யாதல், அவருடைய வைலக்ஷண்யத்தாலே யாதலன்றிக்கே, தனக்கு உத்தேஶ்யனை இவனுகந்தவிஷயமென்று பற்றுகை.

[நீத:] ராஜாக்கள் போம்போது உடைவாள் மற்றொன்றைக் கொண்டுபோமோபாதி அவன்கொடுபோகப் போனனென்கை. த்ரவ்யத்துக்கு த்ரவ்யாந்தரங்களோட்டை ஸம்யோகம் உபயநிஷ்டமாயிருக்குமிறே. அதுபோலன்றிக்கே ஜாதிகுணங்களோபாதிபோனன். [ப்ரீதிபுரஸ்க்ருத:] "ஜ்யேஷ்டாநுவ்ருத்தி கர்த்தவ்யம்" என்று போனனல்லன். (க) "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்று போனவிளைய பெருமாளைப்போலே, "போனவிடத்திலே ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணலாமென்று பாரித்துக்கொண்டு

வென்ன வருளிச்செய்கிறார் (அதாகிறதித்யாதி). "பரதேகச்சதிகதவாந்" என்று சொல்லாமல், "பரதேநநீத:" என்று பரதகர்த்ருக நயநக்ரியாகர்மத்வம் சொல்லுகையாலே "ஸ்வதந்த்ர: கர்த்தா" என்று பரதாழ்வானுக்கு ஸ்வாதந்த்ரயமும், ஶ்ரீஶத்ருக்நாழ்வானுக்கு அசித்வத்பாரதந்த்ர்யமும் தோற்றுகிறதென் றருளிச்செய்கிறார் (ராஜாக்களித்யாதி), கீழ் அஹங்காரமமகாரநிவ்ருத்தி சொன்னபோதே பாரதந்த்ரயம் ஸித்தமாகையாலே இப்பதத்துக்கு அசித்வத்பாரதந்த்ரயமும் விவக்ஷிதமென்றுகருத்து.

(உடைவாள்) அரைப்புடவையில் சொருகுகிறவாயுதம். உக்தபாரதந்த்ர்யத்தின்எல்லை நிலம்காட்டுவாராக உக்தத்தை வ்யாவர்த்திப்பித்துக்கொண்டு அதிலும் அதிசயம் காட்டுகிறார் (த்ரவ்யத்துக்கித்யாதி, (உபயநிஷ்டம்) என்றது - உபயாதீநமென்றபடி. இத்தால் அந்யதாரால் விடப்போகாதென்கை. "ப்ரீதிபுரஸ்க்ருத:" என்றதுக்கு "பரதேநப்ரீதிபுரஸ்க்ருத:" என்றாய், பரதனாலே பஹுமதனாய்ப் போனனென்று அர்த்தம் சொல்லுமளவில் கீழ்ச்சொன்ன அத்யந்த பாரதந்த்ர்யாதிகளுக்கு விருத்தமாகையாலே, "ஸ்வப்ரீத்யாபுரஸ்க்ருத:" என்று விவக்ஷித்து, ப்ரீதியாலே ப்ரேரிக்கப்பட்டானென்று அர்த்தமருளிச்செய்கிறார் (ஜ்யேஷ்டாநுவ்ருத்தீத்யாதி இத்தால் கீழ்ச்சொன்ன பாரதந்த்ர்யம் வைதமென்று கருத்து.

(க) ரா-அயோ-௬௧-௨௫.

ப்ரீதிப்ரேரிக்கப் போனுன். படைவீட்டிலிருந்தால் பலருமுண்டாகையாலே விழுக்காட்டோ பாதியிறே ஸித்திப்பது.

"நீத:" என்கையாலே ஶேஷத்வத்தில் அசித்கல்பனுயிருக்கக்கடவன். "ப்ரதிபுரஸ்க்ருத:" என்கையாலே ஸ்வரூபாநுரூபமானவ்ருத்தியிலே சைதந்ய ப்ரயுக்தமான தர்மங்களுண்டாயிருக்கை. (க) "படியாய்க்கிடந் துன்பவளவாய்க் காண்பேனே" என்றிறே அபியுக்தர்வார்த்தை.

"அநக:" "நித்யஶத்ருக்ந:" என்று பாவநத்வத்தாலும் போக்யதையாலும் அவனையே பற்றினனென்னவுமாம், "அநக:" "நித்யஶத்ருக்ந:" என்றதுக்கு ப்ரயோஜநமென்னென்னில், "ஶ்ரீஶத்

"நீத:" என்று சொல்லியிருக்க, "ப்ரதிபுரஸ்க்ருத:" என்று சொல்லக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (நீதஇத்யாதி). (இருக்கக்கடவன்) என்றவநந்தரம் 'என்றபடி" என்று ஶேஷம். இதற்கு ப்ரமாணம் (படியாயித்யாதி), கீழ் "அநக:" என்றதுக்கு ஸௌந்தர்யத்தில் ராமபக்திரஹிதனென்றர்த்தமாக்கி, இதற்கு ஹேதுவாக "நித்யஶத்ருக்ந:" என்றத்தையுட்கொண்டு இவ்விரண்டாலும் பெருமாளிடத்திற்காட்டிலும் ஸ்ரீ பரதாழ்வானிடத்தில் போக்யதாதிஶயம் தோற்ற வ்யாக்யாநம் செய்தருளினர், இனி இவ்விரண்டுபதத்தாலும் பாவநத்வபோக்யத்வங்கள் பெருமாளிடத்திற்காட்டிலும் ஸ்ரீ பரதாழ்வானிடத்திலே தோற்ற அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (அநக இத்யாதி) அநகபதத்தில் ராமவிஷயத்தில் பாவநத்வப்ரயுக்தமான மஹநீயதையாலே வருகிற ப்ரீதிரஹிதனென்று தோற்றுகையாலே, பரதவிஷயத்தில் பாவநத்வாதிஶயம் தோற்றுகிறதென்று கருத்து; "நித்யஶத்ருக்ந:" என்று ராமஸௌந்தர்யத்தில் கண்வையாரென்கையாலே, இங்குக் கண்வைத்தவனுக்கு போக்யதாதிஶயம் தோற்றுமென்று கருத்து.

"அநக:" என்றதுக்கு - ராமபக்திரஹித: என்றும் "நித்யஶத்ருக்ந:" என்றதுக்கு - ராமவிஷயத்தில் கண்வையானென்றும் சொல்லக்கூடுமோ, (உ) "க்ஷாந்திஹ்ருதம்ஸஸ்ஸேஷ்வாதி ஹரதேநஸேவாத்மநா । ஸத்ருக்நேநவீரேண ஸுயாஹ்வய ம்நஶ்ஜ - கதாந்வஹம் ஸமேஷ்யாமி பரதேநமஹாத்மநா - ஶத்ருக்நேநசவீரேண த்வயாசாருநந்தந" என்கி

(க) பெரு திரு-ச-கO. (உ) ரா · ஆ-ககூ-சO

ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி அவனையல்லதறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது வேறொன்றறியாதபடியானான்” என்று எம்பெருமானாருளிச்செய்தார். இதுவே ப்ரயோஜநமானால் சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே. ஆகவிப்படி ஸ்ரீஶத்ருக்நாழ்வானைப்போலே யிருப்பாரொருவராய்த்து ஸ்ரீமதுரகவிகள்.

இனி இவர்க்கு ததீயருத்தேஶ்யராமிடத்தில் பகவத்ஸம்பந்தமாத்ரத்திலே விஷயீகரித்தும், தத்விஷயத்திலே இப்போது அவகாஹிப்பித்தும், குணாநுஸந்தாநத்தாலல்லது செல்லாததசையிலே

---

றபடியே பெருமாளுக்கு ஶத்ருக்நனிடத்தில் ப்ரீதியுண்டாகையாலே இவருக்கும் அவரிடத்தில் கண்வைக்கவேண்டுகையாலே இவ்விரண்டுபதத்துக்கும் பொருளில்லாமையால் ப்ரயோஜநமில்லையென்று முன்புள்ள முதலிகள்கேட்க, அதற்கு எம்பெருமானாருளிச்செய்த ஸ்ரீஸூக்தியை இங்கும் அந்த ஶங்கையைப் பரிஹரிக்கவேண்டுகையாலே ஸம்வாதமாகவருளிச்செய்கிறார் (அநக: என்றுதொடங்கி அருளிச்செய்தாரென்னுமளவும்) இந்தப் பரிஹாரத்துக்கு இருவர்க்கும் ஸ்ரீ பரதாழ்வானையிட்டு பரஸ்பர ப்ரீதியுண்டாகிலும் நேரே ராமவிஷயத்தில் பக்தியில்லையென்றும், கண்வையாமையென்றும் தாத்பர்யம். (சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே) என்றது - பெருமாளுக்கு நல்லனான ஸ்ரீபரதாழ்வானையல்ல தறியாதிருக்கையாலே “அநக:” நித்யஶத்ருக்ந:” என்று சொன்னமிகையெல்லாம் பொறுக்குமென்றபடி.

இத்தால் ஈஶ்வரவிஷயத்தில் கண்ணழிவற்ற ருசியுடையா ரபிமாநத்திலே யொதுங்கி அவர்திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமு மென்றத்யவஸித்திருந்தபேர் ‘திரிதந்தாகிலும்” என்கிறபடியே ஈஶ்வரனுக்கு மிகவும் ப்ரீதிவிஷயராவரென்றதாய்த்து. ஆக இவ்வளவும் வக்த்ருவைலக்ஷண்யமருளிச் செய்தார்.

இனி வைலக்ஷண்யாந்தர கதநமுகேந ப்ரதிபாத்யவைபவத்தையருளிச்செய்கிறார் (இனியித்யாதி), (உத்தேஶ்யராமிடத்தில்) என்றதுக்கு ‘அத்யவஸித்து” என்றதோடே ஸம்பந்தம். (பகவத்ஸம்பந்த மாத்ரத்திலே) என்றது- பகவதாபிமுக்யமுள்ள மாத்ரங்கொண்டென்றபடி. (தத்விஷயத்

(க) "ஸோயயஙேஸாஸோநு - போதயந்த: பரஸ்பரம்" என்கிற படியே போதுபோக்குமவர்களுக்கு உசாத்துணையாகவும், (உ) "யத்ர ஐவேஷ்லாயஸ்ராஸஹிதேவா: - யத்ரபூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:" என்கிறபடியே ப்ராப்திதசையில் பகவதநுபவ ஸஹகாரிகளாயும், இப்படி பஹுமுகமான வுபகாரத்தாலே ஸர்வாவஸ்தையிலும் ததீயரே உத்தேஸ்யரென்றத் த்யவஸித்து தமக்கு வைஷ்ணவ விஷயீகாரத்துக்கு முன்பே அஜ்ஞாதஜ்ஞாபந முகத்தாலே பகவத்விஷயத்திலே மூட்டின மஹோபகாரகரான ஆழ்வார் தம்மையே பற்றுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாவதாரிகை

முற்றிற்று.

---

திலே இப்போது) என்றது - இவ்விபூதியிலிருக்கும் காலம் (ப்ராப்திதசையில்) என்றது - மோக்ஷதசையிலென்றபடி.

அவதாரிகை அரும்பதம் முற்றிற்று.

---

(க) கீதை-௧௦-௯-  (உ) புருஷஸூக்தம்



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு
# அழகியமணவாளப் பெருமாள் நாயனார்
# அருளிச்செய்த வ்யாக்யாநம்.

## அவதாரிகை.

---

ஸம்ஸாரிசேதநரிற்காட்டில் பகவத்பரராய், அந்த பகவத்வை பவத்தை அஜ்ஞரான ஸம்ஸாரிகளு மறியும்படி அவ்வவபுராண முகங்களாலே உபதேஸித்த பராஸராதி பரமரிஷிகளுக்கு வாசியுண்டு.

இப்படி உபதேஸியாநிற்கச்செய்தேயும்(க)"நிரஸ்தாதிஶய- நிரஸ்தாதிஶய" இத்யாதியாலே பரமபுருஷார்த்தரூபையான பகவத்ப்ராப்தியைச் சொல்லி, (உ) "தத்ப்ராப்திஹேதுர்ஜ்ஞாநஞ்ச கர்மசோக்தம் - தத்ப்ராப்திஹேதுர்ஜ்ஞாநஞ்ச கர்மசோக்தம்" என்று தொடங்கி ப்ராப்திஸாதநமான உபாஸநத்தையும் உபதேஸியாநிற்கச் செய்தேயும், காமாதி புருஷார்த்தாந்தரங்களையும் கலந்து கட்டியாக உபதேஸித்த அந்தரிஷிகளிற்காட்டில் பகவத் ப்ரஸாதஹேதுகமான மயர்வற மதிநலங்களையுடையருமாய் பரோபதேஸஸமயத்திலும் (ந)"வீடாம் தெளிதருநிலைமை" என்று தொட

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநத்தி னரும்பதம்.

---

### அவதாரிகை.

அரும்பதம்:—வக்த்ருவைலக்ஷண்ய மருளிச்செய்வாராய் ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கு முள்ளவாசியை அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரி சேதநரித்யாதி).

---

(க)வி-பு-ஈ-ரு-ரு௯- (உ) வி-பு-ஈ-௫-ஈ௦ (ந) தி-வாய்-க-ஈ-உ-

ங்கி (க) "வீடேபெறலாயே" என்று பரமபுருஷார்த்தத்தையே முதல்நடு இறுதியாகவுபதேஶித்து, அதுக்குஸாதநமும்(உ)"வண்புகழ்நாரணன் திண்கழல்சேரே" (ங) "திருநாரணன் தாள்காலம் பெறச்சிந்தித்துய்மினோ" என்று அவன்திருவடிகளே யென்றுமுபதேஶித்து, அவ்வளவன்றிக்கே, (ச) "வழுவிலாவடிமைசெய்ய வேண்டும் நாம்" (ரு) "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று அவற்றைத்தாமநுஷ்டித்துப்போந்த நம்மாழ்வாருக்கு நெடுவாசியுண்டு. இப்படி பகவத்விஷயமே புருஷார்த்தஸாதநங்களென்று பூர்ணோபதேஶம் பண்ணின வாழ்வாரிற்காட்டில் ஆழ்வாரே புருஷார்த்தபூதராய் அவரைப்பெறுகைக்கு ஸாதநமும் அவர்திருவடிகளே யென்றிருக்கும் ஸ்ரீமதுரகவிகளுக்கு நெடுவாசியுண்டு.

(சா) "என்னப்பனில் நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்காலண்ணிக்கு மமுதூறுமென்னாவுக்கே" என்றும். (எ) "மேவினேனவன் பொன்னடி" என்று மநுஸந்தித்தவரிறே இவர். ஆழ்வார் ப்ரதமபர்வத்திலே நின்றவர்; இவர் சரமபர்வத்திலே நின்றவர்; அவர் ஸங்க்ரஹத்திலே அவதாரணத்திலே நிஷ்டர்; இவர் அதினுடைய விவரணநிஷ்டர்; அவ்வாழ்வாருக்கு அநந்யபோகத்வத்துக்கு (அ) "நமக்கும் பூவின்மிசை நங்கைக்குமின்பன்" என்று

(பூர்ணோபதேசம்) என்றது - காமாதி புருஷார்த்தாந்தரங்கள் கலசாதே ஈஶ்வரனே உபாயமென்றும், அவன்திருவடிகளில் பண்ணும்கைங்கர்யமே புருஷார்த்தமென்று முபதேசிக்கை.

இவர் ஆழ்வாரையே ப்ராப்ய ப்ராபகமென்று பற்றியிருந்தாரோ வென்னவருளிச் செய்கிறார் (என்னப்பனில் நண்ணித்தென்குருகூரென்று தடங்கி). ஆழ்வாரிற்காட்டில் மதுரகவிகளுக்கு நெடுவாசியுண்டென்னுமதை விவரிக்கிறார் (ஆழ்வார் ப்ரதமபர்வத்தில் நின்றவரென்று துடங்கி). இவர் நிஷ்டையும் எத்தைப்பற்றிவருகிற தென்னவருளுகிறார் (அவர் ஸங்க்ரஹேத்யாதி). (அவதாரணம்) உகாரம். (விவரணம்) நமஸ்ஸு. பகவத்விஷயத்திலே ப்ரவணரானருடைய வாகாரங்களெல்லாம் ஆழ்வாருக்கு உண்டானாப்போலே சரமபர்வநிஷ்டர்களுடைய வாகாரங்களெல்லாம் இவர்க்குண்டென்றருளிச் செய்கிறார் (ஆழ்வார்க்கு அநந்யபோகத்வத்துக்

(க) தி-வாய்-க௦-ரு-ரு- (ச) தி-வாய்-ங-ங-க (எ) உ-
(உ) தி வாய்-க உ-க௦ (ரு) தி-வாய்-சா-க௦-க௦ (அ) தி-வாய்-ச-ரு-அ-
(ங) தி-வாய்-ச-க-க (சா) க-

நாய்ச்சிமாரில் பிராட்டி நிதர்ஶநமாமாபோலேயும், கைங்கர்யத்வ ரைக்கும் பாரதந்த்ர்யத்துக்கும் இளையபெருமாள் நிதர்ஶநமா மாபோலேயும், முமுக்ஷுக்களின் துர்க்கதிகண்டு பரோபதேஶம் பண்ணுகைக்கு ப்ரஹ்லாதன் நிதர்ஶநமாமாபோலேயும், இவரு க்கு ததீயபாரதந்த்ர்யத்துக்கு (க) "வில்லிபுதுவைவிட்டுசித்தர் தங்கள்தேவரை வல்லபரிசுவருவிப்பரேலதுகாண்டும்" என்று பெரியாழ்வார்திருமகளார் நிதர்ஶநமாதல், நித்யராய்ப்போந்தா ரில் ஶ்ரீஶத்ருக்நாழ்வான் நிதர்ஶநமாதல், முமுக்ஷுக்களில் (உ) "ஸ்வஃ௦யஶ்ஷ்வ நியமைநஃஞயாநாஃ - ஸர்வம்யதேவ நிய மேநமதந்வயாநாம்" என்ற பெரியமுதலியார் நிதர்ஶநமாதலா மித்தனை.

ஶ்ரீஶத்ருக்நன் ராமகுணத்தில் கால்தாழ்ந்திலன், இவர் க்ருஷ்ணகுணங்களில் கால்தாழ்ந்திலர். இதுவாசி; ஆழ்வார் பக வத்விஷயத்தைக் கவிபாடுகிறநாவாலே தம்முடைய வைபவம் சொன்னாரித்தனைபோக்கி, அமுதூறுகிற விவருடைய நாவாலே கேட்கப்பெறாத குறைதீர்க்கிறாராய்த்து இவர்; (ங) "அவன் சின் னமும் திருநாமமும் இவள்வாயனகள் திருந்தவே" என்று அவன்

---

கென்று துடங்கி) இத்தால் ஆழ்வாரோடே ஸாம்யம் சொல்லிற்றாயிற்று. (பெரியமுதலியார்) என்றது - ஆளவந்தாரை. (நிதர்ஶநம்) என்றது-இரு வரும் ஆழ்வாரையே பற்றுகையாலே; இந்தப்ரபந்தத்தாலே இவர் கொண் டாடவேணுமோ? ஆழ்வார் பகவத்விஷய ப்ரவணமான தம்முடைய திருப் பவளத்தாலே தம்முடைய வைபவத்தை *துவளில் மாமணிமாடம் துடக் கமான திருவாய்மொழிகளிலே அருளிச்செய்யவில்லையோ வென்ன, க்ரு ஷ்ணன் தன்வாயாலே சொன்ன கீதையோபாதி போக்யமாயிராத குறை யுண்டு, அமுதூறுகிறவிவர் திருப்பவளத்தாலே அருளிச்செய்யக் கேட்கை யாலே அக்குறைதீரப்பெற்றதென்கிறார் (ஆழ்வார் பகவத்விஷயத்தைக் கவிபாடுகிறநாவாலென்று துடங்கி), அப்படி இவர் திருப்பவளத்தாலே அருளிச்செய்கையாலே திருந்தி போக்யமாயிருந்ததோ வென்ன வருளிச் செய்கிறார் (அவன் சின்னமும் திருநாமமுமென் துடங்கிற்று).

---

(க) நா-தி-ரு-க௦ (உ) ஸ்தோ-ரத்ந-ங- (ங) தி வாய்-ரு-ரு-எ

குணங்கள் அவ்வாழ்வார் வாக்காலே திருந்தினாப்போலேயாய்த்து ஆழ்வாருடைய குணங்களும் இவர் வாக்காலே திருந்தினபடி.

அப்படியே இவரருளிச்செய்த ப்ரபந்தமும், (க) "த்ரைகுண்ய விஷயாவேதா:- த்ரைகுண்ய விஷயாவேதா:" என்று குணத்ரயவஸ்யர்க்கு குணாநுகுணமான பலங்களைச்சொல்லுகிற வேதங்கள் போலேயும், (உ) "சீர்த்தொடையாயிரம்" என்று பகவத்குணைக ப்ரதிபாதகமான திருவாய்மொழி போலேயுமன்றிக்கே, ஆழ்வாருடைய திவ்யகுணங்களையே ப்ரதிபாதிக்கையாலும், வேதம்போலே அநந்தமாயிருத்தல், திருவாய்மொழிபோலே ஆயிரம்பாட்டாயிருத்தல் செய்கையன்றிக்கே, ஸங்க்ரஹமாயிருக்கையாலும் வாசிபட்டிருக்கும்; திருவாய்மொழி வேதஸாரமாய், திருவாய்மொழியினுடைய ஸாரமாயாய்த்து இப்ப்ரபந்தமிருப்பது.

ஒருமுமுக்ஷுவுக்கு ஆதரணீயராயிருப்பார் நாலுவ்யக்திகளாயிருப்பர்கள்; ஸர்வேஸ்வரனும் பிராட்டியும் ஆசார்யனும் ஸ்ரீவைஷ்ணவர்களும், அதில்ஸர்வேஸ்வரன், அடியிலே இழந்துகிடந்த கரணகளேபரங்களை தன்கருணையாலே கொடுத்து இவனைக்கரைமரம்சேர்க்கும் தேவனாகையாலும், இவனுக்கு ஆதாரபூதனாகையாலும்,இவனுக்கு இஷ்டாநிஷ்ட ப்ராப்திபரிஹாரத்துக்கு உபாயபூத

---

(அப்படியே இவரருளிச்செய்த ப்ரபந்தமும்) என்றது - ஆழ்வாரிற்காட்டில் இவர்க்கு நெடுவாசியுண்டானாப்போலே இவரருளிச்செய்த ப்ரபந்தமுமென்றபடி.

முமுக்ஷுவுக்கு நாலுபேர் உத்தேஸ்யராய் அவர்களில்வைத்துக்கொண்டு ஆசார்யன் மிகவும் உத்தேஸ்யனாகையாலே அந்த ஆசார்யவைபவத்தை யறிந்தவிவர் ஆசார்யன்செய்த வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாதே அவனை வாயாரப்புகழ்ந்து அவனுடைய வுபகாராநுஸந்தாந ப்ரீதிக்குப்போக்குவீடாக இப்ரபந்தமுகத்தாலே ஆழ்வாருடைய வைபவத்தைப் பேசுகிறாரென்கிறார் (ஒருமுமுக்ஷுவுக்கு ஆதரணீயராயிருப்பார் நாலுவ்யக்திகளென்று துடங்கி). "மாதாபிதா" என்கிற ஸ்ருதிக்கு முன்னே ப்ரதிபததாத்பர்ய மருளிச்செய்துகொண்டு அநந்தரபதங்களை யெடுத்து அர்த்தமருளிச்செய்கிறார் (அதில் ஸர்வேஸ்வரனென்று துடங்கி).

---

(க) கீதை-உ-சரு- (உ) தி-வாய்-க-உ கக

ஞகையாலும், அகாரண ஸுஹ்ருத்தாகையாலும், ப்ராப்யபூதனுகையாலும் ஆதரணீயனுயிருக்கும். (௧)"மாதாபிதா-மாதாபிதா" என்கையாலே ப்ரியபரத்வஹிதபரத்வங்களைச் சொல்லிற்று "ப்ராதா - ப்ராதா" என்கையாலே அல்லாதபந்த்வந்தரங்களுக்கு முபலக்ஷணம். "நிவாஸ:" என்கையாலே ஆதாரத்வம் சொல்லிற்று "ஶரணம்" என்கையாலே உபாயபாவம்சொல்லிற்று. "ஸுஹ்ருத்" என்கையாலே ஶோபநாஶம்ஸி யென்னுமிடம் சொல்லிற்று "கதி: - கதி: - கம்யதஇதிகதியாய், ப்ராப்யபாவம் சொல்லிற்று "நாராயண:" என்று இவையெல்லாமாகவற்றுன வஸ்துஸ்வபாவம்சொல்லிற்று.(௨)"யேநயேநவியுஜ்யந்தே ப்ரஜாஸ்ஸ்நிக்தேந பந்துநா ஸஸபாபாத்ருதேதாஸாம் துஷ்யந்தஇதிகுஷ்யதாம்" என்றுஒருசேதநவிசேஷத்துக்கு இதுஉண்டாகச்சொல்லாநின்றால் இவ்விஷயத்துக்குச் சொல்லவேண்டாவிறே. "பாபாத்ருதே" என்னவேண்டாதபடி அவர்ஜநீயமான ஸம்பந்தமும் இங்கே விநியோகம்கொள்ளும்படியாயாய்த்து இவ்விஷயமிருப்பது. (௩)"கதிர்ப்பர்த்தாப்ரபுஸ்ஸாக்ஷீ நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத் - கதிர்ப்பர்த்தாப்ரபுஸ்ஸாக்ஷீ நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்" என்று அவன்றுனே சொன்னுனிறே.

பிராட்டி, இவன்பக்கலிலே மாத்ருத்வப்ரயுக்தமாக நிருபாதிகவத்ஸலையாகையாலும், இவன் பகவதாஶ்ரயண ஸமயத்தில் தன்னுடைய பூர்வாபராதபீதனுய், அங்கு அணுகக்கூசினுல் இவன் பூர்வாபராதத்தை அவன்முகங்கொண்டு பொறுப்பித்துச் சேர்ப்பிக்குமவளாகையாலும், இவனுக்கு இவ்வுபாயவிஷயமான வ்யவஸாயத்தைக்கொடுக்கு மவளாகையாலும், அவனேபாதி ஸ்வாமிநியாகையாலும், ஒருதேஶவிஶேஷத்தேறப்போனுலும் அவனுக்கே

ஒருவனே ஸர்வவித பந்துவாகக்கூடுமோ வென்னவருளிச் செய்கிறுர் (யேநயேந வியுஜ்யந்தே) என்று தொடங்கி. ஈஶ்வரன்றுன் பர்த்தாவாயிருக்குமோவென்ன வருளிச்செய்கிறுர் (கதிர்ப்பர்த்தாவென்று துடங்கி) (முகங்கொண்டு) என்றது - அபிமுகனுகப்பண்ணிக் கொண்டென்றபடி,

(௧)ஸுபால- (௨) ஶாகுந்தளம் (௩) கீதை-

கைங்கர்யவர்த்தகை யாகையாலும், தன்னைக்கிட்டுமிடத்தில் ஒரு புருஷகாராந்தர நிரபேக்ஷையாகையாலும் ஆதரணீயையாயிருக்கும்.

ஆசார்யன் இவனுக்கு பகவத்விஷயத்தையும் பிராட்டிவைபவத்தையும் கருந்தரையிலே உபதேசிக்குமவனாகையாலும், தானநுஷ்டித்துக்காட்டி இவனை அநுஷ்டிப்பிக்குமவனாகையாலும், இவன்குற்றம் பார்த்தவளவிலும் கைவிடாதவனாகையாலும், இவனோடே ஸஜாதீயனாகையாலே, ஸுலபனாகையாலும், இவனுடைய க்ருதஜ்ஞதையடியாகப் பண்ணும் கிஞ்சித்காரங்களுக்கு ஶரீரஸம்பந்த முகத்தாலே இங்கே ப்ரதிஸம்பந்தியாகையாலும், தன் கார்யத்தை மறந்தாகிலும் இவனுடைய ஹிதமே பார்த்துப்போருமவனாகையாலும் ஆதரணீயனாயிருக்கும்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் இவனுக்கு ப்ரதமத்திலே ருசிஜநகராகையாலும், ஆசார்யோபதிஷ்டமான ஜ்ஞாநத்துக்கு வர்த்தகராய் உசாத்துணையாகையாலும், ஆசார்யப்ரேமத்தை அபிவ்ருத்தமாக்குமவர்களாகையாலும், இவனுக்கு ஶேஷிகளாகையாலும், இவனுக்கு ப்ராக்ருதிவஶ்யதையாலே சிலஸ்காலித்யங்கள் பிறந்தாலும் அத்தைத் தெளியப்பண்ணவும் வல்லவர்களாய் இந்த முகந்தாலே ஆதரணீயராய்ப் போருவர்கள்.

இவற்றை ஶ்ருதியும், (க) "ஆ தேவோ ஭வ, பிதேவோ ஭வ, ஆசார்யதேவோ ஭வ, அதிதிதேவோ ஭வ- மாத்ருதேவோபவ, பித்ருதேவோபவ, ஆசார்யதேவோபவ, அதிதிதேவோபவ" என்று சொல்லிவைத்தது; இங்கு அதிதியாகிறான்- ஸ்ரீவைஷ்ணவனுப்பத்து. அதிதிகளாகிறார்-தாங்கள் முன்பு நின்ற நிலைகுலைந்து இவனிருக்கிற வகத்திலே புகுமவர்களிறே. இவர்களும் தந்தாமுடைய ப்ராக்ருதிப்ராக்ருதங்களை த்யஜித்து இவன்பற்றிநிற்கிற ஶரணத்திலே ஆகதானவர்களாய்த்து; (உ) "உபாயே ஗௃ஹரக்ஷித்ரோ ஶப்த ஶரணமித்யயம்- உபாயேக்ருஹரக்ஷித்ரோஶ் ஶப்த ஶ்ஶரணமித்யயம்" இத்யாதி; அப்படி வந்தவனை குலசரணகோத்

(இவன்பற்றிநிற்கிற ஶரணத்திலே) என்றது ஶ்லேஷையாய் உபாயத்தையும் க்ருஹத்தையும் சொல்லுகிறது.

(க) தை-ஶீக்ஷாவல்லி (உ) அஹிர்ப்பு-ஸம்-௩௬-

ராதிகளை யாராயாதே ஸத்கரிக்கவேண்டுமோபாதி வைஷ்ணவனுடைய குலாதிகளையாராயாதே அதிதிஸத்காரங்களைப்பண்ணக் கடவன். (க) "அதிதிர்யஸ்ய பக்நாஸோ க்ருஹாத் ப்ரதிநிவர்த்ததே । ஸதஸ்மை துஷ்க்ருதம் தத்வா புண்யமாதாய கச்சதி-அதிதிர்யத்ரபக்நாஸோ க்ருஹாத்ப்ரதிநிவர்த்ததே - ஸதஸ்மைதுஷ்க்ருதம் தத்வாபுண்யமாதாயகச்சதி" என்கிறபடியே அதிதிகளுடைய அஸத்காரத்தில் பாபாகமநமும் புண்யக்ஷயமும் பிறக்குமென்கையாலே, இவனும் இவ்வைஷ்ணவனை யாதரியானாகில் பகவந் நிக்ரஹரூபமான பாபம்வரும். ததநுக்ரஹரூபமான புண்யமும் இவனைவிட்டுப் போகக்கடவது.

இனி இந்நால்வரில் அத்யந்தாதரணீயராவாரா ரென்னில், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வைபவஜ்ஞாநமும், பிராட்டியுடைய வைபவஜ்ஞாநமும், ஈஸ்வரனுடைய ஸர்வப்ரகார வைபவஜ்ஞாநமும் இவ்வாசார்யாங்கீகாராநந்தர மாகையாலே (உ)"யதாதேவே ததாகுரௌ யதாதேவேததாகுரௌ" என்கிற வளவன்றிக்கே விசேஷேண ஆதரணீயன் ஆசார்யனேயாய்த்து.

ஆகையாலே, இவ்வாழ்வாராகிறார் அவ்வாசார்ய வைபவமறியுமவராகையாலும், ஆழ்வார் திருவடிகளிலே நெடுநாள் பரிசர்யை பண்ணி அவருடைய ப்ரஸாதபாத்ரராய்ப் போந்தவராகையாலும், அவர்பண்ணின வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமுண்டாக நினைத்திராதவராகையாலும், அவரை வாயாரப்புகழ்ந்து அவருடைய உபகாராநுஸந்தாநப்ரீதிக்குப் போக்குவிடவேண்டுகையாலும், இப்ப்ரபந்த முகத்தாலே ஆழ்வார்வைபவத்தைப் பேசுகிறார்.

ஈஸ்வரன் ஆராதனாய் ஆசார்யன் ஸ்வாராதனாயிருக்கும். ஈஸ்வரனை யாராதிக்கைக்குத் திருவிருத்தம் துடக்கமான நாலுப்ரபந்தம் வேண்டிற்று. ஆழ்வாரை யாராதிக்கைக்கு இப்பத்துப்பாட்டுமே யமைந்தது.

அழகியமணவாளப் பெருமாள் நாயனாருளிச் செய்த
வ்யாக்யாநாவதாரிகை முற்றிற்று.

---

ஈஸ்வரன் துராராதனானபடியென்? ஆசார்யன் ஸ்வாராதனானபடியென் னென்னவருளிச் செய்கிறார் (ஈஸ்வரனை யாராதிக்கைக்கென்று துடங்கி).

அவதாரிகையினரும்பதம் முற்றிற்று.

---

(க) வி-பு-உ-　　(உ)



ஸ்ரீமதேராமாநுஜாய நம:



ஸ்ரீமதுரகவிகளருளிச் செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு.

மூ;—கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன்—என்னப்பனில்
நண்ணித்தென்குருகூர்நம்பி யென்றக்கால்
அண்ணிக்குமமுதூறு மென்னாவுக்கே. (க)

---

## நஞ்சீயர் வ்யாக்யாநம்.

முதற்பாட்டு (கண்ணிநுண் சிறுத்தாம்பினாலென்று துடங்கி) (கண்ணித்தாம்பு) அபலைகளாயிருப்பார் கட்டிவிட்ட தாம்பாகையாலே பலபிணையலாயிருக்கை. புஷ்பஹாஸ ஸௌகுமாரமான கையாகையாலே அவிழ்க்கமாட்டானிறே இப்பிணையல்திருமேனியிலே உறுத்து மென்றஞ்சுகிறார். (நுண்தாம்பு) பருத்துமேல் முதவாதே அழுந்துமென்றஞ்சுகிறார். (சிறுத்தாம்பு) அளவில்லாமையாலே உறுத்தித் திருமேனிநோ மென்றஞ்சுகிறார்.

(கட்டுண்ணப் பண்ணிய) "உரலிலிடம் ‡ காணவொண்ணாது. கயிற்றிலிடம் காணவொண்ணாது. விடில் கள்ளனாகையாலே ஓடிப் போம். கட்டினோமாகவல்லோமே" என்ற தாயார்முகத்தில் பயிர்ப்புதீர ஒருசுற்றுக்குப்போராத தாம்பு இரண்டுசுற்றுக்குப் போரும்படி திருமேனியிலிடம் கொடுத்தபடி. ஆஶ்ரிதர்கையாலே கட்டுண்ணவிடில் சீலத்துக்குப் போராது. அநாஶ்ரிதரைக்கட்டாவிடில் ப்ரபாவத்துக்குப் போராது. ராஜாவானவன் எதிரிகளைக் கட்டி வைக்கையும் பும்ஸ்த்வம்; தன்மஹிஷியின்கையில் பூமாலையாலே கட்டுண்டுகிடக்கையும் பும்ஸ்த்வம்.

(பெருமாயன்) இவருடைய *எத்திறமிருக்கிறபடி. அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீய மாக்குகையும், அவனுக்கு க்ஷுத்துநலிகையும், நவநீதத்திலே ஶ்ரத்தையுண்டாகையும், அத்தை இடுவாரில்லாதபோது களவுகாண்கையும், அத்தைத் தலைக்கட்டமாட்டாதே வாயதுகையதாக அகப்படுகையும், ஸ்ருஜ்யர்கையிலே கட்டுண்கையும், • ஸம்ஸாரபந்தத்தைத் தவிர்க்கவல்லதான இத்தை விட்டுக்கொள்ளமாட்டாதொழிகையும், இதென்ன வாஶ்சர்யமோ வென்கிறார். இவனுடைய மேன்மை எல்லைகாணலாம்; நீர்மைதரைகாணவொண்ணாது.

(என்னப்பனில்) கீழ் ஆசார்ய ருசி பரிக்ருஹீதமான வர்த்தமாகையாலே க்ருஷ்ணவ்ருத்தாந்தம் சொல்லிற்று; மேல்உத்தேஶ்யமான விஷயத்தைச் சொல்லாதே அவனை என்னப்பனென்பானென்னென்னில், ஆழ்வார் அங்கீகரிக்கைக்காக அங்கே தமக்கொருஸம்பந்தம் சொல்லுகிறார். ஒன்றைக்குறித்துப் போம்போது "நீரும்நிழலும் நன்றாயிருந்தது" என்று ஒதுங்கினால் உத்தேஶ்யமாகவேணுமோ?

---

‡ (பா) குறைக்க.

(நண்ணி) இப்படுகுழியைத் தப்பினவிறே யென்கிறார். படுகுழியென்பா னென்னென்னில்; பகவத்ப்ராப்திக்கு ஶப்தாதி விஷயங்கள் விரோதியானாப்போலே ஆழ்வாரைப்பற்றுகிற விவர்க்கு பகவத்விஷயம் விரோதியென்றபடி. அவற்றுக்கு அல்பாஸ்திரத்வாதி தோஷமுண்டாகையாலே விடலாம். இங்கே அங்ஙனன்று; நிலைநின்ற ப்ரதிபந்தகம்.

(தென்குருகூர்நம்பி) ஸர்வேஶ்வரன் ப்ராப்யத்தில் ப்ரதமாவதியாகையாலே அரைவயிறாகப்பேசி ஆழ்வார் சரமாவதியாகையாலே பூர்ணராகப்பேசுகிறார். (என்றக்கால்) பகவத்விஷயத்தில் மநோவாக்காயங்கள் மூன்றும் அந்வயிக்கவேணும்; அதெல்லாம் வேண்டா, உக்திமாத்ரமமையும் இங்குத்தைக்கென்கிறார். (அண்ணிக்குமமுதூறும்) ரஸபதார்த்தங்களிற்காட்டில் இதுக்கு வ்யாவ்ருத்தி; எல்லாபதார்த்தங்களும் நாக்கிலே இட்டால் இட்டபதார்த்தம் மாண்டவாறே ரஸமும் மாளும். இது அங்ஙனன்றிக்கே ஒருகாலிட்டால் உள்ளதனையும் அமுது ஊற்றுமாறென்கிறார்.

(என் நாவுக்கே) அவர்கள் "எங்களுக்கு இங்ஙனிருக்கிறதில்லையே:" என்றார்கள்; பகவத்விஷயமும் ரஸித்து அதுக்கெல்லை நிலமான பாகவதவிஷயத்தளவும் ரஸித்த என்நாவுக்கல்லது; அதவா; எதுரஸித்துப்போந்த நாவுக்கு அது ரஸிக்கிறதுதான். இத்தால் சொல்லிற்றாய்த்து ப்ரதமாவதியோடு சரமாவதியோடு வாசியற இவர் ஆழ்வாருக்கு அநந்யார்ஹரானபடி. (க)

முதற் பாட்டுக்கு நஞ்ஜீயாருளிச்செய்த
வ்யாக்யாநம் முற்றிற்று.

---

## நம்பிள்ளை ஈடு.

முதற்பாட்டு (கண்ணித்யாதி) (க) "உரலினோடிணைந்திருந் தேங்கிய வெளிவு - எத்திறம்" என்றும், (உ) "பிறந்தவாறும்" (ங) "பையவே நிலையும்" என்றும் அவருத்தேஶ்யமாகப் பற்றுகிறவிஷயமிறே இவருக்கு இப்போது வெளிறுக்கழியுண்கிறது. நவநீதசௌர்யநகரக்ஷோபத்தை அநுஸந்தித்து அவர் மோஹித்துக் கிடக்கும் துறையிலேயிறே இவர் இப்போது தெளிந்திருந்து வார்த்தை சொல்லுகிறது. (கண்ணிநுண்சிறுத்தாம்பினால்) ஆழ்வார் பக்கலிலே ந்யஸ்தபாரரானபடி; அவருடைய உத்தேஶ்யவஸ்துவைக் கட்டின கயிற்றினுடைய உள்மானம் புறமானம் ஆராயும்படியிறே இவர் கைபொழிந்தபடி பகவத்விஷயத்திலே.

(கண்ணித்தாம்பு) உடம்பிலே கட்டப்புக்கால் உறுத்தும்படி பலபிணையலை உடைத்தாயிருக்கை. (நுண்தாம்பு) உடம்பிலேயழுந்தும்படி நேரிதாயிருக்கை. (சிறுத்தாம்பு) குறுகியிருக்கை. உரலைச் சுருக்கவொண்ணாது; கயிற்றை நெடுக்கவொண்ணாது. (ச) "அவிகாராய ஶுத்தாய நித்யாய - ஸதைகரூபரூபாய" என்கிற இவனுடைய வடிவை நெருக்கி இடங்கண்டு கட்டுமித்தனையிறே செய்யலாவது. (ரு) "கண்ணியார் குறுங்கயிற்றால் கட்டவெட்டென்றிருந்தான்" என்றும் (சு) "கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ" என்றும் எல்லாரும் ஈடுபடுந்துறையிறே இதுதான்.

(கட்டுண்ணப்பண்ணிய) (எ) "ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶஃ - ஸம்ஸாரபந்தஸ்திதிமோக்ஷஹேதுஃ" என்று ஸ்வவ்யதிரிக்தரைக் கட்டுகைக்கும் விடுகைக்கும் ஹேதுவானவன்கிடீர் இப்போது தாயாலே கட்டின கட்டை அவிழ்த்துக்கொள்ள ஶக்தனன்றிக்கேயிருக்கிறான். (அ) "[illegible] வேஷ்டித-ப்ரத்யக்ஷோதகச்சத்வ மதிசஞ்சலசேஷ்டித" என்றாரிறே. ஸார்வபௌமனை ராஜகுமாரன் தன்மஹிஷிகையிலே அகப்

---

(க) தி-வாய்-க-ங-ங. (உ) தி-வாய்-ரு-க0-க. (ங) தி-வாய்-சு-கய-ங.
(ச) வி-பு-க-உ-க (ரு) தி-மொ-ரு-சு-எ. (சு) தி-மொ-கக-ரு-ரு.
(எ) ஶ்வேதா-சு-கசு. (அ) வி-பு-ரு-சு-கரு.

பட்டு ஒருமாலையாலே கட்டுண்டு அதுக்கொரு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே யிருக்குமாபோலேயிறே இவள் கட்டினவிதுக்கு ப்ரதிக்ரியைபண்ணமாட்டாதே யிருக்கிற விருப்பும்; பிறருடைய கர்மநிபந்தநமான கட்டை அவிழ்க்குமத்தனை யல்லது தன்னநுக்ரஹத்தால்வரும் கட்டு தன்னாலு மவிழ்க்கப்போகாது; "இனிஸக்தனாகில் போய்காணாய்" என்று அவள் சொல்லும்படி யிறே இவனுடைய அஸக்தி. (க) "தொழுகையும்" என்று கொண்டு போக்கற்றவாறே தொழத்துடங்கு மத்தனையிறே; எல்லாரையும் தொழுவித்துக்கொள்ளுமவனிறே தொழுகிறான்; "போக்கற்ற தஸையிலே அஞ்ஜலியே அபிமதஸித்திக்கு ஸாதநம்" என்றறியுமவனிறே. "அதிசஞ்சலசேஷ்டித" என்று துருதுருக்கையாய் ஊரைப்பூசல் விளைத்துத்திரிந்த நீவல்லையாகில் போய்க்காணென்கிறாள். [இத்யுக்த்வா] ஒருசொல்லாலே விலங்கிட்டு வைத்து. [அதநிஜம் கர்மஸாசகார] அவள்தான் கறப்பதது கடைவதாகப் புக்காள் [குடும்பிநீ] இவனைப்போலே நியமிக்கவேண்டுவன எத்தனை கிடக்கிறன.

(பெருமாயன்) நிரதிசய வாஸ்சர்யயுக்தன். அவாப்த ஸமஸ்த காமனுக்கு ஒருகுறையுண்டாய், அதுதன்னை எளியாரைப்போலே வழியல்லாவழியே களவிலே ஒருப்பட்டு, அது தன்னையும் ஸர்வஸக்தியான தான் தலைக்கட்டமாட்டாதே வாயதுகையதாக அகப்பட்டுக்கட்டுண்டு அடியுண்டு அதுக்கொரு ப்ரதிக்ரியைபண்ணமாட்டாதே (க) "மையவே நிலையும்" என்று உடம்புவெளுத்து ப்பேகணித்து நின்ற நிலையளவும் செல்ல நினைக்கிறார்.

(என்னப்பனில்) என்னப்பனில்; ஆழ்வார் உத்தேஸ்யமாய்ப் போகாநிற்கச்செய்தேயும் *பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரியான விஷயமாகையாலே அவ்வருகு போவாரையும் துவக்கவல்லவிஷயமாகையாலே சொல்லுகிறார். பகவத்விஷயத்தில் அடியறவார்த்தை சொன்னாராகில் ஆழ்வாரோட்டை ஸம்பந்தத்தை யறுத்துக் கொண்டாராவரிறே. (என்னப்பனில் நண்ணி) பகவத்விஷயத்தில் நின்றும் ஆழ்வார்பக்கலிலே கிட்டி; விஷயப்ரவணன் ஸப்தாதிவிஷயங்

(க) பெரு-தி-எ-அ திரு-வாய்-மு-கய-ரு.

நான் ஒன்றைப்பற்றினேன், ஒன்றைவிட்டேனென்னலாம்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. அதாவது - ஆழ்வாரை யநுபவித்து மநுபவத்திலே பகவத்விஷயமும் மந்தர்ப்பூதமாயிருக்கை.

(ஆளுரியனுப்) உரிய வடியனுப், உரிய வடியார்க்கு தந்தாமுக்கென்று ஒரு ப்ரியாப்ரியங்களின்றிக்கே ஸ்வாமி யுகந்ததையே பற்றி அவன் கைவிட்டவிடத்தே விட்டிருக்குமதிறே ஸ்வரூபம்.

(அடியேன்) ஆழ்வாருடைய நீர்மைக்குத்தோற்று அடியேனென்கிருர். (க) "தொண்டீரெல்லீரும்வாரீர்" என்னும் நீர்மையிறே. (பெற்றநன்மை) பெற்ற பகவல்லாபம், ஆழ்வாருக்கு உரிய வடியனுய்ப் பெற்றபேறு இதிறே நான். ப்ராப்தாப்ராப்த விவேகத்தில் ப்ராவண்யத்தால் வந்த நன்மையன்றென்கை. (௩)

மூன்றாம்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்

முற்றிற்று.

---

குருகூர்நகரானென்னதே, நம்பி யென்றதுக்குத் தாத்பர்யத்தை எல்லையளவு மருளிச்செய்கிருர் (நாஞென்றையித்யாதி வாக்யத்வயத்தாலே. உரியனுய் - ஆளாயென்று விசேஷிக்கைக்கு ப்ரயோஜந மருளிச்செய்வதாக உரிய வடியார் நிலையைக்காட்டுகிருர் (உரியவித்யாதி).

நானென்றிருக்க, அடியேனென்பானென்னென்ன வருளிச்செய்கிருர் (ஆழ்வாருடைய வித்யாதி). நன்மையே யென்று விக்க(ஷ) ராகிருரென்கிருர் (ஆழ்வாருக்கித்யாதி). ஸர்வம்வாக்யம் ஸாவதாரணமென்று, ஆளுரியனுய் பெற்றநன்மையென்று தாத்பர்யம் (ப்ராப்தேத்யாதி). ப்ராப்தாப்ராப்த விவேகமாவது-"பகவத்விஷயம் ப்ராப்தம். இதரவிஷயம் அப்ராப்தம்" என்று விவேகித்துப்பற்றவில்லை, உரியவடியானுகையாலே பற்றினேனென்றபடி. (௩)

---

(க) தி - வாய் - ரு - உ - உ.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம்.

அவ:—மூன்றாம் பாட்டு. (திரிதந்தித்யாதி) இவர், "தேவு மற்றறியேன்" என்றார் - கீழ்ப்பாட்டில்; இந்த ஈஶ்வரன்றான் இவர்பக்கலிலே மண்டினபடியைச் சொல்லுகிறார். பகவத்விஷய ப்ரீணநமாக ஆசார்யவிஷயத்திலே ப்ராவண்யமுகக்கடவன். ஆசார்ய ப்ரீணநமாக பகவத்விஷயத்திலே ப்ராவண்யமுகக்கடவன். (க) "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:-ப்ரியோ ஹிஜ்ஞாநிநோத்யர்த்த மஹம்ஸசமமப்ரிய:" என்கிறபடியே ஒருவர்க்கொருவர் ப்ரியவிஷயமா யிருக்குமிறே. ஒருவனை ஒருவனுகந்தானவது - அவனுகந்தாரை யுமுகக்கையாய்த்து.

இவர்கீழ், "தேவுமற்றறியேன்" என்று நம்மையும் மறந்து ஆழ்வார் பக்கலில் ப்ராவண்யரானாரே. எல்லாங்கூட நம்மை யறிவித் தவரென்றிறே ஆழ்வார்பக்கல் இவர்க்காதரம்; இப்படி நம்மை யுகந்தாருக்கு இவர் ப்ரீதராமிடத்தில், (உ) "மத்பக்த பக்தேஷு ப்ரீதிரப்யதிகா பவேத்-மமமத்பக்தபக்தேஷு ப்ரீதிரப்யதிகா பவேத்" அன்றோ ஆகையாலே நாம் கொடுக்கும் பரிசிலேதென்று பார்த்து ஆழ்வார்பக்கல் பக்தி பூர்ணமான இவர் திருவுள்ளத்திலே நீர் வெள்ளத்திலே நெய்தல் பாரித்தாப்போலே தன்னுடைய வடிவைக்கொடுவந்து பாரிக்க, இதைக்கண்டு ப்ரீதரானவிவர்

அரு:—மூன்றாம்பாட்டு. (திரிதந்தித்யாதி). வேண்டாவென்னச்செய்தே அவன்மேல்விழுந்தாலும் இவர் பற்றலாமோவென்ன வருளிச்செய்கிறார் (பகவத்விஷய ப்ரீணநமாகவென்று துடங்கி). உபபத்தியும் காட்டுகிறார் (ஒருவனை யித்யாதி). ஆசார்யவிஷயத்திலே ப்ராவண்யனால் அது ஈஶ்வரனுக்கு உகப்பாகைக்கு, ஆசார்யன்தான் ஈஶ்வரனுக்கு ப்ரியமனாயிருக்குமோவென்ன வருளிச் செய்கிறார் (ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தமென்று துடங்கி).

ஈஶ்வரன் இவர்பக்கலில் விரும்பினப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்(இவர் கீழே தேவுமற்றறியேனென்று துடங்கி) (பரிசிலென்றது.) ப்ரத்யுபகாரம். (நெய்தல் பாரித்தாப்போலே) என்றது - நெய்தல் புஷ்பம் பூத்தாப்போலே யென்றபடி. நன்மையே யென்கிறவிடத்தில் அவதாரணத்துக்குத் தாத்பர்ய

(க) கீதை - எ - கஅ. (உ) பகவச்சாஸ்த்ரம்.

இதுக்கு நிமித்தமென்னென்று ஆராய்ந்துபார்த்து, அது பகவச்சேஷத்வஜ்ஞாநத்தாலும் வந்ததன்று. பாகவத சேஷத்வமாத்ரத்தாலும் வந்ததல்ல, பக்வதாஶ்ரயணத்தாலும் வந்ததல்ல, எல்லாங்கூட நான் ஆழ்வாருக்கு அநந்யார்ஹஶேஷபூதனைப் பெற்ற பேற்றே யிதுவென்று ஸ்வகதமாக ப்ரீதராகிறார். ஆசார்ய விஷயத்தைப்பற்றி யிருப்பானொருவனை பகவத்விஷயம் தானே மேல்விழுமென்னுமிடத்துக்கு உதாஹரண மிதுவிறே. பிராட்டியைப் பற்றினாலும் அவள் அவனோடே சேர்க்கையாலே அவன் கைபார்த்திருக்கவேணும்; இங்கு அவன்றானே வந்து மேல்விழுந்து தன்னை இவனுக்குக் கொடுக்கும்.

வ்யா:—(திரிதந்தாகிலும்) திரியா நிற்கச்செய்தேயும். இங்ஙனே ஸஞ்சரியா நிற்கச்செய்தேயும்; "மெய்ம்மையே தேவு பற்றற்றி யேன்" என்று ப்ரத்யயம் பண்ணலாம்படி பகவத்விஷயத்தோடு ஒட்டற்றுத் திரியாநிற்கச்செய்தேயும் இப்பேற்றைப் பெற்றேன்.

(தேவபிரானுடை) இவர் திருவுள்ளத்தில் ஈஶ்வரன் கொடு வந்து பாரித்துக்காட்டினவடிவு நித்யஸூரிகளுக்குப் பல் விடும் வடிவாய்த்து. அவர்களையும் இவரையும் பார்த்தால் அவர்கள் நமக்கே நல்லவர்கள். இவர் ஆழ்வாருக்கே நல்லவர். இவர்க்கன்றே இவ்வடிவை நாம் ப்ரகாஶிப்பிப்பதென்று இவருக்குக் கொடுவந்து அநுபவிப்பித்தான். (க)"ஸகாநாம்கவாஞ்காமஸெ-பக்தாநாம்த்வம்ப்ரகாசஸே" என்கிற விடத்தில் பக்தராகிறார் இவராய்த்து.

---

மருளிச்செய்கிறார் (பகவச்சேஷத்வ ஜ்ஞாநத்தாலுமென்று துடங்கி - ப்ரீதராகிறா ரென்னுமளவும்). பிராட்டியைப் பற்றுமதிலும் ஆசார்யனைப்பற்றுகைக்கு அதிசயமுண்டென்றருளிச் செய்கிறார் (பிராட்டியைப் பற்றினாலுமென்று துடங்கி)

வேண்டாமென்னு நிற்கச்செய்தேயும் இவர்க்கு நித்யஸூரிபோக்யமான வடிவைக் காட்டுகிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (அவர்களையுமித்யாதி)

---

(க) ஜி - க - ௲.

(கரிய) இவ்வடிவு நித்யஸூரிகளநுபவிக்கிறபோதும், (க) "கண்கள் சிவந்து" என்று தொடங்கி "அடியேனுள்ளான்" என்று ஆழ்வார் தாம் அநுபவிக்கிறபோதும் வெளிறாயிருந்தது. இவரநுபவித்தவாறே தன்னிறமிட்டதாயிற்று. (உ) "என்னுவிசேஷ மம்மானுக்கு - செம்பொன் திருவுடம்பு" என்று ஆழ்வாரநுபவித்த போதும் பொற்கென்ற வளவித்தனைபோக்கிக் கறுத்ததில்லையே.

(கோலம்) ஆனைக்கு உதவவந்தாப்போலே இருந்தபடியே வருகையன்றிக்கே இந்த அநுபாவ்யனாய் வருகிறவனாகையாலே சாத்தின திருவாபரணமும் தானுமாயாய்த்து வந்தது. அபிமத விஷயத்தின் பாடுபோவார் ஆபரணம்பூண்டிறேபோவது. (திருவுரு கழற்றவொண்ணாதிருப்பதோராபரணத்தையும் கொண்டுவந்தார். அவ்விருண்ட வடிவுக்கு மின்போலே ப்ரகாஶகையாயிருக்குமவளாய்த்து; இவளைக்கண்டாலாய்த்து அவ்வடிவையும் காணலாவது. (௩) "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்கிறபடியே ஸ்வரூபத்தாலே ஸ்வரூபத்துக்கு ப்ரகாஶகையா யிருக்கும். விக்ரஹத்தாலே விக்ரஹத்துக்கு ப்ரகாஶிகையா யிருக்கும் - அவள்தான்.

(காண்பன்) இவ்வடிவை ஶ்ரவணமாத்ரத்தாலே யாதல், மநநமாத்ரத்தாலே யாதல், நிதித்யாஸநமாத்ரத்தாலே யாதலன்றிக்கே, ப்ரத்யக்ஷஸமாநாகாரமாம்படி அநுபவிக்கப் பெற்றேன். அவை வேண்டுவது இவன் காணவாசைப்படும்போதிறே. இங்கு அப்படியன்றிக்கே அவன்றானே யாதரித்து மேல்விழுகையாலே எனக்குக் கண்ணாலே காணுமாபோலே காணலாய்த்து.

(தேவபிரானுடைக் கரியகோலத்திருவுருக் காண்பன்) (ச) "அமரர்களாதிமுதல்வன் கருகிய நீலநன்மேனிவண்ணன் - பூமக

அகலகில்லே னென்றிருக்கையாலே பிராட்டியைக் கழற்றவொண்ணாத வாபரணமென்கிறது.

(க) தி - வாய் - அ - அ - க. (உ) தி - வாய் - உ - ரு - க.
(௩) ௩ - திருவ - க. (ச) தி - வாய் - க - கூ - ௩.

ளார் தனிக்கேள்வன் ஒருகதியின் சுவைதந்திட்டொழிவில னென்னோடுடனே" என்று ஆழ்வாரை யநுபவிப்பித்தாப்போலே என்னையு மநுபவிப்பித்தான்.

(நான் காண்பன்) "தேவுமற்றறியேன்" என்று காணுமைக்குக் கண்களைத் திரியவைத்த நான் கிடீர்கண்டேன். (தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக்காண்பன்) பிராட்டிக்கு நித்யாநுபாவ்யமாய் ஸூரிகளுக்கு ஸதாதர்ஶநீயமுமான விக்ரஹத்தைக் கிடீர் விமுகனான நான் கண்டநுபவிக்கப்பெற்றேன். (தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக்காண்பன்) அவன் நேருவதெல்லாம் நேர்ந்தான். நானும் ஒருபார்வை விஶேஷம் பார்ப்பாரைப்போலே பார்த்தே னென்னவுமாம். நவநீத சௌர்யத்திலுட்பட நாக்கு நீட்டாதவர் பரதசையைக்கண்டால் பார்த்துவிடச் சொல்லவேண்டாவே.

(திரிதந்தித்யாதி). பார்த்தேனேயாகிலும் ஆழ்வார் திருநிறம்போலே பொன்னிறமா யிருக்கிறதன்றே அது வேற்று நிறமாகையாலே கண்டுவிட்டேனித்தனை, இதுபோலே வகுளகந்தியாயிராதே துளஸீகந்தியா யிருக்கையாலே வேற்றுமணமுண்டாயிருக்குமே; ஆக இப்படி எல்லாப்படியாலும் அந்யவிஷயமாகையாலே "தேவர்" என்று அஞ்சிக்கடக்கநின்று கண்டேனென்கிறார்.

(பெரியவண் குருகூரித்யாதி). நான் ஆழ்வாருக்கு அநந்யார்ஹஶேஷபூதனைப் பெற்றபேறென்" என்கிறார்மேல். இப்பேறு

---

கரியகோலத்திருவுரு வென்கையாலே (நேருவதெல்லாம்) என்கிறது. (பார்வைவிசேஷம்) ஸாமாந்யமாகப் பார்க்கை. நித்யாநுபாவ்யமான விக்ரஹத்தை யநுபயாமல் விஸாமாந்யமாகப் பார்க்கலாமோவென்ன வருளிச்செய்கிறார் (நவநீதசௌர்யத்தி லித்யாதி.) "திரிதந்தாகிலும்" என்றதுக்கு - இங்ஙனே ஸஞ்சரியாநிற்கச் செய்தேயும் பெறாப்பேறு பெற்றேனென்றார்கீழ். அன்றிக்கே,, திரும்பேன்; திரும்பினேனேயாகிலும் ஒருகால் பார்த்துவிடுகிறேனென்று உதாஸீநபக்ஷமாதல். இத்தையருளிச் செய்கிறார் (பார்த்தேனேயாகிலுமித்யாதி)

என்னாலும் வந்ததல்ல, பிறராலும் வந்ததல்ல; அவன்றன்னாலும் வந்ததல்ல, ஆழ்வாரடியாக வந்ததென்கிறார்.

(ஆளுரியனாய்) ஆளாகப்ராப்தனாய், பகவச்சேஷத்வந்தனக்கு ஆளற்றிருக்க ஆழ்வாருக்கு சேஷபூதராகை பெறாப்பேறிறே. அன்றிக்கே, உரியவடியனாய். "தேவுமற்றறியேன்" என்னும்படி ஸர்வசேஷிபாடும் போகாதபடி ஆழ்வாருக்கு அநந்யார்ஹனாய்.

(நம்பிக்கு) வேறு பகவத்விஷயம் தேடிப்போகவேண்டும்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. அந்த ஸர்வரக்ஷகனானவனுக்கும் ஆளாகாத வென்னையும் ரக்ஷித்து ஆளாக்கிக் கொண்ட பூர்த்தியன்றே ஆழ்வாரது, (நம்பிக்கு ஆளுரியனாய்) இவருடைய * ஶ்ரீ குணேஷு தாஸ்யம் - குணோர்த்தாஸ்ய முபாகத: இருக்கிறபடி. (நம்பிக்காளுரியனாய்) இவருடைய ப்ரணவார்த்தாநுஸந்தாந மிருக்கிறபடி.

(குருகூர்நம்பி) இந்தநம்பி - (க) "வாஸுதேவோஸிபூர்ண: - வாஸுதேவோஸிபூர்ண:" என்கிற பரமபதநிலயனாதல், அவர்தாமநுஸந்தித்த திருக்குறுங்குடிநம்பியாதலன்றிக்கே, திருநகரியிலே வர்த்திக்கிறநம்பி, இவருக்குப் பூர்த்திக்கு ஊற்றுவாய் இத்தேசவாஸமென்றிருக்கிறார்.

(வண்குருகூர்) வண்மையை யுடைத்தான திருநகரி, ஆழ்வார் என்னைத்தந்தாப்போலே ஆழ்வார் தம்மைத்தந்த திருநகரி, * ஸர்வகாமதுக்கான தேசம், (பெரியவண் குருகூர்) பரமபதம் ஒரு சிறுமை யென்னும்படி உபயவிபூதியும் ஒதுங்கலாம்படி பெருமையை யுடைத்தானவூர்; அன்றிக்கே, (பெரியவண் குருகூர்) (உ) "புவியுமிருவிசும்பும் நின்னகத்த நீ யென்செவியின்வழிபுகுந்

---

(ப்ரணவார்த்த மென்றது) கண்ணபுரமொன்றுடையானுக்குப் போலே அகார உகார மகாரார்த்தம் சொல்லிற்றாய், இத்தால் ஸ்வாபாவிக சேஷத்வமென்றதல்,

(என்னைத்தருகை) எனக்கு ஜ்ஞானத்தைத்தருகை. இங்கிருக்கிறவர்கள்

---

(க) பகவச்சாஸ்த்ரம். (உ) பெரிதிருவ - ௭௫.

தென்னுள்ளாய்" என்கிறபடியே விபூதிமானையும் விபூதியையும் தமக்குள்ளே யடக்கியிருக்கிற வாழ்வாரைத் தனக்குள்ளே யடக்கும்படியான பெரியதேசம்.

(நகர்) விலக்ஷணவஸ்துக்கள் வந்துசேரும்தேசம். "தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக்காண்பன் நான்" என்று அக்கரையாரடங்கலும் வந்து பாரிக்கும்படியான பட்டணமாயிற்று. (நகர்) முக்தாஹாரம் பாரிக்கும்தேசம். * சொன்னசொல் நம்புவார்பதி வைகுந்தமிறே. (க) "குரவைகோத்த குழகனை மணிவண்ணனை - எத்துதல் மனம்வைம்மினோ" (உ) "தென்னிலங்கை யெரியெழச் செற்றவில்லியை-பாவுமினோ" என்று தேவகீபுத்ராத்நமும் அதுதன்னிலும் விற்பிடிமாணிக்கமும் விலைசெல்லும் தேசம்.

(அடியேன்பெற்ற நன்மையே) இங்கு "அடியேன்" என்கிறது-நானென்றபடி. ஆளுரியனானபின்பு நானிருக்கும்படி இதிறே. (பெற்ற நன்மையே) ஆழ்வார் தமக்கு இன்னும் பெறவேண்டுவன நன்மையுண்டேயாகிலும் நமக்கு இனிப்பெறவேண்டும் நன்மை

---

முக்தரோவென்ன வருளிச்செய்கிறார் (சொன்னசொல் நம்புவாரென்று தொடங்கி). (விற்பிடி) என்றது - வில்லைப்பிடித்த தஶரதன்பெற்ற மாகதமணியென்றபடி. வில்லென்று-தேஜஸ்ஸுக்கும்பேர். தேஜஸ்ஸையுடைய மாணிக்யமென்றுசாடு.

கீழ் ஆளுரியனென்று ஶேஷத்வம்சொல்லி, பின்னையும்-அடியேனென்று இங்கும் ஶேஷத்வம் சொன்னால் புநருக்தமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (அடியேனென்கிறது - நானென்றபடியென்று) இரண்டாலும் பலித்தது அநந்யார்ஹஶேஷபூதனான நானென்றபடி.

(ஆளுரியனானபின்பு நானிருக்கும்படி இதிறே) என்றதுக்குத் தாத்பர்யம் அடியேனென்றால் ஶேஷத்வத்தைச்சொல்லுமதொழிய நானென்று ஸ்வாதந்த்ர்யத்தைச் சொல்லுமோவென்று, அநந்தரத்தில் நானென்கையாலே அஹமென்றிராதே அடியேனென்றிருக்கும். பெற்றவென்றபூதத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (ஆழ்வார்தமக்கென்று தொடங்கி) நானென்றது - தாஸோஹமென்ற

---

(க) தி - வாய் - ௩ - ௬ - ௩. (உ) தி - வாய் - ௩ - ௬ - ௨.

யொன்றுமில்லை. ஆழ்வார்தாம் (க) "அடியார்கள் குழாங்களை:- உடன்கூடுவதென்றுகோலோ" என்றும், (உ) "மல்குநீலச்சுடர் தழைப்ப" என்று துடங்கி "என் திருமார்வனை வந்தெய்த மாறறி யேன்" என்றும் மநோரதம் நடவாநிற்க; இன்று நான் இப்பேறு பெறும்படியானபடி யென்?.

(நம்பிக்கித்யாதி) அவனுக்கு ஶேஷபூதராயிருந்து வைத்தே அவர் அலமாராநிற்க, நான் ஆழ்வார் தமக்கே ஶேஷபூதனாயிருந்து வைத்து இந்நன்மையைப் பெறுவதே? * வைஷ்ணவ ஸம்ப்ரய ராஞல் "ப்ரயாஸ்யந்தி" என்று-போய்ப்பெறவேண்டாதே இருந்த விடத்திலே வந்து திருக்குதிப்பதே. (௩) "எத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார்தவம்" என்ற வார்த்தை என்னளவிலே பலித்ததென்று ஸ்வாநுஸந்தாநத்தாலே ஸந்துஷ்ட ராகிறார். (௩)

மூன்றும்பாட்டின் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

படியாய், அடியேனென்றபடியேயாயிருக்கும். கேவலம் அஹமென்கிறாரென்று தாத்பர்யம்.

நன்மையேயென்றவிடத்தில்ஏவகாரம்அவதாரணத்தையும் ஸ்வரத்தையும் சொல்லுகிறது; அவதாரணமாவது - நிஶ்சயம். ஸ்வரமாவது - ஈடுபாடு. அதில் கீழே, இப்பேறு என்னாலும்வந்ததல்லவென்று அவதாரணமாகச்சொல்லிற்று. இங்குஸ்வரத்திலே தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆழ்வார்தாம் அடியார்கள் குழாங்களையென்றுதொடங்கி மேலெல்லாம்). ‡ (திருக்குதிப்பதென்றது) பாக்யம் ஸித்திப்பதென்றபடி. (௩)

---

(க) தி - வாய் - உ - ௩ - ௧௦.
(உ) தி - வாய் - எ - ௯ - ௯. (௩) ச - திருவ - ௧அ.
‡ (பா) திருக்குதிப்பது - தாஸ்யைஶ்வர்யம் பெறுவது.

மூ :—நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்
புன்மையாகக் கருதுவராதலில்
அன்னையாயத்தனு யென்னையாண்டிடும்
தன்மையான் சடகோப னென்னம்பியே. (௪)

---

## நஞ்சீயர் வ்யாக்யாநம்.

அவ :—நாலாம் பாட்டு. உமக்கு இந்தநன்மைக்கு அடியென்னென்னில், ஸத்துக்களாலும் கர்ஹிதனான வென்னை பித்ராதிகள் செய்வதும் செய்து உபகரித்தானென்கிறார். இப்படி ஆழ்வார் உம்மை விஷயீகரிக்கைக்கு நீரிட்ட பச்சையென்னென்னில், ஸத்துக்களும் கைவிடும்படி † தண்ணியனானேனென்கிறார்.

வ்யா :—(நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்) பரதுக்காஸஹிஷ்ணுக்களாய் பரஸம்ருத்த்யேகப்ரயோஜநராய் (க) ("வ-ூவ-ஹாஷீவூஸஊா-தூா-பூர்வபாஷீப்ரஸந்நாத்மா" என்றும் (உ) "விஊஉதிஃ - விமலமதிஃ" இத்யாதிகளிற் சொல்லுகிறபடி களையுமுடைய கூரத்தாழ்வானும் ஆண்டாளும் பிராட்டியும்போல்வார். வேதங்கள் கோஷித்ததையும் கைப்படுத்திக்கொண்டிருக்குமவர்கள். (ங) "அந்தணர்மாடு" என்கிறபடியே வேதைகதநராயிறே யிருப்பது. (௪) "ஜுவஷிஜெதூாஃ - த்ரவந்திதைத்யாஃ" என்கிறபடியே வேதங்களும் எவிற்றுச்செய்யும்படி போலேகாணும் இவர்கள் வேண்டப்பாடு. (புன்மையாகக் கருதுவர்) புன்மையும் புன்மைக்காஶ்ரயமாகையு மன்றியே புன்மையேதானாகக்கருதுவர்கள். (ஆதலில்) அதுவே ஹேதுவாக.

(அன்னையாயித்யாதி) "நம்மையொழியப் புறம்பு இவனுக்கு எங்கும் புகலில்லை" என்று ஸர்வவிதபந்துவுமானார்; ப்ரியத்துக்குக் கடவமாதாவும் ஹிதத்துக்குக் கடவபிதாவும், ஹிதைஷியான வாசார்யனுமாகையை ஸ்வபாவமாகவுடைய வாழ்வார். (ரு) "ஊாதூஜெவொஜவ - மாத்ருதேவோபவ" இத்யாதிகளில் படி

---

(க)
(உ)
(ங) திரு - நெ - ௪.
(௪) மாங்கள்யஸ்தவம்.
(ரு) தை - ஶீக்ஷாவல்லி
† பா - தண்ணியனாகை.

யையுடைய வாழ்வார். (சடகோபனென் நம்பியே) தன் குற்றத்தைப் போக்குமளவன்றியே என் குற்றத்தைப் போக்கும்படி நிரபேக்ஷர்.

நாலாம்பாட்டுக்கு நஞ்சீயர் வ்யாக்யாநம்

முற்றிற்று.

---

## நம்பிள்ளை ஈடு.

அவ;—நாலாம்பாட்டு. நானென்றது தான் முன்பு உம்மை எவ்வளவாக நினைத்தென்ன, இதிறே முன்பு என்னுடைய ஸ்த்திதியென்கிறார்.

வ்யா;—(நன்மையாலித்யாதி,) ஆத்மகுணோபேதராய் அறிவுடையாரில் ஆழ்வாரை யொழிந்தாரடையக் கைவிடும்படியன்றோ என்னுடைய ஸ்த்திதியிருக்கும்படி. நன்மை யென்கிறது-குணதோஷாஶ்ரயமாயிருந்தால் தோஷாம்ஶத்தைக் கைவிட்டு குணாம்ஶத்தைக்கைக்கொள்ளுகை. அதில் மிகுகையாவது-குணமென்று பேரிடலாவதொன்று மின்றிக்கே தோஷமேயாயிருந்தால் அது தான் பற்றாசாகக்கைக்கொள்ளுகை.

(நான்மறையாளர்கள்) அதுக்கடியாக ஹிதாநுஶாஸநம் பண்ணிப்போந்த வேதங்களிலே வாஸனைபண்ணி யிருக்குமவர்கள். நாலுவகைப்பட்ட வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள், அவர்களாகிறார்-ஸ்ரீ ஜநகராஜன் திருமகளாராதல். கூரத்தாழ்வானாதல். (புன்மையாகக்கருதுவர்) புன்மையென்றொரு குணமாய் அதுக்காஶ்ரயமான தர்மியுமா யிருக்கையுமன்றிக்கே புன்மைதான் ஒருவடிவு கொண்டதென்றிருப்பர்கள். (ஆதலில்) அதுவே ஹேதுவாக,

(அன்னையாயித்யாதி) நாமல்லது இவ்வளவில் ரக்ஷகரில்லையென்று எனக்கு ஸர்வவிதமான பந்துவானவர். (௧)"ஸவிதா த்வமி ...... ஸஹஷி... தீர்நீ வொகா.நீ ஸஂவ...க்ரு ... தஶேவஶரணம் கஃ - ஸபித்ராசபரித்யக்தஸ்ஸா

---

(௧) ரா - ஸு - ௩அ - ௩௩.

ஶைஶ்ச ஸமஹர்ஷிபி: । த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய தமேவஶரணங்கத:” என்று புறம்பெங்கும் புகல்காணாதே மீண்டுவந்தகாகத்தோபாதி புறம்பு இவனுக்குப்பற்றாசில்லையென்று ஸர்வவித ரக்ஷகரானவர், ப்ரியமேசெய்யக்கடவ தாய் செய்வதும், ஹிதமே செய்யக்கடவ பிதாசெய்வதும், ஸ்வரூபாநுரூபமாக வடிமை கொள்ளும் நாயகன் செய்வதும் செய்யுமவர். (க) “தாயாய் தந்தையாயறியாதன வறிவித்தவத்தா” என்று பகவத்விஷயத்தில் அவர் சொல்லுமதை ஆழ்வார் விஷயத்திலே இவர்சொல்லுகிறார். (தன்மையான்) அக்நிக்கு ஔஷ்ண்யம் போலேயும் ஜலத்துக்கு ஶைத்யம் போலேயும் இஸ்ஸ்வபாவத்தை நிரூபகமாக வுடையவர்.

(சடகோபனென்நம்பியே) தாய்செய்வது தமப்பன் செய்யமாட்டான். தமப்பன் செய்வது தாய்செய்யமாட்டாள். புறம்புள்ளார் செய்வது இருவரும் செய்யமாட்டார்கள். எல்லார் செய்யுமதும் செய்யவல்ல பூர்த்தியையுடையவர். ஆராய்ந்தால் அடியின்றிக்கே போட்கணுயிருக்கிற அபூர்ணவிஷயங்களை ஆழ்வாருக்கு த்ருஷ்டாந்தமாகச் சொன்னவிடம் தப்பச்செய்தேன். இனிச்சொல்லலாவதொன்றுண்டு. என்னுடைய தண்மையாகிற பாழ்ந்தாறு நிரம்பும்படியான பூர்த்தியை யுடையவனென்றுமித்தனை. (௪)

நாலாம்பாட்டுக்கு நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

---

(க) தி - வாய் - ௨ - ௧ - ௨.

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.

———( o )———

அவ:—நாலாம் பாட்டில், என்னப்பனிலென்று காற்கடைக் கொண்ட விஷயத்தை ஆழ்வாருகந்தாரென்று விரும்புகைக் கடியென்னென்னில், என்தண்மைபாராதே என்னை விஷயீகரித்த நீர்மையை யநுஸந்தித்தால் அவருகந்தவிஷயத்தை உகவாதொழிவனோவென்ன, உம்முடைய தண்மையேது. அது பாராதே அவர் விஷயீகரித்தபடி யென்னென்ன, அத்தைப் பேசுகிறார்.

வ்யா:—(நன்மையாலித்யாதி) ஆத்மகுணங்களால் ப்ரசுரராய் ஸம்ஸாரிகளுக்கு அபாஶ்ரயபூதராயிருப்பாரில் ஆழ்வாரை யொழிந்தாரடங்க, "இவன் அவஸ்து" என்று கைவிடும்படியன்றோ என்னுடைய ஸ்திதியிருக்கும்படி.

---

அரு:—நாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டுக்கும் இப்பாட்டுக்கும் ஶங்காபரிஹாரரூபேண ஸங்கதி யருளிச்செய்கிறார் (என்னப்பனிலித்யாதி) என்னப்பனிலென்றது - தேவுமற்றறியேனென்றதுக்கு உபலக்ஷணம். (உகந்தார்) என்றவநந்தரம் "ஆகிலும்" என்றத்யாஹார்யம். ஆகையால் ஆழ்வாருகக்கை விரும்புகைக் கடியாயிருக்க (அடியென்னென்னில்) என்கிற ஶங்கை உதியாதென்கிறது பரிஹ்ருதம். "புன்மையாகக் கருதுவராதலில்" என்றதைக் கடாக்ஷித்து என்னுடைய நிகர்ஷமே பற்றாசாக அங்கீகரித்த வாழ்வாருடைய ஸௌலப்யம் அவருகந்தவிஷயமென்றாகிலும் பற்றுகைக்கு ஹேதுவென்று பரிஹரிக்கிறார் (என்தண்மை யித்யாதி). என்தண்மைபாராதே "அதுவே பற்றாசாக" என்று கூட்டுவது. (ஒழிவேனோவென்ன) என்றது - இப்படி உத்தரமருளிச்செய்யவென்றபடி.

நான்மறையாளர்களாகையாலே நன்மையால் மிக்கவர்களென்றாய், அத்தாலே உத்தாரகரென்று பலிதார்த்த மருளிச்செய்கிறார் (ஆத்மகுணங்களாலித்யாதி). ஆத்மகுணங்கள் - ஆந்ருஶம்ஸ்யாதிகள். புன்மையாகக் கருதுகிறவிவர்களில் ஆழ்வாரையும் அந்தர்ப்பூதராக்கினால் மேலே என்னையாண்டிடுமென்னக் கூடாமையாலே (ஆழ்வாரை யொழிந்தார்) என்று சொல்லுகிறார். அடங்க) க்ருத்ஸ்நம். நான்மறையாளர்களெல்லாரும்.

ஒருத்தனுக்கு நன்மையாவது - தோஷ குணங்கள் ஏகாஸ்ரய நிஷ்டங்களாயிருந்தால் தோஷத்தைவிட்டு குணம்ஸத்தை ஸ்வீகரிக்கை; அதில் மிகுதியாவது-குணமென்று பேரிடலாவதொன்றுமின்றிக்கே தோஷமேயாயிருந்தால் அதுதானே பற்றாசாகக்கைக் கொள்ளுகை.

(நான்மறையாளர்கள்) அதுக்கடியாக ஹிதாநுஶாஸநம் பண்ணிப்போருகிற வேதங்களிலே அவகாஹித்திருக்குமவர்கள். நாலுவகைப்பட்ட வேதங்களுக்கும் வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள். அவர்களாகிறார் - ஸ்ரீஜநகராஜன் திருமகளாதல், கூரத்தாழ்வானாதல். இத்தால் சொல்லிற்றாயிற்று - வேதார்த்த தாத்பர்யம் கைப்படுகை. அதாவது - ஆந்ருஶம்ஸ்யப்ரதாநராகை யென்றபடி.

(புன்மையாகக்கருதுவர்) புன்மையென்று ஒரு தர்மமும் அதுக்கு ஆஸ்ரயமான தர்மியுமாயிருக்கையன்றிக்கே, புன்மைதான் ஒரு வடிவுகொண்டதென்றிருப்பர்கள். புன்மையாவது - துக்கமாதல், பொல்லாங்காதல். விஷயாந்தர ப்ராவண்யமாதல். துர்மாநமாதல். இதுதான் மேலிற்பாட்டிலே ப்ரஸக்தமாகக்கடவது.

---

நன்மையால் மிக்க வென்றத்தை விவரிக்கிறார் (ஒருத்தனுக்கித்யாதி வாக்யத்வயத்தாலே) (பற்றாசாக) ஹேதுவாக.

தாத்பர்யார்த்தம் (அதுக்கித்யாதி). அதுக்கு-பற்றாசாகக்கொள்ளுகைக்கு-ஶப்தார்த்தகதநமுகேந ஆளர்களென்றதுக்கு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (நாலுவகையித்யாதி) (வ்யாஸபதம்) அகண்டமான வேதத்தை அர்த்தத்தின்படியே ஶாகாகாண்டாதிருபேண விபஜிக்கிற வ்யாஸருடைய வதிகாரம் (அவர்களாகிறார்) என்றது - நன்மையால் மிக்க நான்மறையாளர்களாகிறாரென்றபடி. உக்தார்த்தநிகமநம் (இத்தாலித்யாதி) வேதார்த்த தாத்பர்யத்தின்படியே யநுஷ்டிக்கவல்லவர்களா யிருக்கையென்றபடி. (ஆந்ருஶம்ஸ்யம்) ஸர்வபூதாநுகூலாசரணம்.

புன்மைஶப்தார்த்தமாகையாலே துக்கமாதலென்றது - இவ்விடத்துக்கு விவக்ஷிதமன்று. மேல்பாட்டில் துக்கத்தை யுபபாதியாமையாலே. (துக்கம்) பாபபலம். (பொல்லாங்கு) பாபம்.

(ஆதலிலன்னையாயத்தனு வென்னையாண்டிடும் தன்மையான்) அப்புன்மையே ஹேதுவாக இவ்வளவில் நாமல்லது ரக்ஷகரில்லை யென்று எனக்கு ஸர்வவிதபந்துவுமானவர். (க) "த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவஶரணங்கத:" என்கிறபடியே காகத்தோபாதி இவனுக்கும் புறம்பொருபற்றுசில்லையென்று, அதுவே ஹேது வாக ஸர்வவிதரக்ஷகரானவர்.

ப்ரியமே செய்யக்கடவ மாதாசெய்யுமதுவும், ஹிதமே செய்யக்கடவ பிதாசெய்யுமதுவும், ஸ்வரூபாநுரூபமான வடிமைகொள்ளும் நாயன்செய்யுமதுவும் செய்யுமவர். (க) "தாயாய்த் தந்தையாயறியாதன வறிவித்தவத்தாநீசெய்தன" என்று பகவத்விஷயத்தில் ஆழ்வார் சொல்லுமதெல்லாம் ஆழ்வார் விஷயத்திலே சொல்லுகிறார் இவர்.

(தன்மையான்) அக்நிக்கு ஔஷ்ண்யம்போலேயும் ஜலத்துக்கு ஶைத்யம்போலேயும் இஸ்ஸ்வபாவங்களை நிரூபகமாக வுடையவர். அதாகிறது-இவனுக்கு உபகரித்தோமென்று தாம் நினைத்தல், இவன்றனக்கு ப்ரத்யுபகாரத்தி விழியவேண்டி யிருத்தல் செய்யாதொழிகை.

---

தாத்பர்யார்த்தம் (அப்புன்மையே யித்யாதி). எல்லாருக்கும் த்யாகஹேது வானபுன்மை இவருக்கு ரக்ஷிக்கைக்கு ஹேதுவானபடியை யுபபாதிக்கிறார் (த்ரீந்லோகாநித்யாதி). அன்னையாயித்யாதிக்கு கௌணவ்ருத்தியாலே ஶப்தார்த்தம் (ப்ரியமேயித்யாதி). (நாயன்) ஸர்வேஶ்வரன். வ்யாக்யாதா ஈடுபடுகிறார் (தாயாயித்யாதி).

"தன்மையான்" என்றத்தைக் கீழ்ச்சொன்ன மூன்றுபதங்களிலும் கூட்டித் தாத்பர்யம் (அக்நிக்கித்யாதி). இஸ்ஸ்வபாவங்களை நிரூபகமாகச் சொன்னத்தால் பலிதம் (அதாகிறதித்யாதி). ஶாட்யத்தைப்போக்கினதுக்கு ஜ்ஞாபகமேதென்ன வருளிச்செய்கிறார் (கீழித்யாதியாலே).

(சடகோபன்) என்பக்கல் ஶாட்யத்தைப் போக்கினவர். கீழ் மூன்று பாட்டிலும் தென்குருகூர்நம்பியென்று சொன்னவர், இப்பாட்டில் சடகோபனென்றாரிறே ஸ்வதோஷத்தைப் போக்கினபடியாலே.

(என் நம்பியே) தாய்செய்வது தமப்பன் செய்யமாட்டான். அவன் செய்வது இவள் செய்யமாட்டாள். ஆசார்யன் செய்யுமது இருவரும் செய்யமாட்டார்கள். நாயன்செய்யுமது அடியான் செய்யமாட்டான். எல்லார் செய்வதும் செய்யவல்ல பூர்த்தியை யுடையவர். (என் நம்பியே) என்னுடைய தண்மையாகிற பாழ்ந் தாறு நிரம்பும்படியான பூர்த்தியையுடையவ ரென்னுமத்தனை. இவரைக்குறித்துக் கீழ்ச்சொன்ன த்ருஷ்டாந்தங்களுக்கு ஸர்வதா ஸாம்யமில்லை. கர்மௌபாதிகமாகவந்த ஸம்பந்தமாகையாலும் அபூர்ணஸ்தலமாகையாலும். (௪)

நாலாம்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்

முற்றிற்று.

---

பதாந்தரம் சொல்லாதே நம்பியென்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தாயென்றுதுடங்கி அஞ்சுவாக்யத்தாலே). (ஆசார்யன்) என்கிற வாக்யத்துக்கு சடகோபனென்றது-என் அஜ்ஞாநத்தைப் போக்கினவரென்றபோராகையாலே யென்று கருத்து. நம்பியென்றதுக்குக் கீழ்ச்சொன்னவர்களோடு ஸாம்யம் சொன்னார். அவர்களிலும் ஆதிக்யமாக வர்த்தாந்தரம் (என்னுடைய வித்யாதி). (பாழ்ந்நாறு) படுகுழி. அதாவது - தம்முடைய தோஷங்களாகிற வஞ்சகமான படுகுழியைத் தூற்றுப்பொகடுகைக்கீடான க்ருபாதிகுணபூர்த்தியையுடையவரென்கை. ஆதிக்யத்தை யுபபாதிக்கிறார் (இவரையித்யாதி). "நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் - என்னை - புன்மையாகக் கருதுவராதலில் - சடகோபனென்நம்பியே - அன்னையாயத்தனு யென்னை யாண்டிடும் தன்மையான்" என்றந்வயம். ஆக, காற்கடைகொண்ட பகவத்விஷயத்தையும் ஸர்வப்ரகாரோபகாரகரான வாழ்வாரையிட்டு உகவாதொழிவனோ வென்று கருத்து. ௪)

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்

## வ்யாக்யாநம்.

——( o )——

அவ:—நாலாம் பாட்டு. (நன்மையித்யாதி). "தேவுமற்றறியேன்" "பெரியவண் குருகூர்நகர் நம்பிக்காளாரியனு யடியேன் பெற்றநன்மை" என்று இவர் சொல்லக்கேட்டவர்கள். (க) "ஸவெஷாஜெவஜொகா நாஂ வி தா௯ா தாவஸாயவஃ - ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதா சமாதவஃ" (உ) "வி தாஹஸ்ய ஜ஗தொ௯ா தா - பிதாஹமஸ்யஜகதோமாதா" (ங) "உலகுக்கோர்முந்தைத் தாய்தந்தையே" என்கிறபடியே ரிஷிகளும் ஆழ்வார்களும் அவன்றானும் ஏககண்டமாக ஸர்வலோகங்களுக்கும் மாதாபிதாவாக ஸர்வேஸ்வரனைச் சொல்லாநிற்க, நீரும் அந்த லோகத்திலே ஒருவராயிருக்க, இப்படி பந்துவானவனை யாஸ்ரயித்தல். அதுவுமன்றிக்கே, (ச)"வாஸுதெவஸ்ஸவ-மிதி ஸமஹா தா-வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸமஹாத்மா" (ரு) "பெருமக்கள்" (சு) "சிறுமாமனிசர்" என்று * கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனும் ஆழ்வார்தாமும் கொண்டாடும்படியான விலக்ஷணவர்க்கத்திலே சிலரை ஆஸ்ரயித்தல் செய்யாதே, ஆழ்வாரையே நீராஸ்ரயிக்கைக்கு ஆழ்வார் உமக்குச்செய்த வுபகாரமேதென்ன, என் தோஷாதிஶயத்தாலே அந்தபரமஸாத்விகரும் என்னை நெகிழ, அதுவே பற்றாசாக எனக்கு முகம்தந்து மாதாபிதாவும் தாமேயாய் என்னை யடிமைகொண்டு போந்தஸ்வபாவம் ஆழ்வார்க்குள்ள தொன்றாகையாலே, அவரேயன்றோ எனக்குப் பூர்ணரான உபகாரரென்று இப்பாட்டிலே அவர்களுக்கு உத்தரமருளிச்செய்கிறார். ஆழ்வாருடைய பூர்த்தியை உபபாதித்தபடி.

---

அரு :—நாலாம்பாட்டு. (நன்மையித்யாதி). இந்தப்பாட்டுக்குத் தாத்பர்யம் பரமகாருணிகரும் நெகிழும்படியான வென்னையும் அங்கீகரிக்கையாலே ஆழ்வாருடைய பூர்த்தியை உபபாதிக்கிறதென்றபடி.

---

(க) பார - ஆர - கஅக - ருஎ.
(உ) கீதை - கூ - கஎ.
(ங) தி - வாய் - ரு - எ - எ.
(ச) கீதை - ஙு - கக.
(ரு) தி - வாய் - ங - எ - ரு.
(சு) தி - வாய் - அ - கo - ங.

வ்யா :–(நன்மையாலித்யாதி) (க) "நலத்தால்மிக்கார்" என்று ஆழ்வாரருளிச்செய்யக் கேட்டிருக்கையாலே, தாமும், "நன்மையால் மிக்க" என்கிறார். தீமைபோனவளவாதல், நன்மையுண்டானவளவாதலன்றிக்கே, நன்மையா லதிசயித்தவர்கள். இதுக்கவ்வருகான நன்மையில்லாதபடியான நன்மையிலே நிலைநின்றவர்கள்.

ஒருவனுக்கு, (உ) "ஸாதுராசாரஃ" என்கிறபடியே நன்மைகலசாத பொல்லாங்காவது. (ங) "நிஷ்டசிந்தநம்" என்றும், (ச) கோடியமனத்தால் சினத்தொழில்புரிந்து" என்றும், (ரு) "சினத்தினாற்செற்றம்நோக்கி-வாளா தீவிளிவிளிவன்" என்றும் சொல்லுகிறபடியே நிர்நிபந்தநமாக பகவத்விபூதிபூதரோடே சீறுபாறென்றுபோருகை

நன்மையாவது - அவர்கள்பக்கல் அபகார விபரீதனாயிருக்கையும், தன்பக்கலிலே நிர்நிபந்தநமாக அபகாரபாராளவில் உபேக்ஷித்திருக்கையும். நன்மையால் மிகுகையாவது-(சு) "அபகாரிஷ்வபிஸதா ஸாதுஸ்ஸாத்வேவவர்த்ததே" என்கிறபடியே அந்த அபகாரபாராளவிலும் உபகாரகனாய்ப்போருகை. அதாகிறது - அவர்களளவில் குறைகாணாதொழிகையிறே.

---

நன்மையால் மிக்க வர்களென்றறிந்தபடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (ததீயரைநலத்தால் மிக்காரென்று துடங்கி). தீமைபோனவளவாதலென்றவாக்யத்தைவிவரிக்கிறார் (இதுக்கவ்வருகானநன்மையென்று துடங்கி) நன்மைக்கு ப்ரதிகோடியான தீமையை உபபாதித்துக்கொண்டு அநந்தரம் நன்மையை யருளிச்செய்து அதின்மிகுதியை யருளிச்செய்கிறார் (ஒருவனுக்கு ஸாதுராசாரஃ என்கிறபடியே) என்று துடங்கி. (தீவிளி) நிஷ்டுரபாஷணம் (விளிவன்) அழைப்பன். (அபகாரவிபரீதன்) அபகாரஶீலனாகாமை. பிராட்டி அப்படி தோஷங்காணாதிருந்தாளோ வென்னவருளிச்செய்கிறார் (ஏகாக்ஷியென்

(க) தி - வாய் - ரு - அ - ங.
(உ) கீதை -
(ங)
(ச) தி - மொ - க - சு - சு.
(ரு) திருமாலை - உசு.
(சு)

இப்படி யிருக்கிறவர்களாகிறார் - பிராட்டி கூரத்தாழ்வான் போல்வார்களிறே. ஏகாக்ஷிஏககர்ணிதுடக்கமான ராக்ஷஸிவர்க்கம் ஓவாமலிருந்து தர்ஜநபர்த்ஸநாதிகளைப்பண்ணி யிருக்கச்செய்தேயும், இவர்களை நலியவேணுமென்ற திருவடியோடே மறுதலைத்து (க) "𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍁𑌣𑌮𑌾𑌰𑍍𑌯𑍇𑌣 - கார்யம்கருணமார்யேண" என்றாப்போலே ஐந்த்ரவ்யாகரணபண்டிதனான நீ பின்னையும் உன் ஜந்மம்விடாமல் வார்த்தைசொன்னாயீ. இவர்களுடைய கண்ணநீர்கண்டால் கற்றவனால் கருணைபண்ணவன்றோவடுப்பது. நாட்டில் குற்றம்செய்யாமலிருக்கிறா ராரேனுமுண்டோ? இவர்கள் தாம் குற்றம்செய்யிலன்றோ இவ்விசாரம் வேண்டுவது. அவர்களேதேனும்வித்யதிக்ரமம் பண்ணினார்களோ? நீ கற்றபரப்பில், "நாயன் சொன்னது அடியான்செய்கை குற்றமென்று ஒருவசநம் கிடந்ததோ? இவர்கள் ராவணபரிகரமாய் அவனுக்குக் கைவழிமண்ணான வடியாருமாய், அவனுடைய வாஜ்ஞாபரிபாலநபரைகளுமாகாநின்றால் அவன் சொன்னதை மறுக்கலாமோ? பெருமாள் உன்னை என்னைக்கண்டுவாவென்று விட்டாரோ, ஸ்த்ரீவதம் பண்ணிவாவென்று விட்டாரோ? அப்படிசொன்னாராகில் அவர் குற்றமாகிறது. நீ சொன்னாயாகில் அந்த வித்யதிக்ரமம் உன்னதாகிறது" என்று குணக்ரஹணம்பண்ணி ராக்ஷஸிகளை ரக்ஷிப்பித்தாளிறே பிராட்டி. ஆகையாலிறே இவள் கோஷ்டியைப்பற்ற ராமகோஷ்டி லகுதரையாயிற்று.

அவயவங்களிலே ஹாநிபிறக்கும்படி அபசாரம் பண்ணினானாரானும் நான் புக்கலோகம் புகவேணுமென்றிறே ஆழ்வானபேக்ஷித்தது. இப்படிக்கு ப்ரஹ்லாதனும் க்ருத்யோத்பாதநம் பண்ணித் தன்னை நலியவிட்ட புரோஹிதவர்க்கத்தை மற்றத்தும் அந்த க்ருத்யைபோய்நலிய, ஸர்வேஶ்வரனை யபேக்ஷித்து அவர்

---

றுதுடங்கி) (ஓவாமல்) விச்சேதியாமல். "ராஜஸம்ஶ்ரய வஶ்யாநாம்" என்றதுக்குப் பொருளருளிச்செய்கிறார் (இவர்கள் தான் குற்றம்செய்யிலன்றோவென்று துடங்கி). (கைவழிமண்) என்றது - க்ரயவிக்ரயார்ஹமான க்ஷேத்ரம். கைவசம் வந்தமண்போலே அத்யந்தபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது.

---

(க) ரா - யு - ௧௧௫ - ௪௪.

களைநோக்கியும், (க) "ஊதித்வா ஸுக்ருதம்பாபம் தேவதஸ்ய ப்ராணஸ்யது - மத்பிதுஸ்த்வத்க்ருதம்பாபம் தேவதஸ்யப்ராணஸ்யது" என்று ஹிரண்யபாபராதத்தை க்ஷமிப்பித்தும், இப்படி அபகாரிகள்பக்கல் உபகாரகராய்ப் போந்தார்கள்.

(நான்மறையாளர்கள்) நாலுவகைப்பட்ட வேதங்களை யாண்டு போருமவர்கள். இப்ப்ராமாணிகவாக்யங்களை தத்வஹிதபுருஷார்த்த ப்ரதிபாதகமான வாக்யங்களோடே சேர்த்தநுஸந்திக்கும்படி வேதநிர்வாஹகரானவர்கள்.

(நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்) இவர்களுக்கு இவ்வாத்மகுண முண்டாகைக்கு ஊற்றுவாய் வேதஸம்பந்தமாயிற்று. (உ) "மாதாபித்ருஸஹஸ்ரேப்யோ வத்ஸலதரம்ஶாஸ்த்ரம் - மாதாபித்ருஸஹஸ்ரேப்யோ வத்ஸலதரம்ஶாஸ்த்ரம்" என்றும், (ஙூ) "நலங்களாயநற்கலைகள்" என்றும், குற்றஞ்செய்தாரை எவ்வளவிலும் கைவிடமாட்டாத இத்தோட்டைஸம்பந்தமாயிற்று-இதுக்கடி. இக்கலைகளைக் கல்லாதவர்களிறே இந்நன்மை பெறாதவர்கள். (ச) "கற்றிலேன் கலைகள் - பெற்றிலேனதனால் பேதையேன்நன்மை" என்கிறபடியே இதடியாகவிறே பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் செற்றமே வேண்டித்திரிதந்தது.

---

ஆளுகிற க்ரமமேதென்ன வருளிச்செய்கிறார் (இப்ப்ராமாணிக வாக்யங்களையென்று துடங்கி) அபௌருஷேய மாகையாலே ப்ராமாணிகவாக்யங்களென்கிறார். தன்னுடைய ஸம்பந்தத்தாலே இவர்களுக்கு இந்நன்மையுண்டாம்படி வேதத்துக்கு, ஹேயரான தேஹாத்மாபிமாநிகள் துடக்கமானாரையும் விடமாட்டாதே ரக்ஷிக்கைக் கீடான வாத்ஸல்யமுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (மாதாபித்ருஸஹஸ்ரேப்ய:) என்று துடங்கி. வேதத்தை யப்யஸியாதவர்களுக்கு இந்நன்மையில்லை யென்றதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (கற்றிலேன் கலைகளென்று துடங்கி) "அதனால் நன்மைபெற்றிலேன்" என்றந்வயம். (இதடியாகவிறே) என்றது-கல்லாததடியாக விறேயென்றபடி.

பெருநிலத்து - மஹாப்ருதிவியிலே, ஆருயிர்க்கு-ஆத்மாக்களுக்கெல்லாம், செற்றமேவேண்டி - ஹிம்ஸையை யபேக்ஷித்து, திரிதந்தது.

---

(க) வி - பு - க - உo - உக. (ஙூ) தி - ச - வி - கூo.
(உ) (ச) தி - மொ - ௧ - க - அ.

இது கல்லாதவர்களாகையாலே லங்காவாஸிகளான ராக்ஷஸர் *ரீபூணுமபிவத்ஸலரான பெருமாளோடே வெறுப்புக்கொண்டது. * கல்லாதவரிலங்கையிறே. இது கற்றவர்களுக்கு பலம் அபகாரிகள் பக்கலிலேஉபகாரம்பண்ணுகை. இது கல்லாதவர்களுக்குபலம் உபகாரிகள்பக்கலிலே அபகாரம்பண்ணுகை. இதுதான் மறையாகையாலே துஷ்ப்ரக்ருதிகளுக்கு ஸ்வார்த்தத்தை போதிப்பியாதிறே.

"நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்" என்கிற விரண்டாலும் (க) "ஶ்ரோத்ரியம்ப்ரஹ்மநிஷ்டம்-ஶ்ரோத்ரியம்ப்ரஹ்மநிஷ்டம்" என்கிற விரண்டையும் சொல்லுகிறதாயிற்று; அன்றிக்கே, (நன்மையால் மிக்க நான்மறை) நித்யதையாலும் நிர்த்தோஷதையாலும் அஜ்ஞானவர்களுக்கு ஜ்ஞாதவ்யார்த்தங்களையுடைய ப்ரமாணாந்தர நிரபேக்ஷமாக அறிவிக்குமதாகையாலும், (உ) "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:-வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:" என்கிறபடியே ஸர்வாதிக வஸ்துவையே ப்ரதிபாதிக்கிறதாகையாலும்ப்ரமாணாந்தரங்களிற்காட்டில்ப்ராமாண்யஶ்ரீயால் அதிஶயிதமான வேதார்த்தஜ்ஞாநமுடைய மஹாத்மாக்களென்னவுமாம்.

(புன்மையாகக்கருதுவர்) அப்படி பிறருடைய குறைகாணமாட்டாதவர்களுட்பட என்னுடைய தோஷாதிஶயத்தாலே என்

---

இத்தால் நன்மையில்லாத மாத்ரமன்றிக்கே தீமையிலே மூட்டுமென்றபடி. தீமையிலே மூட்டின விடமுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (இது கல்லாதவரித்யாதி) லங்கையிலுள்ளார் அப்படிவேதத்தை யப்யஸிக்கவில்லையோ வென்ன வருளிச்செய்கிறார் (கல்லாதவரிலங்கை யென்று துடங்கி). "அக்நிஹோத்ராஶ்சவேதாஶ்ச" என்று வேதாத்யயந முண்டாகச் சொல்லாநிற்க, கல்லாதவரிலங்கை யென்றுசொல்லுகிறபடி யெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (இதுதான் மறையாகையாலே யென்றுதுடங்கி). (ஶ்ரோத்ரியம்) ஶ்ருதவேதாந்தனைகை. அன்றிக்கே "நன்மையால்மிக்க" என்றதை வேதத்துக்கு விஶேஷணமாக்கி யருளிச்செய்கிறார் (நித்யதையாலு மென்றுதுடங்கி) (புறக்

---

(க) முண்ட - க - உ - கஉ.   (உ) கீதை - கரு - கரு.

ணையநாதரிக்கும்படியாயிற்று. (புன்மையாகக்கருதுவர்) நன்மை யால் மிக்கவர்கள் என்னுடைய புன்மையின் மிகுதியாலே புறக்கணித்திருப்பார்கள். (நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்) அந்த வேதார்த்தங்களைத்திருத்தி யநுஸந்திக்கிறவர்களுக்கு என்னுடையதுற்றத்தின் மிகுதியாலே ஒருகுணங்கண்டு திருத்தப்போச்சுதில்லை. (நான்மறையாளர்களித்யாதி) அவர்களிலே ஒருவர்க்கு ஆளாகப்பெற்றிலேன். (புன்மையாகக் கருதுவர்) புன்மையென்றும் நானென்றும் வேறின்றிக்கே, (க) "என்னதாவி யென்னும் வல்வினை" என்கிறபடியே புன்மை தானாகவே நினைப் பர்கள். தர்மப்ராசுர்யத்தாலே தர்மியை தர்மவ்யபதேஶம்பண்ணக் கடவதிறே.

(கருதுவர்) தம்முடைய புன்மையன்றிக்கே அவர்களுடைய வநாதரம்காணும் இவரை வருத்துகிறது. (உ) "ஹஒதாவஸியஜி ௭ாஜெவ௦ ஊஹவா நவி௭நஂ௵த-ஹதோஸ்மியதிமாமேவம் பகவா நபிமந்யதே" என்ற ஸ்ரீபரதாழ்வானைப்போலேயும், (ரு) "யிம ஷு-தஜூ௰ - யதாய-வைஹிஷ்௯௵தஂஸ௵ாத் - திகஸ்துதஜ் ஜந்ம - யத்ஸாதுபஹிஷ்க்ருதம்ஸ்யாத்" என்ற வக்ரூரனைப்போ லேயும், (ச) "௭ஹாதூஹி௭ஷாெவொக௵தாஂநய - மஹாத்ம

---

கணித்திருப்பர்கள்) முகம்பாராதே யிருப்பர்களென்றபடி. மறையாகையாலே அர்த்தநிஶ்சயம் பண்ணப்போகாது. அப்படி யிருக்கச்செய்தேயும், அவ்வரிய வர்த்தத்தைக்கண்டு திருத்தினவர்களாலும் என்னுடைய தோஷத்தின் மிகுதி யாலே குணங்கண்டு திருத்தப்போயிற்றில்லை யென்றருளிச்செய்கிறார் (அந்த வேதார்த்தங்களைத்திருத்தி யென்றுதுடங்கி). பஹுவசநத்துக்குப் பொருளரு ளிச்செய்கிறார் (அவர்களிலே ஒருவர்க்காளாகப் பெற்றிலேன்) என்று. "என்னதாவியென்னும் வல்வினை" என்றதுக்கு என்னுடைய வாழ்மாவா கிறதே ஒருபாபமென்று பொருள். தர்மதர்மிகளை ஒன்றாகச்சொல்லலாமோ வென்னவருளிச்செய்கிறார் (தர்மப்ராசுர்யத்தாலே யென்றுதுடங்கி).

(பகவாந்) என்றது - பரத்வாஜனை. மஹதங்கீகாரம் புருஷார்த்தமானால் அநங்கீகாரம் துக்கஹேதுவாகையாலே வருத்தக்கூடும். அங்கீகாரம் புருஷார்த்த மென்கைக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (மஹாத்மபிர்மாமவலோக்யதாம்நய)

---

(க) தி - ச - வி - கககூ. (ரு) வி - பு - ரு - கஎ.
(உ) ரா - அயோ - ௯௦ - கஙு. (ச) ஸ்தோ - ரா -

பிரேமமவலோக்யதாம்நய" என்கிறபடியே மஹாத்மாக்களுடைய ஸங்கீகாரம் புருஷார்த்தமாய், அத்தாலநாதமும் அப்படியேயிறே. (கருதுவர்) அவர்களுக்கு வாசி வாய்விட்டுச் சொல்லாமை. (நான்மறையாளர்கள் புன்மையாகக்கருதுவர்) அவர்கள் ஸர்வஜ்ஞராகையாலே வஸ்துகதியை யதாவாக வறிந்திருப்பர்களிறே.

(ஆகலிலன்னையாயித்யாதி) கீழ் ஸாத்விகவர்க்கம் கைவிட்டபடி சொல்லிற்று மேல், ஆழ்வார் கைக்கொண்டபடி சொல்லுகிறது. இப்படி எல்லாரும் கைவிட்டவிவனை நம்மையொழியக் கைக்கொள்ளுவாரில்லையென்று என்பக்கலிலே மாத்ருவத்வத்ஸலரானார். (க) "யத்வா ஶரண்யஶரண்ய ஜநஸ்ய பண்ய-யத்வா ஶரண்யமஶரண்யஜநஸ்யபுண்யம்" என்றிறே ஆழ்வாரைச் சொல்லிற்று.

(அன்னையாயத்தனாய்) (உ) "அத்தனாகி யன்னையாகி" என்று பகவத்விஷயம்போலே முற்பட ஹிதபரனாய் பின்பு ப்ரியபரனாகையன்றிக்கே முற்பட ப்ரியபரராய் பின்பு ஹிதபரரானார். அப்படியே ஆளவந்தாரும் முற்பட (ங) "ஶாதாவிதா - மாதா பிதா" என்று மாத்ருத்வத்தையாய்த்து முந்துறவநுஸந்தித்தது.

(அன்னையாயத்தனாய்) முற்பட பகவத்ப்ராபாவத்தை யுபதேசித்து, அநந்தரம் அதிகாரிவேஷத்தை யுபதேசித்தார். (ச) "உம்முயிர்வீடுடையான்" (ரு) "பத்துடை யடியவர்க்கெளியவன்"

---

என்றுதுடங்கி). பரதோஷம் வாய்விட்டுச்சொல்லவொண்ணுமோ தன்றிருந்தால் நினைக்கிறது தானெனப்படி கூடுமென்ன வருளிச்செய்கிறார் (அவர்கள்ஸர்வஜ்ஞராகையாலேயென்றுதுடங்கி).

(ஆகலில்) என்றது - இவர்கள்கைவிட்டதுவே ஹேதுவாக வென்றபடி அஶரண்யருக்கும் ஶரண்யரோ விவரென்னவருளிச்செய்கிறார் (யத்வாஶரண்யமென்றுதுடங்கி) இவர் இப்படி முற்பட ப்ரியத்தைச்செய்து பிற்பட ஹிதத்தைச்செய்தாரோவென்ன வருளிச்செய்கிறார் (முற்படபகவத் ப்ரபாவத்தை யுபதேசித்தென்று துடங்கி). முற்படப்ரியத்தைச்செய்து அநந்தரம் ஹிதத்தைச்செய்தாரென்கைக்கு ஜ்ஞாபகமாக வாழ்வார் ஸ்ரீஸூக்தியைக் காட்டுகிறார் (உம்முயிர் வீடுடையானிடையென்று துடங்கி). "உம்முயிரென்று துடங்கி,

---

(க) வைகுண்டஸ்தவம்.
(உ) தி-ச-வி-ககூ.
(ங) ஸ்தோ-ரத்ந
(ச) தி-வாய்-க-உ-க.
(ரு) தி-வாய் க-ங-க.

(க) "பரிவதிலீசனைப்பாடி விரிவதுமேவலுறுவீர் - நன்னீர்தூய்ப் புரிவதுவும் புகைபூவே" என்று உபதேசித்திறே (உ) "கழுமின் தொண்டர்கள் கழித்துத்தொழுமின்" என்றது. (அன்னையாயத்தனாய்) (ங) "ம-ா-ா-ா-ஃவி தா ம-ா-ா-ஃ-ா தா - குரும்பிதா குருர்மாதா" என்று லாக்ஷணிகமாய் வருவதன்றிக்கே என்னுடைய புன்மையில் புரையில்லாதாப்போலே அவருடைய மாதா பித்ருத்வத்திலும் புரையில்லை.

(என்னையாண்டிடும் தன்மையான்) ஸ்வாமித்ருத்யமு மநுஷ்டித்தார். பகவத்விஷயத்தை (ச) "அத்தனாகி யன்னையாகி யாளுமெம்பிரானுமாய்" என்றநு ஸந்தித்தாப்போலே இவரும் ஆழ்வார் விஷயத்திலே அவற்றை யநுஸந்திக்கிறார்.

(என்னையாண்டிடும் தன்மையான்) தாம திருவாய்மொழி யருளிச்செய்கிறபோது என்னைப் பட்டோலை எழுதச்சொல்லி யருளிச்செய்தார்; உசிதமான கைங்கர்யத்தைக்கொண்டார்.

(என்னையாண்டிடும்) பொலிந்துநின்றபிரான் பக்கலிலும் ஒருகால் போய்வாரீரென்று உபதேசித்தாரென்று பிள்ளை யருளிச்செய்வர். கட்டுண்ணப் பண்ணிய பெருமாயனென்னப்பனில்

---

நன்னீர்தூய்" என்னுமளவும் ப்ரியமான பகவத்விஷயத்தை உபதேசிக்கையாலே ப்ரியபரத்வம், அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமான உபாயோபதேசம் ஹிதமாகையாலே "கழிமின்தொண்டர்கள் கழித்து" என்றவாக்யத்தாலே அந்தஹிதத்தை யருளிச்செய்கிறார். "ஆய்" என்ற ஶப்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (குரு: பிதாவென்று துடங்கி). (லாக்ஷணிகமென்றது) ஔபசாரிகமென்றபடி. புன்மையாக வென்கையாலே - புன்மையும் புரையில்லையென்றபடி. என்னையாண்டிடும் தன்மையானென்றதுக்கு இரண்டு பொருள்;- அதாவது - திருவாய்மொழியைப் பட்டோலையெழுதச்சொல்லி உசிதகைங்கர்யம் கொண்டாரென்னுதல். ஒருகால் பொலிந்து நின்றபிரானையும் ஸேவித்து வாருமென்று நியமித்தாரென்னுதல். (பிள்ளையென்றது) வடக்குத்திருவீதிப் பிள்ளையை. அப்படி ஆழ்வார்தாம் பொலிந்து நின்றபிரானையும் ஸேவிக்கச்

---

(க) தி-வாய்-க-ச-க. (ங)
(உ) தி-வாய்-க-ச-அ. (ச) தி-ச வி-ககரு.

நண்ணியென்று நான் விட்டுப்போந்த விஷயத்தை (க "நீள்குடக் கூத்தனுக் காட்செய்வதே - உறுவது" என்று பொலிந்துநின்ற பிரானுக்கும் ஓரஞ்ஜலி நேரும்படி பண்ணினர். (தன்மையான்) இது ஸஹஜஸ்வபாவமாய்த்து ஆழ்வாருக்கு. ஆழ்வாரடியாக வடிமைகொள்ளுகையாலே பகவத்விஷயத்துக்கு ஔபாதிகம்.

(சடகோபன்) என்னுடைய ஶாட்யத்தைப்போக்கி என்னை ரக்ஷித்தவர். (என்னையாண்டிடும் தன்மையான் சடகோபன்) (உ) "அவனடியார் - சிறுமாமனிசரா யென்னையாண்டார்" என்று ஆழ்வார் தம்மை யாண்டுபோருமவர்கள் ததீயராம்படியானுல் என்னை ஆழ்வாராண்டுபோரச்சொல்லவேண்டாவிறே. (என்னை யாண்டிடும்தன்மையான் சடகோபன்) என்னை ரக்ஷித்து, சடகோபனென்கிற பட்டப்பேர் சூடினவர்.

(என்நம்பியே) அவரேயன்றோ என்குறைவை நிறைக்கும்படியான நிறைவையுடையவர். என்குறைவாகிற பாழ்ந்தாறு நிறையும்போது அவருடைய பூர்த்தியேவேண்டாவோ? ஸத்வநிஷ்டர்க்கு பஹிஷ்டனை யென்னைத் தாமங்கீகரித்தும், அப்ரியங்களிலும் அஹிதங்களிலும் கைவளர்ந்து போந்தவென்னை ப்ரியஹிதங்களிலே மூட்டியும், அநுபகாரகனை யென்னைக் கைங்கர்யங்கொண்டு போந்த பூர்த்தியையுமுடையவர் ஆழ்வாரேயன்றோ வென்று ஸ்வஸித்தாந்தத்தை த்ருடீகரிக்கிறார். (ச)

நான்காம்பாட்டின் அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

சொல்லி நியமித்தாரோவென்ன வருளிச்செய்கிறார் (கட்டெண்ணப்பண்ணிய - நீள்குடக்கூத்தனுக்கியாதி). இவ்விரண்டும் க்ருஷ்ண விஷயமாகையாலே தாம்விட்ட விஷயத்திலே நியமிக்கிறாரென்று தோற்றுகிறது. ஆத்மாவுக்கு ஶேஷியானவெம்பெருமான் ஆண்டுபோருகிறதொழிய, இவ்வாழ்வார் ஆளக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அவனடியார் சிறுமாமனிசரென்று துடங்கி) பாழ்ந்தாறென்றது - பாழாய்க்கிடக்கிற பெருங்குழி யென்றபடி. அவதாரணத்துக்குப் பொருள் (ஸத்வநிஷ்டருக்கும் பஹிஷ்டனைவென்று துடங்கி). (ச)

---

(க) தி-வாய்-ச-கO-கO. (உ) தி-வாய்-அ-கO-ரு.

மூ:—நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்
நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்
கன்பனா யடியேன் சதிர்த்தேனின்றே. (ரு)

## நஞ்ஜீயர் வ்யாக்யாநம்.

அவ:—அஞ்சாம் பாட்டு. ஸக்துக்களும் கைவிடும்படி உம்முடைய பக்கல் குற்றமேதென்னில், அநாதிகாலம் பரதாரபரிக்ரஹம் பரத்ரவ்யாபஹாரம் பண்ணிப்போந்த இளிம்பனானேன். இன்று ஆழ்வாருடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே சதுரனானேனென்கிறார். இதுக்கு முன்புண்டான வநாத்மகுணங்களை யநுஸந்தித்து ஆழ்வாருடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே க்ருதக்ருத்யனானேனென்கிறார்.

வ்யா:—(நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்) பகவதீயமான ஆத்மவஸ்துவை என்னதென்றிருந்தேன்; (க) "ஸொரேணாத்மாபஹாரிணா-சோரேணாத்மாபஹாரிணா" என்கிறபடியே ஸர்வேஶ்வரனதான ஆத்மவஸ்துவை யபஹரித்தேன். பிறர் நன்பொருளென்றது-ஐக்யஶ்ருதிகளும் சொல்லச்செய்தே பேதமஜீவிக்கைக்காக. பொருளென்கிறது - விரோதி வ்யாவ்ருத்தமான ஸ்வரூபம்.

(நம்பினேனித்யாதி) ஆத்மாபஹாரத்தாலே பலித்தபலம் சொல்லுகிறார். பகவத்விஷயத்திலே "மஹாவிஶ்வாஸபூர்வகம்" என்றிருக்குமிருப்பெல்லாம் ஸ்த்ரீகள் பக்கலிலேயாகிறது. (உ) "விரைக்குழல் மடவார்கலவியைவிட்டு" என்றும், (ங) "சதிரிள மடவார் தாழ்ச்சியைமதியாது" என்றும் அபியுக்தரான வென்னாசார்யர்கள் சொன்னவிஷயத்தைக்கிடீர் நான் அநாதிகாலம் விஶ்வஸித்துப்போந்தது. மடவாரென்கிற பஹுவசநத்தாலே ஒன்றில் பர்யாப்தமாகாமையாலே கண்டவிடமெங்கும் நுழையும்படி சொல்லுகிறது.

(செம்பொனித்யாதி) ஆழ்வார் திருவவதரிக்கையாலே அங்குள்ளதடங்க இவருக்கு ஶ்லாக்யமாயிருக்கிறபடி. இவ்வூரிலே ஶ்வர்யத்துக்கடியான பூர்த்தியையுடைய வாழ்வார் நிர்ஹேதுக

(க) பார-உத்
(உ) தி-மொ-கூ-அ-க.
(ங) தி-வாய்-உ-௧௦-உ.

கடாக்ஷத்தாலே தம் பக்கலிலே பக்தியையுண்டாக்கினபடி. (க) "வாவாரென்றில்லையால் வாழ்வினிதால்" என்கிறபடியே வந்த வழி யறிந்திலேன். இங்ஙனே பலிக்கக்கண்டவித்தனை. அபூர்ணமான பகவத்விஷயத்திலே அடியனுமவனாகாதே பூர்ணரான வாழ்வாருக்கு அடியேனாய் சதுரனானேனென்கிறார். ஸ்த்ரீகளை விஸ்வஸித்து இளிம்பனான நான் ஆழ்வாரைப்பற்றி இன்று சதுரனானே னென்றுமாம். (௫)

## நம்பிள்ளை ஈடு.

அவ:—அஞ்சாம் பாட்டு. (நம்பினேனித்யாதி) உம்மைப் புன்மையராகவும், உமக்கு ஆழ்வார் ஸர்வப்ரகாரத்தாலும் உபகாரகராகவும் சொன்னீர். உம்முடைய பூர்வவ்ருத்தத்தையும் அவர் உமக்கு உபகரித்த வெல்லையையும் சொல்லிக்காணீரென்ன; சொல்லுகிறார்.

வ்யா:—(நம்பினேனித்யாதி) இது என்னுடைய புன்மை யிருந்தபடி. பிறர்பொருளை நம்பினேன். இப்போது பொருளென்கிறது - அர்த்தத்தை. அதாவது - ஆத்மவஸ்து. எங்ஙனேயென்னில். (உ) "[illegible] - த்ரவ்யப்ருதக்த்வாகார்மஜாதி ஸ்வேதத்வகாஸ்ரய:" என்று பதார்த்தம் சொல்லுகிறவிடத்தே த்ரவ்யங்களில் ப்ரதாநமாக ஆத்மவஸ்துவை நிச்சயித்ததிறே. அத்தையிறே இவர் முன்பு அபஹரித்தேனென்கிறது. (௩) "கள்வனேனானேன்" என்றும் (௪) "வன் கள்வன்" என்றும் சொல்லுகிறபடிகளை இவரும் சொல்லுகிறார். பகவச்சேஷத்வத்தளவிலும் நில்லாதே ஆழ்வாரளவும் வரும்படியான வாத்மவஸ்துவைக்கிறோ நான் அபஹரித்தது. ஆழ்வாரளவும் வந்தவன்றிறே இது அநந்யார்ஹமாய்த்தாவது.

பிறரொன்று - ஒருவிஷயத்தை விவக்ஷிக்கிறது. த்ரவ்யத்தினுடைய ஸ்லாக்யதைக்கும் உடையவனுடைய ஸ்லாக்யதைக்கும் தக்கபடி கனத்திறே ப்ராயஸ்சித்தமிருப்பது. ப்ராஹ்மணனுடைய த்ரவ்யத்தை அபஹரிக்கப்போலன்றிறே சண்டாளனுடைய த்ரவ்யத்தை யபஹரித்தால் ப்ராயஸ்சித்தமிருப்பது. த்ரவ்யங்களிலும் இப்படியே குருலகு ஸ்வபாவமிருக்கும்படி. ஆத்மவஸ்து கௌஸ்துபஸ்தாநீயமாய், இத்தையுடையவன் ஸர்வேஸ்வரனாயிறே யிருப்பது.

---

(க) பெரியதிருவ-௫௪. (௩) தி-மொ-௧-௧-௫.

(உ) (௪) தி-வாய்-௫-௧-௪.

(நம்பினேன் மடவாரையும்) ரத்நாபஹாரம்பண்ண வஞ்சா தவன் விறகும் வைக்கோலும் களவுகாணவஞ்சுமோ?. ஈஶ்வரன் என்னதென்ற பிமாநித்தவஸ்துவை அபஹரித்தவன் தேஹபரி க்ரஹம் பண்ணினுர் என்னதென் றபிமாநித்தவஸ்துவை அபஹ ரிக்கச் சொல்லவேணுமோ: (முன்னெலாம்) இப்படி ஆத்மாபி மாநம் பண்ணியும் விஷயப்ரவணனுயும் போந்தகாலம் ஸாவகியாகப் பெற்றதாகிலும் லாபமுண்டிறே. ஈஶ்வரனேபாதி ஆத்மவஸ்துவும் நித்யம், காலமும் அநாதியாகையாலே முன்புள்ள காலமெல்லா மென்றபடி.

உம்முடையதண்மை குறைவற்றிருந்தது. ஆழ்வார் உமக்கு நிர்ஹேதுகமாக வுபகரித்த தேதென்னச் சொல்லுகிறுர் (செம் பொன்மாடவித்யாதி). இப்படி அநாதிகாலம் ஆத்மாபஹாரம் பண்ணியும், விஷயப்ரவணனுனதுவும் இழவுக்கு உடலாகையன் றிக்கே ஶரண்யப்ரபாவத்தாலே பேற்றுக்கு உடலாக க்ரிஷி பண்ணினுரைப்போலே பலித்துக்கொண்டு நிற்கக்கண்டேன். (செம பொன் மாடத்திருக்குருகூர்நம்பிக்கு) ஆத்மாபஹாரம் பண்ணியும் அந்யபரனுய்ப் போந்தானென்றும் என்னுடையபூர்வவ்ருத்தத்தை யாராய அத்தனை யலூர்ணரோ ஆழ்வார்.

(இன்று அன்பனுய்) என்னதென்றிருக்கைதவிர்ந்து அவனுக் கென்றிசைந்து இதரவிஷயத்திலே ஸ்நேஹத்தைவிட்டு பகவச் சேஷத்வத்தளவிலும் நில்லாதே அதினெல்லையான ததீயஶேஷத் வத்தினளவிலே நின்றுர் ஆழ்வார். இந்தப்ரதிபத்திக்ரமம் வேண் டாதே எனக்கு முதலடியிலே இதெல்லா முண்டாய்த்தென்கிறுர்.

(அடியேன் சதிர்த்தேன்) முன்பு தேஹாத்மாபிமாநம் பண் ணிப்போந்தநாளிலிறே நானென்பது. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்த பின்பு அடியேனென்றுய்த்து இவருடைய அஹமர்த்த ப்ரகிபத்தி யிருப்பது. (சதிர்த்தேன்) ஈஶ்வரஶேஷமான வாத்மவஸ்துவை என்னதென்றிருக்கைக்கும் இதரவிஷயப்ரவணனுகைக்கும் மேற் பட சதிர்க்கேடில்லையிறே. அவற்றைவிட்டு பகவச்சேஷத்வத் தளவிலும் நில்லாதே ஆழ்வாரளவும் வருமவனும்படியான சதிரை யுடையவனுனேன். ஆசார்யர்களை நம்பி யென்கைக்கும், அவர்க ளழைத்தால் அடியேனென்கைக்கும் ஹேது ஶ்ரீமதுரகவிகள் வாஸநையாய்த்து. (௫)

அஞ்சாம்பாட்டின் நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

---

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்.

———( ० )———

அவ:—அஞ்சாம் பாட்டில், உம்மைப் புன்மையராகவும், உமக்கு ஆழ்வார் ஸர்வப்ரகாரத்தாலும் உபகாரகராகவும் சொன்னீர். உம்முடைய புன்மையையும் உமக்கு ஆழ்வாருபகரித்த நன்மையையும் சொல்லிக் காணீரென்னச் சொல்லுகிறார்.

வ்யா:—(நம்பினேனித்யாதி). இது என்னுடைய புன்மையிருந்தபடி. (பிறர் நன்பொருள் - நம்பினேன்) பிறரென்கிறது - ஸர்வேஶ்வரனை. நன்பொருளென்கிறது - ஆத்மவஸ்துவை. த்ரிவிதாத்மவர்க்கத்துக்கு மவ்வருகாய், விஜாதீயமான வைலக்ஷண்யத்தை யுடையவனாகையாலே பிறரென்கிறது. (க) "உத்தம: புருஷஸ்த்வந்ய:-உத்தம: புருஷஸ்த்வந்ய:" என்னக்கடவதிறே. பொருளென்று - த்ரவ்யம். நன்பொருளென்றது-விலக்ஷணமானவாத்மவஸ்துவை. (உ) "த்ரவ்யாணி நவதேவிது:" என்று த்ரவ்யங்களில் ப்ரதாநமாக ஆத்மவஸ்துவை நிஶ்சயித்தார்களிறே. அத்தையிறே முன்பு நான் அபஹரித்தது நம்புதல் - ஆசைப்படுதல்.

அரும்பதம்.—அஞ்சாம்பாட்டு. "புன்மையாகக்கருதுவர்." என்று புன்மையும், "அன்னையாய்" இத்யாதியால் ஆழ்வாருபகரித்தபடிகளும் சொல்லியிருக்க, இப்பாட்டிலும் சொல்லுவானென்னென்கிற ஶங்கையைப்பரிஹரிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி விஶேஷ ப்ரஶ்நமுகேந அவதாரிகையருளிச் செய்கிறார் (உம்மையித்யாதி). (சொல்லிக்காணீர்) என்றது - விஶேஷித்துச் சொல்லிக்காணீரென்றபடி.

ஹார்த்த தாத்பர்ய மருளிச்செய்து அந்வயித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பிறரித்யாதி). பிறரென்று - ஈஶ்வரனைச்சொல்லும் ப்ரகாரத்தையுபபாதிக்கிறார் (த்ரிவிதாத்மேத்யாதி). (அவ்வருகு) உத்கர்ஷாவதி. இதுக்குஹேது (விஜாதீயேத்யாதி.) ஆத்மாவைச்சொல்லும் ப்ரகாரத்தைக்காட்டுகிறார் (பொருளென்றித்யாதி). வைஶேஷிகமதரீத்யா நன்மையை யுபபாதிக்கிறார் (த்ரவ்யாணீத்யாதி.) "ப்ருதிவ்யப்தேஜோவாய்வாகாஶகாலதிகாத்ம மநாம்ஸி நவைவ - ப்ருதிவ்யப்தேஜோவாய்வாகாஶகாலதிகாத்ம மநாம்ஸி நவைவ" என்று ஆத்மாவையும் த்ரவ்யமாகச்சொன்னான் வைஶேஷிகன். நம்பினேனென்றதுக்குத் தாத்பர்யம் (அத்தையித்யாதி.)

(க) கீதை-கரு-கஎ. (உ)

பாரதந்த்ர்யத்தை யாசைப்படுகையிறே அபஹாரமாவது. (க) "வன் கள்வன்" என்றும் (உ) "கள்வனேனானேன்" என்றும் ஆழ்வார் களநுஸந்தித்ததிறே இவர்க்கு முதல். (ங) [கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா - கிந்தேநநக்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா] முதல் பகவச்சேஷத்வத்தளவில் நில்லாதே ஶேஷத்வகாஷ்டையிலே நிற்கிற ஆத்மவஸ்துவைக் கிடீர் நான் அபஹரித்தது; ததீயஶேஷமானவன்றிறே இவ்வாத்மாவுக்கு அநந்யார்ஹத்வமுள்ளது

அபஹாரத்தில் வந்தால் த்ரவ்யத்தினுடைய ஶ்லாக்யதைக்கும் அபிமாநித்தவன் ஶ்லாக்யதைக்கும் தக்கபடி ப்ராயஶ்சித்தம்

ஸப்தார்த்தம் (நம்புதலித்யாதி). ஆசை யபஹாரமானபடி யென்னென்ன, (பாத்ரவ்யத்தை யித்யாதி). தம்மை யாத்மாபஹாரியாக அநுஸந்திக்கைக்கடி யென்னென்ன. (வன்கள்வனித்யாதி). வன்கள்வனென்றது-திருவாய்மொழி. கள்வனென்றது-திருமொழி. நன்மையேதென்ன வருளுகிறார் (முதலித்யாதி). ஸிம்ஹாவலோகநந்யாயேந நன்பொருளென்னுதல். தன்னையென்றதுக்குத் தானான தன்மையாகத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பகவதித்யாதி). ஶேஷத்வ காஷ்டையிலேநிற்கிற வாத்மவஸ்து என்றத்தை யுபபாதிக்கிறார் (ததீயே த்யாதி). தச்சேஷத்வம் ததீயஶேஷத்வ வ்யாப்தமாகையாலே ததீயஶேஷத்வ மில்லாதபோது தச்சேஷத்வம் குலைகையாலே அந்யார்ஹத்வம் ப்ரஸக்தமாம். அத்தாலே அநந்யார்ஹத்வமில்லையா மென்று கருத்து.

பிறரென்று-ஸ்வாமி வைலக்ஷண்யம் சொன்னதாலும், நல் என்று த்ரவ்ய வைலக்ஷண்யம் சொல்லுகையாலும் பலித்ததோரர்த்தத்தை யருளிச்செய்கிறார் (அபஹாரத்தில் வந்தாலித்யாதி). (க) "த்ருணகாஷ்டாபஹாரேண யோ தோஷ: பரிகீர்த்தித: । ஸ்வர்ணரத்நாபஹாரேபி தாவாநேவ பவேத்கதம் । க்ஷேத்ரஸ்யாபஹாரேண யோ தோஷ: பரிகீர்த்தித: । ஶ்ரோத்ரியஸ்வாபஹாரேபி தாவாநேவ பவேத்கதம் ॥ ஆத்மவஸ்து யதோநர்க்யம் ஆத்மேஶஸ்து பர: புமாந் । தஸ்மாதஸ்யாபஹாரேண தோஷஸ்யாந்தோ நவித்யதே -த்ருண காஷ்டாபஹாரேண யோதோஷ:பரிகீர்த்தித: । ஸ்வர்ணரத்நாபஹாரேபி தாவாநேவபவேத்கதம் । க்ஷேத்ரஸ்யாபஹாரேண யோதோஷ:பரிகீர்த்தித: । ஶ்ரோத்ரியஸ்வாபஹாரேபி தாவாநேவபவேத்கதம் ॥ ஆத்மவஸ்துயதோநர்க்ய மாத்மேஶஸ்துபர:புமாந் । தஸ்மாதஸ்யாபஹாரேண தோஷஸ்யாந்தோநவித்

(க) தி-வாய்-ரு-க-ச.
(உ) தி-மொ-க-க-ரு.
(ங) பார-உத்யோ

கனத்திருக்குமிறே. ப்ராஹ்மணவஸ்துவை அபஹரித்தாப்போ லன்றே சண்டாளன் வஸ்துவை யபஹரித்தால், த்ரவ்யங்களிலும் குருலகுபாவத்தாலே ப்ராயச்சித்த வைஷம்யமுண்டிறே. விறகு வைக்கோல் களவுகண்டாப்போலன்றிறே ரத்நத்தைக் களவுகண் டால்; ஆத்மவஸ்து ஸ்ரீகௌஸ்துபஸ்தாநீயமாய், உடையவன் ஸர்வேஶ்வரனாயிறே யிருப்பது.

(நம்பினேன் மடவாரையும்) ஈஶ்வரனுக் கபிமதமான வஸ் துவை யபஹரித்த நான், தேஹாத்மாபிமாநிகள் என்னதென் றபிமாநித்த வஸ்துவை யபஹரிக்கச்சொல்லவேணுமோ. ராஜ ரத்நாபஹாரம்பண்ண வஞ்சாத நான் கதர்யனுடைய விறகும் வைக்கோலும் அபஹரிக்க அஞ்சுவனோ? இத்தால் ஈஶ்வரனுக் கபிமதமான வஸ்துவை யுமபஹரித்தேன், அந்யருடைய அபிமத விஷயத்தை யுமபஹரித்தேனென்றபடி. மடவாரென்கையாலே - அங்கும் அநந்யார்ஹங்களையே அபஹரித்தேனென்றபடி.

(முன்னெலாம்) இப்படி தேஹாத்மாபிமாநியாயும் விஷய ப்ரவணனாயும் போந்தகாலந்தான் ஸாவதியாகப் பெற்றதோ : ஈஶ்வரனோபாதி ஆத்மாவும் நித்யன், காலமும் அநாதி, அசித் ஸம்பந்தமும் அநாதி, ஆகையாலே முன்புள்ள காலமெல்லாம் இதுவே யாத்ரையென்கை.

உம்முடையதன்மை குறைவற்றிருந்தது; ஆழ்வார் உமக்கு நிர்ஹேதுகமாக உபகரித்த வளவேதென்ன, அத்தைச்சொல்லு கிறார் மேல் (செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்கு) என்னு

---

யதே" என்கிற வசநங்கள் இவ்விடத்தி லநுஸந்தேயங்கள். கதர்யன் - க்ஷுத்ரன். பிறர்நன்பொருளென்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் (ஈஶ்வரனுக் கித்யாதி).

ஸ்த்ரீகளென்னாதே மடப்பத்தையிட்டு விஶேஷித்ததுக்கு ப்ரயோஜநம் (மடவாரித்யாதி,) ஹார்த்தாபிப்ராயம் (இப்படியித்யாதி) அநாதியாக ஆத்மாப ஹாரம் வந்ததுக்கு ஹேதுவையருளிச்செய்கிறார். (ஈஶ்வரனோபாதியித்யாதி.) மேலுக்கவதாரிகை (உம்முடையவித்யாதி.) நம்பிபததாத்பர்யம் (என்னுடைய

டைய பூர்வவ்ருத்தத்தை யாராயுமத்தனை யபூர்ணரோ ஆழ்வார். † (என்னை யுபேக்ஷித்தகாலமிவ்வளவு. பாபமிவ்வளவு என்று பார்க்கும்படியன்றே ஆழ்வாருடைய பூர்த்தி. நான் ஆத்மாபஹாரம் பண்ணினேன், விஷய ப்ரவணனானேனென்று கைவிடும்படியன்றே).

ஆழ்வார் திருவடிகளை நீர்தாம் கிட்டினபடியென்னென்ன, விஷயங்களுக்கு அர்த்தம்தேடி அர்த்தாபஹாரத்துக் கிடம்பார்த்துத் திரியாநிற்க, அச்செம்பொன் மாடத்தைக் களவுகாணப் புக்கேன். அங்கேவைத்த மாநிதியைக்கண்டு அகப்பட்டேனென்கிறார். இவர்க்கு வைத்தமாநிதி ஆழ்வாரிறே; ஆழ்வார் திருவடிகளோபாதி திருநகரியும் இவர்க்கு ஸ்ப்ருஹணீயமா யிருக்கையாலே திருநகரியைக் கவிபாடுகிறார்.

(இன்று அன்பனாய்) இதுக்கு முன்பு எனக்கொரு நினைவின்றிக்கே யிருக்க அசிந்திதமாக வாழ்வார் திருவடிகளிலே ப்ரவணனாகக் கண்டேன். அநாதிகாலம் ஆத்மாபஹாரம் பண்ணியும் விஷயப்ரவணனாயும் போந்தவிது இழவுக்குடலாகையன்றிக்கே ஸாரண்யப்ரபாவத்தாலே பேற்றுக்குடலாக க்ருஷிபண்ணினாரைப்போலே பலித்துக்கொடு நிற்கக்கண்டேன்; நான், என்னது என்றிருக்கை தவிர்ந்து இதரவிஷயங்களில் விரக்தராய் பகவச்சேஷத்வத்தள

---

வித்யாதி.) மடவாரையுமென்றதைக் கடாக்ஷித்து, செம்பொன்மாடமென்று வர்ணித்ததுக்குஸங்காபரிஹார ரூபேண தாத்பர்யம் (ஆழ்வாரித்யாதி.) வர்ணித்ததுக்குத்தாத்பர்யாந்தரம் (ஆழ்வார் திருவடிகளித்யாதி) ஆழ்வார்நிதியானால் திருநகரியை வர்ணிப்பானென்னென்ன (ஆழ்வாரித்யாதி).

இன்றே யென்றதை இங்கே அந்வயித்துப்ரதீகம் (இன்றன்பனாயென்று,) (ஒருநினைவின்றிக்கே) என்றது-ஆத்மாபஹாரம் அதிக்ரூரமென்றும், விஷயப்ராவண்யமாகாதென்றும், பகவச்சேஷத்வ முத்தேஶ்யமென்றும், ததீயஶேஷத்வம் பரமோத்தேஶ்யமென்றும் இப்படி ஹிதசிந்தையின்றிக்கே யென்றபடி இது-இன்றென்றதுக்குத்தாத்பர்யம்.

---

† குண்டலித மதிகபாடம்.

வில் நில்லாதே அதினெல்லையான ததீயஶேஷத்வத்தளவிலே நின்றார் ஆழ்வார்; இந்தக்ரமாபேக்ஷையின்றிக்கே முதலடியிலே நான் ஆழ்வார் திருவடிகளிலே ப்ரவணனாகப் பெற்றேன்.

(அடியேன்) ஆழ்வாருடைய வைபவத்தை யநுஸந்தித்து (க) "𑌅𑌹𑌮𑌸𑍍𑌯𑌾𑌵𑌰𑍋 𑌭𑍍𑌰𑌾𑌤𑌾 - குணைர்த்தாஸ்ய முபாகதஃ" என்கிறபடியே அதுக்குத் தோற்று அடியேனென்கிறார். ஆசார்யர்களை நம்பியென்னக் கற்பித்தாப்போலே ஆசார்யர்களழைத்தால் அடியேனென்கிறதும் ஶ்ரீமதுரகவிகள் வாஸனையாலே யாயிற்று.

(சதிர்த்தேன்) சதிரையுடையனானேன். ஈஶ்வரஶேஷமான வாத்மவஸ்துவை என்னதென்றிருக்கைக்கும் இதரவிஷய ப்ராவண்யத்துக்கும் மேற்பட்ட சதிர்க்கேடில்லையிறே; அவற்றை விட்டு பகவத்விஷயத்தளவிலே நில்லாதே ஆழ்வாரளவும் வரும்படியான சதிரையுடையனானேன்.

அஞ்சாம்பாட்டுக்கு பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்

முற்றிற்று.

---

இன்றென்றபதத்தை யுட்கொண்டு விவரிக்கிறார் (அநாதீத்யாதி வாக்ய த்ரயத்தாலே.) நம்பியென்றதைக்கடாக்ஷித்து, நானென்னாதே அடியேனென்றதுக்குத்தாத்பர்யம் (ஆழ்வாருடையவித்யாதி.) இத்தால் ஓரர்த்த விஶேஷம் ஸூசிதமாயிற்றென்கிறார் (ஆசார்யர்களித்யாதி.) சதிர்இன்னதென்று வ்யாவ்ருத்திபூர்வகமாகவருளிச் செய்கிறார் (ஈஶ்வரேத்யாதி.) (௫)

---

(க) ரா - கிஷ் - ச - கஉ.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம்.

———(०)———

அவ:—அஞ்சாம்பாட்டு. (நம்பினேனித்யாதி), கீழ் "நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்" என்று சொல்லக்கேட்டவர்கள், "அந்தப் புன்மையாகிறதேதென்றும், அவற்றிலே ஒன்றை யிரண்டைச்சொல்லீரென்றும், பெரியவண் குருகூர்நகர் நம்பிக்காளாரியேனென்றீர், நீர்தாம் ஆழ்வாருக்கு அடிமையான ப்ரகாரமென்? முனபு என்னநிலையிலே நின்று பின்பு ஆழ்வாரைக் கிட்டினீர், நீர் ஆழ்வாரைக்கிட்டுகைக்கு ருசிஜநகரார்.?" என்றும் கேட்க, "அநாதிகாலம் அஹங்காரார்த்த காமபரவஶனாய், அதில் ப்ரதாந புருஷார்த்தமான காமம் அர்த்த ஸாத்யமாகையாலும், அவ்விஷயஸங்கம் ஒன்றிரண்டென்று அளவில் நில்லாமையாலே அவ்விஷயங்கள் பலவற்றையும்போ யநுபவிக்கைக்கும், அதுக்கு அர்த்தார்ஜநார்த்தமாகவும், தேஶாந்தர பர்யடநம் பண்ணாநிற்க, திருநகரியில் மாடங்கள் மேருசிகரத்தைக் கொடுவந்து வைத்தாப்போலே மின்னித்தோற்றிற்று. இதொரு தேஶவிஶேஷ மிருந்தபடியென்? இத்தேஶத்தின் விஶேஷங்களை யாராய்ந்து விலக்ஷண விஷயங்களுண்டாகில் அநுபவிக்கிறேமென்று ஊரிலேபுக்கேன், அதுவேபற்றாசாக அத்தேஶநிர்வாஹகரான வாழ்வார் திருவடிகளிலே யாதரம்ஜநித்து, அவர்க்கேயாளாய் விஷயாதிகளை வென்றேன். இதிறே நான் நின்றநிலை" என்று அவர்களுக்கு உத்தரம் சொல்லுகிறார்.

வ்யா:—(நம்பினேனித்யாதி) கீழ்காமருளிச்செய்த புன்மை எண்ணித்தலைக்கட்டப் போகாமையாலே அதில் ப்ரதாநமாய், அவை யெல்லாவற்றையும் தனக்குள்ளே யுடைத்தாயிருப்பதொ

---

அரு:—அஞ்சாம்பாட்டு- (நம்பினேன்) விலக்ஷணவிஷயங்களுண்டாகில், அநுபவிக்கலாமென்றும், செம்பொன் மாடமாகையாலே அர்த்தார்ஜநம் பண்ணலாமென்றும் ஊரிலேபோந்தேனென்றது-" மடவார், செம்பொன்மாடம்" என்றதைக்கடாக்ஷித்து.

ன்றிரண்டை உபாதாநம் பண்ணுகிறார் (நம்பினேனென்பிறர் நன்பொருள்தன்னையும் நம்பினேன் மடவாரையும்) அதில் ப்ரதாநதோஷமாயறுவன - ஆத்மாபஹாரமும் அந்யவிஷய ஸங்கமுமிறே. ஆத்மாபஹாரமாவது - பகவதேகசேஷமான வாத்மவஸ்துவை ஸ்வதந்த்ரபுத்திபண்ணி ஆதரித்துப் போருகை.

(பொருள்) வஸ்து, (க) "ஸத்யம்வ - ஸத்யஞ்ச" என்றும், (உ) "உள்ளது" என்றும் சொல்லும்படி உண்டாயேபோருமது; அஹமர்த்தமாய் என்றும ப்ரகாசித்தேபோரும் வஸ்து. (ங) "நாஹாவொவிஷ்யதெஸதஃ - நாபாவோவித்யதேஸதஃ" என்கிறபடியே. (நன்பொருள்) விலக்ஷணத்ரவ்யம், (ச) "எண்பெருக்கந் நலத்தொண்பொருள்" என்றும், (ரு) "நன்றாய் ஞானம்கடந்து" என்றும் ஆழ்வார்பாடே கேட்டுப்போருகையாலே நன்பொருளென்கிறார். நன்மையாவது-(சு) "வஹூஹ·ஹிதாத்கம்வஸ்து-பஞ்சபூதாத்மகம்வஸ்து" என்றும், (எ) "மேம்பொருள்" என்றும் சொல்லுகிறபடியே தேஹத்துக்கு வஸ்துதையுண்டேயாகிலும் அதுபோலே அநித்யமாய் அநவரத விகாராஸ்பதமாய் அத்யந்த ஹேயமாய் அஜ்ஞாநமாய் அஸுகமாய் அபோக்யமாயிருக்கையன்றிக்கே, நித்யமாய் நிர்விகாரமாய் அத்யந்தவிலக்ஷணமாய் ஸ்வயம் ப்ரகாசமாய் ஸுகமாய் ஸ்வபாவதோ போக்யமாயிருக்கையாலே நன்பொருளென்கிறார்.

---

(தோஷமாயறுவன) என்றது-அற்றதென்றபடி, இந்த வஸ்துதான் நித்யமாயிருக்குமென்றருளிச்செய்கிறார் (ஸத்யஞ்சவென்றுதுடங்கி.) உள்ளதாய்க் கொண்டு தோற்றும் க்ரமமென்னென்னவருளிச் செய்கிறார். (அஹமர்த்தம. யென்றுதுடங்கி.) நித்யமாயிருக்கு மென்கைக்கு ப்ரமாணமருளிச் செய்கிறார (நாபாவோ வித்யதேஸதஃ) என்று. ஆத்மவஸ்துவிலக்ஷண மென்றறிந்தபடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (எண்பெருக்கென்றுதுடங்கி.)

---

(க) தை - ஆந - சு. (உ) தி - வாய் - க - உ - ச.
(ங) கீதை - உ - கசு. (ச) தி - வாய் - க - உ - க0.
(ரு) தி - வாய் - அ - அ - சு. (சு)
(எ) திருமா - நஅ.

(பிறர்நன்பொருள்) இங்குப்பிறரென்பது - ஸர்வேஶ்வரனை; பிறரென்பது - அந்யனையிறே. (க) "உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:" (உ) "வித்யாவித்யே ஈஶதே யஸ்து ஸோந்ய:" என்கிறபடியே சேதநாசேதந விஸஜாதீயனான ஸர்வேஶ்வரனாய்த்து - அந்யனாகிறான்; (ங) "உயர்வறவுயர்நல முடையவன்" (ச) "எல்லையிலந் நலம்" (ரு) "எப்பால்யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து அப்பாலவன்" என்றும் பலபடியாலும் ஈஶ்வரனை சிதசித்வ்யாவ்ருத்தனாக ஆழ்வார்பாடே கேட்டுப்போருகையாலே அந்தவ்யாவ்ருத்தி தோற்ற பிறரென்கிறார். அந்யனாகிறான் - கூடியிருக்கச் செய்தேயும் கார்யங்களில் கூட்டுப்படாதவனிறே; அதில் சிதசித்துக்களோடே கூடியிருக்கச்செய்தேயும் பரிணாமாஜ்ஞத்வதுஃக்கித்வங்கள் தன்பக்கலிலே ஏறிப்பாயாமலிருக்கையாலே பிறரென்கிறார். ஸர்வபூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கச் செய்தேயும் அபஹதபாப்மாவாயிருக்குமவனிறே அவன்; இவ்வர்த்தம் (சு) "அவையாயவையல்லனுமாய் கேசவன்" என்று ஆழ்வார்பாடே கேட்டுவைப்பரிறே.

---

ஈஶ்வரனை அந்யனாகச் சொல்லிற்றேயென்னவருளிச் செய்கிறார் (உத்தம: புருஷஸ்த்வந்ய:) என்றுதுடங்கி. வித்யையாலே சேதநனையும், அவித்யையாலேப்ருக்ருதியையும் சொல்லுகிறது; ஈஷ்டேயென்று சொல்லவேண்டியிருக்க, ஈஶதேயென்கிற பஹுவசநம் சாந்தஸம். பிறரென்றது-ஸர்வஸ்மாத்பரனாதல், அந்தர்யாமியாதல். இத்தையருளிச்செய்கிறார். (அந்யனாகிறானித்யாதி) சிதசித்விலக்ஷணனென்று இவரறிந்தபடி யென்னென்ன வருளிச்செய்கிறார். (உயர்வற வுயர்நல முடையவனென்றுதுடங்கி.) தத்கததோஷங்கள் தட்டாதவென்னுமிடம் எங்கேகேட்டு வைத்தாரென்ன வருளிச்செய்கிறார் (இவ்வர்த்தமவையாயென்றுதுடங்கி.)

---

(க) கீதை - கரு - கஎ. (உ) கோ - ரு - க.
(ங) தி - வாய் - க - க - க. (ச) தி - வாய் - க - உ௩.
(ரு) தி - வாய் - க - எ - உ. (சு) தி - வாய் - சு - சக.

அவன், என்னதென்றுபோரும் பதார்த்தமாய்த்து இவ்வாத்மவஸ்து; நன்பொருளென்று - அசித்வ்யாவ்ருத்தி சொல்லிற்று; பிறர் நன்பொருளென்று - ஈஸ்வர வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. ஸ்வப்ரகாஸத்தாலே அசித்வ்யாவ்ருத்தனா யிருக்கும்; ஸ்வத்வத்தாலே ஈஸ்வரவ்யாவ்ருத்தனா யிருக்கும்; ஸரீரியாய் அசித்வ்யாவ்ருத்தனாயிருக்கும்; ஸரீரமாய் ஈஸ்வரவ்யாவ்ருத்தனாயிருக்கும்; போக்தாவாய் அசித்வ்யாவ்ருத்தனா யிருக்கும்; போக்யமாய் ஈஸ்வர வ்யாவ்ருத்தனாயிருக்கும். (பிறர்நன்பொருள்) உடைமையும் விலக்ஷணமாய் உடையவனும் விலக்ஷணனாயிருக்கும். இது - தேஹேந்த்ரியமநः ப்ராணதீப்யோக்யமா யிருக்கும்: அவன் ப்ரதாந புருஷாவ்யக்தகாலாநாம் பரமனாயிருக்கும்.

(நன்பொருள் தன்னையும்) இவ்வஸ்துவைக்கிடீர் நான் ஆசைப்பட்டுப் போந்தது, அவனுடைய விபூதிமாத்ரமாயிருப்பதொரு வஸ்துவை யபஹரித்தேனோ? அவன் மார்பிலேவைத்து மநநம் பண்ணும்படியான கௌஸ்துபத்தையன்றோ நான்கள வுகண்டது. (க) "ஆத்மாநமஸ்ய ஜகதோ நிர்லேபமகுணாமலம் । பிபர்த்தி கௌஸ்துபமணிஸ்வரூபம் பகவாந்ஹரிः - ஆத்மாநமஸ்ய ஜகதோ நிர்லேபமகுணாமலம் । பிபர்த்தி கௌஸ்துபமணிஸ்வரூபம் பகவாந்ஹரிः" என்கிறபடியே (உ) "அறவனையாழிப் படையந்த

---

ஆத்மவஸ்துவுக்கு ஈஸ்வரனோடு அசித்தோடுவ்யாவ்ருத்தியுண்டென்னுமத்தை ப்ரகாரபேதேநவருளுகிறார் (நன்பொருளென்றித்யாதி.) ஈஸ்வரனும் போக்யனாயிருக்க, போக்யதையாலேவ்யாவ்ருத்தி சொல்லக்கூடுமோவென்று முதலிகள்கேட்க, அங்கமென்றும் அங்கமதந்தமென்றும் ஈஸ்வரனுக்கு போக்த்ருத்வ ப்ராதாந்யத்தைச் சொல்லுகையாலே வ்யாவ்ருத்திகூடுமென்றருளிச்செய்கிறார். அந்தவைலக்ஷண்யத்தை விவரிக்கிறார். (தேஹேந்த்ரியவென்று துடங்கி வாக்யத்வயத்தாலே.)

அப்படிஆத்மவஸ்துவை கௌஸ்துபமாகச் சொல்லுமோ வென்னவருளிச்செய்கிறார் (ஆத்மாநமஸ்யஜகதः என்றுதுடங்கி.) (நிர்லேபம்) கர்மரஹிதம்,

---

(க) பௌஷ்கரஸம்ஹிதா. (உ) தி - வாய் - க - எ - க.

ணனே" என்று சொல்லும்படியான ப்ரஹ்மஸ்வத்தையன்றே நான் அபஹரித்தது, பரமதார்மிகனாய் பவித்ரபாணியா யிருப்பானொரு ஶிஷ்டனுடைய த்ரவ்யத்தையன்றே நான் அபஹரித்தது. (க) "அகாராயைவஸ்வம் - அகாரார்த்தாயைவஸ்வம்" என்று அபியுக்தப்ரயோக முண்டாகையாலே (உ) "அஇதிப்ரஹ்ம - அஇதிப்ரஹ்ம" என்று அகாரவாச்யன் ப்ரஹ்மமாகையாலே ப்ரஹ்மஸ்வமிறே இது.

(பிறர்நன்பொருள் தன்னையும் நம்பினேன்) ஸ்வம்மும் விலக்ஷணமாய் ஸ்வாமியும் விலக்ஷணனாயிருக்கவன்றே நான் இவ்வஸ்துவை அபஹரித்தது. இவ்வாத்மாபஹாரம் ஸ்வதந்த்ரனுக்கும் தேஹாத்மாபிமாநிக்கு முண்டாமதாகையாலே. இத்தால் தேஹாத்மாபிமாநம் சொல்லிற்று, அப்போது "நம்பினேன்பிறர் நன்பொருள் தன்னையும்" என்று தேஹரக்ஷணஶேஷமாக (ந) "பரத்ரவ்யேஷ்வபித்யாநம் - பரத்ரவ்யேஷ்வபித்யாநம்" என்கிறபடியே அந்யத்ரவ்யங்களை யாசைப்பட்டுப்போந்தே னென்னுமாய்; அங்கு நன்பொருளென்று - அவர்கள் நினைவாலே சொல்லுகிறது, (பிறர்நன்பொருள் தன்னையும் நம்பினேன்) அவ்விடந்தன்னிலும் மேலெழுந்த த்ரவ்யங்களை யாசைப்பட்டவளவன்றிக்கே

(அகுணம்) குணத்ரயரஹிதம். அறவனையென்கையாலே (பரமதார்மிகனென்றது.) ஆழிப்படையென்கையாலே (பவித்ரபாணி) என்கிறார். பவித்ரமென்று- பவித்ரத்துக்கும், திருவாழிக்கும் பேர்; ஆத்மாவைஸ்வம்மென்று சொன்னதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (அகாரார்த்தாயஎன்றுதுடங்கி.) ஈஶ்வரனைப்ரஹ்மமாகச்சொல்லிற்றேயென்னவருளுகிறார் (அ இதிப்ரஹ்மவென்றுதுடங்கி.)

ஆத்மாபஹாரம்-ஸ்வாதந்த்ர்யமும், தேஹாத்மாபிமாநமும், அத்தையருளுகிறார் (இவ்வாத்மாபஹாரமித்யாதி.) ஸ்வாதந்த்ர்யாபிமாநம் சொன்னபோது பகவத்த்ரவ்யாபஹாரம் சொல்லுகிறது. தேஹாத்மாபிமாநம் சொன்னபோது லௌகிகத்ரவ்யமானஸ்வர்ணாதிகளைச் சொல்லுகிறது. ஹேயமானவஸ்துவை நன்பொருளென்று சொல்லுகிறதென்னென்ன வருளுகிறார் (அங்குநன்பொரு

(க) அஷ்டஶ்லோ. (உ) ரிக்வேத. (ந)

அவர்கள் சீர்க்கக்கனக்க நினைத்திருக்கும் மடிச்சரக்கைபாய்த்து ஆசைப்பட்டது.

(நம்பினேன் மடவாரையும்) தேஹமே ஆத்மாவென்றிருக்கையாலே ஆத்மஜ்ஞானம் பிறந்தால் பரமாத்மாவே புருஷார்த்தமாமாபோலே உடம்புக்கு உடம்பே போக்யமாகையாலே பரஸ்த்ரீ ஶரீரங்களே போக்யங்களென்று ஆசைப்பட்டுப் போந்தேன், (மடவாரையும்) ஆத்மகுணபூர்ணைகளாய் பாதிவ்ரத்யதர்மநிரதைகளான ஸாத்வி(ஷ்வி)களையாய்த்து நாஆசைப்பட்டது.

(நம்பினேன் மடவாரையும்) அன்றிக்கே ஸாமாந்யத்தில் ஸ்த்ரீகளையும் ஆசைப்பட்டுப்போந்தேன். (மடவார்) அவர்கள் புருஷவஶீகாரம் பண்ணுவது தந்தாமுடைய மடப்பத்தைக் காட்டியாய்த்து, (க) "சதிரிளமடவார்" என்று ஆழ்வார்பாடே கேட்டு வைக்கையாலே மடவாரென்கிறார். (மடவார்) அதிலும் ஒன்றிரண்டை யாசைப்படுகையன்றிக்கே பலவிஷயங்களையும் ஆசைப்பட்டேன், ஒன்றிலே துவக்கலாவது - அதில் போக்யதை உண்டாகிலிறே; அதில்லாமையாலே பலவிஷயங்களையு மாசைப்பட்டுப் போந்தாராய்த்து, அதுவுமன்றிக்கே (உ) "ஹ-ஞயவஊவாஹிவய-ி தே - பூயஏவாபிவர்த்ததே" என்று இக்காமந்தான் அபிவ்ருத்தமாகையாலே ததநுரூபமான விஷயபஹுத்வமும் அபேக்ஷிதமிறே; ஆகையாலே அஸ்வதந்த்ரமான வாத்மாவை ஸ்வதந்த்ரமாக

ளென்றுதுடங்கி.) நம்பினேனென்றது-ஆசைப்பட்டேனென்றபடி. (மடிச்சரக்கை) என்றது-ஒருவனையும் விஶ்வஸியாதே பையிலேயிட்டு மடியிலே கட்டிக்கொண்டிருக்குமது.

மடப்பமென்றதுக்கு இரண்டுபொருள். அதாவது - பாதிவ்ரத்யமாதல், கபடபவ்யதையாதல், (ஸாமாந்யத்தில் ஸ்த்ரீகளையென்றது) - ஸாதாரணஸ்த்ரீகளை யென்றபடி; ஸ்த்ரீகள் கபடமானபவ்யதையை யுடையவர்களென்று இவரறிந்தபடியென்னென்ன வருளிச்செய்கிறார் (சதிரிளமடவாரென்று துடங்கி.) பலவிஷயங்களிலே போகிறதென்? ஒருவிஷயத்திலே நிற்கப்போகாதோவென்னவருளிச்செய்கிறார் (ஒன்றிலே துவக்கலாவ தென்றுதுடங்கி.) மேலெல்லாம் நிகமிக்கிறார் (ஆகையாலேயென்றுதுடங்கி.) இவ்வபிப்ராயோகங்களொன்

(க) தி - வாய் - உ - ௧௦ - உ. (உ) விடபு.

நினைத்திருந்தேன். அநாத்மாவான தேஹத்திலே ஆத்மபுத்தி பண்ணினேன், அபுருஷார்த்தங்களான அர்த்தகாமங்களிலே புருஷார்த்தபுத்தி பண்ணினேனென்றாராய்த்து, இவ்வபிப்ராயோகங்களிலே இவை ஒவ்வொன்றேபோரும் அநர்த்த ஜநகமாகைக்கு; ஆயிருக்க இவையெல்லாவற்றையு மநுஷ்டித்துப்போந்தேன்.

இவ்வநுஷ்டாநம் உமக்கெப்போதுண்டாய்த்தென்ன, (முன்னெலாம்) முற்காலமடைய (க) "அநாதிஹ்மவாந் காலஃ-அநாதிர்ப்பகவாந்காலஃ" என்று காலம் நித்யமாகையாலும், அநுஷ்டாதாவான சேதநன்நித்யனாகையாலும், ததுபகாரணபூதகாணகளேபாங்களும் ப்ரவாஹதயா நித்யங்களாகையாலும், இவ்வநர்த்த புத்திக்கடியான அவித்யாகர்மவாஸநைகள் நித்யங்களாகையாலும் இதுவே எனக்கு யாத்ரையாய்ப்போந்தது, அக்ருத்யங்கள் ஒன்றிரண்டாகிலும் ஆஶ்வஸிக்கலாம். காலம் பரிமிதமாகிலும் கண்டு தரிக்கலாம். அநாதிகாலம் அபரிமிதமானவநர்த்தங்களை அநவரதமநுஷ்ட்டித்துப் போந்தேனென்று தாத்பர்யம்.

கீழ்தம்முடைய புன்மை சொன்னார். மேல்தாம் ஆழ்வாராலே அங்கீக்ருதரானப்ரகாரம் சொல்லுகிறார் (செம்பொனித்யாதி,) நான் அர்த்தார்ஜநேச்சுவாய் தேஶாந்தரஸஞ்சாரம்பண்ணுநிற்கச் செய்தே தைவாயத்தமாகத்திருநகரியிலே மாடங்கள் ஓங்கியுபர்ந்து

---

றது)-நன்பொருள் தன்னையும், மடவாரையுமென்ற அபிமப்த ப்ரயோகங்களென்றபடி; ஸ்ருஷ்ட்யாதியிலே கொடுத்தகரணங்கள் ஸம்ஹாரபர்யந்தமிருந்ததேயாகிலும், ஸம்ஹாரத்திலே நஷ்டமாய் கல்பாந்தராதியிலே ஸ்ருஷ்டங்களாகையாலே ப்ரவாஹதோநித்யமாயிருக்கும்.

நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையுமென்றுதுடங்கி அக்ருத்யங்கள் அநேகங்களாகையாலும், முன்னெலாமென்று - காலமநாதியாகையாலும், தரித்திருக்கப்போகாதென்றபடி, "செம்பொன்மாடத் திருக்குருகூர் நம்பிக்கன்பனாய்" என்னுமளவுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (தான் அர்த்தார்ஜநேச்சுவாயென்றுதுடங்கி.) (பொற்கென்று தோற்றிற்றென்றது) - பொன்மயமாகத்

---

(க) வி - பு - க - உ - உசு.

பொற்கென்று தோற்றிற்று, இங்கேபோய் அர்த்தாபஹாரம்பண்ணலாம், இதுதான் நகரியாகையாலே நாகரிகைகளான மடவாரையும் இம்மாடங்களிலே காணலாமென்று அறுதியிட்டு வழிவிலங்கி உள்புக்கேன். அந்நகரிக்கு நிர்வாஹகரான வாழ்வார் திருவஷ்டாக்ஷர ஸம்ஸித்தராகையாலே அவ்விடத்தில் தஸ்கரஸஞ்சாரணமில்லாமையாலே ஒருவைஷ்ணவ ஸகாஶத்தில் க்ஷத்ரபந்துவுக்குப் பிறந்த வவஸ்தைபோலே எனக்கும் ஆழ்வார் ஸகாஶத்திலே அபஹாரபுத்திபோய் உள்ளே ஆழ்வார் தம்மைக்காணவேணுமென்று புக்கு அவருடைய பூர்த்தியைக்கண்டு நின்றாப்போலே யிருக்க, அவருக்கு அன்பனாய்விட்டேன்

(செம்பொன்மாடம்) ஆழ்வாருக்கு (க) "களைகண்மற்றிலேன்" என்றும் (உ) "ஆராவன்பினடியேன்" என்றும் சொல்லுகிற பகவத்விஷயத்தில் அத்யுந்நதமான வத்யவஸாயாநுராகங்கள் போலேயாய்த்து மாடங்களினுக்கமும் திண்மையும் பொற்கெனவுமிருக்கிறபடி.

(செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பி) ஆழ்வாருடைய மயர்வற்ற மதிபோலேயாய்த்து இத்தேஶத்திலுமிருளற்று ஒளியேயாயிருக்கும்படி; அத்தேஶிகரும் ஆழ்வாரோட்டை ஆஸக்தியாலே பொலிந்துநிற்கு மவர்களாய்த்து. (செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பி) மாற்றுமினுங்கின பொன்னாலே சமைந்தமாடமாய், அதுதான் (ஙு) "ஜாதரூபமயைர்திவ்யை: ப்ராஸாதைர்விபூஷிதம் ... மஹாத்மந:- அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹா

தோற்றிற்றென்றபடி. "ஓங்கி, உயர்ந்து" என்று மிசைச்சொல்லாய், மிகவுமுயர்ந்தென்றபடி, (நின்றாப்போலே) என்றது-ஒருஹேதுவின்றிக்கேயென்றபடி; ஆழ்வாருடைய அத்யவஸாயம் போலேயிருக்கிறதிண்மையும், அநுராகம் போலே யிருக்கிறபொற்கெனவு மென்றபடி, (பொற்கெனவும்) என்றது- ஔஜ்ஜ்வல்யம்.

நம்பியென்ற பதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்தேசிகரு மென்றுதுடங்கி.) (மாற்றுமினுங்கின) என்றது-மாற்றேறினவென்றபடி, செம்பொன்னென்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதுதான் அத்யர்க்கா

(க) தி - வாய் - ரு - அ - அ. (உ) தி - வாய் - ரு - கO - உ.

(ஙு) பார - ஆர - கரு - கக.

த்மநः" என்று பரமபதத்தின் தேஜஸ்ஸுபோலே பார்க்கவும் அணுகவுமொண்ணாதபடி யிருக்கையன்றிக்கே கண்படைத்தார்க்கெல்லாம் காணவுமாய்க் கிட்டவுமாம்படி ஸ்ப்ருஹணீயமானதேசம். (செம்பொன்மாடம்) (க) "துவளில் மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலம்" என்று உகந்தருளின நிலங்களில் மாடங்களும் ஆழ்வாருக்கு உபாதேயமானாப்போலே இவருக்கும் ஆழ்வாருடைய மதிநலங்களோ பாதி மாடங்களும் உபாதேயமாயிருக்கிறதாய்த்து; ஆகையாலே அர்த்தகாம ப்ரவணரையும் ஆளாக்கும் தேஶமாய்த்து.

(நம்பிக்கன்பனாய்) அர்த்தகாமாதிகளை நம்பிப்போந்த நான் ஆழ்வாருக்கு அன்பனாய்விட்டேன், அர்த்தகாமங்களின் போக்யதையும் ஆழ்வார்பாடே காண்கையாலே அவர்க்கே அன்பனாய் விட்டேன்; கீழ்ப்பாட்டிலே "அன்னையாயத்தனாய்" என்கையாலே (உ) "மாதாபிதா - மாதாபிதா" என்னுமிடம் சொன்னார். இதில் - "யுவதய: - யுவதய:, விபூதி: - விபூதி:" என்னுமிடம் சொல்லுகிறார்.

(அடியேன்) ஸ்வதந்த்ரனாய்ப்போந்த நான் நம்பிக்கு ஶேஷமானேன், ஆழ்வாருக்குப் பிறந்த மதிநலங்கள்போலே க்ரமத்

---

நலவென்றுதுடங்கி.) செம்பொன்மாடமென்று வர்ணித்ததுக்குப் பின்னையுமொருதாத்பர்யமருளிச்செய்கிறார் (துவளில்மாமணிமாடமென்றுதுடங்கி) நம்பியென்றபதத்தைக் கடாக்ஷித்துக்கொண்டு அருளிச்செய்கிறார் (மதிநலங்களோ பாதிமாடங்களுமென்றுதுடங்கி.)

அர்த்தகாமங்களை யாசைப்பட்டு போந்தநீர் ஆழ்வாருக் கன்பரானபடியென்னென்ன வருளிச்செய்கிறார் (அர்த்தகாமங்களின் போக்யதையுமென்று துடங்கி). (அர்த்தகாமங்களின் போக்யதையும் ஆழ்வார் பாடேயுண்டாகையாலே) என்றது - "யுவதய: விபூதி:" என்னுமிடம் சொல்லிற்றென்றபடி.

அடிமையுற்பட்டு அன்புண்டாக வேண்டாவோவென்ன வருளிச்செய்கிறார் (ஆழ்வாருக்குப் பிறந்தமதியித்யாதி) ஜ்ஞாந பூர்வகமாகபக்தியுண்டாகை

---

(க) தி - வாய் - ௬ - ௫ - க. (உ) ஸ்தோ - ரு - ச.

திலே வருகையன்றிக்கே அன்புமுற்பட்டு அடிமைபிற்பட்டது. (நம்பிக்கன்பனுபடியேன்) ஆழ்வார் திருவஷ்டாக்ஷர ஸம்ஸித்த ராகையாலே இவருடைய கடாக்ஷலக்ஷ்யனுகையாலே அம்மாத்ரத்திலே பதத்ரயார்த்தத்திலு முளனுய்விட்டேன். இனிவாசி, அங்கு ததீயஸஹமான தத்விஷயமாயிருக்கும், இங்கு ஆழ்வாருக்கேயாயிருக்கும்.

(சதிர்த்தேன்) சதிரனுனேன். (க) "மோக்ஷயிஷ்யாமி - மோக்ஷயிஷ்யாமி" என்றவன் முழங்கைத்தண்ணீர் பார்த்திராதே ஆழ்வாருடைய ப்ரபாவத்தையிட்டு வென்றேன். (நம்பிக்கன்பனுப்! சதிர்த்தேன்) (உ) "பாற்பால்மனம் சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு" என்கிறபடியே ஆழ்வாருக்கன்பனுய் அந்யவிஷயங்களை வென்றேன், (நம்பிக்கன்பனுபடியேன்) ஆத்மாத்மீயங்களிரண்டும் ஆழ்வாரதாய்த்து, அவர்தாம். (ங) "யானே நீயென்னுடைமையும் நீயே" என்று தத்விஷயத்திலே ஸமர்ப்பித்தாப்போலே, (மடவாரையும் நம்பினநான் சதிர்த்தேன்) அவர்கள் சதிரிளமடவாராகையாலே இளிம்புபட்ட நான், ஆழ்வாரையண்டைகொண்டு சதிரனுய்விட்டேன்.

---

யன்றிக்கே, பக்தியுண்டாய் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்ததென்றபடி, அதாகிறது - "மதிநலமருளினன்" என்று ஆழ்வாருக்கு ஸ்வரூபஜ்ஞாநம் முற்பட்டு பக்தி பிற்பட்டது. இவருக்கு, அன்பனுயென்று - பக்திமுற்பட்டு, அடியேனென்று ஸ்வரூபஜ்ஞாநம் பிற்பட்டது.

அன்பனுயென்று அர்த்தகாமங்களின் ப்ராவண்யம் ஆழ்வார் பக்கலிலே யுண்டாகையாலே மத்யமசரமபதார்த்தங்களான அநந்யோபாயத்வமும், அடியேனென்று அநந்யார்ஹஶேஷத்வமும் சொல்லுகையாலே பதத்ரயார்த்தங்களிலு முளனுய்விட்டேனென்றபடி. (ததீயஸஹமான) என்றது - ததீயஶேஷத்வ பர்யந்தமான வென்றபடி.

(ஆத்மாத்மீயங்களிரண்டும்) என்றது - தாமும் தம்முடையபக்தியும் ஆழ்வாருக்கு ஶேஷமாய்த்தென்றபடி.

---

(க) கீதை - கஅ - சுசு. (உ) ங - திருவ - கச.
(ங) தி - வாய் - உ - க - க.

(இன்றே) ஈஶ்வரனையண்டை கொண்டு ஆரப்த ஶரீரபாத ஸமயம் பார்த்திருந்து பின்னையும் வாஸநாருசிகளாகிற மண்பற்று விடாமல் விரஜையளவும் போகவேண்டும்படி யிருக்கையன்றிக்கே, இன்றே ஸவாஸநமாகவிட்டேன். (இன்றே) அன்று அப்படியானேன். இன்று இப்படியானேன். நடுவில் இதுக்கு என் கையில் கிடப்பதொரு ஹேதுவைக் கண்டிலேன், இதுக்கு வரவாறென்றிக்கேயிருக்க, வாழ்வினிதாம்படி விழுந்ததென்று விஸ்மிதராகிறார். (இன்றே) அன்று ஈஶ்வரனுங்கூட நிற்கச்செய்தே ஸம்ஸரித்துப்போந்தேன். இன்று ஆழ்வார் ஸந்நிதிமாஹாத்ம்யத்தாலே இவ்வளவும் பிறந்ததென்று ப்ரீதராகிறார். (ரு)

அழகியமணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யாநம்

முற்றிற்று.

---

இன்றேயென்றதுக்கு இரண்டு தாத்பர்யம்-ஒருகாலாந்தரத்திலின்றிக்கே வாஸநாருசிகளாகிற மண்பற்றை இன்றே ஸவாஸநமாக விட்டென்னுதல். அன்றிக்கே - ஒருஹேதுவொன்று மின்றிக்கே இன்றேக்ருதக்ருத்யனானே னென்னுதல். இன்றே என்கிறவிடத்தில்ஏவகாரம் ஸ்வரத்திலேயாய் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அன்று ஈஶ்வரனும் கூடநிற்கச்செய்தேயென்று துடங்கி). (ஸ்வரத்திலே) என்றது - ஆஶ்சர்யத்திலே யென்றபடி. (ரு)

மூ :—இன்றுதொட்டு மெழுமையுமெம்பிரான்
நின்றுதன்புகழேத்த வருளினன்
குன்றமாடத்திருக் குருகூர்நம்பி
என்றுமென்னையிகழ்விலன் காண்மினே. (சு)

## நஞ்சீயர் வ்யாக்யாநம்.

அறும்பாட்டு. அவ :—(இன்றுதொட்டு மித்யாதி) நீர் க்ருதக்ருத்யரானபடி எங்ஙனேயென்னில், (க) "வீவில்காலமிசைமாலை களேத்தி மேவப்பெற்றேன்" என்கிறபடியே, காலதத்வமுள்ள தனையும் ஆழ்வார் தம்மையே ஏத்தும்படி பண்ணினாரென்கிறார்.

வ்யா :—(இன்று தொட்டும்) பகவத்விஷயத்திற் காட்டில் தத்ஸம்பந்தியான ஆழ்வார் உத்தேஶ்யரென்று ருசிபிறந்தவின்று தொடங்கி, ( எழுமையுமெம்பிரான் ) காலவிச்சேதமின்றிக்கே எனக்கு உபகாரகரானவாழ்வார்; போனகாலமும் எனக்கு ருச்யபாவத்தாலே இழந்தேனித்தனை. (நின்று) ப்ராப்யத்தில் ப்ரதமாவதியாகிலிறே சமநப்ரஸங்கமுள்ளது, எல்லை நிலத்திலே புக்கார் நிலைநிற்குமித்தனையிறே. (உ) "மானிடம்பாடவந்த கவியேனல்லேன்" என்று ஆழ்வாருக்கு வ்யாவர்த்யவிஷயம் மநுஷ்யரிறே, இவர்க்கு வ்யாவர்த்யம் எம்பெருமானனபடி.

(குன்றமாடத் திருக்குருகூர்நம்பி) பர்வதங்கள்போலே யிருந்துள்ள மாடங்களையுடைய திருக்குருகூரில் நிரபேக்ஷரான வாழ்வார், ஆழ்வார்பூர்த்தி எல்லைகாணவொண்ணாதாப்போலே மாடங்களினுபர்த்தி எல்லைகாணவொண்ணாதபடி. (என்றுமென்னை யித்யாதி) தாம் ஸ்தோத்ரம் பண்ணுகைக்கு ஹேது சொல்லுகிறார். ஆழ்வார்ஸந்நிதிபோலே காணும் இவரைப்பேசுவிக்கிறது. உங்களைப்போலே பகவத்விஷயத்திலன்றி நான் ஆழ்வார் கவியானபடி காணமாட்டிகோளோ?. (சு)

ஆறும்பாட்டின் நஞ்சீயர் வ்யாக்யாநம்
முற்றிற்று.

(க) தி - வாய் - ச - ௫ - ௩. (உ) தி - வாய் - ௩ - க - க.

## நம்பிள்ளை ஈடு.

அவ :—(இன்றுதொட்டு மித்யாதி) ஆழ்வார் இப்போது இங்ஙனே விஷயீகரித்தாராகிலும் நீர்தாம் அநாதிகாலம் புறம்பே அந்யபரராய்ப் போந்தேனென்றீர், இன்னமும் அப்படிப்புறம்பே போகிலோவென்ன, அங்ஙனே போகலாம்படியோ ஆழ்வாரருளி யிருப்பதென்கிறார்.

வ்பா :—(இன்று தொட்டும்) மேலொருநாளிலே பலிப்பதாக விட்டு வைக்கிறாரோ? விஷயீகரித்தவின்று துடங்கி; (எழுமையும்) எழுஜந்மமென்கிறது உபலக்ஷணம், மேலுள்ளகாலமெல்லா மென்றபடி. (எம்பிரான்) (க) "பிரான் பெருநிலங்கீண்டவன்" என்று பகவத்விஷயத்திலே ஆழ்வார் சொல்லுமத்தை உபகார ஸ்ம்ருதி யாலே அவர்விஷயத்திலே சொல்லுகிறார்.

(நின்றுதன் புகழேத்தவருளினன்) உபகார ஸ்ம்ருதியாலே பகவல்லாபத்தளவும் இவரைப்பற்றி நின்று. பின்னை அதுகிட்டினவாறே அதிலே தோள்மாறும்படியன்றியே, தம்முடைய அநுபவத்துக்குள்ளே பகவதநுபவமாம்படியன்றோ ஆழ்வார் எனக்கருளிற்று. (தன்புகழேத்த) ஆழ்வார் தமக்கு உபகரித்த பகவத்விஷயத்தையொழியப் புறம்பே போனாராகிலிறே இவர்தம்மை ஏத்திறொன்றிக்கே யொழிவது.

(குன்றமாடத் திருக்குருகூர்நம்பி) ஆழ்வார் தம்மையுமேத்தி இன்னமுமொரு விஷயத்தை ஏத்தவேண்டும்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது, (குன்றமாடத் திருக்குருகூர்) (உ) "குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூர்" என்று ஆழ்வாரருளிச் செய்புமதுவே இவர் நெஞ்சில் வாஸிதமாயிருப்பது, அதுதன்னையே சொல்லுமத்தனையிறே, (என்றுமென்னை யிகழ்விலன்காண்மினோ) யாவதாத்மபாவி புறம்பொன்றில் போகாதபடியன்றோ என்னை விஷயீகரித்தது, என்தண்மைபாராதே என்னைவிஷயீகரித்தவர் நான் புறம்பேபோவேனென்றால் போகலாம்படி என்வசம் என்னைக்காட்டித்தருவரோ? (கூ)

ஆறும்பாட்டின் நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

---

(க) தி - வாய் - க - எ - கூ. (உ) தி - வாய் - ச - கo - க.

## பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம்.

———( o )———

அவ :—ஆறும்பாட்டில், ஆழ்வார் இப்போது இங்கே விஷயீகரித்தாலும் நீர்தாம் அநாதிகாலம் வாஸநைபண்ணிப்போந்த விஷயமாகையாலே அதுமறுவலிடிலோவென்ன. அங்ஙன் மறுவலிடும்படியாயோ ஆழ்வார் ப்ரஸாதம் என்பக்கலிருப்பதென்கிறார். (௧) "ஶுசீநாம ஶ்ரீமதாம் கெஹெயோகப்ரஷ்டோபிஜாயதெ - ஶுசீநாம்ஶ்ரீமதாம்கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே" என்றும் (௨) "ஸமாதிபங்கஸ்தஸ்யாஸீத் - ஸமாதிபங்கஸ்தஸ்யாஸீத்" என்றும் ப்ரம்ஶம் ப்ரஸங்கிக்கும் பகவத்க்ருபை யளவிலே நினைத்திருக்கலாமோ ஆழ்வார் க்ருபையை.

வ்யா :—(இன்று தொட்டும்) விஷயீகரித்த இன்று முதலாக; பகவத் ஸமாஶ்ரயணத்திற்போலே ஆஶ்ரயிப்பதொருகாலமும் பலிப்பதொருகாலமுமாயோ ஆழ்வாருடைய விஷயீகாரமிருப்பது.

---

அரு ;—ஆறும்பாட்டு. "என்று மென்னையிகழ்விலன் காண்மின்" என்றதைக்கடாக்ஷித்து ஸ்வாநுபவகர்ப்பபரோபதேஶமாதல், பரோபதேஶகர்ப்ப ஸ்வாநுபவமாதல் சொல்லக் கூடாமையாலே ஶங்காபரிஹாரமுகேநவருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி). சதிர்த்தேனின்றேயென்று நீர் ஸந்தோஷித்திருந்தீர். இது நிலைநிற்கப்புகுகிறதோ ?. விஷயாந்தரங்களை அநாதியாகவநுபவித்தவாஸநையாலே நீர்தாம் திரும்பினாலோவென்று ஶங்காஹ்ருதயம். பகவத்ப்ரஸாதம்போலே ஆழ்வார் ப்ரஸாதம் மத்யே நழுவினாலோ வென்னவருளிச்செய்கிறார் (ஶுசீநாமித்யாதி). இவ்வர்த்தத்துக்குப் பூர்வார்த்தத்திலே நோக்காய், பகவத்விஷயத்திலும் நான்போகாதே யாவதாத்மபாவிதம்மை யேத்தும்படி நிர்ஹேதுகமாகவருளின ஆழ்வாருடையக்ருபையை, பக்திநிஷ்டரை யோகபங்காதிகளையிட்டுக் கைவிடுமவன்க்ருபையோடு ஸமமென்னலாமோவென்றுகருத்து.

பகவத்ப்ரஸாதத்திலும் அதிஶயிதமான வாழ்வாருடைய ப்ரஸாதத்துக்கு ஏழு ஜந்மம் தன்புகழேத்தப்பண்ணினால் என்னாலேத்தவாகாமையாலே அநந்த

---

(௧) கீதை - ௬ - ௪௧. (௨) வி - பு - ௨ - ௧௩ - ௨௧.

விஷயீகரித்தவின்று தொடங்கி அநுபவகாலமாயன்றோ விருப்பது. (எழுமையும்) ஏழுஜந்மமென்று உபலக்ஷணம். மேலுள்ளகால மெல்லா மென்றபடி. (எம்பிரான்) (க) "பிரான் பெருநிலங்கீண்டவன்" என்று பகவத்விஷயத்திலே ஆழ்வார் பேசும்படியை உபகாரஸ்ம்ருதியாலே ஆழ்வார் விஷயத்திலே பேசுகிறார் (எம்பிரான்) என் ஸ்வாமி.

(நின்று) ஒருபடிப்படநின்று. உபகாரஸ்ம்ருதியாலே பகவல்லாபத்தளவும் ஆழ்வாரை யநுபவித்து, பின்பு அதுகிட்டினவாறே அதிலே தோள்மாறும்படியன்றிக்கே யிருக்கை. (தன்புகழேத்த) ஆழ்வாருடைய வநுபவத்துக்குள்ளே பகவதநுபவமாம்படியாயன்றோ ஆழ்வாருடைய பெருமையிருப்பது. (அருளினான்) நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணினார். (உ) "மயர்வறமதிநல மருளினன்" என்று ஆழ்வார் பகவத்விஷயத்திற் சொன்னவார்த்தையை ஆழ்வார் திருவடிகளிலே சொல்லுகிறாரிறே இவர்.

---

காலத்துக்கு முபலக்ஷணமாக்குகிறார் (ஏழுஜந்மமென்றித்யாதி).

அருளினபின்பன்றோ எம்பிரானென்று உபகாராநுஸந்தாநம் பண்ணப்ராப்தம். முன்னேதானே, எம்பிரானென்பானென்னென்கிற ஶங்கையையுபகாரஸ்ம்ருத்யதிஶயத்தால் சொன்னாரென்று ஸத்ருஷ்டாந்தகமாகப் பரிஹரிக்கிறார் (பிரானித்யாதி). கீழ்வாக்யவிவரணம் (உபகாரஸ்ம்ருதியாலேயித்யாதி).

தன்புகழென்பானென்; அவன் புகழென்னவேண்டாவோவென்ன வருளிச்செய்கிறார் (ஆழ்வாருடையவித்யாதி). அநவரதபகவதநுபவ பரரான வாழ்வாரைத் தாமநுபவிக்கும்போது அந்தபகவதநுபவம் இதிலேலபிக்குமென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்.

ஹேதுவைச் சொல்லாமையாலேபலிதம் (நிர்ஹேதுகேத்யாதி). என்னையருளினானென்னாதே கேவலம் அருளினானென்கையாலே, ஆழ்வார் எனக்கருளினானென்னாதவோபாதி யருளிச்செய்தாரென்கிறார் (மயர்வறவித்யாதி). அருளுக்குமுன்பு தம்மையுளராகநினைத்திரா ரென்றுகருத்து.

---

(க) தி - வாய் - க - எ - ௬. (உ) தி - வாய் - க - க - க.

(குன்றமாடத் திருக்குருகூர்நம்பி) தம்மையுமேத்தி இன்னுமொரு விஷயத்தையுமேத்த வேண்டும்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. (க) "குன்றம்போல் மணிமாடநீடு திருக்குருகூர்" என்று ஆழ்வாரருளிச்செய்யுமதிறே இவர்நெஞ்சிலே வாஸிதமாயிருப்பது; அத்தைச்சொல்லுகிறார்.

(என்றுமென்னை யிகழ்விலன்) [என்றுமிகழ்விலன், என்னை யிகழ்விலன்] யாவதாத்மபாவிபுறம்பே ஒருவிஷயத்திலே போகவிட்டுக்கொடார். என்தண்மை பாராதே விஷயீகரித்தவர் என்னை விஷயாந்தரங்களிலே போகவொட்டுவரோ? தம்திருவடிகளை யொழியப்புறம்பு புகலற்றிருக்கிற வென்னை, புறம்பேபோகவென்றாலும்போகலாம்படி என்கையிலே என்னைக் காட்டித்தருவரோ? (காண்மினோ) இதுப்ரத்யக்ஷிக்கலாவதொன்றாயிருக்க, ஆழ்வார் பெருமை நான் சொல்லக்கேட்கை மிகையன்றோ?

ஆறும்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்

முற்றிற்று

---

நின்றுதன்புகழேத்துகைக்கு ஹேதுவாக நம்பிபததாத்பர்யம் (தம்மையுமித்யாதி). ப்ரகாராந்தரேண வர்ணியாதே இப்படிவர்ணிப்பானென்னென்ன, அதுக்குஹேதுவை யருளிச்செய்கிறார் (குன்றம் போலித்யாதி).

என்று மென்றதையும், என்னையென்றதையும் ஸமமாகக்ரியையிலே அந்வயம் காட்டிக்ரமேணவிவரிக்கிறார் (என்று மித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே). என்னையென்றதுக் கர்த்தாந்தரம் (தம்திருவடிகளித்யாதி). "குன்றமாடத்திருக்குருகூர் நம்பியானவெம்பிரான் - இன்று தொட்டுமெழுமையும் நின்றுதன்புகழேத்த வருளினுகையாலே, என்று மென்னையிகழ்விலன் காண்மின்" என்றந்வயம். (கூ)

ஆறும் பாட்டின் அரும்பதம்

முற்றிற்று.

---

(க) தி - வாய் - ச - கO - க.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனுர் வ்யாக்யாநம்.

———( o )———

அவ :—ஆறும்பாட்டு. (இன்றுதொட்டு மித்யாதி) கீழிரண்டுபாட்டாலே தம்முடைய தோஷாதிசயத்தையும் அத்தோஷமே பற்றுசாகத்தம்மை ஆழ்வார் அங்கீகரித்தபடியையும், ஆழ்வாரங்கீகரித்த வநந்தரம் அத்தோஷங்களைத் தாம்வென்றபடியையும், அவை போகையாலே ஆழ்வார் திருவடிகளில் தமக்குண்டான வாதாத்தையும் சொன்னுர்.

இத்தைக்கேட்டவர்கள் இப்போது உம்முடைய குற்றம் கழிந்ததேயாகிலும் உமக்கு ப்ராக்ருதிஸம்பந்தத்தாலே பின்னையும் மறுவலிடாதோ? அதுக்குப் பரிஹாரமாக நீர்கண்டுவைத்ததென்னென்ன; கீழுள்ளதோஷமும் நான் ஸாதநாநுஷ்டாநம் பண்ணிப் போக்கினேனே? ஆழ்வாரங்கீகாரத்தாலே போய்த்தாகில் அவ்வங்கீகாரம் மாறினுலன்றே அதுமேலிடுவது. ஆழ்வார் என்தோஷம்கண்டு ஒருகாலும் இகழார். இதுகாணமாட்டி கோளோவென்று இப்பாட்டாலே உத்தரம்சொல்லுகிறுர்.

கீழ்ப்பாட்டில்-ஆழ்வார் திருவடிகளிலுண்டான தம்முடைய ஜ்ஞாநபக்திகளைச்சொன்னுர். இதில் அவர் பக்கல் தமக்குப்பிறந்த வ்யவஸாயம் சொல்லுகிறுர். தாம் அங்கீகரித்தவின்று முதல் யாவதாத்மபாவியாகத்தம்முடைய குணகீர்த்தநம் பண்ணிப்போரும்படி என்பக்கலிலேக்ருபையைப் பண்ணினவாழ்வார் குற்றங்கண்டு கைவிடப்புகுகிறுரோவென்று இகழாமைக்கு அடிசொல்லுகிறுர் இப்பாட்டின் முற்கூற்றுலே

வ்யா ;—(இன்றுதொட்டும்) என்தோஷமே பச்சையாகக் கைக்கொண்டவின்றுதொட்டும். (எழுமையும்) மேலுள்ளகாலங்

அரு ;—ஆறும்பாட்டு. (இன்றுதொட்டுமித்யாதி). முந்துறப்பாட்டுக்கெல்லாம் ஸமவாயமாகத் தாத்பர்ய மருளிச்செய்து, திரியட்டும் பூர்வார்த்தமாத்ரத்துக்குப் பிரித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறுர் (தாமங்கீகரித்த வின்றுமுதலென்றுதுடங்கி).

எழுமையுமென்று மேலுள்ளகாலமெல்லாம் விடாரென்றுல் போராதோ? இன்றுதொட்டுமென்று விசேஷிக்கிறதுக்குக் கருத்தருளிச்செய்கிறுர் (இப்

களிலும், (இன்றுதொட்டு மெழுமையும்) இப்போதையங்கீ காரம் யாதொருபடி யிருக்கிறது. இதின் கீழாய்த்து மேலுள்ள காலமடைய அவரென்னை விடாதபடி யென்றுதாத்பர்யம். இவ ருடைய நியமமிருக்கிறபடி, ஒருதேஶ விஶேஷத்திலே போனா லும் ஆழ்வார்கீழே ஒதுங்குமவராய்த்து இவர்; மாதுலகுலத் துக்குப்போன ஶ்ரீபாதாழ்வானைப் பின்சென்ற ஶ்ரீஶத்ருக்நாழ் வானைப்போலே; இவரும் நித்யஶத்ருக்நரிறே, திருக்குருகூர்நம் பிக்கன்பனுகையாலே ப்ரீதிபுரஸ்க்ருதத்வமுமுண்டாய்த்து.

(எம்பிரான்) எனக்கு ஸ்வாமியானவர்; ஸ்வாமியானவன் ஸ்வத்தைக் குற்றங்கண்டு இகழுமோ, (க) "எம்பிரானை யெந்தை தந்தை தந்தைக்குந்தம்பிரானை" என்று ஆழ்வார் பகவத்விஷயத் தைச் சொல்லக்கேட்டுப் போந்த வாஸனையாலே தாமும் எம்பிரா னென்கிறார்.

---

போதையங்கீகாரம் யாதொருபடியிருக்கிறதென்று தொடங்கி.) இதுக்குத் தாத்பர்யம் "புன்மையாகக்கருதுவராதலில், அன்னையாயத்தனாய்" என்று தோஷமேபச்சையாக இப்போது அங்கீகரிக்கையாலே மேலுள்ளகாலமும் தோஷமேபச்சையாகக் கொண்டுவிடாரென்றபடி. (இதின்கீழென்றது) இந்தகாலம் போலேயென்றபடி; எழுமையுமென்று மேலுள்ளகாலமெல் லாமென்னலாமோ? இங்கிருக்கும்நாள் ஆசார்யன் உத்தேஶ்யனொழிய பரம பதத்திலேபோனால் ஈஶ்வரனன்றோ உத்தேஶ்யனென்ன வருளிச்செய்கிறார் (இவருடையநியமமிருக்கிறபடி யென்று). இந்தவாக்யத்தை விவரிக்கிறார் (ஒருதேஶவிஶேஷத்திலே யென்றுதொடங்கி). ஶ்ரீஶத்ருக்நாழ்வான் ப்ரீதிபுர ஸ்க்ருதராயன்றோபோனார். இவருக்கும் ப்ரீதியுண்டோவென்ன வருளிச்செய் கிறார் (திருக்குருகூர் நம்பிக்கென்று துடங்கி).

"இன்றுதொட்டுமெழுமையும் நின்றுதன்புகழேத்தவருளினான்" என்று மேலே கூட்டி, ஸ்வாமியானவன் ஸ்வத்தைக் குற்றங்கண்டு இகழுமோ? ஆகை யாலேஸர்வகாலமும் தன்புகழேத்த வருளினானென்றருளிச் செய்தார்கீழ். அன்றிக்கே, "இன்றுதொட்டுமெழுமையும்-எனக்கெம்பிரான்" என்று கீழே

---

(க) தி-வாய்-க-கo-ரு.

"இன்றுதொட்டும் எழுமையும் எனக்கு எம்பிரான்" என்று கீழோடேகூட்டவுமாம். ஒருகால் பகவத்ஸ்வம்மாய், ஒருகால் ஆழ்வார்க்கு ஸ்வம்மாயிராதே, ஸர்வகாலமும் ஆழ்வாருக்குஸ்வம் மென்று தம்மை நினைத்திருக்கிறாராய்த்து, (எம்பிரான்) எனக்கு உபகாரகரானவர். என்னுடைய குன்றனையகுற்றத்தையே குண மாகக்கொண்டு நான் அதஃபதியாமல் நோக்கினவர்; என்னுடைய அஹங்காரார்த்த காமங்களில் நசையறுத்து ஆத்மஜ்ஞாநாதிகளை உபகரித்தவளவன்றிக்கே பகவத்விஷயத்தில் காட்டிக் கொடாதே தாமே கைக்கொண்ட மஹோபகாரகர்.

மேல் அந்தவுபகாரந்தன்னை உபபாதிக்கிறார் (நின்றுதன்புக ழேத்தவருளினான்) தம்முடைய ஸத்குணஸம்ஸ்துதியைப் பண் ணும்படி அருளைப்பண்ணினார். (தன்புகழேத்தவருளினான்) "தென்குருகூர்நம்பியென்றக் காலண்ணிக்கும்" என்றுதுவக்கி "முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே" என்ற திறுதி யாகத்தம்முடைய புகழை எத்தும்படியருளினார்.

---

கூட்டித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருகால்பகவத் ஸ்வம்மாயென்றுது டங்கி), எம்பிரானென்றதுக்கு இரண்டுபொருள்; அதாவது-ஸ்வாமித்வமாதல், உபகாரகத்வமாதல்; அதில்கீழ் ஸ்வாமித்வமருளிச்செய்தார், உபகாரகத்வமருளிச் செய்கிறார் (என்னுடைய குன்றனையகுற்றத்தையென்றுதுடங்கி) (குன்றனைய குற்றமென்கிறது) - புன்மையாகக்கருதுவ ரென்றதைப்பற்ற. இந்த வாக்யத் தால், "நன்மையால்மிக்க" என்கிறபாட்டில் செய்தவுபகாரத்தைய நுஸந்தித்தார். "நம்பினேன்பிறர்" என்கிறபாட்டில் செய்தவுபகாரத்தையும், நின்றுதன்புகழே த்தவருளினனென்று இந்தப்பாட்டில் செய்தவுபகாரத்தையுமருளிச்செய்கிறார் (என்னுடைய அஹங்காரார்த்தகாமங்களென்று துடங்கி),

எத்தும்படி அருளினப்ரகாரந்தானே தென்ன வருளிச் செய்கிறார் (தென் குருகூர்நம்பியென்றக் காலென்றுதுடங்கி), (துவக்கி) என்றது-தொடங்கி யென்றபடி

ஆழ்வார் (க) 'திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்கிய" என்கிறபடியே ஈஶ்வரனையேத்துகைக்கன்றோ திருத்தினது; இங்ஙனேயிருக்க, இவர் ஆழ்வார்

(ஏத்த) (க) "நற்பூவைப்பூவீன்ற வண்ணன்புகழ்–இயற்றுவாய்" என்று துடங்கி (உ) "மொய்கழலேயேத்தமுயல்" என்று ஆழ்வார்தம்மைப்போலே ஏத்த உத்யோகித்து விட்டவளவன்றிக்கே பத்தும் பத்தாக ஏத்தும்படியருளினார்.

(தன்புகழேத்த) ஆழ்வார் பகவத்குணங்களையேபுகழும்படித் திருத்தினாரேயாகிலும் இவர் தம்முடைய ப்ரீதியாலே தன்புகழேத்தவென்கிறார். (தன்புகழேத்த) பகவத்குணங்கள் போலே குற்றம்காண்கையும் கண்டதுக்குத் தக்கதண்டம் பண்ணுகையுமாயோ ஆழ்வார் குணங்களிருப்பது, (ங) "அன்னையாயத்தனையென்னையாண்டிடும் தன்மையான்" என்கிறபடியே வாத்ஸல்யோத்தரமாயன்றோ விருப்பது, ஆழ்வாருடைய நிகரில் புகழ் இதிறே.

(தன்புகழேத்தவருளினான்) இவருடைய புருஷார்த்தஸாதநங்களிருக்கிறபடி, இவ்வாசிகைகைங்கர்யத்துக்கு ஸாதகம் ஆழ்வார் க்ருபையென்றறுதியிடுகிறார் (ச) "நீயும்நின்னஞ்சிறைய சேவலுமாயாவென்றெனக்கருளி" என்று கடாக்ஷிகாரத்துக்கும் கருணையேவேணுமென்று ஆழ்வார்பாடே அறிந்து வைப்பரே. ஏத்துமிடத்தில் (நின்றுதன்புகழேத்தவருளினான்) ஆழ்வாருடைய குணங்களைப்புகழ்கையே புருஷார்த்தம் அநுஸிக்கிப்பதும் அவ

---

குணங்களையேத்துகிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (ஆழ்வார்பகவத் குணங்களையென்றுதுடங்கி), அன்னையாயென்றுமாத்ருத்வஸம்பந்தம் முந்துற வருளிச்செய்கையாலே வாத்ஸல்யம்; தன்புகழேத்த வென்றது-ஸாத்யம்; அருளினானென்றது-ஸாதநம், கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (இவ்வாசிகைகைங்கர்யத் துக்கென்றுதுடங்கி) ஆழ்வாருடையக்ருபையே உத்தாரகமென்று இவரறிந்தபடியென்னென்ன வருளிச்செய்கிறார் (நீயும்நின்னஞ்சிறைய சேவலுமாயென்று துடங்கி), நின்றென்றதுக்கு-இரண்டு பொருள், அதாவது-அத்யவஸிதனாய் நின்றென்னுதல், மநஸ்ஸைதில்யம்வாராமல் நின்றேத்தவருளினானென்னுதல்;

அத்யவஸிக்கை சைதந்யகார்யமன்றோ? இவரேத்தும்படியருளினாரென்பா

---

(க) பெரியதிருவ - க.
(உ) பெரியதிருவ - அஎ.
(ங) ச -
(ச) தி - வாய் - க - ச - க.

ருடைய வருளாலே யென்று அத்யவஸிதனுப் ஏத்தும்படியு மருளினர். புருஷார்த்த பூதருமாய் ஸாதநபூதருமானவர்களிறே அத்யவஸாயப்ரதரும். (நின்றுதன்புகழேத்த) அவருடையகுணநு ஸந்தாநத்திலே மநஃஸ்ஸைஸ்திர்யம் பிறக்கையாலே (க) "ஶ்ரூயதா நவ க்ஷுத்ரஶ்ரீ ஹம்பவ ஸ்வா–முநேவக்ஷ்யாம்யஹம்புத்வா" என்கிறபடியே நெஞ்சை ஒருங்கப்பிடித்து நின்று ஏத்தவென்னுமாம்.

(குன்றமாடமித்யாதி) பர்வதஶிகரங்களைக் கொண்டு வந்து வைத்தாப்போலே யிருக்கிற மாடங்களையுடைத்தான திருநகரியிலே வர்த்திக்கிற பூர்ணரானவாழ்வார். கீழிற்பாட்டில் செம்பொன்மாடமென்று–மாடங்களினுடைய அலங்காரத்தைச்சொன்னர். இதில் மாடங்கள் வெறும்புறத்திலே ஆகர்ஷகமாய் ஸர்வதாது ஸமலங்க்ருதமாய் ஸம்ஸாரபீதர்க்கு அண்டைகொள்ளலாம்படி யிருக்குமென்கிறர். (நம்பி) யாவதாத்மபாவி தம்முடைய புகழை ஏத்தாநின்றாலும் வரையிடாதகுணபூர்த்தியையுடையவர்.

---

னென்? ஏத்தும்படியுமருளினனென்று ஸமுச்சயிக்க வேண்டுவானென்னென்னவருளிச்செய்கிறர் (புருஷார்த்தபூதருமாயென்றுதுடங்கி), அன்றிக்கே ஆழ்வாருடைய குணநுஸந்தாநப்ரீதியாலே நெஞ்சுஉடைகுலைப்படாதே ஒருங்கப்பிடித்து நின்று ஏத்தவருளினனென்னுதல். (புத்வா) என்றது-ஸர்வஜ்ஞரானநாரதர் இப்போது விசாரித்துச் சொல்லவேண்டுவதில்லையே; ஆயிருக்கச்செய்தேயும் வால்மீகிபகவாந் பகவத்குணங்களை ஸ்மரிப்பிக்க, அதனாலே வித்தராய்க்கலங்கி விசாரித்துச் சொல்லுகிறேனென்கிறரென்றபடி (புத்வா) விசாரித்து.

குன்றமென்கையாலே ஆகர்ஷகமுமாய் ஸர்வதாதுஸமலங்க்ருதமாய் ஸம்ஸாரபீதர்க்கு அண்டைகொள்ளலாம்படி யிருக்கை யென்றபடி, (வரையிடாத) என்றது-அளவிடவொண்ணுதவென்றபடி.

---

(க) ரா - பா - க -

(என்றுமென்னையிகழ்விலன்) எனக்கு தோஷம் மேலிட்டபோதோடு குணம்மேலிட்டபோதோடுவாசியற என்னையநாதரிக்கிறிலர். (நம்பி என்னையென்று மிகழ்விலன்) அவர் என்னையநாதரிப்பராகில் அவருடைய பூர்த்திநிறம் பெறும்படியென்? (குன்றமித்யாதி) அம்மாடங்களுக்கு சலநமுண்டானாலும் ஆழ்வார் திருவுள்ளம் என்னளவில் சலியாது.

(காண்மினே) இவ்வர்த்தம் உங்களுக்கேறக்காணமாட்டிகோளோ. (காண்மினே) பகவத்குணங்களையாராய்கிற நீங்கள் அத்தைவிட்டு ஆழ்வார் குணங்களை நெஞ்சாலேகாணமாட்டிகோளோ? (காண்மினே) (க) "ஞாநஸ்ய ஸத்ஸ்ய ஸமாநவஸ்ய ஜந்தி—ப்ராப்த முத்தமகுணாநபரித்யஜந்தி" என்றும், (உ) "பாணனார் திண்ணம்" என்றும் சொல்லுகிற ப்ரமாணங்களிலே பார்த்துக் கொள்ளமாட்டிகோளோ?.

ஆறும் பாட்டின் அழகியமணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

(உங்களுக்கேற) என்றது-உங்கள் புத்தியிலேயேறவென்றபடி, இவ்வர்த்தம் உங்களுக்கேற வென்ற கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (பகவத்குணங்களை யாராய்கிறவென்று துடங்கி), (காண்மினே) இதுப்ராத்யக்ஷ மன்றேவென்னுதல், பகவத் குணங்களை யாராய்கையை விட்டுக்காணுங்கோ ளென்னுதல், ப்ரமாணமுகத்தாலே காணுங்கோளென்னுதல். (பாணனார்) ஸர்வநிர்வாஹகர். (திண்ணம்) ஆஶ்ரிதரக்ஷணதார்ட்யம், (சு)

---

(க) (உ) தி - மொ - அ - உ - உ.

மூ:—கண்டு கொண்டென்னைக் காரிமாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றி யருளினன்
எண்டிசையு மறிய வியம்புகேன்
ஒண்டமிழ்ச் சடகோப னருளையே. (எ)

## நஞ்சீயர் வ்யாக்யாநம்.

அவ:—ஏழாம்பாட்டு, என்னுடைய ஸகலப்ரதிபந்தகங்களையும் போக்கின வாழ்வாருடைய நிர்ஹேதுகவிஷயீகாரத்தை ஸுப்ரஸித்தமாக்குவே னென்கிறார்.

வ்யா:—(கண்டுகொண்டென்னை) (க) "இருந்தான்கண்டுகொண்டு" என்று எம்பெருமான் ஆழ்வாரைக்கண்டு கொண்டிருந்தாப்போலே ஆழ்வாருக்கு அலப்யலாபமாகிறபடி; காட்சி இத்தலைக்காகவன்றிக்கே தம்பேறாக விருக்கிறபடி. (காரிமாறப்பிரான்) ஆழ்வார்; (உ) "பிரான் பெருநிலங்கீண்டவன்" என்னுமாபோலே இவரும் காரிமாறப்பிரானென்கிறார்.

(பண்டைவல்வினைபாற்றியருளினன்) ‡ப்ரவாஹமநாதியாகையாலே அடிகாணவல்லாரில்லை; அந்தவத்தாகையாலே அடியுண்டென்று அநுமிக்குமித்தனையிறே; ப்ராயஶ்சித்த விநாஶ்யமன்றுகர்மம், அநுபவவிநாஶ்ய மென்கிற ப்ரமாணத்துக்கு மவ்வருகாய்க் காணுமிருப்பது; கரியகோலதிருவுருக் காண்பனென்னு மத்தையும் தவிர்ப்பித்தாப்போலே காணும் ஆழ்வார்; உத்தேஶ்ய விரோதிபாபமாமித்தனையிறே, "மதிநலமருளினன்" என்றுதலைசீய்த்தார் ஆழ்வார்; இவரும் தமக்கு உபகரித்தவிடத்தை – அருளினனென்கிறார்.

(எண்டிசையுமறிய வியம்புகேன்) விஶேஷஜ்ஞரோடு அவிஶேஷஜ்ஞரோடு வாசியற எல்லாருமறியச் சொல்லுகிறேன். இவ்வுபகாரம நிரவதிகமானாப்போலே திக்குக்களும் நிரவதிகமாகப்பெற்றிலோம்; இது என்னளவிலேபர்யவஸிப்பதே யென்கிறார்.

(ஒண்டமிழ்) ஒள்ளியதமிழ். பெரிய ஆழத்தில் உள்ளுக்கிடந்தபதார்த்தங்களெல்லாம் தரையிலே காணுமாபோலே ‖ அதிக்ருதாதிகாரமாய் அவகாஹிக்கவொண்ணாதே, (உ) "யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" என்னும் விஷயத்தை ஸர்வாதிகாரமாக்குகையாலே ஒண்டமிழென்கிறது.

‡ (பா) ஸம்ஸாரம். (க) தி - வாய் - அ - எ - உ.
(உ) தி - வாய் - க - எ - கூ. (ங) தை - ஆ - கூ.

(சடகோபனருளையே) மாறவறமதிநல மருளினதுக்கு மகப் படாத வென்னையும் ஆழ்வாரங்கீகரித்த வருளைக்கிடீர் சொல்லு கிறது. (எ)

ஏழாம்பாட்டின் நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

## நம்பிள்ளை ஈடு.

ஏழாம்பாட்டு, அவ:—ஆழ்வார்தம்பக்கல் நிர்ஹேதுகமாக விஷயீகரித்த விஷயீகாரத்தைக்கண்டு இத்தை நாட்டாரறியாதே அநர்த்தப் படுகிறபடியைப் பார்த்து இத்தை எல்லாருமறியும்படி கூப்பிடுவே னென்கிறார்.

வ்யா ;—(கண்டுகொண்டு)-கிட்டினவாறே தம்மைப் பெறு கைக்கு எதிர்சூழல்புக்குத் திரிந்தாரிவரென்று தோற்றியிருந்தது, (என்னை) இந்த நிர்ஹேதுகவிஷயீகாரத்தை ப்ரதிபத்திபண்ணவும் மாட்டாதேயிருக்கிற வென்னை, (காரிமாறப்பிரான்) உபகாரஸ்ம் ருதியாலே பிரானென்கிறார் ; காரிமாறனென்கிற விசேஷணத் தாலே ஆழ்வாருக்கு உபகாரகனான ஈஶ்வரனளவிலே போகாமைக் காகச்சொல்லுகிறார்.

(பண்டைவல்வினை) அநாதிகாலம் ஸஞ்சிதமான இதரவிஷய ப்ராவண்ய ஹேதுவான பாபம், ஶாரிப்பணகியைப்போலே வழி யல்லாவழியே பற்றுகைக்கீடானருசி, ப்ரதமாவதியான பகவத் விஷயத்தளவிலேபிறந்த புருஷார்த்தபுத்தி - இவையடங்கலும். (வல்வினை) ப்ராயஶ்சித்தஸாத்யமுமன்றிக்கே அநுபவவிநாஶ்யமு மன்றிக்கேயிருக்கை. (பாற்றியருளினான்) (க) "விஷஸ்யேவ வஹ்ந்யாத்ரிஷ்டவிஷந்தஃ பாபக்ருத்யாம்" என்கிறபடியுமன்றிக்கே உருமாய்ந்துபோம்படி பண்ணினான்.

(எண்டிசையுமறியவியம்புகேன்) விஶேஷஜ்ஞரோடு அவிஶே ஷஜ்ஞரோடு வாசியற ருசியுடையாரெல்லாருமறியும்படி சொல்லு கிறேன். (உ) "தொண்டீரெல்லீரும்வாரீர்" என்னுமாழ்வா ரோட்டைவாஸநையாலே சொல்லுகிறார்.

(ஒண்டமிழ்ச்சடகோபனருளையே) மயர்வறமதிநல மருளின வருள்போலன்று இவருடையவருள், அவ்வருளுக்கும் கூடத்தப் பினவெனக்கருளினவருளிறே. (ஒண்டமிழ்) ஒள்ளியதமிழ்.

ஏழாம்பாட்டின் நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

---

(க) ஶாட்யாயநஶாகை. (உ) தி - வாய் - ரு - உ - உ.

## பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம்.

அவ ;—ஏழாம்பாட்டில், ஆழ்வார்தம்பக்கல் பண்ணினநிர்ஹேதுகவிஷயீகாரத்தைக்கண்டு, இவ்விஷயீகாரத்துக்கு யோக்யதையுண்டாயிருக்க நாட்டாரிழக்கைக்கடி யென்னென்றநுஸந்தித்து, இவருடைய பெருமையை யறியாமையாலே யிழக்கிறார்களென்று எல்லாருமறியும்படி சொல்லக்கடவேனென்கிறார்.

வ்யா :—(கண்கொண்டு) நான்கிட்டினவளவில் ஆழ்வார் திருவுள்ளம் நிதியெடுத்தாப் போலேயிருந்த தென்கிறார். தம்மைப் பெறுகைக்கு எதிர்சூழல்புக்குத்திரிந்தாரிவரென்று தோற்றும்படியிருந்த தென்கிறார். அவருடையக்ருபைக்கு அநுத்தமமான பாத்ரமிறே நான். (என்னை) நாட்டாரிற்காட்டில் ஆழ்வாருக்குண்டான வாசியறியாதவென்னை. தம்முடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தை ப்ரதிபத்திபண்ணவுங்கூடமாட்டாதவென்னை யென்னுமாம்.

(காரிமாறப்பிரான்) ஆழ்வார்தம்பக்கலிலே பண்ணினவுபகா

---

அரு :—ஏழாம்பாட்டு. கீழ்ப்பாட்டில், நின்றுதன்புகழேத்த வருளினானென்று ஆழ்வாருடைய நிர்ஹேதுககடாக்ஷத்தையநுஸந்தித்தவர்,எல்லாருக்குமுண்டாகவேணு மென்று, எண்டிசையு மறியவியம்புகே னென்கையாலே ததநுகுணமாகஸங்கதியருளிச் செய்கிறார் (ஆழ்வார் தம்பக்கலித்யாதி). கண்டுகொண்டென்றதுக்கு-காணாததைக் கணடென்றும், தேடினதைக்கண்டென்றும், இரண்டு தாத்பர்யம். இவ்விரண்டையுமடைவே யருளிச்செய்கிறார் (நான் கிட்டின வித்யாதி வாக்யத்வயத்தாலே),

இப்படி தம்மிடத்திலிருக்கைக்கடி யென்னென்னவருளிச் செய்கிறார் (அவருடைய வித்யாதி), (அநுத்தமம்) யஸ்மாதுத்தமம்நாஸ்தி-ததநுத்தமமென்று பஹுவ்ரீஹி ; தோஷபூயிஷ்டதையாலே தாமே க்ருபைக்கு உத்தமமான பாத்ரமென்றபடி, அறியவியம்புகே னென்ற உத்தமனாலே என்னையென்றது ஸித்தமன்றோ; என்னை யென்று சொல்ல வேணுமோவென்ன, இதுக்கு இரண்டுதாத்பர்ய மருளிச்செய்கிறார் (நாட்டாரித்யாதி வாக்யத்வயத்தாலே).

காரிமாறனென்றால் போராதோ? பிரானென்ன வேண்டுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி), பிரானென்றால் போராதோ; காரிமாற

ரத்தை நினைத்துப பிரானென்கிறார். "காரிமாறப்பிரான்" என்கிற விசேஷணத்தாலே—ஆழ்வாருக்கு உபகாரகனான ஈஶ்வரன்பக்கல் போகாமைக்காக விசேஷிக்கிறார். (க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே அவனுடைய உபகாரகத்வம் ஸர்வஸாதாரணமாயாய்த் திருப்பது. அந்த ஸாமாந்யத்தில் புகாமைக்காக தம்முடைய ஸுஹ்ருத்த்வத்தை விசேஷிக்கிறார்.

(பண்டைவல்வினை) அநாதிகாலம் ஸஞ்சிதமாய் விஷயாந்தர ப்ராவண்ய ஹேதுவானபாபம், ஶூர்ப்பணகையைப் போலே வகுத்தவிஷயத்தைப் பற்றுகைக்கு வழியல்லாவழியே யிழக்கைக் கடியானபாபம், ப்ரதமாவதியான பகவத்விஷயமே புருஷார்த்தமென்கிற புத்திக்கடியானபாபம் இவையாய்த்து-பண்டைவல்வினையாவது; வல்வினை-ப்ராயஶ்சித்தஸாத்யமும் மன்றிக்கே அநுபவ விநாஶ்யமுமன்றிக்கே யிருக்கை.

(பாற்றியருளினான்) (உ) "த்விஷந்தஃ பாபக்ருத்யாம்" என்றும், (ந) "சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" என்றும் சொல்லுகிற ப்ரகாரங்களன்றிக்கே உருமாய்ந்துபோம்படி பண்ணினார், "தன்புகழேத்தவருளினான்" என்கிறபடியே தம்மையே வாய்புலத்தும்படி பண்ணினார்.

---

பதந்தானென்னென்ன வருளிச்செய்கிறார் (காரியித்யாதி). காரியென்று-ஆழ்வார் திருத்தமப்பனார். மாறனென்று-ஆழ்வார் திருநாமம்.

ஶ்ரீமதுரகவிகள் நிஷ்டாநுகுணமாக ப்ரஸித்த பாதகமாத்ரமாகச் சொல்லாதே பின்னையும் உள்ளவற்றை யெல்லாம் கூட்டியருளிச்செய்கிறார் (அநாதீத்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே.)

பாற்றியென்றது-நசிப்பித்தென்றர்த்தமாய், அதைவ்யாவர்த்த்யபூர்வகமாக வருளிச்செய்கிறார் (த்விஷந்த இத்யாதி) பாபக்ருத்யாம்-பாபக்ரியையை; "க்ருத்யாக்ரியாதைவதயோஃ" என்றுநிகண்டு.

அருளினானென்றதுக்கு அர்த்தம் (தன்புகழித்யாதி), எண்டிசையென்ற

---

(க) கீதை - ௫ - உக. (உ) ஶாட்யாயநஶாகை.

(ந) பெரி - தி - ௫ - ச - ந.

(எண்டிசையுமறிய வியம்புகேன்) விசேஷஜ்ஞரோடு அவி
சேஷஜ்ஞரோடு வாசியற எல்லாருமறியும்படிச் சொல்லுகிறேன்.
(க) "தொண்டீரெல்லீரும்வாரீர்" என்னும் ஆழ்வாரோட்டை
வாஸநையாலே சொல்லுகிறார். அவர் பகவத்விஷயத்தில் ருசி
யரலே, அவ்விஷயத்தில் ருசியுடையாரெல்லாரும் வாருங்கோளெ
ன்றார். இவர், ஆழ்வார் பக்கல்ருசியுடையாரெல்லாரும் வாருங்கோ
ளென்கிறார், ஆழ்வார்பக்கல் பாவபந்தத்தாலே.

(ஒண்டமிழ்ச் சடகோபனருளையே) மயர்வற மதிநல மரு
ளினவனுடைய வருள்போலல்ல ஆழ்வாருடையவருள்; அவ்வரு
ளுக்கும் அயலானவளவிலே வாய்ப்பண்ணினவருளிறே.

(ஒண்டமிழ்) ஒள்ளியதமிழ்; அழகியதமிழென்றபடி. பாலேய்
தமிழரிசைகாரர் பத்தர்பரவும்படி திருவாய்மொழிபாடின வரு
ளுக்கு மேலேயிறே என்னை விஷயீகரித்த வருள்.

ஏழாம்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளைவ்யாக்யாநம்
முற்றிற்று.

---

துக்கு - எட்டுத்திக்குக்களென்றாய், அது - மஞ்சா:க்ரோசந்திபோலேதத்ரஸ்த
யரைச்சொல்லுகிறதென்கிறார் (விசேஷேத்யாதி). ஆழ்வாரையநுபவிக்கிற
விவர், பரோபதேசப்ரவ்ருத்தராய், எல்லாரையுமழைக்கிறதென்னென்னவரு
ளிச்செய்கிறார் (தொண்டீரித்யாதி வாக்யத்ரயத்தாலே).

சடகோபனருளென்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகமாகத்தாத்பர்யம் (மயர்வற
வித்யாதி). வ்யாவ்ருத்திதன்னை உபபாதிக்கிறார் (அவ்வருளுக்குமித்யாதி)
(அயலான) அசலான. ஒண்டமிழென்று விசேஷிக்கையாலே திருவாய்
மொழியருளிச்செய்தவருள் தோன்றுகையாலும், சடகோபனருளென்கை
யாலே-பண்டைவல்வினைபாற்றி யருளினவருளைச்சொல்லுகையாலும், இவ்
விரண்டுக்கும் விசேஷத்தைதர்சிப்பிக்கிறார் (பாலேயித்யாதி).

[காரிமாறப்பிரான்-என்னைக்கண்டுகொண்டு பண்டைவல்வினைபாற்றியரு
ளினான். இந்த ஒண்டமிழ்ச்சடகோபனருளை-எண்டிசையுமறியவியம்புகேன்
என்றந்வயம். (எ

பெரியவாச்சான்பிள்ளைவ்யாக்யாநாரும் பதம்முற்றிற்று.

---

(க) தி - வாய் - ங - உ - ரு.

# அழகியமணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யாநம்.

அவ:—ஏழாம்பாட்டு, (கண்டித்யாதி), கீழ்மூன்றும்பாட்டிலே தம்முடைய புன்மையைக்கண்டு பெரியவர்களும் தம்மை யிகழ்ந்தபடி சொல்லி, இவனுக்கு நம்மை யொழிய இனிக்கதி யில்லையென்று, ஆழ்வார் மாதாபிதாவாய்நின்று தம்மளவிலபிமானித்தபடியையும் சொல்லி, அநந்தரம் பாட்டிலே அந்தப் புன்மை தானேது? ஆழ்வார் தம்மை நீர்கிட்டினவழி யென்னென்று கேட்க, அவற்றுக்கு உத்தரம் சொல்லி, கீழிற்பாட்டிலே. இப்போதுகைக் கொண்டவாழ்வார் உம்முடைய குற்றங்கண்டு இன்னும் இகழில் செய்வதென்னென்ன, இன்றுதொடங்கி காலதத்வமுள்ளதனையும் என்னையிகழாதே தம்முடைய குணஸ்துதியே காலயாத்ரையாம் படி பண்ணினர். ஆனபின்பு என்குற்றம் மேலிடுமோ? மேலிட்டாலும் பரிபூர்ணரானவவர் என்னைநெகிழப்புகுகிறரோவென்றார்.

இதில்—ஆழ்வார் என்னையங்கீகரிக்கிறபோதே என்னுடைய துர்க்கதிகண்டு, இவன்பக்கல் இவைகிட்டக்கடவதல்ல, என்று பழையதாய் வலியதான பாபங்களைப் பாறிப்போம்படி பண்ணி பண்ணின க்ருபைபண்ணிற்று, இனிஇவற்றுக்கு † உயிருண்டோ வென்று கீழுக்கத்தைப் பரிஹரித்துக்கொண்டு, "தன்புகழேத் தவருளினன்" என்று ஆழ்வாருடையக்ருபை மேலேப்ரஸ்துத மாகையாலே அவருடைய க்ருபாப்ரபாவத்தை திகந்தாங்கள் தோறும் வெளியிடக்கடவே னென்கிறார். (க) "ம-ஶ-ஶஓவு காலயெநிதழ் - துரும்ப்ரகாலயேந்நித்யம்" என்கிற வித்த்ய நுஷ்டாநம் பண்ணக்கடவே னென்கிறார்.

இனி ஆழ்வாருக்கு பகவத்விஷயத்திலே பரத்வபுத்தி, தேவதாந்தரங்களில் பரத்வபுத்தி நிவ்ருத்தி. அப்பரவஸ்துவின்பக்கல்

அரு;-ஏழாம்பாட்டு :-(கண்டித்யாதி), (அநந்தரம் பாட்டிலே) என்றது;- அநந்தரமான பாட்டாலே யென்றபடி; ஆழ்வாருடைய குணங்களெல்லாம் கிடக்க க்ருபையைக் கொண்டாடுகிற தென்னென்ன, எல்லாகுணங்களிலும் க்ருபையே அதிஶயித்திருக்கையாலே அவர் க்ருபாகுணத்தையே கொண்டாடு கிறரென்கிறார் (இனி ஆழ்வாருக்கு பகவத்விஷயத்திலே பரத்வபுத்தியென்று

(க) † ஸந்தி . க்தம்

ததீயஶேஷத்வ பர்யந்தையான ஶேஷத்வபுத்தி, விஷயாந்தர விரக்தி, பகவத்விஷயத்தை விஶ்லேஷிக்கில் தரைப்படும்படியான ப்ராவண்யாதிஶயம், அவன் கைவிடில் தமக்குப்புறம்புபோக்கில்லை யென்னும்படியான விஶ்வாஸாதிசயம், ஸம்ஸாரபீதி, புருஷார்த்த லாபத்தில் அதிஶயிதத்வரை, அர்ச்சாவதாரங்களிலுண்டான ப்ராவண்யமென்றுப்போலே சொல்லுகிற வாத்மகுணங்களிற்காட்டில் (க) "வீடுமின்முற்றவும்" என்று தொடங்கி *(உ) கண்ணன் கழலிணை யீறாக பலவிடங்களிலும் ஸம்ஸாரிசேதநருடைய துர்க்கதிகண்டு பொறுக்கமாட்டாமே உபதேசிக்கைக்கடி க்ருபையாகையாலே அந்தக்ருபாப்ரபாவத்தை யநுஸந்தித்து அத்தையெல்லாருமறியும்படி வெளியிடக்கடவேனென்கிறார், ஈஶ்வரன் நிரதிஶயக்ருபாவானாயிருந்தானேயாகிலும் ஸ்வாதந்த்ர்ய விஶிஷ்டனாகையாலே தோஷதர்ஶநத்தாலே உபேக்ஷிப்பது மொருபுடையுண்டு, ஆழ்வார் அப்படியன்றிக்கே பற்றினாரையிகழாதவராயிற்று.

வ்யா:—(கண்டுகொண்டித்யாதி), "எம்பிரான்நின்று தன்புகழேத்தவருளினான்" என்று இவர் சொல்லக்கேட்டவர்கள் நீரேத்துகிறபடி தானெதென்ன, ஆழ்வாருடைய க்ருபையையன்றோ வென்கிறார்.

ஆழ்வாருக்கு, ஜ்ஞாநம் பக்தி விரக்தி க்ருபையென்று சில குணங்களுண்டு, அதில் ஜ்ஞாநம், சிதசிதீஶ்வரரூபமான தத்வத்ரயவிஷயமாயிருக்கும், பக்தி-ஈஶ்வரைகவிஷயமாயிருக்கும், த்யா

---

தொடங்கி), ஈஶ்வரனுடைய க்ருபையைப் பற்ற ஆழ்வாருடைய க்ருபைக்கு அதிஶயமேதென்ன வருளிச்செய்கிறார் (ஈஶ்வரன் நிரதிஶய க்ருபாவானாயிருந்தானேயாகிலு மென்றுதொடங்கி).

அந்தக்ருபாப்ரபாவத்தை யநுஸந்தித்து அத்தை யெல்லாருமறியும்படி வெளியிடக்கடவேனென்கிறார். அன்றிக்கே ஶப்ரஶ்நம்பண்ண வருளிச்செய்கிறாராகவுமாம் (எம்பிரான் நின்று தன்புகழேத்த வருளினனென்றுதொடங்கி).

ஆழ்வாருடைய ஜ்ஞாநபக்தி வைராக்யங்களைக் கொண்டாடவேண்டியிருக்க, அவற்றைவிட்டு க்ருபையைக் கொண்டாடுகைக்கு க்ருபாகுணத்துக்கு அதிஶயமுண்டென்றருளிச் செய்கிறார் (ஆழ்வாருக்கு ஜ்ஞாநம் பக்தி விரக்தி க்ருபையென்று சில குணங்களுண்டென்று தொடங்கி) (தத்வத்வயமென்றது) ஆத்மாநுபவமும், ஐஶ்வர்யமும்.

---

(க) தி - வாய் - க - உ - க. (உ) தி - வாய் - க0 - ரு - க.

ஜ்யோபாதேயவிவேக விஷயமாயிருக்கும் ஜ்ஞாநம், உபாதேயைக விஷயம்பக்தி. த்யாஜ்யைகவிஷயம்விரக்தி; க்ருபை-துர்கதவிஷயமாயிருக்கும்; அதில் ஜ்ஞாநம்-தத்வஜ்ஞாநம், ஸாக்ஷாத்காரஜ்ஞாநம்; அதில் பகவத் ஸ்வரூபவிஷயம், குணவிஷயம், விபூதிவிஷயம், விக்ரஹவிஷயமென்றுப்போலே பலகப்புக்களை யுடைத்தாயிருக்கும், பக்தியும்-(க) "காதல் கடல்புரையவிளைவித்த" (உ) "காதல் கடலின் மிகப்பெரிதால்" (ங) "மண்திணி ஞாலமுமேழ்கடலும் நீள்விசும்பும் கழியப்பெரிதால்" (ச) "அதனில்பெரிய வென்னவா" என்னும்படி அநேகபர்வையாயிருக்கும்; விரக்தியும்-ப்ரக்ருதிப்ராக்ருதவிரக்தி, தேவதாந்தர விரக்தி, தேவதாந்தரபரர் பக்கல்விரக்தி, ஶப்தாதிவிஷயவிரக்தி, ஆத்மாநுபவவிரக்தி, பகவதநுபவத்தில் எனக்கென்னுமதில்விரக்தி, இப்படி பஹுவிதையாயிருக்கும்.

இவையெல்லாவற்றிலும் விஞ்சியாய்த்து க்ருபாகுணமிருப்பது; ஈஶ்வரனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகளும் ஸம்ஸாரிகளுடைய ரக்ஷணஶேஷமாகாமல் பாதநஶேஷமாக அவற்றை ரக்ஷணத்திலே புரிப்பித்துத்தருவது க்ருபையாய்த்து, அந்த வீஶ்வரக்ருபையிற்காட்டில் ஆழ்வார்க்ருபையினுடைய தன்னேற்றத்தை இப்பாட்டாலே யருளிச்செய்கிறுர்.

---

அன்றிக்கே, ப்ரக்ருதிப்ராக்ருதங்கள்; ஆத்மாவில்ஸ்வபோக்த்ருத்வம்; கீழருளிச்செய்த வாக்யத்ரயத்தையும் விவரிக்கிறுர் (த்யாஜ்யோபாதேய விவேக விஷயம் ஜ்ஞாநமென்று துடங்கி) பகவத்விஷய ஜ்ஞாநந்தான்-தத்வஞாநமென்றும், ஸாக்ஷாத்காரஜ்ஞாந மென்றும் த்விவிதமாயிருக்கும், தத்வஞாந மென்றது-ஶாஸ்த்ரஜந்யஜ்ஞநம், ஸாக்ஷாத்காரஜ்ஞானமாவது - ப்ரத்யக்ஷஸமாநாகாரமான மாநஸஸாக்ஷாத்காரமென்னுதல், முக்ததசையில் ஸாக்ஷாத்காரமென்னுதல்; இந்த ஸாக்ஷாத்கார ஜ்ஞாநந்தான்-விஷயபேதே நபேதித்திருக்கு மென்றருளிச் செய்கிறுர். (அதில்பகவத்ஸ்வரூபவிஷய மென்றுதுடங்கி), (கப்புக்கள்) பர்வங்கள் (ப்ரக்ருதி) என்று-ஶரீரம், (ப்ராக்ருதங்கள்) என்று-ப்ராக்ருத பந்துக்களைச் சொல்லுகிறது, (பாதநம்) என்றது-பாதை.

---

(க) தி - வாய் - ரு - ங - ச. (உ) தி - வாய் - எ - ங - ரு.
(ங) தி - வாய் - எ - ங - அ. (ச) தி - வாய் - கO - கO - கO.

(கண்டுகொண்டென்னை) தம்முடைய துர்க்கதியைச் சொல்லு கிறார். (என்னைக்கண்டு) ஸத்துக்களாலே அஸமீக்ஷ்யனான வென் னைக்கூசாதே கடாக்ஷித்து (என்னைக்கண்டு) இவருடைய (க) "யஂவஶ்ய‍்யஂபஶ்யேத்" என்கிறப்ரதம கடாக்ஷமிருக்கிற படி, (கொண்டு) தோஷம்பட்டவாறே காற்கடைக் கொள்ளாதே கைக்கொண்டார். (என்னைக்கண்டு, என்னைக்கொண்டு) பார்க்க வொண்ணாத வென்னைப்பார்த்தார். எல்லாருங்கைவிட்ட வென்னைக் கைக்கொண்டார். இவர் ஸ்வீகரித்தால் அவனாலும் விடப்போகாதே.

(காரிமாறப்பிரான்) (உ) என்னைக்கொண்டென் பாவந்தன்னை யும் பாறக்கைத்தெமரேழெழுபிறப்பும் மேவும் தன்மையுமாக்கின வாழ்வாருடைய பிரானன்று,(காரிமாறப்பிரான்) அவனைப்போலே தான் றோன்றியான பிரானன்று, அபிஜாதரானவாழ்வார். (காரி மாறப்பிரான்) அக்குடியிலே பிறந்து எனக்கு உபகரித்தவர், (காரி மாறப்பிரான்) தான் பிறந்து என்பிறவியை யறுத்தவர்.

(பண்டைவல்வினை பாற்றியருளினான்) (பண்டைவல்வினை) ஸ்வரூபாநுபந்தியோ வென்னும்படி இவ்வாத்மாவோடே பழகிப் போந்தபாபம். அநாதிஸித்தமுமாய் அநுபவவிநாஶ்யமுமல்லாத

---

என்னையென்றதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (தம்முடைய துர்க் கதியைச் சொல்லுகிறாரென்று) ; (தோஷம் பட்டவாறே) என்றது தோஷம் நெஞ்சிலே பட்டவாறே யென்றபடி, என்னைக்கண்டு, என்னைக்கொண்டு, என்று-என்னையென்ற பதத்தை இரண்டிடத்திலும் கூட்டிமுன்பருளிச் செய் தவர்த்தத்தையே விவரிக்கிறார் (பார்க்கவொண்ணாதவென்னையென்று துடங்கி), இவர்கைக்கொண்டாலும் ஈஶ்வரனுபேக்ஷித்தாலோவென்ன வருளிச் செய்கி றார் (இவர்ஸ்வீகரித்தாலென்று துடங்கி.)

மாறப்பிரானென்கையாலே ஆழ்வாருடைய பிரானான ஈஶ்வரனைவ்யா வர்த்திக்கிறது, காரிமாறனென்கையாலே ஆபிஜாத்யம் சொல்லுகிறது. பண் டைவல்வினையென்கிற பதத்வயார்த்தத்தையும் கூட்டியருளிச் செய்கிறார் (அநாதிஸித்தமுமாயென்று துடங்கி), மோக்ஷவிஷயாமியாவது-பாபத்தில் நின்

---

(க) . . . . . . (உ) தி - வாய் - உ - எ.

பாபம், (வல்வினை) ஸர்வபூதஸுஹ்ருத்தான வீஸ்வரன் ஸௌஹார்த்தத்தைப் பொகட்டு (க) "க்ஷிபாமி - க்ஷிபாமி" என்னும்படியானபாபம், (வல்வினை) ஆழ்வார் ஒரு கடாக்ஷம் நேரவேண்டும்படியான பாபம்.

(பாற்றி) அத்தைப்பாறப்பண்ணி, ஈஸ்வரனைப்போலே * மோக்ஷயிஷ்யாமிபண்ணி விடுகையன்றிக்கே பாறு பாறும்படி பண்ணினார். எந்தத் தூற்றிலே புக்கதென்று தேடும்படி பாற்றினார். (என்னைக்கொண்டு - பண்டைவல்வினை பாற்றியருளினான்) ஈஸ்வரனைப்போலே (உ) "மாமேகம் ஶரணம் வ்ரஜ-மோக்ஷயிஷ்யாமி மாமேகம்ஶரணம்வ்ரஜ - மோக்ஷயிஷ்யாமி" என்கையன்றிக்கே தாமே என்னை ஸ்வீகரித்து, என்பாபபந்தத்தையும் பாற்றியருளினார்.

(அருளினான்) தம்முடைய புகழையேத்தும்படி யருளினார். விரோதி நிவ்ருத்தியையும்பண்ணி அபிமதப்ரதாநமும் பண்ணினார். (பண்டைவல்வினை பாற்றியருளினான்) அநாதிஸித்தமான பாபத்தைப் போக்கி, தம்முடைய குணஸ்துதியே எனக்கு யாத்ரையாம்படி பண்ணினார்.

(எண்டிசையுமித்யாதி) ஸ்வரக்ஷணத்திலே தத்பராயிருப்பாரும், தேவதாந்தரங்கள் ரக்ஷகமென்றிருப்பாருமான கோஷ்டிகளிலேசென்று ஆழ்வாருடைய க்ருபையை வெளியிடக்கடவேன். எண்டிசையுமென்று-பத்துதிக்குக்குமுபலக்ஷணம். மேலேறமாட்டாமலும் கீழிழியமாட்டாமலும் எண்டிசையுமென்கிறார்; ஆழ்வாருடைய வருளுண்டாகையாலே அதঃ பதநமில்லை. ஆழ்வார் போனாலல்லது போகாதவராகையாலே மேலேறமாட்டார்.

---

றும்விடுவித்த வித்தனையொழிய பாபத்தைப்பொடி பண்ணவில்லையென்றபடி (பாறுபாறும்படி) என்றது-தூளிதூளியாம்படி யென்றபடி, அருளினனென்கையால் தம்முடைய குணஸ்துதியே எனக்குயாத்ரையாம்படி பண்ணினாரென்றபடி.

எண்டிசையுமென்றதுக்கு கீழும் மேலுமுண்டான எல்லாலோகங்களுமுபலக்ஷணமாகவுமாம்; அன்றிக்கே, எட்டுத்திக்குமாத்ரமாய், கீழ்மேல் சொல்லாமைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மேலேறமாட்டாமலுமென்று துடங்கி,)

---

(க) கீதை - ௧௬ - ௧௯. (உ) கீதை - ௧௮ - ௬௬.

(அறியவியம்புகேன்) (க) "நாடுநகரமும் நன்கறிய" என்னு மாபோலே எல்லாருமறியும்படியாக, (இயம்புகேன்) ஆழ்வாருடைய க்ருபாப்ரபாவத்தையும், அது தம்மளவிலே பலித்தபடியையும், தம்முடையபாபம் போனபடியையும், தமக்கு அபிமதலாபமுண்டானபடியையும், இவையாயிருந்தது - இவர் இயம்புகிறது.

(ஒண்டமிழ்ச்சடகோபன்) என்னளவில்பண்ணுமுபகாரத்தையோநானியம்புவது; லோகத்தாருக்கு அவர் பண்ணின வுபகாரத்தையும் சொல்லியன்றோ, கருணையாலே என்னைத்திருத்தினபடியும், கவிபாடி லோகத்தைத் திருத்தினபடியையும் இயம்புவேன். (சடகோபனருளை, (உ) "அறியச்சொன்னவாயிரம்." என்கிறபடியே திருவாய்மொழியைப்பாடி ஸம்ஸாரிகளுடைய ஶாட்யத்தைப்போக்கினவருடைய க்ருபையை.

(என்டிசையுமறிய வியம்புகேன்) (ந) "ஜெவாஸ்ஸ்வஸ்தாந ஊயாஷி ஜெதூஸவெல் ஹதாமதா: । நஹயம்விதூ ஜெகிம்விஜிதம் ஹமவதாஜமத் — தேவாஸ் ஸ்வஸ்தாநமாயாந்தி தைத்யாஸ்ஸர்வேஹதாகதா:। நபயம்வித்யதேகிஞ்சித் ஜிதம்பகவதாஜகத்" என்று ஸ்ரீஜாப்பவந் மஹாராஜர் த்ரைவிக்ரமப்ரஶம்ஸையைச் சாற்றிக்கொண்டு திரிந்தாப்போலே; அங்கு ஈஶ்வரனுடைய ஶக்திப்ரபாவம்; இங்கு - ஆழ்வாருடைய க்ருபாப்ரபாவம். அங்கு ப்ரயோஜநாந்தரபரர்வாழ்ந்தபடி, இங்கு அநந்யப்ரயோஜநர்வாழ்ந்தபடி, அங்கு - க்ருத்ரிமவ்யாபாரம். இங்கு - அக்ருத்ரிமவ்யாபாரம். இனிபதக்ரமத்தாலே திரித்தினபடிக்கு ஸாம்யமுண்டாகில் உண்டத்தனை. (எ)

மேலும் கீழும்போகமாட்டாமைக்கு ஹேது அருளிச்செய்கிறார். (ஆழ்வாருடையவருளுண்டாகையாலே யென்றுதுடங்கி), அங்கு பதக்ரமமென்றது-திருவடிகள் வைப்பு, இங்குபதக்ரமமென்றது - திருவாய் மொழியில்பதங்களினுடைய க்ரமங்கள், அன்றிக்கே, மேவினேனவன் பொன்னடியென்றும், மத்தகத்தில் தன்தாளென்றும் சொல்லுகிறபடியே திருவடிகள் வைப்பாகவுமாம்.(எ)

ஏழாம்பாட்டின் அழகியமணவாளப்பெருமாள் நாயனர் வ்யாக்யாநாரும்பதம் முற்றிற்று.

(க) திருப்பல்லாண்டு. (உ) தி - வாய் -
(ந)

மூ :—அருள்கொண்டாடு மடியவரின்புற
அருளினனவ் வருமறையின்பொருள்
அருள்கொண்டாயிர மின்தமிழ்ப்பாடினன்
அருள்கண்டீரிவ்வுலகினில் மிக்கதே. (அ)

---

## நஞ்ஜீயர் வ்யாக்யாநம்.

அவ ;—எட்டாம்பாட்டு, வேதரஹஸ்யத்தை வெளியிட்டஸர்வேஶ்வரன் க்ருபையைக்காட்டில் திருவாய் மொழியையருளிச்செய்த ஆழ்வாருடைய க்ருபை ஜகத்துக்குமிக்கதென்கிறார்.

வ்யா :—(அருளித்யாதி), ஶேஷபூதனுக்கு ஆநந்திக்கையேஸ்வரூபம், ஶேஷபூதராகையும் ஹ்ருஷ்டராகையும் வேறில்லைகாணும்; இவனருளை யநுஸந்தித்து, (க) "ஹ்ருஷ்டா:-ஹ்ருஷ்டா:" என்கிறபடியே ஹ்ருஷ்டராமித்தனை.

(அருளினன வ்வருமறையின்பொருள்) பரமரஹஸ்யமானவேதார்த்தத்தை நிர்ஹேதுகமாகத் தன்பக்கலாஶாலேஶமுடையார் வாழும்படி கீதோபநிஷதாசார்யனாய் நின்றுவெளியிட்டான். வேதங்கள் மறைத்தவர்த்தத்தை கீதோதாத்தனுகையாலே ப்ரகாஶிப்பித்தான்.

(அருள்கொண்டாயிர மின்தமிழ்பாடினன்) ஆழ்வாருக்குத் திருவாய்மொழிக்குள்ளுரைபோலே காணுமருளிச்செய்தது. இருவருக்கும் முழுநோக்காகப் பெற்றால் ஆழ்வாருக்குச் செய்யப்போகாததில்லையாகாதே. வேதாதிகாரிகளுக்கு உஜ்ஜீவநமாம்படி எம்பெருமான்செய்தது, அநதிகாரிகளும் க்ருதார்த்தராம்படியிறே ஆழ்வாரருளிச்செய்தது.

(அருள்கண்டீரிவ் வுலகினில்மிக்கதே) எம்பெருமானருளினது ப்ராதேஶிகம் ; ஆழ்வாரருள் ஸார்வத்ரிகம் ; (உ) "பாலேய் தமிழரிசைகாரர்பத்தர்பாவுமாயிரம்" என்றும்(ங) "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்" என்றுமிறே சொல்லிற்று.

எட்டாம்பாட்டின் நஞ்சீயர் வ்யாக்யாநம்
முற்றிற்று.

---

(க) பார. (உ) தி - வாய் - க - ௫ - கக.
(ங) தி - வாய் - ௯ - ச - ௯.

## நம்பிள்ளை ஈடு.

அவ ;—எட்டாம்பாட்டு, " எண்டிசையுமறிய வியம்புகேன் " என்கைக்கடி - ஆழ்வாருடைய அருள் கொண்டாடுமருள் சிதசிதீஸ்வரதத்வத்ரயங்களையும் கபளீகரித்திருக்கையாலென்கிறார்.

வ்யா ;—(அருள்கொண்டாடுமடியவர்) இவ்வாழ்வார் தம்மைப் போலேயிருக்குமவர்கள்; (௧) " அதுவுமவனதின்னருள் " என்றும் (௨) " அருள்பெறுவாரடியார் " என்றும் இங்ஙனேயிறே இவர் தாமுமருளிச்செய்வது, அப்படியிருக்குமவர்கள். (இன்புற) (௩) " எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்ப " என்கிறபடியே ஆநந்தநிர்ப்பரராக.

(அருளினானவ் வருமறையின் பொருள்) ப்ரமாண ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. (அருமறை) அவன்றன்னைப்பெறிலும் பெறுதற்கரிதாயிருக்கை (௪) வபாஹஸ்ரீ ... தாஸ்தா—ஸாஹஸ்ரீரம்ருதாஸதாம்" என்கிறபடியே வேதார்த்தத்தை யருளிச் செய்தார்.

(அருள்கொண்டு) இவர்தாம் கைவந்தபடிபாடினாரல்லர். (௫) " மயர்வற மதிநலமருளினன் " என்கிறபடியே, பகவத் ப்ரஸாதத்தை முதலாகக்கொண்டாய்த்து இவர் கவிபாடிற்று, இவர்தாம் கவிபாடாநிற்கச் செய்தே (௬) " என்னாகியே தப்புதலின்றித்தன்னைக் கவிதான்சொல்லி " என்கிறபடியே பிறரோபாதிதாமும் விஸ்மயப்படும்படி நிரவத்யமாகவிறே கவிபாடுவித்துக்கொண்டபடி, (ஆயிரமின்தமிழ்ப்பாடினான்) (௭) " ... —சதுர்விம்ஸத்ஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷி: " என்றாப்போலே ஆயிரமாகவாயிற்றுப் பாடிற்று,

(இன்தமிழ்பாடினான்) (௮) " ... —பாட்யேகேயேசமதுரம் " என்கிறபடியே இனிதாய்த்ரவகாஹமான வர்த்தத்தைச் சொல்லாநிற்கச் செய்தேயும், ஶப்தம் அதிக்ருதாதிகாரமின்றிக்கே ஸர்வாதிகாரமாம்படியும்பாடினார்.

(பாடினானருள்கண்டீர்) மயர்வற மதிநல மருளினவருள் போலன்றிக்கே அது தன்னைவிளாக்குலைகொண்டாய்த்திருப்பது, (இவ்வுலகினில் மிக்கதே) சிதசிதீஶ்வரதத்வத்ரயங்களையும் கபளீகரித்திருக்கை. (௮)

எட்டாம்பாட்டின் நம்பிள்ளை ஈடு

முற்றிற்று.

அவ :—எட்டாம்பாட்டில், "எண்டிசையுமறிய வியம்புகேன்" என்கைக்கு ஹேது வென்னென்னில், ஆழ்வாருடையவருள் சிதசிதீச்வர தத்வத்ரயங்களையும் கபளீகரித் திருக்கையாலே யென்கிறார்.

வ்யா ;—(அருள்கொண்டாடு மடியவர்) இவ்வாழ்வார் தம்மைப்போலே யிருக்குமவர்கள், (க) "அதுவுமவனதின்னருள்" என்றும், (உ) "அருள்பெறுவாரடியார் தம்மடியன்" என்றிருக்கும் வர்தம்மைப்போலே (ங) "ஆணைக்கன்றருளையீந்த" என்றும் (ச) "நின்னோடுமொக்க வழிப்படவருளினாய்" என்றும் (ரு) "அருள்புரிந்தசிந்தை" என்றும், (சு) "நின்னருளே புரிந்திருந்தேன்" என்றும் (எ)"அருளாதொழியுமே" என்றும் இப்படிகளால் அவனருளைக் கொண்டாடுமவர்கள், இப்படி பகவத்ப்ரஸாதத்தையே கொண்டாடிப்போருமவர்கள்.

பகவத்ப்ரஸாதமே ஹேதுவாக ஸ்வகதமான கர்மஜ்ஞாந பக்திகளை உபாயமாக ஆதரிக்குமவர்களன்றிக்கே கேவலபகவத் ப்ரஸாதமே உஜ்ஜீவநஹேது வென்றிருக்குமவர்கள்; தந்தாம் பக்கலுள்ள ஆநுகூல்யங்களை பகவத் ப்ரஸாதபலமாக நினைத்திருக்குமதொழிய, ப்ரஸாதகமாக நினைத்திராதவர்கள். இவர் இப்படி நினைத்திருக்

அரு;—எட்டாம் பாட்டு. (அருளித்யாதி). (ஹேது வென்னென்னி லென்றது) எல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி சொல்லுகைக்கு ஹேதுவானவருளுடைய வதிசயமென்னென்னி லென்றபடி (கபளீகரித்திருக்கையாலே) என்ற வநந்தரம் "இயம்புகேன்" என்று சேஷம்; அருள்கபளீ கரித்திருக்கையாவது - தன்னதிசயத்தாலே தத்வத்ரயத்தையும் விஞ்சியிருக்கை.

இவ்வாழ்வாரும் மற்றவர்களும் அருளைக்கொண்டாடினார் களோவென்ன வருளிச்செய்கிறார் (அதுவுமவனதித்யாதி) அருளைக்கொண்டாடுகைக்கு ஹேதுவேதென்ன வருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி).

இவர்கள்பக்கல் ஆநுகூல்யாதிகளிருக்க, பகவத் ப்ரஸாதமே உஜ்ஜீவநகாரமாகக் கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (தந்தாமித்யாதி). அருள்கொண்

(க) தி - வாய் - அ - அ - ங. (உ) தி - வாய் - ௧௦ - சு - க.
(ங) திருமாலை - சசு. (ச) திருமாலை சஉ.
(ரு) உ - திருவ - ருசு. (சு) பெரி - திரு - ரு - ச க.
(எ) ங - திருவ - கசு.

மற்றையாழ்வார்களையிறே. (க) "ஆழியானருளே" என்றும், (உ) "நின்னருளே புரிந்திருந்தேன்." என்னுமதிறே அவர்கள் பாசுரங்கள்.

(இன்புற) ஆநந்தநிர்ப்பராராக. (ங) "எண்ணுதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்ப" என்கிறபடியே ஸாதநத்திலந்வயமின்றிக்கேபகவத்நுபவமே யாத்ரையாயிருக்கும்படியாக.

(அருளினனவ் வருமறையின் பொருள்; (அவ்வருமறை) ப்ரஸித்தமாய், பெறுதற் கரிதாயிருக்கிறமறை; அதாகிறது-வேதரஹஸ்யமான உபநிஷத்திறே, (அவ்வருமறையின் பொருளை-அருளினன்) நித்யஸத்வஸ்த்தர்க்கல்லது தோற்றாதஉபநிஷதர்த்தத்தையருளிச்செய்தார். பரமஸாத்விகர்க்கு நித்யமான வைஸ்வர்யம் உபநிஷத்ரஹஸ்யமிறே (ச) "ஸாஹிஸ்ரீரம்ருதாஸதாம்-ஸாஹி ஸ்ரீரம்ருதாஸதாம்" என்னக்கடவதிறே. அதாவது-(ந) "ஸவ-

---

டாடுமடியவர் ஆழ்வார்களேயாக வேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (இவரித்யாதி). இதுக்குநியாமகமேதென்ன வருளிச்செய்கிறார் (ஆழியானித்யாதி).

பதார்த்தமருளிச்செய்து தாத்பர்யார்த்த மருளிச்செய்கிறார் (எண்ணுதனகளித்யாதி), (எண்ணுதனகள்) அஸங்க்யேயகல்யாணகுணங்கள், ஸாகல்யாநிவேஷதம்பண்ணுகிற இப்ப்ரபந்தத்தை யநுஸந்திக்கவே அவர்களுக்குண்டான வத்யவஸாயம் ஸுஸ்திரமாமென்று இவ்வாக் யத்துக்குத் தாத்பர்யம்.

மறையின்பொருளென்றதுக்குத் தாத்பர்யம் (நித்யேத்யாதி), அருளினனென்கைக்கு அதினுடைய சீர்மையே தென்னவருளிச்செய்கிறார் (பரமேத்யாதி), உபநிஷத்ரஹஸ்யம் சீரியதென்னுமதுக்கு ப்ரமாணம்காட்டுகிறார் (ஸாஹீத்யாதி) "ஸா" என்றுஸ்த்ரீயைச் சொன்னாலும் அதுக்குஸ்த்ரீத்வம் ததர்த்தத்வாராவென்றுகருத்து; ஸத்வநிஷ்டர்க்குத்தோற்றுகிற வர்த்தமே தென்னவரு

---

(க) தி-மொ-க-க. (உ) பெரி-திரு-ரு-ச.
(ங) தி-வாய்-கo-எ-ரு. (ச) யஜு-அஷ்-ங-எ.

ரஸஃ-ஸர்வரஸஃ" என்றும் (க) "ரஸோவைஸஃ-ரஸோ வைஸஃ" என்றும் சொல்லுகிற விஷயத்தின் தத்ப்ரஸாதத்தாலே லபிக்கை. (உ) "ஏஷஹ்யேவாநந்தயாதி - ஏஷஹ்யேவாநந்தயாதி" என்றும், (௩) "தத்தேதுவ்யபதேஸாச்ச-தத்தேதுவ்யபதேஸாச்ச" என்றும் சொல்லக்கடவதிறே.

(அருள்கொண்டாயிரமின்தமிழ்பாடினான்) இவர் தாம் ஸ்வபுத்தியாலே யருளிச்செய்தாரன்று, (௪) "மயர்வற மதிநலமருளினன்" என்கிறபடியே ப்ரஸாதலப்தஜ்ஞாநத்தை முதலாகக் கொண்டு தத்ப்ரேரிதராய்க்கொண்டாயிற்று அருளிச்செய்தது. (௫) "என்னாகியே தப்புதலின்றித்தனக்கவிதான் சொல்லி" என்கிறபடியே பிறரோபாதி கவிபாடுகிறதாமும் விஸ்மிதராம்படி நிரவத்யமாகவிறே கவிபாடுவித்துக்கொண்டது.

(ஆயிரமின்தமிழ்பாடினான்) (௬) "சதுர்விம்ஸத்ஸஹஸ்ராணி ஸ்லோகாநாமுக்தவாந்ருஷிஃ - சதுர்விம்ஸத்ஸஹஸ்ராணி ஸ்லோகாநாமுக்தவாந் ருஷிஃ" என்றாப்போலே ஆயிரமாகவாய்த்துப் பாடிற்று; ஓராத்மாவின் ஹிதாம்ஸத்துக்கு ஒருபாட்டே யமையும்படியிறே இவர் பாடிற்று. (இன்தமிழ்பாடினான்) த்ராவகாஹ

---

ளிச்செய்கிறார் (அதாவதித்யாதி) உக்தார்த்தே ப்ரமாணம் (ஏஷஇத்யாதி), பகவதஃ ஆநந்தஹேதுத்வேந ஆநந்தயதீதிவ்யபதேஸாச்சேதி ஸூத்ரார்த்தம்.

அருமறையின் பொருளை யருளினப்ரகாரமே தென்னுமாகாங்க்ஷையிலே, "அருள்கொண்டு" என்றருளிச் செய்தாரென்று திருவுள்ளம்பற்றி வ்யாவர்த்ய பூர்வகமாக பகவத்க்ருபைமூலமென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவரித்யாதி), அவனேப்ரேரித்தானென்னவருளிச்செய்கிறார் (என்னாகியே யித்யாதி).

அநந்தமான வேதார்த்தத்தை ஸங்க்ரஹித்து ஸஹஸ்ரஸங்க்யை யாகப்ரஸங்கீகரித் தாருண்டோ வென்னவருளிச் செய்கிறார் (சதுர்விம்ஸதித்யாதி), ஸ்ரீராமாயணத்தோடொஸமமாக இருபத்து நாலாயிரமாகப்பாடாதே, ஆயிரமாகப் பாடுவானென்னென்னவருளிச் செய்கிறார் (ஓராத்மாவுக்கித்யாதி).

---

(க) தை - ஆநந்தவல்லி. (உ) தை - ஆந-
(௩) ப்ரஹ்மஸூத்ரம். (௪) தி - வாய் - க - க - க.
(௫) தி - வாய் - எ - ௯ - ௪. (௬) ரா - பால - ௪ - உ.

மான வர்த்தத்தை (க) "வாமெஹ மெவெவ ஊயஹாஜீபாட்யே கேயே சமதுரம்" என்கிறபடியே ரஸகநமாகவும் ஸர்வாதிகாரமாம் படியாகவும் பாடினர்.

(பாடினனருள் கண்டீர்) (உ) "மயர்வற மதிநலமருளினன்" என்னும்படி அருளவல்லவருள் தன்னையும் விளாக்குலை கொண்டிருக்குமருளிறே ஆழ்வாருள்; ஈஸ்வரன் கைவிட்டவாத்மாக்களையும், அவர்களுடைய துர்க்கதியைக்கண்டு திருத்தவொருப்பட்டபடியாலே இவருள் ப்ரத்யக்ஷமன்றோ வென்கை.

(இவ்வுலகினில் மிக்கதே) சிதசிதீஸ்வர தத்வத்ரயத்தையும் கடாக்ஷித்திருக்கை. (ங) "அதனில் பெரிய வென்னவா" என்று பகவத்விஷயத்தில் தமக்குண்டான வபிநிவேஸத்தளவும் போருமாய்த்து என்னளவில் க்ருபையும்.

எட்டாம்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம்

முற்றிற்று.

---

சடகோபனருளென்றுப்போலே, பாடினனருளென்றதுக்கு ஹார்த்ததாத்பர்யம் (மயர்வற வித்யாதி), கண்டீரென்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஈஸ்வரனித்யாதி).

"லோக்யதஇதி - லோகஃ" என்கிற வ்யுத்பத்தியை யுட்கொண்டருளிச்செய்கிறார் (சிதசிதீஸ்வவரேத்யாதி) தம்முடையபக்கல் பண்ணின க்ருபையை த்ருஷ்டாந்தமுகேநவிவரிக்கிறார் (அதனிலித்யாதி) "அருள்கொண்டாடு மடியவரின்புற - அவ்வருமறையினுடையபொருளை - அருளினன், அருள்கொண்டாயிரமின்றமிழ் பாடினனுடைய வருள் - இவ்வுலகினில் மிக்கதே கண்டீர்" என்றந்வயம். (அ

எட்டாம்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாரும்பதம்

முற்றிற்று.

---

(க) ரா - பா - ச - அ. (உ) தி - வாய் - க - க - க.

(ங) தி - வாய் - கம - கம.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானம்.

——(o)——

அவ;—எட்டாம்பாட்டு. (அருளித்யாதி) ஆழ்வாருடைய க்ருபையை கீழ்ப்பாட்டிலே "எண்டிசையுமறியவியம்புகேன் ஒண்டமிழ்ச்சடகோபனருளை" என்று இவர் சொல்லக்கேட்டிருக்கு மவர்கள், பகவத்க்ருபையன்றோ நாட்டாரடையக் கொண்டாடுவது; நீர் ஆழ்வாருடைய க்ருபையை, எண்டிசையுமறியவியம்புகேன்" என்கைக்கடியென்னென்ன, பகவத்க்ருபையும் ஆழ்வார் க்ருபையுமானால், ப்ராப்தி † ஸித்திக்குமன்றன்றோ பகவத்க்ருபை வேண்டுவது. அந்த ப்ராப்தியுண்டாவது ஜ்ஞாநத்தாலேயன்றோ?. அந்த ஜ்ஞாநஸித்தி ஆழ்வாராலேயன்றோ? ஆகையாலே ஆழ்வார் கருபையன்றோ லோகத்தில் விஞ்சியிருப்பதென்கிறார். ப்ராப்தி—ஜ்ஞாநஸாபேக்ஷமாயிருக்கும். ஜ்ஞாநப்ப்ராப்தி ஸாபேக்ஷமாயிராது.

கீழே—"நன்மையால்மிக்க நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்" என்று தம்முடைய புன்மையைச்சொல்ல, அந்தப் புன்மையேதென்ன, அத்தை "நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையும் நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்" என்று இரண்டுவகையாகப்பேசி, அநந்தரம் "பண்டைவல்வினை பாற்றி

அரு:—எட்டாம்பாட்டு (அருளித்யாதி), இந்தப்பாட்டுக் கவதாரிகை இரண்டுவகையாக வருளிச்செய்கிறார், அதில் முந்தினது -(ஆழ்வாருடைய க்ருபையையென்றுதுடங்கி-ஜ்ஞாநம்ப்ராப்திஸாபேக்ஷமாயிராதென்னுமளவும்)-(ப்ராப்திஸித்திக்குமளவன்றோ) என்றது - ப்ராப்திஸித்திக்கும்போதன்றோ வென்றபடி, "ஸாபேக்ஷநிரபேக்ஷயோர்யோகே நிரபேக்ஷாபலீயாந்" என்கிற படியே ஜ்ஞாநஸாபேக்ஷமான ப்ராப்தயைப் பண்ணிக்கொடுக்கும் ஈஶ்வரனுடைய க்ருபையிலும் ப்ராப்திஸாபேக்ஷமாயிராத ஜ்ஞாநத்தையுண்டாக்கின ஆசார்யரானவாழ்வாருடைய க்ருபையே விஞ்சியிருக்கு மென்னுமதைக்காட்டுகைக்காக இரண்டுக்குமுண்டான வாசியையருளிச் செய்கிறார் (ப்ராப்திஜ்ஞாநேத்யாதி).

இன்னுமொரு அவதாரிகையருளிச் செய்கிறார் (கீழ்நன்மையால் மிக்க வென்றுதுடங்கி-போக்கின ப்ரகாரத்தை இப்பாட்டாலே சொல்லுகிறாரென்னுமளவும்) (போக்கினப்ரகாரத்தை இப்பாட்டாலே அருளிச்செய்கிறாரென்றது)

† ஸித்திக்குமவன்றோ.

யருளினான்'' என்று அத்தை ஆழ்வார் போக்கியபடியைச்சொல்லி, போக்கினப்ரகாரத்தை இப்பாட்டாலே சொல்லுகிறார்.

அநாத்மந்யாத்ம புத்தியையும் அபோக்யங்களில் போக்ய புத்தியையும் அத்யாத்மஜ்ஞாநத்தாலே போக்கவேணுமே, ஆசார்யன்ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினவாறே அந்தஜ்ஞாநம் மேலுண்டான கர்மார்ஜநத்தை மாற்றும்; முன்புண்டான அவித்யையாலே ஆர்ஜித்துவைத்தகர்மங்களை ஈஶ்வரன்போக்கும்படி பண்ணுவதுமது; ஸங்கல்பஜத்தை இவன் போக்கும், கர்மஜத்தை அவன் போக்கும். அவன் போக்குகைக்கடி இவன் ஜ்ஞாநஸித்தியைப் பண்ணிக் கொடுக்கையாலேயிறே, அத்தைப்பற்றவிறே (ச) ''ஆசார்யஸ்ய ஹி தாதாரம் த்வேஷ்ஸாபாவம் ஸ்வயம்பதிஸந்தத்ஸாரா:- அம்ருதஸ்ய ஹி தாதாரம் தமஸ: பாரம்தர்ஶயதி ஸநத்குமார:'' என்றும் ஆசார்யனைச்சொல்லுகிறது.

வ்யா;—(அருளித்யாதி), எனக்கு அத்யாத்மஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கக்கடவதாக வேதார்த்தங்களைத் திருவாய்மொழிமுகத்

---

அவ்வருமறையின் பொருளருளினானென்று வேதார்த்தத்தைத் திருவாய்மொழியாலேவெளியிட்டு ஜ்ஞாநத்தை யுண்டாக்கிப் போக்கினானென்று போக்கினப்ரகாரத்தை யருளிச்செய்கிறாரென்றபடி.

ஜ்ஞாநத்தாலே போக்கும் க்ரமமென்னென்ன வருளிச்செய்கிறார் (ஆசார்யன்ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினவாறே யென்றுதுடங்கி), (பண்ணுவதுமது) என்றது-பண்ணுகிறதும் அந்த ஜ்ஞாநமென்றபடி, (ஸங்கல்பஜத்தை இவன் போக்கும்) என்றது-ஆசார்யன் ஸர்வஜ்ஞனானகையாலே ஶிஷ்யன்மநஸ்ஸாலே நினைத்தபாபத்தை யறிந்து உபதேஶத்தாலே போக்குமென்றபடி; அம்ருதமென்று-மோக்ஷமாய், அம்ருதஸ்யஹிதாதாரமென்று-மோக்ஷத்தைக் கொடுக்குமென்றார். கொடுக்கும் ப்ரகாரமென்னென்ன (தமஸ: பாரம்தர்ஶயதியென்று), ஜ்ஞாநத்தையுண்டாக்கி உத்தரிப்பிக்குமென்று ஸநத்குமாரன் சொன்னானென்றபடி.

எனக்கு அத்யாத்மஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கைக்காக வேதார்த்தங்களைத் திருவாய்மொழிமுகத்தாலே வெளியிட்டருளினானென்றார்கீழ்; அன்றிக்கே திருவாய்மொழி யருளிச்செய்ததுக்கு வேறேயும் ஒருப்ரயோஜநமுண்டென்கிறார் (எனக்கு அத்யாத்மஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கக்கடவதாகவென்று துட

தாலே வெளியிட்டருளினு ரென்னப்பார்த்து, அத்திருவாய்மொழி யைப்பாடினதற்கு வேறேயுமொருப்ரயோஜநம் சொல்லுகிறார்.

(அருளித்யாதி) திருவாய் மொழியைப்பாடிற்று பகவத்ப்ரீணநார்த்தமாகவன்றிக்கே ஸாத்விகாக்ரேஸருடைய முகமலர்த்திக் குறுப்பாகவாய்த்து (அருள்கொண்டாடு மடியவரின்புற) (அடியவர்) (அருள்கொண்டாடுமடியவர்) ஜ்ஞாநவிஷய பூதனுன வீஸ்வரனுடைய ப்ரியத்துக்கன்றிக்கே ஜ்ஞாநநிஷ்டரான ஸாத்விகர் உகக்கைக்காகவாயிற்று திருவாய்மொழிபாடினது.

(அடியவர்) ஶேஷவ்ருத்திபுருஷார்த்தமென்னும்படி ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவர்கள்; ஶேஷத்வஜ்ஞாநம் ஶேஷவ்ருத்திஶேஷமிறே. (அருள் கொண்டாடுமடியவர்) அப்புருஷார்த்தத்துக்கு ஸாதநமும் அவனுடைய க்ருபையென்றிருக்குமவர்கள், ஆகையாலே கைங்கர்யம் புருஷார்த்தம், கருணை ஸாதநமென்றிருக்குமவர்கள் (அருள் கொண்டாடும்) அல்லாத குணந்தரங்களிற்காட்

ங்கி), (வெளியிட்டருளினு ரென்னப் பார்த்து) என்றது - வெளியிட்டருளினு ரென்ன உத்யோகித்தென்றபடி. வேறேயுமொருப்ரயோஜநம் சொல்லுகிறு ரென்றத்தை விவரிக்கிறார் (திருவாய்மொழி பாடிற்றும் பகவத்ப்ரீணநார்கத்மாக வன்றிக்கே யென்று துடங்கி). கீழ்ச்சொன்னதின் விவரணம் (ஜ்ஞாநவிஷயேத்யாதி), "அடியவர் அருள்கொண்டாடுமடியவர்" என்றுபிரிக்கிறதுக்குத் தாத்பர்யம் "பதிம்விஶ்வஸ்ய" என்று-எல்லாருமடியவராகையாலே க்ஷிபாமிக்குவிஷயமானவடியவரான்றிக்கே, அருள்கொண்டாடுமடியவரென்று மோக்ஷயிஷ்யாமிக்கு விஷயமான அடியவர்களைச் சொல்லுகிற தென்றபடி, அடியவரென்றால்-ஶேஷத்வஜ்ஞாநமாத்ரமன்றோ சொல்லுவது, வ்ருத்தியைச்சொல்லுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஶேஷத்வஜ்ஞாநம் ஶேஷவ்ருத்திஶேஷமிறே) என்று.

அடியவரென்று புருஷார்த்தத்தைச்சொல்லி, அருள்கொண்டாடு மென்று க்ருபையைச்சொல்லுகையாலே கைங்கர்யமாகிற புருஷார்த்தத்துக்கு ஸாதநம் அவனுடைய க்ருபையென்றிருக்கு மவர்களென்றபடி, குணந்தரங்களெல்லாம் கிடக்க, அவனுடைய க்ருபாகுணத்தைக் கொண்டாடுகிற தென்னென்ன, ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (ஈஶ்வரனையும் கொண்டாடுகிறதென்று

டில் க்ருபையைக் கொண்டாடுமவர்கள் ; ஈஶ்வரனைக் கொண்டாடு கிறது - தானுண்டானபோது ஜகத்துண்டாய், இல்லாதபோது இல்லையாமென்றிட்டிறே; அப்படியே க்ருபாகுணமில்லாதபோது குணாந்தரங்களும் அகார்யகரமாய், இதுகூடினவாறே கார்யகரமா யிருக்கையாலே இத்தையே கொண்டாடாநிற்பர்கள். அப்படியே தேவதாந்தரங்களிற் காட்டில் ஈஶ்வரன் கொண்டாட்டத்துக்கு விஷயமானுப் போலேயாய்த்து குணாந்தரங்களிற்காட்டில் இது கொண்டாட்டத்துக்கு விஷயமானபடி.

மநஸ்தத்வம் இந்த்ரியாந்தர்ப் பூதமாயிருக்கச் செய்தேயும் இதுஸஹகாரியாகாதபோது இந்த்ரியவ்யாபாரம் கூடக்காணுமை லோகத்திலே கண்டுபோருகிறுப்போலே இந்த க்ருபையும் குணாந் தர்ப்பூதமாகிலும் இதுஸஹகரியாதபோது சேதநரளவில் குணாந் தரங்கள் ஜீவிக்கையாகாது. ஸ்வரூபமும் நித்யம், குணங்களும் நித்யங்களாயிருக்கச்செய்தே இவனுடைய ஸம்ஸாரஸம்பந்தம் ஒழுக்கறுமல்நடக்கையாலே, அத்தை மாற்றி இவனை உத்தரிப்பித் தது க்ருபாகுணமாகையாலே அத்தையாய்த்து முமுக்ஷுக்கள் கொண்டாடுவது.

---

தொடங்கி), க்ருபாகுணத்தைக் கொண்டாடுகிறதுக்கு ஸத்ருஷ்டாந்தமாகப் பின்னையுமொருஹேது அருளிச்செய்கிறுர் (தேவதாந்தரங்களிற்காட்டி லென்று துடங்கி), இதுக்குத்தாத்பர்யம், தேவதாந்தரங்களுக்கு ஈஶ்வரனையொழிய ஸ்வய மேவ பலப்ரதத்வ ஶக்தியில்லாமையாலே தேவதாந்தரங்களிற்காட்டில் ஈஶ்வரன் கொண்டாட்டத்துக்கு விஷயமானுப்போலே க்ருபாகுணத்தையொழிய குணா தரங்களுக்கு கார்யகரத்வமல்லாமையாலே குணாந்தரங்களிற்காட்டில் க்ருபா குணம் கொண்டாட்டத்துக்கு விஷயமாயிருக்குமென்றபடி.

இதுவும் குணங்களுக்குள்ளே ஒன்றுயிருக்க, இத்தையொழிய குணாந்தரா கள் கார்யகரமாகமாட்டாதென்று சொல்லுகிறதென்னென்ன, இதுஸஹகரியாத போது மாட்டாதென்னுமதை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறுர் (மநஸ்தத்வ மென்றுதுடங்கி) (ஜீவிக்கையாகாது) என்றது-ஜீவநஸாதநமாகாதென்றபடி.

ஶக்தனுக்கும் க்ருபைவேணும், அஶக்தனுக்கும் க்ருபை வேணும்; ஶக்தனுக்கு நம்மைப் பெறுகைக்கு இப்படி வருத்தப் பட்டு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுவதே யென்னுமவன் நெஞ்சில் ஈரப்பாடாய்த்து பலஶேஷமாவது, அந்த ஈரப்பாடாய்த்து அவனை ப்ரீதனாக்குவதும்; அஶக்தனுக்கு, (க) "நாவஸ்நாதஸ்ய-நாவநார்ச்சநாதெளஸ்துதெளநச" என்றால், "ஊர்வாக்ஷ-ஏநாவஸ்தி: ஆஸீத்-க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத" என்னும்படி யிருக்கும், அங்கு அவனுடைய வநுஷ்டாநம் கண்டு பிறக்கிற க்ருபை, இங்கு ஆகிஞ்சந்யம் கண்டு பிறக்கிற க்ருபை; "ஸ்வகதமான தொன்று ஸாதநமாகவேண்டாவோ! பரகதமான குணம் ஸாதநமாம்படியென்?" என்ன, பரகதமேயாகிலும் (உ) "அருள்பெறுவாரடியார்" என்கிறபடியே ஆஶ்ரயம் அவனுய், விஷயம் இவனு யிருக்கும்.

(அருள்கொண்டாடுமடியவர்) அன்றிக்கே, அருளைத்தங்களு க்கு அவஷ்டம்பமாகக் கொண்டு நடையாடுமவர்கள், இவனுக்கு ஊன்று கோலானதும், விரோதிகளைச் சேதித்துத்தருவதும் அருளேயாய்த்து; (ந)"அருளென்னுந்தண்டு" என்றும், (ச)"அருளென்னுமொள்வாள்" என்றும் சொல்லுகிறபடியே, அவர் தம்

---

அஶக்தனுக்கொழிய ஶக்தனுக்கும் க்ருபைவேணுமோவென்ன வருளிச் செய்கிறார் (ஶக்தனுக்கும் க்ருபைவேணுமென்று தொடங்கி), நிகமிக்கிறார் (ஸ்வகதமித்யாதி).

அருள்கொண்டாடு மடியவரென்றதுக்கு இரண்டுபொருள். அருளைக் கொண்டாடுகிற வடியவரென்னுதல், அன்றிக்கே அருளை ஆலம்பநமாகக் கொண்டு, ஆடும்-ஸஞ்சரிக்கிற அடியவரென்னுதல். (அவஷ்டம்பம்) ஆலம் பநம், (க) "அருளென்னும் தண்டால்" என்றும், (க) "அருளென்னுமொள் வாளுருவி" என்றும் மேலருளிச்செய்கிற சந்தைகளைக்கடாக்ஷித்துக் கொண் டருளிச்செய்கிறார் (ஊன்றுகோலாவது மென்றுதுடங்கி) தண்டாகையாலே ஊன்றுகோலாயிருக்கும்.

---

(க) வி - பு - ரு - எ. (உ) தி - வாய் - கo - கூ - க.

(ந) பெரியதிருவ - உகூ. (ச) தி - மொ - கூ - உ - ச.

முடைய ப்ராஹ்மண்யம் தோற்ற தண்டென்கிருர். இவர் தம்முடைய க்ஷாத்ரம் தோற்ற ஒள்வாளென்ருர். ஆகையாலே இவர்கள் பக்த்யாதிகளை அவஷ்டம்பமாக்குதல், அஸங்கஶஸ்த்ரத்தைக் கொண்டுதிரிதல் செய்யுமவர்களல்லர். அவனும் தனக்கு பலாதி குணங்களுண்டேயாகிலும், உபகரணபூர்த்தி யுண்டேயாகிலும் இக்க்ருபை கொண்டேயாய்த்து பலப்ரதனுவது; ஆகையாலே யாய்த்து (க) "பாழியானுழியானருளே - நன்று" என்ன வேண்டிற்று.

(இன்புற) அவர்கள் ப்ரீதியைப்பெற, அவர்கள் பண்டே அருள்கொண்டாடு மடியவரேயாகிலும், இவ்வர்த்தம் ஆப்தரான வாழ்வாரருளிச் செய்யப்பெற்ருேமேயென்று ப்ரீதரானவர்கள், ராகஸித்தம் விதிஸித்தமாகப்பெற்ருேமே யென்று ப்ரீதரானவர்கள்.

---

ஆழ்வார் உபஶாந்தராகையாலே ப்ராஹ்மண்யம் தோற்றவென்கிருர். இங்ஙனன்ருகில் நம்மாழ்வாரை ப்ராஹ்மண்யம் தோற்றவென்றும், திருமங்கையாழ்வாரைக்ஷாத்ரம்தோற்றவென்றும்சொல்லப்போகாதென்றபடி. க்ருபையே ஆலம்பநமும்வாளுமாக வுடையவராகையாலே பக்த்யாத்யுபாயங்களை உபாயமாக்குதல், விஷயவிரக்தியை உபாயமாக்குதல் செய்யாரென்றபடி. (அஸங்கஶஸ்த்ரம்) என்றது - விரக்தியாகிறவாளைச் சொல்லுகிறது. பலத்தைக்கொடுக்கும் போது ஈஶ்வரன்றனக்கும் க்ருபையேஸாதநமென்கிருர் (அவன்றனக்கென்று துடங்கி). (உபகரணபூர்த்தி) என்றது-திருவாழிதுடக்கமான திவ்யாயுதங்களை, பலாதிகுணங்களும் உபகரணமான திருவாழியுமுண்டானலும் க்ருபையே ஸாதநமென்கைக்கு ப்ரமாண மருளிச்செய்கிருர் (ஆகையாலே யாயிற்றென்று துடங்கி). பாழியென்றது - பலமாய், பலத்தையுடையவனென்றபடி. இது மற்றைகுணங்களுக்கு முபலக்ஷணம்.

க்ருபாவைபவத்தை முன்னே அறிந்திருக்குமவர் இப்போது நவமாகப்ரீதியைப்பெறவென்கிற தென்னென்ன வருளிச்செய்கிருர் (பண்டேயருள்

---

(க) தி - மொ - க - க - ச.

(அருளினனவ் வருமறையின் பொருள்) மறையின் அந்த வரும் பொருளை யருளினன். (அப்பொருளை) "கருணை ஸாதநம். கைங்கர்யம் புருஷார்த்தம்" என்கிறவப் பொருளை. (க) "வழு விலாவடிமை செய்யவேண்டும்" என்பது, (உ) "அடியையடைந் தருள் சூடியுய்ந்தவன்" என்பதாய் இவற்றை உபதேசிக்கை; (பொருளை அருளினன்) தாம்வாக்போச் சாரணம் பண்ணமாட்டாமையாலே பொருளையருளினன்.

(அ - அரும் - பொருளை - அருளினன்) ப்ரவ்ருத்தி ஶீலர்க்குப் படவரிதானவர்த்தத்தை நிர்த்தோஷரான ஸத்துக்களுக்கு அருளினன். அதுதான் ஸ்வார்த்தத்தை போகிப்பியாநிற்க இவர்

---

கொண்டாடு மடியவரேயாகிலுமென்று துடங்கி). மறையில் அந்த அரும்பொருளை அருளினனென்றந்வயம். "அவ்வரு" என்கிறவிடத்தில் அகாரம் பொருளுக்கு விஶேஷணமாகையாலே அப்பொருளையென்று பதோபாதாநம் பண்ணுகிறார் (அப்பொருளையென்று). அப்பொருளையென்றது - அந்தப்பொருளையென்றபடி. அதாவது - "கருணைஸாதநம். கைங்கர்யம் புருஷார்த்தம்" என்ற வந்தப்பொருளையென்றபடி. இந்தப்பொருளை எங்கேகாட்டினரென்ன வருளிச்செய்கிறார் (வழுவிலாவடிமைசெய்யவென்று துடங்கி). மறையருளினனென்னதே, பொருளையருளினனென்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (தாம்வாக்யோச்சாரணம் பண்ணமாட்டாமையாலேயென்று துடங்கி). தாமென்றது - நம்மாழ்வாரை.

(ப்ரவ்ருத்திஶீலர்க்குப் படவரிதானவர்த்தத்தை நிர்த்தோஷரான ஸத்துக்களுக்கு அருளினர்) என்றதுக்குத் தாத்பர்யம்-"உய்யக்கொண்டார் விஷயமாக உடையவரருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்கிறபடியே உபாயாந்தர நிஷ்டருக்கு ருசியில்லாமையாலே நெஞ்சில் படவரிதானவர்த்தத்தை நிர்த்தோஷராகையாலே ருசியுண்டான ஸத்துக்களுக்கு அருளினரென்றபடி. (ப்ரவ்ருத்திஶீலர்க்குப் படவரிதான) என்றது - உபாஸகர்க்கு நெஞ்சில்பட

---

(க) தி - வாய் - ரு - ரு - க. (உ) தி - வாய் - எ - உ - கக.

வெளியிட வேண்டிற்றென்னென்ன, (மறை) ரஜஸ்தமஃப்ரசுரர்க்கு ஸ்வார்த்தத்தைமறைத்து ஸத்வப்ரசுரர்க்குபோதிக்கும்படி *மறையாயநால்வேதமாகையாலே அவ்வர்த்தத்தை வெளியிட்டார்.

இவர் இவ்வர்த்தத்தை வெளியிடுகிற விடத்தில் என்ன ஶப்தமுகத்தாலே வெளியிட்டதென்ன, (அருள் கொண்டாயிரமின் தமிழ்பாடினான்) அந்த ஸஹஸ்ரஶாகாப்ரதிபாதிதமான வர்த்தத்தை ஸஹஸ்ரகாதாமுகத்தாலே வெளியிட்டார். (தமிழ்பாடினான்) (க) "உ௱ஸெ-ஸாயா வெவதிகாஸ்ஸ்வரா:-துர்ப்போதா வைதிகாஶ்ஶப்தா:" என்றுதுர்ப்போதமான வேதஶப்தம் போலன்றிக்கே த்ராவிடபாஷையாலே வெளியிட்டார். (ஆயிரமின் தமிழ்பாடினான்) ப்ரணவம்போலே அதிஸங்க்ரஹமாதல், மஹா பாரதம் போலே அதிவிஸ்த்ருதமாதலன்றிக்கே ஆயிரமின் தமிழாகப்பாடினார். (இன்தமிழ்பாடினான்) அவன் சொன்னதும் அறியலாயிருக்கச்செய்தே, அதுவரை முறுகலாயிருக்கும். இது செவிக்கினிய செஞ்சொல்லாயிருக்கும். (பாடினான்) (உ) "வேட்கையால் சொன்னபாடல்" என்கிறபடியே தம்முடைய வநுபவாநந்த ஸாகரத்துக்குப் பரீவாஹநுபவசநங்களைப் பண்ணினார்.

ஆனால் ஒரு புருஷபுத்திமூலமாக வந்தவிது ப்ரமாணமாம்படியென்னென்ன, தாம்சொன்னாரகிலன்றோ அது சொல்ல வேண்டுவது. அவனுடையவருள் மூலமாகச் சொன்னவாகையாலே

---

வரிதானவென்றபடி. வேதமாகையாலே (ஸ்வார்த்தபோதி) என்றது. "ஸஹஸ்ரவர்த்மாஸாமவேத:" என்கையாலே ஸாமவேதம் ஸஹஸ்ரஶாகையாயிருக்கும். திருவாய்மொழி ஸாமவேதஸ்தாநமாகையாலே ஸ்ஹஸ்ரஶாகையையும் ஆயிரம் பாட்டா யருளிச்செய்தார். (வரைமுறுகல்) கடிநம்.

இப்ப்ரபந்த மருளிச்செய்ததுக்கு மூலம் அவனென்றே "அருள் கொண்டாயிரமின்தமிழ்பாடினான்" என்று அருளையே மூலமாகச்சொல்லுகிற

---

(க)

(உ) தி - வாய் - ௪ - ௧௦ - ௧௧.

அது சொல்லப்போகாது. (க) "ஶோஹஶாஸ்த்ராணிகாரய-மோஹ ஶாஸ்த்ராணிகாரய" என்கிற அந்தநிக்ரஹமடியாக வந்ததன்றே இது, * தெரியச்சொன்ன வாயிரமாகையாலே அருளடியாகவந்த தாயிற்று. (உ) "ஆம்முதல்வனிவனென்று தற்றேற்றி என்நா முதல்வந்து புகுந்துநல்லின்கவி, தூமுதல் பத்தர்க்குத்தான் தன்னைச்சொன்ன, என்வாய் முதலப்பனை" என்று ஆழ்வார் தாமேயருளிச்செய்தாரிறே.

(அருளித்யாதி) "தன்புகழேத்த வருளினன்" என்று ஆழ்வாரருள்கொண்டு அவருடைய புகழை எத்தினப்போலேயாயிற்று ஆழ்வாரும் அவனுடையவருள் கொண்டு * எற்கும் பெரும்புகழாயிரத்தைப்பாடிற்று; இவர்தாம் * நெடியானருள்சூடும்படியானகை யாலே அருளொழிய இவர்க்குக் கைம்முதலில்லையே.

(அருள்கண்டீ ரிவ்வுலகினில் மிக்கதே) அவருடையவருளன்றே இந்த லோகத்திலதிஶயிதமாயிற்று. (பாடினனருள் கண்டீரிவ்வுலகினில் மிக்கது) பாட்டுமன்று, பாடினவருமன்று, பாட்டுக்கடியான வருளுமன்று. இவாருளாய்த்து. (இன்தமிழ் பாடினனித்யாதி) வரைமுறுகலான ஸ்ரீகீதை சொன்னவனுடைய வருளன்று. அவன் நெறியெல்லாமெடுத்துப் பாடினவிடத்திலும் அகப்பட்டாரும் அகப்படாதாருமாயிற்று. இவாருள் அப்படி யன்றியிலே * (ந) *ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல் அவனுடைய பேருந்தார்களுமே பிதற்றப்பண்ணிற்றுயிற்று.

---

தென்னென்ன வருளிச்செய்கிறார் (மோஹஶாஸ்த்ராணிகாரய) என்று துடங்கி. அவனருளடியாகப் பாடினரோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆம்முதல்வனென்று துடங்கி). "தமிழ்பாடினனருள்" என்கையாலே கீதையைச் சொன்னவனுடைய வருளை வ்யாவர்த்திக்கிறது. அவனருளடியாக வருளிச்செய்கையாலே தான் தோன்றியான ஜ்ஞாநத்தாலேசொன்ன கீதைபோலன்றிக்கே இவருடைய க்ருபைக்கு அதிஶய முண்டென்றபடி.

---

(க) (ந) தி - வாய் - சு - எ - உ.
(உ) தி - வாய் - எ - க - ந.

(அருளித்யாதி) (க) "நெறியெல்லா மெடுத்துரைத்தநிறை ஞானத்தொருமூர்த்தி" (உ) "நெறியுள்ளியுரைத்த-அம்பகவன்" என்று தான்மூன்றியான தன்னுடைய ஜ்ஞாநங்கொண்டு சொன்ன தன்றிக்கே அவனுடையவருள்கொண்டுபாடின தன்னேற்ற முண்டே இவாருளுக்கு.

(இன்றமிழ் பாடினனருள் கண்டீரிவ்வுலகினில் மிக்கது) (ங) "கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்" என்று அந்த லோகத்தில் இவருடைய பாட்டுமிக்காப்போலே இந்த லோகத்தில் இவருடையவருள் மிக்கது. இங்குஅருள்மிக்கு அங்கு போகம் மிகும்படியிறே லோகஸ்வபாவங்களிருப்பது, (இவ்வுலகினில்மிக்கதே) அவனுடையவருள் ஆழ்வாரளவிலே சுவறிவிட்டது. இவருடையவருள் ஸாம்ராஜ்யம் பண்ணுகின்றது; அவனுடைய வருளைக் கொண்டாடுமவர்கள் அடியவர்களாய், இவாருள் லோகமடங்கக் கொண்டாடும்படி தேஜிஷ்ட்டமாயிற்று.

(ஆயிரமித்யாதி) ஸ்ரீகீதை சொன்ன க்ருஷ்ணனென்றால் கையெடுப்பாரில்லை; திருவாய் மொழிபாடின ஆழ்வாருடைய

---

"இவ்வுலகினில் மிக்கது" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (கேட்டாரார்வானவர்களென்று துடங்கி) இங்கே அருளும் அங்கேபோகமும் மிகவேண்டுவானேனென்னென்ன வருளிச்செய்கிறார் (இங்கருளித்யாதி). க்ருபை துக்கிகளுக்காகையாலே இங்கு அருள்மிக்கிருக்குமென்றபடி.

ஸாம்ராஜ்யம்பண்ண என்றத்தை விவரிக்கிறார் (அவனுடைய வருளைக் கொண்டாடுமவர்களென்று துடங்கி). ஆயிரமென்று கூட்டினதுக்குத் தாத்பர்யம் - ஆயிரத்துக்குள்ளே திருநாமப்பாட்டு முண்டாகையாலே அஞ்ஜலி பண்ணுவர்களென்றபடி. க்ருஷ்ணனென்றால் கையெடாதிருப்பா னென்

---

(க) தி - வாய் - ௪ - ௮ - ௬. (ங) தி - வாய் - ௧௦ - ௬ - ௧௧.
(உ) தி - வாய் - ௧ - ௩ - ௫.

ஊரின்பேரைக்கேட்க இருந்ததேகுடியாகக் கையெடாநின்றது. திருவாய்மொழி கேட்டால் ஈஸ்வராபிமாநிகளைக் கையெடார்களிறே. (கண்டீர்) இவ்வம்ஸம் நான்சொல்லவேண்டியிருந்ததோ? ப்ரத்யக்ஷமன்றே. (கண்டீர்) அவனுடைய வருள்ஸாஸ்த்ரகம்யம். இது ப்ரத்யக்ஷஸித்தம்.

(இவ்வுலகினில்—கண்டீர்) இப்போது இவ்வுலகத்தில் கண்டிகோளே. அந்த லோகத்திற் போனால் அங்குக்காண்கிறீகோள், (இவ்வுலகினில்மிக்கது) இந்த லோகத்தையும் ஆழ்வாருடைய வருணையும் சீர்தூக்கிப்பார்த்தால் அதிலும்விஞ்சியிருப்பது இவரருளன்றே. * கடல் மண்ணெல்லாம் விலேயோவென மிளிரும்படியிறே இவருடைய கண்ணுடைமையிருப்பது. (அ)

எட்டாம்பாட்டின் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

னென்ன வருளிச்செய்கிறார் (திருவாய்மொழி கேட்டாலென்று துடங்கி). இந்தால்க்ருஷ்ணன் ஈஸ்வராபிமாநியாகையாலேகையெடாரென்றபடியாய்த்து கண்டீரென்று - இந்த லோகத்திலே கண்டிகோளே. இது ப்ரத்யக்ஷமன்றே வென்னுதல். அன்றிக்கே, அருள் கண்டீரென்று முழுச்சொல்லாய், இந்த லோகத்தைப்பற்ற விஞ்சியிருக்கிறவருள் கண்டீரென்றுதல். இவ்வருள் கண்டீரென்கையாலே - அவனருள் காணவில்லையென்று விவக்ஷித்தருளுகிறார் (இப்போதிவ்வுலகத்தித்யாதி). இவ்வுலகினில் மிக்க தென்றதுக்கு இரண்டு பொருள். அதாவது - இந்த லோகத்திலே அதிஸயித்ததென்னுதல். அன்றிக்கே, இத்தலோகத்திற்காட்டில் விஞ்கியிருக்குமென்னுதல். அப்படி விஞ்சியிருக்குமோவென்ன வருளிச்செய்கிறார் (கடல் மண்ணெல்லாம் விலேயோவென மிளிருங்கணென்று துடங்கி). கண்ணென்றது - க்ருபை. (அ)

மூ:—மிக்கவேதியர் வேதத்தினுட் பொருள்
நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினான்
தக்கசீர்ச் சடகோபனேன்னம்பிக்காள
புக்க காதலடிமைப் பயனன்றே. (கூ)

## நஞ்சீயர் வ்யாக்யாநம்.

ஒன்பதாம்பாட்டு. அவ ;—ஸகல வேததாத்பர்யமான பாகவத ஶேஷத்வத்தை (க) "பயிலும்சுடரொளி" (க) "நெடுமாற்கடிமை" என்கிற இரண்டு திருவாய்மொழிகளிலு மருளிச்செய்து என்னெஞ்சினுள்ளே நிறுத்தினானென்கிறார்.

வ்யா:—(மிக்கவேதியர்) எம்பெருமான் பக்கலிலே ஜ்ஞாந பக்திகளைப் பூர்ணமாகவுடைய வைதிகர் ; (க) "யத்ர பூர்வே ஸாத்யா ஸ்ஸந்தி தேவா:" என்கிறபடியே. (வேதத்தினுட்பொருள்) வேதத்துக்கு ப்ராமாணிக ப்ரமேயம் திருவாய்மொழி. திருவாய்மொழிக்கு ப்ரமேயம் பயிலும் சுடரொளி, நெடுமாற்கடிமை. (நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினான்) பண்ணோடும் இசையோடும் பாடி என்னெஞ்சிலே ப்ரதிஷ்டிப்பித்தான். கல்லைக்குழித்து நீரை நிறுத்துவாரைப் போலே கிடீர்செய்தது.

(தக்கசீரித்யாதி) எல்லாமேன்மையும் சொன்னாலும் தகுதியான வாழ்வார். எல்லாம் சொன்னாலும் அங்குத்தை ப்ரபாவத்தை எல்லை காணவொண்ணாதபடியிறே ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. (ஆள்புக்க காதலடிமைப்பயனன்றே) இவர் திருவடிகளிலுண்டான பக்தியன்றோ இவருக்கு அடியேனானதிலுண்டான ப்ரயோஜநம். (கூ)

நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

## நம்பிள்ளை ஈடு.

அவ:—ஒன்பதாம் பாட்டு. (மிக்கவேதியரித்யாதி). உமக்கருளினவருளுக்கு அவதியேதென்ன, என்னுடைய தண்மை பாராதே ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தை எனக்கு உபகரித்தானென்று, (க) "நீசனேன் நிறைவொன்றுமிலேன் நங்கண்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே" என்று ஆழ்வாரருளிச்

செய்தாப்போலே இவரும் உபகாரஸ்ம்ருதியாலே ஆழ்வார் திருவடிகளிலே அருளிச்செய்கிறார்.

வ்யா :— (மிக்கவேதியர்) ப்ரமாணஶ்ரேஷ்டமான வேதத்தையே நிரூபகமாகவுடையவர்கள். அநேகஶாகாத்யயநம் பண்ணினவர்களென்னவுமாம். (வேதத்தினுட்பொருள்) வேதத்தினுடைய பொருள். ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தை.

(நிற்கப்பாடி) ப்ரதிபத்திபண்ணவரிதாயிருக்கிற வேத ரஹஸ்யார்த்தத்தை கேட்டார்க்கு ப்ரதிபத்திவிஷயமாம்படி பாடி. (என்னெஞ்சுள் நிறுத்தினான்) மலையைத் தூழித்து அதிலே நீரை நிறுத்துவாரைப்போலே நிஸ்ஸாஷிரமான வென்னெஞ்சுக்கு இதுவே விஷயமாம்படி பண்ணினார்.

(தக்க சீர்ச்சடகோபன்) ஸர்வேஶ்வரன் கவிகளென்றால் தகுதியான கல்யாணகுணங்களையுடைய வாழ்வார். (க) "அயர்வறுமமர்களதிபதி" என்றால் போரும்படி ஸர்வேஶ்வரனிருக்குமாபோலே ஸர்வேஶ்வரன் கவிகளென்றால் தகுதியாய்த்து ஆழ்வாரிருப்பது. (க) "ஏற்கும் பெரும்புகழ்வானவரீசன் கண்ணன்றனக்கு ஏற்கும் பெரும்புகழ்வண் குருகூர்ச்சடகோபன்" என்று தாமே அருளிச்செய்தாரிறே.

(என்நம்பிக்கு) என்னை விஷயீகரிக்கைக்குத் தகுதியான பௌஷ்கல்யத்தை யுடையவர்க்கு. (ஆள்புக்ககாதல்) அடிமையாகவேணுமென்று எனக்குப்பிறந்த ருசி. (அடிமைப்பயனன்றே) அடிமையாகிற ப்ரயோஜநத்தோடே வ்யாப்தமாயிருக்கும்.

பகவத்விஷயத்தில் ருசி - இவர்க்கு ஶரீரவிஶ்லேஷம் பிறந்தால் அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒரு தேஶவிஶேஷத்திலே சென்றால் பெறக்கடவதாயிறே யிருப்பது. ஆழ்வார் விஷயத்தில் பிறந்த ருசி - அங்ஙனன்றிக்கே இஶ்ஶரீரத்தோடே ஆழ்வார் திருவடிகளிலே எல்லாவடிமைகளும் செய்யலாம்படி பண்ணும். (க) "தூயாறு சுடரடிதொழுதெழு" என்று முதலிலே அபிநிவேஶித்த வாழ்வாருக்கு *முனியே நான்முகனுக் கவ்வருகேயிறே பேறாய்த்து. இவ்விஷயத்தில் ருசிபிறந்தால் அத்தனை விளம்பமில்லை யென்கிறது. அன்றே யென்றது - ஆமே யென்றபடி; (க) "அன்றெனக்கிளவியாமெனத்தகுமே." (கூ)

ஒன்பதாம் பாட்டுக்கு நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

## பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம்.

அவ:—ஒன்பதாம் பாட்டு. ஆழ்வாருடைய வருள் இவ்வுலகினில் மிக்கது" என்கைக்கடி யென்னென்னில், என்னுடைய தண்மை பாராதே ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தைப்பாடி அத்தை எனக்கு உபகரித்தானென்கிறார். (க) "நீசனேன் நிறைவொன்றுமிலேன் நங்கண்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதி" என்று அவ்விஷயத்தில் ஆழ்வாருளிச்செய்ததை ஆழ்வார் திருவடிகளிலே இவரருளிச்செய்கிறார்.

வ்யா:—(மிக்கவேதியர்) ப்ரமாணஶ்ரேஷ்டமான வேதத்தையே நிரூபகமாக வுடையவர்கள். (உ) "உளன்சுடர்மிகு சுருதியுள்" என்று ஆழ்வாருளிச்செய்யக் கேட்டிருக்கையாலே ப்ரமாணஶ்ரேஷ்டமென்கிறார். அநேக ஶாகாத்யயநம் பண்ணினவர்களென்றுமாம். (வேதத்தி னுட்பொருள்) ஸகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தை; வேதாந்தரஹஸ்யம் ததீயஶேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வமென்றிறே வைதிக ஶாஸ்த்ரம் நிர்ணயித்தது.

---

அரும்பதம்;—ஒன்பதாம் பாட்டு (மிக்கதென்கைக்கு) என்றது - மிக்கதென்றறிகைக் கென்றபடி. ஸ்ரீ மதுரகவிகள் கங்காதீரத்தினின்றும் ஆழ்வாருடைய திவ்யதேஜஸ்ஸை ஸாக்ஷாத்கரித்துவந்த மஹாயோகிகளாகையாலே இவருக்கொரு தண்மையுமுண்டோவென்ன, வ்யாக்யாதா த்ருஷ்டாந்தமுகேந நைச்யமென்றருளிச்செய்கிறார் (நீசனேனித்யாதி).

மிக்கவென்றதுக்கு - ஶ்ரேஷ்டதையும் பஹுத்வமு மென்றிரண்டர்த்தம். முந்தினதை யருளிச்செய்கிறார் (ப்ரமாணேத்யாதி). ப்ரமாணஶ்ரைஷ்ட்யம் - அபௌருஷேயத்வாதிகளாலே. இப்படி விசேஷணமிட்டுச் சொல்லவேண்டுமோவென்ன. ஆழ்வார் விஶேஷணமிட்டாப்போலே யருளிச்செய்தாரென்கிறார். (உளனித்யாதி): இரண்டாமர்த்தம் (அநேகேத்யாதி).

வேதார்த்தம் பகவச்சேஷத்வமன்றோ? உட்பொருளைத் தன்னெஞ்சில் நிறுத்துகை யாவதென்னென்ன வருளிச்செய்கிறார் (வேதாந்த ரஹஸ்யமென்று துடங்கி-ஸ்திரமாக்கினரென்னுவளவும்) ஆழ்வார் எவிக்கொள்ளத் தாம் இங்கே

---

(க) தி - வாய் - ரு - ரு - ச. (உ) தி - வாய் - க - க - எ.

(நிற்கப்பாடி) துர்க்ரஹமான இந்த ரஹஸ்யார்த்தத்தைக் கேட்டார்க்கு ப்ரதிபத்தி விஷயமாம்படிபாடி. (க) "பரமனைப் பயிலும் திருவுடையார்யவரேலும்" என்றும், (உ) "எம்மையாளும் பரமர்" என்று மருளிச்செய்தாரிறே. (என்னெஞ்சுள் நிறுத்தினான்) பகவச்சேஷத்வத்துக் தங் கூடமேட்டுமடையான வென்னெஞ்சிலே இத்தை ஸ்திரமாக்கினார். கல்லைத்துளைத்து அதிலே நீரைநிறுத்து வாரைப்போலே நிர்விவரமான வென்னெஞ்சுக்கு மிதுவே விஷயமாம்படி பண்ணினார். இதிறே என்தண்மைபாராதே என்திறத்தில் பண்ணின வுபகாரம்.

(தக்கசீர்ச் சடகோபன்) இது தொடங்கி உபகார ஸ்ம்ருதியாலே தமக்குப்பிறந்த அபிநிவேசத்தைப் பேசுகிறார் (தக்கசீர்ச் சடகோபன்) ஸர்வேஶ்வரன் கவிகளென்றால் தகுதியான கல்யாண குணங்களையுடைய வாழ்வார். "அயர்வறுமமர்களதிபதி" என்றால் ஸர்வேஶ்வரத்வத்துக்குப் போரும்படி யிருக்குமாபோலே, ஸர்வேஶ்வரன்கவிகளென்றால் போரும்படியாயாய்த்து ஆழ்வாரிருக்கும் படி. (உ) "ஏற்கும்பெரும்புகழ்வானவரீசன் கண்ணன்றனக்கு

---

அடிமை செய்கையாலே தமக்கு இங்கே ஸித்தித்தவடிமை, ஆழ்வாருக்கு அர்ச்சாவதாரம் ஏவிக்கொள்ளமாட்டாமையாலே பரமபதத்திலே ஸித்தித்ததென்றபடி. வேதாந்த ரஹஸ்யம் - ப்ரணவத்தில் சதுர்த்த்யர்த்தம்.

உக்தார்த்தத்தை த்ருஷ்டாந்தாந்தாமுகேந விவரிக்கிறார் (கல்லைத் துளைத்தித்யாதி). (நிர்விவரமான) பகவச்சேஷத்வம் கூடப்புகுராதபடியான. கீழோடே இவ்வர்த்தத்துக்குச் சேர்த்தியாகையாலே ப்ரக்ருதார்த்தோபஸம்ஹாரம் பண்ணுகிறார் (இதிறேயித்யாதி).

(இது துடங்கி) என்றது - இந்த அர்த்தமும் மேற்பாட்டும். "தக்க" என்றதுக்கு ஒன்று சொல்லவேண்டுகையாலே, ஸர்வேஶ்வரன் கவியென்று சொல்லுகைக்குத் தக்கவரென்றர்த்த மருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரன் கவிகளித்யாதி). "கண்ணன் தனக்குக் கவியென்றால் ஏற்கும் பெரும்புகழ்" என்று கருதி ப்ரமாணமருளிச்செய்கிறார் (ஏற்குமித்யாதி). "தக்கசீர்" என்றபோதே

---

(க) தி - வாய் - ரு - எ - க. (உ) தி - வாய் - ரு - கூ - கக.

ஏற்கும் பெரும்புகழ்வண் குருகூர்ச்சடகோபன்" என்று தாமே யருளிச்செய்தாரிறே.

(என் நம்பிக்கு) அதுக்குமேலே ஒரு பௌஷ்கல்யமிறே இது. என்னை விஷயீகரிக்கைக்குத் தகுதியான ஶீலாதிகுண பௌஷ்கல்யத்தையுடையவரானவர்க்கு. (ஆள்புக்ககாதல்) அநந்யார்ஹ ஶேஷமாக்கின ருசி.

(அடிமைப்பயனன்றே) இந்த ருசியன்றோ அப்போதே தாஸ்யமான ப்ரயோஜநத்தோடே வ்யாப்தமாயிருப்பது. பகவத்விஷயத்தில் ருசியடியாகப்பிறந்த தாஸ்யம் ஶரீரவிஶ்லேஷப் பிறந்து அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒரு தேஶவிஶேஷத்தில் சென்றால் பெறக்கடவதாயிறே யிருப்பது; அங்ஙனன்றிக்கே, ஆழ்வார்பக்கல் பிறந்த ருசி இஶ்ஶரீரத்தோடே இங்கே ஆழ்வார்திருவடிகளிலே எல்லாவடிமையும் செய்யலாம்படி பண்ணும்.

(க) "துயரறுசுடரடிதொழுதெழு" என்று முதலிலே அபிநிவேஶித்த வாழ்வாருக்கு (உ)*முனியே நான்முகனுக் கவ்வருகே யிறேபேறாய்த்து. இவ்விஷயத்தில் ருசிபிறந்தால் அத்தனை விளம்பியாதென்கிறது. அன்றே யென்றது. ஆமென்றுமாம். (கூ)

ஒன்பதாம் பாட்டுக்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

கல்யாணகுணங்களைச் சொல்லியிருக்க, நம்பியென்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அதுக்குமேலே யித்யாதி வாக்யத்வயத்தாலே). ஆள்புக்ககாதல் - ஆள்புகப்பண்ணினகாதல், இத்தை யருளிச்செய்கிறார் (அநந்யார்ஹேத்யாதி).

அடிமையை - பயனாக - பலமாக வுடைத்தானதென்றர்த்த மருளிச்செய்கிறார் (அப்போதே யித்யாதி). வ்யாவர்த்த்யபூர்வகம் விவரணம் பண்ணுகிறார் (பகவதித்யாதி). இத்தை முதலிக்கிறார் (துயரறுசுடரடியித்யாதி). முந்தினவர்த்தத்திலே "அன்றே அடிமைப்பயன்" என்ற ந்வயம்; இரண்டாமர்த்தத்துக்கு யதாக்ரமமந்வயம். (கூ)

---

(க) தி - வாய் - க - க - க. (உ) தி - வாய் - கO - கO,

# அழகியமணவாளப் பெருமாள் நாயனர் வ்யாக்யாநம்.

அவ :—ஒன்பதாம் பாட்டு. (மிக்கவேதியரித்யாதி). கீழே ஆழ்வாருடைய குணகீர்த்தநம் பண்ணும்படி அவர்தமக்கு க்ருபை பண்ணினபடியைச் சொல்லி, அதுக்குத் தண்ணீர்த்துரும்பான வநாதிகர்மங்களை ஆழ்வார்தம்முடைய பார்வையாலே பாறவடித்த படிசொல்லி, "அப்படியான வாழ்வாருடைய க்ருபாவைபவத்தை திக்குக்கள்தோறும் அறிவிக்கக்கடவேன்" என்று தம்முடைய ஆதரவிஸேஷத்தைச்சொல்லி, (க) "கூ௱வயாவய-ிவாஜய த் - க்ருபயாபர்யபாலயத்" என்றும், (உ) "அருளினன்" என்று துடங்கி (ங) "ஆழியானருள்தருவானமைகின்றான்" என்றது முடிவாக ருஷிகளும் ஆழ்வார்தாமுமாக பகவத்க்ருபையை ஆதரித்துப்போராநிற்க, நீர் ஆழ்வாருடைய க்ருபாப்ரஸித்தியிலே ப்ரவணரானபடி யென்னென்ன, பகவத்க்ருபையிற்காட்டில் ஆழ்வாருடைய க்ருபையே இந்தலோகத்தில் அபிவ்ருத்தமாகையாலே யென்றும் சொல்லிநின்றது கீழ்.

இதில்கீழே ஆழ்வாருடைய ஜ்ஞாநப்ரதாநம் ப்ரஸ்துதமாகையாலே அவர் ஸகலவேதாந்த தாத்பர்யமான அர்த்தவிஸேஷத்தைத் தமக்கு அறிவித்த ப்ரகாரத்தைச்சொல்லி, அதுக்கீடான குணங்களை யுடையராகையாலே பூர்ணரான வாழ்வார் விஷயத்தில் ஸேஷபூதன் ப்ரேமமேயன்றே அவர்க்கடிமைசெய்கையில் ப்ரயோஜநமென்று உபகாரஸ்ம்ருதியாலே அவருக்கு ஸேஷபூத

அரு :—ஒன்பதாம் பாட்டு. (மிக்கவேதியரித்யாதி). இன்று தொட்டு மென்கிற பாட்டுத்தொடங்கி அவதாரிகை யருளிச்செய்கிறார் (கீழே ஆழ்வாருடைய வித்யாதி). அருளினனவ் வருமறையின் பொருளென்கையாலே (ஜ்ஞாநப்ரதாநம் ப்ரஸ்துதமாகையாலே) - என்றது. அவருக்கு அடிமை செய்கையிலே ப்ரயோஜநமென்றது - ஸப்தார்த்தமாய், இத்தால் பலத்தை யருளிச்செய்கிறார் (உபகாரஸ்ம்ருதியாலே யென்று துடங்கி). (அடிமை செய்கையிலே ப்ரயோஜநமென்றது) - ப்ரேமமே கைங்கர்யங்களில் ப்ரதாந கைங்கர்ய மென்றபடி.

(க) ரா - ஸு - ௩அ - ௩௧. (உ) தி - வாய் - ௧ - ௧ - ௧.
(ங) தி - வ்ாய் - ௧௦ - ௬ - ௧.

னென்று ப்ரேமபூர்வகமாகப் பிறக்குமாதரமன்றோ அடிமையில் முடிந்தநிலமென்கிறார்.

கீழ் நாலாம் பாட்டிலே ஆசார்யவிஸ்வாஸம் சொன்னார். மேலிரண்டு பாட்டாலே ஆசார்ய வைபவமும் அவனுடைய உபகார வைபவமும் சொன்னார். இதில் உபகாரப்ரகாரோபபாதநம் பண்ணி நின்றுங்கொண்டு தம்முடைய க்ருதஜ்ஞதையைச் சொல்லுகிறார். ஆசார்யனுக்கு க்ருபையே வேஷமாய் ஸிஷ்யனுக்கு க்ருதஜ்ஞதையே வேஷமாயிருக்கும்.

வ்யா ;—(மிக்கவேதியரித்யாதி) ஆழ்வார் தமக்கறிவித்த வர்த்தத்தின் சீர்மையை யருளிச்செய்கிறார். (வேதியர்) வேதியராகிறார் - பாஹ்யஸாஸ்த்ரங்களை (க) "காண்பரோ கேட்பரோதான்" என்று கண்ணாலும் பாராதே செவியாலும்கேளாதே நித்யநிர்த்தோஷமான வேதப்ரமாண நிஷ்டரானவர்கள். (உ) "வெதஶாஸ்த்ராத்பரம் நாஸ்தி - வேதஸாஸ்த்ராத்பரம்நாஸ்தி" (ங) "வேதநூலோதுகின்ற துண்மையல்லதில்லை" என்றும் சொல்லுகிறபடியே வேதத்துக் கவ்வருகு ப்ரமாணமில்லை யென்றிருக்குமவர்கள்.

(மிக்கவேதியர்) அவ்வேதத்திலும் (ச) "வெதவாதரதாঃ - வேதவாதரதா:" என்றும், (ரு) "த்ரைவித்யா மாம் ஸோமபாঃ பூதபாபাঃ - த்ரைவித்யா மாம்ஸோமபா: பூதபாபா:" என்றும்

எத்த வருளினனென்று - அருள்பற்றாசாக ஒரு அவதாரிகை சொல்லிற்றுக் கீழ். இகழ்விலனென்ற பதத்தைத் தொட்டுக்கொண்டு இன்னமுமொரு அவதாரிகை யருளிச்செய்கிறார் (கீழே நாலாம்பாட்டிலென்று). கீழே நாலாம்பாட்டிலென்றது - இப்பாட்டுக்கு முந்திய நாலாம்பாட்டான இன்று தொட்டுமென்கிற பாட்டிலென்றபடி.

கீழ் வாக்யத்தை விவரிக்கிறார் (வேதஸாஸ்த்ராத்பரம்நாஸ்தி யென்று துடங்கி). வேதியரென்றது - பூர்வபாகநிஷ்டரைச் சொல்லுகிறது. மிக்க வேதியரென்றது - உத்தரபாக நிஷ்டரைச் சொல்லுகிறது,

(க) திருமாலை - எ. (உ) பார.
(ங) தி - ச - வி - எஉ. (ச) கீதை - உ - சஉ.
(ரு) கீதை - சு - உ0.

சொல்லுகிறபடியே ஆபாத ‡ப்ரஸித்தமாய் அல்பாஸ்திரங்களான ஸ்வர்க்காதி புருஷார்த்தங்களையும் தத்ஸாதநங்களான ஜ்யோதிஷ்டோமாதிகளையும், புருஷார்த்த தத்ஸாதநங்களாக அறுதியிட்டிருக்கையன்றிக்கே உத்தம புருஷார்த்தமான பகவத்ப்ராப்தியே புருஷார்த்தமென்றும், தத்ஸாதநமும் (க) "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்-ப்ரஹ்மவிதாப்நோதிபரம்" இத்யாதி வாக்யோக்தமான வேதநமாதல், (உ) "முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே - முமுக்ஷுர்வைஶரணமஹம்ப்ரபத்யே" என்கிற ஶரணாகதிரூபமான சரமஸாதநமாதலென்று, வேதாந்த விஜ்ஞாநத்தாலே ஸுநிஶ்சிதார்த்தராயிருக்குமவர்கள்.

(மிக்கவேதியர்) (ங) "மிக்கார்வேதவிமலர்" என்று ஆழ்வார் பாடே கேட்கையாலே மிக்கவேதியரென்கிறார். அன்றிக்கே, மிக்க வேதியரென்று - (ச) "சுடர்மிகுசுருதி" எனகிறபடியே ப்ரத்யக்ஷாதிகளிலதிகமான வேதப்ரமாணநிஷ்டரென்றுமாம். (வேதியர் வேதம்) (ரு) "ப்ராஹ்மணாநாம் தநம் வேத: - ப்ராஹ்மணாநாம் தநம்வேத:" என்றும் (சு) "அந்தணர்மாடு" என்றும் சொல்லுகிறபடியே அவர்களுக்கு பரமதநமானவேதம். (வேதியர்வேதம்) வேதத்தையே தங்களுக்கு நிரூபகமாகவும் தநமாகவு முடையாராயிருப்பர்கள்.

(வேதத்தினுட்பொருள்) அந்த வேதத்திலுண்டான வர்த்த விஶேஷத்தை. (வேதத்தின்பொருள்) அதாவது (எ) "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய: - வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:"

---

மிக்கவேதியரென்று இவரறிந்தபடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (வேதவிமலரென்று துடங்கி) மிக்கவென்றது - வேதியர்க்கு விஶேஷணமாதல், வேதத்துக்கு விஶேஷணமாதல்; வேதியரென்கையாலே நிரூபகத்வம். வேதியர் வேதமென்கையாலே வேதத்தையே தநமாகவுடையவரென்றபடி.

நிற்கப்பாடி யென்றதுக்கு மூன்று பொருள். துர்க்க்ரஹமான வேதார்த்தத்தை ப்ரதிபத்திவிஷயமாம்படிபாடி யென்னுதல். இந்த வர்த்தத்தை விவரிக்

---

(க) தை ஆநந்த - க.   (உ) ஶ்வேதா - சு - கஅ.
(ங) தி - வாய் - உ - சு - அ.   (ச) தி - வாய் - க - க - எ.
(ரு)   (சு) திருநெடு - எ.
(எ) கீதை - கரு - கரு.   ‡ ப்ரதீதமாய்

என்றும் (க) "வேதப்பொருளே யென்வேங்கடவா" என்றும், (உ) "வேதாந்தவிழுப்பொருள்" என்றும் சொல்லுகிறபடியே ஸகலவேதங்களும் ஒருமிடறாக வோதித்தலைக்கட்டுவது பகவத் ஸ்வரூபாதிகளையிறே. (உட்பொருள்) அதில் தத்விஷய ப்ரதிபாதகமானவம்ஸம் புறப்பொருளாய், ததீயப்ரதிபாதகமானவம்ஸம் உட்பொருளாயிருக்கும். அதில் புறப்பொருளையே சொல்லிவிடுகை யன்றிக்கே அதுக்கு ஹ்ருதயமான ததீயவைபவத்தை (ந) *பயிலுஞ்சுடரொளி (ச) *நெடுமாற்கடிமை இரண்டாலு மருளிச் செய்தார்.

(நிற்கப்பாடி) துர்க்க்ரஹமான வேதார்த்தத்தை ப்ரதிபத்தி விஷயமாம்படி பாடி. (நிற்கப்பாடி) கேட்டவர்கள் நெஞ்சிலே † ஊற்றிருக்கும்படி பாடி யென்றுமாம். (வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி) அது * நிற்கும்நான்மறையானைப்போலே அதிலர்த்த ரூபமான விதுவும் ஸர்வகாலமும் அழிவின்றிக்கே நிற்கும்படியாகப் பாடி யென்றுமாம். (வேதியா வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி) வைதிகரானவர்கள் அதுக்கு ஹ்ருதயமான அர்த்ததாத்பர்யத்தை யறிந்து அதிலே நிஷ்டராம்படி பாடி.

(என்னெஞ்சுள் நிறுத்தினான்) அதுதன்னை என்னெஞ்சிலே ஸுப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினார். (என்னெஞ்சுள் நிற்கப்பாடி - நிறுத்தினான்) பாடுகிறபோதே என்னெஞ்சிலே தொங்கும்படிக்கீடாக விரகிட்டுப்பாடி நிறுத்தினான். (நெஞ்சுள் நிறுத்தினான்) அதுதன்னிலும் மேலெழச்சொல்லி விடுகையன்றிக்கே அந்தரங்கமாக உபதேசித்தார்.

---

கிறார் (கேட்டவர்கள் நெஞ்சிலேயென்று துடங்கி). அன்றிக்கே, வேதார்த்தத்தை அழிவின்றிக்கே ஸ்த்திரமாய் நிற்கும்படிபாடி யென்றுமாம். அன்றிக்கே வைதிகரானவர்கள் வேதஸாரமான ததீயஶேஷத்வத்தையறிந்து அதிலே நிஷ்டராம்படி யென்றுமாம். லௌகிகருடைய ஹ்ருதயங்களிலே நிற்கும்படிபாடின மாத்ரமன்றிக்கே அதுதன்னை என்னெஞ்சிலே ஸுப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினார்.

---

(க) பெரி - தி - உ - கூ - சு. (உ) பெரி - தி - ச - ந - எ.
(ந) தி - வாய் - ந - எ - ச. (ச) தி - வாய் - அ - ௧௦.
† உற்றிருக்கும்படி.

(என்நெஞ்சுள் நிறுத்தினுன்) புன்மையே வேஷமான என்
நெஞ்சிலே படுத்தினர். (நிறுத்தினுன்) உபதேசித்தவர்தாமே
லைக்கிலும் குலைபாதபடி த்ருடாத்யவஸாயமாக வுபதேசித்தார்.
என்நெஞ்சுள் நிறுத்தினுன்) தத்விஷயமுமுட்பட வூடுபோகாத
வென்நெஞ்சிலே ததீய வைபவமுட்பட நடையாடும்படி பண்
ணினர்.

(மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி யென்
நெஞ்சுள் நிறுத்தினுன்) வேதார்த்தங்களை வகுத்து அதுக்குப்
பாசுரமிட்டுத் திருவாய்மொழி பாடினுப்போலேயோ அப்பரமார்த்
தங்களை என்நெஞ்சிலே படுத்தினவருமை. வேதார்த்தங்களைத்
திருவாய்மொழியிலே சேர்த்து, அத்திருவாய்மொழினர்த்தங்களை
என்நெஞ்சிலே சேர்த்தார்; ஆசார்யவைபவம் கைப்பட்டவனுக்காய்
த்து ஸகல வேதார்த்தங்களும் கைப்படுவது. (மிக்கவித்யாதி). ப்ர
மாணவைபவத்தையும் ப்ரமேயமான தத்வவைபவத்தையும் ப்ரமா
த்ருவைபவத்தையும் அபிமதவைபவத்தையும் இவர் நெஞ்சிலே
படும்படி ஸ்ரீஜ்ஞோபதேசம் பண்ணினுராய்த்து.

---

உள்ளென்ற ஶப்தத்துக்குப் பொருளருளிச்செய்கிருர் (அதுதன்னிலும்
மலெழவென்றுதுடங்கி). என்னென்ற ஶப்தத்துக்குப் பொருளருளிச்செய்
கிருர் (புன்மையே வேஷமானவென்னெஞ்சிலே படுத்தினுரென்று). (உள்பு
காத) என்றது - உள்ளே ப்ரவேசியாதவென்றபடி. நிறுத்தினுனென்கைக்கு
அருமையோவென்ன வருளிச்செய்கிருர் (வேதார்த்தங்களையித்யாதி). வேதா
ர்த்தங்களை நெஞ்சிலே நிறுத்தினதுக்கு ஜ்ஞாபகமேதென்ன வருளிச்செய்
கிருர் (ஆசார்ய வைபவமித்யாதி). வேதார்த்தங்களைத் திருவாய்மொழியிலே
நிற்கப்பாடி அந்தத்திருவாய்மொழியினர்த்தங்களை என்நெஞ்சிலே சேர்த்தா
ரென்றுமாம். இவ்வர்த்தத்தில், நிற்கவென்றது - திருவாய்மொழியிலே நிற்கப்
பாடி யென்றபடி. வேதமென்கையாலே-ப்ரமாணவைபவம். வேதியரென்கை
யாலே - ப்ரமாத்ருவைபவம். பொருளென்கையாலே - ப்ரமேயமான பகவத்
வைபவம். உட்பொருளென்கையாலே - அபிமதமான ததீயவைபவம்.

(தக்கசீர்ச்சடகோபனென்நம்பி) இப்படி உபதேஶிக்கவல்ல ஜ்ஞாநாதிபூர்த்தியைக்காட்டி என்னுடைய ஶாட்ட்யத்தைப்போக்கித் தம்முடைய பூர்த்தியிலே நிலைநின்றவர். குறைவாளரைக் குறைவறுக்கையிறே ஒருவன் பூர்த்திக்குமேலெல்லை. (நம்பி) விபூதிக்காக வுபதேஶித்தாலும் தம்முடைய ஜ்ஞாநாதிகளைத் தரை காணவொண்ணாதவர். (என்நம்பி) அவருபதேஶித்த வர்த்தங்களிலும் அவருடைய பூர்த்தியிலேபாய்ந்து இவர் தோற்றது. (தக்கசீர்ச்சடகோபனென்நம்பி) * தக்ககீர்த்தித் திருக்குறுங்குடிநம்பியானவருடைய நம்பியன்று இவருடைய நம்பி. அப்பூர்த்தி என்னளவில் வந்ததில்லையே.

(ஆள்புக்ககாதல்) அவருக்கு அடிமைபுக்கத்தாலுண்டான வாதரம். (அடிமைப்பயனன்றே) அடிமையே ப்ரயோஜநமாக வுடையதன்றோ. முற்பட அடிமைபுக்க அநந்தரம் ஆதரம் நடந்து பின்பு அடிமைசெய்யுமதுவே அவருக்கு ப்ரத்யுபகாரம். முற்பட

---

(தக்க) உபதேஶிக்கைக்குத் தகுதியானவென்றபடி. (ஜ்ஞாநாதிகளைத் தரை காணவொண்ணாதவர்) என்றது-எத்தனையேனு மதிசயித ஜ்ஞாநத்தையுடையவர்களுக்கும் உபதேஶம்பண்ணத்தக்க ஜ்ஞாநாதிபூர்த்தியை யுடையவரென்றபடி. என்னென்ற ஶப்தத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (அவருபதேஶித்த வர்த்தங்களிலுமென்று துடங்கி). சடகோபனென்நம்பி யென்கையாலே திருக்குறுங்குடிநம்பியை வ்யாவர்த்திக்கிறது. திருக்குறுங்குடிநம்பியைப்பற்ற இவர்க்கதிஶயமேதென்ன வருளிச்செய்கிறார் (அப்பூர்த்தி என்னளவில் வந்ததில்லையே) என்று.

“அடிமைப்பயனன்றே” என்றதுக்கு இரண்டுபொருள். அதில் அவதாரிகையிலே ஆழ்வார்விஷயமான ஸ்நேஹமே கைங்கர்யத்தில் வைத்துக்கொண்ட ஸாராம்ஸமான ப்ரயோஜநமென்றார். அன்றிக்கே இவ்விடத்தில் ஆழ்வார் விஷயமானவாதரம் கைங்கர்யத்தை ப்ரயோஜநமாக வுடைத்தாயிருக்குமென்கிறார். அதாவது ஶேஷத்வம் ஆதரத்தைவிளைக்கும். ஆதரம் கைங்கர்யத்திலே அந்வயிப்பிக்குமென்றபடி. இந்த வர்த்தத்தை யருளிச்செய்கிறார் (முற்பட வடிமைபுக்கென்று தொடங்கி) “முற்படவடிமைபுக்கு” என்ற கீழ்வாக்யத்தை

ஶேஷபூதனைப் பின்பு ப்ரேமம்நடந்து ப்ரேமாநுரூபமான கிஞ்சித்காரமும் நடக்கவேணும். ஆசார்யபவ்யதையும், ஆசார்யப்ரேமமும் ஆசார்ய கிஞ்சித்காரமும் இம்மூன்று மபேக்ஷிதமிறே ஶிஷ்யனுக்கு.

அவர் பகவச்சேஷத்வத்தையும் பகவத்ப்ரேமத்தையும் பகவச்சேஷவ்ருத்தியையும் உபதேஶித்தார். இவர் ஆழ்வாருக்கு ஶேஷமாய் அவர்க்கேஸ்நிக்தராய் அவருக்கே கிஞ்சித்கரிக்கத் தேடுகிறாராய்நின்றது. இவர்கற்றது இதிலேயாய்த்து; அவர்புறப்பொருளை விட்டு உட்பொருளைக்கொடுத்தார். இவர் உட்பொருளான பகவத்விஷயந்தன்னைப் புறப்பொருளாக்கி அதிலுமுட்பொருளான ஆழ்வார்திருவடிகளிலே ஶேஷபூதராய்ப் ப்ரேமபூர்வகமான கைங்கர்யத்திலே இழிகிறாராய்த்து.

(அடிமைப்பயனன்றே) அடிமைப்ரயோஜநமென்னுமிடம் ஆழ்வார் ஸ்ரீபாதத்திலே கற்றார். (அன்றே) அதுவேயன்றோ அர்த்தம். அந்த வழுவிலாவடிமைசெய்கிறதிற்காட்டில் இதுவன்றோ உறுவது.

ஒன்பதாம் பாட்டுக்கு அழகிய மணவாளப்பெருமாள்

நாயனார் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

விவரிக்கிறார் (முற்பட ஶேஷபூதனையென்று துடங்கி). இத்தால் பலிதார்த்தத்தை யருளிச்செய்கிறார் (ஆசார்ய பவ்யதையுமென்று துடங்கி).

உட்பொருளென்றது - ததீயஶேஷத்வமென்றருளிச்செய்தார் கீழ். அன்றிக்கே, உட்பொருளென்றது-பகவச்சேஷத்வமென்றருளிச்செய்கிறார் (அவர் பகவச்சேஷத்வத்தையு மென்றுதுடங்கி). கீழில்ரீதியன்றிக்கே, பொருளென்று - ஸ்வர்க்காதி புருஷார்த்தமாய், உட்பொருளென்று - பகவத்விஷயமாக்கி, ஒரு அர்த்த மருளிச்செய்கிறார் (அவர் புறப்பொருளைவிட்டித்யாதி). இந்த வர்த்தததுக்கு, புறப்பொருளென்றது - பூர்வபாகார்த்தம். அடிமையே ப்ரயோஜநமென்கிறவிடம் ஆழ்வார் ஸ்ரீபாதத்திலே, அவர் வழுவிலாவடிமை செய்யவேண்டுமென் றருளிச்செய்யக்கேட்டு, அங்கே அப்யஸித்தாரென்றபடி.

மூ :—பயனன்றாகிலும் பாங்கலராகிலும்
செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான்
குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே. (கo)

## நஞ்ஜீயர் வ்யாக்யாநம்.

அவ் :—பத்தாம் பாட்டு. பயிர்கள் எறிமறியக்கடவதிறே. அப்படியே ஆழ்வார்பண்ணினவுபகாரத்தை ஸ்மரிக்கையாலே தாம் பண்ணினபக்தி ஒன்றுமில்லையாய்த்தோற்றி தேவரீர் திருவடிகளிலே இப்போதிறே நான் ஸ்நேஹிக்கத்தொடங்கினேனென்கிறார்.

வ்யா :—(பயனன்றாகிலுமித்யாதி) அநுத்தேஶ்யரேயாகிலும் அபவ்யரேயாகிலும் எம்பெருமானன்றே அநாஶ்ரிதரென்று கைவிடுகைக்கும், அவிதேயரென்று நிரஸிக்கைக்கும். (செயல்நன்றாக) நின்றநிலையிலே துர்வ்ருத்தரையும் ஸுவ்ருத்தராக்கிக் கொள்ளுவார் ஆழ்வாரன்றோ. பகவத்விஷயம்போலே அதிகாரம்பார்த்துப் புகுகையன்றியே நின்றநிலையிலே புகுரலாம்படியிறே ஆழ்வாருடைய நீர்மையிருப்பது.

(குயிலித்யாதி). நின்றநிலையிலே கிட்டலாமென்கைக்கு நிதர்ஶநம் சொல்லுகிறது. இவரை அவகாஹித்த திர்யக்குக்களும் களித்து வர்த்திக்கும்படி இவரைக் கிட்டினார்க்கு முண்டுகாணும். (க) "ஹா ௩ுஹா௨ஹாயஹோவெ-ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" என்கை பகவத்விஷயத்துக்காகிலிறே ஒரு தேஶவிஶேஷத் தேறப்போக வேண்டுவது; ஏற்றமுள்ளவிஷயத்தைப்பற்றினார்க்கு இங்கேகிடைக்கும்போலே காணும. முக்தர்க்கிறே அங்குப்போகவேண்டுவது. முமுக்ஷுக்களுக்குக் கிடைக்குமிடமிறே இவ்விடம். எம்பெருமானோடு நித்யரோடு முக்தரோடு வாசியறஹ்ருஷ்டராம்படியிறே ஆழ்வாருடைய பூர்த்தி.

(முயல்கின்றேனித்யாதி) உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளிலே ஸ்நேஹத்தைப்பண்ணுகைக்கு உத்ஸாஹியாநின்றேன். பணிகொள்வானென்னப்புகில் பணிகொள்வானான குருகூர்நம்பி யென்னுதல்; பணிகொள்ளுகைக்காக முயல்கின்றேனென்னுதல்.

நஞ்சீயர் வ்யாக்யாநம் முற்றிற்று.

## நம்பிள்ளை ஈடு.

அவ:—பத்தாம்பாட்டு, (பயனன்றாகிலுமித்யாதி) ஆழ்வார் தமக்கு உபகரித்த உபகாரத்தை அநுஸந்தித்தவாறே தாம் இதுக்குமுன்பு ஆழ்வார் விஷயத்தில் நின்ற நிலையடங்க முதலடியிட்டிலாகத்தோன்றுகையாலே அவர் பண்ணினவுபகாரத்தைப் பேசுகிறார். (௧) "க்ருத்ஸ்நாம்வாப்ருதிவீம் தத்யாந்நதத்துல்யம்கதஞ்சந" என்கிறபடியே ஆசார்யவிஷயத்திலெல்லாம் செய்தாலும் அவன் பண்ணின உபகாரத்தைப்பார்த்தால் ஒன்றும்செய்யப்பெற்றதில்லையென்னும்படியாய்த்திருப்பது. அவன் இவனுக்கு உபகரித்தது ஸர்வேஶ்வரனையாகில் இன்னமும் ஒரு ஸர்வேஶ்வரனுண்டாகிலிறே இவனுக்குக்கொடுத்துப்ரத்யுபகாரம் பண்ணினானாகலாவது; ஆகையால் என்றும் குறைப்பட்டேபோமித்தனை.

வ்யா ;—(பயனன்றாகிலும்) ஒருவன் ஒருவனுக்கு உபகரிப்பது—தனக்கொருப்ரயோஜநத்தைப்பற்றியிறே; அங்ஙனொரு ப்ரயோஜநமில்லையேயாகிலும், (பாங்கலராகிலும்) ப்ரயோஜநமில்லாவிட்டால் சொல்லுகிறஹிதம் கேட்கைக்குப் பாங்காயிருக்கலாமிறே ; அங்ஙன்பாங்கின்றிக்கே யிருந்தார்களேயாகிலும், இப்படியிருக்கிறவர்களுக்கு ஹிதம் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமென்னென்னில் ; இவர்களநர்த்தம் பொறுக்கமாட்டாமை சொல்லுகிறது. ராவணனுடைய துர்தஶையைக்கண்டு (௨) "மித்ரமௌபயிகம்கர்த்தும்" என்று அவனுக்குங்கூட ஹிதம் சொன்னாளிறே பிராட்டி ; ஒருவன் தலைக்கடையையும் புறக்கடையையுமடைத்துக் கொண்டுகிடக்க, அவ்வகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால் கண்டுநிற்கிறவர்களுக்கு அவிக்க வேண்டியிருக்குமிறே; அப்படியேயாய்த்து ஆழ்வார்படியும்.

(செய்ல்நன்றாக) தன்னுடைய செயலாலே இவையெல்லாம் நன்றாம்படி; இவனுடைய செயலாலே எல்லாம் நன்றாம்படியென்

---

(௧) விஷ்ணுதர்மம் - ௭௦ - ௭௮. (௨) ரா • ஸு • ௨௧ - ௧௬.

னவுமாம். (திருத்திப்பணிகொள்வான்) (௧) "தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல" என்று ப்ராப்யமும் ப்ராபகமும் தானே யென்றத்யவஸித்திருக்கு மவர்களுடைய விரோதியைப்போக்கி அடிமை கொள்ளுமவனென்றதிறே ஸர்வேஶ்வரனை; அங்ஙனன்றிக்கே அவையொன்று மின்றிக்கே யிருக்குமவர்களையும் திருத்திப்பணி கொள்ளுமவரிறே இவர். "பணிகொள்வான்—குருகூர்நம்பி" என்றந்வயம்.

(குயில்நின்றாரித்யாதி), இவர் ஆற்றாமையாலே ஒரு காலத்திலே (௨) "காணவாராய்" என்று கூப்பிடுவது மொருபாசுரமுண்டு; ஹர்ஷத்தாலே இவர் (௩) "நிகரகல்வானத்தே" என்று களித்துச் சொல்லுவதும் ஒரு பாசுரமுண்டு; இரண்டு பாசுரத்துக்கும் குயிலாயிற்றுப் பயிற்றுவன. இவர் பேச்சைக் கேட்டசெவியேற்றாலே அவையும் இவர் பாசுரத்தைச் சொல்லுமாயிற்று. (குருகூர்நம்பி) (௪) "ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல்" என்று சேதநரளவின்றியே திர்யக்குக்களளவிலு மேறும்படியாய்த்து ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது.

(முயல்கின்றேனுன்றன் மொய்கழற் கன்பையே) உன்னுடையபோக்யமான திருவடிகளுக்கு அன்பைமுயலாநின்றேன். யத்நியாநின்றேன். (௫) "என்னைத்தீமனம் கெடுத்தாயுனக்கென் செய்கேன்" என்று அவர் தாமருளிச் செய்யுமாபோலே பண்ணினவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாமையாலே தடுமாறுகிறார். (௧௦)

பத்தாம்பாட்டு நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

---

(௧) தி - வாய் - ௩ - ௫ - ௧௧. (௨) தி - வாய் - ௮ - ௫ - ௨.
(௩) தி - வாய் - ௪ - ௫ - ௮. (௪) தி - வாய் - ௬ - ௭ - ௨.
(௫) தி - வாய் - ௨ - ௭ - ௮.

அவ ;—பத்தாம்பாட்டில், ஆழ்வார் தமக்கு உபகரித்தவுபகாரத்தை யநுஸந்தித்தவாறே தாம் இதுக்கு முன்பு ஆழ்வார் விஷயத்தில் நின்றநிலையடங்க முதலடியிட்டிலாராகத் தோற்றுகையாலே அவர் பண்ணின வுபகாரத்தைப் பேசுகிறார். ஆசார்யன் பண்ணின வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லையோ வென்னில், (௧) "ஶ்லோகம் வாவப்யதிவீடிஷஜாத்... ... க்ருத்ஸ்நாம்வா ப்ரிதிவீம்தத்பாந்ந ததத்தில்யம்கதஞ்சந" என்று பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமியும் ஸத்ருஶமன்றென்றதிறே ஶாஸ்த்ரம்.

அவன் இவனுக்கு உபகரித்தது ஸர்வாதிகமாயிருப்பதொரு மிதுநத்தையானால் இப்படியே யிருப்பதொரு மிதுநத்தையுபகரித்தாலிறே இவன் ப்ரத்யுபகாரம் பண்ணினானாவது. ஆகையாலே ஆசார்யவிஷயத்தில் எல்லாம் செய்தாலும் அவன் பண்ணின வுபகாரத்தைப் பார்த்தால் ஒன்றும் செய்திலனாய், என்று மொக்கக் குறைவாளனாய்ப் போருமித்தனை.

வ்யா ;—(பயனன்றாகிலும்) நாட்டில் ஒருவனுக்கு ஒருவன் உபகரிப்பது ஒரு ப்ரயோஜநத்தைப்பற்றவிறே. அங்ஙனொருப்ரயோஜநமில்லாதிருக்கச் செய்தேயும். (பாங்கலராகிலும்) ப்ரயோ

---

அரு :—பத்தாம் பாட்டு. "ஆட்புக்ககாத லடிமைப்பயனன்றே" என்று-தாம் அநுகூலராய் கைங்கர்யங்களைப் பண்ணிக்கொண்டிருக்க, "பயனன்றாகிலும் பாங்கலராகிலும்" என்றநுஸந்திக்கக்கூடுமோவென்கிற ஸங்கையிலே, அது தம்நெஞ்சில் படாமையாலே யருளிச்செய்கிறாரென்று அவதாரிகை யருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி) (தமக்கு) மதுரகவிகளுக்கு. (உபகாரத்தை) என்றது - என்னெஞ்சுள் நிறுத்தினானென்றதைக் கடாக்ஷித்து. (இதுக்கு முன்பு) என்றது - பயனன்றாகிலு மித்யாத்யநுஸந்தாநத்துக்கு முன்பென்றபடி. (அவர்பண்ணின வுபகாரம்) என்றது - தன்பக்கலொன்று மின்றிக்கேயிருக்க, அவர்பண்ணின வுபகாரமென்றபடி. முதலடியிட்டிலராகத் தோற்றுமைக்கு ஹேது - தாம்பண்ணின வநுகூலாசரணம் ஸத்ருஸமல்லாமையாலே அத்தைப் பண்ணக்கூடாதென்று கருத்து. (ப்ரத்யுபகாரம்) ஸத்ருஸோபகாரம்.

ப்ரத்யுபகாரமில்லாமைக்கு ஶாஸ்த்ரம் காட்டினவநந்தரம் உபபத்தியும் காட்டுகிறார் (அவனிவனுக்கித்யாதி).

---

(௧) விஷ்ணுதர்மம் - ௭௦ - ௭௮.

ஜநமில்லாவிட்டால். சொல்லுகிற ஹிதம் கேட்கைக்குப் பாங்காயிருக்கலாமிறே. அங்ஙன் பாங்கின்றிக்கே யிருந்தார்களேயாகிலும். இப்படி யிருக்குமவர்களுக்கு ஹிதம் சொல்லுகைக்குஹேது வென்னென்னில். இவர்களநர்த்தம் பொறுக்கமாட்டாமையிறே.

இப்படி உபதேசித்தாருண்டோ வென்னில், ராவணனுடைய துர்க்கதியைக்கண்டு (க) "விதிதஸ்ஸஹி தர்மஜ்ஞச் சரணாகதவத்ஸல: தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி" என்று அவனுக்கு ஹிதம் சொன்னாளிறே பிராட்டி; ஒருவன் தலைக்கடையும் புறக்கடையுமடைத்துக் கொண்டு அகத்துக் குள்ளேகிடக்க, அகம் நெருப்புப்பட்டுவேவாநின்றால், கண்டு நின்றார் அவிக்கும்போது, தங்களுக்கொரு ப்ரயோஜநத்தைப்பார்த்தாதல், உள்ளே கிடந்தவன பேக்ஷித்ததுக்காகவாதலன்றே அவிப்பது; இப்படியாய்த்து ஆழ்வார்படியும்.

(செயல்நன்றாக) தனக்கொரு ப்ரயோஜநமில்லையானாலும், எதிர்த்தலை பாங்கின்றியே யொழிந்தாலும் அவனுஜ்ஜீவிக்கும்படி யென்னென்னில், தம்முடைய செயலாலே எல்லாம் நன்றாம்படி பண்ணி இவன்செயல்தான் நன்றாகும்படி பண்ணி யென்றாகவுமாம்.

(திருத்திப்பணி கொள்வான்) (உ) "தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப்பணி கொள்ளவல்ல" என்று ப்ராப்யமும் ப்ராபகமும் தானே யென்றத்யவஸித்திருக்கு மவர்களுடைய விரோதியைப் போக்கி அடிமை கொள்ளுமவனென்றதிறே ஸர்வேஶ்வரனை; அங்ஙனன்றிக்கே இவையொன்று மின்றிக்கே யிருக்குமவர்களையும்

---

துர்க்கதிகண்டு உபதேசிக்கைக்கு உபபத்தியும் காட்டுகிறார் (ஒருவனித்யாதி) (அகம்) க்ருஹம்.

ஶங்காஸமாதாநபூர்வகம் எடுத்த ப்ரதீகத்துக்குத் தாத்பர்யம் (தனக்கித்யாதி), ஸ்வப்ரயோஜநமில்லாதே போனாலும் அவன் ப்ரயோஜநமானாலும் ஸித்திக்க வேண்டுவதொன்றுண்டே யென்று ஶங்கைக்குக்கருத்து; செயல் நன்றாக வென்றது-ஸாமாந்யமாக விருக்கையாலே, ஆழ்வாருடைய செயலாலே யென்று கீழருளிச்செய்து, இவன் செயலை நன்றாகப் பண்ணியென்றர்த்தாந்தர மருளிச்செய்கிறார். (இவன் செயல்தானித்யாதி.)

திருத்தியென்றதுக்கு-திருந்தாதவரையும் திருத்தியென்றாய், வ்யாவர்த்ய பூர்வகமாகத் தாத்பர்யமருளிச் செய்கிறார். (தீர்ந்தவித்யாதிவாக்யத்வயத்தாலே), (இவை யொன்றுமின்றிக்கே) என்றது-ப்ராப்யம் அவனே யென்றும், ப்ராபகம்

---

(க) ரா - ஸு - உக - கசு. (உ) தி - வாய் - ரு - ஞ - கக.

திருத்திப்பணி கொள்ளுமவரிறே ஆழ்வார் ; "பணிகொள்வான்-குருகூர்நம்பி" என்றந்வயம்.

"குயில்நின்றார் பொழில்சூழ்" என்றவிடம் திருத்திப்பணி கொள்ளும்படிக்கு த்ருஷ்டாந்தம். இவர் ஒரு காலத்திலே ஆற்றாமையாலே (க) "காணவாராய்" என்று கூப்பிடுவதுமொருபாசுரமுண்டு ; (உ) "யாவர்நிகரகல்வானத்தே" என்று களித்துச்சொல்லுவது மொருபாசுரமுண்டு ; இவர் பாசுரத்தைக் கேட்டகுயில்களும் செவியேற்றாலே இப்பாசுரத்தையே சொல்லும். ஆக இரண்டு பாசுரத்துக்கும் குயில்களாய்த்துப் பயிற்றுவன. (குருகூர் நம்பி) (ங) "ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல்" என்று சேதநாளவன்றிக்கே திர்யக்குக்களளவும் ஏறும்படியாயாய்த்து ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது.

(முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே) உன்னுடைய ஶ்லாக்யமான திருவடிகளுககன்பையே, முயல்கின்றேன்—அர்த்தியாநின்றேன். செய்கிறவடிமையில் பர்யாப்திபிறவாமையாலே திருவடிகளிலே எனக்கபிநிவேஶம் வேணுமென்று அர்த்திக்கிறார். (ச) "என்னைத்தீமனம் கெடுத்தாயுனக்கென் செய்கேன்" என்று ஆழ்வார் தாம் அவ்விஷயத்திலே தடுமாறினாற்போலே ஆழ்வார் பண்ணினவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாமையாலே தடுமாறுகிறார். கo

பத்தாம்பாட்டுக்குப் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

அவனே யென்றும் சொல்லுகிற அத்யவஸாயங்களின்றிக்கே யென்றபடி. கொள்வானென்றது-கொள்ளுகைக்காக வென்று போராமைக்காக அந்வயம் காட்டுகிறார் (பணிகொள்வானித்யாதி) (செவியேற்றாலே) செவியின்வழியாலே, (பயிற்றுகை) அப்யஸித்துச் சொல்லுகை

நம்பிபததாத்பர்யம் (ஊருமித்யாதி) (மொய் - ஶ்லாக்யதை; "கழற்கு" என்றது-ஸம்பந்தஸாமாந்யஷஷ்டியாய், விஷயவிஷயீ பாவத்தையிட்டுத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (செய்கிறவித்யாதி) முன்பே அபிநிவேஶமுண்டாயிருக்க, இவர்புநஃ அதைப்ப்ரார்த்திப்பா னென்னவருளிச் செய்கிறார் (என்னைத் தீமனம் கெடுத்தாயித்யாதி). (கo)

---

(க) தி - வாய் - அ - ௫ - உ. (உ) தி - வாய் - ச - ௫ - அ.
(ங) தி - வாய் - ௬ - எ - உ, (ச) தி - வாய் - உ - எ - அ.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனுர் வ்யாக்யாநம்.

———(o)———

அவ ;—பத்தாம்பாட்டு. (பயனன்றாகிலுமித்யாதி) கீழ்ப்ரபந்தத்திலோடின தாத்பர்யம் - ஆழ்வாருடைய ஸர்வப்ரகாரவைலக்ஷண்யமும் இப்படி விலக்ஷணரான வாழ்வார் தம்பக்கல் பண்ணின உபகாரவைபவமுமிறே; தம்முடைய தோஷத்துக்கு எதிர்த்தட்டான ஆழ்வார்வைலக்ஷண்யமும், தம்முடையகுறைக்கெதிர்த்தட்டான உபகாரகத்வமும் இவ்விரண்டையும் சொல்லிக் கொண்டு போந்தார் கீழ்.

இப்பாட்டில் அவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் தேடிக்காணாமையாலே தெகுடாடுகிறார். "வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடியென்னெஞ்சுள் நிறுத்தினுன்" (க) "யொஶாஂஊா திவஸஊஷெவஶா வாः - யோமாதகாதி ஸஇதேவமாவாः" என்று முமுக்ஷுதசையோடு முக்ததசையோடுவாசியற உபகாரஸ்ம்ருதி நடக்குமது போக்கி ப்ரத்யுபகாரம் பண்ணித்தலைக்கட்டப் போகாதிறே.

---

அரு ;—பத்தாம்பாட்டு. (பயனன்றாகிலுமித்யாதி) (ஸர்வப்ரகாரவைலக்ஷண்யம்) என்றது-ப்ராப்யத்வம், ப்ராபகத்வம், ஜ்ஞாநப்ரதத்வம், தோஷப்ரதிபடத்வம் முதலானவைலக்ஷண்யமென்றபடி, கீழில்ப்ரபந்தத்திலோடின தாத்பர்யமென்றுதுடங்கி அருளிச்செய்த வாக்யத்தை விவரிக்கிறார் (தம்முடைய தோஷத்துக் கெதிர்த்தட்டான வென்றுதுடங்கி), (தெகுடாடுகிறார்) என்றது-தடுமாறுகிறாரென்றபடி, தெகுடாடுகிறதென்? ப்ரத்யுபகாரம் பண்ணிவிடுகிறதுக் கென்னென்ன, (உ) "எதுவுமொன்றுமில்லை செய்வதங்குமிங்கே" என்கிறபடியே முமுக்ஷுதசையோடு முக்ததசையோடுவாசியற ப்ரத்யுபகாரம் பண்ணித் தலைக்கட்டப்போகாதென்கிறார் (வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடியென்று துடங்கி), வேதத்தினுட்பொருளென்றது-முமுக்ஷுதசை, "ஸஇ தேவமாவாः" என்றது-முக்ததசை, இந்தஸ்ருதிக்குப்பொருளாவது - யः-யாதொரு ஆசாரியன், மா-என்னை, ததாதி-ஶேஷத்வஜ்ஞாநத்தை யுண்டாக்கி ஈஶ்வரன் பொருட்டு ஸமர்ப்பிக்கிறுன், ஸஇ-ஸஏவ - அவனே, தேவः - பரதேவதை.

---

(க) தை - ப்ருகுவல்லி - கo. (உ) தி - வாய் - எ - கூ - கo,

ப்ரத்யுபகார நிரபேக்ஷத்வம் ஆசார்யலக்ஷணமாய், ப்ரத்யுபகாரஸாபேக்ஷத்வம் ஶிஷ்யலக்ஷண மாகையாலே அதுக்குவழி தேடிக்காணுமையாலே அலமருகிறார். உபகாரம் அதுக்குப்ரத்யுபகாரம் தேடுகையிலேமூட்டும். உபகாரகௌரவம் ப்ரத்யுபகாரமில்லாதபடி பண்ணும்; அதுக்குஸத்ருஶ ப்ரத்யுபகாரமாகவேணுமே; அதுண்டாகிலிறே இவன்பண்ணலாவது; இனி எத்தைச்செய்வோமென்கிற தலைசீய்ப்போடேகாலம் போக்குமித்தனை, இவன் திருத்தித்தருகையாலே பகவத்விஷயத்துக்கு ஆத்மஸமர்ப்பணம் பண்ணலாம், இவன்றானே திருத்தினவற்றை இவனுக்குக் கொடுக்கை ஸத்ருஶமன்றே.

வ்யா ;—(பயனன்றாகிலும் பாங்கலராகிலும்) (க) “ தர்மார்-த்தௌ யத்ர ந ஸ்யாதாம் ஶுஶ்ரூஷா வா ததாவிதா । தத்ர வித்யா ந வக்தவ்யா-தர்மார்த்தௌ யத்ர ந ஸ்யாதாம் ஶுஶ்ரூஷா வா ததாவிதா । தத்ர வித்யா ந வக்தவ்யா ” என்கிறபடியே தர்மார்த்தரூபமான ப்ரயோஜநமாதல், “ ஶுஶ்ரூஷா வா ” என்கிற அதிகாரமாதல் எனக்கின்றிக்கே யிருக்கச் செய்தேயும் அத்ருஷ்ட ப்ரயோஜநமாதல். த்ருஷ்டப்ரயோஜந மாதலின்றிக்கே யிருக்கச்செய்தேயும், பகவத்ப்ரியஸித்திக்காதல், பகவத்ஸமாராதந ஶேஷமாக இவன்

ப்ரத்யுபகாரம் பண்ணஶக்யமில்லாவிட்டால், வெறுமனே யிருக்கிறதுக்கென்னென்ன, ப்ரத்யுபகாரஸாபேக்ஷத்வம் ஶிஷ்யலக்ஷணமாகையாலே வெறுமனேயிருக்கப் போகா தென்கிறார் (ப்ரத்யுபகாரநிரபேக்ஷத்வமென்று துடங்கி), உபகாரகௌரவம் ப்ரத்யுபகாரமில்லாதபடி பண்ணுகிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (அதுக்குஸத்ருஶ ப்ரத்யுபகாரமாகவேணு மென்றுதுடங்கி,) (தலைசீய்ப்போடே) என்றது-ஶிரஃகம்பத்தோடே யென்றபடி. (உ) “ உதவிக்கைம்மாறென்னுயிர் ” என்று ஆத்மாவை ப்ரத்யுபகாரமாக ஸமர்ப்பித்தாலேயென்னவருளிச் செய்கிறார் (இவன் திருத்தித்தருகையாலே யென்றுதுடங்கி).

பயனென்று-தர்மார்த்தங்களைச் சொல்லுகிறது. பாங்கென்று-ஶுஶ்ரூஷையைச் சொல்லுகிறது. தர்மார்த்தரூபமான ப்ரயோஜநமாத லென்றவாக்யத்தை விவரிக்கிறார் (அத்ருஷ்டப்ரயோஜந மாதலென்றுதுடங்கி), (அத்ருஷ்ட ப்ரயோஜநம்) தர்மம். (த்ருஷ்ட ப்ரயோஜநம்) அர்த்தம்.

இந்தவாக்யத்வயத்தையும் விவரிக்கிறார் (பகவத்ப்ரியஸித்திக் காதலென்று

(க) (உ) தி - வாய் - எ - கூ - கo.

பக்கலுண்டான த்ரவ்யஸித்திக்காதல், அன்றிக்கே அவனுடைய ஶுஶ்ரூஷையாகிற அதிகாரபூர்த்தி கண்டாதலிறே பகவத் விஷயத்தை உபதேஶிக்கைக்கு யோக்யதையுள்ளது. "க்ஷயஷ்டிஃ, யஷ்டிஃ, ஶுஶ்ரூஷுஃ-க்ஷயாவயாஃ - அர்த்ததஃ, தர்மதஃ, ஶுஶ்ரூஷுஃ, அத்யாப்யஃ" என்கிறபடியே நிரவதிகவத்ஸலனானவனும் (க) "ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்-ஶிஷ்யஸ்தேஹம் ஶாதிமாம் த்வாம்ப்ரபந்நம்" என்றபின்பிறே உபதேஶ ப்ரவர்த்தகனாய்த்து; இவர் அப்படியன்றிக்கே துர்க்கதியே பற்றாசாக விறே உபதேஶித்தது. புன்மையாகக்கருதினதே பற்றாசாகவாய்த்து இவர் அனன்யாயத்தனாய்த்து; இத்தலையில் ஒருநன்மை பார்க்கவேண்டிற்றில்லை புன்மையாகிற துர்க்கதி.

ஸ்வப்ரயோஜந நிரபேக்ஷமாகப் பிறருடைய துர்க்கதியே பற்றாசாகவாய்த்து ஸத்துக்கள் உபதேசிப்பாது. (உ) "ஶ்ரேய தாம்வா மாயெ-டீமெஃ [illegible] தனுஜ்ஞாஃ । நவா நயெதந்த்வ [illegible] - ஶ்ரேயதாம்பரமா

துடங்கி வாக்யத்வயத்தாலே), தர்மமாவது-திருவாராதநத்துக்கு உபகரணமான திருமஞ்சனம், திருப்பளித்தாமம் தொடக்கமான வற்றைஸமர்ப்பிக்கை, இதிலேபகவத் ப்ரீதியுண்டாமென்றபடி; தர்மார்த்த ஶுஶ்ரூஷைகளைப் பண்ணினவனுக்கே உபதேஶிக்க யோக்யதையுள்ள தென்றதுக்கு ப்ரமாணமருளிச் செய்கிறார் (அர்த்ததஃ என்று துடங்கி) (அத்யாப்யஃ) அத்யயநம் பண்ணுவிக்கப் படுமவன்.

இவர் துர்க்கதியே பற்றாசாக வுபதேஶித்தாரோவென்ன வருளிச்செய்கிறார் (புன்மையாகக்கருதினதே யென்றுதுடங்கி) ஏதாகிலுமொருநன்மைகண்டு உபதேஶிக்கவேண்டாவோ வென்னவருளிச் செய்கிறார் (இத்தலையிலே ஒரு நன்மை யென்றுதுடங்கி), ஸத்புருஷர்களுபதேஶிக்கிற தெல்லாமிப்படியே யென்கிறார் (ஸ்வப்ரயோஜநநிரபேக்ஷமாக வென்றுதொடங்கி). இப்படி துர்க்கதியே பற்றாசாகவுபதேஶித்தாருண்டோ வென்னவருளிச் செய்கிறார் (ஶ்ரேயதாமித்யாதி), "ஏதத் இந்த வுபதேஶிக்கிறவர்த்தம், அந்யதா-ப்ராந்திமூலமென்று, நமந்தவ்யம்-நினைக்கப்படுமதன்று" என்று ஶப்தார்த்தம்; "தநுஜாத்மஜாஃ" என்று அஸுரஸம்பந்தம் சொல்லுகையாலே அவர்களுடைய துர்க்கதி தோற்றுகிறது.

(க) கீதை - உ - எ. (உ) வி - ரு - க - கஎ - கூரு.

ர்த்தோமேதைதேயா தநுஜாத்மஜா:। நசாந்யதைதந்மந்தவ்யம் நாத்ரலோபாதி காரணம்" என்கிறபடியே. "நாத்ரலோபாதி காரணம்" என்கிறவிடம் ஸ்வப்ரயோஜநநிரபேக்ஷத்வம். "தநுஜாத்மஜ:" என்கிற ஆஸுரஸம்பந்தம்-பிறருடைய தார்க்கதி; "ஶ்ரூயதாம்" என்கிறவிடம் உபதேஶம். "பரமார்த்த:" என்கிறவிடம்-உபதேஷ்டவ்யமான அர்த்தகௌரவம். "மே" என்கிறவிடம்-உபதேஷ்டாவினுடைய ஆப்தபூர்த்தி.

(பயனன்றாகிலும் பாங்கலராகிலும்) நிஷ்பலமேயாகிலும் அநதிகாரிகளேயாகிலும். (செயல்நன்றாகத்திருத்தி) அநுஷ்டாநபர்யந்தமாகவுபதேஶித்துத் திருத்தினர்; என்னளவன்றியிலே தம்முடையவளவிலே உபதேஶித்தார். க்ஷத்ரபந்துவுக்கும் தார்க்கதியே பற்றாசாகவைஷ்ணவனுபதேஶிக்க விடத்திலும் காலாந்தரத்திலேயிறே அவனுக்குப்பலித்தது. இவர், ஊநநநாடுமுலகமும் தன்னைப்போலே யாக்குமவராகையாலே செயல் நன்றாகத் திருத்தினர்.

(செயல்நன்றாகத்திருத்தி) இவருபதேஶித்த வர்த்தம் என்னெஞ்சிலேபட்டு அதுதான் அத்யவஸாயபர்யந்தமாய் அவ்வளவன்றிக்கே அநுஷ்டாநஶேஷமாய் அவ்வநுஷ்டாநந்தான் ஸதஸதநுஷ்டாந மிஶ்ரமாகையன்றிக்கே ஸதநுஷ்டாநமே யாம்படி திருத்தினர்.

முற்படஶ்ரவணமும், ஶ்ருதமான வர்த்தத்தில் மநநமும், மத

---

(செயல்நன்றாகத்திருத்தி) நன்றானசெயலுண்டாம்படி திருத்தியென்றுமயிந்தர்த்தம். அதாவது-அநுஷ்டாநபர்யந்தமாக வுபதேஶித்துத் திருத்தினரென்றபடி (என்னளவிலன்றியிலே தம்முடையவளவிலே) என்றது-என்னுடைய புன்மையைப் பாராதே தம்முடைய வைபவத்துக்கநுகுணமாக வென்றபடி; ஸமயத்திலே அநுஷ்டாநபர்யந்தமாகத் திருத்துகையாலே ஆழ்வாருடைய உபதேஶவைபவாதிஶயம் சொல்லப்பட்டதென்கிறார் (க்ஷத்ரபந்துவுக் கென்று தொடங்கி).

நன்றாகத்திருத்தின ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (இவருபதேஶித்த வர்த்தமென்னெஞ்சி லென்றுதுடங்கி), இத்தை விவரிக்கிறார் (முற்படஶ்

மான வர்த்தத்தில் மஹாவிஸ்வாஸமும், விஸ்வஸ்தமான வர்த்தத் தில் அநுஷ்டாநமும், அதில் அஸதநுஷ்டாநம் கலசாதே ஸத நுஷ்டாநமேயாய்ப் போருகையுமிறே செயல்நன்ருகத் திருத் துகையாவது. (திருத்தி) இவற்றில் என்கையில் என்னைக் காட்டிக் கொடாதே, தாமே கைத்தொடராய் நின்று இவ்வவஸ்தாபந்ந மாக்கினர்.

(பணிகொள்வான்) பகவத் பாகவதவிஷயங்களில் கிஞ்சித்கா ரத்திலே மூட்டினர். திருத்தினபலம் விநியோகம் கொள்ள வேணுமே, இவரும் அவருக்கு உகப்பாகவாய்த்து பகவத்பாகவத விஷயங்களுக்கு அடிமை செய்வது. பகவத்கிஞ்சித்காரமும் வேணும். ஆசார்யகிஞ்சித்காரமும் வேணும்; வைஷ்ணவகிஞ்சித் காரமும் வேணும்; பகவத்பாகவத விஷயங்களுக்கு அடிமைசெய் யும்-ஆசார்யனுக்குப்ரியமாக; பகவத்பாகவத விஷயமிரண்டு முகக் கைக்கு ஆசார்யனுக்கு அடிமைசெய்யும்.

பதத்ரயநிஷ்டையைப் போலே கிஞ்சித்காரத்ரயமும் இவனு க்கு அபேக்ஷிதமாயிருக்கும்; ஸ்வரூபம்-பகவத்கிஞ்சித்காரத்திலே மூட்டும். பகவத்ப்ரீதி-பாகவதகிஞ்சித்காரத்திலே மூட்டும். பாக வதப்ரீதியும் இவ்வ்யக்தித்வபத்தினுடைய வைபவத்தை யுபதே

---

வணமுமென்றுதுடங்கி), (கைத்தொடராயென்றது) தாமேயேறிட்டுக்கொண்டு செய்தாரென்றபடி.

தம்மைத் திருத்தினவாழ்வார் திருவடிகளில் கைங்கர்யமே ப்ராப்யமென் றிருக்கிறவர் பகவத்பாகவத விஷயங்களிலே கைங்கர்யம் பண்ணுவானேன் னென்னவருளிச் செய்கிருர் (இவரும் அவருக்கு உகப்பாகவாய்த் தென்று துடங்கி), பகவத்பாகவத விஷயங்களில் கைங்கர்யம் செய்யும் க்ரமமென் னென்ன வருளிச்செய்கிருராதல்; பகவத்பாகவத விஷயங்களில் கைங்கர்யம் பண்ணும் ப்ரகாரத்தைப் பின்னையுமொரு ப்ரகாரத்தாலே யருளிச்செய்கிரு ராதல், (ஸ்வரூபம் கிஞ்சித்காரத்திலே மூட்டுமென்றுதுடங்கி). (ஸ்வரூபம்) ஶேஷத்வம், "[illegible] - நாகிஞ்சித்குர்வதஶ்ஶே ஷத்வம்" என்கையாலே ஶேஷத்வம் கைங்கர்யத்திலே மூட்டுமென்றபடி.

(இவ்வ்யக்தித்வயம்) என்றது—பகவத்பாகவதர்களை; பாகவதப்ரீதியும் உ.ப காரஸம்ருதியால் வந்ததன்னுடைய ப்ரீதியும் ஆசார்யகிஞ்சித்காரத்திலே மூட்டு

ஸித்த வுபகாரஸ்மருதியால் வந்தவிவன்றன்னுடைய ப்ரீதியும்-ஆசார்யகிஞ்சித்காரத்திலே மூட்டும். இப்படி ஒன்றுக்கொன்று ப்ரவர்த்தகமாயாய்த்து மூன்று விஷயமுமிருப்பது. இதிலொன்று நிருபாதிக ஸம்பந்தம், மற்றவையிரண்டும் ஸோபாதிகஸம்பந்தம். அதிலொன்று உத்தேஶ்யதை யுபாதியாகப்பிறக்கும், ஒன்று உபகாரகத்வோபாதியாகப்பிறக்கும்.

(பயனித்யாதி) அநதிகாரியானவென்னை அதிகாரத்தின்மேலெல்லையிலே நிறுத்தி,-நிஷ்பலனானவென்னை பகவத்பாகவத கைங்கர்யத்திலே அந்வயிப்பித்துத்தாம் அருளின் ப்ரயோஜநம் கொண்டார். (பயனித்யாதி) அவன், (க) * தீர்ந்தவடியவர் தம்மைத்திருத்திப் பணிகொள்ளுமித்தனை; இவர் கருந்தரையிலே திருத்துமவராய்த்து. அவன் அதிகாரநிஷ்பத்திபிறந்தால் ப்ராப்யவிரோதிகளைப் போக்கிப்பணிகொள்ளும். அவ்வதிகாரநிஷ்பத்தி தன்னையும் கொடுத்தாய்த்து இவர் அடிமைகொண்டது, அதிகாரநிஷ்பத்தி ஆசார்யனாலே. புருஷார்த்தநிஷ்பத்தி ஈஶ்வரனாலே. அதிகாரமாவது—ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் புரையறுதியாகையாலே, செயல்

---

மென்றபடி, (இதிலொன்று நிருபாதிகம்) என்றது-பகவத்விஷயம். (இரண்டும்) என்றது-பாகவதாசார்யர்களை. இரண்டிலும் வைத்துக்கொண்டு பாகவத விஷயத்தில் கைங்கர்யம்-ததீயத்வப்ரயுக்த உத்தேஶ்யதாரூப உபாதியாகப்பிறக்கும்; ததீயத்வமாகிற உபாதியாலே பாகவதவிஷயத்தில் கிஞ்சித்காரம் பண்ணுகிறதென்றபடி. ஆசார்ய விஷயத்தில் கைங்கர்யம்-உபகாரகத்வோபாதியாகப் பிறக்கும். அதாவது-ஆசார்ய விஷயத்தில் கைங்கர்யம் பண்ணுகிறது-உபகாரகத்வமாகிற உபாதியாலென்றபடி; பாங்கலராகிலுமென்று-ஶுஶ்ரூஷையாகிற அதிகாரமில்லாதிருக்கிறவென்னை. செயல் நன்றாகத்திருத்தியென்று-அதிகாரத்தின்மேலெல்லையிலே நிறுத்தினாரென்றும், பயனன்றாகிலுமென்று நிஷ்பலனானவென்னை, பணிகொள்வானென்று- பகவத்பாகவத கைங்கர்யத்திலே அந்வயிப்பித்தாரென்றும்கண்டு கொள்வது.

"அவன் தீர்ந்த வடியவர்தம்மை" என்று துடங்கியருளிச் செய்தவாக்யத்வயத்தை விவரிக்கிறார் (அவன் அதிகாரநிஷ்பத்திபிறந்தா லென்றுதுடங்கி) அதிகாரநிஷ்பத்தி ஆழ்வாராலே உண்டாயிற்றேயென்னவருளிச் செய்கிறார் (அதிகாரமாவ தென்றுதொடங்கி), (புரையறுகிறது) என்றது-பொங்கியற்றதென்றபடி.

---

(க) தி - வாய் - ௩ - ௫ - கக.

நன்றாகத்திருத்தியென்று—அவராலேயிறே இவருக்குண்டாய்த்து

இவனைத் தன்னுபதேஶத்தாலே வெளிச் செறிப்பித்து தானநுஷ்டித்துக்காட்டி, தன்னில்விஞ்சின வநுஷ்டாநம் இவன் கையிலே கண்டாலாய்த்து அவன் இவனை பகவத்பாகவத கிஞ்சித்காரயோக்ய னென்றறுதியிடுவது. (௧) [ஆர்ந்தபுகழச்சுதன்] இவ்வளவிலே புகழ்படைத்து, பற்றினாரை விடாதவனென்கிறபட்டப் பெயரும் பெற்றாய்த்து அவனிருக்கிறது.

(பணிகொள்வான் குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி) பணிகொள்ளுமவராய்த் திருநகரிக்கு நிர்வாஹகரானவரே யென்ற ஸம்புத்தி.

(குயிலித்யாதி) அசேதநமான பக்ஷிஜாதமுடைய ஆழ்வார் பரிஸரத்திலே திருந்தி திருவாய்மொழி பாடக் கற்றுப்பாடாநின்றால் சேதநனான நான் திருந்தச்சொல்லவேணுமோ? ஶாகாஸம்பந்தமுண்டாகையாலே அக்குயில்கள் திருவாய்மொழியை யாய்த்துப்பாடுவது. அவைபாடும் குயில்களாகையாலே தம்பிரான்

நன்றானசெயலுண்டாம்படி திருத்தினாரென்றார்கீழ், அன்றிக்கே தம்முடைய செயலாலே நன்றாகத்திருத்தினாரென்கிற வர்த்தாந்தரத்தை ஸூசிப்பிக்கிறார் (இவனைத்தன்னுபதேஶந்தாலே வெளிச்செறுப்பித் தென்றுதுடங்கி), (தானநுஷ்டித்துக்காட்டி) என்கையாலே தம்முடைய செயலால் திருத்தினாரென்கிற வர்த்தம்தோன்றுகிறது. இப்படி யறுதியிட்டிருப்ப ரென்கிறதுக்கு ஜ்ஞாபகமே தென்னவருளிச்செய்கிறார் (ஆர்ந்தபுகழென்றுதுடங்கி), (இவ்வளவிலே) என்றது- ஆழ்வார் அதிகார நிஷ்பத்தியுண்டாக்கி கிஞ்சித்காரயோக்யனும்படி பண்ணினவநந்தரம், ப்ராப்தி விரோதிகளைப்போக்கி கைங்கர்யத்தைக் கொண்ட மாத்ரத்திலே யென்றபடி. "தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப்பணி கொள்ளவல்ல" என்கிறவாக்யஶேஷத்தினுடைய தாத்பர்யத்தை, "ஆர்ந்தபுகழச்சுதன்" என்று பதோபாதாநம்பண்ணி யருளிச்செய்கிறார் (இவ்வளவிலே புகழ்படைத் தென்றுதுடங்கி). (பணிகொள்வான்) என்றது-துமுலன்றிக்கே ஸம்புத்தி; ஆலுதல்—ஆடலும், ஒலியுமாகுமென்றான் தமிழன். இவ்விடத்தில்- ஆலுகையென்று—பாடுகையைச் சொல்லுகிறது.

(ஶாகாஸம்பந்தம்) என்றது—சாடு. ஸஹஸ்ரஶாகாஸம்பந்தம் அர்த்தம், கொம்பு—த்வநி, (௨) "பாடும் குயில்காள்" என்று பாடுகை அவற்றுக்குநிரூபக

(௧) தி - வாய் - ௩ - ௫ - ௧௧. (௨) நா - தி - ௧0 - ௫.

மாரைப்போலே ஆழ்வாருக்குத் திருவாய்மொழி பாடுவனவாய்த்து; ஒரு தேஶஸம்பந்தத்தாலே *செவ்வாய்க்கிளி நான்மறை பாடுமானால் இத்தேஶவர்த்திகளுக்குத் திருவாய்மொழி பாடச் சொல்லவேண்டாவிறே. தாம்மதுரவாக்காகையாலே மதுரவாக்கான குயிலையிட்டுப் பொழிலைச் சிறப்பிக்கிறார்.

(குருகூர்நம்பி) ப்ரத்யுபகாரநிரபேக்ஷதைக் கடியானபூர்த்தியையுடையவரே! பகவத்கிஞ்சித்காரத்துக்கு த்வாரம்பெறிலும் ஆசார்யகிஞ்சித்காரத்துக்கு த்வாரமில்லை. இவன் த்ருஷ்டத்தை

---

மாக நாய்ச்சியாரருளிச் செய்கையாலே, விண்ணப்பம் செய்வார் முன்னே இரண்டுபேர் ஸேவிக்கச்சிறிது விண்ணப்பம் செய்வார் அத்தை அநுவதிக்குமாபோலே, ஆழ்வார் முன்னே திருவாய் மொழியை முன்னுரு அநுஸந்திக்க, பின்னுருபாடுமவையாயிற்றுக்குயில்கள். பக்ஷிகள் பாடக்கூடுமோ வென்னவருளிச்செய்கிறார் (ஒருதேஶஸம்பந்தத்தாலே யென்றுதுடங்கி), சோலைக்கதிஶயம் சொல்லுமிடத்தில், (௧) "குன்றுமதுமலர்ச்சோலை" என்றும், (௨) "கொங்கார்பூஞ்சோலை," என்றும், (௩) "வண்டினமுரலும்சோலை" என்றும், சொல்லுகிறபடியே, இங்ஙனே ஓரதிஶயத்தை யிட்டருளிச்செய்யாதே (௪) "குயிலாலும் வளர்பொழில்சூழ்" என்னுமாபோலே "குயில்நின்றார் பொழில்சூழ்" என்றருளிச்செய்ததுக்குத் தாத்பர்யமேதென்னவருளிச் செய்கிறார் (தாம்மதுரவாக்காகையாலே யென்றுதுடங்கி). (சிறப்பிக்கிறார்) என்றது - அதிஶயத்தை யுண்டாக்குகிறாரென்றபடி.

(த்வாரம் பெறிலும்) என்றது-அவாப்த ஸமஸ்த காமனாகையாலே ஈஶ்வரனுக்கு கிஞ்சித்காரம் பண்ணக்கூடாது. இங்ஙனே யிருக்கச் செய்தேயும், (௫) "ஸாபெக்ஷ இவ வெஷெ த-ஸாபேக்ஷ இவ சேஷ்டதே" என்று அர்ச்சாவதாரவைபவம் சொல்லுகிற விடத்திலருளிச் செய்கையாலே, அர்ச்சாவதாரத்தில் ஸாபேக்ஷதை யுண்டாகையாலே கிஞ்சித்காரத்துக்கு வழியுண்டென்றபடி, அங்குக்கூடினாலும் ஆசார்ய கிஞ்சித்காரத்துக்கு த்வாரமில்லை. இல்லாமைக்கு ஹேதுவேதென்னவருளிச் செய்கிறார். (இவன் த்ருஷ்டத்தை

---

(௧) திருவெழுகூற்றி (௨) (௩) திருமாலை - ௧௪.
(௪) தி - மொ - ௩ - ௭ - ௮. (௫)

கர்மத்தின்கையிலே பொகட்டு அத்ருஷ்டத்தை ஈஶ்வரன்கையிலே பொகட்டிருக்குமவனிறே.

(உன்றன் மொய்கழற்கன்பையே—முயன்கின்றேன்) உன்னுடைய பரமபோக்யமான திருவடிகளிலுண்டான ஸ்நேஹமடியாக ப்ரத்யுபகாரம்தேடி உத்ஸாஹியாநின்றேன். இவ்வுத்ஸாஹத்துக்கு மேற்பட ப்ரத்யுபகாரம் பண்ணுகைக்கு விரகில்லையே; அவர்தாம், (க) "உனக்கென்செய்கேன்" என்பது, (உ) "அப்பனுக்கெதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே" என்றாப்போலே.

(மொய்கழல்) (ங) "மொய்கழலே யேத்தமுயல்" என்று ஆழ்வார் அவ்விஷயத்தையருளிச் செய்யக்கேட்டுப்போந்த வாஸனையாலே, இங்கும் மொய்கழலென்கிறார். கீழே, அவன் பொன்னடியென்று—ஆழ்வார் திருவடிகளின் பாவநத்வம் சொன்னார். இங்கே போக்யதை சொல்லுகிறார். வகுளாபிராமமாய் ஶ்ரீமத்தாயிறே ஆழ்வார் திருவடிகளிருப்பது. (மொய்கழற்கன்பையே) இத்திருவடிகளின்போக்யதை அன்பைக்கொடுத்தது. அன்புப்ரத்யுபகாரத்திலே மூட்டிற்று. அதுக்கு இடம் காணுமையாலே அலமாநின்றேன்; இவ்வலமாப்பு யாவச்சைதந்யமிறே. (௰)

பத்தாம்பாட்டுக்கு அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானம் முற்றிற்று.

---

யென்று துடங்கி), அன்பை யென்றதை-அன்பாலே யென்று த்ரிதீயையாக்கி, அந்வயித்துக் கொள்வது, (உத்ஸாஹியா நின்றேன்) உத்யோகியா நின்றேனென்றபடி.

உத்யோகிக்கிறது என்செய்கைக் கென்னவருளிச் செய்கிறார் (மொய்கழலேயேத்த முயலென்றுதுடங்கி), அப்படி போக்யமா யிருக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (வகுளாபிராமமா யென்றுதுடங்கி), (மொய்) அழகு. (அலமாவாநின்றே னென்றது – உத்யோகத்துக்கு மேற்படச் செய்யப்போகாமையாலே அலமாவாநின்றே னென்றபடி, "முயல்கின்றேன்" என்ற வர்த்தமாநத்துக்குப் பொருளருளிச் செய்கிறார் (இவ்வலமாப்புயாவச்சைதந்யமிறே) என்று. (க0)

---

(க) தி - வாய் - உ - எ - அ. (ங) பெரியதிருவ - அஎ.
(உ) தி - வாய் - எ - கூ - க0.

மூ :—அன்பன்றன்னை யடைந்தவர்கட்கெல்லா
மன்பன் தென்குருகூர்நகர் நம்பிக்கு
அன்பனாய் மதுரகவிசொன்னசொல்
நம்புவார் பதி வைகுந்தம்காண்மினே. (கக)

—( ο )—

மதுரகவியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

## நஞ்சீயர் வ்யாக்யாநம்.

நிகமத்தில், இவரருளிச்செய்த ப்ரபந்தத்தைக் கற்றார்க்கு ஆழ்வாரானை பரிமாறும் ஸ்ரீவைகுண்டமேதேஸ மென்கிறார்.

(அன்பனித்யாதி) ஈஸ்வரத்வமன்று ஸ்வரூபம். எம்பெருமான் இருந்ததேகுடியாக எல்லாருக்கு மொருதலையா யிருக்கை. (க) "ஸிவ—ஹணாஉவீஸ்வ—ஸ்ய—ஸீபூணமபிவத்ஸல:" என்கிறபடியே. (தன்னையடைந்த வரித்யாதி) ஏவங்குண விஸிஷ்டனான வெம்பெருமானை ஆஸ்ரயித்தார்க் கெல்லாமன்பராயிருக்கை ஆழ்வாருக்கு ஸ்வரூபம். தந்தாம் ஸத்தையிலே யன்றோ எல்லாரும் ஸ்நேஹிப்பது.

(தென்குருகூரித்யாதி) ஆழ்வாருக்கே அன்பரா யிருக்கை ஸ்ரீமதுரகவிகளுக்கு ஸ்வரூபம். ப்ரீதிப்ரேரிதராய்க்காணும் சொல்லிற்று. தாம் காணவந்த சோழரோபாதி ப்ரீதிகாணும் சொல்லுவித்தது. இவர், (உ) "முன்சொல்லும்" என்பது ப்ரீதியைக் காணும்.

(நம்புவாரித்யாதி) இது கற்றார்க்கு வாஸஸ்தாநம் கலங்காப் பெருநகரான பரமபதம், இதுவ்யாஹதபாஷணமா யிருந்ததீ, ஆழ்வாரை ப்ராப்யமாகச் சொன்னால் திருநகரியே ப்ராப்யதேஸமாக வேண்டாவோவென்னில்; திருநகரியிலே பொலிந்து நின்ற பிரானையும் ஆழ்வாரானையும் கூடச்செல்லுவது. (ங) "அடியார் நிலாகின்ற வைகுந்தமோ?" என்கிறபடியே ஆழ்வாரானையொன்று மேயாய்த்து அங்குச்செல்லுவது.

---

(க) ரா - யு - ௰ - ௬. (உ) தி - வாய் - எ - ௯ - உ.
(ங) திருவிரு - எ௰.

சேதநனுக்கு ப்ராதிகூல்யத்தில் நின்றும் நிவ்ருத்தனுமே
னென்று தோற்றும்போது ஈஸ்வரன்பக்கல் ஸ்நேஹித்திருக்
வடுக்கும். ஈஸ்வரன்பக்கல் ஸ்நேஹித் திருக்கையாவது—அவனு
யாரளவும் ஸ்நேஹித்திருக்கை. அவர்களெல்லாருக்கும் ப்ரிய
செய்கையாவது - ஜ்ஞாநப்ரதன் பக்கலிலே ஸ்நேஹித்திருக்கை
யிறே. ஆகையாலே திருநாட்டை ப்ராப்யமாகச் சொல்லிற்று.

அதவா; நம்புவாரிருந்தவிடமே வைகுந்த மென்னவுமாய்
திருநாடென்றும் லீலாவிபூதியென்றும் விபாகமில்லையோவென்ன
நம்பிதிருவழுதிவளநாடுதாஸர் வார்த்தை, "கூரத்தாழ்வான் மகல
பிறந்தபின்பு இடைச்சுவர் தள்ளி ஒரு போகியாய்த்துக்காண்"
என்று பணித்தான்.

நஞ்சீயர் வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.

நஞ்சீயர் திருவடிகளே சரணம்.

---

## நம்பிள்ளை ஈடு.

நிகமத்தில், (அன்பன்றன்னை) இவர் ப்ரபந்தத்தைத் தஞ்
மாக நினைத்திருக்குமவர்களுக்கு வாஸபூமி பரமபத மென்கிறார்.

(அன்பன்) வாத்ஸல்யத்தை நிரூபகமாகவுடையவன்; இவனு
டைய வாத்ஸல்யம் (க) "ரிவ-ஹிணாஉவிவ ஸுஒூ - ரிபூணுமப
வத்ஸலஃ" என்கிறபடியே ஸர்வவிஷயமாயாய்த்திருப்பது; அது
கடி (உ) "ஜெவா நாஒஷா நவா நாஒவ ஸாஊ நூஉயிலெஜெவ தழு
தேவாநாம் தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம்" என்று ஸம்ப
தம் பொதுவாயிருக்கையாலே. (தன்னையடைந்த வர்கட்கெல்ல
மன்பன்) ஆழ்வாருடையவன்பு அங்ஙன்பொதுவாயன்றுப்த்திரு
பது. (ங) "பரமனைப்பயிலும் திருவுடையார் யவரேலுமவர்கள்
டீர்-எம்மையாளும் பரமர்" என்றிறே யிருப்பது.

---

(க) ரா - யு - ௰ - ௰சு. (உ) க - ஜிந - (ங) தி - வாய் - ங - எ - க.

(தென்குருகூர்நகர் நம்பிக்கு அன்பனாய்) பகவத் விஷயத்தளவிலன்றிக்கே ததியாளவிலுமன்றிக்கே ஆசார்ய விஷயத்திலே ஸக்தராய். தனக்குப் புருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத்விஷயத்தைப் பற்றவடுக்கும். அங்ஙன் தானுகந்ததன்றிக்கே அவனுகந்ததுசெய்ய வேண்டியிருக்கில் பாகவதர்களைப் பற்றவடுக்கும்; அவர்களெல்லாருமுகந்தது செய்யவேண்டியிருக்கில் ஆசார்யனைப்பற்றவடுக்கும், ஆசார்யன் முதலிலே அஜ்ஞாத ஜ்ஞாபநத்தாலே உத்தேஶ்யனும்; பின்பு பகவத்குணங்களிலே அவகாஹித்து குணாநுபவத்தாலல்லது செல்லாதபடியானால் போதயந்தஃபரஸ்பரம் பண்ணுகைக்கு உசாத்துணையாகையாலே உத்தேஶ்யனும்; பகவத்ப்ராப்திக்குப் புருஷகாரபூதனாய்க்கொண்டு உத்தேஶ்யனும். ப்ராப்திதசையிலே ஸாத்யவிவ்ருத்திரூபத்தாலே உத்தேஶ்யனும்.

(மதுரகவிசொன்னசொல்) தமக்குப் பாசுரமே இனிதாயிருக்கையாலே மதுரகவியென்கிறார். (நம்புவார்பதிவைகுந்தம்), இனிதாயிருந்ததில்லையே யாகிலும் இப்ப்ரபந்தத்தைத் தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு வஸ்தவ்யதேஶம் பரமபதம்.

ஆழ்வார் உத்தேஶ்யராயிருக்கில் இவருக்குத்திருநகரியன்றே ப்ராப்யமாவதென்னில், திருநகரியில் ஆழ்வாரானையும் பொலிந்து நின்றபிரானையும் இருபுரியாயாய்த்துச்செல்லுவது: அங்ஙனன்றியே ஆழ்வாரானையே செல்லும் தேஶம் பரமபதம். (க) "அடியார் நிலாநின்றவைகுந்தம்" என்றும், (உ) "வானவர் நாடு" என்றும் சொல்லக் கடவதிறே.

நம்பிதிருவழுதிவளநாடுதாஸர், அவர்களிருந்த தேஶந்தான் பரமபதமென்று சொல்லுவர். கூரத்தாழ்வான் மகன்பிறந்தபின்பு இடைச்சுவர்தள்ளி இரண்டுவிபூதியுமொன்றாய்த்துக்காணென்று பணித்தாரென்று பிள்ளையருளிச்செய்வர். (கக)

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

நம்பிள்ளை ஈடு முற்றிற்று.

---

(க) தி - வி - எகு. (உ) தி - வாய் - ரு - சு - சு.

## பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம்.

——( ० )——

அவ:—நிகமத்தில் இப்ப்ரபந்தத்தையே தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு ஆவாஸபூமி பரமபதமென்கிறார்.

வ்யா:—(அன்பன்) வாத்ஸல்யத்தையே நிரூபகமாகவுடையவனாய்த்து ஈஶ்வரன். இன்னானுக்கன்பனென்று விஶேஷியாமையாலே (௧) "ஸ்வ—ஞானாவிவ ஸஂஶ்ரிதாநமபிவத்ஸலः" என்கிறபடியே ஸர்வவிஷயமாயாய்த்து அவனுடைய வாத்ஸல்யமிருப்பது. அதுக்கு ஹேதுவென்னென்னில், (௨) "ஸவெஷாமெவ லொகாநாம் பிதாமாதா சமாதவः - ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவः" என்றும், (௩) "தெவாநாஂதாநவாநாஂச ஸாமாந்யமதிதைவதம் - தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" என்றும் ஜகத்வப்ராயுக்தமான ஸம்பந்தம் ஸர்வஸாதாரணமாகையாலே வாத்ஸல்யமும் பொதுவாயிருக்கும்.

(தன்னையடைந்தவர்கட்கெல்லாமன்பன் தென்குருகூர்நகர் நம்பி) ஆழ்வாருடையவன்பு அங்ஙன் பொதுவாயன்றே யிருப்பது. (௪) "பரமனைப்பயிலும் திருவுடையார்யவர்-எம்மையாளும்பரமர்" என்கிறபடியே பகவத்ஸம்பந்த நிபந்தநமாயிறே யிருப்பது. தம்மைப்போலே (௫) "அடிக்கீழமர்ந்து புகுந்தேன்" என்பாரெல்லாரையும் தமக்கு நாதராகவாய்த்து நினைத்திருப்பது.

(தென்குருகூர்நகர் நம்பி) (௬) "அடியாரடியார் தம்மடியாரடியார்" என்று தத்ஸம்பந்திகளளவும் பண்ணின ப்ரேமத்தாலே பூர்ணராயிருப்பர்.

---

அரு;—நிகமத்தில், "நம்புவார்பதி வைகுந்தம் காண்மின்" என்றதைக் கடாக்ஷித்தவதாரிகை யருளிச்செய்கிறார் (நிகமத்திலித்யாதி).

அன்பனென்ற விடத்தில் ப்ரீதியை விஷயாநுரூபமாக வாத்ஸல்யமா

---

(௧) ரா - யு - ௫௦ - ௫௬.　(௨) பார - ஆர.
(௩) ஜிதந்தை - ௧.　(௪) தி - வாய் - ௩ - ௭ - ௧.
(௫) தி - வாய் - ௬ - ௧௦ - ௧௦.　(௬) தி - வாய் - ௩ - ௭ - ௧௦.

(நம்பிக்கன்பனாய்) பகவத்விஷயத் தளவுமன்றிக்கே, ததீயளளவுமன்றிக்கே ஆசார்யவிஷயத்திலே ஸக்தராய்; தனக்குப் புருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத்விஷயத்தைப் பற்றவமையும். அங்ஙன் தானுகந்ததன்றிக்கே, ஈச்வரனுகப்பே புருஷார்த்தமென்றிருக்கில் பாகவதர்களைப்பற்றவமையும், (௧) "𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌮𑍍 - ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" (௨) "𑌮𑌮 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌹𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌃 - மமப்ராணாஹிபாண்டவா:" என்று பாண்டவர்களைத்தனக்கு தாரகராகவிறே நினைத்திருப்பது. ஈச்வரனோடு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வாசியற எல்லாருடையவுகப்பும் புருஷார்த்தமென்றிருக்கில் ஆசார்யனைப்பற்றவடுக்கும். (௩) "𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 - ஆசார்யவாந்" என்றாய்த்து ஸ்ரீவைஷ்ணவர்களுகப்பது. ப்ரதமத்திலே ஆசார்யன் தனக்கு அஜ்ஞாதஜ்ஞாபநமுகத்தாலே ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்து பகவத்ஸமாச்ரயணவேளையிலே புருஷகாரபூதனாய், தன்னுடைய வநுஷ்டாநத்தாலே இவனை நல்வழியே கொண்டுபோய், ப்ராப்திதசையிலும் ஸாத்யவிருத்தியைப் பண்ணிக்கொடுக்கக்கடவனாய் இப்படி பஹுமுகத்தாலே உத்தேச்யனாயிறே யிருப்பது.

(மதுரகவிசொன்னசொல்) ஆழ்வாரைத்தாம் சொன்ன பாசுரம் தமக்கினிதாயிருக்கையாலே மதுரகவியென்கிறார். (சொன்ன சொல் நம்புவார்பதி வைகுந்தங்காண்மினே) இனிதாயிருக்க

---

மாக்கியருளிச்செய்கிறார் (வாத்ஸல்யத்தையே யித்யாதி) இங்கு அன்பனென்றது-பக்தனென்றபடி; அன்பன்றன்னை யென்றது-முழுச்சொல்லு.

அன்பன்றன்னை யடைந்தவர்கள் - ஸ்ரீமஹாபாகவதர்கள். நம்பிபததாத்பர்யம், (அடியாரித்யாதி) பகவானையும் பாகவதர்களையும் பற்றாமல் ஆழ்வார் விஷயத்திலன்பராவானென் னென்ன, "அன்பன்றன்னை யடைந்தவர்கட் கெல்லா மன்பன், நம்பிக்கன்பன்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து இவர்களுக்குண்டான பலதாரதம்யங்களை யருளிச்செய்கிறார் (தனக்கென்றுதுடங்கி அஞ்சுவாக்யத்தாலே) அவர்களுக்கு கப்பாகவன்றிக்கே அவன் பண்ணின வுபகாரத்தாலும் பற்றவேணு மென்கிறார் (ப்ரதமத்திலே யித்யாதி), சொல்நம்புவாரென்னாதே, சொன்ன வென்கையாலே பலிதம் (இனிதாயித்யாதி).

---

(௧) கீதை - ௭ - ௧௮. (௨) பார - உத்யோ ௯௦ - ௩௨.

(௩)

தில்லையாகிலும் இப்ப்ரபந்தத்தைத் தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு வஸ்தவ்யதேஶம் பரமபதம்.

ஆழ்வாருக் தேஶ்யரானால் திருநகரியன்றோ ப்ராப்யமாவதென்னில், திருநகரியில் பொலிந்து நின்றபிரானையும் ஆழ்வாரானையுமாய் இருபுரியாய்ச்செல்லும். அங்ஙனன்றிக்கே ஆழ்வாரானையேயாய்ச்செல்லும் பரமபதம். (க) "அடியார் நிலாகின்ற வைகுந்தம்" (உ) "வானவர்நாடு" என்றும் சொல்லக்கடவதிறே.

நம்பிதிருவழுதி வளநாடுதாஸர், நம்புவார்பதி வைகுந்தமென்று அவர்களிருந்த தேஶங்காண் பரமபதமென்று சொல்லுவர். (ங) "உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" என்னக்கடவதிறே.

கூரத்தாழ்வான்மகன் பிறந்த பின்பு ஸம்ஸாரமும் பரமபதமும் கிடைச்சுவர் தள்ளி ஒரு போகியாய்த்துக்காணென்று பெற்றிபணித்தாரென்று பிள்ளையருளிச் செய்வர். (கக)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம் முற்றிற்று.

---

இருபுரியாவது-ஒருவன் முறுக்கு எதிர்முறுக்குக்கு விபரீதமாயிருக்கை. இங்கே தானே பரமபதமென்றதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்ய மருளிச் செய்கிறார் (கூரத்தாழ்வானித்யாதி), (பெற்றிபணித்தாரென்றது) இங்கே யிருக்கச் செய்தேதானே அந்த விபூதியிலநுபவத்தைப் பெற்றி பணித்தார். அங்குத்தையிலநுபவம் இங்கே கிட்டுகையாலே-ஒரு போகியாயிற்றென்றபடி. (கக)

பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநாரும்பதம் முற்றிற்று.

---

(க) திருவிரு - எ௫ (உ) தி - வாய் ங - க - க
(ங) தி - வாய் - ௫ - ங - கக.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம்.

———(o)———

நிகமத்தில் (அன்பனித்யாதி) இப்பாட்டில் இப்ப்ரபந்தம் கற்றார்க்கு வஸ்தவ்யபூமி பரமபத மென்கிறார்.

ஆழ்வாருடைய போக்யதையும், அவர் தமக்குஸ்வாமியென்னு மிடத்தையும், தமக்கு காலக்ஷேபவிஷயம் அவருடைய ப்ரபந்த மென்னுமிடமும், ஆழ்வாரோட்டை ஸம்பந்தமடியாக ஈஸ்வரன் மேல் விழுந்தநுபவித்தபடியையும், தம்முடைய தோஷம்பாராமல் ஆழ்வார் விஷயீகரித்த படியையும், தோஷந்தான் அவருடைய தேஶப்ரவேஶ மாத்ரத்தாலே தம்மைவிட்டுக் கழன்றபடியும், பின்பு அத்தோஷம் மேலிடாதபடி ஆழ்வார் குணகீர்த்தநமே தமக்குகாலயாத்ரையாம்படி அவர் தம்மைத் திருத்தினபடியும், அவருடைய க்ருபாவைபவத்தை லோகமடங்கலும் தாம்பரப்ப வேண்டும்படி தமக்குப் பிறந்த வாதரத்தையும், பகவத்க்ருபையிற் காட்டில் ஆழ்வாருடைய க்ருபை லோகத்திலே அதிஶயித்தபடி யையும், அக்க்ருபையடியாக அவருபகரித்த வுபகாரமும், அவ்வுப காரபரம்பரைகளுக்கு ப்ரத்யுபகாரம் தேடி அவருடைய பூர்த்தி யாலே ப்ரத்யுபகாரத்துக்கு அவகாஶம் காணாமல் தாம் அலமருகிற படியையுமிறே கீழ்ச்சொல்லிநின்றது.

இவ்வர்த்தங்களுக்கு வாசகஶப்தமிட்டுச் சொன்ன இப்ப்ர பந்தத்திலே ஆதரமுள்ளார்க்கு நித்யஸூரிகள் பரமபதத்திலே ஒரு ப்ராப்திபண்ணிக் கொடுப்பர்களென்கிறார். இவர்களுக்குத் திருநகரியே ப்ராப்ய ஸ்தலமாயிருந்ததாகிலும் அவர்களாதரத்துக் காக அங்கேபோய் அங்கும் ஆழ்வாரை அநுபவிக்கப்பெறுவர்கள்.

---

அரு ;—நிகமத்தில் (அன்பனித்யாதி) (இப்பாட்டில் இப்ப்ரபந்தம் கற்றார் க்கு வஸ்தவ்யபூமி பரமபத மென்கிறார்) என்றது-ஸங்க்ரஹமான அவதாரிகை.

(ஆழ்வாருடைய போக்யதையும்) என்றுதுடங்கிமேலே விஸ்தாரம். ஆழ் வாரே ப்ராப்யப்ராபக மென்றன்றோ இப்ப்ரபந்தத்தில் இவாருளிச்செய்தது ; ஆகையால் ஆழ்வாரெழுந்தருளியிருந்த திருநகரியே இப்ப்ரபந்தம் கற்றவர்களு க்கு வஸ்தவ்யபூமி யென்னாமல், பரமபதம் வஸ்தவ்யபூமியாகச் சொல்லுவா னென்னென்னவருளிச் செய்கிறார் (இவர்களுக்குக் திருநகரியே யென்று துடங்கி).

வ்யா;–(அன்பனித்யாதி) கவிபாட்டுண்ட விஷயத்தையும், கவி பாடினதம்மையும், கவிதன்னையும், கவியையேதேனு மொருவழியால்கற்றவர்களுக்கு பலமும் சொல்லுகிறது. (தன்னையடைந்தவர்கட்கெல்லாமன்பன்) தம்முடைய திருவடிகளை யாஶ்ரயித்தவென்போல் வார்க்கெல்லாம வத்ஸலராயிருக்குமவர்; எங்கள் தோஷங்களைப் பாராதே தம்முடைய குணங்களைத்தந்து தரிப்பிக்குமவர். * நான்மறையாளர்கள் புன்மையாகக்கருது வராதலில் அன்னையாயத்தனென்றும், நின்று தன் புகழேத்த வருளினனென்றும் சொல்லுகிறபடியே; அன்றிக்கே, அன்பனென்று ஸர்வேஶ்வரனுக்குத் திருநாமமாய், அவனையாஶ்ரயித்தவர்க்கெல்லாம் ஸ்நிக்தாயிருப்பர்; (க)“ஊஹஜநவாஸ்ய-மத்பக்தஜநவாத்ஸல்யம்” என்று இத்தையிறே ப்ரதமலக்ஷணமாகச் சொல்லிற்று.

(அன்பன்) இன்னபடி அன்பனென்கை யன்றியிலே எல்லார்க்கும் எல்லாப்படியாலும் நிஸர்க்கஸுஹ்ருத்தா யிருக்கும்.

---

இந்தப்பாட்டுக்கு ஸங்க்ரஹேண ப்ரதிபதம் தாத்பர்யமருளிச் செய்கிறார் (கவிபாட்டுண்ட விஷயத்தையு மென்றுதுடங்கி) “அன்பன்றன்னை” என்றது-ஆழ்வாருக்கு விஶேஷணமானபோது பகவத்விஷயத்தில் ப்ரேமத்தையுடையராய், ஆஶ்ரிதவிஷயத்திலும் வத்ஸலரான ஆழ்வார் தம்மை யென்றபடி. இந்த பகவத் ப்ராவண்யத்தைக் கடாக்ஷித்துக் கொண்டே பகவத்பாகவத விஷயத்தில் ஸ்நேஹத்துக்கு ஊற்றுவாய் திருநகரியில் பிறப்பாய்த் தென்றருளிச்செய்கிறார் (வத்ஸலராயிருக்குமவர்) என்று. வத்ஸலராயிருக்கும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் (எங்கள் தோஷங்களைப் பாராதே யென்று துடங்கி).

இத்நிலையில் தோஷத்தை போக்யமாகக் கொண்டு குணங்களைத்தந்து தரிப்பித்த க்ரமத்தை இவருடைய திவ்யஸூக்தியிலே காட்டுகிறார் (நான்மறையாளர்களென்று துடங்கி). ஜ்ஞாநபக்த்யாதிகளெல்லாம் கிடக்க பாகவதரிடத்தில் ஸ்நிக்தரா யிருப்பரென்று இந்த வாத்ஸல்யத்தை ப்ராதாநமாகச் சொல்லுகிறதென்னென்னவருளிச் செய்கிறார் (மத்பக்தஜநவாத்ஸல்ய மென்று துடங்கி).

(அன்பனென்கை யன்றியிலே) என்றது - அன்பனென்னுமையாலே யென்றபடி. அன்பனென்ற பதத்தை ஆழ்வாருக்கு விஶேஷணமாக வருளிச்

---

(க) பகவச்சாஸ்த்ரம்.

(க) 𑌏𑌵𑌂 𑌨𑌿𑌸𑌰𑍍𑌗𑌸𑍁𑌹𑍃𑌦𑌿 - 𑌨𑌚𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌵𑌤𑍍𑌸𑌲𑌤𑍍𑌵𑌮𑍍 - ஏவம்நிஸர்க்கஸுஹ்ருதி—நசித்ரமிதமாஶ்ரிதவத்ஸலத்வம்" என்று ஸௌஹார்த்த கார்யமிறேவாத்ஸல்யம்; (உ) "𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑍈𑌕𑌵𑌤𑍍𑌸𑌲𑌃 - ஸர்வலோகைகவத்ஸலஃ" (ங) "𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌵𑌤𑍍𑌸𑌲𑌃 - ஶரணாகதவத்ஸலஃ" (ச) "𑌰𑌿𑌪𑍂𑌣𑌾𑌮𑌪𑌿𑌵𑌤𑍍𑌸𑌲𑌃 - ரிபூணமபி வத்ஸலஃ" என்னும்படி லோகத்துக்காக வத்ஸலனுமாய், அதில் ஆஶ்ரிதாளவிலே, (ரு) "𑌦𑍋𑌷𑍋𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 - தோஷோயத்யபி" என்னும்படி வத்ஸலனுமாய், ப்ராதிகூல்யமே பண்ணிப் போருமவர்களுக்கும் வத்ஸலனுமாயிருக்கும். (கூ) "𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌵𑌮𑌪𑌰𑌾𑌦𑍍𑌧𑍁𑌃 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌦𑍋𑌽𑌭𑍂𑌃 - ப்ரதிபவமபராத்துர் முக்தஸாயுஜ்யதோபூঃ" - இறே; அந்த மௌக்த்யமாவது - தோஷம் நெஞ்சில் படாதொழிகையாய்த்து.

(அன்பன்) தன்னை ஸ்நேஹித்தார்க்குத் தானொருவனுமே

---

செய்யாதபோது வாத்ஸல்யபரமாக வருளிச்செய்துவிட்டு, ஈஶ்வரனுக்கு விஶேஷணமாக்கி யருளிச்செய்கிற விடத்திலும் வாத்ஸல்யபரமாக வருளிச்செய்யாதே ஸௌஹார்த்தபரமாக வருளிச்செய்கிறபடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (ஏவம் நிஸர்க்கஸுஹ்ருதி) என்றுதுடங்கி.

(அப்படி ஈஶ்வரன் அநுகூல ப்ரதிகூல விபாகமற எல்லாரிடத்திலும் வத்ஸலனாயிருக்குமோ வென்னவருளிச் செய்கிறார் (ஸர்வலோகைகவத்ஸல;) என்றுதுடங்கி. "ஸர்வலோகைகவத்ஸலঃ" என்றுதுடங்கி யருளிச்செய்த ப்ரமாணத்ரயத்துக்கும் அடைவே அர்த்தமருளிச்செய்கிறார் (லோகத்துக்காக வென்றுதுடங்கி), ப்ரதிகூலரிடத்தில் வத்ஸலனாயிருக்கு மென்கைக்கு ஆளவந்தார் ஶ்ரீஸூக்தியை ப்ரமாணமாக வருளிச்செய்கிறார் (ப்ரதிபவமபராத்து:) என்றுதுடங்கி.

அன்பனென்று-இதாருடைய அன்புக்கு ஈஶ்வரன்றான் விஷயமாயிருக்கு மென்னுமதையும், அன்றிக்கே, ஈஶ்வரன்றான் எல்லா விஷயத்திலுமன்பை யுடையனாயிருக்கு மென்னுமதையும் - கர்த்தரி கர்மணிவ்யுத்பத்தியாலே காட்டுகையாலே, இந்த விரண்டர்த்தத்தையுங் கூட்டியருளிச்செய்கிறார் (தன்னை

---

(க) ஸ்தோ - ர. (உ)
(ங) ரா - ஸு - உக - கo. (ச) ரா - யு - ருo - ருகூ.
(ரு) ரா - யு - கஅ - ங. (கூ) ஸ்தோ - ங.

விஷயபூதனுமாய், தான் ஸ்நேஹிக்குமிடத்தில் விபூதியாக ஸ்நேஹிக்குமவன். தன்னை ஸ்நேஹித்தவன் புறம்பேசிலவற்றை ஸ்நேஹித்தால் அவனுக்குத் தன்னைப்பெற விரகில்லை; தான் எல்லாரையும் ஸ்நேஹியானுகில் தான் இன்றிக்கே யொழியும்; (க) "நிரவயிகவாத்ஸல்யஜலதே - நிரவதிகவாத்ஸல்யஜலதே" (உ) "வாத்ஸல்யமஹோததே - வாத்ஸல்யமஹோததே" என்கிறபடியே கடலுக்குள்ளே மாணிக்கங்களடைய மறைந்து கிடக்குமாபோலே இவ்வாத்ஸல்யகுணத்தில் குணாந்தரங்களடைய மறையும்படியாயாய்த்து-இது ஸ்வரூபத்தை விளாக்குலை கொண்டுகிடக்கும்படி. ஸ்வரூபந்தான் ஸர்வஸாத்ருஶ்யராஹித மாணுப்போலேயாய்த்து இக்குணமும் ஸத்ருஶராஹிதயாய் நிகரில்புகழாயிருக்கும்படி; அந்த ஸாத்ருஶ்யராஹித்யத்தால் பெற்றது - பரத்வஸித்தி; இந்த ஸாத்ருஶ்யராஹித்யத்தால் பெற்றது ஶரண்யத்வஸித்தி.

---

ஸ்நேஹித்தார்க்குத் தானொருவனுமே யென்றுதுடங்கி வாக்யத்வயத்தாலே), ஸ்நேஹித்தவர்களுக்குத் தானொருவனுமே விஷயமாகாதபோது வருகிற ஹாநியேதென்னவருளிச் செய்கிறுர் (தன்னை ஸ்நேஹித்தவ னென்றுதுடங்கி).

. ஈஶ்வரன் எல்லாரிடத்திலும் ஸ்நேஹியாதபோது அவனுக்கு வருகிற ஹாநி யேதென்னவருளிச்செய்கிறுர் (தானெல்லாரையும் ஸ்நேஹியானுகிலென்றுதுடங்கி). குணாந்தரங்களிற்காட்டில் இந்த வாத்ஸல்ய குணத்துக்குண்டான வைபவத்தை யருளிச்செய்கிறுர் (நிரவதிக வாத்ஸல்யஜலதே) என்றுதுடங்கி.

. (ஸ்வரூபத்தை விளாக்குலை கொண்டு கிடக்கும்) என்றது-ஸ்வரூபத்தையெல்லாம் தானே வ்யாபித்துக் கொண்டிருக்கு மென்றபடி. "வாத்ஸல்யஜலதே" என்று இந்த குணத்தை ஜலதியாகச் சொல்லுகையாலே ஸமுத்ரத்துக்குள்ளே கிடக்கிற ரத்நங்கள்போலே குணாந்தரங்களெல்லாம் ஏததந்தர்க்கதமாயிருக்கு மென்றபடி.

எல்லாத்தையும் விளாக்குலைகொண்டு தான் மேலாயிருக்கிறபடி யெப்படியிருக்கிற தென்னவருளிச் செய்கிறுர் (ஸ்வரூபந்தானித்யாதி). ஸ்வரூபஸாத்ருஶ்ய ராஹித்யத்தாலும் குணஸாத்ருஶ்ய ராஹித்யத்தாலும் பலித்ததென்னென்னவருளிச் செய்கிறுர் (அந்த ஸாத்ருஶ்யேத்யாதி).

---

(க) ஸ்தோ - ர. (உ) ஶரணுகதிகத்யம்.

(அன்பன்) தன்னைப்பற்றிப் புறம்பேசிலவற்றை யாசைப் பட்டவர்களுக்கும் (க) "உதாராஃ - உதாராஃ" என்று குணங் கொள்ளும் வ்யாமோஹத்தை யுடையவன். (அன்பன்) உபக்ரமத் திலே, "கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாய னென்னப்பன்" என்று ஸ்ரீலஸௌலப்யஸ்வாமித்வங் களை உபாதாநம்பண்ணி, உபஸம்ஹாரத்திலே வாத்ஸல்யகுணத் தோடே கலேக்கட்டுகிறார். அவை ஒரு தட்டு, இது ஒருதட்டிறே; இத்தைப்பற்றவிறே (உ) "ஸ்ரீலாதிகுணஸம்பந்நஸ் ஸர்வலோகைகவத்ஸலஃ - ஸ்ரீலாதிகுண ஸம்பந்நஸ் ஸர்வலோகைகவத்ஸலஃ" என்று ரிஷிகளும் சொல்லிற்று.

(அன்பன்றன்னை யடைந்தவர்கட் கெல்லாமன்பன்) இப்படி ஸர்வலோக வத்ஸலனான ஸர்வேஶ்வரனுடைய குணத்துக்குத் தோற்று (ங) "குணைர்தாஸ்யமுபாகதஃ - குணைர்த்தாஸ்ய முபாகதஃ" என்று அடிமைபுக்கு அவன் திருவடிகளை உபாயத் வேநவரணம் பண்ணியிருக்கும் ஸாத்விகவர்க்கத்துக்கு நல்லரா யிருக்குமவர்.

அவனுக்கு எல்லாரோடும் பந்தமுண்டாகையாலே எல்லாரை

---

அன்பனென்றதுக்கு ஆஶ்ரயணகாலத்தில் தோஷமே பச்சையாகக் கொண்டு அங்கீகரிக்கு மென்றார்கீழ். அங்ஙனன்றிக்கே, அந்த தோஷந்தன்னி லும் வைத்துக்கொண்டு தன்னையாஶ்ரயித்தவநந்தரம் புறம்பேசிலவற்றை யாசைப்படுகை மிகவும் க்ரூரமாகையாலே, அந்த தோஷத்தையும் குணமாகக் கொள்ளும் வ்யாமோஹத்தை யுடையவனென்கிறார் (தன்னைப்பற்றி யென்று துடங்கி). இந்தவர்த்தத்தில் அன்பனென்று வ்யாமோஹத்தைச்சொல்லுகிறது.

உபக்ரமத்திலே மூன்று குணங்களைச்சொல்லி, உபஸம்ஹாரத்திலே ஒரு குணத்தையிட்டு உபஸம்ஹரிப்பா னென்னென்ன வருளிச்செய்கிறார் (அவை யொருதட்டித்யாதி). ஈஶ்வரபரமான இரண்டாமர்த்தத்தை யருளிச்செய்கிறார் (இப்படி ஸர்வலோகேத்யாதி). அவனைப்போலே எல்லாரிடத்திலும் ஸ்நேஹித் திராதே, ஸாத்விகவர்க்கத்துக்கே நல்லராயிருக்கிற தென்னென்ன வருளிச் செய்கிறார் (அவனுக்கெல்லாரோடும் ஸம்பந்த முண்டாகையாலே யென்று

---

(க) கீதை. (உ)

(ங) ரா - கி - ச - கஉ.

யும் ஸ்நேஹிக்கும்; இவர், (க) "பரமனைப்பயிலும் திருவுடையார் யவரேலுமவர்கண்டீர் - என்னையாளும் பரமர்" என்றிருக்குமவராய்த்து. இவரைப்போலே வைராக்ய பூர்வகமான ஸ்நேஹமன்றே அவனது. அவனுக்கு எல்லாரோடும் ஸ்வரூபநிபந்தந ஸம்பந்தம். இவரது உபாதிநிபந்தந ஸம்பந்தம். (எல்லாமன்பன்; அவர்களுடைய ஜாத்யாதிநியமம் பாராதே தத்ஸம்பந்தமே ஹேதுவாக நல்லாயிருக்குமவர். (உ) "கும்பிநரகர்களேத்துவரேலும் - என் தொழுகுலம் தாங்கள்" (ங) "எத்தனை நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும், மணிவண்ணற்காளென்றுள் கலந்தாரடியார் தம்மடியாரெம்மடிகள்" என்றிருக்குமவர்.

(அன்பன்) (ச) "அவனடியார், நனிமாக்கலவியின்பமே நாளும் வாய்க்க" என்று பகவதநுபவஸுகத்தை விட்டேயாகிலும் வைஷ்ணவஸமவாய ஸம்ச்லேஷரஸரா யிருக்குமவர். (அடைந்தவர்கட்கெல்லாமன்பன்) அவனைசேஷியாக வரிக்கவுமாம், பந்துத்வேந வரிக்கவுமாம், உபாயத்வேந வரிக்கவுமாம், உபேயத்வேந வரிக்கவுமாம், இவருக்கு ஆதரிக்க வேண்டுவது ஏதேனுமொரு ஸம்பந்தமாய்த்து.

---

துடங்கி', அவனுக்கு ஸ்வரூபப்ரயுக்தமாய் வருகையாலே, இவரைப்போலே (ரு) "எண்ணுநமானிடத்தை யெண்ணுப்போமதெல்லாமினியவாறு" என்கிற படியே பகவத்விமுகரான ஸம்ஸாரி சேதநர் விஷயத்தில் விரக்தி பூர்வகமாய் வருகிற ஸ்நேஹமன்றே யென்றபடி.

கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (அவனுக்கெல்லாரோடும் ஸ்வரூபநிபந்தந மென்று துடங்கி). உபாதிநிபந்தந மென்கிற விடத்தில், உபாதியாவது-பாகவதத்வம். எல்லாமென்ற பதத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (அவர்களுடைய ஜாத்யாதி நியமம் பாராதேயென்று துடங்கி). (எல்லாம்) என்றது-எல்லாருக்கு மென்றபடி. அன்பனென்று பதோபாதாநம்பண்ணி, பாகவதர்களிடத்தில் ஆழ்வாருக்குண்டான ப்ராவண்யாதிசயத்தை யருளிச்செய்கிறார் (அவனடியார் நனிமாக்கலவி யென்று துடங்கி). அடைந்தவரென்ற பதத்துக்குப் பொருளருளிச்செய்கிறார் (அவனைசேஷியாக வரிக்கவுமா மென்று துடங்கி).

---

(க) தி - வாய் - ங - எ - க. (உ) தி - வாய் - ங - எ - அ.
(ங) தி - வாய் - ங - எ - கூ. (ச) தி - வாய் - அ - கo - எ.
(ரு) தி - மொ - கக - கூ - ங.

(தென் குருகூரித்யாதி) இவருக்கு இப்படி பகவத்பாகவத விஷயத்தில் ஸ்நேஹத்துக்கு ஊற்றுவாய் திருநகரியில் பிறப்பாய்த்து; துறைவாய்ப்பாலே பயிருர்வாய்க்குமிறே; இவருக்கு காதல் கடல் புரையவிளைவிக்கைக்கடி அந்த நிலப்பண்பாய்த்து, (நகர்) அந்நகரவாஸத்தாலேயாய்த்து இவர் ஸாராஸார விவேகஜ்ஞராய்த்து. (நம்பி) இப்படி ஆத்மகுணபூர்ணரான வாழ்வார்.

(அன்பனுப்) இப்படி இவருடைய பகவத்ஜ்ஞாநபக்த்யாதிகளாகிற ஆத்மகுணம் கண்டாய்த்து இவருக்கு ஸ்நேஹம் பிறந்தது, (அன்பனுப்மதுரகவி) அவருக்கு பகவத் ப்ரேமம் ஸ்வரூப ப்ரயுக்தமாய் (க) "ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன்" என்று நிரூபகமானுப்போலே, இவருக்கும் ஆழ்வாருக்கு நல்லானவ ரென்றுநிரூபகம். அவர் ப்ரணவநமஸ்ஸுக்களிரண்டிலும் நிஷ்டராய்ப் போருவர், இவர் மத்யமபதத்திலே நிஷ்டராயிருப்பர்.

(மதுரகவி) அவர் தத்விஷயத்தைக் கவிபாடுகை யாலே (உ) "என்னுவிலின்கவி" என்றுப்போலே இவரும் ஆழ்வாரைக் கவிபாடுகையாலே தம்மை மதுரகவி யென்கிறுர். (நம்பிக்கன்பனுய் மதுரகவி) நெஞ்சுக்குப்பணி ஆழ்வார் பக்கல் ஸ்நேஹமாய், வாய்க்குப்பணி அவருடைய குணஸ்தோத்ரமே யானவர்.

(சொன்னசொல்) அவர் ப்ரபந்நீகரித்த இந்த ஸப்தஸந்தர்ப்பத்தை, (சொன்னசொல) இதுவொரு சொல்லேயென்று விஸ்மிதராகிறுர். (நம்புவார்) இத்தைபாஸைப் படுமவர்கள். இவ்வர்த்தத்தை வ்யுத்பத்திபண்ணிவிடுதல் செய்கை யன்றிக்கே, இதிலே நசையுடையராய் இவ்வியலிலே எப்போதும் பரிசயிப்பது. இதுக்குள்ளோடுகிற ஆழ்வாருடைய ப்ரபாவங்களிலே விக்தாரவது,

---

அவர், ப்ரணவநமஸ்ஸுக்களிரண்டிற் சொல்லுகிற பகவத்பாகவத விஷயங்களில் ப்ராவணராயிருப்பர். இவர் மத்யமபதமான நமஸ்ஸிலே நிஷ்டராயிருப்பரென்றபடி. ஆழ்வார் ஈஸ்வரனைக் கவிபாடுகையாலே "இனியகவி" என்றுப்போலே, இவரும் ஆழ்வாரைக் கவிபாடுகையாலே "மதுரகவி" என்கிறுர்.

---

(க) தி - வாய் - உ - க - கக. (உ) தி - வாய் - ரு - கூ - க.

இப்ப்ரபாவத்தை எப்போதும் ஒருவர் சொல்லக்கேட்க வாசைப் படுவதாய், இப்படி நசைபண்ணிப் போருவார்.

(நம்புவார்) பகவத் ப்ரபாவத்திற் காட்டில் ஆழ்வார் ப்ரபா வத்தைவிரும்புவார். "ஆழ்வார் ப்ரபாவம் சொன்னவிது கைதவ மன்று, ஸத்யம்." என்று இவ்வர்த்தத்தைத் தங்களுக்குத் தஞ்ச மாக விஸ்வஸித்திருப்பார். (பதிவைகுந்தம் காண்மினே) அவர் களுக்கு வஸ்தவ்யபூமிபரமபதம். (கக)

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யாநம்

முற்றிற்று.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்

திருவடிகளே சரணம்.

---

*நம்புவாரென்றதுக்கு இரண்டுபொருள்; அதாவது - ஆசைப்படுமவரென்னுதல். அன்றிக்கே விஸ்வஸித்திருக்குமவ ரென்னுதல், ஆசைப்படுமவரென்றது - விரும்புமவர்களென்றபடி. விரும்பும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறா (இவ்வர்த்தத்தை வ்யுத்பத்திபண்ணி விடுதலென்றுதுடங்கி). (கக)*

*ஜீயர் திருவடிகளே சரணம்*

*அரும்பதம் முற்றிற்று.*



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# கண்ணிநுண்சிறுத்தாம்பின் பதவுரை.

## க - பா. கண்ணிநுண்சிறுத்தாம்பினால்.

கண்ணி - பலமுடிகளை யுடையதாய், நுண் - ஸூக்ஷ்மமாய், சிறு - சிறிதான, தாம்பினால்-கயிற்றினால், கட்டுண்ணப்பண்ணிய - தன்னை யசோதைப்பிராட்டி கட்டும்படி பண்ணிக்கொடுத்த, பெருமாயன்-நிரதிஶயாஶ்சர்யயுக்தனாய், என்னப்பனில்-எனக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரனிற்காட்டில், நண்ணி - ஆழ்வாரை ப்ரீதிபூர்வகமாக வாஶ்ரயித்து, தென்குருகூர் - தெற்குதிக்கிலிருக்கும் திருநகரிக்கு, நம்பியென்றக்கால் - நிர்வாஹகரான வாழ்வாரென்று அவர் திருநாமத்தைச்சொன்னால், அண்ணிக்கும் - (நினைத்த நெஞ்சும் சொன்ன நாக்கும்) தித்தித்து வாராநின்றது; என் - அநாதிகாலம் விஷயப்ரவணனாய்ப்போந்த என்னுடைய, நாவுக்கே - நாக்குக்கன்றோ, அமுதூறும் - அம்ருதம் ஊற்றுமாறுதே யிராநின்றது. (க)

## உ - பா. நாவினால்.

நாவினால் - பகவத்விஷயத்தில் உபகாரகரை ஸ்தோத்ரம் பண்ணக்கடவநாக்காலே, நவிற்று - ஆழ்வாரை எத்தி, இன்பம் - நிரதிஶயாநந்தத்தை, எய்தினேன் - பெற்றேன், அவன் - அந்த வாழ்வாருடைய, பொன்னடி - ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை, மேவினேன் - பொருந்தினேன்; மெய்ம்மையே - ஸத்யம், மற்று-ஆழ்வாரொழிய வேறொரு, தேவு - தெய்வத்தை, அறியேன் - அறிகிறிலேன், குருகூர்நம்பி - திருக்குருகூருக்கு நிர்வாஹகரான வாழ்வாரருளிச்செய்த, பாவின் - பாசுரங்களான திருவாய்மொழியோடு கூடிய, இன் - இனிய, இசை - காநத்தை, பாடி - பாடிக்கொண்டு, திரிவன் - திரியாநிற்பன். (உ)

ந - பா. திரிதந்தாகிலும்.

திரிதந்தாகிலும் - பகவத்விஷயத்தோடு ஒட்டற்றுத்திரியா நிற்கச்செய்தேயும், தேவபிரானுடை - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான ஸர்வேஶ்வரனுடைய, கரிய - நீலமேக நிபஶ்யாமமாய், கோலம் - ஸௌந்தரமாய், திரு - பிராட்டியோடு கூடியிருக்கிற, உரு - திருமேனியை, நான் - பகவத்விஷயத்தைவிட்ட நான், காண்பன் - ஸாக்ஷாக்கரிப்பன். பெரியவண் - மஹோதாரராய், குருகூர்நகர் - திருநகரியிலே யெழுந்தருளியிருக்கிற, நம்பிக்கு - ஆழ்வாருக்கு, ஆளுரியனாய், உரியவடியனாய் (இருந்துவைத்து.) அடியேன் - அடியேன், பெற்ற - லபித்த, நன்மை - லாபம். (இதிறே). (ந)

ச - பா. நன்மையால்.

நன்மையால்-அபகாரிகளளவிலும் உபகரிக்கையாகிற நன்மையால், மிக்க - அதிஶயித்தவர்களாய், நான்மறை - நாலுவேதங்களுக்கும், ஆளர்கள் - வ்யாஸபதம் செலுத்தவல்லவர்கள், (என்னை) புன்மையாக - பொல்லாங்காகவே, கருதுவர் - நினைப்பர், ஆதலில் - ஆதலால், அன்னையாய் - மாதாவுமாய், அத்தனாய் - பிதாவுமாய், என்னை - அடியேனை, ஆண்டிடும் - நியமித்துப்போருகிற, தன்மையான் - ஸ்வபாவத்தை யுடையராய், சடகோபன் - என்னுடைய ஶாட்யத்தைப்போக்கினவரான வாழ்வார், என்நம்பி - என் குறை தீர்க்கவல்ல பூர்த்தியுடையவர் (ச)

ரு - பா. நம்பினேன்.

முன்னெலாம் - அநாதிகாலமெல்லாம், பிறர் - ஈஶ்வரனுடைய, நன்பொருள் தன்னையும்-விலக்ஷணமான வாத்மவஸ்துவையும், நம்பினேன் - ஆசைப்பட்டுப் போந்தேன்; மடவாரையும் - பாதிவ்ரத்யாதிகளையுடையபரஸ்த்ரீகளையும், நம்பினேன் - ஆசைப்பட்டுப் போந்தேன். செம் - மாற்றுமிகுங்கின, பொன் - பொன்னாலே செய்யப்பட்ட, மாடம் - மாடங்களையுடைய, திருக்குருகூர் - திருநகரியி லெழுந்தருளியிருக்கிற, நம்பிக்கு - பூர்ணரான வாழ்வாருக்கு, அடியேன் - அடியேனான நான், அன்பனாய் - ப்ரீதனாய், இன்றே - ஆழ்வாரை யாஶ்ரயித்தவின்றே, சதிர்த்தேன் - சதிரையுடையனானேன். (ரு)

சு - பா. இன்று தொட்டும்.

இன்று தொட்டும் - இன்று முதல், எழுமையும் - மேலுள்ள காலங்களிலும், எம்பிரான் - எனக்கு ஸ்வாமியானவர், நின்று - அத்யவஸாயத்தோடே நின்று, தன் - தம்முடைய, புகழ் - கல்யாண குணங்களை, ஏத்த - ஸ்துதிக்கும்படி, அருளினன் - க்ருபை பண்ணினர், குன்றம் - பர்வதங்களையொத்த, மாடம் - மாடங்களையுடைய, திருக்குருகூர்நம்பி - திருநகரியிலே எழுந்தருளியிருக்கிற வாழ்வார், என்றும் - எக்காலத்திலும், என்னை - (இனி) என்னை, இகழ்விலன் - அநாதரிக்கிறிலர். காண்மின் - காணுங்கோள். (சு)

எ - பா. கண்டுகொண்டு.

காரிமாறப்பிரான் - காரியின்குலத்திற்பிறந்து எனக்கு உபகாரகரான வாழ்வார், என்னை - தம்பெருமையறியாத வென்னை. கண்டு - என் தோஷம்பார்த்துக் கூசாதே கடாக்ஷித்து, கொண்டு - குற்றங்கண்டு காற்கடைகொள்ளாதே கைக்கொண்டு, பண்டை - அநாதிஸித்தமாய், வல்வினை - ப்ரபலமான பாபத்தை, பாற்றி - உருமாய்ந்துபோம்படி பண்ணி, அருளினன் - தம்புகழை ஏத்தும் படி அருளினர். ஒள் - அழகிய, தமிழ் - ஸர்வாதிகாரமான தமிழ் பாஷையால் ப்ரபந்தத்தை யருளிச்செய்து, சடகோபன் - ஸம்ஸாரிகளுடைய ஸாட்யத்தைப்போக்கின வாழ்வாருடைய, அருளையே - க்ருபையையே, எண்டிசையும் - எட்டுத்திக்கிலுள்ளாரும், அறிய - அறியும்படி, இயம்புகேன் - சொல்லுகிறேன். (எ)

அ - பா. அருள்கொண்டாடும்.

அருள் - பகவத்க்ருபையையே, கொண்டாடும் - ரக்ஷகமாகக் கொண்டாடிப்போருகிற, அடியவர் - சேஷபூதர், இன்புற - ஆநந்த நிர்ப்பராக, அ - ப்ரஸித்தமாய். அரு - பெறுதற்கரிதாயிருக்கிற, மறையின் - வேதரஹஸ்யமான வுபநிஷத்தின், பொருளை - அர்த்தங்களை, அருளினன் - ப்ரஸாதித்தருளினர். அருள்கொண்டு - பகவத்ப்ரஸாதலப்தஜ்ஞாநத்தை முதலாகக்கொண்டு, ஆயிரம் - ஆயிரமான திருவாய்மொழியை, இன் - ரஸகநமாய், தமிழ் - ஸர்வாதிகாரமான தமிழாலே, பாடினன் - காருபமாகவருளின வாழ்வா

ருடைய, அருள்கண்டீர் - ப்ரத்யக்ஷஸித்தமான க்ருபையானது, இவ்வுலகினில் - இந்தலோகத்தில், மிக்கது - மிக்கிருக்கிறது. (அ)

கூ - பா. மிக்கவேதியர்.

மிக்கவேதியர்-ப்ரமாணச்ரேஷ்டமான வேதத்தையே நிரூபகமாகவுடைய ப்ராஹ்மணருடைய, வேதத்தின்-ஸகலவேதங்களின், உட்பொருள் - குஹ்யமான வர்த்தத்தை, நிற்க - கேட்பார்க்கு ப்ரதிபத்தி விஷயமாம்படி, பாடி - திருவாய்மொழியாலே பாடி, என்நெஞ்சுள்-பகவச்சேஷத்வத்துக்கும் தூரஸ்தனான என் ஹ்ருதயத்திலே, நிறுத்தினான்-அதுதன்னை ஸுப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினார். தக்க - ஸர்வேச்வரன் கவிபாடுகைக்குத் தகுதியான, சீர் - கல்யாணகுணங்களை யுடையராய், சடகோபனென்நம்பிக்கு - என்னுடைய ஸாட்யத்தைப்போக்கவல்ல பூர்த்தியுடையவரான வாழ்வாருக்கு, ஆள்புக்க - அநந்யார்ஹசேஷவ்ருத்தியில் புகுவதிலுண்டான, காதல் - ஆதரமானது, அடிமைப்பயனன்றே - (இந்தஜந்மத்திலேயே) ஆழ்வார் திருவடிகளில் கைங்கர்யரூபமான ப்ரயோஜநத்தோடே வ்யாப்தமாயிருப்பதொன்றன்றோ? (கூ)

கo - பா பயனன்றாகிலும்.

பயனன்றாகிலும் - தமக்கொரு ப்ரயோஜநமில்லாதேபோனாலும், பாங்கலராகிலும் - ஹிதங்கேட்கைக்குப் பாங்கின்றிக்கேயிருந்தார்களேயாகிலும், செயல் - தம்முடைய செயலாலே, நன்றாக - அநுஷ்டாநபர்யந்தமாக, திருத்தி - ஸிக்ஷித்து, (எல்லாரையும்) பணிகொள்வான் - ஆட்கொள்ளுமவராய், குயில் - குயில்களானவை, நின்று - தேவர் ஸமீபத்திலிருந்து, ஆர் - திருவாய்மொழிபாடும் ஸம்ருத்தியையுடைய, பொழில் - சோலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு, நம்பி - நிர்வாஹகரான வாழ்வீர்! உன்றன் - தேவரீருடைய, மொய் - ச்லாக்யமான, கழற்கு - திருவடிகளில், அன்பையே - மேன்மேலன அபிவ்ருத்தமாகுமபிநிவேசத்தையே, முயல்கின்றேன்-அர்த்தியாநின்றேன்.

கக - பா. அன்பன்தன்னை.

அன்பன்றன்னை-ரிபூர்ணமபிவத்ஸலனான எம்பெருமான்றன்னை. அடைந்தவர்கட்கெல்லாம்-ஆச்ரயித்த வெல்லார்பக்கலிலும், அன்

பன் - வாத்ஸல்யத்தையுடையராய், தென் - ஸ்ப்ருஹணீயமான, குருகூர்நகர் - திருநகரிக்கு, நம்பிக்கு - நிர்வாஹகரான வாழ்வார் விஷயத்தில், அன்பனாய் - நிரதிசயஸ்நேஹயுக்தராய், மதுரகவி - மதுரவாக்கான ஸ்ரீமதுரகவியாழ்வார், சொன்ன-அருளிச்செய்த, சொல் - பாசுரங்களை, நம்புவார் - தமக்குத்தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு. பதி - ப்ராப்யமானதேசம், வைகுந்தம் காண்மின் - பரமபதம் கிடீர். (கக)

பதவுரை முற்றிற்று.



ஸ்ரீ:

ஸ்ரீ பதேராமாநுஜாயநம:.

பெரியாழ்வார் திருமகளாரான

ஆண்டாள் அருளிச்செய்த

# நாச்சியார் திருமொழி.

இதற்கு

பரமகாருணிகரான

பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்த வ்யாக்யாநமும்,

பூர்வர்கள் சேர்த்தவரும் பதமும்,

பதவுரையும்,

---

ஸபாபண்டிதரான,

ஸ்ரீமான் - கோமடம் - முப்பிராலே,

**அக்காரக்கனி - ராகவாசார்யரால்**

பரிசோதிக்கப்பட்டு,

---

ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபக ஸபையாரால்,

சென்னை :

ஸ்ரீநிகேதன முத்ராக்ஷரசாலையில்

அச்சிட்டு ப்ரசுரம்செய்யப்பட்டது.

1923.

விஜயதேதராம்.

வ்யா.—(அல்லிநாட்டாமரைமேல் ஆரணங்கின் இன்றுணைவி) காதும் வண்டுமுடைய தாமரைநாட்பூவை வாஸஸ்தானமாகவுடையளாய், அப்ராக்ருத ஸ்வபாவையான பெரியபிராட்டியார்க்கு இஷ்டமான ஸகியாய். " மண்மகளுந்திருவும் நிழல்போல்வனர் " " ఛాయామివాభ్యుదయినీమవనీఞ్చతస్యాః । ఏవంభూతభూమి " " சாயாமிவாப்யுதயிநீமவநீஞ்சதஸ்யா:, எவம்பூதபூமி"-என்னக்கடவதிறே. ஆகையால் ஸமஸகியாயிருக்கை. ஸாக்ஷாத் லக்ஷ்மிக்குஸகியாயாய்த்து இவளிருப்பது. (மல்லிநாடாண்டமடமயில்) அவளோட்டைச் சேர்த்தியால்வந்த செல்வம். " உடனமர்காதல்மகளிர் திருமகள் மண்மகளாயர் மடமகள்-ஆளும் உலகமுழுன்றே." "துணைவி, மயில்" என்கைபாலே - ஒருத்திக்கு ஸகியுமாய், ஒரு தேசத்துக்கு ஶிகியுமாயிருக்குமவளாய்த்து, இவள்தான் * பேடைமயிலிறே. புனமயிலாய்க்காட்டுமயிலாயிருக்கை யன்றிக்கே நாட்டுமயிலாயிருந்து, தன் குணத்தாலே நாடாக ஈடுபடும்படிபண்ணி ஆக்ஞயாளுமவளென்கை. "மயில்" என்று-அளகபாரத்தையும் பெண்மையையும் இட்டுப் பேசுகிறது. இதுதான் பராபிமானத்தில் ஒதுங்கிவளருமிறே; இவளும் பட்டர்பிரானபிமானத்தே வளருமவளாய்த்து. (மெல்லியலாள்) ம்ருதுஸ்வபாவை யென்றபடி. " கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து ஒருநாள் தங்குமேலென்னாவி தங்கும் " என்னும்படி விஶ்லேஷாஸஹமான மார்த்தவம். (ஆயர்குல வேந்தனாகத்தாள்) அந்தமார்த்தவஸ்வபாவத்தாலே பிரிவாற்ற மாட்டாமல், ஆயர்குலவேந்தனை க்ருஷ்ணனுடைய * பொன்னாகம் புல்கியிருக்குமவளாய்த்து. * கொம்மைமுலைகளிடர்தீரவிறே கோவிந்தனை * த்தழுவிமுழுசியிருப்பது. இனி ஆபிஜாத்யத்தாலும் அநுரூபை யென்கிறது (வேயாபயந்தவிளக்கு) என்கிறத்தாலே. * வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் கோதையிறே குலப்ரதீபையாயிருக்கை. * ஆயர்குலத்தினில் தோன்றும் மணிவிளக்குக்கு அநுருபமாயிறே * வேயர்பயந்த விளக்குமிருப்பது. ஸ்ரீகோபஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணின குடியிறே. ஆகையால் குலத்திலும ஸத்ருஶையாயிருக்கை. "அல்லிநாள்தாமரைமேல்" என்று தொடங்கி இவளுடைய ஜந்தாகாரத்தையும் சொல்லுகையாலே - இவளுடைய ஸக்ருஶவைபவமநுஸந்திக்கப்பட்டதாய்த்து. " முன்னவள்தென்புதுவைதெரிவைத்

திருமகள் தாரணி யென்பவள் நாரணன்றனுருவுக்கு இனியவள் ஊரரங்கமென்றுஞ் சீர்மையவள் பருவப்பணிமொழி யென்னைப் பணிந்தருளே." (க)

(மற்றொருதனியன்.)

கோலச் சுரிசங்கை மாயன்செவ் வாயின் குணம்வினவும்
சீலத் தினள்தென் றிருமல்லி நாடி செழுங்குழன்மேல்
மாலைத் தொடைதென் னரங்கருக் கீயு மதிப்புடைய
சோலைக் கிளியவள் தூயநற் பாதந் துணை நமக்கே.

ப - ரை. கோலம் சுரிசங்கை - அழகையும் சுரியையமுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை நோக்கி, மாயன் - கண்ணபிரானுடைய, செவ் வாயின்குணம் - சிவந்த திருவதரத்தின் அதிசயத்தை, வினவும் சீலத்தினள் - கேட்குந்தன்மையுடையவளும். தென் - தென்திசையிலுள்ள. திருமல்லிநாடி - திருமல்லிநாட்டிற்குத் தலைவியும், செழும் -செழுமைதங்கிய, குழல் மேல்- (தனது) திருக்குழற்கற்றையில் (சூட்டப்பெற்ற) மாலைத் தொடை - கலம்பக மாலையை, தென் அரங்கருக்கு - அழகிய மணவாளனுக்கு, ஈயும் மதிப்பு உடைய - ஸமர்ப்பிக்கும் படியான மேன்மையுடையளும், சோலை கிளி அவள்-சோலையில் வளருங் கிளிபோல் இனியமொழியையுடையளுமான அவ்வாண்டாளுடைய, தூய நல் பாதம்-பாவநமும் போக்யமுமான திருவடிகள், நமக்கு - நமக்கு, துணை - தஞ்சம்.

அ.—(கோலச்சுரிசங்கை) இதில் பகவத் ப்ரத்யாஸந்நரைக் குறித்து தத்போக்யதையைப்ரஶ்நம்பண்ணும்படியையும், தத்தேஶவாஸத்தாலுண்டான ப்ராஶஸ்த்யத்தையும், பர்த்ருவஶீகரணஹேதுவான வால்லப்யத்தையும்சொல்லி, ஏவம்விதாகாரையான ஆண்டாள் திருவடிகள் அநந்யகதிகளுக்குத் துணையென்கிறது.

வ்யா.—(கோலச்சுரிசங்கை) "கோலப்பெருஞ்சங்கே" என்றும், "சுரியேனுஞ் சங்கும்" என்றும்,"சுரிசங்கு" என்றும் சொல்லப்படுகிற அழகையும சுரியையுமுடைத்தான சங்கை. (மாயன் செவ்வாயின்குணம் வினவும் சீலத்தினள்) * பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியாலே * மதுசூதன்வாயமுதம்பன்னாளுமுண்டிறே போருவது. "வெண்சங்கமூதியவாய்", "சங்கம் வாய்வைத்தான்" என்னும்படியிறே சங்கு வாய்வைப்பது. அக்

தாலே - வாய்விடாத சாதியைக்கேட்கிறாள். மாயன் செவ்வாயின் குணம் வினவுகையாவது - "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ" என்னும்படியான குணம். "பாலொடுநெய்தயிரொண் சாந்தொடுசெண்பகமும் பங்கயம் நல்லகருப்பூரமும் நாறிவரக் கோலநறும்பவளச் செந்துவர்வாய்" என்றிறே இவள் திருத்தமப்பனார் அருளிச்செய்தது. "மாயன்" என்றது - ஸௌந்தர்யசீலாதிகளால் ஆஸ்சர்யபூதனான க்ருஷ்ணனென்றபடி. ஆயமாயவன் - ஆயன்மாயோனிறே. வினவுகையாவது - * விருப்புற்றுக் கேட்கை சீலத்தினளாவது - இதுவே ஸ்வபாவமாயிருக்குமவளென்கை. "𑌸𑌰𑍍𑌵𑌗𑌨𑍍𑌧𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌰𑌸𑌃" "ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:" என்னும் வஸ்துவோடே ஸர்வகாலாநுபவாபேக்ஷை இவளுக்கு ஸ்வபாவமென்றபடி. (தென்திருமல்லிநாடி) இவளுக்குஸ்வபாவம்நாட்டுநலத்தாலே வந்தது; கோஸலதேசத்திலுள்ளார்க்குப்போலே. "திருமல்லிநாடி" என்று - அதுவே நிரூபகமாம்படியான அதிசயத்தையுடையவள். தென் திருமல்லிநாடி. தெற்குத்திக்கிலேயாய் தர்சநீயமாயிருக்கிற திருமல்லிநாடி. ஸ்ரீவில்லிபுத்தூரை யடுத்தணித்தான நாட்டுக்கு "திருமல்லிநாடு" என்றிறே திருநாமம். இனி பர்த்ருவால்லப்யத்தைச் சொல்லுகிறது (செழுங்குழல்மேல் மாலைத் தொடைத்தென்னரங்கருக்கீயும்மதிப்புடைய சோலைக்கிளி) என்று மாலைத்தொடை - பெரியாழ்வார் கட்டின கலம்பகன் மாலைத்தொடையை (தென்னரங்கருக்கீயும்) * ராமஸௌமித்ராபநீதங்களான ஹேமாம்போஜங்களை விரும்பிச் சாத்தியருளுமவர்க்கு. பெரியாழ்வார் கட்டின மாலையைச் சூடிக்கொடுத்தது வடபெருங்கோயிலுடையானுக்கன்றோ, பெரிய பெருமாளுக்கன்றே யென்னில்; "ஆராமஞ்சூழ்ந்தவரங்கம்" என்றும், "தலையரங்கம்" என்றும் எல்லாத்திருப்பதிகளையும் அவயவமாகவுடைத்தாய் அகிலதிவ்ய தேசப்ரதாநமாயிருக்கையாலும், திருமணம்புணர்ந்ததும் அழகிய மணவாளப்பெருமாளையாகையாலும், இனித்தான் கண்வளர்ந்தருளுகிற ஆகாரமுமொத்து போகஸ்தாநமுமாயிருக்கையாலும், தர்ம்மைக்யத்தாலும், அப்படி சொல்லலாமிறே. ஸ்ரீமாலாகாரர் மகளாகையாலே "ஆரங்கமாலை" என்னும்படியான மாலுக்குமாலையை வழங்கினாள். இப்போதும் இது நம்பெருமாள் ஆறுந்திருநாள் ஆனைபேற்றத்தினன்

று அநுபவிக்கும். "அங்கவனோடுமுடன்சென்றங்கானைமேல்" என்றிறே இவளபேக்ஷித்திருப்பது. தென்னரங்கருக்கீயும்மதிப்புடைமையாவது - * பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதுஞ்சோராமேயாள்கின்றவெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார்க்குச் சூடிக்கொடுத்த மதிப்பிறே. "స్వోచ్ఛిష్టాయాం స్రజనిగళితాం యాబలాత్కృత్య భుఙ్క్తే" "ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜிநிகளிதம் யாபலாத்க்ருத்யபுங்க்தே" என்று, * சூடிக்களைந்தனசூடும்இத் தொண்டர்படியாய்த்து * அண்டர்கோனணியரங்கன்படியும். அவன்றான் பரமப்ராணயியிறே. (மதிப்புடைய சோலைக்கிளி) பெரியாழ்வார் திருமகளென்னும் மதிப்பையுடைய கிளி. * கிளிமொழியாளிறே "எல்லே யிளங்கிளியே" என்றாளே இவளும். பெரியாழ்வார். * தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமத்தாலே வளர்த்தெடுத்தகிளி. மெய்ம்மைப் பெருவார்த்தை கற்பித்தாருமிவரேயிறே. வளர்த்தெடுப்பார்க்கும் காலிலே வணங்கவேண்டும்படியான கிளி. "శుకతుణ్డ" "ஶுகதாதம்" என்னுமாப்போலேபெற்றவர்களை விஞ்சியிருக்குமாய்த்து ஶுகமிருப்பது. சோலைக்கிளி - ஆழ்வாராஶ்ரமத்திற்கிளி. இத்தால்-பாரிமாநத்தே வளர்ந்தமை தோற்றுகிறது. ( அவள்தூயநற்பாதம் ) ஏவம்விதாகாரையாய் பாவநத்வபோக்யத்வங்களையுடையவள் திருவடிகள். "அல்லிபம் பூமலர்க்கோதாயடிபணிந்தேன்" என்றும், "செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி" என்றும் - ஶேஷஶேஷிகளிருவர்க்கும் தந்தாம் ஸ்வரூபாநுகுணமாக இழியுந்துறையாயிருக்கும்திருவடிகள். அதுதான் * பாடகஞ்சேர் மெல்லடியாயிருக்கும். "பாடகக்காலிணை தானேபரமபதந்தருமே." திருவடிகள் இங்கிருக்கும் நாளைக்குத் துணையாய், மேல்வழித்துணையாய், அதுக்குமேலே கைங்கர்யத்துக்குத்துணையாய், கைங்கர்யவர்த்தகமுமாயிருக்கும். "பண்டேனமாயுலகை - திருவடியே துணையல்லால்துணையிலேன்." இவளும் * ஞாலப்பொன்மாதிறே. ஆகையால் * கோலத்திருவடிகளோபாதி * ஞாலப்பொன்மாதான ஆண்டாள் திருவடிகளும் உத்தேஶ்யமென்றதாய்த்து.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

பிள்ளைலோகம்ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஆண்டாளருளிச்செய்த

# நாய்ச்சியார் திருமொழிக்கு

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாவதாரிகை.

ப்ராபகஸ்வீகாரமும் பண்ணி ப்ராப்யத்தையும் நிஷ்கர்ஷித்தாராய் நின்றது - கீழ்; இந்த ப்ரதிபத்தியிறே இத்தலைக்கு வேண்டுவது இத்தலையில் கண்ணழிவற்றிருந்தது; அவன்பக்கலிலே அபிநிவேஶம் கரைபுரண்டிருந்தது. அநந்தரம் அபிநிவேஶாநுரூபமாகப் பெற்றுக்கொடு நிற்கக்கண்டதில்லை; இத்தலையிலே யொரு ஹேதுவைக் கொள்ளிலிறே அது பக்வமாய்ப் பெறுகிறோமென்று ஆறியிருக்கலாவது; அதுக்கு அங்ஙனொன்றின்றிக்கே யிருந்தது. இனி, பரிக்ரஹித்த ஸாதநம் பலத்தோடு வ்யபிசாரமில்லாதபடி ஸித்தமாயிருந்தது; இங்ஙனே யிருக்கச் செய்தே பலிக்கக் காணாமையாலே யுக்தாயுக்த நிரூபண க்ஷமமல்லாதபடி கலங்கி, அபிமத விஷயத்தைப் பிரிந்தார் திரியட்டும் கூடுகைக்கு மடலெடுக்குமாப் போலே, பிரிந்தாரைக்கூட்டிப் போருகையே ஸ்வபாவமாக வுடை

## அரும்பதவிளக்கத்தின் அவதாரிகை.

ப்ராபகஸ்வீகாரமுமென்றது - "புண்ணியம் நாமுடையோம்" என்றத்தைப்பற்ற. ப்ராப்யத்தையும் நிஷ்கர்ஷித்தாரென்றது - "உனக்கே நாமாட்செய்வோம்" என்றத்தைப்பற்ற ப்ரதிபத்தி யமையுமாகில் காமன் காலிலே விழுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இத்தலையில் கண்ணழிவித்யாதி) (கண்டதில்லை) ஆகையாலே விழுகிறாள் என்று வாக்யத்தைப்பூரிப்பது ஆகையாலே இத்தலையில் கண்ணழிவற்றிருந்தது என்று கூட்வது இந்தப்ரதிபத்தி யுண்டானதுகொண்டு கண்ணழிவில்லையாகவேணுமோ வென்ன. உபாயஸ்வீகர்த்தாவான இவன் ஸ்வபாவத்தாலும் ஸ்வீக்ருதமான உபாயஸ்வபாவத்தாலும் கண்ணழிவில்லாமையை இரண்டுவழியாலே ஸாதிக்கிறார் (இத்தலையிலித்யாதி வாக்யத்வயத்தாலே.) (இங்ஙனே யிருக்கச்செய்தேயும் பலிக்கக்காணாமையாலே - அவன்பக்கலிலே அபிநிவேஶம் கரை புரண்டிருந்தது, அநந்தரம் அபிநிவேஶாநுரூபமாகப் பெற்றுக்கொடு நிற்கக்கண்டதில்லை, ஆகையாலே யுக்தாயுக்தநிரூபண க்ஷமமல்லாதபடிகலங்கி) என்று வாக்யங்களை பின்முன்னாகயோஜித்துக்கொள்வது இதுக்கு நியாமகம்;

யாளொருவனென்னு மிதுவே பற்றுசாக காமஸமாஶ்ரயணம் பண்ணிப்பெறுகையிலே உபக்ரமிக்கிறாள்.

பெருமாளை யல்லது அறியாத திருவயோத்யையி லுள்ளார் அவர்க்கு நன்மையை யெண்ணி, "ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி" "ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தி" என்று-தேவதைகள் காலிலே விழுந்தார்களிறே; இவ்வஸ்துதன்னை பரதசைய்யிலும் வேண்டேனென்ற திருவடி "நமோஸ்து வாசஸ்பதயே" "நமோஸ்துவாசஸ்பதயே" என்றானிறே; கீழ்நாம்செய்துநின்ற நிலைஇது, தவிர்ந்தது இது என்றறியாதபடி கலங்கினருடைய வ்யாபாரம் இருக்கும்படியிறே. "யௌவநாசித் ப்ரேமாந்தா" "யயௌளசகாசித் ப்ரேமாந்தா" என்கிற ப்ரேமத்தாலே வந்தமருட்சிபடுத்துகிற பாடிறே யிது. "ரஜோராகாத்மகம் வித்தி" "ரஜோராகாத்மகம்வித்தி" என்கிறபடியே ஸத்வநிஷ்டரான ஸாத்விகரோடே சேர்ந்து பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணக்கடவதாயிருக்க, ஸாத்விகாக்ரேஸரரான பெரியாழ்வார்வயிற்றிலே பிறந்தவள், ரஜோகுணப்ரசுரரான தேவதைகள்காலிலே விழும்படியென்னென்னில்; அநபாயிநியான பிராட்டி பெருமாளளவிலுண்டான நித்யஸம்ஶ்லேஷார்த்தமாக "ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி" "ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தி" என்று-எல்லாதேவதைகள் காலிலே விழுந்தாப்போலவும், இவளுடைய திருத்தமப்பனான நம்மாழ்வார்

மேலே (யௌவநாசித் - யயௌளசகாசித்) என்கிறவாக்யத்திலே, (ப்ரேமத்தாலே வந்தமருட்சி படுத்துகிறபாடிறே யிது)என்று-அபிநிவேஶமேகலக்கத்துக்கு ஹேதுவென்றிருக்கையாலே.

இப்படி கலக்கத்தாலே தேவதாந்தராஶ்ரயணம்பண்ணினபேருண்டோ வென்ன (பெருமாளையித்யாதி) இக்கலக்கத்தாலே தேவதாந்தராஶ்ரயணம் பண்ணினதுக்கு உதாஹரணம். ("வாசஸ்பதயே") "வாசஸ்பதயே" என்றானிறே) என்ற வநந்தரம், ஆகையாலே, கீழ் நாம்செய்தது இது நின்றநிலை இது என்று கூட்டுவது. செய்து நின்ற நிலையாவது ஸர்வேஶ்வரனையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் ஸ்வீகரித்து நின்ற நிலையென்றபடி. தவிர்ந்ததிதுவென்றது - தத்வ்யதிரிக்த ப்ராப்யப்ராபகாபாஸங்களைத் தவிர்ந்த தென்றபடி. ஆனால் அஜ்ஞானம் த்யாஜ்யமன்றோ வென்ன (யௌவந-யயௌளச இத்யாதி) மருட்சிபடுத்துகிற பாடென்கிறதென், புத்திபூர்வகமாக ஆஶ்ரயிக்கிறாளென்றாலோவென்ன, அருளிச்செய்கிறார் (ரஜோராகாத்மகம் - ரஜோராகாத்மகம் இத்யாதி)

"தெய்வங்காள்" என்று தேவதைகளை முன்னிட்டாப்போலவும், இவளும் அயர்த்துக் கலங்கினபடி. இப்படிப்பட்ட கலக்கத்தாலே பிரிந்தாரைக் கூட்டுமென்னு மிதுவேகொண்டு காமஸமாஶ்ரயணம் பண்ணுகிறாள். தன்னுடலை அழியமாறி நின்றிறே இவன்றான் பிரிந்தாரைச் சேர்ப்பது. இதுதான் இவளுடைய ப்ராப்ய த்வரை யிருக்கிறபடி. அதாவது - பெரியாழ்வார், ப்ராப்யருசியாலே ஒரு கருமுகை மொட்டாகிலும் வடபெருங்கோயி லுடையானுடைய திருக்குழலிலே வெடிக்கவேணும் என்று கருமுகையை ஸம்ரக்ஷியாநிற்பர்.

இவளுடைய ப்ராப்யத்வரை யிருக்கும்படி;-காமன் காலிலே யொரு மதமத்த மலராகிலும் முருக்கம்மொட்டாகிலும் வெடிக்கவேணு மென்று மதமத்தம் முருக்கு இவற்றை ஸம்ரக்ஷியா நிற்கும். கடகருகந்ததே தேடியிடவேணுமிறே. ... ... ... *

அவதாரிகை முற்றிற்று.

---

கடகத்லேநவிழும்படியாய்த் தென்றபடி, ஸர்வேஶ்வரனைப் பெற வேணு மென்கிற த்வரையாலே கடகனை காமஸமாஶ்ரயணம் பண்ணு கிறாள் வேணுமாகில், "மத்தநன் னறுமலர் முருக்கமலர் கொண்டு" என்று - மதமத்தை முதலானவற்றை ஸம்ரக்ஷிக்கிறதென்னென்ன (இதுதானித்யாதி)

மேல் "அதாவது" இத்யாத்யுப பாதநாநுகுணமாக, கீழே காம ஸமாஶ்ரயணத்துக்கடி ப்ராப்யத்வரையே என்றவோபாதி, மதமத்தை முதலானவற்றை ஸம்ரக்ஷிக்கையும் ப்ராப்யத்வரா கார்யமென்று இங் ஙனே வகையிட் டருளிச்செய்வர். ஆனால் கருமுகை முதலான ஶ்லாக்ய புஷ்பங்களை யிடாதே இத்தை யிடுவானென்னென்ன; அருளிச்செய் கிறார் (கடகரித்யாதி.)

ப்ரவேஶ. (திருப்பாவையிலே - ப்ராயத்தையும் நிஷ்கர்ஷித்து - ப்ராபகஸ்வீகாரமும் பண்ணினாராய் நின்றது) என்று வாக்கியத்தை அந் வயித்துக்கொள்வது ப்ரதிபத்தியே அமையுமாகில் காமன்காலிலே விழுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இத்தலையில்கண்ணழிவித்யா தி.) (கண்டதில்லை) ஆகையாலே விழுகிறாள் என்று வாக்யத்தைப் பூரிப் பது. எத்தனை அபிநிவேஶ முண்டானாலும் "தத்தஸ்யஸத்ர்ஸம்பவேத்" "தத்தஸ்யஸத்ர்ஸம்பவேத்" என்று - அவன் கைபார்த்திருக்குமதொழிய இப்படிகலங்கி காமஸமாஶ்ரயணம் பண்ணவேண்டும் ஹேது வேதென்ன;

உபாயாந்தரபரிக்ரஹ மில்லாமையாலும், பரிக்ரஹித்த உபாயத்துக்கு பல வ்யபிசாரமில்லாமையாலும் கலங்கிப்பண்ணுகிறாளென்னுமத்தை அருளிச் செய்கிறார் (இத்தலையிலே ஒருவித்யாதி.) இப்படி கலங்கி இதராஸமாஸ்ரா யணம் பண்ணினவர்களுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (பெருமாளை யல்ல தித்யாதி) ஸமுத்ரதரணம் பண்ணும்போது "నమోస్తువాచస్పతయే-நமோஸ்துவாசஸ்பதயே" என்றானிறே திருவடி ; வ்யாபாரம் இருக்கும் படியிறே இது என்று பூரிப்பது. இது - காமஸமாஸ்ரயணம். கலக்கம் த்யாஜ்யமன்றோ வென்ன; ப்ரேமகார்யமான கலக்கம் உபாதேயமென்கிறார் (ససర్జాం దశాం ఢేతీ-யயௌசகாசிதித்யாதி.) கலக்கத்தின் அவதி எவ்வள வென்ன ; அருளிச்செய்கிறார் (ரஜோராகாத்மகமித்யாதி) காமன்றான் பிரிந்தாரைக் கூட்டுமோவென்ன ; அருளிச்செய்கிறார் (தன்னுடலையித் யாதி.) தன்னுடலை அழியமாறுகையாவது - ஹிமவத் பார்ஸ்வத்திலே ருத் ரன் தபஸ்ஸு பண்ண ; ஹிமவாந், தன்புத்ரியான பார்வதியை ஸுஸ்ரூ ஷிக்கவிட; தேவர்கள் இவன் தபஸ்ஸை அழிக்கைக்குக் காமனை ப்ரே ரிக்க; அவன், தன்னை தஹிப்பனென்ன; ஆனாலும் இத்தனையும் செய்ய வேணுமென்ன; தன்னை யழியமாறி ருத்ரனையும் பார்வதியையும் கூட்டின ப்ரஸித்தி மதமத்தை - ஊமத்தை விசேஷம். இப்படி அதிப்ரவணை யானவள் நல்ல புஷ்பந் தேடியிடாமல் இத்தை யிடுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கடகரித்யாதி.) ... ... ... ... *

அரும்பதவிளக்கத்தின் அவதாரிகை

முற்றிற்று.

---

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

தையொருதிங்களுந்தரைவிளக்கித்
தண்மண்டலமிட்டுமாசிமுன்னாள்
ஐயநுண்மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக்கலங்கரித்தநங்கதேவா
உய்யவுமாங்கொலோவென்றுசொல்லி
உன்னையுமும்பியையுந்தொழுதேன்
வெய்யதோர் தழலுமிழ்சக்கரக்கை
வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே. (க)

ப - ரை. தையொரு திங்களும்-தைமாஸம் முழுதும். தரை-அவன் வரும் ஸ்தலத்தை. விளக்கி - அலங்கரித்து, தண் - குளிர்ந்து அழகாயிருந்துள்ள, மண்டலம்-மண்டலாகாரமான கோலத்தை, இட்டு-இட்டும், மாசி-மாசிமாஸத்தில், முன்னாள் - முதல்பக்ஷத்திலும், ஐய-அழகியதாய். நுண்-நுண்ணிதான, மணற்கொண்டு - மணலைக்கொண்டு, தெரு - அவன்வரும் தெருவை, அழகினுக்கு-கேவலம் அழகுக்காகவே அணிந்து-அழகுபெறும்படி. அலங்கரித்து-அலங்காரம்பண்ணி, அநங்கதேவா-மந்மதனே, உய்யவுமாங்கொலோ என்ற - உஜ்ஜீவிக்கவுங்கூடுமோ என்கிற. சொல்லி-ஆசையாலே சொல்லி. உன்னையும்—, உம்பியையும்-உன் தம்பியான சாமனையும், தொழுதேன்—; வெய்யது-வெவ்வியதான, தழல்உமிழ் - நெருப்புப்பொறிகளைச் சிந்தாநின்றுள்ளதாய், ஓர்-அத்விதீயமான, சக்கரம் - திருவாழியை, கை - திருக்கையிலேயுடைய. வேங்கடவற்கு - திருமலையிலெழுந்தருளி யிருக்கிறவனுக்கு, என்னை—, விதிக்கிற்றி - அந்தரங்க கைங்கர்யம் பண்ணும்படி விதிக்கவேணுமென்கிறாள்.

வ்யா.—முதற்பாட்டு. (தையொருதிங்களும்) மார்கழிமாஸமொருமாஸமும் நோன்புநோற்றார்களாய் நின்றதிறே: இனி தையொருமாஸமும் அவன்வரும் ஸ்தலத்தை அலங்கரித்து. (தையொருதிங்களும்) "செங்கண்மா லெங்கண்மாலென்ற நாளெந்நாளும் நாளாகும்" என்று-ஸர்வேஶ்வரன் நம்பக்கலிலே ஆபிமுக்யம் பண்ணினானென்று அறிவதொருநாளுண்டாகில் காலத்ரயமும் அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லாநிற்குமிறே. இப்படி ஒருநாளை யாநுகூல்யம் மிகையென்றிருக்கும் விஷயத்தைப்பற்றி வைத்திறே இவன்காலிலே யொருமாஸமாகத் துவளப்பார்க்கிறது.

---

அரு. முதற்பாட்டு. (தையொருவித்யாதி) ஸ்வாபதேஶத்தை யுட்கொண்டு வ்யாக்யாதாவின் ஈடுபாடு (செங்கண்மாலித்யாதி.) செங்கண்மாலான ஸர்வேஶ்வரன், "எங்கள் - நம்பக்கலிலே, இச்சேதனன், மால் - வ்யாமோஹத்தையுடையவன்" என்று அறிவதொருநாளுண்டாகிலென்ற

(தரை விளக்கி) திருககண்ணமங்கையாண்டானைப்போலே இது தானே ப்ரயோஜநமாய்ச் செல்லுகிறபடி. ஸர்வேஶ்வரனுக்கு அஸாதாரணமான ஸ்தலங்களிலே புக்கு பரிசர்யைபண்ணிப்போரும் குடியிலே பிறந்தவளிறே. பகவத்கைங்கர்யம் பண்ணுகைக்கு ஸ்தலஶுத்தி பண்ணுகிறபடியிறே இது.

(தண்மண்டலமிட்டு) குளிர்ந்து தர்ஶநீயமான மண்டலத்தையிட்டு. * தொழுதெழுது மென்னு மிது மிகையான விஷயத்தைப்பற்றி வைத்து இங்கே மண்டல பூஜை பண்ணுகிறாளிறே ஆற்றாமை. (மண்டலமிட்டு) வ்ருத்த ஹாநியை யநுஷ்டியாநிற்கச்செய்தே இவள்செய்கையாலே அதுதானேஸத்வ்ருத்தமாயிருக்கிறபடி. (தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள்) ஒருப்ரயோகம் பண்ணும்போது ஒருமண்டலம் ஸேவிக்கவேணுமிறே; அதுக்கு பலவ்யாப்தி உண்டாம்போது அதுக்காக மண்டலஸேவை பண்ணுகிறாள். (தண்மண்டலமிட்டு) இம்மண்டலத்தில் செய்தறியாத தொன்றிறே இவள் செய்கிறது. (மாசிமுன்னாள்) மாசிமுற்கூறு - முதல் பதினைந்து. ஒருபக்ஷத்திலே நின்று அநுஷ்டிக்கவேணுமே. (ஐயநுண்மணல்கொண்டு தெருவணிந்து) ஐயதாய் அவன் ஸௌகுமார்யத்துக்குச் சேரும்படி நுண்ணிதான மணலைக்கொண்டு, தெருவணிந்து - அவன் வரும் தெருவை அலங்கரித்து. (அழகினுக் கலங்கரித்து) வேறொரு ப்ரயோஜனத்துக்காகவன்றிக்கே இதுதானே ப்ரயோஜநமாக அலங்கரிப்பாரைப்போலே அலங்கரித்து. இப்படி ஸாதரமாக ஆஶ்ரயிக்கிறது நீயென்பக்கல்

---

ஈஶ்வரனுடைய அனுஸந்தானமாக்கினால் வாக்யம் ஸங்கதமாம். (அரிவதொருநாள்) யென்றது - அனுஸந்திப்பதொருநாளென்றபடி (உண்டாகில்) என்கிறயதிஶப்தம் சேதனனுக்கு ஈஶ்வரவிஷயத்தில் ஆபிமுக்யதௌர்லப்யத்தைப்பற்ற. பகவத்ஸமாஶ்ரயணம் ஸுஶகம், காமஸமாஶ்ரயணம் துஶ்ஶகம் என்னுமத்தையருளிச்செய்கிறார் (இப்படியொருநாளை இத்யாதி) (பிறந்தவளிறே) “இப்போது காமனுக்கு பரிசர்யை பண்ணுகி

என்கண்டென்ன : (அநங்கதேவா) உன்னை அழியமாறியும் பிரிந்தாரை நீ சேர்க்கும் ஸ்வபாவத்தைக்கண்டு. (உய்யவுமித்யாதி) பேறுதப்பாதென்று அத்யவஸித்திருக்கலாவதொரு விஷயமன்றே பற்றிற்று ; விநாஶத்தை விளைப்பதான செயலைச்செய்கிறே "உஜ்ஜீவிக்கலாம்" என்று பார்க்கிறது. பலத்துக்கு வ்யபிசாரமில்லாத ஸாதநத்தை பரிக்ரஹித்து வைத்திறே பலம் பாக்ஷிகமான விஷயத்திலே விழுகிறது. (என்று சொல்லி) உஜ்ஜீவிக்கலாமென்னுமாசையாலே. (உன்னையும் உம்பியையும் தொழுதேன்) ததீயரோடேகூட அவனை உபாஸித்துப்போந்த வாஸனையாலே, "ஸப்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:" "ஸப்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:" என்னுமாப்போலே, தம்பிமுன்னாகப் பற்றுகிறாள். காமன் தம்பி - ஸாமன் ; ஸாமனையும் உன்னையும் தொழுதேனென்கிறாள். "நமோஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய" "நமோஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய" என்னுமாப்போலே. (தொழுதேன்) "தோள் அவனையல்லால் தொழா" என்னும் குடியிலே பிறந்திருக்கச் செய்தேயிறே இப்படி இவள் கைகழிந்தது. "க்ருதாபராதஸ்ய" "க்ருதாபராதஸ்ய" இத்யாதி - தீரக்கழிய அபராதம் பண்ணினபின்பு ஓரஞ்சலி நேராமற்போகாது என்றனிறே

---

றாள்" என்று பூரிப்பது. "தறைவிளக்கி" என்றதுக்கு க்ஷேபத்திலே தாத்பர்யங்களருளிச்செய்கிறார் (திருக்கண்ண மங்கையாண்டா னித்யாதி வாக்கியத்வயமும்.) இதுப்ரயோஜநமோ, கைங்கர்யமன்றோ ப்ரயோஜநமென்ன ; அருளிச்செய்கிறார் (பகவதித்யாதி ) ஸ்தலஶுத்தி - ஸாடு. கைங்கர்யத்துக்கு ஸாதநமென்றபடி ; திருவாராதநத்துக்கு பூர்வபாவியான ஸ்தலஶுத்தியென்றுத்வநி.

மண்டலபூஜை - ஸாடு. வ்ருத்தாகாரமாகப் பண்ணுகை - அர்த்தம் ; தேஶமெல்லாம் பூஜிக்கை - த்வநி. வ்ருத்தஹாநி இதரஸமாஶ்ரயணமாகையாலே, வ்ருத்தஹாநிபக்திகார்யமாகையாலே ஸாத்வ்ருத்தம். பக்ஷம்- ஸாடு. பூர்வபக்ஷம் - அர்த்தம் ; ஒருபார்ஶ்வம் - த்வநி. ஐ - அழகு; அச்சதை ஐயதாய்-மார்த்தவமாய் ; ம்ருதுவாயென்றபடி "ஆங்கொலோ" என்று ஸம்ஶயிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (பேறுதப்பாதித்யாதி) ஸமப்தத்திலே நோக்காக தாத்பர்யம் (விநாஶத்தை இத்யாதி) பாக்ஷிகம்-பலித்தல் விபலித்தல்; ஸந்தேஹமென்றபடி. "பேறுதப்பாது" என்ற வாக்யவிவரணம் (பலத்துக்கித்யாதி:)

திருவடி. * க்ருதாபராதர்க்குங்கூட கார்யகரமாவ தொன்றிறே அஞ்சலி. எதுக்காகத்தான் இப்படி தொழுகிறதென்ன (வெய்ய தோரித்யாதி) ஸ்ரீ வைகுண்டத்திலே நித்யஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்துத் தன்னெசாருக்குத்தோற்ற விருக்கக்கடவவன், "ஸம்ஸாரிகளும் இப்பேற்றைப் பெற்றுவாழவேணும்" என்று அங்கு நின்றும் போந்து முதல்பயணம் எடுத்துவிட்டு, ஆஶ்ரிதவிரோதி நிரஸநஶீலனாய் திருவாழியாழ்வானைக் கையிலே யுடையனாய்க் கொண்டு திருமலையிலேவந்துநிற்கிறவனுக்கு; அக்கையும் திருவாழியுமான சேர்த்தியழகைக் காண வேணுமென்று ஆசைப்படுகிற வென்னை அவனுடனே சேர்த்துவிடவல்லையே. அவனே அண்ணியனாய் வந்து நின்றான்; எனக்கு அவனையொழியச் செல்லாமை யுண்டாயிருந்தது; இனி சேர்த்துவிடவல்லையே. இப்போது "வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை" என்றதுக்குக் கருத்து - உகவாதாரை யழியச்செய்கைக்கும், உகப்பார்க்குக் கண்டுகொண்டிருக்கைக்கும் இதுதானே பரிகரமாயிருக்கை. "கூராராழிவெண் சங்கேந்தி-வாராய்" என்றிறே யிருப்பது. ... ... க

> வெள்ளை நுண்மணற்கொண்டு தெருவணிந்து
>     வெள்வரைப்பதன் முன்னந்துறைபடிந்து,
> முள்ளுமில்லாச்சுள்ளி யெரிமடுத்து
>     முயன்றுன்னை நோற்கின்றேன்காமதேவா,
> கள்ளவிழ்பூங்கணை தொடுத்துக்கொண்டு
>     கடல்வண்ணனேன்பதோர்பேரெழுதி
> புள்ளினைவாய் பிளந்தானேன்பதோர்
>     இலக்கினிற்புகவென்னை எய்கிற்றியே. (உ)

---

"சொல்லி" என்றது - ஆசையாலே யென்றபடி. காமனையே யன்றிக்கே அவன் தம்பியைத் தொழுகிறதுக்குத் தாத்பர்யாந்தரம் (ஸப்ராத்ரித்யாதி.) வேறொன்றைச் செய்யாதே அஞ்சலிபண்ணுகைக்கு அஞ்சலிதான் கார்யகரமாமோவென்ன; அருளிச்செய்கிறார் (க்ருதாபராதர்கித்யாதி.) "வேங்கடவற்கு, என்னை" என்கிற பதங்களுக்குத் தாத்பர்யம் (அவனேவித்யாதி) நாயகியானவள் அழகுக்குடலாகவே செல்லுமதொழிய, "வெய்யதோர் தழலுமிழ்" என்கிறதுக்குக் கருத்தென்னென்று ஶங்காபிப்ராயம். இரண்டுக்கும் பரிகரமாயிருக்குமோ வென்ன; அருளிச் செய்கிறார் (கூராராழியித்யாதி) கூராராழி" என்கையாலே-விரோதிநிரஸநமும், "எந்தி" என்கையாலே-அழகும் தோற்றுகிறது .... .... க

ப - ரை. காமதேவா—. வெள்ளை - வெளுத்து, நுண் - நுண்ணிதா யிருந்துள்ள, மணல்கொண்டு - மணலைக்கொண்டு, தெரு - அவன்வருகிற வழியை, அணிந்து - அலங்கரித்து. வெள்வரைப்பதன் முன்னம் - கிழக்கு வெளுப்பதற்குமுன்னே, துறை - நீர்த்துறைகளிலே சென்று, படிந்து - அவகாஹித்து, முள்ளும் - முள்ளும் எறம்பு முதலியவும், இல்லா - இல்லாத, சுள்ளி - இளவிறகுகளை, எரிமடுத்து - அக்நியிலேயிட்டு, முயன்று - முயற்சிசெய்து, உன்னை - உன்விஷயமாக, நோற்கின்றேன் - வ்ரதமநுஷ்டியாநின்றேன்; கள் அவிழ்-மது ஸ்யந்தியாநின்றுள்ள, பூ-புஷ்பங்களாகிற, கணை - அம்புகளை, தொடுத்துக்கொண்டு,—கடல்வண்ணன் - கடல்போன்ற திருநிறத்தையுடையவன், என்பது - என்று சொல்லப்படுவதான, ஓர் - ஒரு, பேர் - பெயரை, எழுதி—புள்ளினை - பகாஸுரனுடைய வாய் - வாயை, பிளந்தான் - கிழித்துப்பொகட்டான், என்பது - என்று சொல்லப்படுவதான, ஓர் இலக்கினில் - ஒரு லக்ஷ்யத்திலே, புக - புகும்படிக்கீடாக, என்னை—, எய்கிற்றி - பண்ணவேணுமென்கிறாள்.

---

வ்யா.-இரண்டாம்பாட்டு. (வெள்ளை நுண்மணலித்யாதி) ஸத்வப்ரசுரனான ஸர்வேஶ்வரனோட்டை ஸம்பந்ததாலும் தேவதையினுடைய ஸௌகுமார்யத்தாலுமாக, வெளுத்து நுண்ணிதா யிருந்துள்ள மணலைக்கொண்டு அவன் வரும்வழியை அலங்கரித்து (வெள்வரைப்பதன் முன்னம் துறைபடிந்து) "நாட்காலே நீராடி" என்று அவனைநோக்கிக் குளித்தவாஸனையாலே கிழக்கு வெளுப்பதற்குமுன்னே நீர்நிலைகளிலே முழுகி. "கீழ்வானம் வெள்ளென்று" என்று-அவனைக்குறித்து நோற்குமிடத்து "துணுக்குத்துணுக்கு" என்னுமித்தனையிறே இவனைநோக்கிச் செய்கிறது. (துறைபடிந்து) ஸ்ரீ பரதாழ்வான் ராமவிரஹமாறுகைக்குச் செய்யுமதைத்தையாய்த்து இவன் பக்கலிலே செய்கிறது. * [Grantha] * கதந்வபாராத்ரேஷு ஸரயூமவகாஹதேயிறே (முள்ளுமித்யாதி) எறும்பும் மற்றொன்றுள்ளவை யில்லாமையே யன்றிக்கே முள்ளுமின்றிக்கே யிருக்கிற, சுள்ளியுண்டு-இளவிறகு அத்தை அக்நியிலேயிட்டு. ஸமித்தை அக்நியிலேபோரமடுத்தனையும் க்ருஷ்ணனைப்போரவணைக்கலாமென்றிருக்கிறாள். பெரியாழ்

---

இரண்டாம்பாட்டு (வெள்ளையித்யாதி) வெள்வரைப்பு - கிழக்கு வெளுக்கை. "வெள்வரைப்பதன் முன்னம்" என்கிறபதத்துக்கு வாஸனை (கீழ்வானமித்யாதி) "முள்ளும்" என்கிறசப்தார்த்தம் (எறும்புமித்யாதி

வார் பகவத்ஸமாராதந ரூபமாகச்செல்லும் அக்நி ஹோத்ரஹோம த்துக்கு வேண்டுவன எடுத்துக் கைநீட்டக்கடவவளிறே இப்போது இது செய்கிறாள். (முயன்று) "த்ஸ்ய" "தத்தஸ்ய" என்னும்படியே அவனே யென்று அறுதியிட்டிருக்கக்கடவ நான், இப்போது அவனைப் பெறுகைக்கு உன்காலிலே விழுந்து படுகிறயத்நமெல்லாம் கண்டாயே. (உன்னை) நான் பற்றியிருக்கும் விஷயந்தான் இன்னதென்னு மிடமறிதியே? அவனைப் பற்றியிருக்கக்கடவ நானன்றோ உன்காலிலேவிழுந்து துவளுகிறேன். அதாண்டு, அதுக்கு நான் செய்யவேண்டுவ தென்னென்ன; (கள் அவிழ்த்யாதி) இனிச் சாணையில் எறிட வேண்டாவாய்த்து. "ஶிதை:" என்கிறபடியே - மதுவிரியாநின்றுள்ள புஷ்ப பாணங்களைத் தொடுத்துக்கொண்டு, கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனுடைய திருநாமத்தை அம்பிலே யெழுதிக்கொண்டென்னுதல்; ஹ்ருதயத்திலே யெழுதிக்கொண்டென்னுதல். பகாஸுரனுடைய வாயைக்கிழித்த விரோதிநிரஸந ஶீலனாயிருக்கிறவன் பக்கலிலே நான் சென்று சேரும்படி பண்ணவல்லையே. "ப⁴ர்தாரம் பரிஷ்வஜே" "பர்த்தாரம் பரிஷஸ்வஜே" நானவனையணைக்கும்படி பண்ணவல்லையே. ... ... ... ... ... உ

மத்தநன்னறுமலர் முருக்கமலர்கொண்டு
முப்போது முன்னடிவணங்கி,
தத்துவமிலியென்று நெஞ்செரிந்து
வாசகத்தழித்துன்னை வைதிடாமே,
கோத்தலர்பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்தனென்பதோர் பேரெழுதி,
வித்தகன் வேங்கடவாணனென்னும்
விளக்கினிற்புகவென்னை விதிக்கிற்றியே. (ரு)

---

செல்லும்நடத்தும். கைங்கர்யபரராயிருக்கிற பெரியாழ்வாருக்குஹோமஸமாராதனையில் யோக்யதை யில்லாவிட்டாலும் வர்ணஸாம்யத்தைப்பற்றச் சொல்லுகிறது. திருநாமத்தை அம்பிலே யெழுதிக்கொண்டு என்றபக்ஷத்தில், ஶ்ரமஹரமான வடிவையுடையவனை இன்னாள் ஆசைப்பட்டாள் என்று எழுதிக்கொண்டு அவனுக்கு இவ்வழியாலே என்பக்கலிலே ப்ராவண்யத்தையுண்டாக்கி, பின்னை அவனோடே யென்னைச்சேர்க்கவேணும்

ப - ரை. மத்தம் நல்நறுமலர் - ஊமத்தையினுடைய நல்ல மலர்களையும்; முருக்கமலர் - பலாசம்புஷ்பங்களையும், கொண்டு - கையிற்கொண்டு. முப்போதும் - காலை மாலை உச்சியாகிற மூன்றுபோதிலும், உன் - உன்னுடைய, அடி - அடிகளிலே, வணங்கி - தெண்டனிட்டு. தத்துவமிலி - இவன் ஸத்யம் தப்பினவன், என்று - என்று வாயாற் சொல்லி, நெஞ்செரிந்து - நெஞ்சுகொதித்து வெறுமனே கிடவாதே, வாசகத்து - வாயாலும், அழித்து—, உன்னை—, வைதிடாமே - வையாதபடி ; கொத்து - கொத்துக்கொத்தாக, அலர் - அலராநின்றுள்ள, பூங்கணை - புஷ்பபாணங்களை, தொடுத்துக்கொண்டு—, கோவிந்தனென்பது - கோவிந்தனென்று சொல்லப்படுவதான, ஓர் - ஒரு, பேர் - பேரை, எழுதி - நெஞ்சிலே யெழுதிக்கொண்டு ; வித்தகன்-விஸ்மயநீயனும், வேங்கடவாணன் - திருமலைக்கு நிர்வாஹகன், என்னும் - என்று சொல்லப்படுகிற, விளக்கினில்-விளக்கிலே, புக-புகும்படி, என்னை விதிக்கிற்றி—நியமிக்கவேணும்.

வ்யா.—மூன்றாம் பாட்டு. (மத்தமித்யாதி) ரஜோகுணப்ரசுரமாயிருக்கையாலே அதுக்கு அநுரூபமாம்படி மதகரமான புஷ்பங்களைக் கொண்டு. மதமத்தையினுடைய நன்றான செவ்விப்பூ முருக்கம்பூ இவற்றைக்கொண்டு. திருத்துழாய் பறிக்கும் குடியிலே பிறந்தவளிறே இப்போது இவனுக்கு இவை தேடுகிறாள். (முப்போதும் உன்னடி வணங்கி) ஒருபோது தொழுகைதானும் மிகையாம்படியான விஷயத்தைப்பற்றிவைத்திறே இவனை த்ரிஸந்தியும் ஆஶ்ரயிக்கிறது. “காலை மாலை கமலமலரிட்டு நீர் - மாலை நண்ணித் தொழுதெழுமின்” “கள்ளவிழும் மலரிட்டு நீரிறைஞ்சுமின்” “விண்டுவாடா மலரிட்டு நீரிறைஞ்சுமின்” “பூசித்தும் போக்கினேன் போது” என்று-காலக்ஷேபார்த்தமாகவும் ஸ்வயம்போக்யமாகவும் பகவத்கைங்கர்யம் பண்ணுங் குடியிலே பிறந்தவள்கிடீர் இப்படி யிவனை ஆஶ்ரயிக்கிறாள். (தத்துவமிலியித்யாதி) உன் ஸ்வரூபம் அழியாமே நோக்கிக்கொள்ளப் பார்கிடாய். இவனை ஆஶ்ரயித்தால், பெறுவதொரு பலமில்லை யென்று, “இவன் பொய்சொ

என்று இவ்வளவாகத் தாத்பர்யம் விவக்ஷிதம். ஹ்ருதயத்திலே எழுதிக்கொண்டு என்ற பக்ஷத்தில், இன்னானோடே இவளைச் சேர்ப்பிக்கவேணுமென்று ஹ்ர்தயத்திலே ஸங்கல்பித்துக் கொண்டென்றபடி ... உ

மூன்றாம்பாட்டு (மத்தமித்யாதி) மத்தமலர் - மதமத்தம்பூ. தாத்பர்யார்த்தம் (காலைமாலையித்யாதி,) தத்துவம் - உண்மை.

ல்லி" என்று நெஞ்சுகொதித்து, அதுதான்நினைவுமாத்ரமாகையன்றிக்கே வாயாலேயழித்துப் பலருமறியும்படி உன்னைவைதிடாமே. (கொத்தலரித்யாதி) "ஜீவஜீவந்தஜீவ" "ஶரவர்ஷம்வவர்ஷஹ" என்றுகொண்டு நூறும்பத்தும் ஆயிரமுமாகப் பெருமாள் திருச்சரங்கள் தொடுத்துவிடுமாப்போலே, நீயும் கொத்துக்கொத்தான புஷ்பங்களைத் தொடுத்துக்கொண்டு. எங்களுடைய ரக்ஷணத்துக்கு முடிசூடியிருக்கிறவனுடைய திருநாமத்தையும் நெஞ்சிலே யெழுதிக்கொண்டு. (வித்தகன் வேங்கடவாணன்) பரமபதத்திலே நித்யஸூரிகள் ஓலக்கங்கொடுக்க விருக்கக்கடவவன், அவ்விருப்பைவிட்டு * கானமும் வானரமும் வேடரும் ஓலக்கங்கொடுக்கத் திருமலையிலேவந்து நிற்கிற விஸ்மயநீயன். "மிகுமதததேன் விண்ட மலர்கொண்டு விறல்வேங்கடவனையே கண்டு வணங்கும்களிறு" என்றும், "வைப்பன் மணிவிளக்காம் மாமதியை மாலுக்கென்றெப்பொழுதும் கைநீட்டும் யானையை" என்றும் - திருவிளக்கிடுவனவும் திருவாராதநம் பண்ணுவனவும் இவையிறே. * சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி யந்தூபந்தராநிற்கவே யங்கு, அதிற்காட்டில் இதுபோக்யமாயிறே இங்குவந்து அவன்நிற்கிறது. (வேங்கடவாணனென்னும் விளக்கினில்) பரமபதத்திலே ஸ்வரூபம் மைத்துப்போலே யிருப்பது. திருமலையிலே வந்து நின்ற பின்பாய்த்து ஸ்வரூபகுணங்களுக்கு ப்ரகாஶமுண்டாய்த்து. குன்றத்திலிட்ட விளக்காய்த்தே. * வேடார் திருவேங்கடம்மேயவிளக்கிறே. திருமலையிலே பொருந்தினபின்பிறே உஜ்வலனாய்த்து. ... ... ௩.

சுவரில்புராண நின்பேரேழுதிச்
சுறவநற் கொடிக்களுந்துரங்கங்களும்,
கவரிப்பிணைக்களுங்கருப்புவில்லும்
காட்டித் தந்தேன்கண்டாய் காமதேவா,
அவரைப்பிராயந் தொடங்கியென்றும்
ஆதரித் தெழுந்த வென்தடமுலைகள்,
துவரைப்பிரானுக்கேசங்கற்பித்துத்
தொழுதுவைத்தேனொல்லைவிதிக்கிற்றியே. (௪)

வித்தகன் - ஸமர்த்தன். தத்துவமென்று - கடகரூபமாதல் ; ஸாத்யவாச்த்வமாதல் நித்யஸூரிகள் ஆராதிக்கிறத்தை விட்டு வருகைக்கு ஹேது வென்னென்ன. அருளிச்செய்கிறார் (சூட்டுநல்மாலை யித்யாதி. ௩

ப - ரை. காமதேவா—, புராணம் - பழையதான, சுவரில் - சுவர்களி லே, நின் - உன்னுடைய, பேர் - பெயர்களை, எழுதி - வரைந்து, சுறவம்- சுறுவென்னும் மத்ஸ்யங்களெழுதின, நல் - நல்ல, கொடிக்களும் - துகிற் கொடிகளையும், துரங்கங்களையும் - குதிரைகளும், கவரி - சவரிகளையு டைய, பிணுக்களும்-பெண்ம்ருகங்களும், கருப்பு வில்லும்-கரும்பாகிற வில்லையும், காட்டித்தந்தேன் கண்டாய் - உனக்கு உரித்தாம்படி பண்ணி னேன் கிடாய்; பிராயம்துடங்கி - பால்யந்துடங்கி, அவரை - அவனை, என்றும் - என்றும் ஒருபடிப்பட, ஆதரித்து - விரும்பி, எழுந்த-கிளர்ந்த, என் - என்னுடைய, தடம் - பருத்த, முலைகள்-முலைகளை; துவரைப்பிரா னுக்கே - ஸ்ரீமத்வாரகாநாதனை கண்ணனுக்கே என்று, சங்கல்பித்து - ஸங்கல்பித்துக் கொண்டு, தொழுது வைத்தேன் - தொழுதேன்; ஒல்லை- சீக்ரமாக, விதிக்கிற்றி - விதிக்கவேணு மென்கிறாள்.

---

வ்யா.—நாலாம்பாட்டு. (சுவரிலித்யாதி) தன்த்வரையாலே ஒன்றைச் செய்கிறு ளித்தனைபோக்கி க்ருஷ்ணனை ஸ்மரித்தவாறே இவனை மறக்கக் கூடுமே; அதுக்காக அவன்பெயரை ஒருபித்தி யிலேயெழுதிவைக்குமாய்த்து. "எழுதிவாசித்தும் கேட்டும் வண ங்கி" என்கிறதெல்லாம் இவன்விஷயத்திலேயாய்த்து இவளுக்கு. (புராணம்) பழையதாகப் பிரிந்தாரைச் சேர்த்துப் போருமவ னன்றோ நீ. (சுறவநற்கொடிக்களும்) கருடத்வஜனோடே வாஸனை பண்ணிப் போருமது தவிர்ந்து, மகரத்வஜனை நினைக்கும் படியாய் வந்து விழுந்தது. "சுறவம்" என்று - ஒருமத்ஸ்ய விசேஷம். (துரங்கங்களும்) க்ருஷ்ணனுடைய தேர்பூண்ட புரவி களை நினைத்திருக்குமது தவிர்ந்து, இவனுடைய குதிரைகளை நினைத்திருக்கிறாள். (கவரிப்பிணுக்களும்) விமலாதிகளை ஸ்மரிக்கு மது தவிர்ந்து இவனுக்கு சாமரமிடுகிற ஸ்த்ரீகளையாய்த்து நினைக் கிறது. (கருப்புவில்லும்) "சார்ங்கமென்னும் வில்லாண்டான்" என்னுமது தவிர்ந்து கருப்புவில்லையாய்த்து நினைக்கிறது. "பிணு" என்று - பெண்பேர். (காட்டித்தந்தேன்கண்டாய்) இவள். தன்

---

நாலாம்பாட்டு. (சுவரிலித்யாதி) உபாஸ்யவிஷயம் நெஞ்சிலேயிரா தோ, காமன்பேரை யெழுதவேண்டுவானென்னென்னில் (தன்த்வரையித் யாதி.) வாஹநாதிகளைச்சொல்லுகிறது-பகவத்விஷயத்தைப்போலே ஸமா ராதநோபகரணமாகவாதல்; ஸவிபூதிகனாகவாதல்; இவற்றை யருளிச்

னெஞ்சிலேபடிந்தவற்றை நமக்கு அறிவித்தாளென்று நீபுத்தி பண்ணி யிருக்கிடாய். வாஹநாதிகள் ஸமாராதநகாலத்திலே கண்டருளப்பண்ணும் வாஸனையாலே இங்குச்செய்கிறாள். ஸவிபூதிகனா யிருக்குமவனை உபாஸித்துப் போந்த வாஸனை. (காமதேவா) அபிமத விஷயத்தைப்பெறுகைக்கு, வயிற்றிலே பிறந்த உன் காலிலே விழும்படியன்றோ என்தசை. (அவரைப்பிராயந்தொடங்கி) "𑌬𑌾𑌲𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿 𑌸𑍁𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌃" "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்று - பருவம் நிரம்பாத வளவே துடங்கி, (என்றுமாதரித்தெழுந்த வென்தடமுலைகள்) என்றுமொக்க அவனை அதரித்து அவ்வாதரமே எருவாகவளர்ந்து, போக்தாவா லுண்டறுக்கவொண்ணாதபடி யிருக்கிறமுலைகளை. (துவரைப் பிரானுக்கே சங்கற்பித்து) *பதினாறாயிரம் பெண்களுக்கும் முன்னேட்டுக்கொடுத்தவன் வேணுமாய்த்து இவற்றுக்கு ஆடல்கொடுக்கைக்கு. (தொழுது வைத்தேன்) அவனுக்கென்று ஸங்கல்பித்தால், பின்னை அவன் குணங்களைபாதி உபாஸ்யமாமித்தனையிறே. (ஒல்லை விதிக்கிற்றியே) என்னுற்றாமை யிருந்தபடி கண்டாயே! இனி இம்முலைகளின் செவ்வியழிவதற்குமுன்னே சேர்க்கவல்லையே ... ... ... ... ச

வானிடைவாழுமவ்வானவர்க்கு
மறையவர் வேள்வியில்வகுத்தவவி,
கானிடைத்திரிவதோர்நரிபுகுந்து
கடப்பதும்மோப்பதுஞ்செய்வதொப்ப,
ஊனுடையாழி சங்குத்தமர்க்கென்று
உன்னித்தெழுந்தவென்தடமுலைகள்,
மானிடவர்க்கென்றுபேச்சுப்படில்
வாழகில்லேன்கண்டாய் மந்மதனே. (ரு)

---

செய்கிறார் (வாஹநாதிகளித்யாதி வாக்யத்வயத்தாலே.) புராணம் - பழமை. துரங்கம் - குதிரை. பிணா - பெண். அவரை - விதை. பிராயம் - பருவம் (அவரைப்பிராயம்) அவரை - விரை பருவந்துடங்கி - பிராயந்துடங்கி "அவரை - என்றும் - ஆதரித்து" என்று அந்வயித்து அருளிச்செய்கிறார் (பால்யாத்ப்ரப்ருதீத்யாதி.) முன்னேட்டுக்கொடுக்கை - முந்தி ஸம்ஶ்லேஷிக்கை. ஆடல் - அநுபவம். துவரை - த்வாரகை. தொழுது வைத்தேன் - முலையைத் தொழுதேன். முலையைத்தொழலாமோவென்ன வருளிச்செய்கிறார் (அவனுக்கென்றித்யாதி.) ... ... ... ச

ப - ரை. மந்மதனே—, வானிடை-ஸ்வர்க்கலோகத்திலே. வாழும் வர்த்திக்கிற, அ - விலக்ஷண ஜந்மாக்களான, வானவர்க்கு - தேவர்களுக்காக, மறையவர்-இங்குள்ள ப்ராஹ்மணர்கள், வேள்வியில்-தந்தாமுடைய யாகங்களிலே, வகுத்த - உண்டாக்கின, அவி-ஹவிஸ்ஸை, கானிடை காட்டிலே, திரிவது ஓர் - ஸஞ்சரிப்பதொரு, நரி - நரியானது, புகுந்து ப்ரவேசித்து, கடப்பதும் - அத்தைத்தனக்காக்கிக் கொள்ளுவதையும் மோப்பதும் - ஆக்ராணம் பண்ணுவதையும், செய்வதொப்ப - செய்வது போலே; சத்ருக்களுடலைப் பிளக்கைக்காக, ஊனுடை - உன்திருமேனியிலே, ஆழி - திருவாழியையும், சங்கு - ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் திருக்கைகளிலே உடைய, உத்தமர்கு என்று - புருஷோத்தமனுக்காக, உன்னித்து எழுந்த - கிளர்ந்தெழுந்த, என் - என்னுடைய தடம் - பெருத்த முலைகள் - முலைகளானவை, மானிடவர்க்கென்று - மநுஷ்யர்களுக்கு என்கிற, பேச்சு - சப்தம், படில் - நாட்டில் உண்டாமாகில், வாழகில்லேன் கண்டாய் - உயிர் வைத்திரேன் கிடாயென்கிறாள்.

---

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வானித்யாதி) போகபூமியிலே வர்த்திக்கக்கடவராய் விலக்ஷண ஜந்மாக்களாயிருக்கிற தேவர்களுக்கு. “దేవాన్ భావయతా నేన తే దేవా భావయన్తు వః। పరస్పరం భావయన్తః శ్రేయః పరమవాప్స్యథ” “தேவாந்பாவயதாநேந தேதேவா பாவயந்துவ:, பரஸ்பரம் பாவயந்த:ஶ்ரேய: பரமவாப்ஸ்யத” என்கிறபடியே - இங்குள்ள ப்ராஹ்மணர் தேவர்களை உபாஸிக்கக்கடவர்களாகவும், அவர்கள் இவர்களுடைய அபேக்ஷித ஸம்விதானம் பண்ணக்கடவர்களாகவும் ஈஶ்வரன் அடியிலே பார்த்து வைத்தது ஒருபார்வை யுண்டிறே; ஆகையாலே ப்ராஹ்மணர் தந்தாமுடையயாகங்களிலே யுண்டாக்கின ஹவிஸ்ஸை, மநுஷ்யரில்லாத காட்டிலே ஸஞ்சரிப்பதொருக்ஷுத்ர பதார்த்தங்கள், அவர்களுக்கு அது போக்யமாகாதபடி தூஷிக்குமாப்போலே. (ஊனிடையித்யாதி) வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டியிருக்கிற அழகிய திருமேனியிலே திருவாழியையும் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் தரித்திருப்பானுமாய், அவ்வழகு தன்னை பிறர்க்கு எற்றிருக்கையாலே உத்தமனுயிருக்கிறவனுக்கு என்று அநுஸ

---

அஞ்சாம்பாட்டு. (வானித்யாதி) ஸர்வேஶ்வரனை விட்டு தேவதாந்தரங்களை இவர்கள் ஆராதிப்பா னென்னென்ன; அருளிச்செய்கிறார் దేవాన్ భావయత (தேவாந்பாவயதேத்யாதி)

தித்து, அவ்வநுஸந்தாநமே நீராகவளர்ந்த என்முலைகள், நானு மறியாதிருக்க அவனுமறியாதிருக்க மநுஷ்யமாத்ரமாயிருப்பார்க்கு என்று நாட்டிலே இங்ஙனே யொருஸம்பந்தம் பரிமாறுமாகில் எனக்கு ஸத்தையில்லைகிடாயென்கிறாள். பிறர்க்காயிருக்குமிருப்பு ஸத்தயாபாதகமா யிருந்தபடி. "ராவணன் மாயாஸிரஸ்ஸைக்காட்டினபோது, இதர ஸ்த்ரீகளோபாதி தரித்திருந்ததுக்குக் கருத்தென்" என்று ஜீயரைக்கேட்க; இவளுடைய ஸத்தைக்கு ஹேது-பெருமாள் ஸத்தையாய்த்து, அதுக்கு தைவமறிய ஒருகுறையில்லாமையாலே தரித்திருந்தாள் ; இவள் ஸத்தைக்கு ஹேது ப்ரதிபத்ய ப்ரதிபத்திகளல்ல, அத்தலையில் ஸத்தையாய்த்து." என்றருளிச்செய்வர். (மந்மதனே) வயிற்றிலேபிறந்த உன் காலிலே விழவேண்டும்படி யன்றோ என் ஆற்றாமை. ... ரு

உருவுடையாரிளையார்கள்நல்லார்
ஒத்துவல்லார்களைக் கொண்டுவைகல்,
தெருவிடையெதிர்கொண்டு பங்குனிநாள்
திருந்தவே நோற்கின்றேன் காமதேவா,
கருவுடை முகில்வண்ணன் காயாவண்ணன்
கருவிளைபோல்வண்ணன் கமலவண்ணத்,
திருவுடைமுகத்தினிற்றிருக்கண்களால்
திருந்தவே நோக்கெனக்கருள்கண்டாய். (சு)

ப - ரை. காமதேவா—, உருவுடையார்-அழகிய வடிவையுடையராய், இளையார்கள் - யுவாக்களாய், நல்லார் - காமதந்த்ரத்திற் சொன்ன ஆசாரங்களையுடையராய், ஒத்து-காமசாஸ்திரத்தை அதிகரித்து, வல்லார்களை - அநுஷ்டிக்கவல்லரா யிருப்பவர்களை கொண்டு - முன்னிட்டுக்கொண்டு, வைகல் - நாள்தோறும், தெருவிடை - அவன்வரும் வழியிலே, எதிர்கொண்டு - எதிரேசென்று பங்குனி - பங்குனிமாஸத்தில், நாள் - பெரிய திருநாளிலே, திருந்த - தெளிந்திருக்கைக்கீடாக, நோற்கின்றேன் ; கருவுடை - கர்ப்பத்தையுடைய, முகில் - காளமேகம் போன்ற, வண்ணன் -

ஸத்தயாபாதக மென்றது - அஜ்ஞாததசையிலும் பாதகமென்றபடியாய், தத்ப்ரதிகோடித்வேந பகவத்விஷயம் அஜ்ஞாத தசையிலும் ஸத்தயாதாரக மென்று விவக்ஷித்து, இதுக்கு ஸம்வாதமாக ஒரைதிஹ்ய மருளிச்செய்கிறார் (ராவணனித்யாதி) ப்ரதிபத்யப்ரதிபத்தி - உண்டு இல்லை யென்கிற வசநமாத்ர மென்றபடி ... ... ... இ

வடிவையுடையனாய், காயா-காயாம்பூப்போன்ற வண்ணன்-திருநிறத்தை யுடையனாய், கருவிளைபோல் - காக்கணம் பூப்போன்ற, வண்ணன் - பளபளப்பை யுடையனாய், கமலவண்ணம் - செந்தாமரைமலரின் நிறம் போன்ற காந்தியை யுடைத்தான, திருவுடைமுகத்தினில் - திருமுகமண்டலத்தி லுண்டான, திருக்கண்களால் - திருக்கண்களாலே, எனக்கு - என்விஷயத்தில், திருந்த - அவன் விசேஷகடாக்ஷம் பண்ணும்படிக் கீடாக, நோக்குஅருள் - நீ கடைக்கணிக்க வேணும்.

அவ.—ஆறும்பாட்டு "మచ్చిత్తామద్గతప్రాణాః బోధయంతః పరస్పరమ్" "மச்சித்தாமத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்" என்கிற படியே - ஸத்வநிஷ்டர் பகவத்குணாநுபவம் பண்ணி போதயந்த: பரஸ்பரம்பண்ணுகைக்கு ஸாத்விகரைக் கூடக்கொண்டு இழியுமாப்போலே, ரஜோகுணப்ரசுரனானவனை ஆஶ்ரயிக்கைக்கு அதிலே தேஶிகரைக்கொண்டிழிகிறாள்.

வ்யா.—(உருவுடையாரித்யாதி) வடிவுடையராய் யுவாக்களாய் வ்ருத்தவான்களாய் காமஸூத்ரம் கண்ணழிவறக் கைவந்திருப்பா யிருக்கிறவர்களை முன்னாகக் கொண்டு. (வைகல் தெருவிடை யெதிர்கொண்டு) நாள்தோறும் அவன் வருகிறவழியிலே எதிர்கொண்டு (பங்குனிநாள்) பெரியதிருநாளிலே கலங்காதே தெளிந்திருந்து, உன்னை ஆஶ்ரயிக்கும்படியன்றோ எனக்குண்டான த்வரை. செய்யவேண்டுவதென்னென்னில்; (கருவுடைமுகில்வண்ணன்) நீர் கொண்டெழுந்த காளமேகம்போலே யிருக்கிற வடிவையுடையவன், எல்லாம் பட்டும் பெறவேண்டும்படியன்றோ அவன் வடிவு படைத்தபடி. (காயாவண்ணன்) நெஞ்சிலே யிருள்படுகைக்கு (கருவிளைபோல்வண்ணன்) கண்டார் கண்ணுக்கு நெய்த்திருக்கைக்கு. (கமலவண்ணத் திருவுடையித்யாதி) கமலத்தினுடையநிறம்போலே யிருக்கிற காந்தியையுடைத்தான திருமுகத்தி லுண்டான திருக்கண்களாலே, சோலைபார்ப்பாரைப் போலே பார்க்கையன்றிக்கே அவன் விஶேஷகடா

ஆறும்பாட்டு (உருவுடையாரித்யாதி) உரு - அழகும் உடம்பும் ஒத்து - வாத்ஸ்யாயநஶாஸ்த்ரம். வைகல் - காலம். கருவிளை - காக்கணம். வ்ர்த்தவான்கள்-காமதந்த்ரத்திற்சொன்ன ஆசாரங்களை யுடையார். இருள்படுகை-மையுண்டாகை. நெய்த்திருக்கை குளிர்ந்திருக்கை. சோலைப்பார்க்கை-ஸமுதாயேநபார்க்கை அப்படியன்றியே தனித்தனியே உற்றுப்

க்ஷம் பண்ணும்படியாக அருள்கிடாய். நம்மாற்றாமைக்காக நோக்கினானைகயன்றிக்கே, தன்னாற்றாமைதீரும்படி நோக்கினானும்படியாகப் பண்ணுகிடாய். ... ... சு

காயுடைநெல்லொடுகரும்பமைத்துக்
கட்டியரிசியவலமைத்து
வாயுடைமறையவர் மந்திரத்தால்
மந்மதனே யுன்னைவணங்குகின்றேன்,
தேசமுன்னளந்தவன் திரிவிக்கிரமன்
திருக்கைகளாலென்னைத் தீண்டும்வண்ணம்
சாயுடைவயிறு மென்தடமுலையும்
தரணியில் தலைப்புகழ்தரக்கிற்றியே. (எ)

ப-ரை. மந்மதனே—, காயுடை நெல்லொடு - பசுங்காய் நெல்லும், கரும்பு - கரும்பும், அமைத்து-சமைத்து, அத்தோடேகூட, கட்டி - கருப்புக்கட்டியும், அரிசி - பச்சரிசியும், அவல் - அவலும், அமைத்து - படைத்து, வாயுடை - நல்லஸ்வரத்தையுடையராய், மறையவர் - காமசாஸ்த்ரத்தில் வல்லவர்களுடைய, மந்திரத்தால்-மந்த்ரத்தாலே, உன்னை-என்பிள்ளையான வுன்னை. வணங்குகின்றேன் - ஆச்ரயிக்கிறேன்; முன் - ஸ்வர்க்கமத்ய பாதாளமென்கிற மூன்றுலோகங்களும் மஹாபலியால் அபஹரிக்கப்பட்ட காலத்திலே, தேசம்-ஸகலலோகங்களையும், அளந்தவன் - திருவடிகளாலே அளந்து கொண்டவனாய், திரிவிக்கிரமன் - த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளினவன், திருக்கைகளால்-தன் திருக்கையாலே, என்னை —. தீண்டும்வண்ணம் - ஸ்பர்சிக்கும்படி பண்ணி, சாயுடை - ஒளியையுடைத்தான, வயிறும்-வயிறும், மெல்-மார்த்தவத்தை யுடைத்தாய், தடம்-பருத்திருந்துள்ள, முலையும் - ஸ்தநங்களும், தரணியில் - லோகத்திலே, தலைப்புகழ் - நிலைநின்ற புகழை, தரக்கிற்றி - பெறும்படி செய்யவேணுமென்கிறாள்.

வ்யா.—எழாம்பாட்டு. (காயுடையித்யாதி) ரஜோகுணப்ரசுரனாயிருக்கையாலே அவனுக்கு ஆமவைதேடுகிறாளாய்த்து. பால்மாறாத பசுங்காய்நெல்லோடே கூட, கரும்பு, கருப்புக்கட்டி,

---

பார்க்குமாப்போலே அவன்என் அவயவங்கள்தோறும் தனித்தனியே உற்றுப்பார்க்கும்படி நீ யருளவேணுமென்றபடி ... ... சு

எழாம்பாட்டு. (காயுடையித்யாதி) காயுடைநெல்லு-பசுங்காய்நெல்லு.

பச்சரிசி, அவல் என்கிற விவற்றைச் சமைத்து, நல்ல ஸ்வரத்தை யுடையராயிருக்கிற மறையவருண்டு - அதில் தேஶிகராயிருக்கு மவர்கள். அவர்களுடைய மந்த்ரத்தாலே, வயிற்றிலே பிறந்தவ னென்று பாராதே, உன்னை ஆஶ்ரயிக்கிறேன். (தேசமித்யாதி) வரையாதே எல்லாரையும் அடியிலே விஷயீகரித்தவன் திருக்கை யாலே என்னை. (சாயுடைவயிறுமென் தடமுலையும் - தீண்டும்வண் ணம்) ஒளியையுடைத்தான வயிற்றையும், அவன்றனக்கும் உண் டறுக்க வொண்ணுதபடியான முலையையும், திருக்கைகளால், தீண்டும் வண்ணம் - அவன் ஸ்பர்ஶிக்கும்படி பண்ணி. (தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே) லோகத்திலே சாலநிலைநிற்பது ஒரு புகழிறே : அத்தைத் தரவல்லையே நான்பெறும்படி. ... எ

மாசுடையுடம்பொடு தலையுலறி
வாய்ப்புறம்வெளுத்தொருபோதுமுண்டு
தேசுடைத்திறலுடைக்காமதேவா!
நோற்கின்றநோன்பினைக்குறிக்கொள் கண்டாய்,
பேசுவதொன்றுண்டிங்கெம்பெருமான்
பெண்மையைத்தலையுடைத்தாக்கும்வண்ணம்
கேசவநம்பியைக்கால்பிடிப்பா
ளென்னுமிப்பேறெனக்கருள் கண்டாய். (அ)

ப - ரை. தேசுடை - பிரிந்தாரைச் சேர்க்கையால் வந்தபுகரையும், திறலுடை - அவர்கள் விரோதியைப் போக்குகைக்கீடான மிடுக்கையு முடையனாய், எம்பெருமான் - எனக்கு ஸ்வாமியான, காமதேவா - மந்மதனே, மாசுடை - அழுக்குப்படிந்த, உடம்பொடு - உடம்போடேகூட, தலை - தலைமயிரை, உலறி - விரித்துக்கொண்டும், தாம்பூலதாரண மில்லாமை யாலே, வாய்ப்புறம் - உதடுகள், வெளுத்து - வெளுத்தும். ஒருபோது - ஒரேவேளை, உண்டும் - புஜித்துக்கொண்டு, நோற்கின்ற - நோற்கிற, நோன்பினை - இந்தநோன்பை, குறிக்கொள்கண்டாய் - நீ எப்போதும் ஜ்ஞாபகத்தில் வைக்கவேணுங்காண், இங்கு - இப்போது, பேசுவது - சொல்லவேண்டுவது, ஒன்று உண்டு - ஒன்றுளது ; பெண்மை - என்னத்

---

கட்டி - கருப்புக்கட்டி. வாய் - ஸ்வரம். சாய் - ஒளியும், அழகும். மந்த்ரம் - காமஶாஸ்த்ரம். வயிற்றிற் பிறக்கை - க்ர்ஷ்ணனுடைய பிள்ளையாகை யாலே தனக்கும் பிள்ளையென்கிறாள். தலைப்புகழ் - அவன் திருக்கையால் தீண்டுகையே நிலைநின்றபுகழ். ... ... ... ... எ

ளை, தலையுடைத்தாக்கும் வண்ணம் - தலைமை பெறும்படிக்கீடாக, கேசவன் - கேசியென்னும் அஸுரனை நிரஸித்தவனாய், நம்பியை - கல்யாண குணங்களால் பூர்ணனாயிருக்கிறவனுக்கு, கால்பிடிப்பாள் - கால்பிடிக்குமவள், என்னும் - என்கிற, இப்பேறு-இந்தபுருஷார்த்தத்தை, எனக்கு—, அருள்கண்டாய் - க்ருபை பண்ணவேணு மென்கிறாள்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (மாசித்யாதி) ஸ்நாநத்தையொழியச் செல்லாதபடியான வுடம்பு மாசேறும்படிபண்ணி. (க) "சுரும்பார்குழல்கோதை" என்னும்படியான மயிர்முடியையுடையவள், அத்தைப்பேணாதே போக்யத்ரவ்யங்களைக்கொடுத்து இன்னம் ஒருக்கால் காணலாமோ என்னும் நசையாலே ஸத்தைகிடக்க வேண்டுமளவாய்த்து, உஜ்ஜீவிப்பது. இவ்வழியாலேயொருக்கால் மீளாதே,நோற்கின்றநோன்பைக்குறிக்கொள்கிடாய். (உ) "ஙூரம்ப்ர வ்ருத்தஙா" "ரிணம்ப்ரவ்ர்த்தமிவமே" என்று-நெஞ்சிலே இதெப்போதும் பட்டுக்கிடக்கவேண்டும் கிடாய். (தேசுடைத்திறலுடை) "பிரிந்தாரைச் சேர்க்கவல்லை" என்கிற ப்ரஸித்தியால் வந்த புகரையும், அவர்கள்விரோதியைப் போக்குகைக்கீடான மிடுக்கையுமுடையவனன்றோ நீ. (பேசுவதொன்றுண்டு இங்கெம்பெருமான்) நான்சொல்லுவதொன்றுண்டு, எனக்கு. ஸ்வாமியானவனே! (பெண்மையித்யாதி) என்ஸத்தை தலைமைபெறுவதொருப்ரகாரம். (கேசவன் நம்பியித்யாதி) விரோதிநிரஸநசீலனாய், கல்யாண குணங்களால் பூர்ணனாயிருக்கிறவனை. (கால்பிடிப்பாளென்னும் இப்பேறெனக்குஅருள்கண்டாய்) நான்ஸ்வரூபாநுரூபமான பேற்றைப்பெறும்படி பண்ணுகிடாய். முலையாலே யணைக்கவென்றே தானாசைப்பட்டது; முதலடியேபிடித்து அடிமைசெய்யத் தேடுகிறாள். ... ... ... ... அ

---

எட்டாம்பாட்டு. (மாசித்யாதி) மாசு-அழுக்கு. ஏறும்படி-ஸ்நாநத்தையொழித்தேறும்படி. உலறல்-காய்தல். உலறி-உதறி; விரித்தென்றபடி கொடுத்து-புறத்திலே கொடுத்தென்றாய், தாம்பூலத்தைவிட்டு ஸத்தை-ஸ்த்ரீத்வம். "நோற்கின்ற" என்கிற வர்த்தமாநதாத்பர்யம் (இவ்வழியாலே ஒருக்கால் மீளாதேயென்று) தேசு - ஒளி. திறல் - மிடுக்கு. அ

(க) கூ-கO. (உ) பாரதம். உத்யோ-சஎ-நகூ.

தொழுதுமுப்போதுமுன்னடிவணங்கித்
    தூமலர்தூய்த்தொழுதேத்துகின்றேன்,
பழுதின்றிப்பார்க்கடல்வண்ணனுக்கே
    பணிசெய்துவாழப்பெறுவிடில்நான்,
அழுதழுதலமர்ந்தம்மாவழங்க
    ஆற்றவுமதுவுனக்குறைக்குங்கண்டாய்,
உழுவதோரெருத்தினைநுகங்கொடுபாய்ந்து
    ஊட்டமின்றித்துறந்தாலொக்குமே. (கூ)

ப - ரை. முப்போதும்-மூன்றுகாலங்களிலும், தொழுது - ப்ரணம பூர்வகமாக, வணங்கி - உன்னை ஆஶ்ரயித்து, உன் - உன்னுடைய, அடி - அடிகளிலே. தூ - பரிசுத்தமான, மலர் - புஷ்பங்களை, தூய் - பணிமாறி, தொழுது - ஸேவித்து, ஏத்துகின்றேன் - ஸ்தோத்ரம் பண்ணுகிறேன்; பார் - பூமியால்சூழப்பட்ட. கடல் - கடல்போன்ற. வண்ணனுக்கு - திரு நிறத்தையுடையவனுக்கு. பழுதின்றி - பழுதில்லாமல். பணிசெய்து - கைங்கர்யம்பண்ணி. நான்—, வாழப்பெறுவிடில் - வாழப்பெறுவிட்டால், அழுதழுது - பலகால் அழுது, அலமர்ந்து - தடுமாறி, அம்மா - அம்மா என்று கூப்பிட்டுக்கொண்டு. வழங்க - ஸஞ்சரிக்க, உனக்கு—, அது—, ஆற்றவும் - மிகவும், உறைக்கும் கண்டாய் - உறைக்குங்கிடாய்; உழுவதோ ரெருத்தினை - ஏருழுகிற எருத்தை, நுகங்கொடுபாய்ந்து - நுகத்தடியாலே தள்ளி, ஊட்டமின்றி - தீனியில்லாமல், துறந்தால் ஒக்கும் - நீக்கிவிடு வதையொக்குமென்கிறாள்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தொழுதித்யாதி) ஸத்வநிஷ்டரா யிருப்பார். ஸமாராதநகாலங்களிலே அவகாஹநம் பண்ணி ஸமா ராதநம் தலைக்கட்டினவநந்தரம். திருவடிகளிலே விழுந்து "நான் தொடங்கின ஸமாராதநம்தலைக்கட்டினேன், திருவுள்ளத்துக்குப் பாங்கானபடியே போதுபோக்கி யருளவேணும்" என்று ஸ்தோத் ரரூபமானவற்றை விண்ணப்பஞ்செய்யுமாப்போலே, அவற்றை யெல்லாம் இவன்பக்கலிலேசெய்கிறாள். (பழுதின்றி)(க)"வழுவிலா வடிமைசெய்யவேண்டும் நாம்" என்கிறவதில் ஒருபழுதின்றிக்கே.

ஒன்பதாம்பாட்டு. (தொழுதித்யாதி)தொழுது ஸ்தோத்ரம்பண்ணுகிற தெப்படியிருக்கிறதென்ன; அருளிச்செய்கிறார் (ஸாத்வநிஷ்டரித்யாதி) அவகாஹநம்-நன்றாகப்பண்ணுகை. "தூமலர் தூய்த்தொழுது" என்கிற விடத்தில், "தொழுது" என்றது-ஆராதித்தென்றபடி. அம்மா-இழவாலே

(க) தி-வாய் ௩-௩-க

(பாரித்யாதி) பார்சூழ்ந்த கடல்போலே யிருக்கிற வடிவையுடையவனுக்கே அடிமைசெய்து வாழப்பெறு தொழியில் நான். அழுதழுது தடுமாறி இழவோடே ஸஞ்சரித்து காலக்ஷேபம் பண்ணுமது உனக்கு உறைக்குங்கிடாய். ஆற்றவும்-மிகவும். (௧) [ஆதாயஸு க்ருதம்தஸ்ய ஸர்வம்கச்சேத ரக்ஷிதஃ -ஆதாயஸுக்ருதம்தஸ்ய ஸர்வம்கச்சேத ரக்ஷிதஃ] ஸரணாகதனை நோக்காவிட்டால் இவனுடைய பாபபலத்தை அவனநுபவித்து அவனுடைய ஸுக்ருதபலம் இவன்பக்கலிலே வருவதாகச் சொல்லாநின்றதிறே: அப்படியே உன்னைக்குறித்து நான் பண்ணின ஆஸ்ரயணத்துக்கு ஒருபலமின்றிக்கே யொழியுமாகில் அதுஉனக்குப்பொல்லாதாங்கிடாய். அவன்றான் தன்னை ஆஸ்ரயித்தார்க்கு அங்கக்காரனாய் நின்றிறே அவர்களைச் சேர்ப்பது; நம்மையும் உம்மையுஞ் சேர்த்தான், இவன் நல்ல அங்கக்காரனா யிருந்தானென்று அவன்கொண்டாட, அவனுடைய த்ருஷ்டிதோஷத்தாலே யிறே இவன் அநங்கனாய்த்து. (உழுவதோரெருத்தினை யித்யாதி) எருத்தைக்கொண்டு தன்ஜீவநார்த்தமாகக் கார்யங்கொண்டு அநந்தரத்திலே அத்தையொன்றிலே தள்ளி, அதுக்கு ஜீவநமிடாதே தூரத்துமாப்போலே யிருப்ப தொன்றுகிடாய் நான் வருந்தினத்துக்கு ஒருபலமின்றிக்கே யொழியுமாகில். ... ... ... ... ... ௯

கருப்புவில்மலர்க்கணைக்காமவேளைக்
 கழலிணைபணிந்தங்கோர்கரியலற,
மருப்பினையொசித்துப் புள்வாய்பிளந்த
 மணிவண்ணற்கென்னைவகுத்திடென்று,
பொருப்பன்னமாடம்பொலிந்து தோன்றும்
 புதுவையர்கோன் விட்டுசித்தன்கோதை
விருப்புடையின்றமிழ்மாலைவல்லார்
 விண்ணவர்கோனடி நண்ணுவரே. (௧0)

ஆண்டாள்திருவடிகளே சரணம்.

---

அம்மா என்றழைத்து. வழங்க - ஸஞ்சரிக்க. ஆற்ற - மிக. அங்கக்காரன் - எதிர்த்து வெட்டியும் ரக்ஷிக்கும்ஸேவகன். ஆனால் அவனுக்கு அங்கமில்லையே யென்ன; அருளிச்செய்கிறார் (அவனுடைய த்ர்ஷ்டிதயாதி) அவன் கொண்டாட - ருத்ரன் கொண்டாட, ஊட்டம் - தீனி. ... ௯

---

(௧) ரா-யு. ௧அ·௬௧

ப - ரை. கருப்புவில் - கரும்பாகிய வில்லேயும், மலர்க்கணை - புஷ்ப பாணங்களையு முடையனாய், காமம் - யாவரையும் விஷயபோகத்திலே மூட்டுகிற, வேளை - மந்மதனுடைய, இணை - ஒன்றுக்கொன்றொப்பான, கழல் - கழல்களணிந்த அடிகளை, பணிந்து - வணங்கி, அங்கு - கம்ஸன் ஆஜாரவாசலிலே நிறுத்தப்பட்ட, ஓர் - ஒப்பற்ற, கரி - குவலயாபீடம் என்கிற யானையானது, அலற - வீரிடும்படியாக, மருப்பினை - அதன் கொம்பை, ஒசித்து - முறித்து, புள் - பகாஸுரனுடைய, வாய் - வாயை பிளந்த - கிழித்துப்பொகட்டவனாய், மணி - நீலரத்நம்போன்ற, வண் ணற்கு - வடிவழகையுடையவனோடே, என்னை—, வகுத்திடு என்று - சேர்த்துவிடவேணுமென்று; பொருப்பு அன்ன - மலைகளைச்சேரவைத் தாப்போலிருக்கிற, மாடம் - மாளிகைகள், பொலிந்து - ஸம்ருத்தமாய்க் கொண்டு, தோனறும் - தோன்றாநின்றுள்ள, புதுவையர் - ஸ்ரீவில்லிபுத் தூரிலுள்ளார்க்கு, கோன் - நிர்வாஹகரான, விட்டுசித்தன் - பெரியாழ் வார் திருமகளான, கோதை - ஆண்டாளுடைய, விருப்புடை - விருப்ப மடியாகப்பிறந்த, இன் - இனிய, தமிழ்மாலை - தமிழ்த்தொடைகளை, வல் லார் - பாடவல்லவர்கள், விண்ணவர்கோன்-* அயர்வறுமமரர்க ளதிப யுடைய, அடி - திருவடிகளை, நண்ணுவர் - கிட்டப்பெறுவரென்கிறாள்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (கருப்புவில்லித்யாதி) (க) "சார்ங் மென்னும்வில்லாண்டான்" என்றும், (உ)"சரங்களாண்ட தண்டாம ரைக்கண்ணனுக்கன்றி யென்மநம் தாழ்ந்து நில்லாது" என்றும் இதெல்லாம் இவனுடைய வில்லேயும் அம்பையுஞ்சொல்லி இவன் காலிலே விழும்படியாய்வந்து விழுந்தது. (அங்கோர்கரிஅலற குவலயாபீடமானது பிளிறி விழும்படியாக அதின்கொம்பை அநாயாஸேந முறித்து, பகாஸுரனை வாயைக்கிழித்து, வைத் கண்மாறாதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படியான வடிவழகை யுடையவனோடே என்னைச் சேர்த்துவிடு என்று. மலைகளைக் கொடுவந்து சேரவைத்தாப்போலேயிருக்கிற மாடங்கள் ஸம் ருத்தமாய்க்கொண்டு தோன்றாநின்றுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரிலுள் ளார்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் திருமகளாருடைய வி

---

பத்தாம்பாட்டு. கருப்பு இத்யாதி 'காமவேள்" காமம்-விஷயபோக மாய், அதுக்கு ப்ரவர்த்தகனான மந்மதன். வேள் - மந்மதன். பிளிறி-கூப் பிட்டு. மருப்பு-கொம்பு. ஒசித்தல் ஒடித்தல். பொருப்பு-மலை அன்ன

---

(க) திருப்பல்லா-௧௨. (உ) தி-மொ: ௭ ௩-௪.

ப்பமடியாகப்பிறந்த இனிய தமிழ்த்தொடை வல்லார்கள். (விண்ணவரித்யாதி) ஸாத்விகாக்ரேஸரரான பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்துவைத்து. பகவல்லாபத்துக்காக மடலெடுப்பபாரோபாதி, காமன்காலிலே விழவேண்டும்படியான இவரைப்போலன்றிக்கே, இப்ப்ரபந்தம் கற்றவர்கள் ஸம்ஸாரத்தைவிட்டு நித்யாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகளோடே யொருகோவையா யநுபவிக்கப்பெறுவர்கள். கo

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

முதல்திருமொழி, முற்றிற்று.

---

ஆண்டாள்திருவடிகளே சரணம்.

# இரண்டாம் திருமொழி நாமமாயிரம்ப்ரவேஶம்.

அவ.—இப்படி இவர்கள்பண்ணின ஆஶ்ரயணத்தை அநுஸந்தித்துத் தங்களைப்பெறுகைக்கு நாம்வருந்தவேண்டும்படியிருக்குமவர்கள், நம்மைப் பெறுகைக்குத்தாங்கள் வருந்துகையாவதென்? அதுதன்னிலும் நம்காலிலே விழுகைபன்றிக்கே நம்மைப் பெறுகைக்கு ஒருதேவதாந்தரத்தின் காலிலே துவளும்படி நாம் பிற்பாடரானோமே! அழகிதாகக் காரியம் பார்த்தோமே! என்று தன் பிற்பாட்டை யநுஸந்தித்துத் திருவுள்ளம் நொந்து, திருவாய்ப்பாடியில் பொதுவானார், வர்ஷார்த்தமாக இந்த்ரனுக்குக் கொடுபோருகிற சோற்றைக்கண்டு, நாம்பிறந்து வளருகிறவூரிலே சிலர் ஒன்றை தேவதாந்தரத்துக்கு ஆக்குகையாவதென்? என்று அதுவும் பொறுக்கமாட்டாதே "மலையின்முன்னே கொடுபோய்க் குவியுங்கோள்" என்று சொல்லி, தான் மலையாயிருந்து ஜீவிக்குமவன், தனக்கு அஸாதாரணைகளான இவர்கள், தன்னைப்பெறுகைக்குக் காமஸமாஶ்ரயணம் பண்ணும்போது பொறுக்க

---

ஒத்த பொலிவு - அழகு. விருப்பு - ஆசை. நண்ணல் - கிட்டல். கo

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

அரு; நாமமாயிரம்ப்ரவேஶ (திருவள்ளம் நொந்து) ஆனைக்கு உதவினைப்போலே வந்து உதவினனென்று பூரிப்பது தேவதாந்தர ஸமாஶ்ரயணம் அஸஹ்யமாயிருக்குமோ வென்ன (திருவாய்ப்பாடியிலித்யாதி.) பொதுவானாரென்றது - இடையரை. ஸ்வாபதேஶத்தைப்பற்ற வருளிச்

மாட்டானிறே. ஒருஸாதநாநுஷ்டாநத்தாலே யாதல், அன்றிக்கே இதரஸமாஶ்ரயண முகத்தாலே யாதல், தன்னைப் பெறவருந்து மதுவும் பொறுக்கமாட்டாதவன், நேர்கொடுநேரே காமன்காலிலே விழுந்தால் பொறுக்கமாட்டானிறே. அத்தாலே திருவுள்ளம் தளும்பி ஆனைக்கு உதவினாப்போலே கடுக வந்து முகங்காட்ட; அவர்களும் இருந்து அப்யாஸத்தை பாவித்துச் சிற்றிலிழைக்க; அது தானுகிறது - காமஸமாஶ்ரயணத்திலே யொருவகையிறே; அத்தைபழிப்பதாக உத்யோகிக்க; இவர்களும் பலவகையாலும் வேண்டாவென்ன; நடுவே இவனும்வேணுமென்ன; இப்படிகளாலே நடுவேயொரு மஹாபாரதம் ப்ரவ்ருத்தமாய், அனந்தரம் ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், விஶ்லேஷாந்தமானபடியைச் சொல்லிற்று கிறது- *

நாமமாயிரமேத்தநின்றநாராயணாநரனேயுன்னை
மாமிதன்மகனாகப்பெற்றாலெமக்குவாதைதவிருமே,
காமன்போதருகாலமென்றுபங்குனிநாள்கடைபாரித்தோம்
தீமைசெய்யுஞ்சிரீதராவெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (க)

ப - ரை நித்யஸூரிகள், நாமமாயிரம் - ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி, ஏத்த - ஸ்தோத்ரம் பண்ணும்படிக்கீடாக, நின்ற - நித்யவிபூதியிலே *எழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும், நாராணா - ஸர்வஸ்மாத்பரனாய், அங்குநின்றும் போந்து, நரனே - சக்ரவர்த்தித்திருமகனாய்த் திருவவதரித்தவனே, மாமி - எங்கள் மாமியாரான யசோதைப்பிராட்டி, உன்னை - முன்பே தீம்பனான வுன்னை, தன் - தன்னுடைய, மகனாகப்பெற்றால் - பிள்ளையாகவும் பெற்றால், எமக்கு-எங்களுக்கு, வாதை- நலிவுபடுகையினின்றும், தவிருமே - தப்பப்போமோ; காமன் - மந்மதனானவன் போதருகாலமென்று - வருங்காலமென்று, பங்குனிநாள் - பங்குனிமாஸத்தில், கடை - அவன்வரும்வழியை, பாரித்தோம் - கோடிக்

செய்கிறார் (ஒருஸாதநாநுஷ்டா நேத்யாதி) ஸாதநாநுஷ்டாநம் தேஶவாஸாதிகள் ஸ்வகதஸ்வீகாரம் - மடலெடுக்கை முதலானவை இதரஸமாஶ்ரயணம் - தேவதாந்தர்யாமித்வேந அக்நீந்த்ராதி தேவதைகளைக் குறித்துப்பண்ணும் கர்மாநுஷ்டாநம் காமஸமாஶ்ரயணத்திலே ஒருவகையிறே என்றது - அதுபோலே அவனுக்கு அநிஷ்டமென்றபடி. ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமா யென்றது-"மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்றத்தைப் பற்ற. மேலே *கோழியழைப்பதன்முன்னமாகையாலே விஶ்லேஷாந்தமானபடியைச் சொல்லிற்றுகிறதென்றபடி. ... ... *

தோம்; தீமைசெய்யும் - தீம்புகளைச் செய்யுமவனாய், சிரீதரா - பெரிய பிராட்டியாரைத் திருமார்விலே யுடையவனே, வந்து - நாங்கள் விளையாடுமிடங்களில்வந்து, எங்கள் - எங்களுடைய, சிற்றில் - கொட்டகங்களை, சிதையேல் - சிதையாதேகொள்.

வ்யா.—முதற்பாட்டு. (நாமமாயிரமித்யாதி) ஸ்தநந்தயப்ரஜை நோவுகொண்டால் அதுக்காகத் தான் குடிநீர்குடிக்கும் தாயைப்போலே, நரநாராயணரூபத்தாலே வந்து இச்சேதநர்க்காகத் தான் தபஸ்ஸுபண்ணின இத்தை அநுஸந்தித்ததேவஜாதி, "தேவரீர் என்னகாரியஞ்செய்து தலைக்கட்டுகைக்காக இப்படி தபஸ்ஸு பண்ணியருளுகிறது" என்று ஸ்தோத்ரம் பண்ணும்படியாகநின்ற நிலையைச் சொல்லிற்றாகவுமாம். அன்றிக்கே, "நாமமாயிரமேத்த நின்ற நாராயணா" என்று பிரித்து, (க) "తద్విప్రాసో విపన్యవః" "தத்விப்ராஸோவிபந்யவ:" என்கிறபடியே அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகள்ஸ்தோத்ரம்பண்ண உபயவிபூதியுக்தனாய்க்கொண்டு நித்யவிபூதியிலேயிருக்குமிருப்பைச்சொல்லிற்றாகவுமாம். (நரனே) (உ) "జ్ఞాతుమేవంవిధంనరమ్" "ஜ்ஞாதுமேவம்விதம்நரம்" என்கிறபடியே-அங்கு நின்றும் போந்து சக்ரவர்த்தித் திருமகனாய் நிற்கும் நிலையைச்சொல்லுகிறது. (உன்னையித்யாதி) அளவுடையரான நித்யஸூரிகள் தன்னையுள்ளபடியெல்லாமறிந்து ஸ்தோத்ரம்பண்ண. தன்ஐஶ்வர்யமெல்லாம் தோற்றும்படி பரமபதத்திலேயிருக்குமிருப்பைச் சொல்லிற்று; அங்கு நின்றும் போந்து, "அறிவுடையார், அறிவில்லாதார்" என்று வாசியின்றிக்கே இருந்ததே குடியாக எல்லாருமொக்கத் தன்னுடைய ஶீலாதிகுணங்களுக்குத்தோற்று நெஞ்சுளுக்கி (ங) "రామోరామోరామఇతి" "ராமோராமோராமஇதி" என்றும், (ச) "బాలాఅపిక్రీడమానాః" "பாலாஅபிக்ரீடமாநா:" என்றுஞ்சொல்லுகிறபடியே எத்தும்படியாக வந்தவ

முதற்பாட்டு. நாமமாயிரமித்யாதி "நாமமாயிரமேத்த. நரநாராயணனாய் நின்றவனே" என்னுதல்; எத்தநாராயணனாய் நின்றவனேயென்னுதல் (க) "ఏతదిచ్ఛామ్యహంశ్రోతుం పరంకౌతూహలంహిమే । మహర్షేత్వం సమర్థోసి జ్ఞాతుమేవంవిధంనరమ్" "எததிச்சாம்யஹம்ஶ்ரோதும்பரம்கௌதூஹலம்ஹிமே। மஹர்ஷேத்வம்ஸமர்த்தோஸி ஜ்ஞாதுமேவம் விதம்நரம்." இரண்டாமர்த்தவிவரணம் (அளவுடையரானவித்யாதி.) "நரனே" என்று

(க) சாமவே. உத்தர கஅ-உச. (உ) ரா-பா. க-ரு. (ங) ரா-யு. கஙக-ஙஎ.
(ச) ரா-அ-ரு-கரு

தரித்து நிற்கும்படியைச் சொல்லிற்று; அவைபோலன்றிக்கே, அவற்றின்கார்யமான தீம்பாலே பெண்களை ஒடியெறிந்து, தான் செய்தது விலக்காதபடியாகப் பண்ணிச்செய்ததடையப் பொறுக்கும்படியான ப்ராப்தியையும் முன்னிட்டுக்கொண்டுவந்து வர்த்திக்கிறபடியைச் சொல்லுகிறது. முன்பே தீம்பனுயிருக்கிற நீ, அதுக்குமேலே யொரு மைத்துனமை முறையை ஏறிட்டுக்கொண்டு நலியப்புக்கால் எங்களால் நலிவுபடாதிருக்கப்போமோ; நாங்கள் இங்ஙனே நலிவுபட்டுப்போமித்தனையன்றோ முடிய. (எமக்கு) (க) "ப்௦ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" "பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்கிறபடியே-வன்னெஞ்சரையுங்கூட அழிக்குமது பிறப்பே அபலைகளாயிருக்கிறவர்களால் பொறுக்கப்போமோ என்று அவன் தீம்புகளுக்குப் பொறுக்கவொண்ணுமை தோற்றச்சொன்னார்கள் இவர்கள்; நானே? நீங்களன்றோ முற்றிம்புசெய்திகோள். நான் நினைவற்றிருக்க என்வரவைக் கடாக்ஷித்துச்சிற்றிலிழைத்து வைத்திகோள் என்றான்; அதுவோ! அதுவாகில் உன்னுடைய வரவை யுத்தேசித்துச் செய்தோமல்லோங்காண், காமன்வரும் காலமென்று அவன்வரும் மாஸத்திலே எங்கள் வாசல்களை அலங்கரித்தோம், நாங்கள் உன்வரவைக் கடாக்ஷித்துச்செய்யுமவர்களல்லோம். உன்னைச்சேர்ப்பார் வரவைக்கடாக்ஷித்துச் செய்யுமவர்கள் காண் நாங்கள்; ஆனபின்பு அது அந்யார்த்தமென்றார்கள்; "ஆகில் என்னதும் அந்யார்த்தம்" என்றுச்சிற்றிலை அழிக்கப்புக்கான்; எங்களை ஆராக நினைத்திருந்தாய் பிராட்டி பரிகரமானவெங்கள்பக்கல் அவை செய்யப்போமோ என்றார்கள்; அவள் புருஷகாரமானால் தங்களை நலியவொண்ணு தென்னுமத்தைப்பற்றச் சொன்னார்கள்; அத்தனையோ! அவளோடே நமக்கொரு ஸம்பந்தம் நீங்களே சொன்னிகோளே, நான் ஸ்ரீயப்பதியல்லேனோ நான்செய்ததுக்கு நிவாரகருண்டோ என்று அதுதன்னையே வழியாகக்கொண்டு அழிக்கப்புக்கான்; (நீமையித்யாதி) பிராட்டி

வைத்து, "உன்னை மாமிதன்மகனாக" என்று க்ருஷ்ணாவதாரத்தைச் சொன்னது - சர்ம்யைக்யத்தைப்பற்ற (அவற்றின் கார்யமான) வென்றது - ஶீலாதிகுண கார்யமானவென்றபடி வாதை - தீம்பாலேயாதல்; அழகாலேயாதல் ஹார்த்தபாவம் (உன்னைச்சேர்ப்பாரித்யாதி.) "சிரீ

(க) ரா-அ கூ-உகூ.

யோட்டை ஸம்பந்தம் எங்கள் பேற்றுக்குடலென்று நினைத்திருந் தோம் நாங்கள், அது அங்ஙனன்றிக்கே எங்களிழவுக்கு உடலாம் படி ஶிக்ஷித்துவிட்டாளாகில் எங்கள் சிற்றிலை அழியாதே அவள் தன்னுடைய சிற்றிலைப்போயழி என்கிறார்கள். ... க.

இன்றுமுற்றும்முதுகுநோவ விருந்திழைத்தவிச்சிற்றிலை,
நன்றுங்கண்ணுறநோக்கி நாங்களுமார்வந்தன்னைத்தணிகிடாய்,
அன்றுபாலகனாகி யாலிலைமேற்றுயின்றவெம்மாதியாய் !
என்றுமுன்றனக்கெங்கண்மே லிரக்கமெழாததெம்பாவமே. (உ)

ப-ரை. இன்றுமுற்றும்-இன்றைப்பொழுதெல்லாம், முதுகுநோவ-முதுகுநோம்படி, இருந்து - ஸ்தாவரப்ரதிஷ்டை போலே யிருந்து, இழைத்த - வருத்த முற்றுச்செய்த, இ-இந்த, சிற்றிலை—.நாங்களும்—, நன்று - நன்றாக, கண் - கண்கள், உறநோக்கி - இலக்கில் தைக்கும்படி பார்த்து. ஆர்வந்தன்னை - எங்களாசையை, தணிகிடாய் - தணியும்படி பண்ணுகிடாய்; அன்று - மஹாப்ரளயம் வந்தகாலத்திலே, பாலகனாகி - பாலனாய்க்கொண்டு, ஆலிலைமேல் - ஓராலந்தளிரிலே, துயின்ற - கண் வளர்ந்தருளின, எம் - எங்களுக்கு, ஆதியாய் - காரண பூதனானவனே. உன்றனக்கு - உனக்கு எங்கள்மேல் - எங்கள் விஷயத்தில், என்றும் - எக் காலத்திலும், இரக்கமெழாதது - இரக்கமுண்டாகாததற்குக் காரணம், எம் - எங்களுடைய, பாவம் - பாபமேயாம்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (இன்றுமுற்றும்) ஒருபகலாயி ருக்கச்செய்தேயும் அதுதான் * ஆயிரமூழியாய் நெடுகித்தோற்றி னபடி. (முதுகுநோவ)உன்னைப்போலே (க) "[illegible]" "[illegible] ஸ்யாம்" என்று ஒருவருக்கமற ஸ்ருஷ்டிக்கு இதுதனக்கு நாம் நேர்ந்ததோ பெருக்குக்கிடக்கிறதென்று தரித்திருக்கலாவதொன் றல்லகாண். மெய்யே நொந்து ஸ்ருஷ்டித்ததுகாண். (முதுகு நோவ) சிற்றிலழிக்கை தவிர்ந்து முதுகைப்பிடிக்குமென்று

தரா" என்றதுக்கு, "தீமைசெய்யும்" என்றபதத்துக்குச் சேர தாத் பர்யமருளிச்செய்து. "எங்கள் சிற்றில் வந்து சிதையேல்" என்றதுக்கு ஶேஷமாக தாத்பர்யாந்தரம் (பிராட்டியோட்டையித்யாதி). ... க

இரண்டாம்பாட்டு (இன்றித்யாதி) "முற்றும்" முழுதும், முதுகு நோவ ஶரீரத்தை நொந்தென்னுதல்; ஶரீரம் நோவவென்னுதல் ஹார் த்தபாவமருளிச் செய்கிறார் (சிற்றிலழிக்கை தவிர்ந்தித்யாதி.)

(க) தை-ஆ-க.

பார்த்து, "முதுகுநோவ" என்கிறார்களாய்த்து. கடக்கநின்று காலாலே சிற்றிலையழியாதே, கிட்டி நின்று கையாலே தீண்டுமாகில் ஆகாதோ என்றிருக்கிறார்கள். முதல்தன்னிலே அபலைகள், அதுக்குமேலே விரஹதுர்ப்பலைகள், க்ருஷ்ணன் திருக்கண்களாலே * நெஞ்சூடுருவவுண்டு நிலையும் தளர்ந்திருப்பர்கள், இனி வெண்ணெய் விழுங்கி வளர்ந்தவர்களாகையாலே பொறுக்கமாட்டார்களிறே. (இருந்து) காற்றைப்பிடித்து ஓரிடத்திலே யிருத்தினாப்போலே யிருப்பதொன்றிறே இவர்களை யோரிடத்திலே யிருத்துகையாவது. (இழைத்த) நெஞ்சொழியப்பண்ணுகிற வ்யாபாரம் சாலவரிதிறே. (இச்சிற்றிலை) இதுதானிருந்தபடி கண்டாயே, நீயழிப்பது இத்தைப்பார்த்தன்றோ, இதிருந்தபடியால் சேதநராயிருப்பார் இத்தை யழியார்களிறே; முதலிலே நீதானே அழியாயே. நானித்தையழித்தால் உங்களுக்கு வருவதென்னென்ன; நாங்கள் இதில்பட்டவருத்தங்கண்டாயே, நாங்கள் இத்தையொருக்கால் கண்ணாலேபார்த்துக்கொள்ளக்கிடையாதென்கிறார்கள். அதுவென்? நீங்களிழைக்கிறபோதேபார்த்தன்றோ இழைத்ததென்ன; அவயவங்கள்தோறும் பார்த்தோமித்தனையல்லது அவயவியாகப் பார்க்கப்பெற்றிலோமே, நாங்களழகிதாகக் கண்கள் தைக்கப் பார்க்கிடுக; நான்கண்டு த்ருப்தனானேனே யென்ன; (நாங்களுமார்வந்தன்னைத்தணிகிடாய்) நாங்களும் ஒருக்கால்கண்டு எங்கள் அபிநிவேசங்கெடுகிடாய். எனக்கு இத்தனை கருத்துண்டோ, பரமப்ரயோஜநம் வேணுமென்றிருக்கைக்கீடான அறிவெனக்குண்டோ, நான் பாலனல்லேனோ என்றான்; (அன்றித்யாதி) உனக்குப்பருவம் நிரம்புவதுக்குமுன்னே பிடித்துப்பணியாய்த்திறே எங்களை முடிக்கை. (அன்று பாலகனாகி யாலிலைமேல் துயின்ற) ஆலந்தளிருக்குள்ளே யடங்குவதொரு வடிவைக்கொண்டு,

---

விவரணம் (கடக்க நின்றித்யாதி) சிற்றிலிழைக்குங்காட்டில் முதுகுநோவ பலஹேது அருளிச்செய்கிறார் (முதல் தன்னிலித்யாதி) அன்றிக்கே "இருந்து" என்றதுக்குத் தாத்பர்யமாதல் நெஞ்சுஒழிய நெஞ்சு அவனிடத்திலேயிருக்க. நீதானே - பரமசேதநனான நீதானே. ஆர்வம்- ஆசை. பாலனல்லேனோவென்ன; உன்பால்யமே யன்றோ பாதகமாய்த்தென்கிறார்கள் (உனக்குப்பருவமித்யாதி) "நான்பாலனல்லேனோ, ஆகையாலே அழிக்கை தவிரேன்" என்றானென்ற வாக்யத்துக்குத் தாத்பர்யம்.

அதிலே ஸகல லோகங்களையும் வைத்து பவனான ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளி, யசோதைப்பிராட்டி தொட்டிலில் பண்ணும் வ்யாபாரமடைய அதிலே பண்ணி, அங்ஙனுணர்ந்து நோக்குகைக்கு ஒருதாயுமின்றிக்கே, துள்ளிவிழில் ஒருவெள்ளம் ஆபத்தாயிருக்கிறதோரிடத்திலே ஸப்ரமாதமான செயலைச்செய்து அன்று எங்களைமுடித்தாய். (ஆகியாய்) எங்கள்ஸத்தாஹேதுவை யன்றோ நீயழிக்கப்புக்கது.

(என்று மித்யாதி) அன்று அங்ஙனே முடிக்கப்பார்த்தாய், இன்று இங்ஙனே எங்கள் சிற்றிலையழியாநின்றாய். அக நாங்கள் விஷயமானால் என்றுமொக்குமிறே உனக்குஎங்கள்பக்கல் க்ருபை பிறவாமைக்கு ; ஜகத்ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிற வுனக்கு க்ருபையில்லை யென்னவொண்ணாதிறே ; அதுக்கடி-எங்கள் பாபமிறே. (க) "ஸமைவது꞉ஷ்க்ருதம்" "மமைவதுஷ்க்ருதம்கிஞ்சித்.

குண்டுநீருறைகோளரீ! மதயானைகோள்விடுத்தாய் உன்னைக்
கண்டுமாலுறுவோங்களைக் கடைக்கண்களாலிட்டுவாதியேல்
வண்டல்நுண்மணற்றெள்ளியாம்வளைக்கைகளால்சிரமப்பட்டோம்
தெண்டிரைக்கடற்பள்ளியாய்! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே.(ரு)

ப - ரை குண்டு - மிகுந்த ஆழத்தையுடைத்தான, நீர் - திருப்பாற்கடலிலே, உறை - கண்வளர்ந்தருளுமவனாய், ஆச்ரிதற்கு ஒருநலிவுவாராதபடி ரக்ஷிக்கைக்கு, கோள் - மிடுக்கையுடைய, அரி - ஆண்சிங்கம்போல் மேனாணித்திருக்குமவனாய், மதம் - மதமுதிதமான. யானை - கஜேந்த்ராழ்வானுக்கு வந்த, கோள் - நலிவை, விடுத்தாய்-போக்கினவனே, உன்னை - இப்படி ஆச்ரித து꞉கநிவர்த்தகனான வுன்னை, கண்டு - பார்த்து, மாலுறுவோங்களை - ஆசைப்படும் எங்களை, கடைக்கண்களால் இட்டு - கடைக்கண்களால் பார்த்து, வாதியேல் - நலியாதொழியவேணும் என்ன ; நீங்கள்பட்ட வருத்தமென் என்ன ; யாம் - நாங்கள், வண்டல் - வண்டலிலுள்ள, நுண் - நுண்ணிதான, மணல் - மணலை. தெள்ளி—. வளை - வளையல்களணிந்த, கைகளால் - கைகளைக்கொண்டு, சிரமப்பட்டோம்.

---

"என்றும் உன்றனக்கு எங்கள்மேலிரக்கமெழாதது" என்றது சேரவேணுமிறே. இரக்கம் - க்ருபை. "துயின்ற" என்றபதத்தைக் கடாக்ஷித்து "பாவமே" என்கிற அவதாரணத்துக்குத் தாத்பர்யம் (ஜகத்ரக்ஷணத்திலே இத்யாதி.) ... ... ... ... ... ... உ

---

(க) ரா-சு-ருஅ-சஎ.

க்லேசப்பட்டோம் ; தெள் - தெளிந்த, திரை - திரைகளுடைய, கடல் - க்ஷீராப்தியை, பள்ளியாய் - படுக்கையாக வுடையவனே, எங்கள் சிற்றில் வந்து சிதையேலே—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (குண்டுநீருறைகோளரி) ஆழத்துக்கு எல்லையில்லாத ஏகார்ணவத்திலே ஸ்ருஷ்ட்யுந்முகனாய்க்கொண்டு சாய்ந்தருளி, ஸ்ருஜ்யபதார்த்தங்களுக்கு ஒரு நலிவு வாராதபடி அநபிபவநீயனா யிருக்கிறவனே. மதயானைகோள் விடுத்தாய்) ஸ்ருஷ்டித்து விட்டால் வரும் ப்ரதிபந்தகங்களைப் போக்கும்படி சொல்லுகிறது;—ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு முதலையால் வந்த நலிவைப் போக்கினவனே உன்னையித்யாதி) என்று மொக்க துக்கநிவர்த்தகனாய்ப் போரும் நீ, உன்னைக்கண்டு பிச்சேறி யிருக்கு மெங்களை ; உன்னைக்காணவேண்டி யிராதாருடைய துக்கத்தைப்போக்கினாய்; உன்னைக்கண்ணாலே கண்டு பிச்சேறி யிருக்கிறவெங்களுக்கு க்லேஶத்தைவிளையாநின்றாய். தங்களுக்கு அவன்பக்கலுண்டான ப்ரேமந்தோற்றத்தாங்களே சொன்னவாறே, அவனும் தங்கள்பக்கல் தனக்குண்டான ஸ்நேஹந்தோற்றும்படி கடைக்கண்ணாலே பார்த்தான் ; நீ உன்னுடைய அபாங்கவீக்ஷணத்தாலே எங்களை நலியாதே முழுக்கப்பார்க்க வல்லையே. வந்த அநர்த்தமென் உங்களுக்குஎன்ன ; (வண்டல் நுண்மணலித்யாதி) நாங்கள் பட்ட ப்ரயாஸத்தைப் பாராய் ;—வண்டலுள்ளவிடந்தேடி, அதிலே நுண்ணியமணல்தேடி, அதுதன்னைத்தெள்ளி, துர்ப்பலைகளாயிருக்கிற நாங்கள், வளைகொண்டு பாடாற்றுகையே துடங்கி அரிதாயிருக்கிற கைகளைக்கொண்டு க்லேஶப்பட்டோம். இவர்கள் இப்படி சொல்லச்செய்தேயும் இத்தையழிக்கவொருப்பட்டான் ; (தெண்டிரையித்யாதி) திருப்

---

மூன்றாம்பாட்டு (குண்டுநீரித்யாதி) கோள்-மிடுக்கு. கோள்-சிறை. "குண்டுநீர்" என்றத்தைப் பற்றவருளிச் செய்கிறார் (உன்னைக்காண வித்யாதி ) காணவேண்டியிராதார் - ஸ்ருஷ்டிக்குமுன்பு ஆத்மாக்கள் காண வேண்டியிராதார். முழுக்கப்பார்க்கவல்லையே - முடிக்கவல்லையே யென்றபடி (வளைக்கை) அவன் ஸ்பர்ஶித்தவளையாகையாலே பாடாற்றலாயிருக்கும் ; அந்தவளையும் இப்போது தரிக்கைக்கு ஶக்தியின்றியிலேயிருக்கிற கைகளைக்கொண்டு. அப்படியிருக்கச்செய்தேயும்வளையைதரித்துக்கொண்டு செய்தோமென்றபடி. சிரமம் - இளைப்பு பாடாற்றுகை. து:கமாறுகை.

பாற்கடலிலே வந்து சாய்ந்தது உன்னுடைய சிற்றிலழியாமைக்கே. எங்கள் சிற்றிலையழிக்கிறதென்? உன்சிற்றில்போலே நெருப்பும் காற்றுமாகக்கொண்டு இட்ட சிற்றிலன்றுகாண், வண்டல் நுண்மணல் தெள்ளியிட்ட சிற்றில்காண், இது உபாதேயங்காண். எங்கள் சிற்றிலையழியாதே இன்னம் அங்கேபோய் உன்சிற்றிலை நோக்குகிடாய். அந்தக்கடற்கரை யழியாதபடி நினைப்பிடுதல் அத்தைக் கரைகட்டுதல் செய்யப்பாராய். ... ... ௩

பெய்யுமாமுகில்போல்வண்ணா!உன்றன்பேச்சுஞ்செய்கையுமெங்களை,
மையலேற்றிமயக்கவுன்முகம்மாயமந்திரந்தான்கொலோ,
நொய்யர்பிள்ளைகளென்பதற்குன்னைநோவநாங்களுரைக்கிலோம்,
செய்யதாமரைக்கண்ணினாய்! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (ச)

ப - ரை. பெய்யும் - வர்ஷியாநின்றுள்ள, மா - கறுத்த, முகில் போல் - மேகம்போன்ற, வண்ணா - திருநிறத்தை யுடையவனே, உன்றன் - உன்னுடைய, பேச்சும் - தாழ்ந்தபேச்சுக்களும், செய்கையும் - தாழ்ந்த வ்யாபாரங்களும், எங்களை - அபலைகளான வெங்களை, மையலேற்றி - பிச்சேற்றி, மயக்க - அறிவு கெடுக்கைக்கு, உன் முகம்-உன்னுடைய முகம் மாயமந்திரந்தான் கொலோ - சொக்குப்பொடியோ; செய்யதாமரை - செந்தாமரைமலர்போன்ற, கண்ணினாய் - திருக்கண்களை யுடையவனே, எங்களைப்பார்த்து, நொய்யர் - இவர்கள் மிகப்புல்லியர், பிள்ளைகள் - பாலைகளா யிருந்தார்கள், என்பதற்கு-என்று நீசொல்வதற்கு, நாங்கள்—, உன்னை நோவ - வருந்தும்படி, உரைக்கிலோம். சொல்லுகிறிலோம்; எங்கள் சிற்றில்வந்து சிதையேலே—.

வ்யா —நாலாம்பாட்டு. (பெய்யுமாமுகிலித்யாதி) ஒருவர்ஷுகவலாஹகம் மின்னிமுழங்கிவில்லிட்டு ஸஞ்சரிக்குமாப்போலேயாய்த்து பெண்கள்முன்னே ஸ்ரமஹரமான வடிவோடே ஸஞ்சரிக்கிறபோதிருக்கிறது. இவர்கள் தன்வடிவிலே தோற்று ஈடுபட்டமை தோற்றவார்த்தை சொன்னவாறே, அதுவே அவகாஸமாக "அடியேன் குடியேன்" என்றாப்போலே சிலதாழ்வுகள் சொல்லுவது விரல்கவ்வுவதாய்க்கொண்டு சிலவற்றைச்செய்யப்புக்கான்; அதிலே துவக்குண்டு அறிவுகெட்டு (உன்றன் பேச்

---

"எங்கள் சிற்றில்" என்றதுக்கு வாஸனை (உன்சிற்றில் போலேயித்யாதி) கரைகட்டுகை - ஸேதுகட்டுகை. ... ... ... ... ௩

சும் செய்கையும் எங்களை மையலேற்றி மயக்க வுன்முகம் மாயமந்திரந்தான்கொலோ) உன்தாழ்ந்த பேச்சுக்களும் வ்யாபாரங்களும் எங்களைப் பிச்சேற்றியறிவுகெடுக்க உன்முகம் அம்மான்பொடியோ என்கிறார்கள். அதேதாகிலென்? இனிச்செய்யலாவதுண்டோ? என்றான்; என்? இனிச் செயலற்றுப்போகவேணுமோ, நீ நெடுநாள் கூடி வ்யாபரித்துப் பண்ணினத்தையடைய நாங்கள் ஒரு உக்தியாலே யழித்து உன்னை மறுமுட்டுப் பெறாதபடி பண்ணலாய்த்திறே; அது செய்கிறிலோம். அது செய்தாலென்னென்னில்; (நொய்யரித்யாதி) பாலனை யிவன் தங்களையொழியச்செல்லாமை யுடையனைப் தங்கள் திரளிலேவந்து புகுரப்புக்கால், "இவன் புகுந்திடுவானுக்கு" என்றிருந்தால், இவர்களுக்கு என்னசேதமுண்டு? இவன் புகுரவேண்டா என்று இங்ஙனே விலக்குவதே! இவர்கள் சாலப்புல்லியரா யிருந்தார்கள், பாலராயிருந்தார்கள் என்று நீயுள்ளேபுகுந்து பண்ணும் மர்மம் அறியாதார் சொல்லாநிற்பர்கள். (நோவ-உரைக்கிலோம்) எங்களுக்கு ஒருக்திமாத்திரம், உன்னை மறுமுட்டுப் பெறாதபடி பண்ணலாம், அது செய்கிறிலோம். பின்னையும் அழிப்பதாக வொருப்பட்டதுமாறுகேயிருக்கச் செய்கையும் ஸாதாரமாகப் பார்த்தான்; (செய்யதாமரைக்கண்ணினாய் எங்கள் சிற்றில்வந்து சிதையேலே) கண்ணாலே எங்கள் அபிஸந்தியைக் குலையாதேகொள், காலாலே எங்கள் சிற்றிலையழியாதேகொள். ... ... ... ... ... ச

---

நாலாம்பாட்டு. (பெய்யவித்யாதி) மையல்-பிச்சு. (அம்மான்பொடி) "பிள்ளை அபஹரிப்பார், ஒருபொடியைப் பிள்ளைமேலே பொகட்டால் அந்தப்பிள்ளை "அம்மான், அம்மான்" என்று அவன்பின்னே போம்" என்று ஒரு ப்ரஸித்தியுண்டு; அத்தைச் சொல்லுகிறது. இனிச்செய்யலாவதுண்டோவென்றான் என்றது - என்கையிலே அகப்பட்டபின்பு இனிப்போக்கடியுண்டோ வென்றான் என்றபடி. உக்தி - மர்மோக்தி. மறுமுட்டுப் பெறாதபடி - புறம்பு விலை செல்லாதபடி நொய்யர் - புல்லியர் (பெறாதபடி பண்ணலாம்) "நொய்யர் பிள்ளைகளென்பதற்கு உன்னை நோவ நாங்களுரைக்கிலோம்" என்று பூரிப்பது. உன்னை நோவவுரைத்தால் எங்களை, பிள்ளைகள், நொய்யர்-புல்லியர் என்பர்கள்; அதுக்காகநோவச்சொல்லமாட்டோமென்ற பாப்தார்த்தம். அபிஸந்தி-அர்யபாதை. ... ... ச

வெள்ளைநுண்மணல்கொண்டு சிற்றில்விசித்திரப்படவீதியாய்த்
தெள்ளிநாங்களிழைத்தகோல மழித்தியாகிலுமுன்றன்மேல்
உள்ளமோடியுருகலல்லாலுரோடமொன்றுமிலோங்கண்டாய்
கள்ளமாதவா! கேசவா! வுன்முகத்தனகண்களல்லவே. (ரு)

ப - ரை. சிற்றில் - லீலார்த்தமாகச் சமைத்த சிற்றில்கள், விசித்திரப்பட - உன்னுடைய விசித்ர ஸ்ருஷ்டிபோலேயாம்படி, வெள்ளை - வெளுத்து, நுண் - நுண்ணிதாயிருந்துள்ள. மணல்கொண்டு மணலை, தெள்ளி—, வீதிவாய் - தெருவிலே, நாங்கள்—, இழைத்த—, கோலம்-கோலத்தை, அழித்தியாகிலும் - அழித்தாயேயானாலும், உன்றன்மேல் - உன் விஷயத்தில், உள்ளம் - எங்கள் மநஸ்ஸு, ஓடி-சென்று, உருகலல்லால்-உருகுவதுபோக்கி, ஒன்றும் - சற்றுமினும், உரோடமிலோம் கண்டாய்-ரோஷப்படாதவர்கள்கிடாய்; கள்ளம் - க்ருத்ரிமச் செய்கைகளை யுடையனாய். மாதவா - ஸ்ரியஃபதியானவனே, கேசவா - கேசியென்னும் அஸுரனை நிரஸித்தவனே, உன் - உன்னுடைய முகத்தன - முகத்திலுள்ளன, கண்களல்லவே - கண்களன்றோ.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வெள்ளைநுண்மணல் கொண்டு) நிலவைப்பரப்பினாப்போலே வெளுத்து, அது தன்னிலும் பருக்கைப்படில் பொகட்டுப்போம் துஸ்ஸீலதேவதையாகையாலே, அச்சமான மணலைக்கொண்டு அது தன்னைத்தெள்ளி சிற்றில் விசித்திரப்பட) விசித்ரஸ்ருஷ்டிபண்ணவல்லேன் நான்என்றிராதே கொள், நகங்களும் வல்லோங்காண். (வீதிவாய்-நாங்களிழைத்த கோலம்) தெருவிலே நாங்களிழைத்த அழகிய சிற்றிலை அழித்தாயாகில். இதிருந்தபடி கண்டாயே, இத்தைக்கண்டா லழிப்பாரில்லையிறே, நீதானே அழியாய் என்கிறார்கள். நானழித்தால் தான் நீங்கள் செய்வதென்னென்கிறான்; (உன்றனித்யாதி) நீயழித்தாயாகிலும், ஒருவன் சிற்றிலை அழித்தபடியென்! என்று அதுக்கு ஹ்ருதயமழிந்து உடைகுலைப்படுமதுபோக்கி ரோஷமென்று பேரிடலாவதொன்றுமில்லை. நெஞ்சுவேவா நிற்கச்சொல்லும் வார்த்தையிறே யிது. இவர்கள், தங்கள் அகவாயில் இழவுதோற்றச் சொல்லச்செய்தேயும், பின்னையும் தான் கொண்ட கோட்பாடு

---

அஞ்சாம்பாட்டு. (வெள்ளைஇத்யாதி) வாய் - இடம். இழைத்தல் - இடுதல். "ஆகிலும்" என்ற யதிஶப்தார்த்தம் (நீதானேயித்யாதி.) உரோடம் - ரோஷம். ரோஷமில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார் (நெஞ்சித்யாதி.) கோட்பாடு - கோலுபாடாய், உத்யோகம்.

விடாதிருக்க, அது தன்னையும் மறைத்து ஸ்ரீயஃபதியான செருக்குத்தோற்ற அங்கேயிங்கே ஸஞ்சரிப்பது புறம்பே அந்யபாதை பாவிப்பது, குழலைப் பேணுவதாகப்புக்கான்; அத்தையறிந்து; (கள்ளமாதவா கேசவா வுன்முகத்தன கண்களல்லவே) பாவி! நீயும் இத்தைக்கண்டன்றோ அழிக்கிறாய், உன்முகத்தன கண்களல்லவோ. இவை தண்ணளிக்கு உறுப்பு என்று நினைத்திருந்தோம், அது அங்ஙனன்றிக்கே பீலிக்கண், மாலைக்கண்ணோபாதியாய்த்தோ. "கண்" என்று பேராய், கண்டாரை முன்னடியிலே விழவிட்டுக் கொள்வதொரு வலையிறே. (க) "கண்ணென்னும் நெடுங்கயிறு" என்னக்கடவதிறே. ... ... ... ரு.

முற்றிலாதபிள்ளைகளோம் முலைபோந்திலாதோமைநாடோறும்,
சிற்றில்மேலிட்டுக்கோண்டு நீசிறிதுண்டுதிண்ணேனநாமது,
கற்றிலோம் கடலையடைத்தரக்கர்குலங்களை முற்றவும்.
செற்றிலங்கையைப்பூசலாக்கியசேவகா வேம்மைவாதியேல். கூ

ப - ரை. கடலை - ஸமுத்ரத்தை, அடைத்து-ஸேதுபந்தம்பண்ணி, அரக்கர் குலங்களை முற்றவும் - ராக்ஷஸருடைய குலத்தையெல்லாம், செற்று - நிரஸித்து, இலங்கையை - லங்கையிலே, பூசலாக்கிய - யுத்தம் செய்தருளின, சேவகா - ஸேவகனே, முற்றிலாத - முற்றாத. பிள்ளைகளோம் - பாலைகளுமாய், முலை - முலைகளும், போந்திலாதோமை - அங்குரியாத வெங்களை, நாடொறும் - நாள்தோறும், சிற்றில்மேல் - சிற்றில் விஷயமாக, இட்டுக்கொண்டு - ஒருவ்யாஜத்தை யிட்டுக்கொண்டு நீ - நீ சொல்லுகிறது. சிறிதுண்டு - ஒருகருத்துண்டு, நாம் - நாங்கள் அது - அத்தை, திண்ணென - அழகிதாக, கற்றிலோம் - அப்யஸிக்கவில்லை, எம்மை - இத்தன்மையரான வெங்களை, வாதியேல் - வருத்தாதொழிய வேணும்.

---

(கண்களல்லவே) வினாவாய், ஸம்ஶயமாதல்; தேற்றமாய், நிஶ்சயமாக வேறென்றாதல்; இத்தையருளிச் செய்கிறார் (கண்ணென்று பேராயிச்யாதி) நீயும் இத்தைக்கண்டன்றோ அழிக்கிறாய்) என்கையாலே-கண்ணால் நல்லத்தைக்கண்டு கொண்டிருக்கைக்கு உடலொழிய அழிக்கைக்கு உடலல்லவாகையாலே. பீலிக்கண்ணோபாதியாய்த்தோ? வென்று இதுவும் ஒரு தாத்பர்யாந்தரம்போலே தோற்றுகிறது. ... ... ரு

---

(க) கச-௪௨.

வ்யா.—ஆறும்பாட்டு. (முற்றிலாதபிள்ளைகளோம்) இன்னது செய்தான் என்று பிறர்க்குச் சொல்லவொண்ணுதபடி சிலவற்றைச் செய்யத்துடங்கினன்; அத்தைக்கண்டு, சிலசெய்தாயாகித்தனையோ வேண்டுவது, அதுக்கு எதிர்த்தலையில் பருவமறிந்து கொள்ளவேண்டாவோ. உன் நினைவறிகைக் கீட்டான பருவமல்ல, உள்ளபருவத்துக்குத்தக்க அறிவுமில்லை; ஆனாலும் போகபோக்யதையுண்டாகப்பெறிலுமாமிறே. அதுவுமில்லையிறே; ப்ராமாதிகமாகவு மொருசெயலைச்செய்து விடுகையன்றிக்கே, என்று மொக்க "சிற்றில்" என்றொருவ்யாஜத்தையிட்டுக்கொண்டு நீசெய்கிறதுக்கு ஒருகருத்துண்டு-ஒருஸ்வாபதேஶமுண்டு; அதுவாகாதே நாங்கள் அழகிதாக அப்யஸித்திலோம். அறிந்தவற்றே இவர்கள் அறியாதிருந்தபடி. நீ நினைக்கிறவை நாங்களறிகைக்கு குருகுலவாஸம் பண்ணிற்றிலோம்; நீங்கள் கற்றிலிகோளாகிலும் நான்கற்றேனிறே யென்றுமேலிட்டு நலியத்துடங்கினன்; (கடலையித்யாதி) இதுக்கு முன்பு ஒருவர் தலையழித்தறியாக் கடலையடைத்து, இதுக்கு முன்பு ஒருவர் மேலிட்டறியாத ராக்ஷஸஜாதியைப்பக்கவேரோடே கிழங்கெடுத்து, சிலர் எடுத்துவிட்டு வந்து பொரக்கணிசியாத ஆரைப் பூசலாம்படி பண்ணி, அத்தால் வந்த ஆண்பிள்ளைத்தனத்தை யுடையயாயிருக்கிறவனே. (எம்மைவாதியேல்) எங்கள்பக்கல் பூசலைவிளையாதே கொள். ப்ரதிகூலர் திரண்டவிடத்தே செய்யுமவற்றை அநுகூலர் திரண்டவிடத்திலேயும் செய்யாதேகொள். அது ஒருத்திக்காகச் செய்த செயலன்றே, அது இப்போது அவள் தன்னோடாய்த்தோ. ... கூ

---

ஆறும்பாட்டு. (முற்றித்யாதி) முற்றிலாத-இளைய. "முற்றிலாத, பிள்ளை" என்று இரண்டும் இளமைக்கு வாசகமாகையாலே பேதம் அருளிச்செய்கிறார் (உன்நினைவித்யாதி) * முலைபோந்திலாதோமைக்கு அர்த்தம் (ஆனாலு மித்யாதி) நாயகனுடைய நினைவறிந்து பரிமாறுகைக்கீடான அறிவில்லாச பருவத்திலும் போக யோக்யதை யுண்டிறே நவோடைக்கு. "சிறிதுண்டு" செய்கிறதுக்கு என்று அத்யாஹார்யம். ஸ்வாபதேஶம் - ஸம்ஶ்லேஷம். அதுவாகாதே யென்று - ஸங்கேத வசநம். தலையழிக்கை - செருக்கழிக்கை. "கடலை யடைத்து" இத்யாதிக்குத் தாத்பர்யாந்தரம் (அதொருத்திக்காச வித்யாதி) அதாவது - அவளோபாதி எங்கள் விரோதிகளையும் அழியச்செய்யவேண்டியிருக்க எங்களை நலிய

பேதநன்கறிவார்களோ, டிவைபேசினல்பெரிதின்கவை?
யாதுமொன்றறியாதபிள்ளைகளோமை, நீநலிந்தென்பயன்?
ஓதமாகடல்வண்ணா! உன்மணவாட்டிமாரோடுசூழறும்,
சேதுபந்தந்திருத்தினாய்! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (எ)

ப - ரை. சேதுபந்தம் திருத்தினாய் - திருவணைகட்டியருளினவனே, பேதம் - நீ சொல்லும் வார்த்தையின் பேதத்தை. நன்கு - நன்றாக, அறிவார்களோடு - அறியுமவரான பாவஜ்ஞரோடே, இவை - இவ்வார்த்தைகளை. பேசினால் - சொன்னால், பெரிதின்சுவை - மிகவும் இனிதாயிருக்கும்; யாதுமொன்றறியாத - ஒருவார்த்தையின் பாவத்தையும் அறியாத, பிள்ளைகளோமை - பாலைகளாயிருக்கிற வெங்களை, நீ—, நலிந்து-வருத்துவதால், என்பயன் - என்னப்ரயோஜநமுண்டு; ஓதம்-திரைகளையுடைத்தாய், மா - பெரிதாயிருந்துள்ள, கடல் - கடல்போன்ற, வண்ணா - திருநிறத்தையுடையவனே, உன் - உன்னுடைய, மணவாட்டிமாரொடு சூழறும்-நாய்ச்சிமாராணை; ஆகையால், எங்கள் சிற்றில்வந்து சிதையேலே எ.

வ்யா.—எழாம்பாட்டு. (பேதநன்கித்யாதி) சிலவார்த்தைகளைச் சொல்லுகிறான்;—சொல்லப்புக்க வார்த்தையினுடையபலம் வேறொன்றினுடைய பலத்தை பலிப்பதாகச் சொல்லத்துடங்கினான்; நீசொல்லுகிறவற்றினுடைய கருத்தறிவாரோடே சொன்னாலன்றோ உனக்கு இத்தால் ப்ரயோஜநமுள்ளது, எங்களோடு சொன்னாலென்ன ப்ரயோஜநமுண்டு. (பெரிதின்சுவை) வார்த்தைவாசியறிவாரோடே சொன்னாலன்றோ வுனக்கு ப்ரயோஜநமுள்ளது, அவர்கள் ஒன்றுக்குப் பத்தாக மர்மத்திலே சொல்லுவார்களே, அது உனக்கு மிகவும் இனிதாயிருக்குமிறே. (யாதுமொன்றறியாத வித்யாதி) "தண்ணீர்" என்றால் தண்ணீரே கொண்டு வரும்படி பாலைகளாயிருக்கிற வெங்களை நெருக்கினால் உனக்கென்ன பலமுண்டு. இவர்கள் இப்படி தங்களிடுபாடு தோற்ற வார்த்தை சொன்னவாறே, வடிவுஇட்டு மாறினாப்போலே பிராட்

---

லாமோ வென்றபடி. தாங்களும் பிராட்டிமாராகையாலே (அவள் தன்னோடு) என்கிறது. ... ... ... ... ... ... ஸ்ரீ

எழாம்பாட்டு. (பேதம்நங்கித்யாதி) பேதம்நன்கறிவார் - அவன் சொல்லுகிறவார்த்தையின் பேதத்தை நன்றாக அறிவார். பேதம்-பேதம் வேறொன்றினுடைய - பாவகர்ப்பமானவை. ஈடுபாடு - நலிவுபாடு. ஓதம் - திரை. மா - பெருமை. சேது - அணை. பந்தம் - கட்டல். அணைகட்

டித்தது; (ஓதமாகடல்வண்ணா) நம்வடிவிலே துவக்குண்டார்கள், நாம் செய்தது விலக்கமாட்டார்களென்னுச் சிற்றிலேயழிக்கப்புக்கான்; (உன்மணவாட்டிமாரொடு சூழறும்) உனக்கு நல்லாரோடு சூழறுங்கிடாய் இத்தை அழிப்பாயாகில். உனக்கு இதழிக்க வேணுமோ, புறம்பே எத்தனையிடங் கிடக்கிறது, இவர்களும் அவனுக்கு மர்மஞ்சொல்லுகிறார்களாய்த்து. ஏகதாரவ்ரதனுயிருக்கிறவனே உனக்கெத்தனைபேர் கிடக்கிறது. எங்களையொழியவென்கை சால மர்மமிறே. இப்படி யிவர்கள் ஆணையிட்ச்செய்தேயும் அழிக்கப்புக்கான்; (சேதுபந்தம் திருத்தினு யித்யாதி) மிடுக்குக்கீடான பிறப்பையுடையையுமாய்ப்பருவம் நிரம்பினபின்பு *கானவெண்கும் குரங்கும் பரிகரமாகக்கொண்டு கடலிலே யித்தனை மணலொழுக்கப்பட்ட பாடெல்லாமறிதியே; அவ்வோபாதி போராதோ அபலைகளான நாங்கள் இதிற்பட்ட வருத்தம். அவஶ்யமுனக்கு அழிக்கவேணுமாகில் உன்னுடைய சிற்றிலேப்போயழியென்கிறார்கள். ... ... ... ... ... எ

வட்டவாய்ச்சிறுதூதையோடு சிறுசுளகுமணலுங்கொண்டு,
இட்டமாவிளையாடுவோங்களைச் சிற்றிலீடழித்தென்பயன்?
தொட்டுதைத்துநலியேல்கண்டாய் சுடர்ச்சக்கரங்கையிலேந்தினாய்!
கட்டியும்கைத்தால்இன்னாமை யறிதியேகடல்வண்ணனே. (அ)

ப - ரை. சுடர் - விளங்காநின்றுள்ள. சக்கரம் - திருவாழியை, கையில் ஏந்தினாய் - திருக்கையிலே யுடையனாய், கடல் - கடல்போன்ற, வண்ணனே - திருநிறத்தையுடையவனே. வட்டம் - வ்ருத்தமான, வாய் - வாயையுடைய சிறுதூதையோடு - சிறியபானையையும், சிறு - சிறிய, சுளகும் - முச்சிலேயும், மணலும் கொண்டு-மணலையும் கொண்டு. இட்டமா- இஷ்டமாக. விளையாடுவோங்களை - விளையாடுகிற வெங்களுடைய, சிற்றில் - மணற்கொட்டகங்களை. ஈடழித்து-ஒன்றுக்கும் உபயோகமில்லாதபடி பண்ணுவதால், என்பயன் - உனக்கு என்னப்ரயோஜநம்; தொட்டு -

---

டினுயென்றபடி சூழறுகை-ஆணையிடுகை. "சேதுபந்தம் திருத்தினாய்" என்றத்தைப்பற்ற (ஏகதாரவ்ரதனென்றது.) "சேதுபந்தம் திருத்தினாய்" என்றது - கீழுக்கும் மேலுக்கும் ஶேஷமாயிருக்கிறது. பஹு வசநத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (உனக்கழிக்கவித்யாதி.) (மணலொழுக்க) என்று ஆஶ்சர்யவாகச் சொன்னது - தங்களுடைய பெருவருத்தம் தோற்றுகைக்காக; அவன் சிற்றில் - ஸேது ... ... ... ... எ

திருக்கையாலே தொட்டும், உதைத்து - திருவடிகளாலே உதைத்தும், நலியேல்கண்டாய்-வருத்தாதொழியவேணும்; கைத்தால் - செஞ்சுகைத்துப்போனால், கட்டியம் - கருப்புக்கட்டியேயானாலும், இன்னாமை - இன்னாதென்னுமிடம், அறிதியே - அறிவாயன்றோ.

வ்யா.—எட்டாம்பாட்டு. (வட்டவாயித்யாதி) இவற்றினுடைய விசித்ரஸந்நிவேஶமிருந்தபடி கண்டாயே, இவற்றைக்கொண்டு எங்களுடைய இச்சைக்கு ஒருவரால் ஒருப்ரதிஹதி பண்ணவொண்ணாதபடி விளையாடுகிற வெங்களை ஓரவபவியாக்கிக் காணவொண்ணாதபடி-மறுமுட்டுப் பெறாதபடி யழிக்கிறவித்தால் என்னப்ரயோஜநமுண்டு. நீ இத்தை யழித்தால் பிறர் புத்யதீநமாக பரிஹரிக்கவல்ல பருவமோ எங்களது; ப்ரயோஜநத்துக்கு ஒரு ப்ரயோஜநமுண்டோ. இதுதானே யன்றோ ப்ரயோஜநமென்று வாராத் தொட்டான்; வாராய், எத்தனைபேரைத் தொட்டுவந்தாயென்று தெரியாது, நீங்கள் எங்களைத்தீண்டுவதே! என்ன, சிவட்கென்றார்கள்; ஆகில் (*) சவியுங்கோளென்னக் காலாலே யுதைத்தான்; அங்கஸ்பர்ஶத்தாலே துவளா (நலியேல் கண்டாய்) என்கிறார்கள். என்னுடைய ஸ்பர்ஶம் உங்களுக்கு நலிவாய்விட்டதோ, நான் ஈஶ்வானல்லேனோ என்னுடைய ஸ்வரூபயங் காட்டினாப்போலே,திவ்யாயுதங்களை தரித்துக்காட்டி(க)"கூராராழி வெண்சங்கேந்தி-வாராய்" என்று எல்லாரும் ஆசைப்பட்டிருக்கிறவிது உங்களுக்குப் பொல்லாதோ வென்றான்; அழகிது, ஆனாலும் (கட்டியும் கைத்தால் இன்னாமை யறிதியே கடல்வண்ணனே) கருப்புக்கட்டியேயானாலும் நெஞ்சுகைத்தால் இன்னாதென்னுமிடம் அறிதியே, கடல்வண்ணனே. "கடல்வண்ணன்" என்கிற இவ்விஶேஷணமிட்டதுகருக் கருத்து-கண்டுவிடுமதுக்கு மேற்படச்செய்யலாவதில்லை. ஒருகைபள்ளி முகத்தைக்கழுவுதல் குடித்தல் செய்யவொண்ணாதே கடலில்நீர்; அப்படியேயன்றோநீ என்கை நினைவு. ... ... ... ... அ.

எட்டாம்பாட்டு. (வட்டவாயித்யாதி) சிறு தூதை-சிறியபானை. சிறுசுளகு-முச்சில். தூதை முதலானவை ஒன்றுபோலொன்றிராமையாலே (விசித்ரஸந்நிவேஶமென்கிறது) (பிறர்) என்று அவனைச்சொல்லி, உன்புத்யதீநமாக-உனக்கு இஷ்டமாகச்செய்யத்தகக பருவமல்லவென்றபடி. வேறு சிலர் அறியாதபடி பரிஹரிக்கவல்ல பருவமோ வென்றபடி. * யாது

(க) தி-வாய்-சு-கூ-க. * சவிதல் சபித்தல்-வைதலென்றபடி.

முற்றத்தூடுபுகுந்து நின்முகங்காட்டிப்புன்முறுவல்செய்து,
சிற்றிலோடெங்கள்சிந்தையுஞ் சிதைக்கக்கடவையோ! கோவிந்தா,
முற்றமண்ணிடந்தாவி விண்ணுறநீண்டளந்துகொண்டாய்எம்மைப்,
பற்றிமெய்ப்பிணக்கிட்டக்கால்இந்தப்பக்கம்நின்றவரென்சொல்லார்.

ப - ரை. கோவிந்தா—, முற்றத்தூடு - பெண்களெல்லாரும் சேரத் தகக இடமுடைத்தான முற்றத்தின் நடுவே, புகுந்து - வந்து நின் - உன்னுடைய, முகம்காட்டி - முகத்தைக்காட்டி புன்முறுவல்செய்து - மந்தஸ்மிதம்பண்ணி, சிற்றிலோடு - நாங்கள் வருத்தமுற்றுச்செய்த சிற்றிலையும், எங்கள் - எங்களுடைய, சிந்தையும்-மநஸ்ஸையும், சிதைக்கக்கடவையோ - அழிக்கக்கடவையோ ; இடம் - இடமுடைத்தான, மண் - பூலோகத்தையும், முற்ற - மற்றலோகங்களையும், தாவி-திருவடிகளாலே தாவி, விண் உற - பரமபதத்தளவும். நீண்டு - வளர்ந்து, அளந்து கொண்டாய - அளந்து கொண்டவனே, எம்மைப்பற்றி-எங்களைப்பிடித்து மெய்ப்பிணக்கு இட்டக்கால் - ஸம்ஶ்லேஷித்தால், இந்தப்பக்கம் நின்றவர் - இங்கு நிற்பவர்கள், என் சொல்லார் - என்ன சொல்லமாட்டார்கள்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (முற்றத்தூடுபுகுந்து) இவன் கோலுகிறபடி சாலப்பொல்லாதாயிருந்தது, இவன் கண்வட்டத்திலே நிற்கில் தீம்புசெய்கை தவிரான், அதிற்காட்டில் மறைய நிற்கை நன்றென்று எல்லாருந்திரண்டு, (க) "ஸமேத்ய மந்த்ரயித்வா து ஸர்வே ஸங்கதபுத்தய:" "ஸமேத்யமந்த்ரயித்வாது ஸர்வேஸங்கதபுத்தய;" என்கிறபடியே ஸமயம்பண்ணி, அதுசெய்யுமிடத்து எல்லாருந் திரளப்போவோமாகில் இவன் அடியொத்திக்கொண்டு வரும் என்று பார்த்து, ஒருவரொருவராகப்போய், பஞ்சலக்ஷங்குடியிலுள்ளா ரெல்லாரையுங் கொள்வதொரு முற்றத்திலேபுக்கு கதவுகளையுந் தலைவாசல் துடங்கி யடைத்துக் கணையங்களையும் *எறிட்டு, இவனுக்குப்புகுரவழி யில்லாதபடி பண்ணிக்கொண்டிருந்தார்கள்; இவனுக்குப் புகுருகைக்கு வழிதேட வேண்டாவிறே; —இட்ட விலச்சினை யழியாதிருக்க வெண்ணெய் குடிபோமாப்போலே, நினைவின்றிக்கே யிருக்கத். தாங்கள் அவன்கையிலே

மொன்றறியாத பிள்ளைகளிறே. கட்டி - கருப்புக்கட்டி. கைத்தால்-கசத்தால். ... ... ... ... ... ... ... ... அ.

ஒன்பதாம்பாட்டு (முற்றத்தித்யாதி) ஊடு - நடு.

(க) ரா-அ-உ-உ௦.

அபஹ்ருதைகளானார்கள். இம்முற்றத்திலே தங்கள் திரளின் நடுவேவந்து நிற்கக்கண்டார்கள்; நாம் இவனை மறைத்துப்போந் தோமென்றிருந்தோம், அழகிதாயிருந்தது. இவன் நமக்கு முற் பட்டுக் கொடுநின்றான், என்செய்தோமானோம், இவன் கையிலே யகப்பட்டோம், இனி இவனுக்குத் தென்பட்டோமாகாமல் கழி யும் விரகேதோ! என்று பார்த்து, ஒருபோக்குக்காணமல் லஜ்ஜித் துக் கவிழ்கலையிட்டார்கள்; (நின்முகங்காட்டி) எல்லாரையும் தனித்தனியே முகத்தையெடுத்து, என்வந்தோமிறே, பிற்பட் டோமே. கூடவரப்பெற்றிலோமே, எவ்வழியேவந்திகோள். கால் கள் நொந்ததிறே யென்றாப்போலே சிலவற்றைச்சொன்னான்; நம்நினைவு தப்புவதே! என்று தங்கள் தோல்வியை யநுஸந்தித்து லஜ்ஜித்தார்கள்; (புன்முறுவல் செய்து) அத்தையறிந்து ஸ்மிதம் பண்ணினான். நாம் இவனுக்குத்தோற்று லஜ்ஜித்தோமானமை அவன் அறியலாகாது, புறம்பே அந்யபாரானோமாவோமென்று அங்கேயிருந்து சிற்றிலிழைக்கப் புக்கார்கள்; இங்கே நம்ஸந்நிதி யிலேயிருந்து அந்யபரதை பண்ணுவதே! என்று சிவிட்கென்ன நினைக்கைக்கு நெஞ்சுங்கூடாதே வ்யாபரிக்கைக்குக்கையுங்கூடாத படியாக சிலவற்றைச் செய்தான்; (சிற்றிலோடித்யாதி) உனக் குத்தான் பசுமேய்க்கையன்றோ பணி, பெண்களை நலிகையும் பணியோ; ஸவாஸநமாக அழிக்கக் கடவையோ. (முற்றமண் ணித்யாதி) ஒன்றை வாங்கப்புக்கால் கொடுத்தவர்களைக் குழியிலே தள்ளுமவனன்றோ நீ க்ஷணத்திலே (க)* இறைப்பொழுதில் பாதா ளங்கலவிருக்கை கொடுக்குமவனிறே. இனியென் பழிகேட்பது!, கெட்டோம்!, இதுக்குமேல் கேட்பதில்லையிறே! என்ன, பரிபட் டங்களையுங் கழித்து, பெண்களுக்கு உடம்புகொண்டு தாய்மார் முன்புநிற்கவொண்ணாதபடி பண்ணினான்; (எம்மைப்பற்றி மெய்ப் பிணக்கிட்டக்கால்) உங்களுக்கு இது சால அஸஹ்யமாயிருந் ததோ, நம்மோடே யணைகை பொல்லாதோ. எத்தனைபோனும்

தென்படுகை-தோற்கை; இளிம்பு படுகையும். பற்றி-பிடித்து. மெய்ப் பிணக்கு-கலவி. "என்சொல்லார்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (ஆண்பெண்ணித்யாதி) ஆண் பெண்ணனவர்கள்-ஆழ்வார்கள். மென் மைபிறந்து என்கிறது - (உ) "ஒருநான்று தடிபிணக்கே" என்றும்,

(க) பெரி-தி-ச-கூ-எ. (உ) தி-வாய்-கூ-உ-எ.

யோகிகளும் நம்முடம்புடனே யணையவன்றே ஆசைப்படுவது, உங்களுக்குப் பொல்லாதோ வென்ன; எங்களுக்குமழகிது, ஆனாலும் (இந்தப்பக்கம் நின்றவரென்சொல்லார்) அவர்கள் தோற்றிற்றுச் சொல்லார்களோ. இத்தால் ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமான படி சொல்லுகிறது. "ஆண்பெண்ணாய் வார்த்தை சொல்லிற்றுகை யன்றிக்கே, பெண்தனக்கே, அதுக்குமேலே யொரு பெண்மை பிறந்து வார்த்தை சொல்லுகிறதென்னு மிடந்தோற்றியிருக்கிற படி காணும்" என்று பிள்ளைதாமும் வித்தராயருளிச் செய்தருளின வார்த்தை. ... ... ... ... ... ௯

சீதைவாயமுதமுண்டாய்! எங்கள்சிற்றில்நீசிதையேலென்று.
வீதிவாய்விளையாடும் ஆயர்சிறுமியர்மழலைச்சொல்லை,
வேதவாய்த்தொழிலார்கள்வாழ் வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்தன்,
கோதைவாய்த்தமிழ்வல்லவர் குறைவின்றிவைகுந்தம்சேர்வரே. (௧0)

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ப - ரை. சீதை - பிராட்டியுடைய, வாயமுதம் - அதராம்ருதத்தை, உண்டாய் - உண்டவனே, எங்கள் - எங்களுடைய, சிற்றில் - சிற்றிலை, நீ—, சிதையேலென்று - சிதையாதேகொள் என்று, வீதிவாய்-வீதியிலே, விளையாடும் - விளையாடுகிற, ஆயர் சிறுமியர் - இடைப்பெண்களுடைய, மழலைச்சொல்லை - மதலைச்சொற்களை; வேதம்வாய் - எப்போதும்வேதமே ஓதிப்போரும் வாயையுடையராய், தொழிலார்கள்-வைதிகக்ரியையை யுடையரான ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழ் - வர்த்திக்கிற, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, மன் - தலைவரான, விட்டுசித்தன்றன் - பெரியாழ்வார் திருமகளாரான, கோதை - ஆண்டாளுடைய, வாய்-திருப்பவளத்திலுண்டான, தமிழ் - த்ராவிட ரூபமான இப்பத்துப் பாட்டையும், வல்லவர் - அப்யஸிக்க வல்லவர்கள், குறைவின்றி - ஒருவகைக் குறையுமின்றிக்கே, வைகுந்தம் - பரமபதத்தை, சேருவர்-கிட்டப்பெறுவரென்கிறாள்.

வ்யா.— பத்தாம்பாட்டு. (சீதைவாயமுத முண்டாய்) (௧) "[Telugu-script quotation] " "ஏஷஸுநம்யபாஸ்யாமி ரஸாயநமிவோத்தமம்" என்கிறபடியே பருவம் நிரம்பினவளோடேயித்தீம்புகள் செய்தாலன்றே உனக்கு ப்ரயோஜநமுள்ளது.

(உ) "பந்துங்கழலும்தந்துபோகு" என்றாப்போலே பாவகர்ப்பமாகத் தன்னிசைவுகள்கடிநமாயிராதே. "இந்தப்பக்கம் நின்றவரென்சொல்லார்" என்று தனக்கு ஸம்ச்லேஷத்திலுண்டான இசைவை மார்த்தவம் தோற்றச் சொல்லுவதே! என்றபடி. ... ... ... ... ௯.

(௧) ரா. (உ) தி-வாய் ௬-உ-௧.

உன்னைவறிந்து பரிமாறுகைக்கு அளவில்லாத வெங்கள் சிற்றிலை வந்து சிதையாதேகொள்ளென்று. (வீதிவாயித்யாதி) எல்லாரும் திரளுமிடத்திலே மறைக்கவேண்டுமவை மறைக்கவறியாதே பரியட்டங்களை யிட்டுவைத்து, ஸ்வைரமாக விளையாடுகிற பருவம் நிரம்பாத இடைப்பெண்களுடைய நிரம்பாமென்சொல்லை. (வேத வாயித்யாதி)வாயாலுச்சரிப்பதடங்கலும் வேதஶப்தமாகையாலே செய்வதடங்கலும் வைதிகக்ரியையாயிருக்கிற ப்ராஹ்மணர் வர்த்திக்கிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு ப்ரதாநரான பெரியாழ்வார் திருமகளுடைய பகவதநுபவம் * [illegible] - வாஙீக்ரமவர்த்தித்வாத். வழிந்து புறப்பட்ட சொல்லை அப்யஸிக்கவல்லவர்கள்; அணைத்தவநந்தரம் இந்தப்பக்கம் நின்றவரென்சொல்லாரென்னுதல், அன்றிக்கே, காமன்காலிலே விழுதல் செய்யவேண்டாதே, அணைத்தவநந்தரம் அருகு நிற்பாருமெல்லாம் * பணியாவமரரான நித்யஸித்தரே யாம்படியான தேஶத்திலே போய்ப் புகப்பெறுவர்கள். ... ... ... ... ... ௧௦.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

இரண்டாந்திருமொழி முற்றிற்று.

---

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

## மூன்றாந்திருமொழி- கோழியழைப்பதன் ப்ரவேஶம்.

அவ.—"தொட்டுதைத்து நலியேல்கண்டாய்" என்னும்படியாக வந்து ஸ்பர்ஶித்து, அநந்தரம், "எம்மைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்னும்படியே இருவரும் இரண்டு உடம்பாயிருக்கை யன்றிக்கே யொருடம்பென்றே ப்ரதிபத்திபண்ணலாம்படி ஸம்ஶ்லேஷம்ப்ரவ்ருத்தமாய், அப்படி வ்ருத்தமான ஸம்ஶ்லேஷந்தான், காய்ந்து பொருந்துமாப்போலே பிரிந்து கூடாவிடில் இரண்டு தர்மியும் அழியுமளவாக இத்தை யநுஸந்தித்து, இவர்களுடைய பந்துவர்க்கமானது, சிறுப்பெண்களை யிழக்கவொண்ணாது, இப்படி பிறந்து நின்றபின்பு இனி போக்கடியென்? என்று

---

பத்தாம்பாட்டு. (சீதை இத்யாதி) வீதி - தெரு. வாய் - இடம் மழலை - இளமை வாய்-ஸ்வரம். (சீதைவாயித்யாதி கோதைவாயாலே சொல்லப்பட்ட தமிழென்று விஶேஷித்தது-நினைத்து சொல்லுகையன்றிக்கே பகவதநுபவம் வழிந்த சொல்லென்றபடி ... ... ௧௦.

ஜீயர்திருவடிகளே சரணம்.

பார்த்து, இவர்களைக்கொண்டுபோய் நிலவறைகளிலே யடைக்க; அவர்களும், பிரிவாற்றமாட்டாமே, (க) "ఉపవాసకృశాంగీ నాన్" "உபவாஸக்ருஶாம்தீநாம்" என்று சொல்லுகிறபடியே ஆற்றாமையெல்லா முடையராய், இவனும், (௨) "నమాంసంరాఘవో భుఙ్క్తే" "நமாம்ஸம் ராகவோ புங்க்தே" என்றும், (௩) "నైవదంశాన్నమశకాన్" "நைவதம்ஶாந்நமஶகாந்" என்றும் - பெருமாள் கடித்ததும் ஊர்ந்ததும் அறியாதேயிருந்தாப்போலேயிருந்தது; அதுக்கடியென்னென்னில்; (௩) [త్వద్గతేనాన్తరాత్మనా - த்வத்கதேநாந்தராத்மநா] பரகாய ப்ரவேஶம் பண்ணியிருப்பார்க்கும் ஒன்று தெரியுமோ, தமக்குணர்த்தி யுண்டாகிலன்றோ அவையறியவல்லராவது என்னும்படியாய், இவர்களொருக்கால் உறங்காதிருக்கில், (௪) "అనిద్రస్సతతమ్" "அநித்ரஸ்ஸததம்" என்னும்படியாய், இத்தலை (௫) "ఊర్ధ్వంమాసాన్నజీవిష్యే" "ஊர்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே" என்னில்; (௬) "నజీవేయంక్షణమపి" "நஜீவேயம்க்ஷணமபி" என்கிறபடியே ஒருக்ஷணமும் ஜீவிக்கமாட்டாதபடியிறே அவன்படி. இப்படி இரண்டுதலைக்கும ஆற்றாமை கரைபுரண்டிருக்க, பெண்களுடைய தஶையை யநுஸந்தித்த பித்ராதிகள், இவர்களை நாம் முடிய நிரோதிக்கில் இழக்குமத்தனையாயிருந்தது, நாமேசேர்த்துவிட்டோமாக வொண்ணாது, இனி யிங்ஙனே ஒரு வழியிடுவோம்-'பெண்கள் வாலாபத்துக்காகப் பனிநீராட'என்றொன்றுண்டு செய்துபோருவது, அத்தை இவர்கள் செய்வார்கள்; தங்கள் நினைவிலே யதுவும் பலிக்கிறது, நாம் இதுதன்னை யறிந்தோ மாகாதொழிகிறோம் என்று இவர்கள் தாங்கள் தங்களிலே ஸமயம் பண்ணியிருக்க; அவனும், பிரிந்தபோது தொடங்கி இவர்களிடைபாட்டம் ஆராயுமதுவேயிறேயவனுக்குப்பணி, ஆகையாலேதான்

அரு.—கோழிப்ரவேஶே. காய்ந்து பொருந்துமது-ம்ருத்பாண்டமாதல்; இரும்பாதல்; பொன் முதலானவை. அதாவது - ம்ருத்பாண்டம் பனைந்தறுத்தவுடனே கொட்டினால் அழியும், காய்ந்து கொட்டினால் நீரந்த்ரமாகப் பொருந்துமாப்போலேயும். இரும்பு முதலானவை மழுவெழக் காய்ந்தால் நீரந்த்ரமாகப் பொருந்துமாப்போலேயும், இவர்களும் கூடினவாறே யிருந்தால் உந்மஸ்தகரமாய் அழிவர்கள்; பிரிந்து கூடினால்

(க) ரா-ஸு-௧௫-௧௮. (௨) ரா-ஸு-௩௬-௪௧. (௩) ரா-ஸு-௩௬-௪௨.
(௪) ரா-ஸு-௩௬-௪௪. (௫) ரா-ஸு-௩௮-௬௮ (௬) ரா-ஸு-௬௬-௧௦

பிரிந்தபின்பு பிறந்தவையடைய பஞ்சலக்ஷங்குடிக்காட்டில்பெண்களுக்குத் தனித்தனியே ஆளிட்டு ஆராய்ந்து ஊரில்பிறந்த விசேஷங்களும் பிறக்கிறவையும் பிறக்கப்புகுகிறவையும் அறிந்து, இப்படி பனிநீராடப் போவதாக அத்யவஸித்திருந்தார்களென்று கேட்டு, தானும் ஒக்கப்போவதாகக்கணிசித்திருக்க; அவர்களும்; இவனோட்டை ஸம்ஶ்லேஷந்தான் பொறுக்கப்போகாது, அதுக்கு மேலே விஶ்லேஷவ்யஸநந்தான் பாடாற்றப்போகாது, ஸம்ஶ்லேஷமோ விஶ்லேஷாந்தமாயல்லதிராது, ஆனபின்பு, அவனோடே ஸம்ஶ்லேஷித்து பின்னைப்பிரிந்து படும்வ்யஸநத்தில், முன்புற்றை விரஹஜ்வரத்துக்குப் பரிஹாரமாக நீரிலேபோய் முழுகி அத்தால் வந்த ஆஶ்வாஸத்தைப் பெற்றிருக்கவமையும்; அதுசெய்யுமிடத்தில் நாமும்அவனுமாய்முன்புகுளித்துப்போரும் பொய்கையிலே போகில் அவனறிந்துவரும்; ஆனபின்பு, அவனறியாததொரு பொய்கை தேடிப்போகவேணும்; அது செய்யுமிடக்கில் திரளப்போகில் அவனறியும்; ஆனபின்பு, ஒருவரொருவராகப் போவோம்; போமிடத்திலும் வழிதெரியாதபடி இட்ட அடியை அழித்துக்கொண்டு போவோம் என்று எல்லாரும் போனார்கள்; அவ்வளவிலே, இவனும் இவர்களைப்பொறுகைக்கு *எதிர் சூழல் புக்குத் திரிவானொருவனிறே; இவர்கள் நினைவையறிந்து, இனித்தான், திருவயோத்யையிலுள்ளாரைப்போலே வழிமாறிப்போனால் அறிந்திலோம் என்று மீளும் இளிம்பனன்றே, (க) "इयेष पदमन्वेष्टुं चारणाचरिते पथि" "இயேஷபதமந்வேஷ்டும்சாரணாசரிதே பதி" என்கிறபடியே அடியொத்தினான்; இவன்தான் (உ) "இருளன்னமாமேனி" என்கிறபடியே இருளோடே விகல்பிக்கலாயிறே திருமேனியிருப்பது, ஆகையால் சாயாவானை சாயை பின்

நன்றாகக்கூடி தரிப்பர்களென்றபடி. அதுவும் ஸம்ஶ்லேஷமும் குடிஸமூஹத்தைப்பற்ற (குடிக்காடு) என்கிறது. பிறந்த விசேஷங்களாவது - நிலவறைகளிலே பெண்களையடைத்தது. பிறக்கிறவைகளாவது -பித்ராதிகள் அவர்களை நீராடச்சொன்னவைகள். பிறக்கப்புகுகிறவைகள் பெண்கள் நீராடப்போகிறவை திருவடி பிராட்டியைத்தேட அடியொத்தினைப்போலே அடியொத்திப்போனான், அடியொத்திப்போனால் அவர்கள் அறியார்களோவென்ன;அருளிச்செய்கிறார் (இவன்றானித்யாதி.)

(க) ரா-ஸு-க-க. (உ) பெரியதிரு-உரு

செல்லுமாப்போலே, இவர்கள்நிழலிலே யொதுங்கிப்போய் முற்பட்டுக் கரையைப்பற்றினான்; இவர்களும் இடைப்பெண்களாகையாலே பரியட்டங்களையும் ஆபரணங்களையுமுடைய கரையிலேயிட்டுவைத்துப் போய் ஜலத்திலே அவகாஹித்தார்கள்; அவ்வளவிலே இவற்றையடைய வாரிக்கொண்டு பெரியவேகத்தோடே போய்க் குருந்தின்மேலே யேறித் தன்னைத்தெரியாதபடி மறைய நின்றான்; இவர்களும், கரையிலேயேறிப்பார்த்தவிடத்தில் அவை காணாமையாலே "இருந்தபடியென்" என்று துணுக்கென்று, நம்முடன்கூட வந்தாரொருவருமுண்டோ, இது ஆகாஶம்கொண்டதோ, திக்குகள் கொண்டதோ, இக்குளம் கொண்டதோ, க்ருஷ்ணன் கொண்டானோ என்று இங்ஙனே கலங்கி, (க) "[Grantha text]" "கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம்" என்கிறபடியே திருவடி-முன்னேயிருந்து வார்த்தைசொல்லாநிற்கச்செய்தேயும் இது இந்நிலத்தில் ஸம்பவிப்பதொன்றல்ல என்றிருந்தபடியாலே இதுசித்தஸ்கலநம் பிறந்ததோஎன்றும், (உ) "[Grantha text]" "உந்மாதஜோவிகாரோவாஸ்யா கிம்ப்ரக்ருதிஷ்ணிகா" என்கிறபடியே - இது உந்மாதமோ, ப்ரக்ருதிவிகாரம்பிறந்ததோ, இதிருந்தபடியென்னென்று ஶங்கித்துபின்பு தெளிந்தாப்போலே, இவர்களும் அநேகத்தை ஶங்கித்து; இவர்கள் எங்கும் பரக்க பரக்க என்னப்பார்த்துக்கொண்டு வாராநிற்க; இவனைக்குருந்தின்மேலே கண்டார்கள்; கண்டவநந்தரம் "இவன் நம்மை மடிபிடித்துவந்தான், நாமும் இவனை மடிபிடித்து வாங்கினோமாம்விரகேதோ" என்று பார்த்து, இவனை இரப்பார், எத்துவார், வாழ்த்துவார், சீறுவாராய், இவனை இப்படி தீம்பு செய்யப் பெற்றுவிட்ட தாயுமொருத்தியே! என்று அவளை வெறுப்பார். தங்கள் ஆற்றாமையையறிவிப்பாராய், இப்படி பஹு-

மடிபிடித்து-சாடு புடவைக்காக வந்தானென்றர்த்தம்; சண்டையிட-த்வநி. "தொழுதோம்" என்றத்தைப்பற்ற (இரப்பார்) என்றது. "மதுவின்துழாய்முடிமாலே" இத்யாதியைப்பற்ற (எத்துவார்) என்றது "கூத்தாடவல்லவெங்கோவே" என்கையாலே-வாழ்த்துகை விதித்தம். "குரக்கரசு" "மசிமையிலீ" என்கையாலே (சீறுவார்) என்றது "அஞ்சவுரப்பாள்" இத்யாதியைப்பற்ற. (இவனை) என்றது. "தடத்தவிழ்தாமரை"

(க) ரா-ஸு-௩௪-௨௩. (உ) ரா-ஸு-௩௪௨௪.

ப்ராகாரங்களாலும் அநுவர்த்திக்க; அவனும், பரியட்டங்களும் கொடுத்து ஸம்ஶ்லேஷித்தானாய்த் தலைக்கட்டுகிறது ... *

கோழியழைப்பதன்முன்னம் குடைந்துநீராடுவான்போந்தோம்
ஆழியஞ்செல்வனெழுந்தான் அரவணைமேல்பள்ளிகொண்டாய்
ஏழமையாற்றவும்பட்டோம் இனியென்றும்பொய்கைக்குவாரோம்
தோழியும்நானும்தொழுதோம் துகிலைப்பணித்தருளாயே. (க)

ப - ரை. அரவணைமேல்-திருவநந்தாழ்வானாகிற திருப்பள்ளியிலே, பள்ளிகொண்டாய் - திருக்கண்வளருமவனே, குடைந்து - நன்றாகப்படிந்து, நீராடுவான் - நீராடுகைக்காக, கோழியழைப்பதன் முன்னம்-கோழி கூவுவதற்குமுன்னே, போந்தோம் - பொய்கைக்கு வந்தோம்; இப்போதோ வென்றால் செல்வன் - ஸ்ரீமானான நாராயணன் பிராட்டியோடு தன்பக்கல் ஸந்நிதிபண்ணும்படியான ஸம்பத்தையுடையனான. ஆழியன்-ஸூர்யன், எழுந்தான் - உதயமானான்; நாங்கள் உன்னாலே. ஆற்றவும் - மிகவும், ஏழமைப்பட்டோம் - இளிம்புபட்டோம்; பொய்கைக்கு - இந்த தடாகத்துக்கு, இனி - இனிமேல், என்றும் - ஒருநாளும், வாரோம் - வர மாட்டோம், தோழியும் - என்னுடைய தோழியும் நானும் - நானுமாக. தொழுதோம்—, துகிலை - எங்கள் சேலைகளை, பணித்தருளாய் - க்ருபை செய்தருளவேணும்.

வ்யா.—முதற்பாட்டு. (கோழியித்யாதி) நாங்கள் ஒன்றை நினைத்துவர அது ஒன்றாய் பலித்தபடி கண்டாயே; க்ருஷ்ணன் தான் ராத்ரிமுற்கூறெல்லாம் பெண்களுடைய முலைகளோடும் தோள்களோடும் பொருது, உறங்குவது பிற்கூற்றிலே யாகையாலே, இக்காலத்திலே இவன்உணராளஎன்றது பற்றாசாக வாய்த்து இவர்கள் போந்தது; இவர்கள் நினைவிதுவானாலும் கோழி கூவினவாறே யுணருவா னொருவனாய்த்து. தாங்கள் உறக்க வுறங்கிக் கோழியுணர்த்த வுணர்ந்து போரும்படியைக்கண்டு அந்வயவ்யதிரேகங்களிரண்டும் அறிந்தார்ய்த்துப்போந்தது. (அழைப்

இத்யாதியைப்பற்ற(தங்களார்த்தியை யறிவிப்பாராய்)என்றது மேலில் திருமொழியிலே விஶ்லேஷித்த கூடலிழைக்கையாலே இத்திருமொழியிலே ஸம்ஶ்லேஷம் அர்த்தாத்ஸித்தம்.

முதற்பாட்டு. (கோழியித்யாதி) அது ஒன்றாய் என்றது-வேறொன்றாயென்றபடி. இவர்கள் நினைத்ததேது, பலித்ததேதென்ன; அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன்றானித்யாதி.) கோழியழைப்பதற்கு முன்னே

பதன் முன்னம்) இவன்றன்னைத் துடைதட்டி யெழுப்புவாரைப் போலே கோழிகூவியெழுப்ப வேண்டும்படியாய்த்து நித்ராபரவசனாய்க் கிடக்கும்படி. இப்படி நம்மை மறைத்து நாமுணருவதற்கு முன்னே நீங்கள் போந்தது என்னகாரியத்துக்குத்தானென்றான்; (குடைந்துநீராடுவான் போந்தோம்) (க) "ஸர்வஸ்வதாபஹே" "ஸாயுமவகாஹதே" என்னுமாப்போலே உன்னோட்டை விரஹதாபமெல்லாமாறும்படி குளிக்கப்போந்தோம். உன்வரவை நினைத்துப்போந்தோமல்லோம், நீ வருவதற்குமுன்னே குளித்து மீளவேணுமென்னும் மநோரதத்தோடே போந்தோம். ஆனால் அதுக்கு வந்ததென், செய்யலாகாதோ என்று அவனும் ஒன்றை நினைத்தான்; அதாவது - தமிழர், கலவியை "சுனையாடல்" என்று ஒருபேரையிட்டுப் போருவர்கள்; அத்தைப்பற்ற தன் அபிமத ஸித்திக்குடலாகச் சொன்னவன்; உனக்கு அது செய்யவொண்ணாதுகாண், உன் நினைவையெண்ணி வந்து தோற்றினான்காண் ஸ்ரீமான் ஆதித்யனென்கிறார்கள் (ஆழியன் செல்வனெழுந்தான்) கடலிலே முழுகி எழுவாரைப்போலே தோற்றினானென்னுதல்; அன்றிக்கே, மண்டலத்தைச்சொல்லுதல்; ஆதித்ய ரதத்தைச்சொல்லுதல். (செல்வன்) ஸ்ரீயःபதியானநாராயணன் தன்பக்கலிலே பிராட்டியோடே ஸந்நிதி பண்ணும்படியான ஸம்பத்தையுடையவன். அது பின்னே ஆர்க்கழகு.

---

நீராடப்போரவேணுமென்று நினைத்துப் புறப்பட்டார்களாகில், இவன் பின்னைவந்தபடி என்னென்ன; அருளிச்செய்கிறார் (இவர்களித்யாதி) அதாவது - இவர்கள் இப்படி நினைத்துப் புறப்பட்டார்களேயாகிலும் உடனே கோழியும்கூவி. அவனும் உணர்ந்துவந்தானென்று தாத்பர்யம். உறங்குகையும் உணருகையும் அறிந்தபடி எப்படி யென்ன; அருளிச்செய்கிறார் (தாங்களுறக்கவித்யாதி.) நீயுணருவதற்கு முன்னம் என்றதே "கோழியழைப்பதன்முன்னம்" என்று விசேஷித்தபோதே - கோழி கூவுவதற்கு முன்பு இவனுக்கு உறக்கமுண்டாகையும். கோழி கூவினாலும் உணருமென்றபடியாய்த்தே, இதறிந்தபடி யென் இவர்களென்ன; அருளிச்செய்கிறார் (தாங்களுறக்கவித்யாதி) தாங்களுறக்க-தங்களோடேகூடியிருக்கிறபோது உறங்குகை. அந்வயம்-உறங்குகை; வ்யதிரேகம் உணருகை. குடைந்து-உள்புக்கு. ஆழியன்செல்வன்-ஆதித்யன். அதுபின்னே

---

(க) ரா-ஆ-கசு-௩௦:

உங்களுடைய அங்கப்ரத்யங்கங்களை அழகிதாகக்கண்டநுபவிக்கைக்குடலாகிறது, நீங்கள் தான் ஒருகார்யத்திலே உபக்ரமிக்கும்போது அதுசெய்து தலைக்கட்டுகைக்கு வேண்டும்போதறிந்தன்றோ புறப்படுவது. நீங்களாரை நினைத்துப் போந்திகோளென்ன; (அரவணைமேல் பள்ளிகொண்டாய்) உன்னுறக்கத்தை மெய்யென்று போந்தோம். (க) "விநதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின்கீழ் வருவானை" என்கிறபடியே இவ்வவதாரந்தான் இருபுரியூட்டியிருக்கையாலே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினபடியும் தங்களுக்கு விசதமாகச் சொல்லிற்றாகவுமாம். அங்ஙனன்றிக்கே, திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளினபடியைநினைத்துச் சொல்லிற்றாகவுமாம். அங்குக் கண்வளர்ந்தருளினபடியாகில் உன்னுடைய ரக்ஷணத்தை விஸ்வஸித்துப்போந்தோமென்கிறார்களாகிறது; இங்கே பள்ளிகொண்டருளினபடியாகில் படுக்கைவாய்ப்பாலே நீயுணராதே யுறங்குவதி யென்னுமத்தைப்பற்றப் போந்தோமென்கிறது. அவன் உறங்கினானாகில் அவ்வுறக்கத்தையநுஸந்திப்பார்கள்: உணர்ந்தானாகில் அத்தையநுஸந்திப்பார்கள்; வேறொன்றறியார்களே. நம்முறக்கத்தை விஸ்வஸித்துப்போந்த வுங்களுக்கு இப்போது வந்ததென்னென்ன; (எழுமையாற்றவும் பட்டோம்) அழகிதாக இளிப்புபட்டோம். ஆகில் இனியிதுக்குமேல் வருவதென்? (ஆற்றவும்) மிகவும். நீ நெடுநாள் எங்கள்கையில் பட்டதெல்லாம் ஒருக்ஷணத்திலே நாங்கள் உன்கையிலே பட்டோமென்கிறார்கள். ஆகில் இனியிதுக்குப் பரிஹாரமுண்டோ, (*) అవశ్యమనుభోక్తవ్యమ్ - அவஸ்ய

---

ஆர்க்கழகென்றது - ஆர்க்கு நல்லதென்றபடி. ஒருகார்யத்திலே உபக்ரமிக்கும் போதென்றது - நம்மையறியாமல் நீராடவென்று உபக்ரமிக்கும்போதென்றபடி. போதறிந்தன்றோ புறப்படுவதென்றது - ஏற்கவே புறப்படவேண்டாவோ வென்றபடி. அதாவது - கோழி கூவுவதற்குமுன்னே புறப்படுகிறோமென்னாதே, அதுக்குமுன்னே புறப்படவேண்டாவோ வென்றபடி. ஆரைநினைத்து - எத்தைநினைத்து. க்ருஷ்ணனுக்குத் திருவநந்தாழ்வானுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (இவ்வவதாரமித்யாதி.) இருபுரி - மநுஷ்யத்வே பரத்வம். உன்னுடைய ரக்ஷணத்தை விஸ்வஸித்துப் போந்தோமென்றது - ஆஸ்ரிதரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவனன்றோ, நம்மை நலியப்போகிறானோ என்று விஸ்வஸித்துப் போந்தோமென்றபடி. இத்தால்-அவனுறக்கத்தோடு உணர்த்தியோடு வாசியறத் தங்களுக்கு ரக்ஷகமென்றிருப்பார்கள் என்னுமத்தை ஸ்வா

---

(க) ௪௪-ரு.

மநுபோக்தவ்யமன்றோ, அத்தைத் தப்பப்போமோ இனி. நீங்கள் தான் இதுக்குப்போக்கடியாக நினைத்திருந்ததென்?" என்றான்; இதுக்குப் போக்கடியற்றுப் போகவேணுமோ (பொய்கைக்கு வாரோம்) ஊரில்தானே "பெண்கள்கிடாய், க்ருஷ்ணன் கிடாய்" என்று நியமிக்கையாலே, உனக்குத் தோற்றிற்றுச் செய்யவொண்ணாது, பொய்கையில்தானே வாரோம்; இத்தனையன்றோ வென்றார்கள். "வாரோம்" என்று சொல்லியன்றோ நீங்கள் வருவதென்றான்; (என்றும் வாரோம்) என்றார்கள். "என்றும் வாரோம்" என்று சொல்லியன்றோ என்றும் வருவது என்றான்; (இனியென்றும் பொய்கைக்கு வாரோம்) இவர்கள் "வாரோம் - இனி" என்றவாறே, தப்பவிழுந்ததாகாதே! என்று அஞ்சி நம்மையும் இவர்களையும் சேரவிடுவாரோ என்று பார்த்தான்; இரண்டுதலையையும் சேரவிடுகைக்கு பரிகாரம் கைகண்டு வைத்தோம், இனி நம்மையும் இவர்களையும் சேரவிடுகைக்கு அஞ்சலியல்லதில்லை என்றறியுமே. அது பார்த்துக்கொள்ளுகிறோம், நீங்கள் என்னையறியாமல் போந்ததுக்கு பரிஹாரமாகக் கும்பிடுங்கோளென்றான்; என்றவாறே, ஒரு கையாலே கும்பிட்டார்கள்; அதொண்ணாது. இரண்டு கையாலும் கும்பிடுங்கோளென்றான், ஆனால் (தோழியும் நானும் தொழுதோம்) அதுபோராது. நாலு கையாலும் தொழவேணும் என்றான்; (தோழியும் நானும்தொழுதோம்) இவர்கள் தொழச்செய்தேயும் கொடாதே "ஆந்ருஸம்ஸ்யம் கொண்டாடியிருப்பார் பக்கலன்றோ இது பலிப்பது, ப்ரணயிநிவிஷயத்தில் வந்தால் நம் அபிமதம் பெற்றன்றோ கொடுப்பது என்று பின்னையும் ஒரு நிலை நின்றான்; அந்த ப்ரணயித்வத்தைவிடாய், அஞ்சலிக்கு பலஸித்தியுண்டுகாண், எங்கள் துகிலைத் தந்தருள், உன் நினைவொழியவும் பலிப்பதொன்றன்றோ அது. (க) "ಅಞ್ಜಲಿಃಪರಮಾಮುದ್ರಾ" "அஞ்ஜலிःபரமாமுத்ரா" என்னக்கடவதிறே. ... ... ... ... ... ... (க)

பதேஸமாக வருளிச்செய்கிறார் (அவனுறங்கிஞனுகிலித்யாதி.) ஆற்றவும்- மிகவும். "என்றும் வாரோம்" என்றது-ஒருநாளும் வாரோமென்றபடி. அது-வாராதது. தொழுதோம் - ஆளிலே ஒருவையாகத் தொழுகை. அவன் நினைவொழியத் திருநாமத்துக்குப் படைவை சுரந்தாப்போலே அஞ்சலிக்கும் பலிக்குமென்றபடி. ... ... ... ... ... க

(க) காருட-பு-கக-உ௬.

இதுவென்புகுந்ததிங்குஅந்தோ! இப்பொய்கைக்கெவ்வாறுவந்தாய்?
மதுவின்றுழாய்முடிமாலே! மாயனே!யெங்களமுதே!
விதியின்மையாலதுமாட்டோம் வித்தகப்பிள்ளாய்! விரையேல்
குதிகொண்டரவில்நடித்தாய்! குருந்திடைக்கூறைபணியாய். (௨)

ப - ரை. இங்கு - இங்கே, புகுந்தது இது - புகுந்தவிதுக்கு, என் - ஹேதுவென்; அந்தோ!—, இப்பொய்கைக்கு—, எவ்வாறு-எவ்வழியாலே, வந்தாய்—; மது - தேன்மாறாததாய், இன் - போக்யமாயிருந்துள்ள துழாய் - திருத்துழாய்மாலை சூடிய, முடி - திருவபிஷேகத்தையுடையனாய் மாலே - ஆஸ்ரிதர்பக்கல் வ்யாமோஹத்தையுடையனாய், மாயனே - ஆஸ்சர்யசக்தியுக்தனாய், எங்கள் - எங்களுக்கு, அமுதே - நிரவதிக போக்யதையையுடையவனே, விதியின்மையால் - விதியில்லாமையாலே. அது-ஸம்ச்லேஷத்துக்கு, மாட்டோம் - க்ஷமிக்கமாட்டோம்; வித்தகன் - ஸமர்த்தனாய், பிள்ளாய் - பாலனானவனே விரையேல் - த்வரியாதே கொள்; அரவில் - காளியனென்னும் பாம்பின் தலையில், குதிகொண்டு - குதித்து நடித்தாய் - ந்ருத்தம்பண்ணினவனே, குருந்திடை - குருந்த மரத்திலிருக்கிற, கூறை - சேலைகளை, பணியாய் - கொடுத்தருளவேணும்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (இதுவித்யாதி) தங்கள் அபிமதம் பெற்றுப்போகப் பாராநின்றார்கள்; நம் அபிமதந்தான் நினைக்கிறிலர்கள் இவர்கள், போக்கிருந்தபடியென்? இங்ஙனல்ல செய்வது என்று பார்த்து குருந்தினின்று மிழிந்து ஶேஷித்தபரியட்டங்களை வாரிக்கொண்டு சுழல்காற்றுப்போலே யெங்குமொக்க வ்யாபரித்து, இன்னது செய்தான் என்று இவர்களுக்கு ப்ரதிபத்தி பண்ணவொண்ணாதபடி பரியட்டத்தில்போலிருக்க நெஞ்சிலும் வ்யாபரித்துக்கடுகப்போய், குருந்தின்மேலேயேறி மறையவிருந்தான்; இவர்களும் கரையிலேபோந்தேறி, ஒன்றுங்காணாமையாலே ஸ்தப்தைகளாய் (இதுவென் புகுந்ததிங்கு) மின்னும்த இடிவிழுந்து நிற்கக்கண்டோம், இனி இங்குப்புகுந்ததுதானென்? நீ ஸ்தப்தனாயிராநின்றாய், அவ்விஷய ஸ்ரவணம் உனக்குண்டாய்த்தோ என்று கேட்கப்பண்ணும்விஷயம் கண்ணால்கண்டால் பேசாதிருக்கப்போமோ. ஸ்ரவண மாத்ரத்திலே யழிக்கும் விஷயம்

இரண்டாம்பாட்டு. (இதுவித்யாதி) போலிருக்க நெஞ்சிலுமென்றது - பரியட்டத்தைக்கொண்டுபோனாப்போலே நெஞ்சையும் அபஹரித்தானென்றபடி. அவன் கொண்டுபோனதறிந்திருக்கக் கேட்பானென்னென்ன; கலக்கத்தின் கார்யமென்னுமத்தை ஸ்ருத்யர்த்தத்தை யுட்கொண்டருளிச்செய்கிறார் (நீஸ்தப்தனாயித்யாதி) விவரணம் (ஸ்ரவண

ஸாக்ஷாத்கரித்தால் கலங்காதிருக்கவொட்டாதிறே. குணஶ்ரவணத்தாலே அழிக்கும்விஷயம் தீம்புக்கிலக்கானால் பேசாதிருக்கப் போகாதிறே. (அந்தோ) நம் நினைவு அவனுக்குடலாவதே! நாம் இவனுக்த முன்னே வரவேணும் என்று போந்தோமானோம், இவன் நமக்கு முன்னே கோலிவந்து நிற்பதே!. நீங்கள் இழவாளராய் நோவுபடுகைக்கு இப்போது விஶேஷித்து வந்ததென்? பண்டுதான் நான் உங்களோடு வரேனோ என்ன (இப்பொய் *கைக்கெவ்வாறு வந்தாய்) நீயும் நாங்களுமாய் ஜலக்ரீடைபண்ணிப்போரும் பொய்கையோ இது, இதறிந்து நீவந்தபடி எங்ஙனே, நாங்கள் உன்னைக்கூடக்கொண்டு போந்திலோம், இட்ட அடியையும் அழித்தன்றோ நாங்கள் போந்தது, நீயிங்குவந்தவழியென். (இப்பொய்கைக் கெவ்வாறு வந்தாய்) ஆனை நின்ற பொய்கையாய் வந்தாயல்லை, ஆர்த்தநாதம் வழிகாட்ட வந்தாயல்லை, எவ்வாறு வந்தாய். (இப்பொய்கைக் கெவ்வாறு வந்தாய்) காளியன் கிடந்த பொய்கையாய் வந்தாயல்லை; முதலைகிடந்த பொய்கையாய் வந்தாயல்லையே. அநுகூலன் கிடந்தபொய்கையாய் வந்தாயல்லை; ப்ரதிகூலன் கிடந்த பொய்கையாய் வந்தாயல்லை; நீ வந்தவழியென்? அது கொடு காரியமென், வந்து கொடுநின்றோமே. பலம் கைப்பட்டால் ஸாதநம் நிரூபிக்கக்கடவதோ என்றான்; இவர்கள் தோல்வியையும் தன் ஜயத்தையும் அநுஸந்தித்து மேனாணித்தமை தோற்ற மிகைத்து வார்த்தை சொல்லத்தடங்கினான்; பொகடு. இவன் கையிலே அகப்பட்டோம், இங்ஙனன்று இது வாங்குவது, ஸ்தவப்ரியன், இவனை யேத்திக்கொள்வோமென்று பார்த்து ஏத்தத்துடங்கினார்கள் (மதுவித்பாதி) ஆதிராஜ்யஸூசகமாக வைத்த வளையத்தோடே கூட நித்யஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்து, தன்மேன்மை தோற்ற பரமபதத்திலே ஸர்வேஶ்வரனாயிருக்குமிருப்பைச்சொல்லுகிறது; அவ்விருப்பை இவ்வருகுள்ளாரும் பெறவேணுமென்

---

மாத்ரத்திலே) என்று தாத்பர்யம். (குணஶ்ரவணத்தாலே) என்ற வாக்யம் - தாத்பர்யாந்தரம். குணஶ்ரவணத்தாலே யென்றது — நியந்த்ருத்வரூபகுண ஶ்ரவணத்தாலே யென்றபடி. வெறுமனிருக்கப்போமோ வென்றபடி.

ஆறு - வழி. எவ்வாறு - எந்தப்ரகாரத்தாலே என்னுதல்; எவ்வழியாலே யென்னுதல். "எவ்வாறு" என்றதுக்குத் தாத்பர்யம் (இட்ட

னும் வாத்ஸல்யத்தாலே அகர்மவஶ்யனானதான் கர்மவஶ்யரோடு ஸஜாதீயனாய் வந்தவதரித்து இடையருக்கு ஏவிக்கொள்ளலாம்படி பவ்யனாய்நின்ற ஆஶ்சர்யத்தைச் சொல்லுகிறது. (எங்களமுதே) அத்தனை பொதுவான நிலையன்றிக்கே எங்களுக்கே ஸ்வம்மாய் நிரவதிக போக்யதையையுடையனாய் நிற்கிறநிலை. தேவர்களுக்கு உப்புச்சாறுபோலன்றிக்கே, எங்களுக்குக்கூறான அம்ருதமாய்த்து. நீங்கள்தான் நம்மேன்மையறிந்திகோளே, உங்களுக்கே ஸ்வம்மானமை தோற்றச்சொன்னிகோளே, தந்தாமது என்றறிந்தால் தந்தாமுடைமை மங்காமல் நோக்கி விநியோகங்கொள்ள வேண்டாவோ என்றான்; அதெென்னன்புதென்ன; உங்கள் கண்களாலே என்னைக்கடாக்ஷித்து என்ஸத்தையை யுண்டாக்கி நீங்களும் நானுமாக அநுபவிக்கப் பார்க்கவாகாதோ என்றான்; (விதியின்மையாலது மாட்டோம்) அது பொல்லாதோ, அழகிய தொன்றன்றோ; ஆகிலும் எங்கள் பாக்யஹாநியாலே அதுமாட்டுகிறிலோம் என்றார்கள். “அது” என்றார்களிறே அவன் நினைவைத் தாங்களறிந்தமை தோற்ற, ஆகில் நானும் என்னுடைய பாக்யஹாநியாலே பரியட்டம் தரமாட்டுகிறிலேனென்று, இவற்றையுங் கொண்டு அருங்கொம்பிலே போயேறினான்; இவனுக்கு பாக்யஹாநியாவது - அவர்களுடன் கூடாமையிறே. (வித்தகப் பிள்ளாய் விரையேல்) எங்கள் ஸத்தையையும் அழிக்கப்பாராதேகிடாய். எங்கள் போகத்துக்கு விச்சேதம் பண்ணினையாகிலும் எங்கள் ஸத்தையை யழிக்கப்பாராதே கொள், நான் விரைந்து எங்கே என்ன ஸாஹஸம் செய்யக்கண்டிகோளென்றான்; (குதிகொண்டரவில் நடித்தாய்)(க)“ஏகதாதுவிநாராமம்” “ஏகதாதுவிநாராமம்” என்கிறபடியே - தமயனார் க்ஷணம்பேரநிற்கப் பாப்பின்வாயிலே விழக்கடவ உனக்குஇவை சாலஅபூர்வமோ, அதுகிடக்கிடாயென்

அடியையும்) என்று ஸ்வாபதேஶம்; ஆணையென்று பொருள். (பொதுவான) - பரமபதத்திலுள்ளார்க்கும் அவதாரத்திலுள்ளார்க்கும் பொதுவான நிலையன்றிக்கே என்றபடி (தேவர்களுக்கு) இத்யாதி வாக்யம் - தாத்பர்யாந்தரம். வித்தகன்-ஸமர்த்தன். விரையேல் - அருங்கொம்பிலேறாதே. ஏறினால் ஸத்தை யழியுமென்றபடி. குதிகொண்டு - காளியன் தலையிலே குதித்துக்கொண்டு. நடித்தாய்-ந்ருத்தம்பண்ணினாய். (அதுகிடக்கிடாய்)

(க) வி·பு·இ·எ·க.

கிறார்கள். நம்கையிலே காணிலிறே இவர்கள்வேண்டுவதுஎன்று பார்த்து பரிபட்டங்களைக் குருந்திலேயிட்டு வைத்துக் கையைத் தட்டி, என்கையிலுண்டோ நான்தர என்றான்; (குருந்திடைக் கூறைபணியாய்) உன்கையிலில்லை, குருந்தின்மேலே கிடக்கிறவற்றைத் தா என்கிறார்கள். எங்கேனும் கிடக்கிலும் இவன் திருவுள்ளமுண்டாகிலல்லது ஸித்தியாதென்றபடி. ... உ

எல்லே! ஈதென்ன இளமை? எம்மனைமார்காணிலொட்டார்
பொல்லாங்கு ஈதென்றுகருதாய் பூங்குருந்தேறியிருத்தி
வில்லாலிலங்கையழித்தாய்! நீவேண்டியதெல்லாந்தருவோம்
பல்லாருங்காணுமேபோவோம் பட்டைப்பணித்தருளாயே. (ரு)

ப - ரை. எல்லே - என்னே, ஈதென்ன விளமை - இதொரு பால்ய ப்ரவ்ருத்தி யிருக்கும்படி யென் என்று சொல்லி, எம்மனைமார் - எங்கள் தாய்மாரானவர்கள், காணில் - கண்டார்களானால், ஒட்டார் - பழிப்பர்; நீயோவென்றால், ஈது - எங்களைக்கண்டார் ஏசும்படி அம்மணமாக்கி விடுத்தவிது, பொல்லாங்கென்று - தீங்கான செயலென்று, கருதாய் - நினையாமல், பூ - புஷபித்திருந்துள்ள, குருந்து - குருந்தமரத்தின்மேல், ஏறியிருத்தி - ஏறிக்கொண்டிருக்கிறாய், வில்லால் - வில்லாலே, இலங்கை - லங்கையை அழித்தாய்- அழித்துப்பொகட்டவனே, நீ—, வேண்டியதெல்லாம் - விரும்புமவற்றையெல்லாம். தருவோம் - தருகிறோம்; பல்லாரும்- ஊரிலுள்ளபலரும், காணுமே - காணாமல். போவோம்-ஸம்ப்லேஷிககப் போம்படிக்கீடாக, பட்டை—, பணித்தருளாய் - தந்தருளவேணும்

வ்யா.—மூன்றாம்பாட்டு. (எல்லேயித்யாதி) இவர்கள் நெடும்போது நீரிலேநின்று நோவுபடச்செய்தே இவர்கள் பரியட்டங்களையெல்லாம் வாரிக்கொண்டு குருந்தின்மேலே யிட்டு வைத்திருந்தான்; நாங்கள் நீரிலே நெடும்போது நின்று க்லேஶப்பட நீ பேசாதிருக்கிறதென்? பரியட்டங்களைத்தா என்ன; பரியட்டங்களைத்தர நீரில்நின்றும் கரையிலே போந்தேறுங்கோ ளென்றான்; அத்தை மெய்யென்று சிலர் கரையிலே போந்தேறினார்கள்; ஏறினவிவர்களுடைய அங்க ப்ரத்யங்கங்களை யூன்றப்பார்த்து ஸ்மிதம்பண்ணி, சில விலாஸசேஷ்டிதங்களைப் பண்ண; (எல்லேயீதென்னவிளமை) என்னே! இதொரு பாலிஶப்ரவ்ருத்திகளிருக்கும்படியென்! என்

எங்கள் பட்டைத்தாரா யென்கிறார்களென்று பூரிப்பது. ... உ

றார்கள். நான்பாலனாக, நீங்களோதான் பஞ்ச தஶவார்ஷிகவயஸ்கராய்ப் பரிமாறினிகோள், அதில் வந்தால் உங்களோடு என்னோடு வாசியுண்டோ. இரண்டு திறத்தாரும் ஒத்த பருவமானபின்பு பருவத்துக்கீடாகப் பரிமாற நீங்களுடன்பட்டிலிகோள் என்றான்; (எம்மனைமார்காணிலொட்டார்) நாங்கள் உடன்படாமையுண்டோ, எங்கள்பந்துக்கள் காணிலொட்டார்கள், என்றத்தாலேகாண் நாங்கள் மாட்டாதொழிகிறது என்ன; எனக்கும் ஒருதாயும் தமப்பனும் உறவுமுறையாரு மில்லையோ, நானேதேனும் காம்பற்று வானத்தினின்றும் விழுந்தேனோ. அவர்கள் உண்டாயிருக்கவன்றோ நானும் இங்ஙனே யிருக்கிறது, உங்களுக்கு அதில்லையாய்த்தேயென்றான்; எங்களைப்போலேயோ நீ என்றார்கள்; எனக்கு வாசியென்னென்ன; உனக்கு வாசியுண்டு (பொல்லாங்கீதென்று கருதாய்) நீபழி என்னப்பணைப்புதி, நாங்கள் பழிக்கு அஞ்சுவுதோம்; இதுகாண் உனக்கும் எங்களுக்கும் வாசி. (பூங்குருந்தேறியிருத்தி) நான் பழிக்கு அஞ்சேனாகிலும் உங்களுக்கு இது தரவேண்டுவதில்லையிறே யென்று குருந்தின்மேலே இவற்றையுங்கொண்டு அதில் பூப்பொருந்தினாப்போலே பொருந்தி, இழியக் கணிசியாதே யிருந்தான். (வில்லாலிலங்கையழித்தாய்) ஒருத்திக்காக, ப்ரஹ்மாதிகளுடைய அஸ்த்ரங்களுக்கும் அழியாதபடி வரபலத்தாலே பூண்கட்டினவூரை, மனிச்சுக்கேகாந்தமான வில்லாலே மூலையடியே வழிபோம்படி பண்ணினவுனக்கு இப்போது ஸ்வபாவம் வேறு பட்டபடியென். இப்போது என்ஸ்வபாவம் வேறுபட்டதில்லை, உங்கள் ஸ்வபாவமும் வேறுபட்டதில்லை, உங்கள் ஸ்வபாவமும் அப்படியே யிருக்கவேணும். நீங்கள் என் நினைவுக்கீடாக வரிலன்றோ நான் உங்கள் காரியஞ் செய்வது; அதிலும் ஒருகுறையுமில்லை, உன் அபேக்ஷிதமெல்லாம் செய்யக்கடவோம் என்றார்கள்; ஆகில் தரலாகாதோ என்று மடியையேற்றான்; (பல்லாரும்காணாமே போவோம்) இங்ஙனன்று காண்

மூன்றாம்பாட்டு. (எல்லேயித்யாதி) எல்லே - என்னே. எல்லே என்று - தோழியைப்பார்த்துச் சொலலிற்றாகவுமாம் எம்மனைமார் - எங்களன்னைமார் ;- தாய்மார். கருதாய் - நினையாய். கருதாய் - கருதுகிறாயில்லை. அப்படியே யிருக்கவேணும் - அந்தப்பிராட்டியைப்போலே யிருக்கவேணும். கீழ்வாக்ய விவரணம் (நீங்களித்யாதி.) மடியேற்கை

இதுசெய்வது, அதில் உருவ நடக்கும்படி செய்யவேணுங்காண், (பல்லாரும் காணமே போவோம்) என்றார்கள். பலர் காணிலுங் காண்கிறார்கள், தவிரிலும் தவிருகிறார்கள், நான் முந்துற முன்னம் கண்டேனே, ஆகில் போங்கோளென்றான்; (பட்டைப்பணித்தருளாயே) பிறர்முன்னே நாங்கள் நிற்கும்படி எங்களைப்பண்ணியருளாயே. ... ... ... ... ... ௩

பரக்கவிழித்தெங்கும்நோக்கிப் பலர்குடைந்தாடும்சுனையில்
அரக்கநில்லாக்கண்ணநீர்கள் அலமருகின்றவாபாராய்
இரக்கமேலொன்றுமிலாதாய்! இலங்கையழித்தபிரானே!
குரக்கரசாவதறிந்தோம் குருந்திடைக்கூறைபணியாய். (௪)

ப - ரை. இலங்கை அழித்தபிரானே—. எங்கும் - நாற்புறத்திலும், பரக்கவிழித்து - நன்றாக விழித்து, நோக்கி - பார்த்து, பலர் - பலஸ்த்ரீகள், குடைந்து ஆடும் - நன்றாக நீராடாநின்றுள்ள, சுனையில்-சுனையின் கரையிலே, கண்ணநீர்கள் - கண்கள்நீர்த்துளிகள், அரக்க - அடக்க, நில்லா - நில்லாதனவாய்க்கொண்டு, அலமருகின்றவா - தளும்புகிறபடியை, பாராய்—; ஒன்றும்-சற்றுமினும், இரக்கமிலாதாய்-இரக்கமில்லாதவனே, குரக்கு அரசாவது - நீ மரமேறவல்லார்க்குள் தலைவன் என்பதை, அறிந்தோம் - அறிந்துகொண்டோம்; ஆதலால், குருந்திடை - குருந்தமரத்திலுள்ள, கூறை - எங்கள் சேலைகளை, பணியாய் - தந்தருளவேணும்.

வ்யா.—நாலாம்பாட்டு. (பரக்கவித்யாதி) இவர்களும் நான் சொன்னதுக்கெல்லாம் மறுமாற்றம் சொல்லாநின்றார்கள், இங்ஙனன்று செய்வது, அச்சமுறுத்திக் காரியங்கொள்ள்வேணும் என்று பார்த்து; சிலர் வருகிறார்களாகக்கொண்டு, சுற்றிலே பார்த்து உடம்பை ஒடுக்குவது, திரியவும் சிலர் வருகிறார்களாகக் கொண்டு, அதுக்கும் கூசினுகை அத்திக்கிலேசிலதழைகளையிட்டு மறைப்பது, தழைப்புரையே எட்டிப்பார்ப்பது, இப்படிகளைக்

மடியிலேவந்தேறுங்கோளென்று கருத்து. பல்லாருங்காணமே போவோம் - பலர்கண்படாமல் ஏகாந்தமாக ஸம்ஶ்லேஷிக்கப்போவோம். ௩

நாலாம்பாட்டு (பரக்கவித்யாதி) "பலர்குடைந்தாடும் சுனையில் - பரக்கவிழித்தெங்கும் நோக்கி துணுக்கென்று கண்ணநீகள் - அரக்கநில்லாமல் அலமருகின்றவாபாராய்" என்று ஸப்தார்த்தம். இவர்கள் பரக்கவிழிக்கைக்கு ஹேதுவான அவன் வ்யாபாரத்தை அருளிச்செய்கிறார் இவர்களுமித்யாதி). "எங்கும்நோக்கி" என்றது - நோக்குகிறாயென்று

கொண்டு சிலர்க்கு பயாவஹமாயிருப்பன சிலவற்றைச் செய்யத் துடங்கினான்; அவ்விடந்தான் பலரும் வருமிடமாய் இவன் செய்கிற செயலுக்கு ஸம்பாவனையுள்ள விடமுமாயிருந்தது; ஸர்வ ஸாதாரணமான சுனையாய்த்து. இவனுடைய பயாவஹமான வ்யாபாரத்தாலும், ஸர்வஸாதாரணமான ப்ரதேஶமாகையாலும் துணுக்கென்று கண்ணநீர் விழவிடப் புக்கது; அதுதான் நாம் இவன்முன்னே செய்தோமாகிறதென், மறைக்கவேணுமென்று பார்த்து அமைப்பதாகக் கணிசித்தார்கள்; இவர்கள் நியமிக்கப் பார்த்தவிடத்திலும் நின்றதில்லை; அநந்தரம், ஆர்வருகிறாரோ என்னுமத்தாலும், கண்ணநீர் நில்லாமையாலும் கிடந்து துடிக்கப் புக்கார்கள்; நீ பரியட்டந்தரவேண்டா, அந்ய பரதை பாவிக்கிறத்தைத் தவிர்ந்து நாங்கள் படுகிற அலமாப்பைப்பாராய் என்கிறார்கள்.

இவர்கள் இப்படி சொல்லச்செய்தேயும் நிர்த்தயரைப்போலே பாராதே யிருந்தான்; (இரக்கமேலொன்று மிலாதாய்) இப்போது இரக்கமின்றிக்கே யிருக்கிறநீ, முன்பு ஒருத்திக்காக இலங்கையை யழியச்செய்து உபகரித்தவன். தனக்கே ஒருக்காலொருபடியும் மற்றொருபோது ஒருபடியுமாக வேறுபடுமோ ஸ்வபாவம், நமக்குள்ளது தன்னையும் இல்லையென்னு நின்றிகோளாகில், இனி யில்லையாயேவிட வமையாதோ என்னு, அவற்றையுங் கொண்டு ஒருகொம்பிலே தாவினான்; (குரக்கரசாவதறிந்தோம்) நீ மரமேற வல்லார்க்கு முதலியென்னுமிடம் நாங்களறிந்தோங்காண். அன்றிக்கே, காபேயமாகச் சிலவற்றைச் செய்யத்துடங்கினான்; (குரக்கரசாவதறிந்தோம்)என்கிறார்களாதல். கையில் பரியட்டங்களைக்குரு

---

ஈஶ்வரகர்த்ருகமாதல்; அன்றிக்கே, ஸ்வகர்த்ருகமாதல். அதாவது - அவன் நோக்கினது கொண்டு தாங்களும் பார்க்கிறார்களென்றபடி. அரக்க- அடக்க. ஹேது பூர்வகமாக ஶப்தார்த்தமருளிச் செய்கிறார் (அநந்தரமித்யாதி) அன்றிக்கே "நோக்கி" என்றத்தை "நோக்க" என்றாய், "பலர் குடைந்தாடும் சுனையில் - பரக்கவிழித்தெங்கும் நோக்க - அதினாலே, கண்ணநீர்கள் - அரக்கநில்லா - அலமருகின்றவா பாராய்" என்று இங்ஙனே ஶப்தார்த்தமாக்கி யருளிச்செய்கிறார் (நீபரியட்டமித்யாதி) அரக்கநில்லா - அமைக்கநில்லா. இரக்கம் - க்ருபை. இரக்கமேல் - இரக்க

-ந்திலே போகட்டு நம்மை யலையாதே நீங்களே ஏறி வாங்கிக்கொள்ளுங்கோ ளென்றான்; (தாக்கரசாவதறிந்தோம்) மரமேறுவார்க்கு நிர்வாஹகாரானோ தருவார், ஏறமாட்டாதாரோ தருவார். (௪)

காலைக்கதுவிடுகின்ற கயலோடுவாளைவிரவி
வேலைப்பிடித்தென்னைமார்களோட்டில் என்னவிளையாட்டோ
கோலச்சிற்றாடைபலவும் கொண்டுநீயேறியிராதே
கோலங்கரியபிரானே! குருந்திடைக்கூறைபணியாய். (ரு)

ப - ரை. கரிய - கறுத்த, கோலம் - திருமேனியையுடையனாய், பிரானே - எல்லார்க்கும் உபகாரகனானவனே, கயலொடு - கயல்மீனும், வாளை - வாளைமீனும், விரவி - தம்மில் ஒன்றாய்க்கூடி, காலைக்கதுவிடுகின்ற - காலைக்கடியாநின்றன; என்னைமார்கள் - எங்கள் தமயன்மார், நீயெங்களை வருத்துவதைக்கேள்விப்பட்டு, வேலை - வேலை, பிடித்து - பிடித்துக்கொண்டு, ஓட்டில் - உன்னைத்துரத்திவிட்டால், அது, என்ன விளையாட்டு - அழகிய விளையாட்டாய்த் தலைக்கட்டும்; நீ—, கோலம் - அழகிய, சிற்றாடை பலவும் - சிற்றாடைகளையெல்லாம், கொண்டு - வாரிக்கொண்டு, ஏறியிராதே - மரத்தின்மேல் ஏறியிராமல், குருந்திடை - குருந்தமரத்தி லுள்ள, கூறை - எங்கள் பட்டுச்சேலைகளை, பணியாய் - தந்தருளவேணும்.

அவ;—அஞ்சாம்பாட்டு. ஆந்தராளக் குடியிலே பிறந்தா ளொருத்தியுண்டு போலே காணும். ஈஶ்வரமர்மஜ்ஞையாயிருப்பாளாய் ஸ்ரீ கஜேந்த்ராழ்வான் ஆபந்நனாகத் தன்மேன்மை பாராதே அது இடர்பட்ட பொய்கையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து உதவி அதிபனைத்தைப்பரிஹரித்து, பின்னையும் ஏற்கவேவந்து பரிஹரிக்கப் பெற்றிலோம், நோவுபட்ட பின்ப வந்து பரிஹரித்த விதுவு மொன்றாய்த்தோ! என்று திருவுள்ளம் புண்பட்டிருக்கும்படியை யறிவாளொருத்தி, நீ பண்டு உன்னை யாஶ்ரயித்ததொன்றை ஒரு நீர்ப்புழுகலிய ஒருஜலசரஸத்வம் என்று பாராதேவந்து விழுந்தபடியறிதியே; இன்று அவ்வளவன்றிக்கே இரண்டுகிடாய் எங்களை நலிகிறதென்ன; பரிபட்டங்

---

மாகில். "பணியாய்" என்றதுக்கு முந்தின வர்த்தத்திலே அருளிச்செய்கிறார் (மரமேறுவாரித்யாதி.) ... ... ... ... ... ௪

அஞ்சாம்பாட்டு. (காலையித்யாதி) பரியட்டங்களைத் தரவேணுமென்று அபேக்ஷிக்கிறவர்கள், வாளையானது காலைக்கதுவுகிறதென்று இத்தைச் சொல்லுகிற தென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஆந்தராளக்

களையுங் கொண்டுவந்து விழுமென்று பார்த்து அத்தை முன்னிட்டுக்கொண்டு சொல்லுகிறாள்.

வ்யா;—(காலையித்யாதி) கயலோடு வாளையானது கலந்து காலைக்கதுவாநின்றது கிடாய். ஒன்று நலிய அன்று பட்டபாடறிதியே நீ, இப்போது இரண்டுகிடாய் நலிகிறது. (க)[అతన్ద్రితచమూపతిప్రహితహస్తమస్వీకృతప్రణీతమణిపాదుకమ్ - அதந்த்ரித சமூபதி ப்ரஹித ஹஸ்தமஸ்வீக்ருத ப்ரணீதமணிபாதுகம்] ஆஶ்ரிதன் கால் நொந்து கையெடுத்துக்கூப்பிட நம்மையும் காலும் பேணவோ என்று சேனை முதலியாரையும் கைவிட்டு, திருவடி நிலைகளையும் காற்கடைக்கொண்டு, நீ பட்டபாடறிதியே. (உ) * கானமர் வேழம்கையெடுத்தலறக்காவதன் காலினைக்கதுவ ஆனையின் துயாந்தீரப்புள்ளூர்ந்து சென்று நின்றாழிதொட்டிறே ரக்ஷித்தது, இப்போது இரண்டுகிடாய் நலிகிறது. அது பிறராலே வந்தநலிவாகையாலே பரிஹரித்தோம், இது நீங்களே விளைத்துக்கொண்டதொன்றன்றோ, அதுக்கு நானென் என்ன, மேன்மேலன சில விலாஸ சேஷ்டிதங்களைப்பண்ணத் தொடங்கினான்; (வேலையித்யாதி) நாங்கள் 'நெடும்போது நின்று நோவுபட நீ எங்கள் பரியட்டங்கள் தாராவிட்டவாறே பெண்கள்போய் உறவுமுறையார் காலிலே விழுந்தவாறே, அவர்கள் பின்னை ஸாயுதராய்க்கொண்டு வந்து உன்னையோடிப் பிடித்துக்கட்டி யிட்டுவைப்பார்கள், அப்போது பின்னை அழகிய விளையாட்டாய்த் தலைக்கட்டுமிறே. இப்போது நாங்கள் உன்கையில் படுகிறபாடன்றுகிடாய் நீ அவர்கள் கையிலே படுவது; அத்தனையே? எனக்கு பலித்தது, பலிக்கிறது, இப்போது கைப்பு தந்தவற்றைக் கொடுக்கிறதென் என்று அரையிலே யொன்றைச்சாத்துவது, தலையிலே பொன்றைக்கட்டுவது, உத்தரீயமாக ஒன்றையிடுவதாக, இப்படி தன் திருமே

குடியிலே இத்யாதி) ஆந்தராளக்குடி - முக்தரும் பத்தருமல்லாத முமுக்ஷு. அவன்கையெடுத்துக்கூப்பிட்டதுக்காக சேனைமுதலியார் கையையுதறிவிட்டது; அவன்கால் நொந்ததுக்காகத் திருவடி நிலைகளைக் காற்கடைக் கொண்டது கதுவுகை - கடிக்கை. கையும்காலும் நோவுபடவோ ரக்ஷிக்கிறதென்ன; ஜலசாலாத்வமென்று பாபாகே வந்து விழுந்தபடிக்கு ப்ரமாணம் (கானமர்வேழமித்யாதி) "அன்னமார்" தமையன்மார். ரு

(க) ர-ஸ்த ௲ ருள். (உ) தி-மொ-உ-ரு-க

ணிக்குப் பராபாகமாம்படி நாநாவர்ணமானவற்றைக் கொண்டு அலங்கரித்து, ஶேஷித்தவற்றைக் குருந்திலே யிட்டுவைத்து கண்டிகோளே நமக்குத் தகுதியாயிருந்தபடி, இத்தைக்கண்டவங்களுக்கு வேண்டவேண்டி யிருந்ததோ என்றான்; அழகிதாயிருந்தது, நாங்கள் அவற்றை வேண்டுகிறோம் அல்லோம், குருந்தில் கிடக்கிறவற்றைத்தா என்கிறார்கள். ... ... ரு

தடத்தவிழ்தாமரைப்பொய்கைத் தாள்களெம்காலைக்கதுவ
விடத்தேளெறிந்தாலேபோல வேதனையாற்றவும்பட்டோம்
குடத்தையெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லஎங்கோவே!
படிற்றையெல்லாம்தவிர்ந்து எங்கள்பட்டைப்பணித்தருளாயே. (கூ)

ப - ரை. தடத்தவிழ் - பெருமையுடைத்தான, பொய்கை - தடாகத்திலுண்டான, தாமரைத்தாள்கள் - தாமரைத்தாள்களானவை, எம் - எங்களுடைய, காலை - கால்களை. கதுவ - கடிக்க, விடம் - விஷத்தையுடைய தேளெறிந்தால் போல-தேள்கொட்டினைப்போலே, ஆற்றவும் - மிகவும், வேதனை பட்டோம் - வருத்தப்பட்டோம்; குடத்தை - குடங்களை, எடுத்து - கையில் எடுத்து, ஏறஇட்டு - ஆகாசத்திலே ஏறவிட்டு கூத்தாடவல்ல - கூத்தாடுகைக்கு ஸமர்த்தனான, எம்கோவே-எம்முடைய ஸ்வாமியானவனே, படிற்றை யெல்லாம் தவிர்ந்து - நீ பண்ணுகிற தீம்புகளை யெல்லாம்விட்டு, எங்கள் பட்டைப்பணித்தருளாய் - எங்கள் பட்டைத் தந்தருளவேணும்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (தடத்தவிழித்யாதி) பொய்கையிலுண்டான ஜலசரஸத்வங்கள் பாதகமாகா நின்றது, என்றால் துணுக்கென்னுமோபாதி, தாமரைப் பொய்கையில் தண்டுகளும் பாதகமாகா நின்றதுகிடாய் என்றால் கூசுமோ என்று பார்த்து அத்தை ஸ்மரிப்பிக்கிறார்கள். பொய்கையில் தாமரைத்தண்டுகள் எங்களை நலியாநின்றதென்ன; ஆகில் கரையிலே போந்தேறுங்கோளென்றான்; (தடத்தவிழ் தாமரைப்பொய்கை) கரையிலே யோதான் தாமரையின்றிக்கேயிருக்கிறது. (க)* செக்கமலத் தலர் போலும் கண்கைகால் செங்கனிவாயிறே. தடம் - பெருமை.

ஆறாமபாட்டு. (தடத்தவிழித்யாதி) தடம் - கரையாதல்; பரப்பாதல். அர்த்தாந்தரம் (தடம்-பெருமை) என்றது முந்தினவர்த்தத்துக்கு, பொய்கையில் தாமரைத்தாள்கள் எங்காலைக்கதுவாநின்றது;- தடத்தவிழ்

(க) தி-வாய்-கூ-எ-ரு.

பெரிய பொய்கை. (விடத்தேள் எறிந்தாலேபோல) விஷமில்லாத தேளுமுண்டுபோலே காணும். (வேதனையாற்றவும் பட்டோம்) நாங்கள் மிகவும் க்லேசப்படாநின்றோம். நீங்கள் நீரிலே புக்கபோது துடங்கி நானும் மரத்திலே யிருக்கிறேன், இம்மரத்திலே வர்த்திக்கிற பதார்த்தங்களுக் கோரெல்லையில்லை, நானும் இவற்றிலே படுகிற வேதனைக்கு ஓர் அவதியுண்டோ என்றான்; உங்களள்வேயோ நான்பட்டதென்றான். காலத்தின் நெடுமை அவனுக்கும் ஒத்திருக்கச்செய்தே அது தோற்றுகிறதில்லை காணும் இவர்களுக்கு; இழந்திருப்பார்க்கிறே காலம் நெடுகித் தோற்றுவது, நிரபேக்ஷனிறே அவன். இவர்களையொழியச் செல்லாதபடியாய்க்காணும் அவனுடைய நைரபேக்ஷ்யமிருப்பது. ஆஸ்ரித விஷயத்தில் ஸாபேக்ஷத்வம் நைரபேக்ஷ்ய விரோதியாகாதிறே. அந்தப்புரத்துக்குத் தாழநிற்குங் காட்டில் அபிஷிக்தனுக்குக் குறையாகாதிறே. (வேதனை ஆற்றவும்பட்டோம்) என்

---

தாமரைகளும் எங்களைக்கதுவாநின்ற தென்றந்வயம். இரண்டாமர்த்தத்துக்கு, அத்து - சாரியை. கரையிலே தாமரை யுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (செக்கமலத்தலரித்யாதி) விடம் - விஷம். கடற்கரையில் தேளுக்குவிஷமில்லை. தனக்கதிகம்பாடானல் கொடுக்கிறதுக்கென்னென்ன; அருளிச்செய்கிறார் (காலத்தினித்யாதி) இவர்களுக்குக் காலம் நெடுகைக்கு ஹேதுவேதென்ன ; அருளிச்செய்கிறார் (இழந்தித்யாதி) அவனுக்கு இழவில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார் (நிரபேக்ஷனித்யாதி) பரியட்டம் கைப்படுகையாலே நிரபேக்ஷதை. ஆனல் இவர்களை அபேக்ஷிப்பா னென்னென்ன ; அருளிச்செய்கிறார் (இவர்களை யித்யாதி) ஆனல் நிரபேக்ஷத்வஹாநிவாராதோவென்ன; அருளிச்செய்கிறார்(அஸ்ரிதவிஷயத்தி வித்யாதி) அப்படி எங்கே கண்டோமென்ன; அருளிச் செய்கிறார் (அந்தப்புரத்துக்கித்யாதி) ஆற்ற - மிக. "வேதனையாற்றவம் பட்டோம்" என்றது - உன்னை நெடும்போது பிரிகையாலும், ஜலஸ்த பதார்த்தங்களாலும் மிகவும் நோவுபட்டோமென்று தாத்பர்யம். இவர்கள், "வேதனையாற்றவும் பட்டோம்" என்றபோதே இவனுக்கு வேதனை யில்லை யென்னுமிடம் ஸித்தமாய், இத்தை அநப்யுபகம்ய வாதத்தாலும், அப்யுபகம்யவாதத்தாலும் அவன் பரிஹரிக்கும் ப்ரகாரத்தைக் காட்டுகிறார் (நீங்களித்யாதி) அதில், (நீங்கள் நீரிலே) என்று துடங்கி (நான்பட்டதென்றான்) என்னுமளவும் அநப்யுபகம்யவாதம். (காலத்தின் நெடுமை) என்று துட

கிறார்கள் : நானன்றே வேதனையாற்றவும் பட்டேன் என்றான் ; அது ஆராலே, நாங்கள் பரியட்டங்களை வாங்கிக்கொண்டுபோய்க் குருந்தின்மேலேபோயேறினோமோ, அதுஉன்னாலேவந்ததன்றோ என்றார்கள் ; அது என்னாலே வந்ததானாலும் இத்திரளைக் கலக்கப் பார்த்திலோ மென்றான் ; அத்தனையே உனக்கு இங்ஙனே திரட்டவேண்டியிருந்ததோ, கூட்டமாட்டாயோ பெண்களுடையத் திரளும்படி காண ; மன்றிலே குடக்கூத்தையாடி நிர்லஜ்ஜனாய், அவ்வழியாலே பெண்களையெல்லாம் திரட்டுமவனன்றோ நீ. இவர்

ங்கி (குறையாகாதிறே) என்னுமளவும் அப்யுபகம்யவாதம் என்று இவ்வாக்யங்களுக்கு இப்படி வகையிட்டருளிச்செய்வர். அப்யுபகம்ய பக்ஷத்திலானால் இவனுக்கும் இவர்களை நெடும்போது பிரிந்து போவபட்டமையுண்டாயிருக்க வேதனையில்லை யென்னக் கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (காலத்தின்நெடுமை யித்யாதி) இதுக்கு ஹேதுவென்னென்ன (இழந்திருப் பார்க்கிறே யித்யாதி) ஆனால் இவபோதி அவர்களுக்கும் இழவில்லாமையுண்டே யென்னில் ; அதுசொல்ல வேணாண்ணுகிறே ; இவர்களுக்கு அவனோட்டை ஸம்ஶ்லேஷம் அநபிமதமாய், தங்கள் வரவை அவனறியாதபடி வந்தவர்களென்று ப்ரவேஶத்திலே சொல்லுகையாலே, அவன் ஸங்கிஹிதனே யாகிலும் அது கூட்டரவன்றென்று கொள்ளவேணுமிறே. ஆனால் "பல்லாருங் காணுமே போவோம்" என்றது சேருமோ வென்னில்; அது புடவை தருகைக்குச் சொல்லுகிறதாகையாலே அன்யார்த்தமென்று தாத்பர்யம். (நிரபேக்ஷனிறே). என்றது - இவர்களை அநுபவிக்கையாலே பரிபூர்ண னென்றபடி. இப்படி இவர்களுடைய அநுபவத்தாலே பூர்த்தியாகில் அவனுடைய நைரபேக்ஷ்யத்துக்குக் கொத்தையன்றோவென்னவருளிச்செய்கிறார். (இவர்களையொழிய வித்யாதி) உபபாதகம் (ஆஶ்ரிதேச்யாதி)அப்யுகம்யபக்ஷத்தை அவலம்பித்து "குடத்தை யெடுத்தேறவிட்டு" இத்யாதிக்கு அவதாரிகை (வேதனையாற்றவப் பட்டோமென்கிறார்களித்யாதி) கலக்கப்பார்த்திலோ மென்றானென்றது - எல்லாரையும் ஒருக்காலே திரளக்கண்டிலேன், கூட்டிக்காண்கைக்காகப் பரியட்டங்களை வாங்கிக்கொண்டு போனேனென்றானென்றபடி. குடக்கூத்தாடும்போது மன்றிலே யாடவேணுமே, அப்போது அல்லார்தாரும் வருவார்கள், அது நமக்கு லஜ்ஜையாயிராதோவென்ன (மன்றிலே இத்யாதி) அதாவது - நீ முன்பம் அப்படியேயன்றோ செய்தாயென்றபடி. இந்த

கள் தங்களிடுபாடு தோற்ற வார்த்தை சொன்னார்களென்ன, அது
வே அவகாசமாக, இன்னது செய்தான் என்று பிறர்க்குப் பாசுரமி
ட்டுச்சொல்லவொண்ணாதபடி சிலவற்றைச் செய்யத் துடங்கினான்;
(படிற்றையெல்லாம் தவிர்ந்து) நீ பண்ணுகிற மிறுக்குக்களை யெல்
லாம் தவிராயென்கிறார்கள். தவிரீகோளாகில் கொடுபோங்கோள்
என்று தன்பரியட்டத்தைக் கொடுக்கப்பார்த்தான்; (எங்கள் பட்
டைப்பணித்தருளாயே) நாங்கள் இவற்றை யுடுத்துக்கொடுபோய்
எங்கள் தாய்மார் முன்னே நிற்கப்புக்கால், இவை உங்களுக்கு வந்
தவழியென்? என்று ஆராயார்களோ; ஆனபின்பு, எங்களுடைய
பரியட்டத்தைத் தாராய் என்கிறார்கள். பஞ்சலக்ஷங் குடியில்
பெண்களுக்கும் வேறொரு பரியட்டங்கொடுக்கைக்குப் புடை
வைக்கட்டணம் எடுப்பித்துக் கொண்டு போனானோ வென்னில்;
த்ரௌபதியரையில் துகிலோபாதி இவனும் ஒரு பேரிட்டுக்கொடு
க்கிறான் வேணுமாகில்; கோவிந்த கோவிந்த என்கிறாள், வேணு
மாகில். ... ... ... ... ... ... ௯.

---

பக்ஷத்தில் “எம் கோவே” என்றது - எங்களோட்டைப் பெண்களைப்
பெறுகைக்காகக் குடக்கூத்தாடி அவர்களை லபித்தவனன்றோ வென்ற
படி. அநப்யுபகம்யவாதத்தில் “குடத்தை யெடுத்தேறவிட்டு” இத்
யாதிக்கு க்ஷேபோக்தியாக வருளிச்செய்கையாலே (இவர்கள் தங்களிடு
பாடு தோற்றவார்த்தை சொன்னார்களென்ன) என்றது. ஔசித்யாத்
அப்யுபகம்ய பக்ஷத்திலே “கூத்தாடவல்ல வெங்கோவே” என்றதுக்குத்
தாத்பர்யமாகவேணும். “எங்கோவே” என்றது - எங்கள் ஸ்வாமியென்
றபடி. இந்தபக்ஷத்தில், “குடத்தையெடுத்து” இத்யாதிக்கு ஸங்கதியா
வது - உங்களைக்கண்ணாலே கண்டநுபவிக்கையாலே வேதனையில்லை யெ
ன்றான்; கண்டு அநுபவித்தாயாகில் எங்கள் பரியட்டங்களை எதுக்காகக்
கொண்டுபோனாயென்ன; ஆலோகநலாபமாத்ரம் போராது, ஸம்ஶ்லே
ஷமும்வேணுமென்று ததர்த்தமாகப் புடவைகளை வாரிக்கொண்டுபோ
னேனென்ன; பெண்களைத்திரட்டி ஸம்ஶ்லேஷிக்கவேணுமாகில் குடக்
கூத்தாடு என்று இங்ஙனே ஸங்கதிகண்டுகொள்வது. அநப்யுபகம்ய பக்ஷ
த்தில், “படிற்றை” என்றதுக்கு ஸங்கதியாவது - இவர்கள் நிர்லஜ்ஜன்
என்றவாறே சிலிட்கென்று சிலமிறுக்குக்களைப் பண்ணினானென்று. “படி
று” தீம்பு. (தவிரீகோளாகில்) என்றதுக்குத் தாத்பர்யம் - என்னை மிறுக்
குப் பண்ணாதே கொள்ளென்கிறதென், நீங்களே யன்றோ மிறுக்குப்பண்
ணினீகோள், ஆனபின்பு நீங்கள் மிறுக்குப் பண்ணுகை தவிரீகோளாகில்

நீரிலேநின்று அயர்க்கின்றோம் நீதியல்லாதனசெய்தாய்
ஊரகஞ்சாலவுஞ்சேய்த்தால் ஊழியெல்லாம் உணர்வானே!
ஆர்வமுனக்கேயுடையோம் அம்மனைமார்காணிலொட்டார்
போரவிடாயெங்கள்பட்டைப் பூங்குருந்தேறியிராதே. (எ)

ப-ரை. எல்லாம் - காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களும், ஊழி-அழிந்தவன்று, உணர்வானே - அவற்றுக்குப்போக்கடி தேடுமவனே, நீரிலே - ஜலத்திலே, நின்று - ஒருபடிப்படநின்று, அயர்க்கின்றோம் - வருந்தாநின்றோமே யென்ன; நான் மரத்திலே நின்று, அயர்க்கிறது நெடும் போதில்லையோ என்று சில விலாஸசேஷ்டிதங்களைப்பண்ண; நீதியல் லாதனசெய்தாய் - அநீதியான செயல்களைச் செய்தாய்; ஓடிப்பிழைக்கப் பார்த்தோமாகிலும்; ஊர் - ஊரோவென்றால், சேய்த்து - தூரமா யிராநின்றது; அவ்வளவும் வருந்திச்சென்றோமாகிலும், அகம் - ஊரில் மாளிகை கள், சாலவும்சேய்த்து - மிகவும் தூரமாயிராநின்றது; இப்படி நீ எங்களை வருத்தச்செய்தேயும், உனக்கே - உன்விஷயத்திலே, ஆர்வமுடையோம்-அன்புள்ளவர்களா யிராநின்றோம்; அம்மனைமார் - எங்கள் தாய்மார், காணில் - நீபண்ணும் லீலைகளுக்கு நாங்கள் இணங்கி நிற்பதைப் பார்த்தால், ஒட்டார் - ஸம்மதியார்கள்; பூ - பூத்திருந்துள்ள, குருந்து - குருந்தமரத்தில், எறியிராது - ஏறிக்கொண்டு தீம்புகளைச் செய்யாமல், எங்கள்பட்டை - எங்களுடைய பட்டுக்களை, போரவிடாய் - தந்தருளவேணும்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (நீரிலேயித்யாதி) கோழிகூவுவதற்கு முன்னே-போதுவிடிந்து நீ உணர்வதற்குமுன்னே வந்து நீரிலே புகுந்து ஒருபடிப்பட நின்றத்தாலே யறிவுகலங்கிப் படுகிற க்லேசத்தைப்பாராய். நீங்கள் நீரிலேநின்று அறிவு கெட்டிகோளாகில், நான்மரத்திலே நின்று அயர்க்கிறது நெடும்போதில்லையோ, நீங்களன்றோ இதெல்லாம் பண்ணிணிகோளென்னு, பரியட்டங்களையுங் கொடாதே சில விலாஸசேஷ்டிதங்களைப் பண்ணினன்; (நீதியித்யாதி) வாராய் இங்ஙன் முறைகெடப் பரிமாறலாகாது

என்று இப்படி தாத்பர்ய மருளிச்செய்வர்; "கோவிந்த கோவிந்த" என்ற வாக்யம் தாத்பர்யாந்தரமாகவும் அருளிச்செய்வர். துகிலோபாதி என்றது-ஒருதுகிலே ஸஜாதீயமான அநேகம் துகிலாக அபிவர்த்தமாக்கினப்போலே என்றபடி. அன்றிக்கே, ஏகதாத்பர்யமாய், பேரிட்டுக்கொடுக்கையாவசென்னென்ன (கோவிந்தேத்யாதி) ... ... ... ௬

ஏழாம்பாட்டு. (நீரிலே இத்யாதி) உக்த விவரணம் (போது விடிந்

காண் என்றார்கள். இனி அது கொண்டு காரியமென் என் செய்கை செய்தோமிறே. நான் ஸ்வதந்த்ரனன்றே, நான் செய்ததுக்கு நிவாரகருண்டோ, இனி நீங்கள் நம்மால் பட்ட இடரை யூரிலே போய் முறைப்படமாட்டிகோளோ என்றான்; அது செய்யலாய்த்திறே (ஊர் அகம்சாலவும் சேய்த்தால்) ஊர்தானே தூரிது. அவ்வளவும் வருந்திச்சென்றேயாகிலும் அதுக்குமேலே ஊரிலகந்தான் சாலதூரிதுகாணென்றார்கள். நான் மிறுக்குப்பண்ணுகின்றேனாகில் ஊரகம் சாலவும் தூரிதாகில், இனியிதுக்குமேல் போக்கடியாக நீங்கள் நினைத்திருந்ததென்னென்றான்; (ஊழியெல்லாமுணர்வானே) பிறரால் வந்தநலிவோடு தந்தாமால் வந்தநலிவோடு வாசியற உன்னைக்கொண்டு தீர்க்குமாப்போலே, உன்னால்வந்த நலிவுக்கும் நீயே போக்கடிசொல் என்றார்கள். உன்னையொழிந்த காலோபலக்ஷித ஸகல பதார்த்தங்களும் அழிந்தவன்று அவற்றுக்குப் போக்கடி தேடவல்ல நீயே போக்கடி தேடுமித்தனையன்றோ. (க) "𑌸𑌦𑍇𑌵" "ஸதேவ" என்னும்படியானவன்று, (உ) "𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌮𑍍" "பஹுஸ்யாம்" என்று போக்கடி பார்க்கவல்ல நீ பார்க்குமித்தனையன்றோ. நாம் போக்கடி பார்த்து நல்வழி போக்கலாய்த்திறே அந்த ஜகத்துக்கு அப்ரதிஷேதமுண்டாகையாலே; உங்கள்பக்கல் இது இல்லையென்றான்; அப்ரதிஷேதமாத்ரமே யன்று (ஆர்வமுனக்கேயுடையோம்) எங்கள்

கித்யாதி) (சேய்த்தால்) சேய்த்து - தூரிது "ஊர்-சேய்த்து, அகம் சாலவும் சேய்த்து" என்று அந்வயம். ஆல் - விஷாதஸூசகம். பிறரால் வந்த நலிவாவது - ப்ரளயத்தால்வந்த நலிவென்றபடி. தந்தாமால்வந்த நலிவாவது - அதுக்கும் அடியான தந்தாமுடைய அபதேப்ரவர்த்திகண்டு ஈச்வரன் கரணங்களைக் குலைத்திட்டு வைக்கையாகிற நலிவென்றபடி. (தீர்க்குமாப்போலே) யென்றது - சேதநர் தீர்த்துக்கொள்ளுமாப்போலே என்றபடி. ப்ரளயங்கதரான சேதநர்க்கு, இத்தைப் பரிஹரித்துத்தரவேணுமென்னுமபேக்ஷை அநந்தரமாகிலும்கூடுமே, அத்தைப்பற்றச் சொல்லுகிறது என்றருளிச் செய்வர். இந்தபக்ஷத்தில், "உணர்வான்" என்றது - அவர்கள் அபேக்ஷாநுகுணமாக ப்ரளயாத்யாபத்துக்களைப் பரிஹரிக்கைக்கீடான அறிவைச்சொல்லுகிறதென்று தாத்பர்யம். "ஊழியெல்லாமுணர்வான்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (உன்னையொழிந்தவித்யாதி) இந்த பக்ஷத்தில், "உணர்வான்" என்றது - ஸ்ருஷ்டிக்கடியா

(க) சாந்தோ-சு-உ-க. (உ) சாந்தோ சு-உ-ங.

பக்கலிலும் அதுக்கொரு குறையில்லைகாண். நீ அதறிந்திலை, இத்தனையுள்ளது என்றார்கள். நானறிவேனோ இந்தக்கூட்டெழுத்தை? இல்லையாகில் அநிஷ்டகார்யம் பலியாநிற்க? "ஆர்வமுனக்கேயுடையோம்" என்கையாவதென், ஒரு உக்தியமையுமோ, அதின்கார்யமும் பலிக்கவேண்டாவோ? என்றான்; அது நாங்கள் வேண்டோமோ (அம்மனைமார் காணிலொட்டார்) பிறரைப்பரிஹரிக்கவேணுமென்றிருந்தோ மித்தனைகாண் என்றார்கள். நானும் நீங்களும் பட்டுக்களும்உடுத்து, மநஃப்ரீதியோடே போய் உங்களகங்களிலே புக்கிருந்து விளையாடவன்றோ வேண்டியிருப்பது, பட்டுத்தர நெஞ்சு இசைகிறதில்லை, அத்தை யிசைவித்துத் தரவேணுமென்றான்; நீ நெஞ்சொழியத் தந்தாலும் அமையும் எங்களுக்கு என்றார்கள்; ஆகில் பிடியுங்கோள் என்று பரியட்டத்தையெடுத்துச் செண்டிலே யேறிட்டு இவர்களுக்கு எட்டிற்று எட்டாததாக நாற்றி, முகத்தைமாறிச் சிலபூக்களிலே கண்ணைவைத்து, அந்யபரரைப்போலே யிருந்தான்; (போரவிடாயித்யாதி) எங்களுக்கு எட்டும்படி தாராய். பரியட்டங்களை வாரிக்கொண்டு போய் இவர்களுக்கு எட்டாதபடி யிருந்ததுக்கு மேலே யொன்றிறே இது. ... ... ... ... ... ... எ.

மாமிமார்மக்களேயல்லோம் மற்றுமிங்கெல்லாரும்போந்தார்
தூமலர்க்கண்கள்வளரத் தொல்லையிராத்துயில்வானே!
சேமமேலன்றிதுசாலச் சிக்கனாம் இதுசொன்னோம்
கோமளவாயர்கொழுந்தே! குருந்திடைக்கூறைபணியாய். (அ)

ப-ரை. தொல்லை - அநாதியாக, இரா - ராத்ரிகளில், முற்கூறெல்லாம் பெண்களோடு தீம்பு செய்து, பிற்கூற்றிலே, தூ - பரிசுத்தமான, மலர் - செந்தாமரை மலர்போன்ற, கண்கள் - கண்களானவை, வளர - நித்ரா பரவசமாம்படி, துயில்வானே - கண்வளர்ந்தருளுமவனே, இப்பொய்கைக்கரையிலே நிற்குமவர்கள், இங்கு—, மாமிமார் மக்களேயல்லோம் - வெறும் மாமிமார்பெண்கள் மாத்ரமன்று; மற்றும் - அதுக்குமே

---

ன ஸங்கல்பரூபஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. (நானறிவேனோ) இத்யாதிவாக்யம் உத்தரப்ரத்யுத்தரம். (நானறிவேனோ இந்தக் கூட்டெழுத்தை) என்று அவன்வார்த்தை. இல்லையாகில் - ஸ்நேஹமில்லையாகில் என்று இவர்கள் வார்த்தை. அம்மனை - தாய். செண்டிலே - செண்டுகோலிலே. இது - போரவிட்டது. எட்டும்படி விடாததென்றபடி. எ.

லே, எல்லாரும் - மாமிமாரை யொத்தவர்களும், போந்தார் - வந்தார்கள்; இது - நீயும் நாங்களுமான பரிமாற்றம் உருவச்செல்லவேணுமென்கிற விது, சால -மிகவும், சேமமன்று - ரக்ஷைபெற்றுச் செல்லுவதொன்றல்ல, இது - இத்தை, நாம் - நாங்கள். ஆராய்ந்து, சிக்கனச் சொன்னோம் - ஸத்யமாகச் சொல்லுகிறோம்; ஆயர் - இடையர்களுக்கு, கோமளக்கொழுந்தே - இளங்கொழுந்துபோன்றவனே, குருந்திடைக் கூறைபணியாய்—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (மாமிமாரித்யாதி) இவன் ஒரு காலைக்கொருக்கால் மிகைசெய்யப்புக்கவாறே, ஊரில் இவைசெய்யாதே இங்கேயிவை செய்கிறதுக்குக்கருத்து:—தனியிடத்திலே செய்கதுக்கு ஆராய்ச்சியில்லை யென்றிறே; இவையடைய ஊரிலேயும் வார்த்தையாங்காணென்றூர்கள்; ஊரில் வார்த்தையாகிறதென், நீங்களே யன்றோ யிங்கே வந்திகோள், நான்தான் தீம்பனன்றோ, நீ தீம்பு செய்வானென்னென்றால் மைத்துனமைமுறையாலே செய்தேன் என்று எனக்கு மறுமாற்றமுண்டு என்ன; (மாமிமார் மக்களே யல்லோம்) ஒருராக நோற்கப்போந்த விடத்திலே வெறும்மாமிமார் மக்களாயிருப்பார்களோ. (மற்றுமிங்கெல்லாரும் போந்தார்) அவர்களைப் பெற்றவர்களு முண்டாயிராதோ, நீ நினைத்தவர்களல்லகாண் இங்குப் போந்தார், உனக்குக் கூச்சு முறையுடையா ரெல்லாரும் போந்தார்கள்காண்; ஆகையால் இங்குப் பிறந்தவை ஊரிலும் வார்த்தையாங்காண். நீங்கள்தான் நம்மை யறிவுதிகோளே, நம்மையறிந்தால் நாமும் நீங்களுமான பரிமாற்றத்துக்கு வேண்டாதாரைக் கொடுவாக்கடவிகோளோ வென்றான்; (தூமலரித்யாதி) நீ பண்டுபோலேயே இப்போதும் என்றிருந்தோம், இப்போதாக வேறொருபடியாவ தறிந்தோமோ,

---

எட்டாம்பாட்டு. (மாமிமாரித்யாதி) வார்த்தையாம் என்றத்தை அங்கீகரியாமல் சொல்லுகிறான் (ஊரில்வார்த்தையாகிற தென்) என்று; வார்த்தையாம் என்றத்தை அங்கீகரித்துச்சொல்லுகிறான் (நான்றான் தீம்பனன்றோ) என்று. பெற்றவர்களு முண்டாயிராதோ என்றது - அவர்கள் தாய்மாரும் ஊரிலே யுண்டா யிருக்குமே, இவர்கள் போய்த் தாய்மாரோடே சொல்லுவர்களே, ஆகையாலே உனக்குக் கூசவேண்டும்படி முறையில்லாத மற்றைப்பெண்களும் வந்தார்களென்றபடி "மற்றும்" என்றது - 'மக்கள்" என்றதுக்கு ப்ரதிகோடியான மாமிமார்களைச் சொல்லுகிறது. தொல்லை - நெடுமை. * தொல்லையிரா-தூமலர்க்கண்கள் வளர-

பழையாத்ரிகளில் முற்கூறெல்லாம் பெண்களோடே தீம்புசெய்து பிற்கூறு உறங்கிப் போரக்கண்டபடியாலே இப்போதும் அப்படி யென்றிருந்தோம், நீ யெங்களுக்கு முன்னே யுணர்ந்துவந்து முற்பாடனாய் வந்து நிற்பது நாங்களறிந்திலோம்காண். இனிஅது கொடுகாரியமென், முற்பாடராய்வந்து நின்றோமே, என்று அதுக்குமேலே சிலமிகைகளைச் செய்யப்புக்கான்; (சேமமித்யாதி) வாராய்; நீயும் நாங்களுமான பரிமாற்றம் உருவச்செல்லவேணும். என்று இங்ஙன் சொல்லிப்போருவதுண்டு. அதுக்கு உடலல்லகிடாய் நீயிப்போது செய்கிறவை. இது ரக்ஷைபெற்றுப் போருவதொன்றல்ல, இவ்வளவிலே தலைக்கட்டுங்கிடாயென்ன ; இது ஆர்தான் சொன்னாரென்றான்; (நாம் இதுசொன்னோம்) என்றார்கள். ஆகில் இவ்வாசார்ய வசநம் அதிலங்கிக்கலாகாது,ஒக்குமொக்கும்,உங்கள் வார்த்தை யன்றோ என்றான்; அப்படியல்லகாண் (சிக்கனச்சொன்னோம்) ப்ரதிபத்திபண்ணுதார்களுக் குற்றத்தாலே வந்ததா மத்தனைகிடாய், இனிமேல் வரும் அநர்த்தமென்றார்கள் ; ஓம், இந்த குருவசநாதிலங்கநம் பண்ணினநான் புக்கலோகத்திலே புகுகிறேன் என்று, அவற்றிலே திருவரைக்குத் தகுதியாயிருப்பன சில பரியட்டங்களைத் திருவரையிலே சாத்தி, ஶேஷித்தவற்றைக் குருந்திலேயிட்டுவைத்து, கண்டிகோளே இவை நம்ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்திருந்தபடி ! என்ன ; அழகிதாயிருந்தது, நாங்கள்தான் அவற்றைத் தாச்சொன்னோமோ, மேன்மையில்லாத, மரத்திலே கிடக்கிறவற்றைத்தா என்கிறார்கள். ... ... அ

---

துயில்வான் என்றபடி. மீமிசை; நன்றாக நித்ரைபண்ணுகை. சேமம்; க்ஷேமம். எல் - அசை. சால அமைந்து விடும். இது தெலுங்கு ஆகையாலே, ஸம்ஶ்லேஷம் முற்ற நடவாதென்றபடி. (உங்கள் வார்த்தையன்றோ என்றான்) என்றதுக்குத் தாத்பர்யம் - உங்கள் வார்த்தை ஸத்யமன்றே யென்றபடி "சிக்கன" என்றது - ஸத்யமென்றபடி அன்றிக்கே, ஆசார்யன் கௌரவ்யத்தையாலே அவன் எது சொன்னாலும் கேட்கவேணும், அநுத்தேஶ்யரான உங்கள் வார்த்தையன்றோ என்றான் என்னவுமாம். சிக்கன - ஸத்யமாக. இதிலும் முந்தின நிர்வாஹத்திலே ஔசித்யமுண்டு. கோமளம் - இளமை. (திருவரைக்குத் தகுதி) யென்கையாலே மெல்லியபுடவைகளைச் சாத்திக்கொண்டு பரும் புடவைகளை மரத்திலே பொகட்டுவைத்தானென்றபடி. ... ... ... அ

அ.—ஒன்பதாம்பாட்டு. இவனுக்கு ஆகாரத்வயமுண்டு. அதாவது - எத்திருர்க்கும் காரியம் செய்யும்; வைதார்க்கும் காரியம் செய்யும். அதில் எத்திப்பார்த்த விடத்தில் ஒன்றும் பலித்ததில்லை; இனி வைதால் காரியஞ்செய்யுமாகில் அத்தைச் செய்து பார்க்கிறோமென்று வைகிறார்கள்.

கஞ்சன்வலைவைத்தவன்று காரிருளேல்லில்பிழைத்து
நெஞ்சுதுக்கஞ்செய்யப்போந்தாய் நின்ற இக்கன்னியரோமை
அஞ்சவுரப்பாளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்
வஞ்சகப்பேய்ச்சிபாலுண்ட மசிமையிலீ கூறைதாராய். (௯)

ப - ரை. கஞ்சன் - கம்ஸனானவன், வலை வைத்தவன்று-உன்னையழிக்கக் கோலினவன்று, கார் இருள் - மிக்க இருளை யுடைத்தான, எல்லில் - ராத்ரியிலே, பிழைத்து - அவன் நினைவை அவன்றன்னோடே போம்படிபண்ணி, நின்ற - அம்மணமாக நின்ற, இக்கன்னியரோமை - இளம் பெண்களான வெங்களுக்கு, நெஞ்சு துக்கம் செய்ய - மநோதுக்கத்தை உண்டாக்குகைக்காக, போந்தாய் - வந்தாய்; அசோதை - யசோதைப்பிராட்டியோவென்றால், அஞ்ச - நீபயப்படும்படி, உரப்பாள் - அதட்டாமல், ஆணாட விட்டிட்டு - தீம்பிலே கைவளரும்படி விட்டு, இருக்கும்-களிப்புற்றிராநின்றாள், வஞ்சகம் - வஞ்சனையையுடையளான, பேய்ச்சி - பூதனையுடைய, பால் - விஷம் கலந்தபாலை, உண்ட - அம்ருதம்போலே புஜித்த, மசிமையிலீ - லஜ்ஜை யில்லாதவனே, கூறைதாராய்—.

வ்யா.—(கஞ்சன் வலைவைத்தவன்று) அவன் உபயவிபூதியையும் அழிக்கக்கோலினவன்று. ஸத்தாயோகி ஸகல பதார்த்தங்களையும் முடிக்கக்கோலின்வன்று. விபூதி யழிந்தால் அவனுளனாகவுண்டாக்கிக்கொள்ளலாம். அவனுக்கு ஒருநலிவு பிறந்தால் பின்னையொன்று மில்லையிறே. (௧) [ஸ்வர்க்கம் தத்விஷஸம்மிஸ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:] - ஸ்தர்யம் தத்விஷஸம்மிஸ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:]

ஒன்பதாம்பாட்டு (கஞ்சனித்யாதி) அவனைக்கார்யம் கொள்ளப் பார்க்கிறவர்கள்வைவானென்னென்ன, அருளிச்செய்கிறார் (இவனுக்கித்யாதி)

அவனுக்குத் தீங்குவந்தால்விபூதியழியுமோவென்ன; அருளிச்செய்கிறார் (விபூதியழிந்தாலித்யாதி) அவனுண்டானால் விபூதியுண்டாமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்தந்யமித்யாதி)ரஸ்யமானவநந்தரம் க்ருஷ்ணனனென்ன வேண்டியிருக்க. "ஜகத்குரோ:" "ஜகத்குரோ:" என்றதிறே

(௧) ஹரிவம்ஸே - விஷ்ணு ப - ௬ - ௩௧.

விஷந்தானே தாரகமான பின்பாய்த்து, ஜகத்துக்கு ஒருஶேஷியுண்டாய்த்து. விஷம்பாதகமாவது அம்ருதம் தாரகமாவது என்னும் மர்யாதைகள் கட்டினவன் பக்கல் அது காரியம் செய்யமாட்டாதே. (காரிருளெல்லில் பிழைத்து) அவன் தப்பாதபடி நலியக்கோலினான்; அற்றையளவிலே ரக்ஷகமாகைக்கு ஓரிருளுண்டாவதே! கொடுபோகிற விடத்தில் பிறர்க்குத் தெரியாதபடி கொடுபோகலாம்படி திருமேனியோடொத்த நிறமாகையும், காத்துக்கிடக்கிறவர்களுக்கு நித்ராபார வஶ்யத்துக்கு உடலாகையும் இரண்டுமுண்டிறே. (௧) "வீங்கிருள்வாய் பூண்டு அன்றன்னே புலம்பப்போய் அங்கோராய்க்குலம் புக்கதும்" என்னக்கடவதிறே. இதுக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் "இவன்தான் பருவம் நிரம்பாமையாலே தன்னை நோக்கிக்கொள்ள மாட்டிற்றிலன், புறம்பு தானே பரிந்து நோக்குகைக்கு ஒருத்தரில்லை, கம்ஸாதிகள் தப்பாமல் அகப்படுத்தக் கோலி நின்றார்கள்; அவ்வளவிலுதவித்தந்தது இருள், அத்தைச் சரணம் புகுமத்தனை யிறே" என்று பணிப்பராம், அதைப்பற்றவிறே, இவர்கள்தான் இந்தவிருளை வெறுக்கிறது இப்போது. ஸ்ரீவஸுதேவரையும் தேவகியாரையும் அவதாரகாலத்திலே விட்டுப்போருகையால் பண்ணின நலிவேயன்றிக்கே, தேவகியாரையொழிந்த ஶேஷித்தஸ்த்ரீவர்க்கத்தை நலியா நின்றாய், கம்ஸன் வலையிலகப்படாதே, தப்பினவிது பெண்பிறந்தாரை ரக்ஷிக்கைக்குடல், என்றிருந்தோம், அது எங்களை நலிகைக்குடலாய் விட்டவித்தனையாகாதே. இனி அவனாலே புண்பட்ட

---

என்றபடி. விஷம் அம்ருதமாகக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (விஷமித்யாதி) கார்-கறுப்பும், பெறுமையும். எல்லி-இரவு. இருளுண்டாவதே! என்று - வெறுப்பு. இருள் ரக்ஷகமென்னு மதுக்கு ப்ரமாணமும் ஔசித்யமும் அருளிச்செய்கிறார் (வீங்கிருள்வாயித்யாதி) அத்தைப்பற்றவிறே என்றது-அப்படி ஆதர விஷயமாயிருக்கச் செய்தேயிறே என்றபடி "நின்றஇக்கன்னியரோமை - நெஞ்சுதுக்கம் செய்யப் போந்தாய்" என்று அந்வயித்து அருளிச் செய்கிறார் (ஸ்ரீவஸுதேவரையு மித்யாதி) "நின்ற" என்ற பதத்துக்குத் தாத்பர்யம் (ஶேஷித்த ஸ்திரீவர்கமென்கிறது) "அஞ்சஉரப்பாள்" என்கைக்கு ப்ரஸக்தியையுட்கொண்டு அந்த பதத்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (இனிஅவனாலித்யாதி) ப்ரஸக்தி-

---

(௧) தி - வாய் - ௯ - ௪ - ௫.

நம்முடைய நோவுபாட்டை அறிவித்தால், தானும் பெண்பிறந்த வ்ளாக்கையாலே யறிந்து இரங்கக் கூடுமென்று அவளுக்கு அறிவிக்கில், (க) "அங்ஙனும் தீமைகள் செய்வர்களோ நம்பீ யாயர்மடமக்களை" என்கிறபடியே - இடைப்பெண்களை. நாயந்தே! நலியலாமோ என்று அஹ்ருதயமாக வொருவார்த்தை சொல்லி, கண்ணஞ்சிநியமியாதே கைவாங்கி யிருக்குமே; அத்தைக் கேட்டு, பொகடு பொகடு. இவ்வளவில் இன்னமும் அவன்றானே நல்லன்காண். (அஞ்சவுரப்பாளசோதை) வந்த விவர்களிருக்கு ஒன்றைச் சொன்னாளாமித்தனை போக்கி. அஞ்சும்படி பொடியாள். (ஆணைவிட்டிட்டிருக்கும்) "இவர்கள் முறைப்பட்டு நம்மை நலியப்பார்த்த அதினெல்லையும் கண்டுவிட்டோம்" என்று, முன்பேதீம்பிலேகைவளருகிறவன்ஸஹகரிப்பாரையும் பெற்றவாரே ஶதஶாகமாகப் பணைக்குமாய்த்து. (இருக்கும்) தான்கண்டபடி இவனைத் தீம்பு செய்யவிட்டு "நம்மகன் இப்படிப்பருவம்நிரம்பித்தீமை செய்யப்பெற்றோம்" என்று அத்தாலே (உ) "தொல்லையின்பத்திறுதிகண்டாள்" என்கிறபடியே-ஆநந்த நிர்பரையாய் க்ருதக்ருத்யையாயிருக்கும். பிறரைவிட்டு நெருக்கியோ என்னை நீங்கள் காரியங் கொள்ளப் பார்த்ததென்னுச் சிவட்கென்றான்; நாங்கள் அங்ஙன் நினைத்திலோம்காண் (வஞ்சகமித்யாதி) நீதான் தாய்முலைக்கும் பேய் முலைக்கும் வாசியறியாதானொருத் தனிறே. பிறர்நோவு கண்டால் (௩) "𑌹𑍍𑌰𑍀𑌰𑍇𑌷𑌾 𑌹𑌿" ஹ்ரீரேஷாஹி" என்கிறபடியே முற்பாடனாய் லஜ்ஜிக்கும்போது சக்ரவர்த்தித் திருமகனாக வேண்டாவோ, உனக்கு இவைதெரியுமோ; நீலஜ்ஜாஶூந்யனன்றோ. (கூறைதாராய்) நீ ஆனாராகிறாய், எங்கள் பரியட்டத்தை முதல்முன்னம் தா. ... ௬.

அவளும் பெண்பிறப்பாகை. (நல்லன்காண்) என்று வெறுப்போடே மீளுவர்களென்று பூரிப்பது (வந்தவிவர்கள்) இத்யாதி வாக்யம் - தாத்பர்யாந்தரம். உரப்பாள்-அதட்டாள். ஆணை-வேண்டிற்றுச் செய்ய (எல்லையுங் காண்கை) தாயாருடைய விலக்காமையுங் காண்கை. நாங்கள் அங்ஙன் நினைத்திலோம்காண், நீ எங்கள் நினைவறிந்திலையீ! என்ன ; நானறியேனோ வென்ன; மேல்கிளம்புகிறது(வஞ்சகமித்யாதி) நாங்கள் நெருக்கிக் கார்யம் கொள்ளப்பார்க்கவில்லை, அவள் புருஷகாரமாகக் கார்யம் கொள்ளப் பார்

(க) தி-மொ ௧௦-௭-௧௧. (உ) பெரு-தி-௭-அ. (௩) ரா-ஆ-௧௦-௬

கன்னியரோடெங்கள்நம்பி கரியபிரான்விளையாட்டை
பொன்னியல்மாடங்கள்சூழ்ந்த புதுவையர்கோன்பட்டன்கோதை
இன்னிசையால்சொன்னமாலை ஈரைந்தும்வல்லவர்தாம்போய்
மன்னியமாதவனோடு வைகுந்தம்புக்கிருப்பாரே. (௧௦)

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

ப - ரை. எங்கள் - நம்முடைய ஸ்வாமியாய், நம்பி-தீம்பால் பூர்ணனாய், கரிய - அழகிய திருமேனியையுடையனாய், பிரான் - உபகாரகனான கண்ணனுக்கும். கன்னியரோடு -இடைப்பெண்களுக்குமுண்டான, விளையாட்டை—, பொன் இயல் - அழகுபெற்று விளங்காநின்றுள்ள, மாடங்கள் - மாளிகைகளாலே, சூழ்ந்த - சூழப்பட்ட, புதுவையர் - ஸ்ரீ வில்லிபுத்தூரிலுள்ளவர்களுக்கு, கோன் , தலைவராய், பட்டன் கோதை - ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் திருமகளாரான ஆண்டாள், இன்-இனிய, இசையால்-இசையாலே, சொன்ன - அருளிச்செய்ததாய், மாலை-மாலாரூபமான,ஈரைந்தும்-இப்பத்துப்பாட்டுக்களையும், வல்லவர்தாம்-அபியஸிக்கவல்லவர்கள், போய்-அர்ச்சிராதிமார்க்கத்தாலே போய், மன்னிய - நித்தியமான, வைகுந்தம் - ஸ்ரீ வைகுண்டத்திலே, புக்கு - புகுந்து, மாதவனோடு - ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனோடே, இருப்பார்-நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்.

வ்யா.—பத்தாம்பாட்டு (கன்னியரோடெங்கள் நம்பிக் கரிய பிரான் விளையாட்டை) இத்தாற் சொல்லிற்றாய்த்து - இவன் செய்யுமவற்றை யறியாதே சொன்னவற்றை மெய்யென்றிருக்கைக்கும், காலதத்த்வமுள்ளதனையும் அநுபவியாநின்றாலும் புதுமை மாறாதே யிருக்கைக்கும், இவன் பண்ணும் தீம்புக்குப் பாடாற்ற மாட்டாதேயிருக்கைக்கும் "கன்னியர்" என்கிறது. (எங்கள்நம்பி) பஞ்சலக்ஷம் குடியில் பெண்களை நலிகைக் கீடான தீம்பாலே பூர்ணன். (கரியபிரான்) அகவாயில் தீம்பில்லையேயாகிலும் மேல்விழவேண்டும்படி யாய்த்து வடிவழகிருப்பது. (பொன்னியலித்யாதி) இவ்விஷயத்தில் இவ்வளவான அவகாஹநத்துக்கடி பெரியாழ்வார்வயிற்றில் பிறப்பாய்த்து. (இன்னிசையித்யாதி) (௧) "[illegible]" "பாட்யேகேயேசமதுரம்." (மன்னியவித்

த்தோம் என்று இவர்கள் நினைவு. மசிமை-சுணை. இல்-இல்லாமை. நீ ஆனாகிறாய்-ஆனவனாகிறாய். லஜ்ஜாவானாகிலுமாம், லஜ்ஜாஹீநனாகிலுமாம் என்றபடி. ௯

(௧) ரா - பா - ௪ - அ.

யாதி) நித்யமான ஸ்ரீவைகுண்டத்திலே போய் ஶ்ரியஃபதியான ஸர்வேஶ்வரனோடேகூட நித்யாநுபவம் பண்ணப்பெறுவர் ௧0

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே ஶரணம்.

மூன்றாம் திருமொழி முற்றிற்று.

———:0:———

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

நாலாம் திருமொழி.

தெள்ளியார் ப்ரவேஶம்.

———

அவ;—இவனும், பெண்களுடைய பரியட்டங்களெல்லாம் வாரிக்கொண்டு போய் குருந்தின்மேலே ஏறியிருக்க; இவர்களும், அநுவர்த்திக்கும் வைதும் இப்படி பஹுப்ரகாரங்களாலே அவனுக்குக் கொடுத்தல்லது நிற்கவொண்ணாதபடி சிலவற்றைச் செய்தும், அவனும்கொடுக்க இவர்களும் பெற்றார்களாய் நின்றது. இவனும் இவை கொடுத்து அவர்களும் அவைபெற்று ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமானாலும் அநந்தரம் விஶ்லேஷாந்தமாயல்லதிராதிறே, ஸம்ஸாரத்தில் போகங்கள் நிலைநில்லாததாகையாலே அவனும் போநிற்க, இவர்களும் இன்னமும் ஒருக்கால் பரியட்டமுரியவல்லனென்று அதுக்குக் கூடவிழைக்கிறார்களித்தனையிறே. இங்குத்தைப் பறியாற்றம் பேறும் இழவுமாய்ச் செல்லுமித்தனையிறே. இதுதான் இதரவிஷய லாபத்திற் காட்டில் நன்றாயிருக்கு

---

பத்தாம் பாட்டு. (கன்னியரோடித்யாதி) தீம்பு போக்கியமாகையாலே (தீம்பில்லையேயாகிலும்) என்கிறது. பொன் - அழகு. .. ௧0

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

அரு; தெள்ளியார் ப்ரவேஶ. கூடலாவது-வட்டமாகக்கோட்டைக் கீறி, அதுக்குள்ளே சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து, இவ்விரண்டு சுழியாகக்கூட்டினால், இரட்டைப்பட்டால்கூடுகை. ஒற்றைப்பட்டால் கூடாமை என்று ஸங்கேதம். அதுக்கு ஹேதுவேதென்ன ; ஸ்வாபதேஶத்திலே யருளிச் செய்கிறார் (ஸம்ஸாரத்திலித்யாதி) "ஸம்ஸாரத்தில்" என்றவாக்ய விவரணம் (இத்தனையிறே) என்றது இழவோடே கூடினபேர் அபேக்ஷிதமோவென்ன ; அருளிச்செய்கிறார் (இதுதானித்யாதி) லாபத்திற் காட்டிலென்றது - லாபாலாபத்திற்காட்டி லென்ற

மிறே- பேறிழவுகள் இவ்விஷயத்திலே யாகப்பெறுவதே! பரம சேதநனைவிட்டு அசேதந க்ரியாகலாபங்களைக் கொண்டு பெறப் பார்ப்பாரைப்போலே, ஸர்வேஶ்வரனைப் பெறுகைக்கு அசேத நமான கூடலின் காலிலே விழுகிறாள். வ்ருத்தஹீநனான க்ருஷ் ணனை, வ்ருத்தவதியாய்ப் பெறப் பார்க்கிறாள் காணும். இத்தனை கலங்காதவன்று பிரிந்த விஷயவை லக்ஷண்யத்துக்கு நமஸ்காரமா மித்தனையிறே. ... ... ... ... ... *

மூ.—தெள்ளியார்பலர் கைதொழுந் தேவனார்
வள்ளல் மாலிருஞ்சோலை மணாளனார்
பள்ளிகொள்ளுமிடத்து அடி கொட்டிடக்
கொள்ளுமாகில் நீகூடிடுகூடலே. (௧)

ப-ரை. தெள்ளியார் பலர் - சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே” என்று நித்யாநுபவம் பண்ணும் நித்யஸூரிகளுடைய திரள்கள் கைதொ ழும்-கைதொழா நின்றுள்ள, தேவனார் - ஸர்வஸ்வாமியாய், வள்ளல்-பர மோதாரராய், மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலை மலையிலே. மணா ளனார் - என்னைத் திருமணம் புணருகைக்காக வந்து நிற்குமவர், பள்ளி கொள்ளுமிடத்து . பள்ளிகொண்டருளும்போது. அடி - அவருடைய திரு வடிகளை, கொட்டிட - நான் கொட்ட, கொள்ளுமாகில் - அவர் அங்கீகரி ப்பாரானால், கூடலே—, நீகூடிடு-நீகூடவேணும்.

வ்யா.—முதற்பாட்டு. (தெள்ளியார்) காதாசித்க ஸம்ஶ்லே ஷத்துக்குத் தான் இன்றிருந்து கூடலிழைக்கப் புக்கவாறே, நித்யாநுபவம் பண்ணுகிறவர்களை நினைத்தாள். (தெள்ளியார்) அவர்களும் சிலரே! அலாபத்தோடேயிருந்து கூடலிழையாதே,

---

படி பெறுவதே! என்றது - வ்யாக்யாதாவினுடைய போடு. அவனையே உபாயமாகப் பற்றியிருக்கிறவள், அசேதநமான கூடலின் காலிலே விழக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (பரமசேதநனித்யாதி) அது தான் கலக்கத்தின் கார்யமென்னுமத்தை ரஸோக்தியாக வருளிச்செய்கி றார் (வ்ருத்தஹீநனான வித்யாதி) வ்ருத்தஹீநனென்றது - தன்னைப்பெறு கைக்கு இவனால் ஒருவ்ருத்தமும் வேண்டாதவனென்றுய். அப்படி அநந்ய ஸாத்யனானவனை வ்ருத்தவதியாய் ஸாதநபரையாய்ப் பெறப்பார்க்கிறாளெ ன்று ஸ்வாபதேஶகர்ப்பமாயிருக்கிறது. அன்றியே, வ்ருத்தம் - ஆசார மும்; திருவாழியுமென்று சாடு. ஆனாலும் இப்படி கலங்கலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (இத்தனைகலங்காதவித்யாதி) ... ... †

லாபத்தோடே யிருந்து போதுபோக்குகிறவர்களும் சிலரே ; பிரி யில் ஸர்வதாகூடவிழைக்கவேணுமென்றறிந்து, பிரியாதே நித் யாநுபவம் பண்ணுமத்தனை யளவுடையவர்களாய்த்து. (பலர்) த்ரிபாத்விபூதியாக அநுபவத்தோடே காலம்செலுகிறதிறே. இங் குத் தானொருத்தியுமாய்க் கூடவிழையாநின்றாள். இங்கு வ்ருத்த கீர்த்தநத்துக்கும் ஆளில்லை ; அங்கு வ்ர்த்தகீர்த்தநம் பண்ண வேண்டா. (கைதொழும்)(க) "நித்யாஞ்ஜலிபுடா:" "நித்யாஞ்ஜலிபுடா:" என்கிறபடியே தொழுகையே யாத்ரையா யிருக்குமவர்கள். (தேவ னார்) இவர்கள் தொழுது உளராமாப்போலே, இவர்களைத் தொழு வித்துக்கொண்டு உஜ்வலனாகாநிற்குமவன். (வள்ளலித்யாதி) லுப் தனாயிருக்குமவன், கையிலே குவாலாக் வுண்டாயிருக்கச் செய் தேயும் ஒன்று கழியிலும் அத்தைக்குறையாக நினைத்திருக்குமாப் போலே, நித்யவிபூதியும் நித்யாநுபவம் பண்ணுவாரு முண்டா யிருக்கச் செய்தேயும், அவ்விருப்பு உண்டதுருக்காட்டாதே ஸம் ஸாரிகள் இழவை யநுஸந்தித்து உடம்புவெளுத்து, அவ்விருப்பை இங்குள்ளார் பெறவேணுமென்னும் க்ருபையாலே திருமலையள வும்வந்து, தன்னை அநுபவிப்பிக்கைக்கு அவஸரப்ரதீக்ஷனாய் நிற் கும் நிலையைச்சொல்லுகிறது. நித்யவிபூதியும் தானுமாய் இருக்கச் செய்தேயிறே. இவைபழிந்தது கொண்டு (உ) "ஏகாகீ" "ஏகாகீ" என்கிறது ; தன்னை ஸர்வஸ்வதாநம் பண்ணிக்கொண்டாய்த்து நிற்கிறது. (மணாளனார்) தன்னைக் கைக்கொள்ளுகைக்காக வந்து

அரு;—முதற்பாட்டு. (தெள்ளியாரித்யாதி) "தெள்ளியார்" என்றால் அறிவுடையா ரென்று காட்டுமெதொழிய லாபத்தோடேயிருக்குமவர்களை ன்று காட்டுமோவென்ன (பிரியிலித்யாதி) இப்படி உஜ்வலனாயிருக்கச்செய் தே அத்தைவிட்டு இங்கேவருகிறதென்னென்ன; தாஸ்ய லுப்தனுகையாலே யென்கிறார் (லுப்தனுயித்யாதி) அங்குக்குறைப்பட் டிருந்தானென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன ; அருளிச்செய்கிறார் (நித்யவிபூதியுமித்யாதி) நித்ய ஸூரிகளைத் தொழுவித்துக்கொண்டு உஜ்வலனா யிருக்கிறவன், திருமலை யிலே வந்திருக்கிறானென்றபோதே உடம்பு வெளுத்தமை வித்தம். வள்ளல் - உதாரன். (ஸர்வஸ்வதாநம் பண்ணி) என்றது - ஆஸ்ரிதர்க் கென்றபடி இவளைக்கைப்பிடிக்கைக் காணல் ஸ்ரீவில்லிபுத்தூரில் நில்லா மல் திருமலையிலேநிற்கவேண்டுவானென் னென்ன ; அருளிச்செய்கிறார்

(க) பார-ஸாந்தி-ககஎ-சo. (உ) மஹோபநி-க-ககூ-க

நிற்கிறவிடமாய்த்து. (மணாளனார்) ஸ்ரீகோபிமாரைப்போலே யமுநாதீரங்களிலே ப்ருந்தாவநத்திலே இரவுமிருட்டுந்தேடி ஒளிகளவிலே யாகவொண்ணாதே பெரியாழ்வார் பெண்பிள்ளையை. * வேதப்பயன் கொள்ளவல்லவிட்டு சித்தராகையாலே ஒரு கோத்ரஸம்பந்தப்படச் செய்யவேணுமென்று வந்து நிற்கிறான் திருமலையிலே. (மணாளனார் பள்ளிகொள்ளு மிடத்து) ப்ரணயிநி முகங்காட்டுவது ஓலக்கத்திலே யன்றே, படுக்கையிலே யிறே. அதாகிறது - கோயிலாய்த்து. "'பள்ளிகொள்ளு மிடமாகிறது-கோயில்' என்று பட்டருளிச்செய்ய நான் கேட்டேன்" என்று பிள்ளையழகிய மணவாளரரையர் பணிப்பர். (அடிகொட்டிட) உணர்ந்திருக்கும்போது அடிமைசெய்து போகை யன்றிக்கே, பள்ளிகொள்ளும்போதும் அதுக்கு வர்த்தகமான அடிமை செய்து வர்த்திக்கவாய்த்துச் சொல்லுகிறது. ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே அந்வயிக்கவாய்த்துக் கணிசிக்கிறது. இது வாய்த்து ப்ராப்திபலம். (கொள்ளுமாகில்) அதில் உபாயாம்ஶ மிருக்கிறபடி. அவன் நினைவாலே பேறாகவாய்த்து நினைத்திருப்பது. முமுக்ஷுக்களுடைய யாத்ரையிருக்கும்படி. (நீ கூடிடுகூடலே) அவனாலே பேறு என்றிருக்கச்செய்தேயும், அசேதநமான கூடலின் காலிலே விழும்படி யிருக்கிறதிறே ப்ராப்யத்வரை. (௧)

அவ;—இரண்டாம்பாட்டு. அவன் என்னைப்பெறுகைக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகையிலே உத்யுக்தரைப்போலே யிருந்தான், அதின்பலம் நான்பெறும்படி பண்ணவல்லையே யென்கிறாள்.

---

ஸ்ரீகோபிமாரையித்யாதி) கோத்ரம-சாடு, பர்வதம். "பள்ளிகொள்ளுமிடம்" என்றது-ஏகாந்தமென்னுதல்; உறங்குகிறவிடமென்னுதல். இரண்டாவது (ஓலக்கமித்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, "அடிகொட்டிட" என்றது-ஸம்ஶ்லேஷிக்கிறதாய், அதுக்கு ஸ்வாபதேஶம் (ஸ்வரூபாநுரூபேத்யாதி) அன்றிக்கே, "அடிகொட்டிட" என்றதுக்கு ஸாமாந்யேநஸ்வாபதேஶமால். அப்படி நினைவாகில் "நீ கூடிடுகூடலே" என்பானென்னென்ன (முமுக்ஷுக்களித்யாதி) "பள்ளிகொள்ளு மிடத்து" என்றதுக்கு ஏகதாத்பர்யமாதல். உபபாதகம் (அவனாலே இத்யாதி) அடிகொட்டிட - அடைத்தியுறக்க. ... ... ... ... ... ௧

மூ.—காட்டில்வேங்கடம் கண்ணபுரநகர்
வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஓட்டராவந்து என்கைப்பற்றி தன்னொடும்
கூட்டுமாகில் நீகூடிடுகூடலே. (உ)

ப - ரை. வாட்டமின்றி - நித்யஸூரிகள் நடுவே யிருக்கக்கடவ நாம் நித்ய ஸம்ஸாரிகள் நடுவே யிராநின்றோமே என்னும் மநத்தளர்த்தி யின்றிக்கே, மகிழ்ந்து-ஸர்துஷ்ட சித்தனாய்க்கொண்டு, காட்டில் - காட்டிலே யுண்டான, வேங்கடம் - வடக்குத்திருமலையிலும், கண்ணபுரநகர் - திருக்கண்ணபுரத்திலும், உறை - நித்யவாஸம் பண்ணுகிற, வாமநன் - * குறட்பிரமசாரியானவன், ஓட்டராவந்து - ஓடிவந்து, என் - என்னுடைய, கை-கையை, பற்றி - பிடித்து, தன்னொடும் கூட்டுமாகில் - தன் மார்வோடு அணைத்து எறிட்டுக்கொள்ளுமாகில், கூடலே—. நீ கூடிடு—.

வ்யா.—(காட்டில் வேங்கடம்) காட்டிலேயுண்டான வேங்கடமென்னுதல்; காட்டை இல்லாகவுடைய வேங்கட மென்னுதல். ஸ்ரீதண்டகாரண்யத்தில் ரிஷிகளோடே யிருந்து வநவாஸ ரஸம் அநுபவித்தாப்போலே யாய்த்துத் திருமலையிலிருப்பு; திருவயோத்யையி லிருக்குமாப்போலே யாய்த்துத் திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளி யிருக்கிற விருப்பு. அன்றியே,ஸ்ரீப்ருந்தாவநமும் திருவாய்ப் பாடியும்போலே யாதல். பரமபதத்திலே நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கு மவனிறே - * கானமும் வாநரமும் வேடுமான இவர்களுக்குக் காட்சி கொடுத்துக்கொண்டு திருமலையிலேவந்து நிற்கிறான். (வாட்டமின்றி) பரமபதத்திலே நித்யஸூரிகள் அநுபவிக்கக் கடவநாம், அவ்விடத்தை விட்டு இவர்கள் நடுவே யிராநின்றோம் என்று திருவுள்ளத்தில் ஒருவாட்ட மின்றிக்கே. (மகிழ்ந்து) அவர்கள் நடுவே நிரதிஶயானந்த யுக்தனாயிருக்குமாப்போலே, நிரவதிகப்ரீதியுக்தனாயிருக்கும். (உறை) அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுகிற. (வாமநன்) தன்னுடைமை பெறுகைக்குத் தான் இரப்பாளனுமவன். (ஓட்டராவந்து) ஓரடிக்கழஞ்சு மண்ணுக்குட

இரண்டாம் பாட்டு. (காட்டிலித்யாதி) "காடு" என்றதுக்குக் கருத்தென்னென்ன; அருளிச்செய்கிறார் (பரமபதத்திலித்யாதி) ஓட்டராவந்து ஓடிவந்து. ஓடிவருகை கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஓரடி-

பதறுமவன் இவளைப்பெற்றால் இரானிறே. ஆஸ்ராப்ராக்ருதியான மஹாபலிமுன்னே கழஞ்சு மண்ணுக்குப் பதறிநடக்குமவன், இவளொருதலையானால் இரானிறே ஆறி. (ஒட்டராவந்தென் கைப்பற்றி) (௧) "बाल्ये बालेन पीडितः" "பால்யே பாலேநபீடிதః" என்கிறபடியே, (௨)"அங்கண்ணனுண்ட வென்னாருயிர்க்கோதிது" என்னுமாப்போலே பிடித்த பிடியிலே அநந்யார்ஹ மாம்படி பிடித்து. (தன்னொடும் கூட்டுமாகில்) நான் தன்கர ஸ்பர்ஶத்தாலே துவண்டு ஸ்தப்தையாய் நிற்க, அணைத்து எடுத்துக்கொள்ளுமாகில். (நீகூடிடு கூடலே) அவன் பக்கல் குறையில்லை, உன்தலை துலுக்கு கைகிடாய் வேண்டுவது. ... ... ... (௨)

மூ.—பூமகன்புகழ்வானவர் போற்றுதற்
காமகன் அணிவாணுதல் தேவகி
மாமகன் மிகுசீர் வசுதேவர்தம்
கோமகன்வரில் கூடிடுகூடலே. (௯)

ப-ரை. பூமகன் - திருநாபீகமலத்தில் பிறந்த ப்ரஹ்மாதிகளாலும், வானவர்-நித்யஸூரிகளாலும், புகழ்-ஸ்தோத்ரம்பண்ணி, போற்றுதற்கு-மங்களாசாஸநம் பண்ணுகைக்கு, ஆம்-தகுந்த, மகன்-புருஷோத்தமனாய், அணி-அழகுமிக்கு, வாள்-ஒளிவிடாநின்றுள்ள நுதல்-நெற்றியையுடைய, தேவகி-தேவகிப் பிராட்டிக்கு. "உடன்பிறந்தான்" என்னலாம்படி, மா-செருக்கு மிக்கிருக்கிற, மகன்-புத்ரனாய், மிகு மிகுந்த, சீர்-நற்குணங்களையுடையரான, வசுதேவர்தம் - ஸ்ரீவஸுதேவரையும் நியமிக்கவல்லனான கோ-ராஜாவான, மகன்-புத்ரனானவன், வரில்-வருவானேயாயின், கூடலே கூடிடு—.

---

கழஞ்சு மண்ணித்யாதி வாக்யத்வயத்தாலே) बाल्ये बालेन त्वया पीडितः पाणिः त्वयानप्रमाणीकृत इत्यन्वयः. यद्वा. त्वया अङ्गीकृतः पाणिः बाल्ये बालेन पीडितः - பால்யே பாலேநத்வயாபீடிதః பாணிః த்வயாநப்ராமாணீக்ருத இத்யந்வயః. யத்வா, த்வயா அங்கீக்ருதः பாணிః பால்யேபாலேநபீடிதః" என்றருளிச் செய்வர். கைப்பற்றினால் தானே கூடலாயிராதோ அவனே கூட்டவேணுமோ வென்ன (நானித்யாதி) "கூட்டுமாகில்" என்றது - கூட்டுவானானபின்பு என்றபடி. அவன் * எதிர் சூழல் புக்குத் திரிந்தாலும் இவன் மநஸ்ஸாம் இசையவேணு மென்றபடி (தலை துலுக்கு) இசைவு. நீ கூடுகை யென்றபடி. ... ... ... ... ௨.

---

(௧) ரா-யு-௧௧௯-௧௯. (௨) தி-வாய் ௯-௫-௯.

வ்யா.—மூன்றாம் பாட்டு. பூமகன்) இந்த விபூதி. (புகழ்வானவர்) *லக்ஷ்மீஸம்பந்ந: *லக்ஷ்மிஸம்பந்ந: போலே அங்குள்ளார். (போற்றுதற்காமகன்) (க) [ஸா வேதயோ நமுக்லேஷ ஹவந்தே- நாவேவயாந்த முபயே ஹவந்தே] இரண்டுகரையிலுள்ளாரும் நடுவுபோகிற வோடத்தை யழைக்குமாப்போலே. (அணியித்யாதி) அழகிய ஒளியையுடைத்தாய் வேறாபரணம் மிகையான நுதலையுடைய தேவகிக்கு. (மாமகன்) அவள்வளர்த்த செருக்காலே மகனல்ல, உடன் பிறந்தான் என்னலாம்படி மிக்க மகன். தாய்வழியால் வந்த ஏற்றமொன்றுமேயோ வுள்ளதென்ன ; (மிகுசீர் வசுதேவர்தம்கோமகன்) கோவானமகன். சக்ரவர்த்திக்குப்போலே நியாம்யனல்லன் ; இவர் தம்மையும் நியமிக்கும் மகன். அவரை நியமிக்கையாவது- கம்ஸபயத்தாலே இவனுக்கு என்வருகிறதோ! என்று வயிறு பிடித்தால், அப்பரே! நீரேன் பயப்படுகிறீர், அஞ்சாதே, நான் சொன்னத்தைக்கேட்டு ஸுகமேயிரும் என்றாப்போலே நியமிக்கை. (வரில்) இரண்டு பிறப்பாலுமுள்ள இருவர்சீரையும் தோற்ற நடையிலே நடந்துவருமாகில். கூடிடு கூடுலே) நீ கூடி என்னையும் அவனையும் கூட்டு. (௩)

மூ.—ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிட
பூத்தநீள்கடம்பேறிப் புகப்பாய்ந்து
வாய்த்தகாளியன்மேல் நடமாடிய
கூத்தனார்வரில் கூடிடுகூடலே. (௪)

---

மூன்றாம் பாட்டு. (பூமகனித்யாதி) "பூமகன்" என்று-ப்ரஹ்மாவாய், அத்தாலே-இந்த விபூதியைச் சொல்லுகிறது (ஆம்மகன்) மகன் - புருஷனாய், ஆமென்று - தகுதியாய், தகுதியான புருஷன் - புருஷோத்தமன் என்றபடி. விபூதித்வயத்திலுள்ளாரும் எத்துமதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (நாவேவேத்யாதி) நாவமிவ என்றபடி (ஹ்வ ந்தே-ஹவந்தே. "ஹ்வ தாநாதாநயோ:" "ஹ்வ தாநாதாநயோ:" என்கிற தாதுவிலே, ஆதாநமென்று - கொள்ளுகையாய். அத்தால் - அழைக்கை யென்றபடி அழைக்குமாப்போலே இரண்டு விபூதியிலுள்ளாராலும் போற்றப்படு மவனென்று பூரிப்பது போற்றுதற்காம்மகன் - போற்றும்படி யிருக்கிற மகனென்றபடி. அணி-அழகு வாள் - ஒளி. நுதல் - நெற்றி. கோ - ராஜா. இரண்டு பிறப்பு-தேவகிக்கும் வஸுதேவர்க்கும் பிறக்கை. ௩.

---

(க) யஜு: ஸம்ஹிதா-கா-க-ப்ர-௬-அனு கஉ-ப ௩.

ப - ரை. ஆய்ச்சிமார்களும்-இடைச்சிகளும். ஆயரும் - இடையரும், அஞ்சிட-பயப்படும்படியாக ; பூத்த-புஷ்பிதமாய், நீள்-உயர்ந்திருந்துள்ள, கடம்பு- கடம்பமரத்தில், ஏறி - உயர்ந்த கிளையிலே யேறி, புக-கால் ஆழத்திலே புகும்படி, பாய்ந்து-குதித்து, வாய்த்த-தன்கையிற்சிக்கின, காளியன் மேல்-காளியன் பணத்தின்மேல் நின்று, நடமாடிய-ந்ருத்தம்செய்த, கூத்தனார்-கூத்தனானவன், வரில் கூடிடு கூடலே—.

வ்யா.—நாலாம் பாட்டு. (ஆய்ச்சிமாரித்யாதி) பயமேஸ்வபாவமானவர்களும். (ஆயரும்) பயம் வ்யுத்பத்தி பண்ணியறியாதவர்களும். (அஞ்சிட) அதுவே*போர்க்களமாகவிறே ந்ருத்தம் செய்தது. (பூத்த நீள்கடம்பு) விஷதத்கமான கடம்பு, திருவடிகள் பட்டவாறே பூத்தது. அங்கோலதைலத்துக்குள்ள ஶக்தியும் இங்கில்லையன்றே. கல்லும்பெண்ணானால் கடம்பு பூக்கச்சொல்லவேணுமோ. (நீள்கடம்பு) இலக்குவாய்க்கைக்காக வுயரவேறிப்பாய்ந்தான். (புகப்பாய்ந்து) காலாழக்குளிக்க. (வாய்த்தகாளியன்) தன் முலைகளிலே இவள்கணிசிக்கும் நடமடைய அவன்தலையிலே பெற்றான். பெண்ணாய்ப்பிறவாதே காளியனாய்ப்பிறந்தேனாகில் இதெல்லாம் பெறலாய்த்தே. விஷம் பொதிந்தவன் தலையாகப் பெற்றான், அம்ருதம்பொதிந்த முலைகள் பெறாதொழிவதே!. (நடமாடிய) ந்ருத்தஶாஸ்த்ரத்துக்கு ஸூத்ரமிறே. (கூத்தனார்வரில்) ஆடினவொசிவோடே வந்தணையவேணும். (கூடிடு கூடலே) உன் இசைவு கொண்டு பெறவிருக்கிறேன் நான். (௪)

---

நாலாம் பாட்டு (ஆய்ச்சிமாரித்யாதி) ஸ்த்ரீ புருஷவ்யக்தியைப் பற்ற-பயமுண்டில்லை யென்கிறது. பயப்படவேண்டுவா னென்னென்ன; 'காளியன்மேல்'' என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (அதுவே போரித்யாதி) அவன் தலை யுத்த பூமியாக வென்றபடி. தக்தமானகடம்பு பூக்கக்கூடுமோ வென்ன ; அருளிச்செய்கிறார் (அங்கோலமித்யாதி) அம், கோலென்று - வில்லாய், அழகிய வில்லையுடைய சக்ரவர்த்தித் திருமகன். அங்கோல தைலத்துக்குள்ள ஶக்தியாவது - அழிஞ்சில் பழம் அம்மரத்தின் கீழே உதிர்ந்து கிடந்தால், ஆகாஶத்திலே மின்னினால் அக்ஷணத்திலே அந்தப் பழம் மரத்திலே பழையபடியே ஒட்டும் ; அந்தக்ஷணத்திலே அப்பழத்தை வாங்கி தைலமாக்கி ஒரு மாவிரையிலே தடவி தரையிலேநட்டால் அப்போதே முளைத்து பெரியமரமாய்க் காய்த்துப் பழுக்கு மென்றாப்போலே சொல்லுவர்கள் காலாழக்குளிக்க -திருவடிகள் அவன் பணத்திலே அமிழ

மூ.—மாடமாளிகைசூழ் மதுரைப்பதி
நாடி நந்தெருவின் நடுவேவந்திட்டு
ஓடைமாமதயானை யுதைத்தவன்
கூடுமாகில் நீகூடிடுகூடலே. (ரு)

ப - ரை. ஓடை-முகப்பட்டத்தையுடைத்தாய், மாமதம் - மிக்க மதத்தையுடைய, யானை - குவலயாபீடமென்னும் யானையை, உதைத்தவன்—, மாடம்-மாடங்களாலும். மாளிகை-மச்சுவீடுகளாலும், சூழ் - சூழப்பட்ட, மதுரைப்பதி-மதுரா நகரத்தை, நாடி - தேடிக்கொண்டு, நம்-நம்முடைய, தெருவின் நடுவே வீதியின் நடுவே, வந்திட்டு-வந்து, கூடுமாகில் கூடலே நீ கூடிடு—.

வ்யா.—அஞ்சாம் பாட்டு. (மாடமாளிகைசூழ் மதுரைப்பதி நாடி) அவன் வில்விழவுக்கு என்று கோடித்தான்; இவள் இவன் வாவுக்கென்றிருந்தாள். (நாடி) நேரேவந்து புகுரவொண்ணாது, "இன்னாள் வீடு எது, இன்னாள் வீடெது" என்று ஊர் இரியலிடத் தேடிவிட்டுவிடாயெல்லாந்தோற்ற, (க) [ஸுதாயுக்தௌ மாலாகாரக்ருஹம் கதௌ-முதாயுக்தௌ மாலாகாரக்ருஹம்கதௌ] மாலாகாரருக்குமுடுக்குத்தெருவிலே யிறே அகம், பெருந்தெருவெல்லாந்தேடி முடுக்குத்தெருவிலே கண்டுகொண்டானிறே; [ப்ரஸாதபரமௌ-ப்ராஸாதபரமௌ] ப்ரஸாதமே விஞ்சியிருப்பது; [நாதௌ-நாதௌ] இது தர்மமென்கைக்கு ஒரு தர்மியுண்டித்தனை; [மமகேஹமுபாகதௌ-மமகேஹமுபாகதௌ] நாதத்வம் மிக்கிருக்கில் அழைத்தன்றோ காண்பது. [தந்யோஹம் - தந்யோஹம்] ஆரும் தேடிப்பெறாத நிதியை, இருந்தவிடத்தே எடுத்துக்கொள்ளப் பெற்றேன்; [அர்ச்சயிஷ்யாமி - அர்ச்சயிஷ்யாமி] ஸ்வரூபாநுகுணமாகப்பெற்ற நிதியை யழித்து புஜிப்பேன். [இதி-இதி] இப்பாசுரம் ஆர்சொன்னாரென்னில்; [மாலோபஜீவந:-

வாதல், கொப்பளிக்கவாதல். ஸ்ரீபாஷ்யத்துக்கு ஸூத்ரம்போலே ந்ருத்த ஶாஸ்த்ரத்துக்கும் இவனுடினது ஸூத்ரமென்றபடி ... ௨.

அஞ்சாம் பாட்டு (மாடமித்யாதி) இரியலிட - ஆரவாரம் பண்ண. தேடிவிட்டு - முழுச்சொல்லு. தேடிப்போனவிட முண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (முதாவித்யாதி) (நாதத்வம்) என்று தர்மிமாக்ரத்திலே ஒதுக்குவானென்னென்ன; அருளிச் செய்கிறார் (நாதத்வமித்யதி) அழித்து புஜிக்கை - அர்ச்சநாதிகளாலே அநுபவிக்கை. (மாலை

(க) வி-பு-ரு-கக-உக.

மால்யோபஜீவந:] போக்யத்தைவிற்று உண்கிறவன். பார்யையை விற்று உண்பாரைப்போலே, முகத்தைத் திரியவைத்திறே மாலை கட்டுவது இதிலே சாண்மாலையழியாமைக்காக. [ஆஹ - ஆஹ] இவ் வரவு இவனை யிப்படியாக்கிச் சொல்லுவிப்பதும் செய்ததும் என் கிறுன். இவள் தானும் ஒருமாலைக்காரர் மகளிறே. (நந்தெருவு) திருவாய்ப்பாடியடையத்தன்ன தானுப்போலே இங்குமொரு திரு மாளிகையுண்டு. உகந்தருளினவிடமெங்கும், (க)"தேவத்வே தேவதேஹோயம் மனுஷ்யத்வேச மாநுஷீ" "தேவத்வே தேவதேஹோயம் மநுஷ்யத்வேச மாநுஷீ" - ஒரோ திருமாளிகையுண்டு. இன்னுளகத்துக்கு என்று முகம்தெரியாதபடி அகத்தளவும் தெருவின் நடுவே வரவேணும். (ஓடை) முகபடமுமாம்; பட்டமுமாம். (மாமதயானை) களிப்பித் தார்கள் மதத்ரவ்யங்களாலே, மதத்தாலே செருக்கித் திமிர்த்து நின்றது; திருவடிகளாலே யுதைத்தவன். (கூடுமாகில்) விரோதி போய்த்து, நீ கூட்டித்தருமித்தனை. ... ... (ரு)

மூ.—அற்றவன் மருதம்முறியநடை
கற்றவன் கஞ்சனை வஞ்சனையில்
செற்றவன் திகழும் மதுரைப்பதி
கொற்றவன் வரில் கூடிடுகூடலே. (சு)

ப - ரை. அற்றவன்-முன்பே தனக்கு அற்றுத்தீர்ந்தவனுய், மருதம்-யமளார்ஜுநங்களென்னும் மருதமரங்களானவை, முறிய-முறியும்படியாக, நடை-நடக்கைக்கு, கற்றவன்-அப்யஸித்தவனுய், கஞ்சனை-கம்ஸனை, வஞ்ச னையில்-வஞ்சனையினுலே, செற்றவன் - ஜயித்தவனுய், திகழும்-விளங்கா நின்றுள்ள, மதுரைப்பதி - மதுரா நகரத்துக்கு, கொற்றவன்-ராஜாவானா வன், வரில் கூடிடு கூடலே—.

---

யழிக்கை) - அதிலே அல்பமாகிலும் தானுசைப்படுகை. மாலைவிற்கிறவன் "தந்யோஹம்" "தந்யோஹம்" என்னக் கூடுமோவென்ன; அருளிச்செய் கிறுர் (இவ்வரவித்யாதி) என்கிறுனென்றது—"இத்யாஹ" என்றத்தைப் பற்ற. அங்கேபூவுக்காகப் போகிறுன், இங்கே வரக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறுர் (இவள் தானுமித்யாதி) முகம் தெரியாதபடி - முன் னடிதோற்றுதபடி. த்வரித்தென்றபடி. முகபடம்-முகத்தை மறைக்கும் சோடு. ... ... ... ... ... ரு.

---

(க) வி-பு-க-கூ-கசரு.

வ்யா.—ஆறும் பாட்டு. (அற்றவன்) முன்பே தனக்கற்றவன். இவளுக்காகக் காணும் பிறந்தது. * ஸாதூநாமன்றே. தன்னையறியாத பருவத்தே விரோதியைப் போக்கினபடி. (மருத மித்யாதி) (க)" யமளார்ஜுநௌ " இத்யாதி. (வஞ்சனையில்) தர்மயுத்தமே வேணுமென்று பெருமாளைப்போலே யிருந்தானாகில் அவன் வஞ்சநமே தலைகட்டுமே, அவன்நினைத்த வஞ்சநத்தை அவன்றன்னோடே போக்கினபடி. (திகழும் மதுரைப்பதிக்கொற்றவன்) ராஜ்யத்துக்கு உக்ரஸேநனை வைத்தானேயாகிலும், இவனே ராஜா என்று இவள்பக்ஷம். (வரில் கூடிடு கூடலே) ராஜாக்களுக்கு ப்ரேரகன் வேணுமோ. ... (சு)

மூ.—அன்று இன்னாதனசெய் சிசுபாலனும்
நின்றநீண்மருதும் எருதும் புள்ளும்
வென்றிவேல்விறல் கஞ்சனும்வீழ முன்
கொன்றவன்வரில் கூடிடுகூடலே. (எ)

ப - ரை. அன்று-ஸ்வயம்வரத்துக்கு ப்ரதிபந்தகனானவன்று, இன்னாதனசெய் - வெறுப்பாமவற்றையே செய்யா நின்றுள்ள, சிசுபாலனும்—, நின்ற-தன்னை யழிப்பதாக நினைத்து நின்ற, நீள் - ஓங்கியிருந்துள்ள, மருதும்-மருதமரங்களும், எருதும் - எழுரிஷபங்களும், புள்ளும் - பகாஸுரனும், வென்றி-வெற்றியையுடைத்தான, வேல் - வேலையும், விறல் - பகைவரை வெல்லும் மிடுக்கையுடைய, கஞ்சனும்-கம்ஸனும் வீழ-நசிக்கும்படி' முன்கொன்றவன் வரில் கூடலே கூடிடு—.

வ்யா.—ஏழாம் பாட்டு. (அன்றின்னாதன) கூடல் கூடாத இன்றுபோலே ஸ்வயம்வரத்துக்கு ப்ரதிபந்தகனானவன்று. மிகக்கூட்டாவுக்கு இன்னாதன செய் ஶிஶுபாலன். (நின்றவித்யாதி) அவன்றனக்கே தனியே இன்னாதனசெய்த விடங்கள் போராதே இவ

---

ஆறும் பாட்டு. (அற்றவனித்யாதி) மேலுக்கவதாரிகை (தன்னையித்யாதி) மருதமுறிய-முறியவென்னுதல் ; உரியவென்னுதல். உக்ரஸேனன் ராஜாவாயிருக்க, க்ருஷ்ணனை "மதுரைப்பதிக்கொன்றவன்" என்னக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (ராஜ்யத்துக்கித்யாதி) " உக்ரஸேநனை ராஜாவாகவைத்த வனிவனுகையாலே" என்று தாத்பர்யம் சு.

ஏழாம் பாட்டு. (அன்றித்யாதி) அன்றும் என்றது-அன்று அவளுக்கு ப்ரதிகூலனான ஶிஶுபாலனைப் போக்கினப்போலே இன்றும் என்

---

(க) வி-பு-ரு-கூ-கஎ.

ணைக்கண்டு நின்றது. (நீள்மருதும்) சாய்ந்தால் பிழைக்கவிடாது; (எருதும்) இவனை நலியநின்ற எழெருதும்; (புள்ளும்) பகாஸுரனும்; வென்றியைத் தருவதான வேலையுடையனாய் அதிவும் மிகையாம்படியான மிடுக்கையுடையனான கம்ஸன்; கஞ்சனும்-கீழ்ச்சொன்னவற்றுக் கடியான அவன்றன்னையும். (கொன்றவன்) ஏகப்ரயோகத்தே விரோதிகளை யடையப்போக்கி, அவஸர ப்ரதீக்ஷனாய் நின்றான்; இனி நீ கூடுமித்தனை. ... (எ)

மூ.— ஆவலன்புடையார்தம் மனத்தன்றி
மேவலன் விரைசூழ் துவராபதிக்
காவலன் கன்றுமேய்த்து விளையாடும்
கோவலன்வரில் கூடிடுகூடலே. (அ)

ப-ரை. ஆவல் - நோன்பு நோற்கை முதலியவற்றில் ஆவலையும். அன்பு-பல்லாண்டு பாடுகையில் அன்பையும், உடையார்தம் - உடையவர்களுடைய, மநத்தன்றி - மநஸ்ஸிலே யல்லாமல், மேவலன்-மற்றோரிடத்தில் பொருந்தி வஸியாதவனாய், விரைசூழ் - பரிமளம் மிக்கபொழிலாலே சூழப்பட்ட, துவராபதி - த்வாரகைக்கு நிர்வாஹகனாய், காவலன் - ஸகல லோகங்களையும் காக்குமவனாய், கன்று-கன்றுகளை, மேய்த்து—, விளையாடும்-விளையாடுமவனாய், கோ-பசுக்களை ரக்ஷிப்பதில், வலன்-ஸமர்த்தனான க்ருஷ்ணன், வரில் கூடிடு கூடலே—.

வ்யா.—எட்டாம் பாட்டு. (ஆவல்) ஆவலுடையார்தான்; குணத்யவஸாயமும் கிடக்கச்செய்தே, நோன்பு நோற்பது, காமனை ஆராதிப்பது, சிற்றிலிழைப்பது, பனிநீராடுவது, கூடலிழைப்பதான இவை-ஆவலாவது. (அன்பு) (க) * மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா உன்செவ்வடி செவ்வி திருக்காப்பு என்பது. (உ)"உறகலுறகல்"என்னும் தமப்பனாருடைய வன்பு. தங்கள் குடியிலுள்ளார் மநத்தோடல்லது மேவானென்கிறாள். (விரைசூழித்

விரோதியைப் போக்கி ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்று தாத்பர்யம். "கஞ்சனும்" என்றவிடத்தில் சகாரம் ப்ராதாந்யத்திலே. விரோதிகளெல்லாவற்றையும் சொல்லி, "கொன்றவன்" என்கையாலே-(ஏகப்ரயோகத்தே) என்கிறது (கூடல் கூடாத) என்னும் இத்யாதி வாக்யம்-கடிநம். எ.

எட்டாம்பாட்டு. (ஆவலித்யாதி) ஆவல் - அபிநிவேஶம். விரை-பரிமளம். குடியில்-ஸந்தாநத்தில். "துவராபதி" என்னாதே,"விரைசூழ்"என்று

(க) திருப்பல்லா-க. (உ) பெரி-தி-ரு-உ-கூ

யாதி) ஆவலில்லாதாரோடும் பொருந்துமவன் கிடீர்; (க) "ஷோடஶ ஸ்த்ரீ ஸஹஸ்ராணி" "ஷோடஸஸ்த்ரீ ஸஹஸ்ராணி" இத்யாதி. அவ்வூரிலுள்ள மணம்போராமே ஸ்வர்க்கத்திலுள்ள மணமும் கூட்டிக்கொடுத்தானிறே. (உ) "மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்டுவரை நட்டான்" என்னக்கடவதிறே. ஜகத்வ்யாபார லீலை பண்ணி. (கன்றுமேய்த்து விளையாடும்) (௩) "ஸர்வஸ்வஜகத꞉ பாலௌ வத்ஸபாலௌ பபூவது꞉" "ஸர்வஸ்பஜகத꞉பாலெள வத்ஸபாலெள பபூவது꞉" (கோவலன்) ராஜ்யம் பண்ணுமைக்காகவுமாம். ... ... (அ)

மூ.—கோண்டகோலக் குறளுருவாய்ச்சென்று
பண்டுமாவலிதன் பெருவேள்வியில்
அண்டமும்நிலனும் அடியொன்றினால்
கோண்டவன்வரில் கூடிடுகூடலே. (௯)

ப-ரை. முப்புரிநூலும் க்ருஷ்ணாஜிநமும் முஞ்சியும் பவித்ரமும் தண்டுமுடையவனாய், கோலம்கொண்ட-அழகிதான, குறளுருவாய் - வாமநவேஷத்தையுடையனாய். பண்டு - முன்பு, மாவலிதன் - மஹாபலியினுடைய, பெரு, ப்லாக்யமான, வேள்வியில் சென்று- யஜ்ஞவாடத்திலே சென்று, தன் சிறியவடிவைக் காட்டி நீரேற்று, அண்டமும் - அண்டம் முதலிய மேலுலகங்களை, அடியொன்றினால்-ஓரடியாலும் நிலனும் - பூமி முதலிய கீழுலகங்களை, அடியொன்றினால் ஓரடியாலும், கொண்டவன் - அளந்துகொண்ட த்ரிவிக்ரமன், வரில் கூடலே நீ கூடிடு—.

வ்பா.—ஒன்பதாம் பாட்டு. (கொண்டகோலக் குறளுருவாய்) யஜ்ஞோபவீதமும், க்ருஷ்ணாஜிநமும், பவித்ரமும், தண்டும், பாமபதத்தி லொப்பனையிலும் அழகிதாயிருந்தபடி. (பெருவேள்வியில்) கூடல் தலைக்கட்டியும் பெறுகிருக்க, வேள்வியின் நடுவே இவனைக்காணப் பெற்றவேள்வி. அண்டம் ஓரடியும், நிலம் ஓரடியும். அவன் தன்னுடைமை விடான், நீ கூடுகையே குறை

விஶேஷித்த தென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவ்வூரிலுள்ள வித்யாதி) "துவராபதி" என்று - த்வாரகைக்கு நிர்வாஹகனென்றபடியாய், "காவலன்" என்று - ஜகத்வ்யாபார லீலைகளைப் பண்ணுமவன், கன்று மேய்த்து விளையாடுகைக்காகக் கோவலனான னென்று பதபேதநயோஜித்துக்கொள்வது. கோவலனானதுக்கு ப்ரயோஜநாந்தரம் (ராஜ்யமித்யாதி) ராஜ்யம் பண்ணுகை அஸஹ்யமாய். கோவலனானனென்றாகவுமாம்.

(க) வி-பு-ரு-௩௧ ௧௭. (உ) தி-மொ-௯ அ-௭. (௩) வி-பு-ரு-௩௧-௧௭.

(க) "'త్రీణిపదావిచక్రమే' 'த்ரீணிபதாவிசக்ரமே' என்றும், (உ) 'மூன்றடி நிமிர்த்து' என்றும் உண்டாயிராநின்றது. இதிருக்கிறபடியென்" என்று பட்டரைக்கேட்க; (ந) "'పరోమాత్రయాతనువావృధాన। నతేమహిత్వమన్వశ్నువన్తి। ఉభేతేవిద్మరజసీపృథివ్యా విష్ణోదేవత్వమ్। పరమస్యవిత్సే' 'பரோமாத்ரயாதநுவாவ்ருதாந । நதேமஹித்வமந்வஸ்நுவந்தி । உபேதேவித்மரஜஸீப்ர்திவ்யா விஷ்ணோதேவத்வம் । பரமஸ்ய வித்ஸே' என்று-வேதபுருஷன்முனே இரண்டடியா லளந்த விடமெல்லாருமறியும், நீ மூன்றடியாலளந்தவிடம் உனக்கே தெரியுமத்தனை என்று காணமல் விட்டான்; (அவன் அளந்தமையுண்டு, அவனுக்கே தெரியுமத்தனை) என்று அருளிச்செய்தார்" என்று ஜீயர் அருளிச்செய்வர். ... ... ... (கூ)

மூ.—பழகுநான்மறையின் பொருளாய் மத
மொழுகுவாரண முய்யவளித்த எம்
அழகனூர் அணியாய்ச்சியர்சிந்தையுள்
குழகனூர் வரில் கூடிடுகூடலே. (க0)

ப - ரை. பழகு - நித்யமான, நால்மறையின் - நான்கு வேதங்களினுடைய. பொருளாய் - உட்பொருளாயிருக்குமவனாய், மதம் ஒழுகு - மதஜலம் பெருகாநின்றுள்ள, வாரணம் - ஸ்ரீகஜேந்த்ராழ்வான், உய்ய - உஜ்ஜீவிக்கும்படி, அளித்த - க்ருபைபண்ணுகையாலே, எம்-எங்களுக்கு, அழகனூர் - அழகையுடையராய், அணி - அழகிய, ஆய்ச்சியர் - கோபிகா ஸ்த்ரீகளுடைய, சிந்தையுள் - மநஸ்ஸிலே, குழகனூர்-கலந்திருக்குமவர், வரில் கூடலே கூடிடு—

---

ஒன்பதாம் பாட்டு. (கொண்ட வித்யாதி) (இதிருக்கிறபடியென்) என்றது-இரண்டடியாலே அளந்தானென்று இருக்கிறபடி யென்னென்றபடி.

"పరః-త్వం అతిమాత్రయా-తన్వా, వృధాన - వర్ధితవానసి, తేమహిత్వం, న-అన్వశ్నువన్తి; - ఈదృశ్యయా ఇయత్తయా-నానుభవన్తీత్యర్థః. పృథివ్యాః-తే-ఉభే-రజసీ-విదుః పృథివీశబ్దేనలోక ఉపలక్షితః; రజసీ-చరణౌ; (ச)"లోకవిక్రాన్త చరణౌ" ఇతియావత్; ఏతావదేవవిద్మః, అస్యపరమ్-త్వమేవవిత్సే జానాసి" "பர:த்வம் அதிமாத்ரயா தந்வா, வ்ர்தாந-வர்த்திதவாநஸி, தேமஹித்வம், ந-அந்வஸ்நுவந்தி;ஈத்ர்க்தயா இயத்தயாநாநுபவந்தீத்யர்த்த:. ப்ருதிவ்யா:-தே-உபே - ரஜஸீ-வித்:, ப்ர்திவீஸப்தேநலோக உபலக்ஷித:; ரஜஸீ - சரணௌ; "லோகவிக்ராந்தசரணௌ" இதியாவத். எதாவதேவவித்ம:, அஸ்ய-பரம்-த்வமேவவித்ஸே ஜாநாஸி ... ... கூ

---

(க) புருஷ ஸூ. (உ) பெரி-தி-ச-எ-க0.
(ந) புருஷஸூ-நாராயணநுவாகே.

வ்யா.—பத்தாம்பாட்டு. (பழகுநான்மறையின் பொருளாய்) அபௌருஷேயமான வேதங்களின் அர்த்த மிவனேயிறே. அல்லாதவை ஏகவிஜ்ஞாந ந்யாயஸித்தம், ஸமதமாத்யுபேதமன்று. (மதமொழுகுவாரணம்) அகப்பட்டவிடரில் நின்றும் உய்ய. (எம்மழகனார்)(க) "ஸ்ரக்பூஷாம்பரமயதாயதந்ததாந:"—"ஸ்ரக்பூஷாம்பரமயதாயதந்ததாந:." (அணியாய்ச்சியரித்யாதி) "தங்குமேல்" என்றிருக்குமவள் அப்போதே இவனுதவாவிட்டால் இனிப்பிப்பிதற்றமையும் வரிலும் முகங்கொடுப்பதில்லையென்றிருந்தவர்கள் நெஞ்சில் மறமாறும்படி வாழ்வுகள் செய்தும் தாழ்வுகள் சொல்லியும் கலந்தவர்களோடே கலக்கவல்லவன்; அப்படி என் இன்னுப்பைத் தீர்த்துக் கலக்குமாகில் கூடிடு. ... ... (௧௦)

மூ.—ஊடல்கூடல் உணர்தல்புணர்தலை
நீடுநின்ற நிறை புகழாய்ச்சியர்
கூடலைக் குழற்கோதை முன்கூறிய
பாடல்பத்தும்வல்லார்க்கு இல்லைபாவமே. (௧௧)

ஆண்டாள் திருவடிகளே ஸரணம்.

ப-ரை முன் - ராஸக்ரீடை நடந்தகாலத்திலே, ஊடல் கூடல் - ஊடலோடு கூடுகையும், உணர்தல் - இவர்கள்குறைகளை அவன் உணரும்படியும் புணர்தல்-பின்பு அவன் ஸம்ச்லேஷிக்கும்படியையும் ஆகிய இவற்றிலே, நீடுநின்று - நீடித்து நின்று. கூடலை - கூடலிழைக்கையைச் சொன்ன, குழல் - அழகியமயிர் முடியையுடையளான, கோதை - ஆண்டாள், கூறிய - அருளிச்செய்த, பாடல்பத்தும் - பத்துப்பாட்டுக்களையும், வல்லார்க்கு - அப்யஸிக்கவல்லவர்களுக்கு, பாவமில்லை - இவளைப்போலே கூடலிழைத்து வருந்தவேண்டிய பாபமில்லையாம்.

---

பத்தாம் பாட்டு. (பழகித்யாதி) வேதார்த்தம் இவன்தானேயோ, சேதநா சேதநங்களுமில்லையோவென்ன; அருளிச் செய்கிறார் (அல்லாதவையித்யாதி) ஏகவிஜ்ஞாநந்யாயமாவது - காரண விஜ்ஞாநாத்கார்ய விஜ்ஞாநமென்கிற ந்யாயம். (உ) "யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருந்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்" "யதாஸோம்யைகேநம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்" என்னக்கடவதிறே. ஒன்றையறியவே எல்லாமறிந்ததாம், அப்படியே ஈஸ்வரனைச் சொன்னபோதே எல்லாம்சொன்னதாமென்றபடி. ப்ரஹ்மஜ்ஞாநத்தாலே ஸகலஜ்ஞாநமு முண்டாகையாலே, ஸமதமாத்யுபேதனுய்க் கொண்டு சேதநாசேதநங்களைத் தனித்தனியே அறியவேண்டுவதில்லை; ஆகையாலே, சேதநாசேதநஜ்ஞாநம் ஸமதமாத்யுபேதமன்றென்கிறது .... ... ... ௧௦

---

(க) ர - ஸ்து - உ - ௰௧. (உ) சாந்தோ,

குப் பெருமாளைப் பிரிந்தபோதே கூடவேணுமென்னு மாசையுண்டாயிருக்கச்செய்தேயிறே,(க)"ఊర్ధ్వం మాసాన్న జీవిష్యే" "ஊர்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே" என்பது; அவர்தாம், (உ) "న జీవేయం క్షణమపి" "நஜீவேயம்க்ஷணமபி" என்பதாய்த்து, (ந) [స్వప్నేపి యద్యహం వీరం - ஸ்வப்நோபியத்யஹம்வீரம்]ஸ்வப்நத்திலேகண்டாலும் துக்கநிவர்த்தகராக்கவல்லராய்த்து. [రాఘవం సహలక్ష్మణం- ராகவம்ஸஹலக்ஷ்மணம்] பிரிகிறபோது இருவரையுங்கூடப்பிரிகையாலே. காணுமிடத்திலும் இருவரையுங்கூடக்காணவேணுமென்றிறே ஆசைப்படுவது. அப்போது. இருவரும் பிரிகையாலே "தங்களில் கூடினார்களோ இல்லையோ" என்னும் அதிஶங்கை பண்ணியிருக்குமே. [పశ్యేయం యది జీవేయం స్వప్నోఽపి మమ మత్సరీ - பஶ்யேயம்யதிஜீவேயம் ஸ்வப்நோபிமமமத்ஸரீ]என் அவஸ்த்தையறிந்து முகங்காட்டாமைக்கு அவரேயன்றிக்கே, இதுவும் என்னை நலியவேணுமோ என்றாளிறே. தான்காணப்பெறாதபோதும் பிறர் கண்டுசொல்லக்கேட்டு தரித்திருந்தாளிறே அவள்; த்ரிஜடாதிகள் சொல்லக்கேட்டு தரித்திருந்தாப்போலே யிருக்கவல்லவளல்லளாய்த்து இவள். இவள் தன்னையுண்டாக்கி யநுபவிக்கவேணுமென்றிருக்குமே, ஸ்வப்நத்தி

அருளிச்செய்கிறார் (பிராட்டிக் கித்யாதி.) "அவன்பாகம் பிறக்குந்தனையும் முகங்காட்ட வொண்ணாதென்று வரவுதாழ்க்க, அது பற்றாமல் இவள் கிடந்து அலமாக்க, அத்தைக்கண்ட ஈஶ்வரன் 'நாம் கடுகக்கிட்டிக்கொடு நிற்கில் உடைகுலைப்படும்" என்று ஸ்வப்நமுகேந அநுபவிப்பித்து தரிப்பித்து,அநந்தரம் அநுபவிப்போமென்று விசாரித்து, ஸ்வப்நத்திலேவந்து அநுபவிப்பிக்க, அநுபவித்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறது" என்று கூட்டி யோஜிப்பது இப்படி ஸ்வப்நம் தாரகமாமோவென்ன; தாரகமாகையாலே பிராட்டி ப்ரார்த்தித்தாளென்கிறார்(ஸ்வப்நேபீத்யாதி.) "సహలక్ష్మణం - ஸஹலக்ஷ்மணம்" என்றது - இருவரையும் காணவேணுமென்னுதல்; இருவரும் கூடினார்களோவென்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் (அப்போதிருவருமித்யாதி.) தான் காணுவிட்டால் ஸ்வப்நத்திலே தரித்தபடி எப்படி யென்ன; (தான் காணப்பெறாதவித்யாதி.) பிறர்காண்கை- த்ரிஜடைகாண்கை. அப்படியே இவளுக்கும் பிறர்முகேந ஸ்வப்நத்தைக் காட்டி தரிப்பிக்கலாகாதோவென்ன; அருளிச்செய்கிறார் (த்ரிஜடாதிகளித்யாதி.) ஆகையாலே (இவள் தன்னை உண்டாக்கி) என்று கூட்டுவது.

(க) ரா-ஸு-கூஅ-கஎ. (உ) ரா-ஸு-சுகூ-கO. (ந) ரா-ஸு-நச-உக.

லேயாகிலும் அநுபவிப்பித்து தரிப்பிப்போமென்று பார்த்தான்; இஜ்ஜந்துக்கள் கிடந்துஉறங்காநிற்கச்செய்தே,ஸர்வேஶ்வரன்றான் உணர்ந்திருந்து கர்மாநுகுணமாகச் சிலபதார்த்தங்களை ஸ்ருஷ்டித்து, ஸ்வப்நத்திலே யநுபவிப்பிக்குமென்று சொல்லாநின்றதிறே. அப்பொதுவான நிலையன்றிக்கே, தன்னை யநுபவிக்கவேணுமென்று இருக்கிறாளாகையாலே, இவள் அநுபவிக்கவேணுமென்று பார்த்து, இருந்தபடிகளில் ஒன்றும் குறையாதபடி பாணிக்ரஹண பர்யந்தமாக ஸ்வப்நத்திலே அநுபவிப்பிக்கஅநுபவித்து, தானநுபவித்தபடியைத் தோழிக்குச்சொல்லி தரிக்கிறாளாயிருக்கிறது. ... ... ... *

அவ.—முதற்பாட்டு. (வாரணமித்யாதி) வந்து புகுந்தால் அநுபவிக்கையன்றிக்கே, "வாராநின்றான்" என்று ஊரிலே வார்த்தையானவாறே தொடங்கி அநுபவிக்கவேணுமென்றுபோலே காணும் இவள்தான் ஆசைப்பட்டிருப்பது. அவனுடைய கதிசிந்தனை பண்ணுகிறாளாய்த்து.

மூ.—வாரணமாயிரம் சூழவலஞ்செய்து
நாரணநம்பி நடக்கின்றானென்றெதிர்
பூரணபொற்குடம் வைத்துப்புறமெங்கும்
தோரணம்நாட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (௧

ப-ரை. தோழீ—, நம்பி - குணபூர்த்தியையுடையனான, நாரணன் - க்ருஷ்ணனானவன், வாரணமாயிரம் - ஆயிரம் யானைகள், சூழ - சுற்றிலும்

ஆறால் லோகவ்யாவ்ருத்தமாக பாணிக்ரஹணபர்யந்தமாக ஸ்வப்நந்தன்னை அவனுண்டாக்குமோ வென்ன; அருளிச் செய்கிறார் (இஜ்ஜந்துக்களித்யாதி.) (சொல்லாநின்றதிறே)(௧)"ఏషుసుప్తేషు-[illegible]" இத்யாதியாலே என்றபடி. (அப்பொதுவான நிலையன்றிக்கே) என்ற விடத்திலே, (௨)"స్వప్నేపి కేశవాదన్యం నపశ్యతి మహామతిః। స్వప్నేపితస్య నాయాంతి పురుషార్థవిరోధినః" "ஸ்வப்நேபிகேஶவாதந்யம் நபஶ்யதிமஹாமதி: । ஸ்வப்நேபிதஸ்யநாயாதி புருஷார்த்தவிரோதிநீ" என்றத்தை யருளிச்செய்வர்.

இத்தால் - ஈஶ்வரன் ஸ்வப்நாநுபவம் பண்ணி வருமிடத்தில், ஸாமாந்யர் விஷயத்தில் கர்மாநுகுணமாகவும் ஆஶ்ரிதர் விஷயத்தில் அவர்கள் ருச்யநுகுணமாகவும் அநுபவிப்பிக்குமென்று பலிக்கிறதென்றருளிச்செய்வர். ... ... ... ... *

(௧) கட-வல்லி ௨-௫-௮. (௨)

சூழ்ந்துவர, வலஞ்செய்து - ப்ரதக்ஷிணமாக, நடக்கின்றானென்று-நடந்து வருகிறானென்று, எதிர்-எதிரே, பொன்-பொன்னாலாகிய, பூரணக்குடம்-பூர்ண கும்பங்களை. வைத்து - தந்தாம் திருமாளிகைவாசலில் இரண்டருகுமுள்ள திண்ணைகளில் வைத்து, புறமெங்கும் - ஊர்ப்புறமெங்கும், தோரணம்நாட்ட - தோரணஸ்தம்பங்கள் நட, நான் கனாக்கண்டேன்—.

வ்யா.—(வாரணமாயிரம் சூழவலஞ்செய்து) *உந்துமதகளிற்றன் பிள்ளையிறே. ஸ்ரீ நந்தகோபரும் ஆனையேறியிறே திரிவது. ஸ்ரீ வஸுதேவரும் நந்தகோபரும் தங்களில் மித்ராராய்,(க)"ஸகோமஜ ஷண்முகஸ" "வகம்துகேம்ஸகஞ்சநெள" என்றிருக்கிறபடியாலே இங்குத்தை கோஸம்ருத்தி அவரதாய், அங்குத்தை யானைகுதிரை இவரதாய், ஒன்றாய்ப் பரிமாறியிறே போருவது இனி, தத்த புத்ரர்களுக்கு இரண்டிடத்திலும் அம்ஸமுண்டாயிறே யிருப்பது. ஆகையாலே யானைக்குக் குறையில்லையிறே. "ஆயிரம்" என்ற நிர்ப்பந்தத்துக்குக் கருத்தென்னென்னில்; * தன்னோராயிரம் பிள்ளைகளொடு தானுமாக வரும்போது அவர்களைத் தன்னில் தாழ்வாக வொட்டானே; ஆகையாலே "ஆயிரம்" என்கிறது. *தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்கவருள்செய்திறே வைப்பது. (நாரணன்நம்பி) உபயவிபூதியுக்தன் வருமாப்போலே யிருக்கும்போலே காணும், ஸ்ரீமதுரைக்கும் திருவாய்ப்பாடிக்கும் கடவார் வரும்போது. (நம்பி) உபய விபூதி யோகத்தால் வந்த குணங்கள் சொல்லக்கேட்டுப்போமித்தனையிறே; அக்குணங்கள் பூர்ணமாக வநுபவிக்கலாவது அவதாரங்களிலேயிறே. (துறைவாளர்க்கு முகங்கொடுத்த விடத்திலேயிறே

முதற்பாட்டு. (வாரணமித்யாதி, க்ர்ஷ்ணன் பின்னை நாராயணனோ வென்ன; அருளிச்செய்கிறார் (உபய விபூதியுக்தனியாதி.) அதாவது - இவ்விரண்டூருக்கும் கடவனானத்தை உபயவிபூதிக்கும் கடவனானவோபாதியாக நினைத்திருக்குமாய்த்து அவனென்றபடி "நம்பி" என்றது - இவ்வூர்களுக்கு நிர்வாஹகனாகையாலே வந்த பூர்த்தி. அன்றிக்கே, "நாரணன்" என்றது - க்ருஷ்ணனையாய், "நம்பி" என்று - நாராயணத்வப்ரயுக்தமான குணபூர்த்தியேயாய், ஆனால் நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாமித்வாதிகுண பூர்த்தியுள்ளது பரத்வத்துக்கன்றோ, அவதாரத்துக்குண்டோவென்ன; (உபயவிபூதீத்யாதி) "நம்பி" என்றதுக்கு ஸௌலப்யாதி

(க) ரா-கி-டு-கஅ.

ஸௌலப்ய மநுபவிக்கலாவது; தாழ்ந்தார்க்கு முகங்கொடுத்த
விடத்திலேயிறே இக்குணங்கள் ஸ்புடமாவது. செவ்வைக்கேடர்
பக்கலிலே அவனுடைய ஆர்ஜ்ஜவகுணங்கள் காணலாம். (நடக்கின்
றானென்று) (க) [కుశస్థలే నివసతి స చ ప్రాతరిహేష్యతి - குஶஸ்தலே நிவஸ
திஸ சப்ராதரிஹேஷ்யதி] இன்ன விடத்திலே வந்துவிட்டான்,
அணித்தாக வந்துவிட்டானென்னு மதுதானும் தரிப்புக்குடலா
யிருக்குமிறே. (உ)"శాపాదపి శరాదపి" "ஶாபாதபி ஶராதபி" என்னும்
விஶ்வாமித்ராதிகளைக் கொடுவரவும் வேண்டாவிறே இங்கு. (எதிர்
பூரணபொற்குடம்வைத்து) எதிரே பூர்ண கும்பங்களை வைத்து.
(புறமித்யாதி) (௩)"தோரணம் நிரைத்தெங்குந் தொழுதனர்" என்
னக்கடவதிறே. இங்குள்ளார் அங்குப்போம்போது அதுக்கும் அடி
யானவர்கள் வரவுக்குடலாக அலங்கரிக்கிறபடி சொல்லுகிறதிறே
இங்கு. (கணாக்கண்டேன்) கதிரில்லிபோலே யிருக்கிற பாஹ்யே
ந்த்ரியங்களாலே அநுபவிக்கிற ஜ்ஞாநங்கொண்டநுபவிக்கை யன்
றிக்கே, கேவல ஹ்ருதயத்தாலே ஒருமுகஞ்செய்து அநுபவிக்கப்

குணபூர்த்தி யென்று தாத்பர்யார்த்தம் அருளிச்செய்கிறார் (குறைவாளர்க்
கித்யாதி.) ஸௌலப்யம் - ஸௌஶீல்யார்ஜவங்களைச் சொல்லுகிறது
(தாழ்ந்தார்)-தன்குணங்களுக்கு விஷயமான ஸம்ஸாரிகள் நித்யஸூரி
களிடங்களிலே குணம் ப்ரகாஶியாதோ வென்ன; அருளிச்செய்கிறார்
(செவ்வைக்கேடரித்யாதி) "நடக்கின்றான்" என்றதுக்கும் "வந்துபுகுந்
தால்" என்ற அவதாரிகாவாக்யத்துக்கும், "కుశస్థలే నివసతి" "குஶஸ்தலே
நிவஸதி" இத்யாதி வாக்யத்துக்கும் ஈஷத்பேத முண்டாகில் கண்டு
கொள்வது. ஏகனாகவரலாமோ, கடகரும் வேண்டாவோவென்ன; அரு
ளிச்செய்கிறார் (ஶாபாதபீத்யாதி.) ஶாபம் விஶ்வாமித்ரனுக்காய் ஶரம்
பெருமாளுக்காகவுமாம் அன்றிக்கே அஸ்த்ரஶிக்ஷை பண்ணுவிக்கை
யாலே இரண்டும் விஶ்வாமித்ரன்றனக்கே யாகவுமாம் இத்தால் பெருமா
ளைப்போலே கடகரைக் கூட்டிவரவேண்டாதே, குணபூர்ணனுகையாலே
தானே வந்தானென்றபடி. "శాపాదపి శరాదపి" "ஶாபாதபிஶராதபி"
என்ற இரண்டாலும் ஸம்ஹரிக்கிறேன் என்று பரஶுராமாழ்வான் தன்
மிடுக்காலே சொல்லும்வார்த்தை (அடியானவர்கள்) என்றது - "அதுக்
கடியானவன்" என்று ஏகவசநமாகச்சொல்லாமல் பூஜ்யவாசி கதிரில்லியா
வது - இல்லியில் கதிர் என்றாய் - ஜாலகரந்த்ரத்தில் கதிரென்றபடி. (கதி
ரில்லி) - ஸூக்ஷ்ம சவாரமென்றுமாம் "புறம்" - ஊர்ப்புறம். ச

(க) பா-உத்யோக. (உ) (௩) திருவாய்-௧0-௬-உ.

பெற்றேன்காண். அநுகூல்யமுடையார் சொல்லுதல், நீ சொல்லுதல் செய்யக்கேட்கை யன்றிக்கே, நான் உனக்குச் சொல்லலாம்படி யநுபவித்தேன் காண். க

மூ.—நாளைவதுவை மணமென்றுநாளிட்டு
பாளைகமுகு பரிசுடைப்பந்தற்கீழ்
கோளரிமாதவன் கோவிந்தனென்பான் ஓர்
காளைபுகுதக் கனாக்கண்டேன்தோழீ ! நான். (உ)

ப - ரை. தோழீ—, நாளை-நாளைக்கு, வதுவைமணமென்று-விவாஹமங்களமென்று நாளிட்டு—, பாளை - பாளையுடனே கொண்டுவந்துநட்ட, கமுகு - பாக்குமரங்களையுடைத்தான, பரிசுடை - பெருமைதங்கிய, பந்தற்கீழ் - பந்தலின்கீழே, கோள் - மிடுக்கையுடைய, அரி - ஸிம்ஹம்போன்ற மேனாணிப்புடையனாய், மாதவன்-பரமரஸிகனான கோவிந்தனென்பான்-கோரக்ஷணத்தையே தொழிலாகவுடைய க்ருஷ்ணனாகிற, ஓர்-ஒரு காளை-யுவாவானவன், புகுத - வர, நான் கனாக்கண்டேன்—.

வ்யா.—இரண்டாம் பாட்டு. (நாளையித்யாதி) நாள் நெடுகவிட்டால் ஆற்றமாட்டாள், "இன்று" என்னில், வாய்புகுநீராய்த்தரிக்கமாட்டாள். (க) [ప్రహర్షేణావరుద్ధా సా వ్యాజహార న కించన-ப்ரஹர்ஷேணாவருத்தாஸா வ்யாஜஹார நகிஞ்சந] திருவடி, ராமவிஜயத்தை விண்ணப்பம் செய்யக்கேட்டபோது, பிராட்டி ஹர்ஷத்தாலே விக்கி வார்த்தைசொல்ல மாட்டாதேயிருந்தாள்; அவனுக்கு ஓடுகிற ப்ரீதியாலே சிறிது அகஞ்சுரிப்படுத்த வேணுமென்று, (க) "కింత్వం చింతయసే దేవి" "கிம்த்வம் சிந்தயஸே தேவி" என்றான்; "நான் விண்ணப்பம்செய்த ராமவிஜயம் இங்குத்தைக்கு அநபிமதமோ! ஒரு மறுமாற்றமருளிச்செய்யாதிருந்தது" என்ன; "ஓடினப்ரீதி அரையாறுபட்டு ஹர்ஷம்மிடறடைக்க, வார்த்தைசொல்லா திருந்தே

இரண்டாம் பாட்டு. (நாளையித்யாதி) "நாளிட்டு"-முஹூர்த்தமிட்டு. "இன்று" என்றால்ஹர்ஷாதிசயத்தாலே வாய்புகு நீராய் தரிக்கமாட்டாளென்று சற்றுக்கூட்டிக் கொள்வது; அப்படி ஹர்ஷாதிசயம் தரிப்புக்குடலாகக்கண்டபேருண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (ப்ரஹர்ஷேணேத்யாதி) அகம் சுரிப்படுகையாவது - நெல்லு முதலானவை கூடைகளிலே கொட்டி, அந்தக் கூடைகளைக் குலுக்கினால் நிரம்பின நெல்லு

(க) ரா-யு-ககக-கடு.

னத்தனைகாண்" என்றுளிறே. நாளை விவாஹமங்கள மென்று நாளிட்டு. நாள்பொருந்தினாலிறே அல்லாதனவைகொண்டு காரிய முள்ளது; இருவர் நாளுங்கேட்டு. இரண்டுதலைக்கும் பொருந்தும் படி நாளிட்டு, பாளையுடனே கொடுவந்து நட்டகமுகையுடைத் தான பந்தலின் கீழே. பரிசு - பெருமைக்கும், அழகுக்கும் பேர். வேறோரிடத்தினின்றும் கொடுவந்து நட்டாப்போலே யிராதே, அவ்விடத்தே முளைத்தெழுந்த சோலைபோலே அழகிதாயிருக்கை.

(கோளரி)(க)"யஸ்ய ஸா ஜநகாத்மஜா - அப்ரமேயம் ஹி தத் தேஜ:" "யஸ்ய ஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:" என்கிற பெருமை யெல்லாம் தோற்ற மேனாணிப்போடே வந்தபடி. (மாதவன்) பரம ரஸிகனென்று தோற்ற நடந்து வந்தபடி. (கோவிந்தன்) "விவாஹ மாயிராநின்றது; ஆராலே யென்னவிக்நம் வரும்" என்றறியாமை யாலே, எல்லாருக்கும் கையாளாய் முகங்கொடுத்துக் கொடுவந்த படி. (காளை) இவையொன்றுமில்லையானாலும் மேல்விழ வேண் டும் பருவமிருந்தபடி. தோழிமார், பந்துக்கள், மற்றுமுள்ளார், * பருவமில்லையென்ன வொண்ணாதே. (கனாக்கண்டேன் தோழீ நான்)அவன் பருவம் என்னெஞ்சிலே படுத்த,நீபடும் பாடறிதிபே; அத்தலை இத்தலையாய், நான் உனக்குச் சொல்லவேண்டும்படியா ய்த்துக்காண் ௨

மூ.—இந்திரனுள்ளிட்ட தேவர்குழாமெல்லாம்
வந்திருந்தென்னை மகட்பேசிமந்திரித்து
மந்திரக்கோடியுடுத்தி மணமாலை
அந்தரிசூட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (௩)

ப - ரை. இந்திரனுள்ளிட்ட தேவர் குழாமெல்லாம் - இந்திரன்முத லான தேவஸமூஹங்களெல்லாம், வந்து - தரையிலே கால்பாவிவந்து, இருந்து-நல்தரிக்கவிருந்து. என்னை, மகள்பேசி-பெண்பேசி. மந்திரித்து- இத்தலைக்கும் அத்தலைக்கும் வேண்டியன ஆராய்ந்து தங்களிலே அறுதி யிட்டு. அந்தரி - நாத்தனை துர்க்கையானவள், மந்திரக்கோடி - மந்த்ர வாஸஸ்ஸை, உடுத்தி - தரிப்பித்து, மணமாலைசூட்ட—, தோழீ! நான் கனாக்கண்டேன்—.

உள்ளே அமுங்கும்; அத்தைச் சொல்லுகிறது. "வதுவை" - கந்யகை. "மணம்" - விவாஹம். "பரிசு"-அழகும், பெருமையும்; இரண்டாலும் பலிதம்-அழகு.

"கோள்" - மிடுக்கும், ஒளியும். (படுத்தநீபடும் பாடு) - என்னெஞ் சிலே நீ எறிடப்படும்பாடு. ௨

(க) ரா-ஆ-௬௭-௧௮, * (பா) பலருமில்லை.

வ்யா.—மூன்றும் பாட்டு. (இந்திரனித்யாதி)(க) "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்று - சூழ்த்துக் கொடுக்கும் அவதாரமல்லாமையாலே, இந்த்ராதிகளும், வருவர்களிறே. ஶரபங்க பகவானுஶ்ரமத்தில்பெருமாளைக்கண்டவன், "இவர்மனிச்சையேறிட்டுக் கொண்டிருக்கச்செய்தே நான் முகங்காட்டுகிறதென்" என்று தறையிலே கால்பாவாதே போனானிறே, ராவணவதாநந்தரத்திலே முகங்காட்டுகிறோ மென்று. இங்ஙனன்றிக்கே, ஈஶ்வரத்வம் கலந்து பரிமாறு மவதாரமாகையாலே இந்த்ராதிகள் வந்து அங்கேகொடிங்கேகொடாய், ப்ராஜாபத்யம் பண்ணித் திரிபா நின்றார்களாய்த்து. இந்த்ராதிதேவர்களும் திரளாகவந்து தறையிலே கால்பாவி, நற்றரிக்கவந்து, இக்கார்யம் தலைக்கட்டினாலல்லது எழுந்திருப்பதில்லை யென்றிருந்து. (என்னைமகள்பேசி) ப்ரஹ்மா துடங்கி இக்குலத்திலுண்டான நன்மைகளெல்லாம் பேசி, பெண்பேசி (மந்திரித்து) திரளில் நின்றும் எழுந்திருந்து போய் ரஹஸ்யமாக விருந்து, இத்தலைக்கும் அத்தலைக்கும் வேண்டுவன ஆராய்ந்து தங்களிலே யறுதியிட்டு. (மந்திரக்கோடி யுடுத்தி) அறுதியிட்டபோதே ஒருவிக்நம் பிறப்பதற்கு முன்னே தலைக்கட்டவேணுமென்று எல்லாரும் துறைவறுத்துக் கொண்டுபோலே காணும் வந்தது. (மந்திரக்கோடியுடுத்தி) மந்த்ர வாஸஸ்ஸை யுடுத்தி. (மணமாலையந்தரிசூட்ட) நாத்தனாய், இதுக்கெல்லாம் கடவாளாய் அபிமாநித்த, துர்க்கையாய்த்து மாலைகளும் மதுவுஞ் சூட்டி யொப்பித்தாள். இவளுடைய ஸ்பர்ஶந்தானென்று தங்கி அவனோடே யணைந்தாப்போலே யிருக்கிறதுகாணும் இவளுக்கு. அவனுடன்பிறந்தாள் என்னை ஸ்பர்ஶிக்கப் பெற்றேன் காண். * "தம்ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி" - தம்ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி யிருக்கிறபடி.. ௩

மூன்றும் பாட்டு (இந்திரனித்யாதி) கோபஸஜாதீயனாய் அவதரித்தவிடத்திலே இந்த்ராதிகள் வருவர்களோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஆத்மாநம்மாநுஷம்மந்யே இத்யாதி, ஆத்மாநம் மாநுஷம்மந்யே இத்யாதி) "ஆத்மாநம்மாநுஷம்" "ஆத்மாநம் மாநுஷம்" என்றவோபாதி "அஹம்வோபாந்தவः" "அஹம்வோபாந்தவः" என்றதுண்டானாலும், ஈஶ்வரத்வம் கலந்து பரிமாறுமவதாரமிறே என்று தாத்பர்யம். (பெருமாளைக்கண்டவன்) - இந்த்ரன். (ப்ராஜாபத்யம் பண்ணுகை) - ஆதிபத்யம் பண்ணுகை.

(க) ரா - யு - கஉ0 - கக.

மூ.—நாற்றிசைத்தீர்த்தங்கொணர்ந்து நனிநல்கி
பார்ப்பனச்சிட்டர்கள் $ பல்லாரெடுத்தேத்தி
பூப்புனைகண்ணிப் புனிதனோடென்தன்னை
காப்புநாண்கட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (௪)

ப • ரை. தோழீ—, பார்ப்பனச்சிட்டர்கள் பல்லார் - ப்ராஹ்மணா க்ரேஸரரெல்லாரும், நாற்றிசை-நான்குதிக்குக்களிலுமுள்ள. தீர்த்தம்-தீர்த்தங்களை, கொணர்ந்து - கொண்டுவந்து, நனிநல்கி - பலகாலும் ப்ரோக்ஷித்து, எடுத்து-உச்சஸ்வரமாக எடுத்து, ஏத்தி-மங்களாசாஸநம் பண்ணி, பூ - ச்லாக்யமான பலவகைப் புஷ்பங்களாலே, புனை-அலங்கரிக்கப்பட்ட, கண்ணி - மாலையையுடையனாய், புனிதனோடு - பவித்ரனான க்ருஷ்ணனோடே, என்தன்னை—, காப்புநாண்கட்ட - காப்புக்கயிறுகட்ட, நான் கனாக்கண்டேன்—.

வ்யா.—நாலாம் பாட்டு. (நாற்றிசைத்தீர்த்தங்கொணர்ந்து) பெருமாளுடைய திருவபிஷேகத்துக்கு ஸ்ரீவாநரவீரர்கள் நாலு ஸமுத்ரத்திலுமுள்ள ஜலங்களையுங் கொண்டுவந்தாப்போலே, நாலுதிக்கிலுமுள்ள தீர்த்தங்களைக்கொடுவந்து. (நனிநல்கி) மிகவும் நல்கி. போரநீரைத்தெளிக்கவே ஆயுஸ்ஸூதுடக்கயான நன்மைகளெல்லாம் உண்டாமென்றிருப்பர்களிறே (பார்ப்பனவித்யாதி) ஜாதிமாத்ரமாயிருக்கையன்றியே, ஒத்து அழகிதாகப்போய், ஸிஷ்டர்களென்று வ்யபதேஸ்யராய், சடங்குகள் அழகிதாகக்கைவந்திருக்கும் ப்ராஹ்மணாக்ரேஸரரெல்லாருந்திரண்டு உதாத்தமாக இரண்டு தலைக்கும் மங்களாஸாஸநம்பண்ணி. (பூப்புனைகண்ணிப் புனிதனோடு) விவாஹஸமயத்தில் அவள் பேரொப்பனைபோலன்றிக்கே, ஒரு தனிமாலையையிட்டு ஸ்நாநம்பண்ணி, கையும் பவித்ர

"மகள்பேசி" - பெண்பேசி. "மந்திரித்து" - விசாரித்து. "உடுத்தி" - மந்த்ரவாஸஸ்ஸூள்படவுடுத்தி அலங்கரித்தார்கள். "அந்தரி"- அந்தரத்திலே-ஆகாஸத்திலே ஸஞ்சரிக்கிறதுர்க்கைக்குப்பேர். (௩)

நாலாம் பாட்டு. (நாற்றிசை யித்யாதி) "நனி" - மிகுதி. "சிட்டர்" - ஸிஷ்டர். "எடுத்தேத்தி" - உச்சமாகவேத்தி "புனைதல்" - கட்டல். "கண்ணி" - மாலை. "பூப்புனைகண்ணிப்புனிதன்" என்று - பூக்களாலே புனையப்பட்ட மாலையையுடையவனுமாய் பவித்ரனானவனென்கையாலே, தாத்பர்யம் (விவாஹஸமயத்திலென்று) விநீதவேஷத்தோடே

$ "பல்லாண்டெடுத்தேத்தி" என்றும் சில மூல ஸ்ரீகோசங்கள்.

முமாய், தீண்டினாருண்டாகில் முகத்தைப்பொல்லாதாகப் பண்ணி, குந்திநடந்து, புடைவையொதுக்கி, விநீத வேஷத்தோடே வந்தபடி. பெரியாழ்வார் பெண்பிள்ளையை ஆசார வைகல்ய முண்டானால் கொடார்களிறே. (என்தன்னைக் காப்பு நாண்கட்ட) நான் தொடும தொழியத் தொட்டாரைத் தொடுமளவாய்த்துக்காண். பரபுக்தியாலே கிட்டப்பெற்றேன் காண். (தோழீ நான்) பேற்றில் இனி இதுக்கவ்வருகில்லை, இது பற்றாசாகத்தோழீ! பெறுவதுகாண். ௪

௫.—கதிரொளிதீபம் கலசமுடனேந்தி
சதிரிளமங்கையர்தாம் வந்தெதிர்கொள்ள
மதுரையார்மன்னன் அடிநிலைதொட்டு எங்கும்
அதிரப்புகுதக் கனாக்கண்டேன்தோழீ! நான். (௫)

ப - ரை தோழீ—, சதிர்-தாம்பெறும்பேற்றுக்குத் தக்கபடி உடம்பு கொடுக்கும்சதிரையும், இள - வடிவழகையும், மங்கையர் தாம் - மங்கைப் பருவத்தையுமுடையரான ஸ்த்ரீகள். கதிர் ஒளி - ஆதித்யப்ரபைபோலே யிருக்கிற, தீபம்-தீபத்தையுடைய, கலசம்-பொற்கலசத்தை, உடனேந்தி-கையிலேந்திக்கொண்டு, வந்து - தங்கள் முன்னடியைப்பார்த்த வண்ணமாக வந்து, எதிர்கொள்ள - எதிர்கொள்ளாநிற்க, மதுரையார்-ஸ்ரீ மதுரையிலுள்ளார்க்கு, மன்னன் - ராஜாவான க்ருஷ்ணன், அடிநிலை - தன் திருவடிநிலைகளை, தொட்டு - அருகிருப்பார்கையில் கொடுத்து, எங்கும் அதிர - பூமியெல்லாம் அதிரும்படி, புகுத - நடந்துவர, நான் கனாக் கண்டேன்.—

வ்யா.—அஞ்சாம் பாட்டு.—(கதிரொளிதீபம் கலசமுடனேந்தி) இதுக்கு ஒருவிச்சேதம்வரில் மங்களத்துக்குக் குறையாம் என்று ஆதித்யப்ரபைபோலே யிருக்கிற தீபம், அப்படியே

---

ஸாசாரனாய் வந்தானென்றாக வேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (பெரியாழ்வா ரித்யாதி.) (தொட்டாரை) என்றது - ஈஶ்வரனைத் தொட்ட ப்ராஹ்மணனை என்றபடி. விவரணம் (பரபுக்தீத்யாதி) அதாவது - பரஸம்மதியு முண்டாய்த் தென்றபடி. உபாத்யாயர் கட்டுகையாலே, தொட்டாரைத் தொடுமளவாய்த் தென்றபடி. ஸம்ஶ்லேஷம் வேண்டாவோ வென்ன (இதுபற்றாசாக வென்று.) இதுபற்றாசாக - காப்புநூலடியாக. (௪)

யிருக்கிற பொற்கலசங்கள், இவற்றை தரித்து. (சதிரிளமங்கையர்) (க) "மதிமுகமடந்தையர்" என்னக்கடவதிறே. தங்கள் பருவத்தாலும் வடிவழகாலும் தங்களையே எல்லாரும் கடாக்ஷிக்கும்படியிருக்கிறவர்கள், தாங்கள் கவிழ்ந்து முன்னடியைப் பார்த்துக்கொடு வந்தெதிரிகொள்ள. (மதுரையார்மன்னன்) பரமபதத்தை விட்டுப்போந்து விரும்பின ஊருக்கு நிர்வாஹகனிறே. பரமபதத்திலிருப்புக்குமேலே ஓரேற்றம்போலே காணும் அவ்வூருக்குக் கடவனென்னுமது. (உ) "மன்னுவடமதுரைமைந்தனை" என்று இவள் தானுதரிப்பதும் அங்கேயிறே, ஒருவன் ஒருபிள்ளையை யுகந்தருளப்பண்ணி, "இவர்க்கு என்னதிருநாமம்சாற்றுவோம்" என்றிருக்கச்செய்தே, "'அதுவே இதுவே' என்றழையாதே, என்னை மதுரைமன்னன் என்றழை" என்று ஸ்வப்நத்திலே யருளிச்செய்தாராம். (அடிநிலையித்யாதி) திருவடிநிலைகளைக்கொடுத்து. (எங்குமதிரப்புகுத) மஹாபலியஜ்ஞவாடத்திலே நடந்தபோது பூமிநெளிந்ததென்று ஒருக்ராந்தத்திலே கிடந்ததாய், "இதுக்குப் பொருளென்" என்று கேட்டவாறே; ஸர்வேஶ்வரனன்றோ, சொல்லவேணுமோ, என்றார்களாய்; இத்தை ஜீயர் கேட்டருளி பட்டரைக்கேட்க; "இரப்பில் பதற்றத்தாலே யடியிட்டபடி காணும்" என்றருளிச் செய்தாராம். ஒருபூமிக்காக இப்படி பதறி வருமவன் இவளைப்பெற்று விடுகிறானே (தோழீநான்) உகப்பாயிநீயிறே. ரு

---

அஞ்சாம் பாட்டு (கதிரொளி யித்யாதி) "மதுரையார் மன்னன்" என்றது-அதிஶயமன்றே யென்ன (பரமபதத்தை இத்யாதி.) மதுரையை யிட்டு நிரூபிக்கிறது உகப்பென்னு மதுக்கு ஓரைதிஹ்யமருளிச் செய்கிறார் (ஒருவனித்யாதி.) (பிள்ளை)-க்ருஷ்ணவிக்ரஹம். "கதிர்"-செந்நெற்கதிர் "கலசம்"-கரகம். "கதிர்"-அழகு. "அடிநிலை"-பாதுகை. "அதிர"-நெளிய. (ஒரு க்ராந்தத்திலே கிடந்ததாய்) என்கிறவிடத்திலே, (கூ) "యస్మిన్ ప్రయాతే సురభూభృతోద్వరం ననామ ఖేదాదవనిస్ససాగరా । సవామనస్సర్వజగ న్మయస్సదామమాస్తు మాఙ్గల్యవివృద్ధయే హరిః" "யஸ்மிந்ப்ரயாதே ஸுராபூப்ருதோத்வரம் நநாமகேதாதவநிஸ்ஸஸாகரா ! ஸவாமநஸ்ஸர்வ ஜகந்மயஸ்ஸதாமமாஸ்து மாங்கல்யவிவ்ருத்தயே ஹரி:" என்றதநுஸந்தேயம் (ரு)

---

(க) தி - வாய் - கo - கூ - கo. (உ) திருப்பாவை - ரு. (கூ)

மூ.—மத்தளங்கொட்ட வரிசங்கம்நின்றூத
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன்வந்து என்னைக்
கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன்தோழீ! நான். (சு)

ப - ரை. தோழீ—, மத்தளம் - மத்தளங்களை, கொட்ட - அடிக்கவும், வரி - ரேகைகளையுடைய, சங்கம் - சங்கத்தை, நின்று - நிலைநின்று, ஊத - ஊதவும், முத்துடைத்தாமம் - முத்துமாலைகளுடைய, நிரை - வரிசைகளானவை, தாழ்ந்த - தலையிலேவந்துதாழ்ந்த, பந்தற்கீழ் - பந்தலின் கீழே மைத்துனன் - மைத்துனனை முறையுடையனாய், நம்பி - குணபூர்ணனை, மதுசூதன் - மதுவை நிரஸித்த க்ருஷ்ணனானவன். வந்து - அவன்றானே வந்து, என்னை—, கைத்தலம்பற்ற - கையைப்பிடிக்க, நான்கனாக்கண்டேன்—.

வ்யா.—ஆறாம் பாட்டு. (மத்தளமித்யாதி) ராஜகுலமுடையரா யிருக்குமவர்கள் விவாஹம்பண்ணப் புக்கால் செய்யுமாப் போலே, மங்களவாத்யங்கள் மாறாதே நின்று முழங்க. ஸாந்தீபிநி யோடே ஓதுவதுக்கு முன்னேபோலேகாணும் இவளை விவாஹம் பண்ணிற்று. திருவாய்ப்பாடியிலே நெடுங்காலம் வளர்ந்து, பின்பிறேயங்குப்போய்த்தது. முத்துமாலைநிரைகளானவை தலையிலேவந்து தாழ்ந்த பந்தலின்கீழே. (மைத்துனன் நம்பி) நப்பின்னைப் பிராட்டியோடுண்டான ஸம்பந்தம் தன்னோடும் உண்டென்றிருக்கிறாள்காணும். (மதுசூதன்) மற்றும் மைத்துனமைமுறையுண்டென்று ஆரேனும் வந்து கைப்பிடிக்கப்பார்க்கில், அவர்களையு மழியச்செய்து தானே ஸ்வீகரிக்கவல்லவனாய்த்து. தன்னுடைமையை, பிறர் "என்னது" என்னும்போது அவர்களை

---

ஆறாம் பாட்டு (மத்தள மித்யாதி) ராஜகுலத்தை யுடையராயிருக்குமவர்களென்பானென், ராஜாவன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் ஸாந்தீபிநீயித்யாதி) க்ஷத்ரியனுக்கொழிய அத்யயநம்பண்ண வொண்ணாமையாலே அப்போதாய்த்து ராஜத்வம் தோற்றிற்றென்றபடி. (ஓதுவதுக்கு)- அத்யயநத்துக்கு "உன்மைத்துனன் பேர்பாட" என்று - நப்பின்னைப் பிராட்டிக்கன்றோமைத்துனன் முறையுள்ளது. பெரியாழ்வார் பெண்பிள்ளையான தனக்குச்சொல்லலாமோ வென்ன ; அருளிச்செய்கிறார் (நப்பின்னையித்யாதி) அதாவது - தானும்கோபிகை யென்றிருக்கையாலே என்றபடி

யழியச்செய்து கைக்கொள்ளவல்லனுப்த்து (வந்தென்னைக் கைத்தலம்பற்ற) "அவன்றானேவந்து கைப்பிடிக்கை முறை" என்றிருப்பாளொருத்தியிறே இவள்தான். (கைத்தலம்பற்ற) (க) [ந ப்ரமாணீக்ருத: பாணி: பால்யே பாலேந பீடித: - நப்ரமாணீக்ருத: பாணிர்பால்யேபாலேநபீடித:] என்னையறியாவிட்டால் தம்மையறியாதொழியவேணுமோ; தாம் பருவம் நிரம்பாதிருக்கத் தாம் என்னைக் கையைப்பிடித்தது மறந்தாரோ. "'பாணிக்ரஹணம்' என்று ஒருபதத்தால் சொல்லாதே, 'பீடித: - பீடித:' என்பானென்" என்று எம்பாரைச் சிலர் கேட்டார்கள்; (உ) "'அங்கண்ணனுண்ட வென்னுருயிர்க் கோதிது" என்கிறபடியே "பிடித்தபிடியிலே அநங்யார்ஹையாம்படி பிடித்தது" என்றாராம். (ங) [இயம் ஸீதா - இயம்ஸீதா] பிறந்தவுமக்குப் பிறவாமையால் வந்த வேற்றமுடையார் தேட்டமே. [மம ஸுதா-மமஸுதா] நீர் ஆர்த்த ரக்ஷணத்திலே தீக்ஷித்தால் உமக்குமுன்னேபோய்க் கைச்சிறையிருக்கவல்லவள். [ப்ரதீச்ச சைநாம்-ப்ரதீச்சசைநாம்] கரும்பு தின்னக்கூலியன்றே, இவளைக் கைக்கொள்ளுமென்றன்றே உம்மை நான் கால்பிடிக்கிறது. [பத்ரம் தே-பத்ரம்தே] (ச) "வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்கிறபடியே-"ஐயரும் ஊரிலுள்ளாரும் வாராதிருக்க, நான்கைக்கொள்ளுங்கையாவதென் ?" என்று தம்முடைய வைதக்த்யம் தோற்ற இருய்த்து நின்றார்; அது வேண்டாகாணும், உம்முடைய கையாலே இவள்கையைப்பிடியீர். "ப்ரதீச்ச-ப்ரதீச்ச" என்னச்செய்தே, "பாணிம் க்ருஹ்ணீஷ்வ" "பாணிம்க்ருஹ்ணீஷ்வ" என்றானிறே. கூ

(கைத்தலம்பற்ற) இதுக்கு ஸம்வாதமாகப்ரமாணத்வய மருளிச்செய்கிறார் (நப்ராமாணீக்ருத இத்யாதி) நப்ராமாணீக்ருத:-ப்ராமாணிகமாக வன்றிக்கே வலியப்பிடிக்கை. "பீடித: - பீடித:" என்பானென்என்று ஶங்காபிப்ராயம் "கைத்தலம்பற்ற" என்று - கையைப்பிடித்த மாத்ரத்துக்குப் ப்ரமாணம். (இயம்ஸீதா-இயம்ஸீதேத்யாதி) அக்நிஸாக்ஷிக மாகையாலே நெகிழவொண்ணாதென்றபடி. "ஸீதாலாங்கலபத்ததி:" "ஸீதாலாங்கலபத்ததி:" என்கிறத்தையுட்கொண்டு (பிறவாமையால் வந்தவேற்றமென்றது) "ஸஹதர்மசரீதவ - ஸஹதர்மசரீதவ" என்னுமளவுக்கும் தாத்பர்யம் (நீர் ஆர்த்தரக்ஷணேத்யாதி) பெருமாள் இருப்பதுக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (ப்ரதீச்ச - ப்ரதீச்ச என்னச்செய்தேயித்யாதி.) (கூ)

(க) ரா - யு - ககக - கரு. (உ) தி - வாய் - கூ - சு - கூ.
(ங) ரா - பா - எங - உரு. (ச) திருப்பல்லா -உ.

மூ.—வாய்நல்லார் நல்லமறையோதி மந்திரத்தால்
பாசிலைநாணல்படுத்துப் பரிதிவைத்து
காய்சினமாகளிறன்னான் என்கைப்பற்றி
தீவலஞ்செய்யக் கனாக்கண்டேன்தோழீ! நான். (எ)

ப-ரை. தோழீ—, வாய்நல்லார் - அழகிதாக ஸ்வரத்திலே உச்சரிக்கவல்லவர்கள், நலல-ச்லாக்யமான, மறையோதி வேதங்களைச்சொல்லி, மந்திரத்தால் - அந்தந்தக்ரியைக்கு அநுரூபமான மந்த்ரங்களைச் சொல்லி, பாசு - பசுத்த, இலை - இலையையுடைத்தான, நாணல் - நாணற்புல்லை, படுத்து - அக்நியைச்சூழப்படுத்து, பரிதிவைத்து - பரிதிகளையிட்டு, காய்சினம் - மிக்கசினத்தையுடைத்தாய், மா-மதித்த, களிறு அன்னான்-யானையையொத்த செருக்கையுடைய க்ருஷ்ணன், என் - என்னுடைய, கைப்பற்றி - கையைப்பிடித்துக்கொண்டு, தீவலம்செய்ய - அக்நியைச்சுற்றிவர, நான்கனாக்கண்டேன்—;

வ்யா.—ஏழாம் பாட்டு. (வாய்நல்லார்) அழகிதாக ஸ்வரத்திலே உச்சரிக்கவல்லவர்கள். (நல்லமறையோதி) ஆராதந விஷயமாகப் பரந்தவையன்றிக்கே ஆராத்யனுடைய ஸ்வரூபத்திலே பரந்தவற்றைச்சொல்லி. ஸ்ரீபுருஷஸூக்தாதிகளைச் சொல்லி.

(மந்திரத்தால்) அதுக்குள்ளே யெல்லாமுண்டா யிருக்கச் செய்தே அவ்வோ க்ரியைக்கு அநுரூபமான மந்த்ரத்தாலே. (பாசிலை நாணற்படுத்து) பசுத்த இலையையுடைத்தான நாணலை, அக்நியைச் சூழப்படுத்து - பரிஸ்தரித்து. (பரிதிவைத்து) பரிதிகளையிட்டு (காய்சின மா களிறன்னான் என்கைப்பற்றி) ஒருமத்த கஜம்போலே மேன்மையோடே வந்து. (தீவித்யாதி) அக்நியைச் சூழ வருகிறபோது பிசுகி நடந்தபடி. † * ஏகஸ்ஷே - ஏகமிஷே துடங்கி, * ஸகாஸப்தபதாபவ - ஸகாஸப்தபதாபவவாவும் நடந்தபடி. வந்து கைப்பிடித்தபோது ஒருமத்தகஜம் சிறைப்பட்டாப் போலே யாய்த்து. (தீவலஞ்செய்ய) தான்நெகிழுமன்று நான் நெகிழவொண்ணாதபடியாகவும் பெற்றதுகாண். எ

---

ஏழாம் பாட்டு. (வாயித்யாதி) "நல்லமறை" என்கைக்கு, மறையிலே இரண்டு விதமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஆராதநேத்யாதி) "பாசிலைநாணல்"-பச்சையிலையையுடைத்தானநாணற்புல்லு. "பரிதி"-ஸமித்து. "இஷ ஏகபதீபவ-இஷ ஏகபதீபவ" என்று ஸ்மார்த்தக்ரியை. ஓடிதுட

---

† "இஷ ஏகபதீபவ" என்றே ஸ்ரீ கோசங்களில் காண்கிறது.

மூ. — இம்மைக்குமேழேழ்பிறவிக்கும் பற்றுவான்
நம்மையுடையவன் நாரயணன்நம்பி
செம்மையுடையதிருக்கையால் தாள்பற்றி
அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன்தோழீ! நான். (அ)

ப - ரை. தோழீ—, இம்மைக்கும் - இப்பிறப்புக்கும், ஏழேழ்பிறவிக்கும் - இனிக்காலமுள்ளதனையும், பற்றுவான் - துணையாமவனாய், நம்மை - நமக்கு, உடையவன் - சேஷியான, நம்பி - கல்யாணகுணபூர்ணனாய். நாராயணன்-நாராயணனான க்ருஷ்ணன், செம்மையுடைய-தாமரைமலர்போலே சிவந்த, திருக்கையால்-திருக்கைகளாலே, தாள்-என்காலே. பற்றி - பிடித்து, அம்மிமிதிக்க—, நான்கனாக்கண்டேன்—,

வ்யா —எட்டாம் பாட்டு. (இம்மைக்குமித்யாதி) அக்நிதானே நெகிழ்க்கப்பார்க்குமன்றும் நெகிழவிடானாய்த்து. "இவனுடைய அநுபவம் மாறாதே செல்லுமாகில், என்றும்பிறந்தாலாகாதோ"என்றிருக்கிறாள். (ஏழேழ்பிறவிக்கும்) (க) "உன்றன்னோடுற்றோமே யாவோம்" என்று ப்ரார்த்திக்குமவளிறே. வ்ருஷ்ட்யாதிகளுக்கீடாக பத்நித்தால் வர்ஷித்தவநந்தரம் மறுத்துப்போகாநிற்கும்; பகவத்விஷயத்தைப்பற்றினால் காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தே நிற்கு மத்தனையாய்த்து. (உ) "குற்றமில் சீர்கற்று வைகல் வாழ்தல் கண்டீர் குணம்" என்கிறபடியே. (நம்மையுடையவன்)

---

ங்கி ஏழடியளவாகவென்றபடி. 'காய்சினமாகளிறன்னான்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம்(வந்துகைப் பிடித்தபோதித்யாதி.) (சிறைப்படுகை)-இவன்கையிலே யகப்படுகை. அக்நிஸாக்ஷிகமாகையாலே நெகிழவொண்ணாது இருவர்க்கும். எ

எட்டாம் பாட்டு. (இம்மைக்கு மித்யாதி) த்யாஜ்யமான ஜந்மத்தை உத்தேஸ்யமாகச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இவனுடைய வித்யாதி.) ஏதத்விவரணம் (ஏழேழ் பிறவிக்கு மித்யாதி.) ஒருக்கால் ஸ்வீகரித்தால் எற்றைக்கும் நிற்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (வ்ருஷ்ட்யாதிகளுக்கித்யாதி.) புறம்பு புகலில்லாவிட்டால் தனக்கா யிருக்கலாகாதோ வென்ன; தனக்காயிருக்கை களவாமென்று கண்டுகொள்வது. இதுகளவோவென்ன; அருளிச் செய்கிறார்.

---

(க) திருப்பாவை - உக. (உ) தி - வாய் - க - க - எ.

பலமின்றிக்கே யொழிந்தால்தான் புறம்பு எங்கே போவது. ஸர்வஸ்வாமி. அவனுடைமையை "என்னது" என்றிருக்குமதிறே களவாவது; (க) "ஸ ஏவ சோர ஆத்மாபஹாரிணா" "சோரேணாத்மாபஹாரிணா" என்கிறபடியே. (நாராயணன்நம்பி) ஸ்வாமித்வத்துக்கும் குணங்களுக்கும் வாசகமான திருநாமமிறே. (நம்பி) கல்யாண குணங்களால் பூர்ணன். (செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி) பிள்ளை உறவுமுறையார் வேண்டா வென்பர்கள்; பெண்பிள்ளை யுறவுமுறையார் வேணும் என்னாநிற்பர்கள்; இப்படி இரண்டுதலையிலுள்ளாரும் வார்த்தை சொல்லாநிற்கச் செய்தே, தானேவந்து காலைப்பிடிக்கக் கணிசியாதிருக்குமாய்த்து. அதாவது - ஆஶ்ரிதர்கால்பிடிக்க வென்றால் இறாயாத கையாய்த்து. உபதேஶகாலத்திற்போலன்றிறே பரிமாற்றத்திலிருப்பது. உபதேஶிப்பது - அவன் கால்பிடிக்கக் கடவதாக; பரிமாற்றத்தில் வந்தால் அவன்றான் பிடிக்கும்படியாகவாய்த் திருப்பது. (அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன்) அஶ்மாரோஹணம் பண்ணக் கனாக்கண்டேன். "அவ்வம்மியில் இவன் ஓரடியிடில்செய்வதென்" என்று துணுக்குத் துணுக்கென்றிருந்தாள் காணும்; அடியிட்டானாகில் அதுவுமொரு பெண்ணாமே. (தோழீநான்) நீ என் கால்பற்றிப் போரும்படி யெல்லாமறிதியே. அவன் என்கால் பற்றும்படியாய்த்துக் காண். அவன் ஸ்வபாவம் நீ சொல்லக்கேட்டபடியே யநுபவிக்கப்பெற்றேன். அ

---

(அவனுடைமை யித்யாதி) ஸ்வாமித்வத்துக்கும் குணஙகளுக்குமென்றது - "பற்றுவான்," "உடையவன்" என்றதைப்பற்ற "நம்பி" என்று - அநுக்தமான கல்யாண குணங்களால் பூர்ண னென்றபடி. "பற்றி" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பிள்ளையித்யாதி.) * செம்மைக்குத் தாத்பர்யம் (ஆஶ்ரிதரித்யாதி.) இவன் பந்துக்கள் முதலானோர் அவன் றன் காலைப்பிடிக்கவென்றன்றோ வபதேஶிப்பது, இப்படி மாறாட்டமாக லாமோவென்ன; அருளிச்செய்கிறார் (உபதேஶேத்யாதி) உபதேஶகாலம்-ஆஶ்ரயணகாலம். அதாவது-தன் வ்யாமோஹத்தாலே அவன் தலை தடுமாறாகச் செய்யுமென்றபடி. ஹார்த்தபாவம் (அவ்வம்மியிலித்யாதி) தாத்பர்யாந்தரம் (அவன் ஸ்வபாவமித்யாதி.) அ

---

(க) பார-உத்யோ-சக-௬௭.

மூ.—வரிசிலைவாள்முகத்து என்னைமார்தாம்வந்திட்டு
எரிமுகம்பாரித்து என்னைமுன்னேநிறுத்தி
அரிமுகனச்சுதன் கைம்மேலென்கைவைத்து
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (சூ)

ப - ரை. தோழீ—, வரி - அழகிய, சிலை - வில்லையொத்த புருவத்தையும், வாள் - ஒளிபொருந்திய, முகத்து - முகத்தையு முடையரான, என் - என்னுடைய, ஐம்மார்தாம் - ப்ராதாக்களானவர்கள், வந்திட்டு - வந்து, எரிமுகம்பாரித்து - அக்நிமுகத்தைப்பாரித்து, என்னை - லஜ்ஜையாலே பின்னேநிற்கிற வென்னை, முன்னே நிறுத்தி—, மைத்துனமை முறையுடையார் இளிம்புபடுத்திச் சிறிக்கவொண்ணாதபடி, அரிமுகன் - ஸிம்ஹம்போலே அநபிபவநீயனாய், அச்சுதன் - ஆச்ரிதரை யொருகாலும் கைவிடாதவனான க்ருஷ்ணனுடைய, கைமேல் - கைமேலே, என் - என்னுடைய, கைவைத்து—, பொரி - நெற்பொரியை, முகந்து - அள்ளி, அட்ட - அக்நியிலே பரிமாற, நான்கனாக்கண்டேன்—.

வ்யா.—ஒன்பதாம் பாட்டு. (வரிசிலையித்யாதி) "என்னுடைய ப்ராதாககளானவர்களே இதுக்கெல்லாம் அபிமாநிகள்" என்னுமிடம் தங்கள் முகத்திலெள்ளிலே காணும்படியாகவந்து அக்நி முகத்தைப் பாரித்து, நான்வ்ரீளையாலே இருக்க, என்னை எடுத்து முன்னே நிறுத்தி. (அரிமுகனித்யாதி) மைத்துனமை முறையுடையார் இவனை இளிம்புபடுத்தில் சிரிக்கவேணு மென்று சில விலாஸசேஷ்டிதங்களைப் பண்ணக்கோலினால், அவர்களுக்குக் கணிசிக்க வொண்ணாதபடி அநபிபவநீயனா யிருந்த விருப்பு. (அச்சுதன்) அவர்கள் பொரியட்டி விட்டாலும் தான்கைவிடாதவன். சூ

---

ஒன்பதாம் பாட்டு. (வரிசிலை வாண்முகம்) வரி - அழகு; அழகிய வில்லுப்போலே யிருக்கிற புருவத்தையும், ஒளியையுடைய முகத்தையுமுடையவர்களான என் ப்ராதாக்களென்று ஸப்தார்த்தம். வில்லைச் சொன்னது - புருவத்துக்கும் உபலக்ஷணம். "பொரிமுகந்து"-பொரியை அள்ளி; "அட்ட" - அதிலே பரிமாற வென்றபடி. சூ

மூ.—குங்குமமப்பிக் குளிர்சாந்தம்மட்டித்து
மங்கலவீதி வலம்செய்துமணநீர்
அங்கவனோடும் உடன்சென்றங்கானைமேல்
மஞ்சனமாட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (௧0)

ப - ரை. தோழீ—, குங்குமம் - குங்குமக்குழம்பை, அப்பி - உடம்பெங்கும் பூசி, குளிர் - குளிர்ந்த, சாந்தம் - கலவைச் சந்தநத்தை, மட்டித்து-திமிர்த்து, மணநீர்-வாஸனை த்ரவ்யங்கள் சேர்ந்த வஸந்த ஜலத்தை, மங்கலம் - கல்யாண நிமித்தமாக அலங்கரிக்கப்பட்ட, வீதி - வீதியிலே, வலம்செய்து - ப்ரதக்ஷிணமாகவந்து, அங்கு - அந்த வீதியிலே, ஆனைமேல் - ஆனையின் கழுத்தின்மேலேயிருந்து, அவனோடும்-அந்த க்ருஷ்ணனோடுகூட சென்று—, உடன்மஞ்சநமாட்ட - உடன்மணநீராட்ட, நான் கனாக்கண்டேன்—.

வ்யா.—பத்தாம் பாட்டு. (குங்குமமித்யாதி) காப்புக்கட்டுகைக்குத் தனிமாலையும் சாந்துமாக மட்டமாக வொப்பித்தானென்றது. அவ்வளவன்றிக்கே, விவாஹஸமயத்தில் மாலைகளும அங்கராகங்களும் போரக்கொண்டு பேரொப்பனையாகவிறே ஒப்பிப்பது; அவற்றையெல்லாம் கழித்து. அக்நிமுகத்திலே யிருந்தது பொறுகிறே ஸௌகுமார்யத்தாலே; அதுக்குப் பரிஹாரமாகக்குளிர்ந்த குங்குமத்தைத் திருமேனியெங்குக் அப்பி, பழகப்புளைத்து ஆறினசாந்தைமட்டித்து, திருமஞ்சநத்துக் கீடாகச் சமைந்தவற்றைக்கொண்டு ஊரை வலமாகவந்து, அற்றை வீதியிலே தானும் தோழன்மாருமாக ஆனையேறிவந்தானென்றகிறே. இப்போது தானு மவனுமாக அங்கே ஆனைக்கழுத்திலே புக்கு வலமாகவந்து. (மஞ்சநமாட்டக் கனாக்கண்டேன்) இருவரையும் கூடவைத்து உடன்மணநீராட்டினார்களாய்த்து. ௧0

---

பசதாம்பாட்டு. (குங்குமமித்யாதி) "மட்டித்து" - மர்த்தித்து (மட்டமாக வொப்பித்தானென்றது) என்றது - "பூப்புனைகண்ணிப்புனிதனோடு" என்று கீழைக்கடாக்ஷித்து. "மணநீரை - மங்கலவீதி வலம்செய்து - அங்கானைமேல் - அவனோடு முடன் சென்று" என்றந்வயித்து அருளிச்செய்கிறார் (திருமஞ்சநத்துக்கித்யாதி.) (சமைந்தவற்றை) பரிமளத்ரவ்யங்களோடே கூடின திருமஞ்சநத்தை. "வாரணமாயிரம் சூழவலம்செய்து" என்ற விடத்துக்கும் இதுக்கும் வாசியென்னென்ன (அற்றைவீதியிலேயித்யாதி.) (அற்றைவீதி) - அந்தவீதி. (அற்றைவீதியிலே - கொண்டு

மூ—ஆயனுக்காகத் தான்கண்டகனவினை
வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன்கோதைசோல்
தூயதமிழ்மாலை ஈரைந்தும்வல்லவர்
வாயுநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (௧௧)

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

---

ப-ரை. வேயர் - ஸ்ரீவைஷ்ணவர்களாலே, புகழ் - ஸ்துதிக்கப்படுகிற, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு, கோன் - நிர்வாஹகரான பெரியாழ்வார் திருமகளாரான, கோதை - ஆண்டாள், ஆயனுக்கு - ஆயர்குலத்தினில்வந்து தோன்றியக்ருஷ்ணனுக்கு, ஆக - அநந்யார்ஹையாக, தான் கண்ட—, கனவினை-கனவை, சொல் - அருளிச்செய்ததாய், தூய - பரிசுத்தமான, தமிழ்மாலை - தமிழ்த்தொடையான, ஈரைந்தும் - பத்துப்பாட்டுக்களையும், வல்லவர் - அநுஸந்திக்க வல்லவர்கள், வாயும் - தங்கள் மனத்துக்குப் பொருந்தின, நல் - விலக்ஷணரான, மக்களை - சிஷ்யபுத்ரர்களை, பெற்று - லபித்து, மகிழ்வர் - ஆநந்திக்கக்கடவர்கள்.

வ்யா.—நிகமத்தில்; (ஆயனுக்கித்யாதி) அவனுக்கு அநந்யார்ஹையாகத் தான் கண்டகனவினையென்னுதல்; அவன் பேற்றுக்கு உறுப்பாகத்தான் கண்டவென்னுதல். (க)"நஜீவேயம்" "நஜீவேயம்" என்பாரதிறே பேறு; திங்கள் புக்கிருப்பாரதன்றோ. (வேயரித்யாதி) ஆப்திக்கு ப்ராஹ்மணராலே ஸ்துதிக்கப்பட்டிருக்கிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் திருமகள் ஸ்ரீஸூக்தியான. (தூய தமிழ்மாலை) அநுபவத்துக்குப் பாசுரமிட்ட வித்தனையல்லது நெஞ்சோடேகூடக் கவிபாடிற்றல்லவாய்த்து. (வாயும் நன்மக்களைப்பெற்று மகிழ்வரே) இவளோடொத்த தாத்தில்பெண்கள் இத்தை அப்யஸித்தார்களாகில் க்ருஷ்ணனைப்

---

ஊரைவலமாக வந்து) என்று வாக்யத்தை அந்வயிப்பது. (என்றதிறே முதற்பாட்டிலென்று பூரிப்பது. உடன்மண நீராட்டுகையாவது - தம்பதிகளிருவரும் ஒருபுடவையுடுத்து நீராடுகை. ௧௦

நிகமத்தில், (அவன் பேற்றுக் குறுப்பாக) என்கைக்கு அவனதோ பேறு, தம்மதன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (நஜீவேயம் - நஜீவேயமித்யாதி.) (திங்கள் புக்கு) என்றது - * மாஸாதூர்த்வம் -மாஸாதூர்த்வம்

---

(க) ரா-ஸு-௬௬-௧௦.

போலே யிருக்கும் வரனைப் பெறுவர்கள்; புருஷர்கள், அப்யஸித்தார்களாகில் பெரியாழ்வாரைப்போலே பகவத் ப்ரவணரான புத்ரர்களைப்பெற்று ஹ்ருஷ்டராவர்கள். (க) "மாயன் மணிவண்ணன தாள்பணியும் மக்களைப்பெறுவர்கள்" என்றாரிறே தாம் கைக்கண்டவராகையாலே. கக

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஆறாம்திருமொழி முற்றிற்று.

---

## ஏழாம் திருமொழி கருப்பூரம் ப்ரவேஶம்.

——:O:——

அவ.—(கருப்பூர மித்யாதி) ஆண்டாளுடைய பாக்யமிருந்தபடி, புதியதொரு சூரங்கைப்பார்த்து, *(உ) "[illegible]-கதமூஆகதம்பாஹ" என்னுமே தேஶிகரைக் கேட்கப்பெற்றாளிறே. ஒரு ஸ்வப்நாநுபவத்தைச் சொன்ன வளவன்றிக்கே ஸம்ஶ்லேஷமும் வ்ருத்தமாய்த்துப்போலே. இல்லையாகில் "வாசம்ருதமிருக்கும்படியென்" என்று கேட்கக்கூடாதிறே. ஸ்வப்நாநுபவமாகையாலே மின்மினி பறந்தாப்போலே யிருக்குமத்தனை யல்லது நெஞ்சில் பட்டிராது; ரஸ்யதையாலே நெஞ்சில் படாநிராது. ஸம்ஶ்லேஷத்தில் உபக்ரமத்திலே தானிழந்தாள்; † தனக்கமை

---

என்றபடி; கர்ப்பிணி - த்வநி; அநுபவத்தாலே சொல்லுகையால் வந்த தூய்மை. (க்ருஷ்ணனைப்போலே) என்றது - வடிவழகாயிருக்கிற நல்ல பர்த்தாக்களைப் பெறுவர்களென்றபடி. (பகவத்ப்ரவணரான புத்ரர்களை) என்றது - ஶிஷ்யர்களையாய், ஆண்டாளுக்கும் உபலக்ஷணமாமென்று கண்டுகொள்வது, மேலில் வாக்யத்துக்கீடாக. கக

ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

அரு —கருப்பூரம்ப்ரவேஶம். ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக்கேட்கைக்கு ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய்த்தோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஒருஸ்வப்நேத்யாதி) ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமானால் கேட்கிற தென்னென்ன; அருளிச்செய்கிறார். (ஸ்வப்நாநுபவ மித்யாதி.) ரஸ்யதை நெஞ்சிலே பட்

---

(க) பெரி-தி-க-அ-கக (உ) ரா-ஸு-ரூச-ச.

† "உவமை அமைத்த" என்று முந்தின ப்ாடம்.

த்த அம்ஸத்தை ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கேட்கிறாள். அவனைக் கேட்பானென்னென்னில்; திரைவிளைத்தால் அதுக்குள்ளே வர்த்திக்கும் கூனர் குறளரைப்போலே அவனைக்கைவிடாதே அந்தரங்கனா யிருக்கையாலும், தாங்களநுபவிக்கும் துறையிலே யிழிந்து அநுபவிக்கும் நிலவனாயிருக்கையாலும், தங்களைப்போலே காதாசித்க மன்றிக்கே நித்ய ஸம்ஶ்லேஷம் பண்ணிவர்த்திப்பா

---

டால் கேட்கவேண்டிவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷத்திலித்யாதி.) (உபக்ரமத்திலே இழக்கை) - ஸ்வப்நத்திலே இழக்கை. (உவமை) - த்ருஷ்டாந்தம். (உவமை யமைக்கையாவது) - பச்சையிடுகை. நாயகன் பச்சையிட்ட அம்ஸத்தை என்றபடி. அன்றிக்கே. "தனக்கு அமைத்த அம்ஸத்தை" என்றும் பாடம். ஆகவித்தால் - கீழில் திருமொழியிலே - ஸ்வப்நாநுபவம் பண்ணினவிவள் இத்திருமொழியில் ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாகம்ருதச்சுவடுகேட்கைக்கு ஹேது "ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமாகையாலும், ஸ்வப்நத்திலே அநுபவிக்கையாலே விஶதமா யிருக்கையாலும், ஸம்ஶ்லேஷத்தில் உபக்ரமத்திலே இழிந்தவளாகையாலும்" என்று மூன்றாகக் கண்டுகொள்வது. திருவாழி முதலானவற்றைவிட்டு ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாகம்ருதச்சுவடு கேட்கைக்கு ஹேதுஸப்தவிதமாய், அதில் நாலாம் ஹேது "அவனுக்குப் பரிவனாகையாலும்" என்று விவக்ஷித்து, அந்தப்பரிவை "இனி" என்று துடங்கி "காந்துநிற்பானுமாய்" என்னுமளவாக இரண்டு விதமாகக்காட்டி, "பெண்களுக்குக்காட்சி கொடுப்பதும் இவற்றோடேயாகையாலும்" என்று அஞ்சாம் ஹேதுவைக்காட்டி, "ஶ்யாமமான திருமேனிக்கு பரபாகமான ஆகாரத்தைப்பற்றத்தான் எப்போதுமித்தையே பாவித்திருக்கையாலும்" என்று ஆறும் ஹேதுவைக்காட்டி, "இனி இவன்வார்த்தை" இத்யாதியாலே ஏழாம் ஹேதுவைக்காட்டுகிறார் என்றுக்ரோடீகார:. இப்படி பலஹேதுக்களருளிச் செய்கிறார் (திரைவிளைத்தாலித்யாதி.) "திரைவிளைத்து" என்கையாலே -நித்ய ஸூரிகளையும், "தாங்களநுபவிக்கும்துறை" என்கையாலே - திருவாழி யாழ்வானையும், "நித்ய ஸம்ஶ்லேஷம் என்கையாலே-பிராட்டிமாரையும் வ்யாவர்த்திக்கிறது (கூனர்) - வ்ருத்தர். (குறளர்) - எக்கடிகள். (திரைவிளைத்து) இத்யாதி வாக்யத்துக்குத் தாத்பர்யாந்தரம்-தானுமவனுமான சேர்த்தியில்

ஞொருவனுகையாலும். இனி, வினையுண்டானால் திருவாழி யாழ்வான் திருக்கையை விட்டுப்போய் வ்யாபரிக்கும்; இவன் வினை முடுகமுடுகத் திருப்பவளத்திலே யணையு மித்தனை. இனி உகவாத கம்ஸாதிகள் காணுமைக்கிறே, (க) "उपसंहर" "உபஸம்ஹர" என்றது. உகந்த பெண்களுக்குக் காட்சி கொடுப்பதும் இவற்றேடே கூடவா யிருக்குமிறே. வாய்கரையிலே போயிருந்து ஆர்ப்பாரவம் பண்ணி அவ்வார்ப்பாரவத்திலே எதிரிகள் கெடும்படி யிருப்பானுமாய், இவனை உகவாத கம்ஸாதிகள் காணுதபடி "उपसंहर" "உபஸம்ஹர" என்றால் அப்போதே கைகரந்து நிற்பானுமாய், உகந்தபெண்களுக்குக் காட்சி கொடுப்பதும் இவற்றேடே கூடவா யிருக்குமிறே. இவர்கள்தான் ஶ்யாமமான திருமேனியை யநுபவித்தால் அதுக்கு பாபாகமான வெண்மையை யுடையவனுகையாலே சேரவநுஸந்திக்க வேண்டியிருக்குமிறே. இவன்றன் அதிதவளனுமாயிருக்குமிறே. (உ)"தாமுகக்கும் தம்கையில் சங்கமேபோலாவோ" என்றும், (ங)"வெள்ளை விளிசங்கிடங்கையில்கொண்ட விமலன்" என்றும், (ச)"பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன்னியமேபோல் வனசங்கங்கள்" என்றும், இவள்தான் பாவித்திருப்பதும் இத்தையிறே. இனி இவன்வார்த்தை கேட்டால் அவன்வார்த்தை கேட்டாப்போலே இனிபதுமா யிருக்குமே. "அத்தை நித்யாநுபவம் பண்ணுகையாலே உனக்குத் தெரியுமிறே, அவனுடைய வாகம்ருதமிருக்கும்படியென் நீ சொல்லவல்லையே" என்று அவனைக் கேட்கிறுளாயிருக்கிறது. ... *

---

போகத்தை யறியுமவனுகையாலு மென்றபடி (கரந்துநிற்பானுமாய்) "இப்படி பரிவனு யிருக்குமிறே, அத்தாலும்" என்றுகூட்டி நிர்வஹிப்பது. தங்கள் துறையான வாகம்ருதத்துக்கு தேஶிகனுன மாத்ரமன்றிக்கே அவனை அநுபவிக்குமிடத்தில் ப்ரதாநாநுபாவ்யனுகையாலும் இவனைக் கேட்கிறுர்களென்கிறுர் (இவர்கள்தானித்யாதி.) இவனை ப்ரதாநமாக அநுபவித்த விடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறுர் (தாமுகக்கு மித்யாதி.) இவன்வார்த்தை அவன் வார்த்தைபோலே யிருக்கையாலும் கேட்கிறுளென்கிறுர் (இனி இவன்வார்த்தையித்யாதி.) ஆக, கேட்கைக்கு ப்ரதாந ஹேது மூன்று. (அத்தை) - வாகம்ருதத்தை. *

---

(க) வி-பு-ரு-ஙு-கரு. (உ) கக-க.
(ங) ரு - உ. (ச) திருப்பாவை-உகூ.

மூ.—கருப்பூரம்நாறுமோ ? கமலப்பூநாறுமோ ?
திருப்பவளச்செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ ?
மருப்பொசித்தமாதவன்தன் வாய்ச்சுவையும்நாற்றமும்
விருப்புற்றுக்கேட்கின்றேன் சொல்லாழிவெண்சங்கே ! (க)

ப - ரை. ஆழி - கம்பீரஸ்வபாவத்தையும், வெண் - வெளுத்த நிறத்தையுமுடைய, சங்கே - ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானே, மருப்பு - குவலயாபீடமென்னும் யானையின் கொம்பை, ஒசித்து - முறித்து அத்தைக் கொன்றுபொகட்ட, மாதவன் தன் - ஸ்ரீயஃபதியான ஸர்வேஶ்வரனுடைய, வாய் - திருவதரத்தினுடைய, சுவையும் - ரஸத்தையும், நாற்றமும் - பரிமளத்தையும், விருப்புற்று - புஜிக்க ஆசைப்பட்டு, கேட்கின்றேன் - கேட்கிறேன்; திரு- அழகிய, பவளம் - பவளம்போன்று, செம்-சிவந்த, வாய்தான்-திருவதரமானது, கருப்பூரம்-பச்சை கற்பூரம்போல், நாறுமோ-பரிமளிக்குமோ; அல்லது, கமலப்பூ-செந்தாமரை மலர்போலே, நாறுமோ-பரிமளிக்குமோ; அல்லது, தித்தித்திருக்குமோ - இனிதாயிருக்குமோ, சொல் - சொல்லவேணு மென்கிறாள்.

வ்யா.—முதற்பாட்டு. (கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ) எறிச்சுவெட்டிதாயிருக்கும் கர்ப்பூரநாற்றம்; ஆறிக்குளிர்ந்து நிலைநின்றிருக்கும் கமலப்பூவினுடைய நாற்றம்; இரண்டுமேயாயிராநிறே; (க)“ ஸர்வகந்த: ” “ ஸர்வகந்த: ” என்கிற வஸ்துவாகையாலே. எல்லாம் அநுபவவிஷயமாயிருக்கச்செய்தே ஒன்றையிரண்டைக் கேட்கிறாளித்தனையாய்த்து. இதில் உனக்குத்தானேதேனும் தெரிந்திருக்குமாகில் நீதான் சொல்லவல்லையேயென்கிறாள். (திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ) அத்தைத்தப்பி உள்ளேயிழிந்தால் அநுபவிக்கும்படி கேட்கிறாள்.

---

முதற்பாட்டு. (கருப்பூரமித்யாதி) (எறிக்கை) - ப்ரகாஶிக்கை. (வெட்டிது)- உறைப்பு. கருப்பூரம்போலவும் கமலம்போலவும் என்னலாம், அதுவோ இதுவோவென்று ஸம்ஶயிப்பானென்னென்ன (இரண்டுமேயித்யாதி.) * ஸர்வகந்த விஷயமானால் எல்லாவற்றையும் சொல்லவேண்டாவோ, ஒன்றிரண்டைக் கேட்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (எல்லாமித்யாதி.) அதாவது-நீச்சுநீரும் நிலைநீருமாகையாலே என்றபடி. (அத்தைத்தப்பி)பரிமளத்தைத்தப்பி; ரஸத்தையும்விகல்பிக்கவொண்ணுதோவென்ன

"ஸர்வக₃ந்த₄:" "ஸர்வகந்தஃ" என்கிற வதுபோல் "ஸர்வரஸ:" "ஸர்வரஸ:"என்கிற விது-விகல்பவிஷயமா யிருக்கிறதில்லைபோலே காணும். தேன் போலே கன்னல்போலே யிருக்குமோ வென்று விகல்பித்துக் கேட்கமாட்டுகிறிலளாய்த்து - வாய்புகுநீராய் ஆழங்காலா யிருக்கைகயாலே. (திருப்பவளச்செவ்வாய்) கண்ணுக் கிலக்கானபோதே பிடித்து அவ்வருகு ஒன்றில் இழிய வொட்டுகிற தில்லையாய்த்து. ஸர்வேந்த்ரியங்களுக்கும் விஷயமுண்டாயிருக்கிறபடி. (மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்) அளவுடையார் இழிந்து ஆழங்கால் படும் துறையாய்த்து. (க) "ப₄ர்த்ருʼபரிஷ்வஜே" "பர்தாரம்பரிஷஸ்வஜே" என்கிறபடியே- குவலயா பீடத்தைத் தள்ளின வநந்தரம் அணைத்தநுபவிக்குமாய்த்து. (வாய்ச்சுவையும் நாற்றமும்) அநுபவஸமயத்தில் நாற்றம் முற்பட்டதேயாகிலும், அநுபாஷிக்கிற விடத்தில், ரஸம் முற்பட்டு கந்தம் பிற்பட்டிருக்கிறதுகாணும். (விருப்புற்றுக் கேட்கின்

---

அருளிச்செய்கிறார் (ஸர்வக₃ந்த₄: - ஸர்வகந்தஃ இத்யாதி) உக்தோபபாதகம் (தேன்போலே யித்யாதி) (வாய்புகு நீர் -சாடு. தன் வாயிலே புகுகிற ரஸமென்றர்த்தம்; ஆழம் த்வநி. "செவ்வாய்" என்றதுக்குத் தாத்பர்யம் (கண்ணுக்கித்யாதி.) (ஸர்வேந்த்ரிய விஷயம்)-நாற்றம், ரஸம், சிவப்பு; இம்மூன்றும் மற்றை யிரண்டுக்கும் உபலக்ஷணம். அவ்வருகிழிய வொட்டாமைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (ஸர்வேந்த்ரியங்களுக்கு மித்யாதி.) (அளவுடையார்) என்றது - பிராட்டியை. (சுவை) - ரஸம். (நாற்றம்)-கந்தம் கீழ்ச்சொன்னபடியே நாற்றம் முன்னாக அநுபாஷியா திருப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அநுபவஸமயத்திலித்யாதி) அவகாஹநாதிஸமயத்தாலே ரஸ்யதை பின்னாட்டிற்றென்றபடி. "(அநுபவஸமயத்தில்) என்றது - அநுபவோபக்ரமஸமயத்திலென்றபடி" என்றருளிச்செய்வர். இத்தால் தாத்பர்யம்;—அநுபவோபக்ரமஸமயத்திலே கந்தக்ரஹணம் ப்ரதமபாவியாய், ரஸம் பஶ்சாத்பாவியானாலும், அநுபவவேளையில் ரஸமேப்ரதாநமாயிருக்கையைப்பற்ற அநுபாஷிக்கிறவிடத்தில் ரஸம் முன்னாகச் சொல்லுகிறாளென்றபடி. உபக்ரம ஸமயத்தைப்பற்றக் கீழ்ச்சொல்லிற்று; அநுபவஸமயத்திலிருக்கும் படியைப்பற்ற இங்கு இப்படி அநுபாஷிக்கிறதென்றபடி."விருப்பு"-ஆதரம். "விருப்புற்று" என்றதுக்கு - ஈஶ்வரன் பக்கலிலே விருப்புற்று-என்றாய், இதுச்குத்தாத்பர்யம்

---

(க) ரா - ஆ - ௩௦ - ௩௯.

றேன்) (க) "ஶநஸூயவே" "அநஸூயயைவ" என்னும் விளம்பமு மில்லை; (உ) "நசமாம் யோப்யஸூயதி" "நசமாம் யோப்யஸூயதி" என்னவேண்டாவிறே இவளுக்கு; அடியானாகையாலே நியமித்துக் கேட்கலாமே; அவனுக்கு ஶேஷபூதனாகையாலே இவளுக்கும்அடியானுமிருக்குமிறே; பர்த்ருபார்ஸைகளிருவர்க்கும்பொதுவாயிறே தாஸதாஸிகளிருப்பது. (ஆழி) உன்னளவுடைமை போலே யிருக்கவேண்டாவோ பரிமாற்றமும், அன்றிக்கே பிறப்பைச் சொல்லுதல். (வெண்சங்கே) உன் நிறத்தில் வெண்மை நெஞ்சிலே பட்டாப்போலே உன்வார்த்தையும் நெஞ்சிலேபடும்படி சொல்லவேணும். (வெண்சங்கே) கைவிடாதே அநுபவியாநிற்கச்செய்தே உடம்பு வெளுக்கும்படியிறே இவனுடைய ஆற்றுமை. க

அவ—இரண்டாம் பாட்டு. நீ உகவாதாரை அழியச் செய்யுமாப்போலே உகப்பாரை வாழ்விக்கவேணுங்காண். நீ பிறந்து வளர்ந்தாப்போலே யிருக்கவேணுங்காண் காரியங்களும்.

மூ.—கடலில்பிறந்து கருதாது பஞ்சசனன்
உடலில்வளர்ந்துபோய் ஊழியான்கைத்தலத்
திடரில் குடியேறித் தீயவசுரர்
நடலைப்படமுழங்கும் தோற்றத்தாய்நற்சங்கே! (உ)

ப-ரை. கடலில் - திருப்பாற்கடலிலே, பிறந்து—, பஞ்சசனன் - பஞ்சஜநன் என்னும் அஸுரனுடைய, உடலில் - கர்ப்பத்திலே, வளர்ந்து—, கருதாது - தான் வளர்ந்தவிடத்தை நினையாமல் போய் - பின்பு அவ்விடத்தி னின்றும் போய், ஊழியான் - காலசேஷமான ஜகத்துக்கு நிர்வாஹகனான ஸர்வேஶ்வரனுடைய, கைத்தலத்திடரில்-கைத்தலத்தில்

(ஶநஸூயவே - அநஸூயயைவ யித்யாதி) அன்றிக்கே, "விருப்புற்று", என்றதுக்கு - உன் பக்கலிலே ஆதாரத்தை யுடையேனாய்க் கேட்கிறேனென்றாக்கி, தாத்பர்யம் (அடியானாகையாலே யித்யாதி) (கேட்கலாமே) "ஆயிருக்கவும் விருப்புற்றுக் கேட்கின்றேன் என்றுளிறே செல்லாமை" என்று வாக்யஶேஷம் அத்யாஹார்யம் கேட்கலானபடி யெப்படியென்ன அருளிச்செய்கிறார் (அவனுக்கித்யாதி) பிறப்பைச்சொன்ன பக்ஷத்தில் ஸமுத்ரம் பதார்த்தங்களுக்கு தாரகமாமாப்போலே, நீயும் எனக்கு தாரகமாக வேண்டாவோ வென்றபடி. தாத்பர்யார்த்தம் (கைவிடாதே யித்யாதி)

(க) கீ - கூ - க. (உ) கீ - கஅ - கள. 67

குடியேறி - குடிபுகுந்து. தீய - கொடியரான, அசுரர் - அஸுரர்களான வர்கள், நடலைப்பட - வருந்தும்படி, முழங்கும் - சப்தியா நின்றுள்ள, தோற்றத்தாய் - அழகையுடையதான. நற்சங்கே-நல்ல பாஞ்சஜந்யமே சொல்லாயென்கிருள்.

வ்யா.—(கடலிலித்யாதி) கடலிலே பிறந்து அகவாயிலுள்ளது த்வேஷமாயே யிருக்கிற அஸுரனுடைய வுடலுக்குள்ளே வளர்ந்தத்தை நினையாதே, பின்னைப்போய், காலஶேஷமான ஜகத்துக்கு நிர்வாஹகனு யிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய கைத்தலத்திலே குடியேறி. (தீயவசுரர் நடலைப்பட முழங்கும் தோற்றத்தாய்) அவன்படியடங்க வுண்டாயிருந்ததீ! உனக்கு அவன் யதுகுலத்திலே பிறந்து ஶத்ருவான கம்ஸனுக்குள்ளாய் இறையிறுத்திருக்கிற திருவாய்ப்பாடியிலே வளர்ந்து. காலயவநஜராஸந்தாதிகளுக்காகப் போய் ஸ்ரீமத்வாரகையைப் படைவீடாகச்செய்து அங்கே குடியேறி, பின்னை துர்யோதநாதிகளை மண்ணுண்ணும்படி வந்து, இப்படி செய்தானிறே அவனும். (நல்சங்கே) இருகரையரா யிருப்பார்கள் உனக்கொப்போ. அவர்கள், குற்றத்தையும் குணத்தையும் கணக்கிட்டுச் செய்யுமவர்கள்; உனக்கொப்பாக மாட்டார்களிறே; கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டிக்குமவனிறே அவன்.

---

இரண்டாம் பாட்டு. (கடலிலித்யாதி) உன்பிறப்பு பரார்த்தமானுப் போலே உன்கார்யமும் பரார்த்தமாகவேணுமென்று இரண்டாம் அவதாரிகைக்குத் தாத்பர்யம். "அசுரர் நடலைப்பட" என்றதுக்குத் தாத்பர்யம் (நீயுகவாதாரையித்யாதி) (நீ பிறந்து வளர்ந்தாப்போலே யிருக்கவேணும்) என்றதுக்குத் தாத்பர்யம்-ஸர்வோபகாரகமான கடலிலே பிறந்தாப்போலவும் பஞ்சஜநனுடலிலே அவன் தோஷம் தர்ஶியாமல் வளர்ந்தாப்போலவுமிருக்கவேணுங்காண் என்றபடி. "கருதாது" - நினையாது. (பஞ்சசநன்)- அஸுரன். கருதாது - பகவானைக் கருதாதென்றுய், அத்தால் - த்வேஷமேயாயிருக்கிற பஞ்சஜநனென்றபடி. (காலஶேஷமான) என்றது - எல்லா பதார்த்தங்களும் ஸம்ஹ்ருதமாய், காலமே ஶேஷித்த வென்றபடி. ஊழியான்-காலநிர்வாஹகன். (நடலை)-துःகம். கர்மாநுகுணமாகக் குற்றங்களையும் குணங்களையும் பார்க்கையாலே ஈஶ்வரனை இருகரையனென்கிறது. அவன் குற்றத்தையும் குணமாகக்கொள்ளுகிற உனக்கொவ்வானென்றபடி.

(கடலில் பிறந்தித்யாதி) நஞ்சீயர் ஸந்யஸித்தருளின காலத்திலே அநந்தாழ்வான் கண்டு, "முன்புத்தை ஐஸ்வர்ய மறியுமவனுகையாலே, "ஒரு பூவைச்சூடி வெற்றிலையைத்தின்று சந்தநத்தைப்பூசிப் போராநிற்கச்செய்தே, எம்பெருமானை ரக்ஷகனென்றிருந்தால் பரமபதத்தில் நின்றும் இழியத்தள்ளுவர்களோ, இங்ஙனே செய்யத்தகாது" என்று போரவெறுத்தவாறே; கூடநின்றவர்களும். "இங்ஙன் செய்வதே"' என்று வெறுத்தார்களாய், "இவர்தாம் செய்வதென்" என்றுவிட்டு, "திருமந்த்ரத்திலேபிற" என்று முக்கால்சொல்லி, "திருமந்த்ரத்திலே பிறந்து, த்வயத்திலே வளர்ந்து, த்வயைகநிஷ்டனும்படியாய்த் தலைக்கட்டுவது உன்காரியம்" என்று ப்ரஸாதித்தான். "திருமந்த்ரத்தில் சொல்லுகிறபடியே ஸ்வரூபஜ்ஞாநமுண்டாய், த்வயத்தில் சொல்லுகிறபடியே உபாயபரிக்ரஹமுண்டாகவேணும்" என்று ப்ரஸாதித்தான். உ

மூ.—தடவரையின்மீதே சரற்காலசந்திரன்
இடையுவாவில்வந்து எழுந்தாலேபோல நீயும்
வடமதுரையார்மன்னன் வாசுதேவன்கையில்
குடியேறிவீற்றிருந்தாய் கோலப்பெருஞ்சங்கே! (௬)

ப-ரை கோலம் - அழகையும், பெரும் - பெருமையுமுடைய, சங்கே—, சரற்காலம் -சரத்காலத்திலே, சந்திரன் - பூர்ண சந்த்ரனானவன், உவா - பௌர்ணமியினன்று, இடையில்-மத்யராத்ரத்தில், தடம்- பெரிதான, வரையின்மீது - உதயகிரியிலே, வந்து—, எழுந்தாற்போல் - உதித்தாப்போலே, நீயும்—. வடமதுரையார் - வடமதுரையிலுள்ளார்க்கு,

---

இவனைப்போலே பிறந்து வளர்ந்து விரோதிநிரஸநம் பண்ணிக்கையிலே வாழுகைக்கு ஸம்வாதமாக ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் (நஞ்சீயரித்யாதி) "திருமந்த்ரத்திலே பிற" என்று மூக்கால்சொன்னதுக்குத் தாத்பர்யம் - ப்ரதம மத்யம சரம பர்வக்ரமத்தைப் பற்ற. (செய்வதென்னென்று விட்டு) என்றது - இவரை வெறுக்கிறத்தை விட்டென்றபடி. "கடலில்" இத்யாதி என்று புந:பதோபாதாநம் பண்ணினதுக்குத் தாத்பர்யம் - வைஷ்ணவனுக்கு திருமந்த்ரோத்பத்யாதிகளுண்டென்று ஸந்யாஸத்தில் உபாயத்வபுத்தி பண்ணவேண்டாவென்றபடி (தோற்றம்) காட்சியும், அழகும், உ

மன்னன் - ராஜாவாய் வாசுதேவன் - வஸுதேவபுத்ரனான க்ருஷ்ண னுடைய, கையில் - திருக்கையிலே, குடியேறி - குடிபுகுந்து, வீறு - உன் பெருமையெல்லாம் தோற்றும்படி, இருந்தாய்-இருக்குமவளாய். கோலம்- அழகையும், பெரு - பெருமையையு முடைய, சங்கே—, சொல்லா யென்கிறாள்.

வ்யா.—மூன்றாம் பாட்டு.-(தடவரையித்யாதி) உதயகிரியின் மேலே ஶரத்காலத்திலே எல்லாக்கலைகளும் நிரம்பின பூர்ண சந்த்ரன் வந்து தோற்றினாப்போலே (க) * தடவரைத்தோ ளிறே. (நீயும் வடமதுரையார் மன்னனித்யாதி) உன் ஐஶ்வர்ய மிருந்தபடி யென், ஸ்ரீ மதுரையிலுள்ளார்க்கு நிர்வாஹகனாய் ஸ்ரீ வஸுதேவர் திருமகனா யிருக்கிறவனுடைய திருக்கையிலே ஒரு காலமும் பிரியாதபடி யாகக் குடியேறி, உன் ஐஶ்வர்யவ்யாவ்ருத்தி யெல்லாம் தோற்றும்படியா யிருந்தாய். (கோலப்பெருஞ்சங்கே) உன்னழகுக்குமேலே அவனுக்கும் உன்னாலே அழகாம்படி யிரு ந்ததீ! உன்னேற்றம். ௩.

மூ.—சந்திரமண்டலம்போல் தாமோதரன்கையில்
அந்தரமொன்றின்றி ஏறியவன் செவியில்
மந்திரங்கொள்வாயேபோலும் வலம்புரியே!
இந்திரனு முன்னோடு செல்வத்துக்கேலானே. (ச)

ப - ரை. சந்திரமண்டலம்போல் - சந்த்ரமண்டலம்போலே, தாமோ தரன் - கயிற்றின்தழும்பு வயிற்றிலே காணலாம்படி யிருந்த க்ருஷ்ண னுடைய, கையில் - திருக்கையிலே, அந்தரமொன்றின்றி - ஒருக்காலும் பிரியாதபடி, ஏறி - குடியேறி, அவன் செவியில் - அவன் திருச்செவி யிலே, மந்திரம் கொள்வாய்போலும் - மந்த்ரோபதேசம் பண்ணுமவனைப் போலிருக்கிற, வலம்புரியே - வலம்புரியையுடைய ஸ்ரீ பாஞ்சஜந்யமே,

---

மூன்றாம் பாட்டு. (தடவரையித்யாதி) "சாற்காலத்தில் - உவா - இடையில் - தடவரையின் மீதேதோற்றின - சந்த்ரனைப்போலே" இத்ய ந்வயः. (இடையுவா) "இடை" என்று - நடுவாய், சதுர்தஶிக்கும் ப்ரத மைக்கும் நடுவான பர்வத்திலே யென்னுதல்; உவாவினிடையில் என் றாய், பர்வத்திலே யென்னுதல். எல்லாப் பாட்டுக்களுக்கும் க்ரியை 'சொல்லாழி வெண்சங்கே" என்றது. அன்றியே, பாட்டுத்தோறும் கொண்டாட்டமாதல். ௩

---

(க) பெரி - தி - ரு - ச - ச.

இந்திரனும் - இடைச்சிகளாலே செல்வமுடையவனென்று சொல்லப் படுகிற இந்த்ரனும் உன்னோடு செல்வத்துக்கு - உன் ஐஸ்வர்யத்துக்கு' ஏலான் - ஸமாநனாகமாட்டான்.

வ்யா.—நாலாம் பாட்டு. (சந்திரனித்யாதி) செருக்கராயிருக்கு மவர்கள் கையிலே குளிரிக்குடம் பிடித்துக்கொண் டிருக்குமாப் போலே. (தாமோதரன் கையில்) அவனைக்கண்டால் வயிற்றில் தழும்பாலே "ஒருதாயர்க்கு பவ்யனாய் வளர்ந்தான்" என்று தெரி யுமாப்போலே, உன்னைக்கண்டால் இவனும் பவ்யனென்று தோற் றும்படி யிருக்கவேண்டாவோ. (அந்தரமொன்றின்றி) அவன் விரும்பியிருப்பார் பலருமுண்டிறே; அவர்களைப்போலே ஒரு விச்சேதமின்றிக்கே. ஓராபத்து வந்தவாறே கைவிட்டுப் போவா ரைப்போ லன்றிக்கே. (அவன் செவியில் மந்திரம் கொள்வாயே போலும்) "உய்யைப் பிரிந்தாற்றமாட்டாதார் பலருமுண்டு" என்று திருச்செவியிலே சொல்லுகிறாப்போலே யிருக்கிறது. அவன் செவியிலே ரஹஸ்யத்தைச் சொல்லுவான் போலே யிருக்கை. கொள்ளுகை - கொடுக்கை. (வலம்புரியே) அல்லா தவை யெல்லாம் இடத்திலே புரிந்து, நீ வலத்திலே புரிந்தாப் போலே, கார்யத்திலும் வேறுபட்டிருக்கவேணுங்காண். (இந்தி ரனு முன்னோடு செல்வத்துக்கேலானே) தான் நினைத்தபோது வர்ஷிப்பித்து அல்லாதபோது தவிர்ந்து போருகையாலே ஐஸ்வ ர்யமுள்ளது இந்திரனுக்கென்றுப்த்து இவர்களிருப்பது; இடைச் சிகளாகையாலே. (க) "இந்திரனுக் கென்றுயர்களெடுத்த வெ ழில் விழவு" என்னக்கடவதிறே. அன்றிக்கே. பெரியாழ்வார் பெண்பிள்ளை யாகையாலே இந்த்ரப்ராஜாபதி ஸப்தங்களும் பகவ

நாலாம் பாட்டு (சந்திரனித்யாதி) (குளிரிக்குடம்) - பனிநீர்க்குப்பி. (தோற்றும்படி யிருக்கவேண்டாவோ) தோற்றும்படி யிருக்கிறாயே என்று கொண்டாட்டமாதல்; தோற்றுகிறாயில்லையென்று வெறுப்பாதல் "ஒன் றின்றி" என்றதுக்குத்தாத்பர்யம் (ஓராபத்து வந்தவாறே) என்று திருவாழி யைப்போ லன்றிக்கே யென்றபடி (மந்திரங்கொள்ளுகை) அவன் கையிலே தான் கொள்ளுதல்; தான் அவனுக்குக் கொடுத்தல் இடைச்சிகள் இந்த்ர னுக்கே ஐஸ்வர்ய மென்றிருப்பர்களோ வென்ன; அருளிச்செய்கிறார் (இந்தி ரனுக் கித்யாதி) (ஆகக்கெ ள்ளவென்றுதல்; ஆராதித்தாளென்றபடி)

(க) தி - மொ - உ - ரு - ச.

த்வாசகங்களென்னும் வாஸனையாலே சொல்லிற்றாகல். அவ னுடைய ஸ்வாதந்த்ர்ய லக்ஷ்மி உன்னுடைய பாரதந்த்ர்ய லக்ஷ் மிக்குப் போராதாயிருந்ததீ! ஒருவன் அநுகூலித்தவாறே யழியு மதிறே. (க) "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:-லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம் பந்ந:" என்று நிலைநின்றதாய்த்து இது. (உ) "ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யதா ந ஸௌமித்ரிருபைதி யோகம்" "ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யதாந ஸௌமித்ரிருபைதியோகம்" என்று-ஒருபடியாலும் முடி சூடேனென்றவனையிறே * லக்ஷ்மிஸம்பந்நனென்றது. (ங) [பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத:-பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத:] பெருமாள் முடி தவிர்ந்தார், இளையபெரு மாள் வருத்த முடிசூடினார்.

மூ.—உன்னோடுடனே ஒருகடலில்வாழ்வாரை
இன்னாரினையாரென்று எண்ணுவாரில்லைகாண்
மன்னாகிநின்ற மதுசூதன்வாயமுதம்
பன்னாளுமுண்கின்றாய் பாஞ்சசன்னியமே! (ரு)

ப - ரை. ஒருகடலில் - ஒரே கடலிலே, உன்னோடு - உன்னுடனே, உடனே வாழ்வாரை - சேரவர்த்திக்கிறவர்களை, இன்னார் - இப்படிப்பட்ட குணமுள்ளவர்கள், இனையார் என்று - இப்படிப்பட்ட ஆசாரமுள்ளவர்க ளென்று, எண்ணுவார் - எண்ணக்கடவார், இல்லைகாண் - இல்லைகிடீர்; மன்னாகிநின்ற - ஸர்வநிர்வாஹகனான, மதுசூதன் - மதுவை நிரஸித்த க்ருஷ்ணனுடைய, வாயமுதம் - வாகம்ருதத்தை, பன்னாளுமுண்கின்றாய்- நித்யமாக அநுபவியாநின்ற, பாஞ்சசன்னியமே—, சொல்லாய்.

வ்யா.—அஞ்சாம் பாட்டு. (உன்னோடித்யாதி) உன்னோடு ஸஜாதீய பதார்த்தங்களை யிட்டு எண்ணுவாரின்றிக்கே, நீ ஒருவன் வாழ்ந்தபடி யென். ஒரு தேசத்திலே யுன்னோடே சேர வர்த்திக் கிறவர்களை, அவர்கள் ஸ்வரூபமாதல், ப்ரகாரமாதல் இன்று எண்

"லக்ஷ்மிஸம்பந்ந:" "லக்ஷ்மிஸம்பந்ந:" என்றால் பாரதந்த்ர்ய ஸம்பத்தாக வேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஸர்வாத்மநா - ஸர்வாத்மநா இத்யாதி) சேஷத்வமே ஐச்வர்ய மென்றதுக்கு ப்ரமாணாந்தரம் (பூர்வ ஜஸ்ய - பூர்வஜஸ்யேத்யாதி.) "மந்திரம்" - ரஹஸ்யம். "ஏலான்" - ஒவ் வான் "கொள்வாய்" என்றது - முழுச்சொல்லு. முந்தினபொருள் - இந்த்ரனே பரனென்றபடி.

(க) ரா-பா-கஅ உக. (உ) ரா-யு-கககூ-கரு. (ங) ரா-ஸு-ஙங-உஅ.

ணக்கடவா ரில்லைகாண். (மன்ணுகிநின்ற) (க) "ராஜாதிராஜ:" "ராஜாதி ராஜ:" என்கிறபடியே நிர்வாஹகனுய் நின்ற. (மதுசூதன்) இது தான் ஒரு நாமமாத்ரமாயிராதே ஆஶ்ரிதர்க்குக் களையறுத்துக் கொடுக்குமவனுய்த்து; அவனுடைய வாகம்ருதத்தை. (பன்னுளும் உண்கின்றுய்) நாங்க ளநுபவிக்குமத்தை காதாசித்கமாக்கி, நித்யா நுபவம் பண்ணுநின்றுய். (பாஞ்சசன்னியமே) "பிறப்பு" என்று ஒன் றில்லையாகாதே; - பெரியாழ்வார் வயிற்றில் பிறந்து உன்னைக் கால் கட்டாநின்றேன்; நீ அஸுரன் வயிற்றிலே பிறந்து நித்யாநு பவம் பண்ணுநின்றுய். ரு

மூ.---போய்த்தீர்த்தமாடாதே நின்றபுணர்மருதம்
சாய்த்தீர்த்தான்கைத்தலத்தே ஏறிக்குடிகொண்டு
சேய்த்தீர்த்தமாய்நின்ற செங்கண்மால்தன்னுடைய
வாய்த்தீர்த்தம்பாய்ந்தாடவல்லாய் வலம்புரியே! (சு)

ப - ரை போய் - நெடுந்தூரம் சென்று, தீர்த்தம் - கங்கை முதலிய தீர்த்தங்களிலே, ஆடாதே - நீராடாமல், நின்ற - அஸுராவேசத்தாலே போராதே நின்றதாய், புணர் - இடை வெளியில்லாத, மருதம் - மருத மரங்களை, சாய்த்து - முறித்து, ஈர்த்தான் - இழுத்துக்கொண்டு சென்ற க்ருஷ்ணனுடைய, கைத்தலத்து - திருக்கையிலே, ஏறி—, குடிகொண்டு - குடியாயிருந்து, சேய் - மிகத்தூரமாய், தீர்த்தமாய்நின்ற - பாவநமாயிருக் கிற, செங்கண்மால் தன்னுடைய - புண்டரீகாக்ஷனை வனுடைய, வாய்த் தீர்த்தம் - வாகம்ருதத்திலே, பாய்ந்து - குதித்து, ஆடவல்லாய் - நீராட வல்ல, வலம்புரியே—, சொல்லாய்.

வ்யா.—ஆறும் பாட்டு. (போய்த்தீர்த்தமாடாதே ஆயிரக் காதம் ஐஞ்ஞூருக்காதம்போய்ச் சரகூறலிலே முழுகித்திரியாதே. (நின்றவித்யாதி) அஸுராவேஶத்தாலே போராதே நிர்விவரயாய் நின்ற மருதுகளிரண்டின் நடுவே அவகாஶம் கண்டுபோய், பின்னை அவை முறிந்து உரலோடே யிழுப்புண்டுவர, அதின் த்வநியைக் கேட்டுப் புரிந்து பார்த்துக்கொண்டிருந்த மௌக்த்யத்தையுடை யனு யிருக்கிறவன் கையிலே. (ஏறிக்குடிகொண்டு) அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே (உ) "உபஸம்ஹர" "உபஸம்ஹர" என்று

அஞ்சாம் பாட்டு —(உன்னேடித்யாதி) "இன்னார் இனையார்" என்ற துக்கு பேதம் (அவர்களித்யாதி) ரு

(க) (உ) வி - பு - ரு - ௬ - ௧௬.

சிலரிரக்க, "நாம்மறைந்து நாலுநாள் நிற்கையாலிறே இப்ப்ரமாதம் புகுந்ததென்று, இனியொருநாளும் பிரியவொண்ணுது" என்று திருக்கையைவிடாதே வர்த்திக்கிறுனுய்த்து. (சேய்த்தீர்த்தமாய் நின்ற) அறத்தூரமாய், அதிபாவநமாய் நின்ற. (க) "పావనస్సర్వలోకానాం త్వమేవరఘునన్దన" "பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந" என்றும், (உ) "పుణ్యానామపిపుణ్యోஸౌ" "புண்யாநாமபிபுண்யோஸெள" என்றும், (ங) "தீர்த்தன்" என்றும் சொல்லுகிறபடியே நின்ற. (செங்கண்மால் தன்னுடைய) புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனுடைய. (வாய்த்தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய்) கடலில் அம்ருதம் படும்துறையிலே யிழியுமாப்போலே, முகப்பிலே - வாய்கரையிலே நின்று தீர்த்தமாடுகிறாயிறே: (வலம்புரியே) அநுபவத்திலேற்றம்போலே ஸந்நிவேஶமும் இப்படியிருக்கவேணுமோ. ௬

மூ.—செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல்
செங்கண்கருமேனி வாசுதேவனுடைய
அங்கைத்தலமேறி அன்னவசஞ்செய்யும்
சங்கரையா! உன் செல்வம்சாலவழகியதே. (எ)

ப - ரை. செங்கமலம் - செந்தாமரையில், நாள் - அப்போதலர்ந்த, மலர்மேல் - அழகிய மலரின்மேலே, தேன்நுகரும் - மதுபானம் பண்ணுநின்றுள்ள, அன்னம் போல் - ஹம்ஸத்தைப்போலே, செம்-வாத்ஸல்யத்தாலே சிவந்த, கண் - திருக்கண்களையும், கரு - நீலமணிபோலே கறுத்த, மேனி - திருமேனியையுமுடையனுய், வாசுதேவனுடைய - வஸுதேவ புத்ரனை க்ருஷ்ணனுடைய, அம் - அழகிய, கைத்தலமேறி - திருக்கையிலே யேறி, அன்னவசம்செய்யும் - உணவுக்கீடாக இடம் வலங்கொள்ளுகிற, சங்கரையா - சங்கராஜனே, உன்செல்வம் - உன் ஐஶ்வர்யம், சால வழகியது - மிகச் சிறந்ததன்றே, ஆகையால் நீயே சொல்லவேணுமென்கிறுள்.

ஆறும் பாட்டு—(போயித்யாதி) "புணர்" - சேர்த்தி. "புணர் மருதம் சாய்த்தீர்த்தான் கைத்தலத்தே யேறிக்குடிகொண்டு" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் (அவதாரத்தினித்யாதி.) "சேய்த்தீர்த்தம்" - பெரியதீர்த்தம. சேய்-தூரம். (அறத்தூரமாய்) என்றதின் விவரணம் (அதிபாவநமாய்) என்றது. (முகப்பு) - சாடு. முகம் - அர்த்தம்; முன்னே - த்வநி. ௬

(க) ரா-உ-அ-உ-கூ. (உ) பார- (ங) தி-வாய்-உ-அ-ரு.

வ்யா.—எழாம் பாட்டு (செங்கமலமித்யாதி) செந்தாமரையில் அப்போதலர்ந்த செவ்விமலரின்மேலே அன்னம்படிந்து மதுபானம் பண்ணுமாப்போலே, (க) "అహమన్నమ్" "அஹமந்நம்" என்று கொண்டு, வாத்ஸல்யப்ரகாஶகமான திருக்கண்களையும் தாபமடைய ஆறும்படி குளிர்ந்தவடிவையு முடைய ஸ்ரீவஸுதேவர் திருமகனுடைய அழகிய திருக்கையிலேயேறி, உணவுக்கீடாக இடம் வலங்கொள்ளும். பரப்புமாறத் தாமரை பூத்தாப்போலே திவ்யாவயவங்களும், (உ) "அக்கமலத்திலைபோலுந் திருமேனி" என்கிறபடியே அதில் பச்சையிலைபோலே திருமேனியும், அங்கே மதுபானார்த்தமாக விழிந்த அன்னம்போலே திருமேனிக்கு பரபாகமான வெண்மையை யுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யமுமா யிருந்தபடி. சங்கரையா (ஙு) "తతో వానరరాజేన" "ததோ வாநரராஜேந" என்னுமாப்போலே; பெருமாள் மஹாராஜரை முடிசூட்டுவதற்கு முன்னே, "வாநரராஜேந" என்றாணிறேரிஷி. (ச) [కృత్స్నరాజ్యం పరిత్యజ్య-க்ருத்ஸ்ராஜ்யம்பரித்யஜ்ய] விடலாம்ராஜ்யத்தையோ அவர்விட்டது. [పిత్ర్యం పైతామహం మహత్ - பித்ருயம்பைதாமஹம் மஹத்] இக்ஷ்வாகு முதலான ராஜாக்கள் ஆண்டு போந்த ராஜ்யத்தை நாம்பொகட்டுப் போந்தவளவு மன்றிறே அவர் நமக்காகவிட்ட ராஜ்யமென்கிறார். பகவத்ப்ரத்யாஸத்தியாலே ஸஜாதீயரடங்கலும் உன்காலிலே வந்து துவளும்படியன்றோ உன் ஐஶ்வர்யம்.

---

எழாம் பாட்டு.—(செங்கமலமித்யாதி) "అహమన్నమ్" "அஹமந்நம்" என்ற விடத்தில், அந்நஶப்தம் த்வந்யர்த்தம்;—"அஹமந்நம்" என்றது - ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானான ஹம்ஸமென்று. அவன் திருக்கையாகிற தாமரையிலே ஏறினானென்று இவ்விடத்துக் கர்த்தம். "சஙகரையா" என்கைக்கு திர்யக்குக்களுக்கு ராஜத்வமுண்டோவென்ன; உண்டென்னுமத்தை மஹாராஜர் பெரிய உடையார் பக்கலிலே காட்டுகிறார் (பெருமாளித்யாதி) "పిత్ర్యపైతామహమ్" "பித்ருயபைதாமஹம்" என்றதுக்குத்தாத்பர்யம் (விடலாமித்யாதி) "మహత్" "மஹத்" என்றத்தைப்பற்ற வருளிச் செய்கிறார் (இக்ஷ்வாகு முதலானவித்யாதி) க்ருத்ஸ்நராஜ்யத்தை விட்டிருக்கச்செய்தே யென்றது - பகவத் ப்ரத்யாஸத்தியாலே யென்றபடி. "పతగేశ్వరః" "பதகேஶ்வர:" என்னுமளவும் ஶ்லோகத்தல் விவக்ஷை (ஸஜாதீயர்) - திருப்பவளத்தை யநுபவிக்கிற

---

(க) தை - ப்ரு - (உ) தி - வாய் - கூ - எ - ஙு

(ஙு) ரா - யா - க - சுக. (ச) ரா - ஆ - சுஅ - உஙு.

(உன்செல்வம் சாலவழகியதே) "இந்திரனு முன்னோடு செல்வத்துக்கேலான்" என்றவளவன்றிக்கே யிருந்ததீ! உன் ஐஸ்வர்யம். எ

அவ.—எட்டாம் பாட்டு. அவ்வழகு இத்தாலே என்கிறாள்.

மூ.—உண்பதுசொல்லில் உலகளந்தான்வாயமுதம்
கண்படைகொள்ளில் கடல்வண்ணன்கைத்தலத்தே
பெண்படையாருன்மேல் பெரும்பூசல்சாற்றுகின்றார்
பண்பலசெய்கின்றாய் பாஞ்சசன்னியமே! (அ)

ப - ரை. பாஞ்சசன்னியமே—, உண்பது - உன் ஆஹாரத்தை, சொல்லில் - சொல்லப்புக்கால், உலகளந்தான் - திருவுலகளந்தருளினவனுடைய, வாயமுதம் - வாகம்ருதமாம்; கண்படைகொள்ளில் - பள்ளிகொள்ளப்புக்கால், கடல்வண்ணன் - கடல்போன்ற திருநிறத்தையுடைய ஸர்வேச்வரனுடைய, கைத்தலத்து - திருக்கையிலே யாம்; பெண்படையார் - அந்த வாகம்ருதமும் வடிவுமே ஜீவநமாயிருக்கும் பெண்பிறந்தாரடங்கலும், உன்மேல் - உன்மேலே, பெரும்பூசல் - மஹாயுத்தம்போலே, சாற்றுகின்றார் - கையெடுத்துக் கூப்பிடாநின்றார்கள்; பாஞ்சசன்னியமே—, பலபண்பு செய்கின்றாய் - பலந்யாயக்ருத்யங்களைப் பண்ணுகிறாய்; அந்யாயங்களைப்பண்ணுகிறாயென்றபடி.

வ்யா;—(உண்பதித்யாதி) நீ உண்ணும்படி சொல்லவோ? உறங்கும்படி சொல்லவோ? வாயதுகையதான ஐஸ்வர்யமன்றோவுன்னது. ஶேஷபூதரானெல்லார்க்கும் பொதுவானதன்றிக்கே, வாகம்ருதத்தையாய்த்து புஜிக்கிறது. வாயாலே யூட்டவுண்டு, ஶ்ரமஹரமான வடிவைக்கடைக்கணித்துக்கொண்டு, கையிலேயாய்த்துச்சாய்வது; ப்ரஸாதத்தைச் சூடிக்கைப்புடையிலே கிடப்பாரைப்போலே. (பெண்படை யித்யாதி) அவ்வாகம்ருதமும் வடிவுமே ஜீவநமாயிருக்கும் பெண்பிறந்தாரடங்கலும் கையெடுத்துக் கூப்பிடாநின்றார்கள் கிடாய். திருவாய்ப்பாடியிலுள்ளாரும் ஸ்ரீமதுரையிலுள்ளாரும் திரண்டு கூப்பிடாநின்றார்கள் கிடாய். (பண்

---

பெண்கள். "இந்திரனுமுன்னோடு" என்ற வாக்யத்துக்குத் தாத்பர்யம்- ஈஶ்வரனளவன்றிக்கே எங்களிலும் வ்யாவ்ருத்தமா யிருந்ததீ! என்று எ

எட்டாம் பாட்டு.—(உண்பதித்யாதி) (பொதுவானது) - திருவடிகள். "கண்படை" - உறக்கம் (பெண்படை) படை - ஸமூஹம். "பண்பு" -

பல செய்கின்றாய்) பகவத் விஷயத்திலே யிழிந்து நீர்மையுடையராயிருப்பார் செய்வதல்ல, நீ செய்கிறது; பகவத்ப்ரத்யாஸத்தியுடையாரிலே "நமக்கு" என்று தனிபநுபவிப்பாரில்லை காண். (பாஞ்சசன்னிபமே) இது பிறப்புக்குச் சேருமத்தனை. (க) "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்" என்றும், (உ) "போதுவீர் போதுமினோ" என்றுமிறே தமப்பனார் படியும் தம்படியும். அ

மூ.—பதினாறுமாயிரவர் தேவிமார்பார்த்திருப்ப
மதுவாயில்கொண்டாற்போல் மாதவன்தன்வாயமுதம்
போதுவாக உண்பதனைப் புக்குநீயுண்டக்கால்
சிதையாரோ ? உன்னோடு செல்வப்பெருஞ்சங்கே. (கூ)

ப - ரை. பெருஞ்செல்வம் - அவனை எப்போதும் அநுபவிக்கையாகிற பெருஞ்செல்வத்தையுடைய, சஙகே— தேவிமார் - திருத்தேவிமாரான, பதினாறுமாயிரவர் - பதினாறுயிரம் கோபஸ்த்ரீகள், அவனுடைய வாகம்ருதத்தை புஜிக்கைக்கு, பார்த்து இருப்ப - காலம்பார்த்துக்கொண்டிருக்க, மது - அம்ருதத்தை, வாயில்கொண்டாப்போல் - புஜித்தாப்போலே; பொதுவாக - ஸர்வஸாதாரணமாக, உண்பது - உண்ணத்தக்கதான, மாதவன்தன்-ஶ்ரியஃபதியான ஸர்வேஶ்வரனுடைய, வாயமுதத்தை - வாகம்ருதத்தை. நீபுக்கு - நீயொருவனுமேபுக்கு உண்டக்கால்- உண்டால், உன்னோடு-உன்னோடே, சிதையாரோ - சண்டையிடார்களோவென்கிறாள்.

வ்யா.—ஒன்பதாம் பாட்டு. (பதினாறுமாயிரவரித்யாதி) எத்தனைபேரை வாய்க்காவலிட்டால்தான் உனக்கு வயிறு வளர்க்கலாவது. பதினாறுமாயிரம்பேர் இது அநுபவிப்பதாக அவஸரம் பார்த்திருக்க, நீயொருவனுமே மேல்விழுந்து புஜித்தால். ஸர்வஸாதாரணமான அம்ருதத்தை நீயொருவனுமே புஜித்தால். (சிதையாரோவுன்னோடு) "இவன் நம் கோஷ்டிக்குப் புறம்பு" என்றால், நீ மண்ணைமணலை மொக்குமித்தனையிறே (கூ) "கூழாள்பட்டு நின்றீர்களை யெங்கள் குழுவினில் புகுதலொட்டோம்" என்றால் நீ செய்வதென். (ச) * "சாதுகோட்டியுள் கொள்ளப்படுவார்" ந்யாயம். தாங்கள்தான் பரஸம்ருத்திபரரோ? தனியநுபவியாதே கூடியநுபவித்த பேருண்டோவென்ன ; அருளிச்செய்கிறார் (வாழாளித்யாதி.) அ

ஒன்பதாம் பாட்டு. (பதினாறுமித்யாதி) "பெரும் - செல்வத்தை

(க) திருப்பல்லா - கூ. (உ) திருப்பா - க.
(கூ) திருப்பல்லா - கூ. (ச) பெரி - தி - கூ - சு - கக.

என்னும்மவர்களிறே. (செல்வப் பெருஞ்சங்கே) உன் ஐஸ்வர்யச் செருக்கிறே விளைவு கறியாதொழிவது. அவன் ஐஸ்வர்யத்துக்கும் அடியரான எங்கள் ஐஸ்வர்யத்துக்கும் மேலாயிருந்ததீ! உன்நிலை.கூ

மூ.—பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும்
வாய்ந்தபெருஞ்சுற்றமாக்கிய வொண்புதுவை
ஏய்ந்தபுகழ்ப்பட்டர்பிரான் கோதைதமிழீரைந்தும்
ஆய்ந்தேத்தவல்லாரவரு மணுக்கரே. (கo)

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

---

ப - ரை. பாஞ்ச சன்னியத்தை - ஸ்ரீ பாஞ்ச ஜந்யத்தை, பற்பநாபனோடும் - ஸ்ரீபத்மநாபனோடே, வாய்ந்த - கிட்டின, பெருஞ்சுற்றமாக்கிய - பேருறவாக்கினவளாய்; ஒண் - அழகிய, புதுவை - ஸ்ரீ வில்லிபுத்தூரில், ஏய்ந்த - பொருந்தின, புகழ் - புகழையுடையரான, பட்டர்பிரான் - பெரியாழ்வார் திருமகளான், கோதை - ஆண்டாளருளிச்செய்த, தமிழ் - தமிழாலாகிய, ஈரைந்தும் - பத்துப்பாட்டுக்களையும், ஆய்ந்து - மநஸ்ஸாலே அநுஸந்தித்து, ஏத்தவல்லாரவர் - ஸ்துதிக்கவல்லவர்கள், அணுக்கர் - அண்ணியராகப் பெறுவர்கள்.

வ்யா.—பத்தாம் பாட்டு. (பாஞ்சசன்னிய மித்யாதி) ஸ்ரீ பாஞ்சஜந்யத்தைக் கேட்கிறாள். தன்னோடுண்டான உறவறுத்து அவனோடே சேர்த்து விடுகிறாள். (பற்பநாபனோடும்) அநந்யகதிகளான எங்கள் ஜீவநத்தைக் கைக்கொண்டாயாகில், மற்று மித்துறையிலிழிந்தவர்களுடைய ஜீவநத்தையும் நீயேகொள். (ஏய்ந்த புகழ்) "ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே சீறுபாறென்றாள்" என்றால் "தகாதோ? பெரியாழ்வார் பெண்பிள்ளையன்றோபெறும்" என்

---

யுடைய - சங்கே" என்று அந்வயவிவக்ஷயா தாத்பர்யம் (அவனைஸ்வர்யத்துக்கு மித்யாதி.) (அவன்) - ஈஶ்வரன். பிராட்டிமாராகையாலே அவனைஶ்வர்யத்துக்கடி. கூ

பத்தாம் பாட்டு. (பாஞ்சசன்னியத்தை யித்யாதி) (கேட்கிறாள்) "அவன் சொல்லாமையாலே தன்னோடுண்டானவுறவறுத்து" என்று கூட்டுவது. "பற்பநாபன்" என்கையாலே-வடிவழகைச்சொல்லி, அத்தையநுபவிப்பாரு முண்டாகையாலே (மற்றும் இத்துறையில்) என்கிறது. 'வாய்ந்த" - கிட்டின. "சுற்றம்" - உறவு. "வாய்ந்த பெருஞ்சுற்றம்"-

ணும் புகழாய்த்து; அநுஸந்தித்துக் கொண்டு சொல்லவல்லார். (அவருமணுக்கரே) அவர்களும் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தோடே சீறுபா றென்னவுரியராவர். நாய்ச்சியாரைப்போலே அவரும் அண்ணிய ராவர். கO

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே ஶரணம்.

எழாம் திருமொழி முற்றிற்று.

---

## எட்டாம் திருமொழி
## விண்ணீலமேலாப்பு ப்ரவேஶம்.

—:O:—

அவ.—ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை வார்த்தை கேட்டாள். இவனை வார்த்தை கேட்டவாறே பாவநாப்ரகர்ஷத்தாலே அவனளவும் செல்லுமிறே. நித்யததாஶ்ரயத்வ தச்சேஷத்வங்களுண்டாகை யாலே, தர்மியையொழிய தர்மமாத்ரத்துக்குப் பிரித்து ஸ்தித்யு பலம்பாதிகளில்லை. இவனை வார்த்தை கேட்டாள், மேகங்களா னவை வாராமுழங்கிற்று. (க)"கார்க்கோடுபற்றியான்கை" என்று இங்ஙனேயும் ஒரு சேர்த்தியுண்டிறே. கார்காலத்தில் வரவைக்

---

கிட்டினபேருறவ "எய்ந்த" பொருந்தின. 'ஆய்ந்து" - ஆராய்ந்து. ஆய்கை - சோதிக்கையாய், மநஸ்ஸாலே ஆராய்கை - அநுஸந்தித்தென்ற படி. "அணுக்கர்"-அண்ணியர் கO

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

அரு; விண்ணீலமேலாப்பு ப்ரவேஶம். இவனைக் கேட்டவள் அவ னளவும் செல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்ரீபாஞ்ச ஜந்யேத்யாதி.) அவனளவுஞ் செல்லுகைக்கு ஹேதுவேதென்ன; அருளிச் செய்கிறார் (நித்யததாஶ்ரயேத்யாதி) (ஶேஷத்வம்) - ஶரீரவத்ஶேஷ த்வம். (உபலம்பம்) - தோற்றுகை. இன்னமும் அவனளவும் செல்லு கைக்கு ஹேத்வந்தர மருளிச்செய்கிறார் (இவனை வார்த்தையித்யாதி.) கீழிற்றிருமொழியிலே ஆஶ்வாஸஹேதுவாக ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை வார் த்தை கேட்டாளாகில், இப்படியே தரித்திராதே "பெண்ணீர்மை யீடழிக்குமிது தமக்கோர் பெருமையே" என்று - திரியவும் நோவுபடுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (மேகங்களானவை யித்யாதி) 'கார்க் கோடு"- காரின் ஸ்வபாவத்தையுடைத்தான ஶங்கமென்றபடி. மேகங்கள்

---

(க) க - திருவ - உஎ.

குறித்துப்போனான்; அக்காலம் வந்தவாறே அவன் வடிவுக்குப் போலியான மேகங்கள் வாராத்தோற்றின; அவன்றானும் கூட வந்தானாகக் கொண்டு ப்ரமித்தாள்; அவையேயாய், அவன் றன்னைக் கண்டிலள்; அவற்றைப் பார்த்துவார்த்தை கேட்டு அவை ஒருமறுமாற்றம் சொல்லக் காணாமையாலே நோவுபட்டு; மீளவும், "ஏகதேஶ வாஸித்வத்தாலே உங்களுக்கும் அவனுக்கும் ஒரு சேர்த்தி யுண்டிறே; ஆனபின்பு, என்தஶையை யங்கே சென்றறிவிக்கவேணும்" என்று அவற்றைத் தூதாக விடுகிறாள். ராமாவதாரத்தில் ஐந்த்ரவ்யாகரணபண்டிதனைத் தூதாக விட்டாப் போலே, அர்ச்சாவதாரத்திலே, "இவை வார்த்தை சொல்லமாட்டா" என்றறிய மாட்டாதே கலங்கி, இவற்றைத் தூதாக விடுகிறாள். அர்ச்சாவதாரத்தில் காட்சிக்கு மேற்பட வார்த்தை சொல்லுதல், பரிமாறுதல் செய்கையில்லை. "அவதாரத்திலே இதுள்ளது" என்னும் தெளிவுமில்லை. இனி, காமமாவதுதான் - பக்தி; அதாவது - அந்வயத்தில்தரிக்கையும், வ்யதிரேகத்தில் தரியாமையுமிறே. இவை யிரண்டுமுள்ளது பிராட்டிமார்க்காகையாலே, ஆழ்வார்களும் பிராட்டிமார் பாசுரத்தாலே தங்களாசையைப் பேசக் கடவாரா யிருப்பர்கள். அதிருக்கிறபடி யாய்த்து.

---

வந்து தோன்றுகையாலே அவன் வடிவுக்கு ஸ்மாரகமாய், அவனளவும் சென்றது. "திருமாலும் போந்தானே" என்றத்தையுட்கொண் டருளிச் செய்கிறார் (கார்காலத்தி லித்யாதி.) "திருமாலும் போந்தானே" என்று கேட்கைக்கு ப்ரஸக்தி-வர்ஷாகாலத்தில் வருவானென்றதும். மேகஸாம்யமும். அசேதநத்தைத் தூதுவிட்டால் சொல்லுமோ வென்ன; அருளிச் செய்கிறார் (ராமாவதாரத்திலித்யாதி.) தூதுவிடவேண்டின விஷயந் தான் ராமாவதாரம்போலே கார்யம் செய்யுமென்று விடுகிறாளோ வென்ன; அருளிச்செய்கிறார் (அர்ச்சாவதாரேத்யாதி.) (தெளிவும் இல்லை) என்றது-ஸப்தத்தைப்பற்ற. இவை அசேதநமாகையாலே வார்த்தை சொல்லமாட்டா வென்கிற தெளிவு மில்லையென்று ஸமுச்சயிக்கிறது. லோகத்தார் காமம் போலேயோ இங்குமென்ன; ஸ்வாபதேஶ மருளிச்செய்கிறார் (இனி காமமித்யாதி.) (அதிருக்கிறபடி) - அது இவளுக்கு ஸ்வபாவமா யிருக்கிறபடி.

மூ.—விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல்மேகங்காள் !
தெண்ணீர்பாய்வேங்கடத்து என் திருமாலும்போந்தானே ?
கண்ணீர்கள்முலைக்குவட்டில் துளிசோரச்சோர்வேனை
பெண்ணீர்மையீடழிக்கும் இது தமக்கோர்பெருமையே. (க)

ப - ரை. விண் - ஆகாசம் இடமடையும்படி, நீலம் - நீலநிறமாயிருப்பதொரு, மேலாப்பு விரித்தாற்போல் - மேற்கட்டி கட்டினாப்போலிருக்கிற, மேகங்காள் - மேகங்களே!, தெள் - தெளிந்த, நீர் - அருவிகளானவை, பாய் - ப்ரவஹியாநின்றுள்ள, வேங்கடத்து - திருமலையில் வந்துநிற்கிற, என் - என்னுடைய, திருமாலும்—, போந்தானே - உங்களுடன் கூடவந்தானோ? முலை - ஸ்தநங்களாகிற, குவட்டில் - பர்வத சிகரங்களிலே, கண்ணீர்கள் - கண்ணநீர்களானவை, துளிசோர - அருவிகளைப்போல் பெருக, சோர்வேனை - அத்தாலே வருந்துகிற வென்னுடைய, பெண் நீர்மை - ஸ்த்ரீத்வத்தை, ஈடழிக்குமிது - முதலோடழிக்கிறவிது, தமக்கு - அவருக்கு, ஓர் பெருமையே - ஒரு பெருமையோ ?; பெருமையாகாதென்றபடி.

வ்யா —முதற் பாட்டு. (விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல்) ஆகாஸாவகாஸ மடங்கலும் வெளிபடையும்படி நீலமாயிருப்பதொரு மேற்கட்டி கட்டினாப்போலே யாய்த்திருக்கிறது மேகங்கள் வந்து பரம்பினபோது ; நாயகனும் தானுமாக வெளியோலக்க மிருக்கைக்கு வெளியிலே ஒரு ஈத்தொத்தி கட்டிற்றாக நினைத்திருக்கிறாள். உபய விபூதியும் இருவர்க்கும் ஸேஷமாயிறேயிருப்பது. ஜகத்ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் இதுவென் றிருந்தாளாய்த்து. (மேகங்காள்) திருவடி ஒருவனுக்குமே வார்த்தை சொன்னாப்போலே சொல்லவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லையே இவளுக்கு. (க) "ஸேயமாஸாதிதாமயா" "ஸேயமாஸாதிதாமயா"

முதல் பாட்டு. (விண்ணீலமித்யாதி) "மேலாப்பு"-மேற்கட்டி மேல் கட்டியாகக் கொண்டாடுவா னென்னென்ன ; அருளிச்செய்கிறார் (நாயகனும் தானுமித்யாதி.) "ஈ என்றது - ஜந்துக்களுக்கு உபலக்ஷணமாய், ஜந்துக்கள் விழாமல் கட்டின மேற்கட்டி. நாயகநாயகிகளுக்கு வெளி ஓலக்கம் கூடுமோ வென்ன ; அருளிச்செய்கிறார் (உபய விபூதியுமித்யாதி ) ஓலக்கம் இடுக்கைக்கு தாத்பர்யம் (ஜகத்ஸ்ருஷ்டீத்யாதி.) பஹுவசநத்தைப்பற்ற தாத்பர்யத்வயம் அருளிச்செய்கிறார் (திருவடியித்யாதி வாக்ய த்வயத்தாலே.) பிராட்டி திருவடி ஒருவனுக்குச் சொன்னாப்போலே

(க) ரா - ஸு - ௩௦ - ௩.

என்று - குறைப்பட்டிருக்கு மவையுமன்றே இவை. [ஸர்வா - மயா] "எல்லாரும் காணவேணுமென்று தேடுகிற விஷயம் நானொருவனுமே காண்பதே"! என்றானிறே; (க) * யாம்கபீநாம் ஸஹஸ்ராணி * யாம்கபீநாம்ஸஹஸ்ராணியிறே. ராஜாக்கள் வரு மிடத்து ஜலக்ரீடைக்குப் பரிகரமான "மேகர்" என்கிற ஜாதி, முன்னே வரக்கடவதாயிருக்குமிறே. "அவனோடே ஜலக்ரீடை பண்ணி அவன் நனைக்க நனைந்தவுடம்போடே வந்தன" என் றிருந்தாள். (தெண்ணீர்பாய் வேங்கடத்து) தெளிந்த அருவிகள் ஒழுக்கறாதேபாய்கிற திருமலையில். அவன் நிற்கிற தேசத்தி லுள்ளவையெல்லாம் தெளிந்திருக்குமிறே. (உ) "உபதப்தோதகாநத்யः பல்வலாநிஸராம்ஸிச" "உபதப்தோதகாநத்யः பல்வலாநிஸராம்ஸிச" என்றிறே இவ்விடம்கிடக்கிறது. (என்திருமாலும் போந்தானே) (ங) "அக்ரதஸ்தேகமிஷ்யாமி" "அக்ரதஸ்தேகமிஷ்யாமி" என்று - அவள் முன்நடக்கக்காணும் வந்தது. "என்திருமால்" என்று - தன்னோடே சேர்த்துச் சொல்லுகிறாளிறே. "போந்தானே" என்றால், "ஓம், போந்தான்" என்னவல்லார்க்கிறே வாயுள்ளது. அவை பேசாதேயிருந்தன; "அசேதநமாகையாலே வார்த்தை சொல்லமாட்டா" என்று அறியமாட்டாதே, "அவன் வாரா மையாலேயிறே இவை பேசாதிருக்கின்றன" என்று கண்ணீர் வெள்ளமிடத்தொடங்கிற்று. (ச)"கிமர்த்தம் தவநேத்ராப்யாம்" "கிமர்த்தம்

சொல்லவேண்டாமல் எல்லாருக்கும் சொல்லலா யிருக்கையாலும், திரு வடி, "நானொருவனுமே கண்டேன்" என்று குறைவுபட்டாப்போலே குறைவுபடவேண்டாமல் எல்லாரும்போய்,க்காணவற்றா யிருக்கையாலும், "மேகங்காள்" என்று திரளாக விடுகிறாளென்றபடி. அப்படி யெல்லாரும் தேடினார்களோ வென்ன; அருளிச் செய்கிறார் (யாம்கபீநாம் - யாம் கபீநாமித்யாதி.) "தெள்" - தெளிவு "திருமாலும் போந்தானே" என்று அவன் பின்னும் இவை முன்னுமாய் வருகைக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ராஜாக்களித்யாதி.) ஜலத்தோடே கூடியிருக்கையைப் பற்ற வருளிச்செய்கிறார் (அவனோடே ஜலக்ரீடை யித்யாதி.) (சொல்லு கிறாளிறே) "தனக்கு புருஷகாரமானமை தோற்ற" என்று பூரிப்பது. (வாயுள்ளது) - வாயுண்டானாலன்றோ ஒன்று சொல்லலாவதென்றபடி. அதாவது - அசேதநமாகையாலே யென்றபடி. "தவநேத்ராப்யாம்-வாரிஜம்-

(க) ரா - ஸு - ஙO - ங.　　(உ) ரா - அயோ - ருக - ரு.
(ங) ரா - அ - ஙக - உரு.　　(ச) ரா - ஸு - ஙச - ச.

தவநேத்ராப்யாம்" என்று - வேறு சிலர் சொல்லவொண்ணுதே தானே சொல்லுகிறுள். [కిమర్థమ్ - கிமர்த்தம்] ஆர்குடிவேர் பறியத்தான் இக்கண்கள் ஶோகாஶ்ரு ப்ரவஹிக்கிறது. அன்றிக்கே, பிராட்டியைக் கண்டபின்பு இங்குபடையற்று, ஆரைச்சேதநராகக் கொண்டு தானென்னுதல். (முலைக்குவட்டில் துளிசோர) மேகங்கள் - நித்யவாஸம் பண்ணுகையாலேயிறே அவன் திருமலையை விடாதே யொழிகிறது. திருமலையைத் தன்னுடம்பிலே படைத்துக் காட்டுகிறுள். மேகங்கள் வர்த்திக்கவாறே அருவிகள் சிதறி வந்து சிகரங்களிலே விழுந்தாப்போலேயாய்த்து - கண்ணநீர்கள் முலைக்கு வட்டிலே விழுகிறபடி. "துளியும்சோரத்தானும்சோருகிறேன்" என்கிறுளல்லள், அக்நி கணங்கள் பட்டாப்போலே துளிசோரத் தானும்சோருகிறுளித்தனை. அதுவே ஹேதுவாகச் சோருகிற வென்னை. (பெண்ணீர்மை யீடழிக்குமிது) எல்லா வவஸ்தையிலும் (க) "తత్స్యసదృశంభవేత్" "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்கிறபடியே - அத்தலையாலே பேருக நினைத்திருக்குமதிறே ஸ்த்ரீத்வமாவது; அத்தை அழியாநின்றுனைத்து, (உ) "నానయోర్విద్యతేపరమ్" "நாநயோர்வித்யதேபரம்" என்னக் கட

---

వారిస్రవతి - కిమర్థమ్" "தவநேத்ராப்யாம் - ஶோகஜம் - வாரிஸ்ரவதி - கிமர்த்தம்" என்று கூட்டி அருளிச்செய்கிறுர் (ஆர்குடி யித்யாதி.) "పుణ్డరీకపలాశాభ్యాం విప్రకీర్ణమివ - తవనేత్రాభ్యాం వారిస్రవతి - కిమర్థమ్" "புண்டரீகபலாஶாப்யாம் விப்ரகீர்ணமிவ - தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதி-கிமர்த்தம்" என்று இங்ஙனே கூட்டி அருளிச்செய்கிறுர் (அன்றிக்கே பிராட்டி யித்யாதி.) (படையற்று) - அற்றுத்தீர்ந்து. ஈடுபட்டென்றபடி. (ஆரைச்சேதநராக) பெருமாளன்றே இவ்வழகுகாண ப்ராப்தமென்றபடி. "குவடு" - சிகரம். "குவடு" என்று விஶேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம் (மேகங்களித்யாதி-) துளியும் தானும் தனித்தனியே சோருகிறுளல்லள், துளிப்பட்டது பாதகமாகத் தான் சோருகிறுளென்றபடி. அவனழிக்கைக்கும் இவளழிக்கைக்கும் ஹேதுவேதென்ன; உத்தமநாயகநாயகிகளாகையாலே என்கிறுர் (నానయోః - நாநயோரித்யாதி வாக்யத்வயத்தாலே) அதவா, ஸ்த்ரீத்வத்தை யழிக்கைக்கு ஹேதுவேதென்ன; "திருமாலாகையாலே" என்று விவக்ஷித்து, அப்படி யவளுக்காக அழிக்க வேணுமோ வென்ன; (నానయోః - நாநயோரித்யாதி) என்னவுமாம்.

---

(க) ரா - ஸு - ௩௧ - ௩௦. (உ) வி - பு - க - அ - ௩௫.

வன்றிறே. அன்றியே, ஸ்த்ரீத்வ பும்ஸ்த்வங்க ளிரண்டும் தங்கள் பக்கலிலே பர்யவஸிதமென்றுபோலே காணு மிருப்பது. (க) "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றிறே இவள்படி; (உ) "[Telugu script]" "வாதஸகலமேதத் ஸம்ஸ்ரிதார்த்தம்சகர்த்த" என்றிறே அவன்படி. இப்படியிருக்கையிறே ஸத்ரீத்வபும்ஸ்த்வங்களுக்கு எல்லையாவது. பெண்ணீர்மை யீடழிக்கை யாவதென்னென்னில்; "போந்தானே" என்று-இவள் வார்த்தைகேட்க விருக்கை;-தன்பேற்றுக்கு தான் ப்ரவர்த்திக்க வேண்டும்படி யிருக்கை. (தமக்கோர் பெருமையே) "ஸ்ரியஃபதித்வத்தால் வந்த உத்கர்ஷத்தை யுடையராயிருக்கிற தமக்கு. அவளோடு அநந்யரா யிருப்பார் நோவுபட முகங் கொடுத்திலர்" என்றால், அத்தால் வருமவத்யம் தம்மதன்றோ? அவள் அவயவ கோடியுளுள்ளார் நோவுபட விட்டிருந்தா னென்றால் அத்தால் வரும் ஸ்வரூபஹாநி தம்மதன்றோ; தமக்கு வரும் ஸ்வரூபஹாநி வேறுசிலரோ பரிஹரிப்பார், தமக்கே பரிஹரிக்கை பரமன்றோ? அன்றிக்கே, (ஙு) "[Telugu script]" "யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜஃ" என்கிறபடியே - "தமக்கேற்றமாம்படி யிருக்கிற பெரியாழ்வார் திரு

(தமக்கு) - திருமாலான தமக்கென்னுதல்; என்னாலே அதிஶயத்தை யுடைய தமக்கென்னுதல். இத்தை யருளிச்செய்கிறார் (அன்றியே யித்யாதி. †) "தமக்கு" என்றபதத்தைக் கூட்டி, "பெண்ணீர்மை" என்றதுக்கு அர்த்தாந்தரம் (மானிடவர்கதித்யாதி.) பெண்ணீர்மை - அநந்யார்ஹத்வ லக்ஷணமென்றபடி. (தமக்கு) - திருமலையிலிருக்கிற தமக்கு. முந்தினவர்த்தத்திலே நோக்காக (பெண் நீர்மை யீடழிக்கையாவ தித்யாதி.) விவரணம் (தன்பேற்றுக்கித்யாதி) "தமக்கு" என்றதுக்கு, கீழே - வேங்கடத்திலே நிற்கிற தமக்கு என்றருளிச்செய்து, திருமாலான தமக்கென்று தாத்பர்யாந்தரம் (ஸ்ரியஃபதித்வேத்யாதி.) "என்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து (அவளோடு அநந்யரா யிருப்பார்) என்றது அன்றிக்கே. (ச) "[Telugu script]" 'ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ' என்றத்தைப்பற்றவாதல். "பெருமையே" என்றது-பிரிநிலை யேகாரம். இத்தால் பலிதம் (தமக்கித்யாதி.) அன்றிக்கே, (ஙு) "[Telugu script]"

(க) ௫.
(உ) வர - ஸ்த - ௬௬.
(ஙு) ரா - ஆ - ௬௭ - ௧அ
ஸ்ரீகுணரத்ந - உ௬.

† இந்த ப்ரதிகத்துக்கு அநுகுணமான வாக்யத்தைக் கோசாந்தரங்களிற் காண்க.

மகள், தம்மை ஆசைப்பட்டுப் பெறுதே நோவுபடா நின்றுள்" என்றால், இது தமக்குப் போருமோ ?; நோவுபடாதபடி பரிஹரிக்க வேண்டாவோ வென்னுதல். க

மூ.—மாமுத்தநிதிசோரியும் மாமுகில்காள் ! வேங்கடத்துச்
சாமத்தினிறங்கொண்ட தாளாளன்வார்த்தையென்னே !
காமத்தீயுள்புகுந்து கதுவப்பட்டிடைக்கங்குல்
ஏமத்தோர்தென்றலுக்கு இங்கிலக்காய்நானிருப்பேனே. (உ)

ப - ரை. மா - பெருவிலையனை, முத்தம் - முத்துக்களையும், நிதி - பொன்களையும், சொரியும் - சொரியா நின்றுள்ளதாய், மா-ஸகலப்ரத்யுபகாரம் வேண்டாமையாகிற பெருமையையுடைய, முகில்காள்-மேகங்களே! வேங்கடத்து - திருமலையிலே, சாமத்தின்நிறம்கொண்ட - ச்யாமநிறத்தையுடைய, தாள் - திருமேனியை, ஆளன் - தனக்காகக் கொண்டிருக்குமவர், இங்குவாராராகிலும், வார்த்தை - வார்த்தை சொல்லுகைக்கு, என்னே - என்ன ; காமத்தீ-விரஹாக்நியானது, புறம்பு கொளுத்தினது மன்றிக்கே, உள்புகுந்து - உள்ளே புகுந்து, கதுவப்பட்டு - கவ்வப்பட்டு, இடைக்கங்குல் - நடுராத்ரியில், ஏமத்து - அழகிய படுக்கையிலே, ஓர் - எதிர்ப்பட்டாரை முடிக்கவற்றுன, தென்றலுக்கு - தென்றற் காற்றுக்கு, இங்கு - இப்போது, நான்—, இலக்காயிருப்பேனே - லக்ஷ்யமா யிருப்பேனே ! என்று வருந்துகிருள்.

வ்யா.—இரண்டாம் பாட்டு. (மாமுத்தமித்யாதி) என்னைத் தோற்றி ஒரு ஔதார்யம் படைக்கவேண்டாவே உங்களுக்கு, பாரநுக்ரஹமே ஶீலமாயிருக்கு மவர்களன்றோ நீங்கள். பெருவிலையனை முத்துக்களையும் பொன்களையும் சொரியுமாய்த்து. அதாவது-பிறரிரக்கக் கொடுக்கையன்றிக்கே, தன்னுஶ்ரயங்கொண்டு தரிக்கமாட்டாமல் கொடுப்பாரைப்போலே யாய்த்துக் கொடுப்பது. (மாமுகில்காள்) பிறரிரக்கக்கொடுத்தல், ப்ரத்யுபகாரம் கொள்ளக்கொடுத்தல் செய்கை யன்றிக்கே, தன்பேறுகக் கொடுக்குமவை

'யஸ்யஸாஜநகாத்மஜா" என்கிற பக்ஷத்தில், "தமக்கு" என்றது - எல்லாவேற்றமுமாம்படி யிருக்கிற தமக்கென்றபடி. க

இரண்டாம் பாட்டு. (மாமுத்தமித்யாதி) பதப்ரயோகத்துக்குத் தாத்பர்யம் (என்னைத்தோற்றி யித்யாதி.) (ஆஶ்ரயங்கொண்டு) - முலைக்கடுப்பாலே தறையிலே பீச்சுவாரைப்போலே என்றபடி. "முகில்காள்" என்ற

யென்கை. இப்படி கொடுக்கப்பெறுதவன்று உடம்பு வெளுக்கு மவர்களன்றோ நீங்கள். (வேங்கடத்து) ஏகதேஶ வாஸித்வத் தாலே உங்களுக்குத் தெரியாமை யில்லையிறே. (சாமத்தின் நிறங் கொண்ட) அவ்வளவன்றிக்கே, வடிவிலேயும்போலி யுண்டிறே உங்களுக்கு. (தாளாளன்) இவற்றுக் கன்றிக்கே அவனுக்குண் டான ஏற்றம்; - பிறர்க்காகக்கண்ட வுடம்பைத் தனக்கென் றிருக்குமவனாய்த்து. (க) "ভক্তানাং" "பக்தாநாம்" என்றிருக்கிற வுடம்பைத் தனக்கென் றிருக்கிறவன். "இவ்வடிவு படைத்த நாமோ சென்றணைவோம், இதில் அபேக்ஷையுடையார் வேணு மாகில் தாங்களே வருகிறார்கள்" என்று எழுவாங்கி யிருக்குமவன். (வார்த்தை என்னே) இங்குவாராராகிலும் இழவு தமக்கென் றிரு ந்தாராகில் வார்த்தை சொல்லிவிடாமை யில்லையிறே. (என்னே) நாம் முற்பாடராய் உதவப் பெற்றிலோமென்னும் லஜ்ஜையாலே, "நீங்கள் அவள் செய்ததென்"என்று அறிந்து வாருங்கோ ளென் னுதல்; அன்றிக்கே, (உ) "நஜீவேயம் க்ஷணமபி" "நஜீவேயம் க்ஷண மபி" என்னுதல். அங்ஙனிருப்பா ருண்டாவதாக நாமறிந்தி லோமீ! என்னுதல். துஷ்யந்தனுடையவும் ஶகுந்தலை யுடைய வும் கதையைச் சொல்லிக்கொள்வது; ஒன்றும் சொல்லாமை

துக்குத் தாத்பர்யம் (இப்படி யித்யாதி.) "வார்த்தை" என்ற பதத்தைக் கடாக்ஷித்து தாத்பர்யம் (ஏகதேஶேத்யாதி.) "சாமம்" - ஶ்யாமம். சாமத்தின் நிறம்-ஶ்யாமமான நிறத்தையுடைய. (அவ்வளவன்றிக்கே) என் றது - ஏகதேஶவாஸித்வமே யன்றிக்கே என்றபடி. (தாளாளன்) "தாள்" என்று - திருவடியாய், அத்தால் - திருமேனியைச் சொல்லி, அத்தை ஆளுகை - தனக்கே ஶேஷமாகக்கொண்டிருக்கை. அன்றிக்கே, "தாளா ளன்" என்று ரூடியாய், - மேன்மையாய், "சாமத்தின் நிறங்கொண்ட தாளாளன்" என்று கூட்டி யருளிச்செய்கிறார் (இவ்வடிவித்யாதி) ஸ்வா ர்த்தபரனுபிருக்கிறவன் வார்த்தை சொல்லக்கூடுமோ வென்ன; அருளிச் செய்கிறார் (இங்குவாராரித்யாதி.) "வார்த்தையேது" என்று கேட்கும் போது வார்த்தை விகல்பங்களுண்டென்று தோற்றுகையாலே, அந்தவிகல் பங்களைக் காட்டுகிறார் (நாம் முற்பாடரா யித்யாதி)

"நாமறிந்திலோமீ!" என்ற மூன்றுமதுக்கு உதாஹரணம் (துஷ்ய ந்தனுடைய வுமித்யாதி) கதையாவது; - துஷயந்தன் என்கிற ராஜா

(க) க - ஜித - ரு. (உ) ரா - ஸு - சுசு - கO.

யில்லையிறே. ஒரு வார்த்தைகொண்டு தரித்திருக்கலாமோ இவ ளுக்கென்னில்; ஒருவார்த்தை கேட்கில் (க) "ஸ்ரீஸ்ரீ" "ஸ்திதோ ஸ்மி" என்றிருக்கலாமிறே. "வார்த்தை என்னே" என்ற விடத் தில் இன்னதென்று சொல்லக்கேட்டிலள். (காமத்தீ யுள்புகுந்து கதுவப்பட்டு) கேவலாக்நி யோபாதி இதுவென்று நினைத்திருக் கிறானோ? கேவலாக்நியிற்காட்டில் நரகாக்நிக்கு எத்தனைவாசி யுண்டு, அவ்வோபாதியும் போராதே அந்நரகாக்நிக்கு இது. (உள் புகுந்து) புறம்புள்ள தடங்க தஹித்து, தாஹாபாவத்தாலே உள்ளே விழுந்ததாய்த்து. பாவபந்த மடியாக வந்ததாகையாலே உள்ளேயா யிருக்குமிறே. (கதுவப்பட்டு) வெந்தவிடமே விறகாக எரியாநின்றதாய்த்து. (இடைக்கங்குல் ஏமத்து) ராத்ரியில் நடு யாமத்தி லென்னுதல். அன்றிக்கே, ஏமத்திலே - ரக்ஷையுள்ள விடத்திலே யிருந்தநுபவிக்க வேணுமென்று பாரித்திருந்தாள், அவன் வந்திலன். (ஏமம்) - கட்டழகும், வலியும். புகுந்து ஆஶ்வ ஸிப்பிப்பாரில்லாத விடத்திலே யகப்பட்டாள்.

---

வேட்டைக்குப் புறப்பட்டுப்போன விடத்திலே, ரிஷிபுத்ரியான ஶகு ந்தளையோடே யாத்ருச்சிகமாக ஸம்ஶ்லேஷமுண்டாக, அவன் உடனே தன்னூரேபோக, அவளுக்கு கர்ப்பமாய்ப் பிள்ளைபெற, ரிஷி, பெண்ணை யும் கொண்டுபோய், ராஜாவினண்டையிலே விட, அவன்மறந்து இப்படி யுண்டோ என்றிருக்க. 'உண்டு" என்று ரிஷிசொல்ல, அதிலும் விஶ்வ ஸியாதே யிருக்க, பிள்ளையைவிட, பிள்ளை அவன்மடியிலே போயேற, பின்பு கூட்டிக்கொண்டா னென்றபடி. "இப்புடைகளிலே - ஒன்று சொல்லாமை யில்லையிறே" என்று வாக்யத்தைக் கூட்டி நிர்வஹிப்பது.

தாத்பர்யாந்தரம் (பாவபந்தமித்யாதி.) "கதுவப்பட்டு" பாதைப் பட்டு. 'உளபுகுந்து" என்று நிஶ்ஶேஷமாக வெந்ததானால், பின்னை பாதிக்க அவகாஶமுண்டோ வென்ன; (வெந்த விடமே யித்யாதி.) "கதுவ" கவ்வ. (இடைக்கங்குலேமத்து) கங்குலிடையில் யாமத்தென்னு தல்; கங்குலேம விடத்தென்னுதல். "ஏமம்" கட்டழகு. வலி, மயக்கம், இனிமை. அழகிய படுக்கைஸ்தலமென்றபடி. அன்றிக்கே, (வலியும்) என்றது-ஒருத்தர்க்கும் கிட்டப்போகாதவிடமாய் அத்தைப்பற்ற வருளிச் செய்கிறார் (புகுந்தாஶ்வஸிப்பிப்பாரித்யாதி) புகுந்தாஶ்வஸிப்பிக்கை - தோழிமாராதல்; நாயகனாதல்.

---

(க) ஸ்ரீ - கஅ - எரு

(ஓர் தென்றலுக்கு) இந்த பாதக பதார்த்தத்துக்குத் தம் மோபாதி ஶக்தி போராதென்றிருக்கிறாரோ?, "पंपोपवनमारुतम्" 'பம்போபவநமாருதம்" என்று - தாமும் கால்வாசியறியாரோ? நான் இக்காலாலே துகைப்புண்ணக் கடவேனோ?; (இங்கு) "இது வரும்" என்றறிந்தால் என்னைத் தம்காற்கீழே யிட்டுக்கொள்ள வேண்டாவோ?. தாமும் நானுமா யிருந்தாலன்றோ இது வாய் மடிந்து போவது. (இலக்காய்) ஸர்வஸாதாரணமான வஸ்து வுக்கு நானொருத்தியும் இலக்காவதே! "தம்முடைய காஸ்பர் ஶத்தாலே ஜீவித்திருக்குமது தவிர்ந்து அதுக்குப் போலியான விதுவந்து ஸ்பர்ஶிக்க, இன்னம் நான் ஜீவிப்பேன்" என்றிருக்கிறாரோ. தம்மைபார்த்திருக்கிற நான் இக்காலாலே அழுக்குண்ணக் கடவேனோ?. (க) [पद्मसौगन्धिकवहम् - பத்மஸௌகந்திகவஹம்] கலம்பகன் சூடுவாரைப்போலே. [शिवम्-ஶிவம்] இதின்தனை நன்மை யுடையாரொருவரு மில்லை. இதுக்கு நன்மையென்னென்னில்; [शोकविनाशनम् - ஶோகவிநாஶநம்] நம்மை சித்ரவதம் பண்ணுது, ஶோகம் மறுவலிடாதபடி பண்ணும்போலே யிராநின்றது [धन्याः - தந்யாः] தநமுடையாரா யிருப்பார் க்ஷாமத்துக்கு அஞ்சார்களிறே.

---

"இங்கிலக்காய் நானிருப்பேனே" என்றதுக்குத் தாத்பர்யம் (இது வருமென்றறிந்தா லித்யாதி.) அன்றிக்கே, "நான் - இங்கிலக்காய்-இருப் பேனே" என்று கூட்டித் தாத்பர்யாந்தரம் (தாமும் நானுமா யித்யாதி) அதவா, கால்கீழே இட்டுக்கொண்டது-கொண்ட பாதை நிவ்ருத்தமாமோ வென்கிற ஶங்கையிலே யாதல்.

"நான்" என்றத்தையும் கூட்டித் தாத்பர்யம் (ஸர்வஸாதாரணே த்யாதி) (ஸர்வஸாதாரணம்) என்றது - விரஹிணிகளுக்கெல்லா மென்ற படி. "தென்றலுக்கு - இலக்காய் நானிருப்பேனே" என்று கூட்டி தாத்பர்யம் (தம்முடைய வித்யாதி) "இருப்பேனே" என்கிற ஏகாரம்-பிரிநிலையிலே, அன்றிக்கே, "இருப்பேனே" என்று-ஸ்வாரத்திலே யாக்கி, தாத்பர்யாந்தரம் (தம்மையித்யாதி) "நான்" என்கையாலே-அவனன்றோ படுவானென்று விவக்ஷித்து அவர் காற்றுக்கு நோவுபடும்படியை யருளிச் செய்கிறார். (पद्मसौगन्धिकम् - பத்மஸௌகந்திக மித்யாதி) (ஸௌகந்தி கம்) - செங்கழுநீர் (ஶோகவிநாஶநம்) என்றது - முடிந்தால் ஶோக மில்லாமையாலே, முடித்துவிடுமென்றபடி, கீழே, "நான்" என்றதுச்கு-

---

(க) ரா - கி - க - கoச.

[𑌸𑍇𑌵𑌨𑍍𑌤𑍇 - ஸேவந்தே] அஞ்சாமையே யன்றிக்கே இத்தை யநுபவிக்கைக்கு ஏகாந்த மானஸ்தலம் தேடாநிற்பர்கள். [𑌪𑌮𑍍𑌪𑍋𑌪𑌵𑌨𑌮𑌾𑌰𑍁𑌤𑌮𑍍 - பம்போபவநமாருதம்] "ஆகாசத்தில் நெருப்பு" என்னுமாப்போலே. (இலக்காய்) ஏகலக்ஷ்யமாய். (நான்) என்னையும் தாமாக நினைத்திருந்தாரோ?. "ஒருக்கால் காணில் செய்வதென்?" என்றிருக்கிற நான். (இருப்பேனே) என்னை யொழியவும் தமக்கு ஜீவிக்கலா மென்றிருக்கிறாரோ?. இரேனிறே என்றபடி. உ

மூ.—ஒளிவண்ணம்வளைசிந்தை உறக்கத்தோடிவையெல்லாம்
எளிமையாலிட்டென்னை ஈடழியப்போயினவால்
குளிரருவிவேங்கடத்து என்கோவிந்தன்குணம்பாடி
அளியத்தமேகங்காள்! ஆவிகாத்திருப்பேனே. (௩)

ப - ரை. குளிர்-குளிர்ந்த, அருவி - அருவியாறுகள் பாயாநின்றுள்ள, வேங்கடத்து-திருமலையி லெழுந்தருளி யிருக்குமவனாய், என்கோவிந்தன்-என்கோவிந்தனுடைய, குணம் - குணங்களை, பாடி—, அத்தாலே, அளியத்த - தயையையுடையரான, மேகங்காள் - மேகங்களே!, ஒளி - சரீரத்தின் பளபளப்பும், வண்ணம் - நிறமும், வளை - தோள்வளை சரிவளை சுழல்வளை முதலிய வளைகளும், சிந்தை - மநஸ்ஸும், உறக்கத்தோடு - நித்ரையும், இவையெல்லாம்—, எளிமையால்-அலக்ஷ்யதாபத்தியாலே, என்னை-விச்லேஷத்தால் நலிந்திருக்கிறவென்னை, ஈடழிய - முதலழியும்படி, இட்டுப்போயின - பொகட்டுப்போய்விட்டன, இப்படி யிருக்க, ஆவி - என் ப்ராணனை, காத்திருப்பேனே - ரக்ஷித்துக் கொண்டிருப்பேனோ? காக்கமுடியா தென்று கருத்து.

வ்யா.—மூன்றும் பாட்டு. (ஒளியித்யாதி) ஒருபாதியாலே பெற்றவை, ஸ்வாபாவிகமானவை யெல்லாம் போய்த்தின; பாஹ்ய பரிகரங்களும், ஆந்தரபரிகரங்களும் போய்த்தின வென்கிறாள்.

---

விரஹிணிகளில் வ்யாவ்ருத்தி காட்டி, ஈச்வரனில் வ்யாவ்ருத்தி (என்னையு மித்யாதி.) (கால்காணில்,) சாடு. பிறர்காண்கை - அந்யருடைய தர்சநம் த்வநி. 'இருப்பேனே" என்றதுக்கு-இரேனென்றபடியாய், அத்தால் பலித்த தாத்பர்யம் (என்னையொழியவு மித்யாதி.) இத்தால் - அவனிரானென்றபடி. உ

---

மூன்றும் பாட்டு. (ஒளியித்யாதி) ஒருபாதியாலே) இத்யாதி வாக்யம் துடங்கி மேலெல்லாம் பங்க்யந்தரேண விவரணங்கள். ஸ்வாபாவிக

புறம்புள்ள ஆபரணமும் உள்ளுள்ள ஆபரணமும் போய்த்தென்கிறாள். மெய்யிலாபரணமும் பொய்யிலாபரணமு மிருக்கிறபடி. அவனோடு கலந்து பெற்றபுகர், அதுக்காஶ்ரயமானநிறம். கழற்றிப் பூணும் ஆபரணமும், கழற்றாதே கிடக்கும் ஆபரணமும். நித்ரையோடேகூட, (இவையெல்லாம்) அவனுடைய உபயவிபூதியில் பரப்பொபாதியும் போருங்காணும் இவையும். (ஒளி, வண்ணம், வளை) இவை மெய்யே விட்டுப்போய்த்தன; உறக்கந்தானே கண்ணற்றுப்போய்த்தது. இவை யிப்படி போகைக்கடி யென்னென்னில்; (எளிமையால்) நான் எளிமைப்பட்டிருக்கையாலே போய்த்தன வென்னுதல்; புல்லியாரிறே ஆபந்நரைக் கைவிடுவார். என்னெளிமையாலே என்னுதல்; தந்தாமுடைய புன்மையாலே என்னுதல். (இட்டு) புரிந்துபாராதே சில அசேதநங்களைப் பொகடுமாப்போலே பொகட்டு. "ஒளி, வண்ணம், வளை" என்கிறவிவை, நாம் இவளுடனே கையும் மெய்யும் தீண்டிப்பரிமாறினோமென்னுமதின்றிக்கேபோயின; உறக்கந்தானே, நாம் கண்கலந்து பரிமாறினோமென்னுமதின்றிக்கே பொகட்டுப்போய்த்து. ஆகிலும், போகிறது கண்ணற்றுப்போய்த்து. (ஈடழிய) அவன் பிரிகிறபோது பிரிவையுணர்த்தி, வருந்தனையும் தரிக்கும்படி ஸ்மிதம்பண்ணியனைத்து, தன் செல்லாமை தோற்றவிறே போய்த்தது. இவை அங்ஙனன்றிக்கே, (க) "𑌶𑍈𑌥𑌿𑌲𑍍𑌯𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌶𑍁" "ஶைதில்யமுபயாந்த்யாஶு" என்கிறபடியே சடக்கெனப் பிரிந்துகொடு நின்றன. (குளிரருவியித்யாதி) "இத்தஶையில் குணஜ்ஞாநத்தாலே தரித்தல், குணகீர்த்தநத்தாலே தரித்தல் செய்யலா மெனக்கு" என்றிருக்

---

மானவை - சிந்தை. உறக்கங்கள். (மெய்) - ஆத்மா. (பொய்) - ஶரீரம் "ஒருபாதியாலே" என்றத்தை விவரிக்கிறார் (அவனோடித்யாதி) ஜ்ஞாநப்ரஸரணத்வாரமாகையாலே அந்தஃகரணத்தை ஆத்மபூஷண மென்கிறது. "எல்லாம்" என்றதுக்குத் தாத்பர்யம் (அவனுடைய வித்யாதி.) "எளிமை" - தனிமை. "ஆல்" - அசை "இட்டு" - பொகட்டு. ஈடு - மிடுக்கு( "ஈடழிய" நான் பலமழியவென்றபடி. (இவை யங்ஙனன்றிக்கே. என்றது - தரிப்பிக்கைக்கு உடலன்றிக்கே யென்றபடி. "குணம்பாடி" என்று, குணகீர்த்தநம்சொல்லி என்றது-குணஜ்ஞாநத்துக்கும் உபலக்ஷண

---

(க) வி - பு - ரு - க௮ - உ௧.

கிறுரோ ?. (குளிரருவி வேங்கடத்து) இத்தாபம் அத்தேஶத்தை நினைக்கத் தீருங்காணும். ஸகல தாபங்களையும் ஆற்றவல்ல தேஶமாய்த்து. (என்) இப்போது வந்திலனே யாகிலும் முன்பு தன்னை யெனக்காக்கிவைத்தவற்றை முந்துறமுன்னம் தவிர்க்க வொண்ணதே. (கோவிந்தன்) ஸர்வ ஸுலபனான நிலையைத் தவிர்க்கவொண்ணதிறே. (குணம்பாடி) (க) “సోఽశ్నుతే సర్వాన్ కామాన్ సహ బ్రహ్మణా” “ஸோஶ்நுதே ஸர்வாந்கர்மாந்ஸஹ ப்ரஹ்மணா” என்கிறபடியே - அந்வயத்திலும் குணநுபவமாகில் பண்ணுவது, பிரிந்தாலும் குணஜ்ஞாநத்தாலே தரிக்கலா மென்றிருக்கிறுரோ ?. (அளியத்தமேகங்காள்) நீங்கள் முன்னம் அவனைப்போலே யாகாதொழியப் பெற்றேன். அவன் பொகட்டுப் போன ஸமயத்திலே முகங்காட்டுவதே, நீங்கள். (ஆவிகாத்திருப்பேனே) ப்ராணநாதன் நானே ; தன்னை யநுபவிக்குமதொழிய ப்ராணரக்ஷணமும் எனக்குப் பணியோ? ஆனைப்பண்ணைக் குதிரை சுமக்கவற்றோ? ஒரு ஸர்வஶக்திதொழிலை யென்னலே செய்யலாமோ ?. ௩

மூ.---மின்னாகத்தெழுகின்ற மேகங்காள்! வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கை தங்கியசீர்மார்வர்க்கு
என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம்நாள்தோறும்
பொன்னாகம்புல்குதற்கு என்புரிவுடைமைசெப்புமினே. (௪)

ப - ரை. மின் - மின்னலானது, ஆகத்து - சரீரத்திலே, எழுகின்ற - உண்டாகின்ற, மேகங்காள் - மேகங்களே?, என் ஆகம்-என் மார்விலுண்டான, இளம் - இளமைபொருந்திய, கொங்கை - ஸ்தநங்களை, தாம்

---

மாக்கி, (குணஜ்ஞாநத்தாலே தரித்து) என்றது ; (உ) “ఆశంసేయమ్ - ஆஶம்ஸேயம்” இத்யாதி குணநுபவம் பண்ணி தரிக்கைக்கு ப்ரமாணமிதென்ன (సోశ్నుతే-ஸோஶ்நுதே இத்யாதி) தாத்பர்யாந்தரம் (தன்னை யநுபவிக்குமதொழிய வித்யாதி) “ஆவிகாத்திருப்பேனே” என்றதுக்கு மூன்று தாத்பர்யமுண்டு; நிரூபித்தால் (ப்ராணநாதனித்யாதி) ஆனைப் பண்) என்றவாக்யத்துக்கும். (ஒரு ஸர்வஶக்தி) என்ற வாக்யத்துக்கும் சேர்த்தி இரண்டாம் தாத்பர்யம் (தன்னை யநுபவிக்கு மித்யாதி ) மூன்றாவது, (ஆனைப்பண் இத்யாதி) (ஆனைப்பண்) - ஆனை சுமக்கிற அதின் ஶவாணை. அதாவது - ஆனைச்சேட்டை குதிரை சுமக்க மாட்டாதென்றபடி. ௩

---

(க) தை - ஆ - க. (உ) ரா - ஸு - ௩௭-௧௨.

விரும்பி - அவர் ஆசைப்பட்டு, என் - என்னுடைய, பொன் - அழகிய, ஆகம் - மார்வோடே, புல்குதற்கு - அவன் தழுவவேணுமென்று, நாடோறும் - நாள்தோறு முண்டான, என்புரிவுடைமை - என்னுடைய ஆசையுடைமையை. வேங்கடத்து - திருமலையிலே, தன் - தன்னுடைய, ஆகம்- திருமேனியிலே, திருமங்கை - பெரியபிராட்டியார், தங்கிய-நித்ய வாஸம் பண்ணுகிற. சீர் - பெருமைதங்கிய, மார்வர்க்கு - திருமார்வை யுடையவனுக்கு, செப்புமின் - சொல்லுங்கோள்.

வ்யா.—நாலாம் பாட்டு. (மின்னாகத்தித்யாதி) அவனைப் பிரிந்திருக்கிற ஸமயத்திலே மறக்கவொட்டாதே, அவன் வடிவுக்குப் போலியான உங்கள் வடிவைககாட்டி அவனை ஸ்மரிப்பிக்கிற நீங்கள், வல்லிகோளாகில் நானு மவனும் சேரும்படி காரியம் பாரிகோள். மேகங்களானவை தம்மில் உரோசினவாறே நடுவே யெழுவதொன்றிறே மின்னுவது. மின்னானது ஆகத்திலே யெழுகிற மேகங்களென்னுதல்; மின்னானது - ஆகாஶத்திலே தோற்றும்படி யெழுகிற மேகங்களென்னுதல். தன்வடிவிலிருட்சிக்குக் கைவிளக்குப் பிடித்துக் காட்டுவாரைப்போலே, மின்னிக்கொண்டு ஸஞ்சரியா நின்றனவாய்த்து. (மேகங்காள்) நடுவே பெரிய வுடையார் வந்து தோற்றினாப்போலே யிருந்ததீ! அவனைப்பிரிந்து நோவுபடுகிற ஸமயத்திலே நீங்கள் வந்து தோற்றினபடியும். (வேங்கடத்து) கடல்கடக்கவும் விரோதிபோக்கவும் வேண்டாவே உங்களுக்கு; * கலங்காப் பெருநகரத் தேறப்போகச் சொல்லுகிறேனுமன்றே. (தன்னாகத் திருமங்கைதங்கியசீர் மார்வர்க்கு) அணைத்தல்லது தரிக்கவொண்ணாதவடிவு படைத்தவர்க்கு. பிராட்டி (க) "அகலகில்லேனிறையும்" என்று விரும்பி நித்யவாஸம் பண்ணும் வீறுடைய மார்வு படைத்தவர்க்கு. தான் உளளாகைக்காகவும்,

நாலாம் பாட்டு (மின்னாகத்தித்யாதி) நாமைகதேஶே நாமக்ரஹணமென்கிற ந்யாயத்தாலே "ஆகாயம்" என்னவேண்டின விடத்திலே, "ஆகம்" என்று கடைக்குறைத்தலாய், ஆகாஶமென்னும் பேர்பெற்றுக் கிடக்கிறது ஆகையாலே "மின்னானது ஆகத்திலே" என்று கூட்டுவது; இரண்டாமர்த்தத்துக்கு ‡ "மின்நாகத்தெழுகின்ற" என்று பதச்சேதம் கொள்வது; "நாகம்" - ஆகாஶம் இது சொன்னதுக்குத் தாத்பர்யம் (தன்வடிவிலிச்யாதி) கீழ் - தாத்பர்யம்; மேல் - ஶப்தார்த்தம்

(க) தி - வாய் - ௬ - ௧௦ - ௧௦.

‡ "இரண்டா மர்த்தத்துக்கு" என்றதுக்கு - அன்றிக்கே என்று பொருள் கொள்ளுகை ஸ்வாஸம்.

தன் ஸத்தை பெறுகைக்காகவும்-பிராட்டி நித்யவாஸம் பண்ணும் மார்வு படைத்தவர்க்கு. "அளவுடையரா யிருப்பார் அணைந் தல்லது தரியாத வுடம்பை, புதியராய் ஆசைப்பட்டவர்களைப் போகவிட்டால் ஆற்றப்போமோ?" என்று சொல்லுங்கோள். எனக்கு புருஷகாரமில்லாமல் இழக்கிறேனன்றே; ப்ரணயகதை இன்றிருந்து சிலர் ஓதுவிக்கவேண்டாவே தமக்கு.

(என்னாகத் திளங்கொங்கைவிரும்பி) பிராட்டி முலையெழுந் தாப்போலேயோ நான் முலையெழுந்தபடி; (க) "ತತ್ಸ್ಯಸಕ್ರುಶಂ ಭವೇತ್" "தத்தஸ்யஸக்ருஶம்பவேத்" என்று ஆறியிருக்கலாம் படியோ நான் முலையெழுந்தபடி. (இளங்கொங்கை) சொற்கேளா ப்ரஜைகளைப்போலே யாய்த்து முலைகளின்படி. "விஷயத்தைக் காட்டுகிறது" என்றால் ஆறியிருக்க மாட்டாதவை. (௨) "என் கொங்கை கிளர்ந்து குமைத்து" என்னக் கடவதிறே. (இளங் கொங்கை விரும்பித்தாம்) (௩) "ಗಾತ್ರೈಶ್ಶೋಕಾಭಿಕರ್ಶಿತೈಃ। ಸಂಸ್ಪ್ರುಶೇಯಂ" "காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதைః। ஸம்ஸ்ப்ருஶேயம்" என்றுமாப் போலே - ஒருவர் பட்டினிவிட ஒருவர் ஜீவித்துமாப்போலே யாக வொண்ணாது; விடாய்த்த இக்கரணங்களாலே நான் அணையும்படி

---

அருளிச்செய்கிறார் (தானுளனாகைக்கித்யாதி.) "திருமங்கை தங்குகிற - மார்வு" என்றபோதே அணைத்தல்லது தரிக்க வொண்ணா தென்னுதல்; அன்றிக்கே. "சீர்" என்றதுக்கு தாத்பர்யமாதல் விவரணம் (பிராட்டி யித்யாதி) "திருமங்கை - சீர் - மார்வர்க்கு" என்றதுக்கு மூன்று தாத் பர்யம் (அளவுடையரா யித்யாதி வாக்யத்ரயமும்.) (புதியரா யாசைப் பட்டவர்களைப் போகவிட்டால்) என்றது - ஸம்ஶ்லேஷ ரஸமறியா மல் ஆசைப்பட்டவர்கள் அது கிடையாவிட்டால் ஆறியிருக்க + கூடும், ரஸமறிந்த வெனக்கு அவர்களைப்போலே ஆறியிருக்கப்போமோ வென்ற படி. "ஆகம்" - உடம்பு. "இளங்கொங்கை"-ஆசைப்பட்ட கொங்கை. "இளங்கொங்கை" என்று - தன்னைப்பற்ற முலைக்குண்டான வ்யா வ்ருத்தி. "இளங்கொங்கை" என்று - சொற்கேளாத ப்ரஜை என் றதே, இப்படிகூடுமோ, அசேதநமன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (ಗಾತ್ರೈಃ - காத்ரைரித்யாதி) இதுக்கர்த்தம் (ஒருவர் பட்டினியித்யாதி) "புல்குதல்" - தழுவுதல். "புரிவு" - விருப்பம். "புல்குதற்குப் புரிவு

---

(க) ரா - ஸு - ௩௧ - ௩௦. (௨) தி - ௪. (௩) ரா ஸு - ௪௦ - ௩.

பண்ணு. (நாடோறும்) காலமெல்லாம். ஆசைப்படுகிறபோதே, காலமெல்லாம் அநுபவிக்கவேணுமென்று ஆசைப்படும்படி யிருக்கிறது காணும் விஷயந்தான். [தன்னுகத் திருமங்கை தங்கிய சீர்மார்வர்க்கு, பொன்னுகமுண்டு - வீறுடைய ஆகம், என்னுகத் திளங்கொங்கை - தாம் விரும்பி - நாள்தோறும் - பொன்னுகம் புல்குதற்கு, என்புரிவுடைமை] - நினைவாலே தரிக்கவல்லவளல்லளாய்த்து இவள். (என் புரிவுடைமை) தாமும் நானுமாய்க் கலந்திருந்தபோது தம்புரி வுடைமையேயிறே கேட்டுப் போந்தது. ஒரு தலையிலாசையே யாய்த்துக் கேட்டுப் போந்தது. இப்போது மற்றைப்படியேயாய், நான் விரும்புகிறபடியைச் சொல்லுங்கோள். ரக்ஷ்ய ரக்ஷகபாவம் மாறுடிற்றென்று சொல்லுங்கோள். "தம் ஸ்வரூபமும் என் ஸ்வரூபமும் அழிந்தது" என்று சொல்லுங்கோள். "தான் நினைத்துப் பெறுமதுவும் ஸ்வரூப ஹாநி" என்றுபோலே காணும் இவள்தான் நினைத்திருப்பது. (செப்புமினே) தந்தாமுக்கு இல்லாதவை கேட்டறிய வேணுமிறே; நந்தலையில் குறைதீர அறிவித்துப்போருங்கோள். ௪

மூ.—வான்கோண்டுகிளர்ந்தேழுந்த மாமுகில்காள்! வேங்கடத்துத்
தேன்கோண்டமலர்சிதறத் திரண்டேறிப்பொழிவீர்காள்!
ஊன்கோண்டவள்ளுகிரால் இரணியனையுடலிடந்தான்
தான்கோண்டசரிவளைகள் தருமாகில்சாற்றுமினே. (ரு)

---

டைமை" என்றுற் போராதோ, 'நாடோறும்" என்னவேணுமோ வென்ன; அருளிச் செய்கிறுர் (ஆசைப்படுகிறபோதே யித்யாதி.) (நினைவாலே) என்றது - அத்தலையில் நினைவாலே யென்றபடி.

(ஒரு தலையிலாசை) - ஈஶ்வரனுடைய ஆசையென்றபடி. "என் புரிவுடைமை" என்றதுக்கு ஸ்வாபதேஶத்திலே தாத்பர்யாந்தரம் (ரக்ஷ்ய ரக்ஷகேத்யாதி) விவரணம் (தன் ஸ்வரூபமித்யாதி.) இத்தால் தாத்பர்யம் (தான் நினைத்தித்யாதி.) தாத்பர்யாந்தரம் (நந்தலை யிலித்யாதி.)

"மின்னுகத் தெழுகின்ற மேகங்காள்-என்னுகத் திளங்கொங்கையை தாம்-விரும்பி-' என் பொன்னுகத்தோடே அவன் புல்கவேணும்' என்று நாடோறு முண்டான என் புரிவுடைமையை - வேங்கடத்துத் தன்னுகத் திருமங்கை தங்கிய சீர்மார்வர்க்கு-செப்புமின்" இத்யந்வயః. "விரும்பி"- கொங்கையை ஆசைப்பட்டு. ௪

ப - ரை. வான் - ஆகாசத்தை, கொண்டு - விழுங்கிக்கொண்டு, கிளர்ந்து - விளங்கிக்கொண்டு, எழுந்த-மேலெழுந்து, வேங்கடத்து—, தேன் கொண்ட - தேன்மிக்கிருந்துள்ள, மலர் - மலர்களானவை, சிதற-சிதறும்படி, திரண்டு - ஒன்றாகத்திரண்டு, ஏறி - ஆகாசத்திலேயேறி, பொழிவீர்காள் - பொழியுமவர்களான, மாமுகில்காள் - பெரிய மேகங்களே! ஊன்கொண்ட - மாம்ஸளமாய், வள் - கூரியதான, உகிரால் - திருவுகிராலே, இரணியனை - ஹிரண்யாஸுரனுடைய, உடல் - சரீரத்தை. இடந்தான்றான் - இருபிளவாகக் கிழித்துப்பொகட்டவவன், கொண்ட கவர்ந்துகொண்ட, சரிவளைகள் - சரியையும் வளையையும், தருமாகில் - கொடுப்பதாக விருந்தால், சாற்றுமின் - சொல்லுங்கோள்.

வ்யா.—அஞ்சாம் பாட்டு. (வான்கொண்டு) தங்களுக்கு வாஸஸ்தாநமறும்படி வந்து தோன்றாநின்றன. நம்குடி இருப்பென்று, பரிஹரிக்க அறிகிறனவில்லை. "அபரிச்சிந்நமாயிருக்கும் ஆகாசம்" என்றிறே ப்ரஸித்தி; அத்தை ப்ரதம பரிஸ்பந்தத்தாலே க்ரஸித்துக்கொண்டு பின்னையும் அதினளவல்லாதபடியாகக் கிளராநின்ற தாய்த்து. இவற்றின் ஒருமைப்பாடிருக்கிறபடி இவ்வள வன்றென்று தோற்றாநின்றன வாய்த்து. (வேங்கடத்தித்யாதி) நல்லத்தை யழிக்கிற வித்தால் என்ன ப்ரயோஜநமுண்டு, நானும் அவனும் சேரும்படி காரியம் பாரீகோள், வல்லிகோளாகில். நீங்களெல்லாருங் கூடித்திரண்டு பெரிய கிளர்த்தியோடே பூக்களழியக் காரியம் பார்க்கிறிகோளித்தனையிறே; இத்தால் எனக்கென்ன ப்ரயோஜநமுண்டு. ஒருமாலை யவனோடே சேரும்வழி யுண்டாகில் பாரீகோள். தேன் மிக்கிருந்துள்ள மலர்களானவை சிதறும்படி திரண்டேறி வர்ஷிக்கிற நீங்கள். என் விரோதியை நீங்கள்

---

அஞ்சாம் பாட்டு. (வான்கொண்டித்யாதி) "கொண்டு" என்று அசடிதத்தைச் செய்தாப்போலே சொல்லுகைக்கு, ஆகாசத்துக்கு அதிசயமேதென்ன; அருளிச்செய்கிறார் (அபரிச்சிந்நேத்யாதி) (ஆகாசத்தை, க்ரஸித்துக்கொண்டு -விழுங்கிக்கொண்டென்றபடி. "கிளர்ந்தெழுந்த" என்றத்தாலே பலிதம் (இவற்றி னித்யாதி.) (ஒரு மாலை) என்றது. விடாய்த்தார் நாக்கு நனைக்கப்போரு மென்னுமாப்போலே அபிநிவேசாதிசயம். "மலர் சிதறத்திரண்டேறிப் பொழிவீர்காள்" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (என் விரோதியை யித்யாதி) பூக்கள் விரோதி

போக்கினவித்தால், நான் அவனோடே சேர்ந்தேனானேனோ?. (க) " 𑌨𑍇𑌮𑌾𑌨𑍍𑌪𑍁𑌷𑍍𑌪𑌫𑌲𑌦𑍍𑌰𑍁𑌮𑌾𑌨𑍍 " " நேமாந் புஷ்பபலத்ருமாந் " என்றிறே இவளுக்கிருக்கிறது. உனக்கு நாங்கள் செய்யவேண்டுவதென்னென்றாப்போலே யிருந்தன. (ஊன்கொண்ட வித்யாதி) தசைந்து கூரிதானவுகிராலே. (இரணியனை யுடலிடந்தான்) தமப்பன்பகையாக, மகனுடைய ப்ரதிஜ்ஞா ஸமகாலத்திலே வந்து தோற்றி, அவன் விரோதியைப் போக்கினவன். தமப்பனில் அண்ணியா ரில்லையிறே; இப்படியிருக்க, அவனில் அண்ணியனை யுதவினவன். "பிறர்பகையானால் உதவுமவன், தான் பகையானால் உதவலாகாதோ?" என்று சொல்லுகிறாளென்று சொல்லுங்கோள். தன்னைப்பேணாதே வந்து விரோதியைப் போக்குமவன்; தன்னைப்பேணாதே வாச்சொல்லுகிறேன் அன்றே, தன்னைப்பேண நான் பிழைப்பனோ, என்பருவத்திலே ஓராணுக்கு உதவினவன் எனக்கு உதவலாகாதோ?" என்று சொன்னேனென்று சொல்லுங்கோள். (ஊன்கொண்டவள்ளுகிரால்) ஆஸ்ரித விரோதிகளைத் தானே கைத்தொடனாப்ப் போக்குமவன். (இரணியனை யித்யாதி) விரோதியைப் போக்கவும் தன்னை யழியமாறவும் வேணுமென்று சொல்லுகிறேனல்லேன், தன்னுடைமை தான் பெறுவானென்று நினைக்கவமையும். (சரிவளைகள்) கழலுகிற வளைகளென்னுதல். சரியும் வளையுமென்னுதல். அவன் வந்தாலும் தொங்காதுபோலே காணும். (தருமாகில்) தாராதொழிகையே ஸ்வபாவமென்றிருக்கிறாள். ஸ்வதந்த்ரரா யிருப்பார் தாராதொழியிலும்

யாய் அஸஹ்யமா யிருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (𑌨𑍇𑌮𑌾𑌨𑍍- நேமா நித்யாதி) "தமப்பனில்" என்றது தொடங்கி மேலெல்லாம் - தாத்பர்ய பேதங்கள். "உகிரால்" என்றதுக்குத் தாத்பர்யம் (ஆஸ்ரித விரோதீத்யாதி) (உடைமை) - வளை. "கழலுகிறவளை" என்று ஸாமாந்யமா யிருக்கையைப்பற்றத் தாத்பர்யம் (அவன் வந்தாலு மித்யாதி.) "ஆகில்" என்ற யகிஸப்தத்துக்கு - தாராமையே நிஸ்சிதமாக்கித் தாத்பர்யம் (தாராதொழிகையே யித்யாதி) அன்றிக்கே, "தருமாகில்" என்று பிரித்து, "தரும்" என்றதுக்கு - தருகையே நிஸ்சிதமென்றர்த்தமாக்கி. "ஆகில்" என்றயதிஸப்தத்துக்குத் தாத்பர்யம் (ஸ்வதந்த்ரரா யித்யாதி) முந்தினவர்த்தத்திலே நோக்காக்கித் தாராமையே நிஸ்சித

(க) ரா-

ஒழிவரிறே; ஆனாலும் நமக்கு நசையறுகிறே. (சாற்றுமினே) அவன்தரிலும் தருகிறான், தவிரிலும் தவிருகிறான், நீங்கள் அறிவித்துப் போருங்கோள். ரு

மூ.—சலங்கொண்டுகிளர்ந்தெழுந்த தண்முகில்காள்! மாவலியை
நிலங்கொண்டான்வேங்கடத்தே நிரந்தேறிப்பொழிவீர்காள்!
உலங்குண்டவிளங்கனிபோல் உள்மெலியப்புகுந்து என்னை
நலங்கொண்டநாரணர்க்கு என்நடலைநோய்செப்புமினே. (சு)

ப-ரை. சலம் - கடல்நீரை, கொண்டு - பானம்பண்ணி, கிளர்ந்து - விளங்கினவர்களாய்க் கொண்டு, எழுந்த - மேலெழுந்த, தண் - ச்ரமஹரமான, முகில்காள்-மேகங்களே! மாவலியை-மஹாபலிபக்கலிலே இரந்து நீரேற்றுப்பெற்ற, நிலம்-பூமிமுதலிய லோகங்களை, கொண்டான்-திருவடிகளாலே அளந்துகொண்டவன் வர்த்திக்கிற, வேங்கடத்து-திருமலையிலே, நிரந்து - பரவி, ஏறி - ஆகாசத்திலேயேறி, பொழிவீர்காள்! - பெய்யுமவர்களே; உலங்கு - பெரும்கொசுகுகள், உண்ட-மோந்த, விளங்கனி போல் - விளங்கனியைப்போலே, மெலிய - நான் மெலியும்படி, உள் - என் சரீரத்தினுள்ளே, புகுந்து - ஆசாரூபமாக ப்ரவேசித்து, என்னை - என்னுடைய, நலம் - ஸ்த்ரீத்வத்தை, கொண்ட - அபஹரித்துக்கொண்ட, நாரணர்க்கு - ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுக்கு, என் - என்னுடைய, நடலைநோய் - நிற்பது இருப்பது கிடப்பது நடப்பதான வ்யாதியை செப்புமின் - சொல்லுங்கோள்.

வ்யா.—ஆறாம் பாட்டு. (சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த) குளிர்ந்த தண்ணீரைச்சேர்த்து "ஏலக்குழம்பு, ஏலக்குழம்பு" என்று திரிவாரைப்போலே திரியாநின்றனவாய்த்து. (தண்முகில்காள்) நீங்கள் வர்ஷிக்கிற ஜலம் வேணுமோ?, உங்கள் வடிவே யமையாதோ?. (மாவலியித்யாதி) பிறர்க்காகத் தன்னை யிரப்பாளனாக்கினவன் வர்த்திக்கிற தேஶத்திலே வர்த்திக்கிற வுங்களுக்கு, என் இரப்புக்குக் காரியம் செய்யவேண்டாவோ?. அஸாரன் பக்கலிலே உங்களைப் போகச்சொல்லுகிறே னன்றே; உடைய

மானால், "சாற்றுமினே" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஆனாலும் நமக்கித்யாதி.) இரண்டாமர்த்தத்திலே நோக்காக (அவன்தரிலுமித்யாதி.) ரு

ஆறாம் பாட்டு.—(சலமித்யாதி) "சலம்" - ஜலம். "மாவலியை நிலங்கொண்டான்" என்றதுக்குத் தாத்பர்யார்த்தம்.

வன் பக்கலிலேஉங்களைப்போகச்சொல்லுகிறேனத்தனையன்றோ?. (நிரந்து) பரந்து. (எறிப்பொழிவீர்காள்) சாய்கரகத்தை உயர வைத்துத் தண்ணீர் வார்ப்பாரைப்போலே, காணவே விடாய் கெடும்படி உயரவேறி வர்ஷிக்கிறீர்கோளிறே. அவன் வர்த்திக்கிற தேசத்திலே வர்த்தித்து அவனோடே உங்களுக்கு ஒரு ஸம்பந்தமுண்டானால் அவன் ஸ்வபாவமுண்டாகவேண்டாவோ ?. (உலங்கித்யாதி) "உலங்கு" என்பது - பெருநுளம்பு அவை விளாம்பழத்திலே மொய்க்கவாறே அதின் ரஸமெல்லாம் குடிபோமாய்த்து ; அப்படியே என்னுடம்போடே யணைந்து அகவாயைக் குடிபோக்கினானாய்த்து. (என்னை நலங்கொண்ட) என்னை ஸர்வஸ்வஹாரணம் பண்ணின. (நாரணர்க்கு) தம்முடம்பி லழுக்கு போக்யமாயிருக்குமவர்க்கு. (என்னித்யாதி) "தம் வாத்ஸல்யத்துக்கும் என்னாற்றாமைக்கும் என்ன சேர்த்தியுண்டு" என்று சொல்லுங்கோள். (என்நடலைநோய்) தமக்கும் இந்நடலை நோயுண்டாகில் அறிவிக்க இராரிறே. நிற்பது இருப்பது விழுவது எழுவதாய்ப் படுகிற என்னாற்றாமையை அறிவியுங்கோள். சு

மூ.—சங்கமாகடல்கடைந்தான் தண்முகில்காள்! வேங்கடத்துச்
சேங்கண்மால்சேவடிக்கீழ் அடிவீழ்ச்சிவிண்ணப்பம்
கொங்கைமேல்குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து ஒருநாள்
தங்குமேல் என்னாவிதங்குமென்றுரையீரே. (எ)

ப-ரை தண் - ப்ரமஹாரமான, முகில்காள் - மேகங்களே! சங்கம் - சங்குகள்மேலேறிக் கொழியாநிற்பதாய், மா - அளவிடற்கரியதாய், கடல் - திருப்பாற்கடலை, கடைந்தான் - கடைந்து தேவர்களுக்கு அம்ருதம் தந்தருளினவனாய், வேங்கடத்து - திருமலையிலெழுந்தருளியிருக்குமவனாய், அடிவீழ்ச்சி - அடியாட்டியான வென்னுடைய, செங்கண் - புண்டரீகாக்ஷனை மால் - ஸர்வேஶ்வரனுடையதாய், சே - ஆஶ்ரிதரைக்கை விடாமையாகிற செவ்வையையுடைத்தான, அடிக்கீழ் - திருவடிகளிலே தெண்டன் ஸமர்ப்பித்து, விண்ணப்பம் - நீங்கள் செய்யவேண்டும் விண்ணப்பமாவது;—

(அவாரன் பக்கலித்யாதி) "நிரந்து" - பரந்து. "உலங்கு" பெருநுளம்பு ; பெருங்கொசுகென்றபடி "நடலை" துக்கம் "நடலை" என்று நிற்பதிருப்பதான ஸஞ்சாரம். சு

கொங்கைமேல் - ஸ்தநங்களிலேயுள்ள, குங்குமத்தின் குழம்பு - குங்குமக் குழம்பானது. அழிய-அழியும்படி, ஒருநாள்-ஒருநாளாகிலும் புகுந்து-வந்து, தங்குமேல் - ஸம்ஶ்லேஷிக்குமாகில், என் - என்னுடைய, ஆவி - ப்ராணனானது, தங்குமென்று - நிலைநிற்குமென்று, உரையீர் - சொல்லுங்கோள், இத்தனையே நீங்கள் செய்யவேண்டுவதென்கிறாள்.

வ்யா.—ஏழாம் பாட்டு. (சங்கமாகடல் கடைந்தான்) கீழ்க் கிடந்த சங்குகள் மேலேறிக் கொழிக்கும்படி அபரிச்சிந்நமான கடலைக்கடைந்தவன்; தன்னை அர்த்தித்தார்க்குத் தன்னை வருந்திக் கடலைக்கடைந்து அவர்கள் ப்ரயோஜநத்தைக் கொடுக்குமவன் வர்த்திக்கிற தேஶத்திலேயன்றோ நீங்களும் வர்த்திக்கிறது. (தண்முகில்காள்) கடல் கடைந்தபோதுண்டான ஆயாஸத்தால் வந்த ஶ்ரம மாறும்படி குளிர்ந்த வடிவைக்காட்டி வர்த்திக்கிறனவாய்த்து. தன்னையே ப்ரயோஜநமாகவேணுமென்றிருப்பார்க்காக வந்து நிற்கிற தேஶமாய்த்து. "அவன்றான் வாராதிருக்க, இவளிப்பாடு படுகிறதென்!" என்றிருக்கிறீகோளாகில், (செங்கண்மால்) அங்கே சென்றவாறே காண்கிறீகோளிறே. அவன் கண்ணுறங்காமையும் அவனுடைய வ்யாமோஹமுமெல்லாம் அங்கே சென்றவாறே காண்கிறீகோளிறே. (க)"ந நித்³ராம் லப⁴தே ராம:" "அநித்ரஸ்ஸததம் ராம:" (சேவடிக்கீழித்யாதி) திருவடிகளிலே விழுந்து விண்ணப்பம் செய்யுங்கோள். விண்ணப்பம் செய்யும் பாசுரமென்

ஏழாம் பாட்டு. (சங்கமித்யாதி) "சங்கம்" என்றதுக்குத் தாத்பர்யம் (கீழ்க்கிடந்த வித்யாதி.) "சங்கமாகடல் கடைந்தானை செங்கண்மாலானவனுடைய - வேங்கடத்துத் தண்முகில்காள்" என்று கூட்டித் தாத்பர்யம் (தன்னையித்யாதி.) "கடல்கடைந்தான் - தண்முகில்காள்" என்று கூட்டித் தாத்பர்யம் (கடல்கடைந்தபோதித்யாதி.) "சங்கமாகடல் கடைந்தவனாய், அநந்தரம், வேங்கடத்துச் செங்கண்மாலானவன்" என்று கூட்டித் தாத்பர்யம் (தன்னையேயித்யாதி.) உறங்காமையாலே கண் சிவக்கும். "சேவடிக் கீழடிவீழ்ச்சி விண்ணப்பம்" என்றதுக்கு, "அடிவீழ்ச்சியான என்னுடைய-செங்கண்மால் சேவடிக் கீழ்விஷயமான - விண்ணப்பத்தை" என்றந்வயித் தருளிச்செய்வர். "அடிவீழ்ச்சி" - அடியாட்டி. "அடிவீழ்ச்சி" - அடியிலே விழுந்து என்றும். (பாசுரமென்னென்னில்) என்ற

(க) ரா - ஸு - ௬௬ - ௨௨.

னென்னில்; "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள் தங்குமேலென்னாவி தங்கும்" என்று சொல்லுங்கோள். "தம்வரவை விஶ்வஸித்து உத்யோகித்துக்கொண்டிருந்தேன், அது ஸப்ரயோஜநமாம்படி பண்ணுவராகில் தரிக்கலாம்" என்று சொல்லுங்கோள். முலையெழுந்தார்படிமோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே "நாம் சென்றாலும் இனி ஜீவிக்கமாட்டாள்" என்றிருக்கிலும் இருப்பரிறே; அக்குறைதீர அறிவித்துப் போரிகோள். (கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து) வெறும்புறத்திலே கொண்டு ஆற்ற வொண்ணாத முலைகளை அதுக்குமேலேகுங்குமத்தாலும் அலங்கரித்தாளாய்த்து.(குழம்பு)இவை சென்றறிவித்து நசையற்றாலிறே அவை பொறி யெழுவது. செருக்கனாய் ஸ்வதந்த்ரனாயிருப்பா னொருவனாகையாலே "இன்ன போதுவரும்" என்று அறுதியிடவொண்ணாதே. "இப்போது வந்தான். இப்போது வந்தான்" என்று அலங்கரித்தபடியே யிருக்கவேணுமிறே, இத்தலை பரதந்த்ர வஸ்துவாகையாலே. (குழம்பழியப்புகுந்து) முன்னடி தோற்றாதேயிறே வந்து புகுருவது. (ஒருநாள் தங்குமேல்) ஒருநாள் தங்குமாகில் போருமோ, பின்னை இப்பாரிப்புக்கெல்லா மென்னில்; (என்னாவி தங்கும்) போகத்துக்குப்

வசந்தாம், "கொங்கைமேல் குங்குமத்தின் குழம் பழியப் புகுந்து ஒருநாள் தங்குமே லென்னாவிதங்கும்" என்று சொல்லுங்கோள்; தம்வரவை விஶ்வஸித்து உத்யோகித்துக்கொண்டிருந்தேன், அதுஸப்ரயோஜந மாம்படி பண்ணுவராகில் தரிக்கலாமென்று சொல்லுங்கோள் முலையெழுந்தார்படி அவருக்குத்தெரியாதிறே;......கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து" என்று இவ்வளவும் திருத்துவாக்யம் அவனறியானோ? சொல்லவேணுமோ வென்ன (முலையெழுந்தாரித்யாதி.) அவன் வரவுக்குடலாகவொப்பித்து போகத்திலே அந்வயிக்க அவஸரம் பார்த்திருக்கிறாளாகில், "தங்குமே லென்னாவிதங்கும்" என்பா னென்னென்ன (நாம் சென்றாலுமித்யாதி) விஶ்லேஷ தசையில் குழம்பு அஸஹ்யமா யிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் ( இவை சென்றித்யாதி. ) பொறியெ; முலை-தணலாய்ச்சுடுகை. ஆனாலும் அலங்கரித்திருக்கக்கூடுமோ வென்ன அருளிச்செய்கிறார் (செருக்கனாயித்யாதி ) குழம்பழியவேண்டுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (முன்னடியித்யாதி.) எ

போராது, ப்ராண ரக்ஷணத்துக்குப் போரும். (ஒருநாள் தங்கு மேலென்னுவி தங்கும்) "குணஜ்ஞாநத்தாலே தரியாளோ?" என்றிருக்கவொண்ணாது, அணையுமாகில் தரிக்கலாம். எ

ழு.—கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள்! வேங்கடத்துப்
போர்காலத்தெழுந்தருளிப் பொருதவனார்பேர்சொல்லி
நீர்காலத்தெருக்கின் அம்பழவிலைபோல்வீழ்வேனை
வார்காலத்தொருநாள் தம்வாசகந்தந்தருளாரே. (அ)

ப - ரை. வேங்கடத்து - திருமலையிலே, கார்காலத்து - வர்ஷாகாலத்திலே, எழுகின்ற - மேலே எழுகின்ற, கார் - கறுத்திருந்துள்ள, முகில்காள் - மேகங்களே! போர்காலத்து - யுத்தகாலத்திலே, எழுந்தருளி—, பொருதவனார் - போர்செய்த சக்ரவர்த்தித் திருமகனுடைய, பேர் - திருநாமங்களை, சொல்லி—, நீர்காலத்து-கோடைகாலத்திலே, அம்- அழகிதாயிருந்துள்ள, எருக்கின் - எருக்கமரத்தினுடைய, பழவிலைபோல் - பழுப்பு அற்றுவிழுமாப்போலே, வீழ்வேனை - வருந்துகிற வென்னைப்பார்த்து, வார்காலத்து - இன்னும் நெடுங்காலம் பொறுத்தாயினும், ஒருநாள் - ஒருநாளிலே, தம்வாசகம் தந்தருளாரே - தாம் வார்த்தை சொல்லமாட்டாரோ வென்கிறாள்.

வ்யா.—எட்டாம் பாட்டு. (கார்காலத்தெழுகின்ற) அவன் வரவு குறித்துப்போன காலத்திலே தோற்றினவர்களன்றோ நீங்கள். (கார்முகில்காள்) தனக்கடைத்தகாலத்திலே தோற்றுகிறவையாகையாலே தன்நிறம் பெற்றுத் தோற்றி உதவுமாப்போலேயாய்த்து, இவனும் - முன்பெல்லாம் தோற்றாதே, ஆச்ரிதர் நலிவுபடுமளவானவாறே வந்து தோற்றி, அவர்கள் விரோதிகளைப் போக்கி உதவி, தான் நிறம் பெறும்படியும். இத்தசையிலே திருநாமஸங்கீர்த்தநத்தாலே தரிக்கலாமென்றிருந்தோம், அது தானே சைதில்ய ஹேதுவாகா நின்றது. (நீர்கால மித்யாதி) கோடையிலே பாலறவுலர்ந்த எருக்கிலையிலே மழைத் துளிபட்டவாறே அற்று விழுமாப்போலே யாய்த்து, விரஹத்தாலே நொந்திருக்கிற ஸமயத்திலே திருநாமஸங்கீர்த்தநத்தைப் பண்ண;

---

எட்டாம் பாட்டு (கார்காலத்தித்யாதி) "கார்காலம்" - வர்ஷாகாலம். "போர்காலம்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து, இப்பதத்துக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (தனக்கடைத்த வித்யாதி)

அதுதானே ஶைதில்ய ஹேதுவாக இற்றிற்று விழுகிறபடி. (வார் காலத்து) ஓட வொழுகிச் செல்லுகிற காலத்திலே. (ஒருநாள் தம்வாசகம் தந்தருளாரே) என்றும் ஒருபடிப் பட்டிருக்கவே ணுமோ இகிலும்; (க) "வாசாதர்மமவாப்நுஹி" "வாசாதர்மமவாப் நுஹி" என்று - ஒருவார்த்தை சொன்னலாகாதோ?. அங்கு தூதர்க்குச் சொன்னவார்த்தையிறே; இங்கும் இவற்றுக்கிறே சொல்லுகிறது அ

மூ.— மதயானைபோலெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்தைப்
பதியாகவாழ்வீர்காள்! பாம்பணையான்வார்த்தை என்னே!
கதியென்றும்தானாவான் கருதாது ஓர்பெண்கொடியை
வதைசெய்தானென்னுஞ்சொல் வையகத்தார்மதியாரே. (கூ)

ப - ரை. வேங்கடத்தை - திருமலையை, பதியாக - வாஸஸ்தானமாகக் கொண்டு, வாழ்வீர்காள் - வாழுமவர்களாய், மதம்-மதமுதிதமான, யானை போல் - யானைகளைப்போலே, எழுந்த - மேலெழுந்த, மா - பெரிய, முகில்காள் - மேகங்களே! பாம்பு - திருவனந்தாழ்வானை, அணையான்- படுக்கையாக வுடையவனுடைய, வார்த்தை - வார்த்தையானது, என்னே என்னபொய்யா யிராநின்றது; தான்—, ஆஶ்ரிதர்க்கு என்றும் - எக்காலத்திலும், கதியாவான் - ரக்ஷகனுயிருக்க, கருதாது - அத்தை நினையாமல், கொடி - வஞ்சிக்கொம்பை யொத்த இடையையுடையளான, ஓர் பெண்ணை—, வதைசெய்தான் - தான்கூடாமல் வருத்தினான், என்னும் சொல் - என்கிறசொல்லை, வையகத்தார் - லோகத்தார், மதியாரே - நினையார்களோ? அவனை ரக்ஷகனென்று மதியார்கள் என்றபடி.

---

"வார்தல்" - நீளுதல். (ஓடவொழுகி) - மிகவும் நெடுகி. "வார்தல் போதலொழுகலிவை நெடுமையாகும்" என்னக்கடவதிறே. முகங்கொடாமையிலே ஒருப்பட்டிருக்குமாப்போலே, வார்த்தை சொல்லாமையிலும் ஒருப்பட்டிருக்க வேணுமோவென்றபடி (இகிலும்) - வார்த்தை சொல்லுகிற விதிலும். ஸம்ஶ்லேஷமில்லாவிட்டால் வார்த்தைதான் சொல்லவொண்ணாதென்றபடி. "அவன் வார்த்தை சொல்லுகிறானில்லை" என்றதுக்கு இஶ்ஶ்லோகம் ஸம்வாதமானபடி எப்படியென்ன; அருளிச்செய்கிறார் (இங்கு மிவர்றுக்கிறேயித்யாதி.) அ

---

(க) ரா - ஸு - நக - கo.

வ்யா.—ஒன்பதாம் பாட்டு. (மதயானைபோலெழுந்த மாமுகில்காள்) (க) "𑌏𑌷 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑌾𑌤𑌿" "ஏஷஹ்யேவாநந்தயாதி" என்கிறபடியே அவன் ஆநந்திப்பிக்க ஆநந்தித்துத் திரிகிறீகோளன்றோ நீங்கள். (மாமுகில்காள்) ஒருவிபூதியாக (உ) "𑌅𑌹𑌮𑌨𑍍𑌨𑌮𑌹𑌮𑌨𑍍𑌨𑌮𑍍" "அஹமந்நமஹமந்நம்" என்று - அநுபவத்தாலே களிக்குமாப்போலே, நீங்களும் திரள் திரளாக அநுபவித்து வர்த்திக்கிறீகோ ளன்றோ?. (வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்) வந்தேறிகளாய்த் திருநாள் ஸேவித்துப் போவாரைப்போலே போராதே, அங்கே நித்யவாஸம் பண்ணப்பெறுவதே! நீங்கள் - சேறுதோய்ந்து கழுவினவர்க ளன்றிக்கே, முக்தரைப்போலன்றிக்கே, நித்யஸித்தரைப்போலேயாய்த்து. அந்தத்தை வர்த்தநத்தையிறே வாழ்வாகச்சொல்லுகிறது. இரண்டாற்றுக்கும் நடுவில் வாஸம்போலே. (ஈ) "நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" என்னக்கடவதிறே. (ச) "பலநீகாட்டிப்படுப்பாயோ"-"இன்னங்கெடுப்பாயோ?" என்கிறபடியே-இதரவிஷயப்ராவண்யம் விநாஶஹேதுவாயிருக்கும்; பகவத்ப்ராவண்யம் வாழ்வாயிருக்கும். (பாம்பணையான் வார்த்தையென்னே) படுக்கைத் தலையில்சொல்லும் வார்த்தைகள் அந்தரங்கர்க்குத் தெரியுமிறே. (கதியென்றும்

---

ஒன்பதாம் பாட்டு. (மதயானை யித்யாதி) கீழ்-முமுக்ஷுக்களில் வ்யாவ்ருத்தி சொல்லி, முக்தரில் வ்யாவ்ருத்தி (சேறுதோய்ந் தித்யாதி.) * "வேங்கடத்தைப் பதியாக வுடைத்தாகையே வாழ்வு" என்றார் - கீழ்; "வேங்கடத்தைப் பதியாகப்பெற்று பகவத்ப்ராவண்யமாகிய வாழ்வையுடையீர்காள்" என்று அர்த்தாந்தரம் விவக்ஷித்து, தத்ப்ரதிகோடியையும் காட்டுகிறார் (பலநீ காட்டி யித்யாதி.) (வர்த்தநத்தையிறே) "வாழ்ச்சியாக" என்று பூரிப்பது. அன்றிக்கே, இப்படி வர்த்தநத்தைக்கொண்டாடுகைக்கு ஏற்றமேதென்ன; அருளிச்செய்கிறார் (பலநீகாட்டி யித்யாதி) என்னுதல். ஏகதேஶவாஸத்தாலே (அந்தரங்கர்) என்கிறது. அன்றிக்கே அங்குத்தை வர்த்தநத்துக்குமடி-பகவத் ப்ராவண்யமாகையாலே, ஏகார்த்த

---

(க) தை-ஆ. (உ) தை-ப்ரு.

(ஈ) கக ரு. (ச) தி-வாய்-சு-கூ-க,

* "முடிக்கையிறே" என்று சில ஸ்ரீகோசங்கள்.

தானுவான்) (க) " దేవానాం దానవానాఞ్చ సామాన్యమధిదైవతమ్ । సర్వదా " "தேவாநாம் தாநவாநாஞ்சஸாமாந்ய மதிதைவதம் । ஸர்வதா" என்கிறபடியே - அல்லேனென்றும் ஆவேனென்றும் சொல்லும் இவனைப்போ லன்றிக்கே, என்று மொக்க வொருபடிப்பட்டே யிருக்குமாய்த்து அவன். (உ) "ஆள்பார்த்துழிதருவாய்" என்கிற படியே. (கருதாது) தனக்கு வருகிற ஸ்வரூபஹாநியை புத்தி பண்ணுதே. (ஓர் பெண்கொடியை வதைசெய்தானென்னும் சொல்) ஓர் கொள்கொம்பிலே சேர்க்கவேண்டும் கொடியைத் தறையிலேயிட்டு வைக்கையாவது - வதிக்கையிறே. (ங) " నచసీతా త్వయాహీనా " "நசஸீதாத்வயாஹீநா" பகவத் விஶ்லேஷமும் வதமும் - பர்யாயங்காணும். (வையகத்தார் மதியாரே) அத்தலை யில் ஸத்பாவத்தாலே இத்தலையில் ஸத்தை யென்னுமது போய த்தே. ஒருக்கால் முடிந்தார்க்கு இருக்கால் முடியவேண்டாவே?. இனி நாட்டார் தம்மைரக்ஷகரென்று விரும்பார்களென்று சொல் லுங்கோள். தந்தாமையிழந்தாலும் அத்தலைக்கு வருமவத்யம் பரிஹரிக்கும் குடியோ!. கூ

மூ.—நாகத்தினணையானை நன்னுதலாள்நயந்துரைசெய்
மேகத்தைவேங்கடக்கோன் விடுதூதில்விண்ணப்பம்
போகத்தில்வழுவாத புதுவையர்கோன்கோதைதமிழ்
ஆகத்துவைத்துரைப்பாரவர் அடியாராகுவரே. (கo)

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

ப - ரை. போகத்தில் - ஸகலபோகங்களிலும், வழுவாத-குறையாத புதுவையர் - ஸ்ரீ வில்லிபுத்தூரிலுள்ளார்க்கு, கோன் - நிர்வாஹகரான

---

மாகவுமாம். (தேவர்கள் அல்லேனுவேனென்கை) - ஶேஷத்வத்துக்கு உடன்படுகையும், படாமையும். (இவனைப்போல்) என்றது - சேதநனை "வையகத்தார் மதியாரே" என்றதுக் கவதாரிகை (அத்தலையிலித்யாதி) "இன்றியமையாமை" என்கிற ந்யாயத்தாலே, தானுண்டானல் என் னத்தையு முண்டென்கிறது. (போய்த்தே) இனிமுடியுமத்தனை யன்றோ?. "ஒருக்கால் முடிந்தால் இருக்கால் மட்டு முடியவேண்டா" என்று வாக்ய தாத்பர்யம் குடியோ! - குடியன்றோ என்றிடுபாடு கூ

---

(க) க - ஜித-உ. (உ) அ-திருவ-கூo. (ங) ரா-அயோ-நிங-ஙக

பெரியாழ்வார் திருமகளாய், நல் - அழகிய, நுதலாள் - நெற்றியையுடையளான, கோதை - ஆண்டாள், நாகத்தினணையானை - திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையனாய், வேங்கடம் - திருமலைக்கு, கோன் - நிர்வாஹகனான ஸர்வேச்வரன் விஷயமாக, நயந்து - ஆசைப்பட்டு, மேகத்தை—' தூது விடு - தூதாகவிட்டு, உரைசெய் விண்ணப்பம்-விண்ணப்பம் செய்த, தமிழ் - த்ராவிடரூபமான இப்பத்துப்பாட்டுக்களையும், ஆகத்து - தங்கள் நெஞ்சிலே, வைத்து - ஆபத்தநமாக வைத்துக்கொண்டு, உரைப்பாரவர் - சொல்லுமவர்கள், அடியாராகுவர்-அவனுக்கு சேஷபூதராவர்கள் என்கிறார்.

வ்யா.—நிகமத்தில், (நாகத்தினணையானை) நீங்கள் சென்றறிவிக்கு மித்தனையே வேண்டுவது, அத்தலையிலொரு குறையில்லை; நம்வரவுக்குறுப்பாகப் படுக்கைபடுத்துச் சாய்ந்துகிடந்தான். (நன்னுதலாள்) அப்படுக்கையிலே துகைத்தேறத்தகும் அவயவஶோபையை யுடையவள். (நயந்துரைசெய் - விண்ணப்பம்) ஆசைப்பட்டுச் சொன்ன விண்ணப்பம். (மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்) ராமாவதாரத்தில், ஐந்த்ரவ்யாகரண பண்டிதனைத் தூதாகவிட்டது; இங்கு, திருமலையிலே மேகங்களைத் தூதாகவிடாநின்றாள்; இதுவே வாசி. அங்கு நின்றும் வந்தாரையே விடுகை இரண்டிடத்திலும் ஒக்கும். அவ்வவதாரத்தில் பிற்பாடர்க்கு இழக்கவேண்டாதபடி, திருமலையிலே வந்து தூதுவிடுவாராரோ; என்று அவஸரம் பார்த்து இரா நின்றானாய்த்து.

(போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதைதமிழ்) பகவத் போகத்தில் ஒன்றும் தப்பாதபடி யெல்லாவகையாலும் அநுபவித்த பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்பாய்த்து - இவ்வாசைக்கு ஊற்று. விபவமுண்டானவன்று தொடங்கி போகத்திலே அந்வயித்தவரிறே பெரியாழ்வார் ;(௧)" கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" என்று தொடங்கி அநுபவித்தவரிறே இது அப்யஸிக்

---

பத்தாம்பாட்டு, (நாகத்தினணை யித்யாதி) விவரணம் (நம்வரவுக்கித்யாதி.) " வேங்கடக்கோன் " என்கையாலே வ்யாவ்ருத்தியும் காட்டுகிறார் (அவ்வவதாரத்தி லித்யாதி). விபவம் - சாடு ;-அவதாரம் அர்த்தம்; ஐஶ்வர்யம்-த்வநி. "நுதல்"-நெற்றி."நயந்து" - ஆசைப்பட்டு. "உரைசெய்"

---

(௧) பெரி-தி-௧-௨ ௧.

கைக்கு எவ்வளவதிகாரம் வேணுமென்னில்; (ஆகத்து வைத்துரைப்பாரவர்) "ஒருத்தி ஒருவிஷயத்தை யாசைப்பட்டுப் படும்பாடென்!" என்று அநுஸந்தித்துச்சொல்லவல்லவர்கள். (அடியாராகுவரே) மேகங்களைத் தூதுவிட வேண்டாதே, இவள்தான் மேகங்களைத் தூதுவிட்டவதுவே ஹேதுவாக இவளாசைப்பட்ட கைங்கர்யத்தைப்பெற்று வாழப்பெறுவர் †. "ஶேஷத்வம் த்யாஜ்யம்" என்றிறே புறம்புள்ளார் நினைத்திருப்பது; ஶேஷத்வம் புருஷார்த்தமென்று கேட்கலாவது-இவ்வாழ்வார்கள் பக்கலிலேயிறே. அபிமதவிஷயத்தில் தாஸ்யம் போகமாயிருக்குமிறே; இதரவிஷயங்களில் ஶேஷத்வமிறே கழிக்கிறது; - வகுத்த விஷயத்தில் ஶேஷத்வம் உத்தேஶ்யமாகக்கடவது. அந்யஶேஷத்வமாய்த்துத் தவிர்க்கிறது. க0

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

எட்டாம் திருமொழி முற்றிற்று.

---

## ஒன்பதாந்திருமொழி
# ஸிந்தூரச்செம்பொடி ப்ரவேசம்.

:(o):

அவ.—(க) "ప్రాణానామపిసన్దేహోమమస్యాత్" "ப்ராணாநாமபி ஸந்தேஹோமமஸ்யாத்" என்னும் தஶையாய்த்து கீழ்நின்றது;

உரைக்கப்பட்ட "ஆகம்" - நெஞ்சு. இத்தை புருஷார்த்தமாகச் சொல்லுவா னென்னென்ன (ஶேஷத்வ மித்யாதி.) (உ) "సేవాశ్వవృత్తిః" "ஸேவாஶ்வவ்ருத்தி:" என்றுத்யாஜ்யமன்றோ, அடியானென்கை புருஷார்த்தமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஶேஷத்வம் புருஷார்த்த மித்யாதி.) ஆனால் ஶேஷத்வம் து:கரூபமாயிராதோ வென்ன; அருளிச்செய்கிறார் (அபிமதேத்யாதி) ஆனால் "సర్వం పరవశం దుఃఖమ్" "ஸர்வம் பரவஶம் து:கம்" என்றும், "తాం పరివర్జయేత్" "தாம்பரிவர்ஜயேத்" என்றும் நிஷேதிக்கிறதென்னென்ன; அருளிச்செய்கிறார் (இதர விஷயங்களி லித்யாதி.) விவரணம் (வகுத்த விஷயத்தி லித்யாதி.) க0

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

(க) ரா - ஸு - (உ) மநு - ச-கசூ0

† "கைங்கர்யத்திலே அதிகரிக்கப்பெறுவர்" என்று கோசாந்தரத்தின் பாடம்

அத்தசைஸதன்னை அங்குச்சென்றறிவிக்கைக்கு ஆள்பெற்றதிறே அங்கு, அங்ஙன்போய் அறிவிக்கைக்கும் ஒருவரின்றிக்கே, "பே யறிவிக்கவேணும்" என்று சொன்ன மேகங்களும்போகாதே நின்றவிடத்திலே நின்று வர்ஷித்தன ; அத்தாலே அக்காலத்து கடைத்த பதார்த்தங்களடங்கலும் அரும்பிற்று ; அலர உபக் மிப்பனவும் கழிய அலர்வனவுமாய், அவைதான் செவ்விபெற்று இத்திருமேனிக்கும் அவயவ ஶோபைக்கும் ஸ்மாரகமாய்க் கொண்டு, கண்ட தடங்கலும் பாதகமாகிறதாய், சிலபாதிக்கைக்கு ஒருப்பட்டபடியாய்த்து-இத்திருமொழி. அதுதான் போய்முறுகி ப்ராணன்கள் கொண்டு ஜீவிக்க வரிதாபபடியான வளவாய்த்து மேலில் திருமொழி. ஆக, இரண்டுங்கூட(க) *இன்னுயிர்ச்சேவலி னுடைய அவஸ்தையாய்ச் செல்லுகிறது. ... ... *

மூ.—சிந்துரச்சேம்போடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும்
இந்திரகோபங்களே எழுந்தும்பரந்திட்டனவால்
மந்தரம்நாட்டி அன்றுமதுரக்கோழுஞ்சாறுகோண்ட
சுந்தரத்தோளுடையான் சுழலையில்நின்றுய்துங்கோலோ?. (க)

ப - ரை. திருமாலிருஞ்சோலையெங்கும் - திருமாலிருஞ்சோலைமலை யெங்கும், இந்திரகோபங்கள் - பட்டுப்பூச்சிகளானவை, சிந்துரச் செம் பொடிப்போல் - சிவந்த சாதிலிங்கப்பொடியைப்போல, எழுந்து - மேலெ ழுந்து, பரந்திட்டன - பரவின ; அன்று - தேவர்கள் சரணமடைந்த அக்காலத்திலே, க்ஷீராப்தியில், மந்தரம் - மந்தர பர்வதத்தை, நாட்டி - நட்டுக்கடைந்து, கொழும்மதுரம் - மிகவும் இனிதான, சாறு - அம்ருத மாகிற ரஸத்தை, கொண்ட - எடுத்து தேவர்களுக்குக் கொடுத்த, சுந்தரம்- அழகிய. தோளுடையான்-திருததோள்களையுடையவனுடைய. சுழலையில் நின்று - சூழ்வலையில் நின்றும், உய்துங்கொலோ - பிழைப்போமோ?, சூழ்வலை - தப்பாமல் அகப்படுத்தும் வலை.

---

அரு.—சிந்தூரச்செம்பொடி ப்ரவேஶ (அங்கு)-பிராட்டிக்கு கீழ்- மேகங்களைத் தூதுவிட்டாளாய் நின்றது ; அவை அக்காலத்தில் வர்ஷித்து மறைந்தது. அவ்வர்ஷத்தால் உத்பந்நமான பதார்த்தங்களுடைய இவளுக்கு பாதகமாய் * இன்னுயிர்ச் சேவலின் அவஸ்தையாய்ச் செல்லுகிறது மேலி ரண்டு திருமொழி.

---

(க) தி - வாய் - ௯ - ௫.

வ்யா.—முதற் பாட்டு. (சிந்தூரச்செம்பொடி யித்யாதி) "திருமலையைக் கண்ணாலே கண்டாகிலும் தரிப்போமென்றால் அதுவுங் கூட அரிதாம்படியாவதே! நம்தசையிருந்தபடி யென்!" என்கிறாள். "அவன் நாட்டில் குன்றுங்கொடியவோ ஒன்றும் தோன்றா" என்பர்களிறே; - அவன்றன்னைக் காணப் பெறுவிட்டால் நாட்டில் மலைகளும் தோன்றா தொழிய வேணுமோ வென்னா நிற்பர்களாய்த்து. அவன் வடிவுக்குப் போலியான திருமலையைக்கண்டாகிலும் தரிப்போமென்று பார்த்தால் அதுவும் அரிதாம்படியாய் விடுவதே!. (சிந்துரச் செம்பொடிப்போல்) ஒரு மத்தகஜம்போலேயாய்த்துத் திருமலை. அது ஸிந்தூரிதமானுப்போலே யிராநின்றதாய்த்து இவைவந்து பரம்பினபோது. மத்தகஜத்துக்குத் துவரூட்டினுப்போலே யிராநின்றதாய்த்து. (திருமாலிருஞ்சோலை யெங்கும்) ஜகத்தெல்லா மென்றபடி. ஜகத்தாவது-கண்ணுக்கு விஷயமா

---

முதற் பாட்டு. (சிந்துரமித்யாதி) (கண்ணாலே கண்டாகிலும் தரிப்போம்) என்றது - அவன் ஸம்பந்தமுடையதன்றோ வென்று கண்ணாலே கண்டாகிலும் தரிப்போமென்றா ளென்றபடி. (நம் தசையிருந்தபடி) - நம்முடைய பாக்யஹாநி யிருந்தபடி. விரஹிணிகளுக்கு நாயகனுடைய தேசத்தில் மலை அபேக்ஷிதமா யிருக்குமோவென்ன; அபேக்ஷிதமென்னுமத்தை தமிழர் துறையிலே அருளிச்செய்கிறார் (அவன் நாட்டிலித்யாதி.) எடுத்த வசநத்துக் கர்த்தம் (அவன் றன்னையித்யாதி.) கீழ் - திருமலையைக் கண்டு தரிக்கைக்கு ஹேது - ஸம்பந்தமென் றருளிச்செய்தாராய், தத்ஸ்மாரகத்வேந என்று ஹேத்வந்தரம் அருளிச் செய்கிறார் (அவன் வடிவுக்கித்யாதி.) (அரிதாம்படியாய் விடுவதே) அதாவது-இந்திரகோபங்கள் மறைக்கையாலே என்றபடி. "சிந்தூரம்" - சாதிலிங்கம். "செம்மை"-அழகு. "சிந்தூரம்" என்று-ஆனை (துவரூட்டுகை)-அந்தப் பொடியை அதின் மஸ்தகத்திலே பூசுகை. கீழ்வாக்யத்துக்கு விவரணம் (மத்தகஜத்துக் கித்யாதி.) கீழே அவன் ஸம்பந்தங்கொண்டும் அவனுக்கு ஸ்மாரகமானது கொண்டும் திருமலையைக்கண்டு தரிப்போமென்றால் அது செய்ய வொண்ணாதபடி இந்திரகோபங்கள் மறையா நின்றதென்றார்; அன்றிக்கே, இந்திரகோபங்கள்தான் அவனுடைய திருவதாரத்துக்குப் போலியான ஆகாரத்தாலே நலியாநின்றதென்று அர்த்தாந்தரம் விவக்ஷித்து. ஆனல் இந்திரகோபங்கள் அதரத்துக்குப் போலியாய் நலிகிறதாகில் ஜகத்தில் இந்திரகோபங்களுக்கும் பாதகத்வமுண்டே; ஆனபின்பு,

யிருப்ப தொன்றிறே; இவள் கண்ணுக்கு விஷயம் திருமலை யொழிய இல்லையாய்த்து. (சிந்துரம்)-சிவப்பு. (செம்மை)-அழகு. (க) "சிந்துரமிலங்கத்தன் திருநெற்றிமேல்" என்னக்கடவதிறே.

(இந்திரகோபங்களே) (உ) "ப்ராகாராவாநரீக்ருதா:" "ப்ராகாரா வாநரீக்ருதா:" என்னப்பெற்றதில்லை; லங்கையடங்க ராக்ஷஸரே யாயிருக்குமாப்போலே யாய்த்து. (எழுந்தும் பரந்திட்டனவால்) (ங) "ஏஷைவாஶம்ஸதேலங்காம்" "ஏஷைவாஶம்ஸதேலங்காம்" என்னு மாப்போலே, பூமியிலே தோற்றுவன சிலவும், ஆகாஶத்திலே எழும்புவன சிலவும், நாலடியிட்டுமேல் சில விழுந்தாப்போலே யிருப்பன சிலவுமா யிராநின்றனவாய்த்து. (ச) "இந்திரகோபங்க ளெம்பெருமான் கனிவாயொப்பான் சிந்தும்புறவில்" என்கிற படியே-திருவவதாரத்தில் பழுப்புக்கு ஸ்மாரக மாகாநின்றதாய்த்து.

(மந்தரம்நாட்டி) ஒருவர்பக்கலிலே யொன்று கொள்ளப் புக்கால் பின்பு அவர்களுக்கு ஒன்றும் தொங்காதபடி கொள்வா னொருவனாய்த்து. மந்தர பர்வதத்தைக் கொடுவந்து கடலின் நடுநெஞ்சிலே நட்டு நெருக்கி, தானே அகவாயிலுள்ளது காட்டிக் கொடுக்கும்படி கடைந்தாய்த்து வாங்கிற்று. (ரு) "மந்த்ரமூர்த்வாத்"

ஜகத்தில் 'இந்திரகோபங்கள் நலிகிறது'' என்னாதே "திருமாலிருஞ்சோலை யெங்கும்" என்று விஶேஷிப்பானென்னென்ன (திருமாலிருஞ் சோலை யெங்கும்-ஜகத்தெல்லா மென்றபடி) என்கிறார்; அதவா, வர்ஷாகாலத்தில் ஜகத்தெல்லாம் இந்திரகோபங்கள் பரந்திராதோ, "திருமாலிருஞ்சோலை யெங்கும்" என்பானென்னென்கிற ஶங்கையிலே யாகவுமாம். "சிந்துரம்" என்றதுக்கர்த்தாந்தரம் (சிவப்பென்று.) அவதாரணார்த்தத்தைப் பற்ற வருளிச்செய்கிறார் (ப்ராகார - ப்ராகாரேத்யாதி) அநுகூலராலே சூழுகையன்றிக்கே ப்ரதிகூலரேயாய்த் தென்றபடி. இது கிளம்பின தெப்படி யென்ன; அருளிச்செய்கிறார் (ஏஷை - ஏஷைவேத்யாதி.) நானொருவனுமே லங்கையை ஸேனையோடே ஸம்ஹரிக்கிறேனென்று கிளம்புமாப்போலே என்றபடி. (ராக்ஷஸரேயா யிருக்குமாப்போலே) என்ற பாதகத்வம் எவ்வழியாலே யென்ன; அருளிச்செய்கிறார் (இந்திரகோபங்களெம்பெருமானித்யாதி) கடைந்தானே என்ன; அருளிச்செய்கிறார்

(க) பெரி - தி - ரு - ச - கூ. (உ) ரா - யு - சக - கள.
(ங) ரா - யு - உகூ - உச. (ச) பெரி - தி - ச - உ - க.
(ரு)

"மந்தாமுடவாத" இத்யாதி. "ஒருவரால் கலக்க வொண்ணாத பெரியதத்வங்களையும் கலக்கி அவர்கள் பக்கலுள்ளது கொள்வா ஞெருவன், ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே நம்மை வந்து மேலிட்ட ழிக்கையாவதென்?" என்றிருந்தாள்போலே காணு மிவள்தான். (மதுரக்கொழும் சாறுகொண்ட) தான்கொண்ட ப்ரயோஜநத்தைக் குறித்து, அல்லாதார் கொண்ட ப்ரயோஜநமாக நினைத்த உப்புச் சாறு-கடலில் ஜலத்தோபாதியிறே. * விண்ணவரமுதுணவமுதில் வரும் பெண்ணமுதுண்டவனுய்த்து.

(சுந்தரத்தோளுடையான்) நெருக்கினனே யாகிலும் கைவிட வொண்ணாதாய்த்துத் தோளழகிருப்பது. (சுழலையில் நின் றுய்துங்கொலோ) அவன் நம்மைத தப்பாதபடி அகப்படுத்திக் கொள்ளப்பார்த்த சுழலையாய்த்து இம்மேகஸ்ருஷ்டி, அத்தைத் தப்பி யுஜ்ஜீவிக்க வல்லோமாவோமோ. (க) "[Grantha] [Grantha]" "மேகோதயஸ்ஸாகர ஸந்நிவ்ருத்தி:" என்னக்கடவதிறே. "ஒருமஹாபாஹு, நம்மை யகப்படுத்துகைக்குப் பார்த்துவைத்த வலையை நாம் தப்பி யுஜ்ஜீவிக்கை" என்று ஒருபொருளுண்டோ?; இனி முடிந்துபோ மித்தனையன்றோ?. க

மூ — போர்க்களிறுபொரும் மாலிருஞ்சோலையம் பூம்புறவில்
தார்க்கொடிமுல்லைகளும் தவளநகைகாட்டுகின்ற
கார்க்கொள்படாக்கள்நின்று கழறிச்சிரிக்கத்தரியேன்
ஆர்க்கிடுகோ? தோழீ! அவன்தார்செய்தபூசலையே. (உ)

---

([Grantha] - மந்தாமூடேத்யாதி.) இப்போது கடல்கடைந்தத்தைச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஒருவரால் கலக்கவித் யாதி.) இத்தால் - தான் மதித்திருந்த ஸ்த்ரீத்வாபிமாநத்தையும்போக்கி, தனக்குள்ளத்தையும் கொண்டமை தோற்றச் சொன்னு னென்றபடி. (தான்கொண்ட) பிராட்டியை ப்ரயோஜநமாகக்கொண்டு கடலில் அம்ரு தத்தை அவன் ப்ரயோஜநமாக நினைக்க அந்தஉப்புச்சாறுகடலில் ஜலத்தோ பாதியாய்த் தென்றபடி. அம்ருதம் ஜலமென்னும்படி பிராட்டி அம்ருதமா யிருப்பளோ வென்ன; அருளிச்செய்கிறார் (விண்ணவரித்யாதி.) நெருக்கி னனே யாகிலும் என்றது - நோவுபட விட்டானே யாகிலு மென்றபடி. மேகம் அவன் ஸ்ருஷ்டியோ வென்ன; அருளிச்செய்கிறார் ([Grantha]- மேகோதய இத்யாதி) "சுழலை" - சூழ்வலை க

(க)

ப - ரை. போர்-யுத்தோந்முகமான, களிறு-ஆண்யானைகள், பொரு-ஒன்றோடொன்று எதிர்த்துப்பொராநின்றுள்ள, மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையில், அம் - அழகிதாய், பூ - புஷ்பிதமான, புறவில் - சோலைகளிலே, தார்-அழகிதாகப்பூத்த, முல்லைக்கொடிகளும்—, ஸம்போகத்தின் ஆரம்பத்திலுண்டாகுமதான, தவளநகை - அவனுடைய புன்சிரிப்பை, காட்டுகின்ற - நினைப்பூட்டுமதாயிராநின்றன; கார்கொள் - சினையையுடைத்தான, படாக்கள் - படாவென்னும் ஓர்வகை புஷ்பங்கள், நின்று - ஒருபடிப்பட நின்று, கழறிச்சிரிக்க - என்னைப் பார்த்துவிட்டுச் சிரிக்க, அதுக்கு, தரியேன் - தரிக்கமாட்டுகிறிலேன்; தோழீ—, அவன் தார்செய்த - நாம் ஆசைப்பட்ட அவன் தோளில் மாலையானது செய்த, பூசலை - பரிபவத்தை, ஆர்க்கிடுகோ - ஆரிடத்தில் சொல்லி ஆறுவோம்.

வ்யா.—இரண்டாம் பாட்டு. (போர்க்களிறுபொரும் மாலிருஞ்சோலை) களிறுகள் களிக்குமூராய்த்து; பிடியேயாய்த்து உறுவுகிறது. ஆனைகள் திருமலையிலே கரைபொருது திரியாநிற்குமாய்த்து; அழகிதாகப்பூத்த பர்யந்தங்களிலே. (தாரித்யாதி) அழகிதாகப்பூத்த முல்லைக்கொடியானது ஸம்போகத்தினுடைய உபோத்காதத்தில் அவனுடைய மந்தஸ்மிதத்துக்கு ஸ்மாரகமாகாநின்றதாய்த்து. விஜாதீயராய் நம்மை நலியப்பெற்றோமோ?.

(காரித்யாதி) சினைகொண்ட படாக்களானவை யெங்குமொக்க முட்டாக்கிடப் பூத்துக் கிடந்தபோது ஸம்ஶ்லேஷம்போய் உந்மஸ்தகாஸமாய், பின்னை ஒருதலையில் பேற்றுக்குவிட்டுச் சிரிக்குமதுக்கு ஸ்மாரகமாகாநின்றதாய்த்து. (ஆர்க்கிடுகோதோழீ அவன் தார்செய்த பூசலையே) நாம் அவன் தோளிலிட்ட மாலையை யாசைப்பட்டு அது விளைத்த மஹாபாரதத்தை யார்க்குச் சொல்லுவோம். தோழிதான் இவளுக்கு முன்னே மோஹித்துக் கிடந்தாள்; இவளிழவுக்கு, இவளுக்கு முன்பே தறைப்பட்டாளாய்த்து அவள். (க) "எம்மில் முன்னவனுக்கு மாய்வராலோ" என்னுமாப்போலே

---

இரண்டாம் பாட்டு — (போர்க்களிறித்யாதி) "போர்க்களிறு" - யுத்தோந்முகமான யானை. "கொடி" என்றதுக்குத் தாத்பர்யம் (விஜாதீயராயித்யாதி) "கார்" - சினை "படா" - புஷ்பவிஶேஷம் (விட்டுச்சிரிக்க) - பெரியஹாஸம்பண்ண. தோழியிருக்க, "ஆர்க்கு" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (தோழிதானித்யாதி.) உ

---

(க) தி - வாய் - கூ - கூ - டு.

லாபா லாபங்கள் இரண்டு தலைக்கும் ஒத்திருக்கையாலே; நீ எனக்குமுன்னே நோவுபடா நின்றாய், என்னுற்றாமையை உனக்குச்சொல்லி தரிக்கப்பெறுகிறிலேன், இனியித்து கொடுகாரிய மின்றிக்கே, புறம்பே அந்யபராரா யிருக்கிறவர்களுக்குச் சொல்லவோ நான். உ

மூ.—கருவிளையோண்மலர்காள்! காயாமலர்காள்! திருமால்
உருவொளிகாட்டுகின்றீர் எனக்குய்வழக்கொன்றுரையீர்
திருவிளையாடுதிண்டோள் திருமாலிருஞ்சோலைநம்பி
வரிவளையில்புகுந்து வந்திபற்றும்வழக்குளதே. (ரு)

ப-ரை. ஒள் - அழகிய, கருவிளை மலர்காள் - காக்கணம் பூக்களே, ஒள் - அழகிய, காயாமலர்காள் - காயாம்பூக்களே, திருமால் - ஸ்ரீயஃபதியான ஸர்வேஶ்வரனுடைய, உருவொளி - திருமேனிநிறத்தை, காட்டுகின்றீர் - காட்டா நின்றிகோள், எனக்கு—, உய் - பிழைக்கும் வகை, ஒருவழக்குரையீர் - ஒருவார்த்தை சொல்லுகிறிகோளில்லை; திரு - பெரியபிராட்டியார், விளையாடு - விளையாடா நின்றுள்ள, திண் - திண்ணிய, தோள்-தோளையுடையராய், திருமாலிருஞ்சோலை-திருமாலிருஞ்சோலையிலெழுந்தருளியிருப்பவராய், நம்பி - ஸகலகுண பூர்ணரான சுந்தரபாஹுவானவர், இல் - நாங்களிருந்த விடத்தில், புகுந்து - வந்து, வரிவளை - எங்கள் கையில் வளையை, வந்தி - பலவந்தமாக, பற்றும் - பிடிக்கைக்கு, வழக்குளதே - ந்யாயமுண்டோ, சொல்லிகோளென்கிறாள்.

வ்யா.—மூன்றாம் பாட்டு. (கருவிளையித்யாதி) கருவிளையினுடைய அழகியமலர்காள். (கருவிளை) - காக்கணம். காயாமலர்காள்!. (திருமாலித்யாதி) பெரிய பிராட்டியாரும் அவனுமாய்க் கலந்திருந்தபோது தன்னிறம் பெற்றிருக்கும் போதைப் புகரைக் காட்டா நின்றிகோள். (எனக்கு) என்றும் அவனுளாய் அவன் காரியமே செய்து தலைக்கட்டப்பார்க்கு மித்தனையோ, இருவரானுல் . நொந்தாரை ஐயோ! என்னவேண்டாவோ. "ஸர்வேஶ்வரன் கருத்தைப் பின்செல்ல வேண்டாவோ எல்லார்க்கும்" என்றிரா நின்றனவாய்த்து அவை.

---

மூன்றாம் பாட்டு.-(கருவிளையித்யாதி) (இருவரானுல்)-தானுமவனுமானுல். அவைதான் பாதிப்பாளென்னென்ன; அருளிச்செய்கிறார்(ஸர்வே

நஞ்சீயர், ஸுந்தரபாண்டிய தேவரைக் கண்டிரா நிற்கச் செய்தே, (க) "[illegible]" "குணைர்தஶரதோபம:" என்கிற விடத்துக்கு-"பிறந்துபடைத்த குணங்களும் ஸ்வாபாவிக குணங்களுமெல்லாங் கூடினாலும் அரைமட்டேயாய், சக்ரவர்த்தித் திருமகன் என்னப்போரு மித்தனை" என்றருளிச்செய்ய; அத்தைக் கேட்டு "பரமபுருஷனுக்கு ஒருவன் வயிற்றிலே பிறந்து ஒரேற்றமுண்டாகவேணுமோ, அவன் பிறக்கையாலே அக்குடி தனக்கும் ஏத்தமாமித்தனையன்றோ" என்றானும். நாம்போன ஸமாதி யிவனறிந்திலனென்று பார்த்து, "அதெல்லாங் கிடக்கச்செய்தே பரமபுருஷன் என்னும்படி யென்றான்!" என்றாராம்; ஸ்ரீ விபீஷணாழ்வானை ப்ரஸங்கித்தவாறே, "விபீஷணனோ தான் அழகிதாகச் செய்தான், ஆபத்ஸமயத்திலே ப்ராதாவைவிட்டுப் போந்தானே" என்றானும்; "எலலாவற்றையும் விட்டுக்கொடுக்க வொண்ணாதென்று. பிதாவும்ஜ்யேஷ்டனான ப்ராதாவும் சேரப்போந்தவன்று ப்ராதாவை அநுவர்த்திக்கக்கடவன்; பிதாவோடே அவன் விரோதித்தவன்று ஜ்யேஷ்டனென்று பாராதே பிதாவை யநுவர்த்திக்கவேணும்"

---

ப்ஸ்வா னித்யாதி;) கீழே பெரியபிராட்டியாரும் தானுமாய்க்கலந்தபோது தன்னிறம் பெற்றிருக்கு மென்றத்தைப் பிடித்து.

அப்படி யவளாலே தனக்கு நிறமாம்படி யிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (நஞ்சீயரித்யாதி.) இவள் நினைவும் பூக்கள் நினைவும் வெவ்வேறா யிருந்ததுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்ய மருளிச்செய்கிறார் (நஞ்சீயரித்யாதி) "ராஜா, ஸர்வாதிகனானவனை தஶரதற்கு ஸமமாகச் சொல்லலாமோ?" என்று ஜீயரைக்கேட்க, "[illegible]" "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்று "தஶரதன் மகன்" என்கிறதே தமக்கேற்றமாக நினைத்திருக்கையாலே ஸமரென்னலாம்; "ஸௌஶீல்யமன்றிக்கே பரம புருஷத்வமுண்டோ, ஶீலகுணமுண்டானபோதுகாண் பரம புருஷத்வம்" என்று ஜீயருக்குவிவக்ஷை. நாம்போன ஸமாதி-நம் ஹ்ருதயம் (என்னென்றாராம்); அவனைக் கொண்டாடினாராம் (மார்மட்டேயாம்)- அளவுபட்டென்றபடி. இவள் நோவுபடபூக்கள் அவனோடே கூடி நலிகிறதுக்கு ஓரைதிஹ்ய மருளிச்செய்கிறார் (ஸ்ரீவிபீஷணாழ்வானித்யாதி.) (எல்லாவற்றையும் விட்டுக் கொடுக்கவொண்ணாது) என்றது - ராஜாவன்றோ வென்று கீழ்விட்டிருந்தாப்போலே, இங்கும் விட்டுக்கொடுக்க வொண்ணாதென்றபடி. விரோதித்தவன்று) என்றது.

---

(க) ரா - அயோ - க - கூ. (உ) ரா - யு - கஉ0 - கக.

என்றருளிச்செய்தார். (க)[సర్వేషామేవలోకానాం పితామాతాచమాధవః - ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவஃ] லோகத்துக்குள்ளே அந்தர்ப்பூதனிறே ராவணனும்.

(உய்வழக்கு) முடியும் வழக்கேயோ நீங்கள் கற்றது, உஜ்ஜீவிக்கும் வழக்குசொன்னலாகாதோ?. "நீ அஞ்சாதே கொள், நாங்கள் மறைய நிற்கிறோம்" என்று ஒருவார்த்தை சொன்னலாகாதோ?. பூப்போலே வந்து புலியானீகோளீ!. (ஒன்றுரையீர்) இவையே சைதந்யம் பெற்று ஒருவார்த்தை சொன்னல், அது கேட்டு பின்பு அவற்றைக்கொண்டு தரிக்கவேண்டும் தசைகாணும் இவள் தன்னது.

(திருவிளையாடித்யாதி) ப்ரணயி யல்லாதாரொருவனல்லன், ஒரு நக்ஷத்ரத்தில் பிறவாதா னொருவ னல்லன். ஓரூரிலே பிறந்து வளர்ந்தார் வந்திடார்களிறே. (திருவிளையாடு திண்டோள்) பெரிய பிராட்டியார்க்கு லீலார்த்தமாகச் சேணுன்று சமைத்தாப் போலே யாய்த்துத் திருத்தோள்களிருப்பது. (திருமாலிருஞ்சோலைநம்பி) ஆர்யர்களிகழ்ந்த ம்லேச்ச பூமியிலுள்ளார்க்கு ஸுலபனானவன். அதுக்குள்ளே புண்டிறே ஶீலமும். (நம்பி) சொல்லிச் சொல்லாத குணங்களால் பூர்ணனாய்த்து. (வரிவளையித்யாதி) தாமிருந்தவிடத்திலே நாங்கள் சென்றோமாகில் எங்களை நலியப்ராப்தம்; நாங்களிருந்த விருப்பிலே தாமேவந்து எங்களுடைய வுயிர்நிலையறிந்து (வந்திபற்றும்) எங்களிசை வின்றிக்கே யிருக்க, எங்கள் வளை கைக்கொள்ளுகைக்கு வழக்குண்டோ?. தாம் விரும்பினவளையென்று நாங்கள் இத்தைக்கொண்டு தரிப்போமாகில் இத்தையுங் கைக்கொள்ளுகைக்கு வழக்குண்டோ. வழக்குள்ள விடத்திலே யன்றோ கைக்கூலிகொள்வது. ஆனபின்பு எனக்கு ஜீவிக்கைக்கு ஒரு விரகு சொல்லிகோள். ௬

பிதாவை விரோதித்த வன்றென்றபடி. (பூப்போலே) என்றது-சாடு, (வந்தி) - சண்டை. "இல்புகுந்து - வரிவளை - வந்தி பற்றும்" என்றந்வயம். (வந்தி பற்றுகை) - பலாத்காரேண அபஹரிக்கை. தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கை ஶீலமன்றோ, ஸுலபனென்று ஸௌலப்யம் சொல்லுவா னென்னென்ன ; அருளிச்செய்கிறார் (அதுக்குள்ளே யித்யாதி)

"இல் புகுந்து - வரிவளை - வந்திபற்றும் - வழக்குளது" என்று

(க) பார - ஆர -

மூ.—பைம்பொழில்வாழ்குயில்காள்! மயில்காள்! ஒண்கருவிளைகாள்!
வம்பக்களங்கனிகாள்! வண்ணப்பூவைநறுமலர்காள்!
ஐம்பெரும்பாதகர்காள்! அணிமாலிருஞ்சோலைநின்ற
எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கென்செய்வதே?. (ச)

ப - ரை பை - பரந்த, பொழில் - சோலையிலே, வாழ் - வர்த்திக்கிற, குயில்காள் - குயில்களே!, மயில்காள் - மயில்களே!, ஒள்-அழகிய, கருவிளைகாள் - காக்கணம் பூக்களே!, வம்ப - இனிமையை யுடைத்தான, களங்கனிகாள் - களாப்பழங்களே!, வண்ணம்-அழகிய நிறத்தையும், நறு-மிக்க பரிமளத்தையு முடைத்தான, பூவைமலர்காள் - காயாம்பூக்களே!, நீங்கள், ஐம் பெரும்பாதகர்காள் - பஞ்ச மஹாபாதகரைப்போலே யிரா நின்றிகோள்; அணி - அழகிய, மாலிருஞ்சோலை நின்ற - திருமாலிருஞ்சோலை மலையிலெழுந்தருளி யிருக்கிற, எம்பெருமானுடைய-எம் ஸ்வாமியானவனுடைய, நிறம் - நிறமானது, உங்களுக்கு—, என்செய்வது-என்ன ப்ரயோஜநத்தைத் தரப்புகுகிறது; நிஷ்ப்ரயோஜந மென்றபடி.

வ்யா.—நாலாம் பாட்டு. (பைம்பொழி லித்யாதி) பரந்த பொழிலிலே வர்த்திக்கிற குயில்காள்!, உங்களுக்குச் சோலை நோக்கித் தருவாரார்?. (மயில்கா ளித்யாதி) ஏகதேஶ வாஸித்வமே ஹேதுவாக பாதகமாகாநின்றிகோளீ!; காதாசித்கமாகப் பழுத்த களாப்பழங்கள் நலிகிறபடி. அழகிய நிறத்தையுடைய பூவைகாள்!. பஞ்ச மஹாபாதகரைப்போலே யாய்த்து நலிகிறது. (அணியித்யாதி) பாதகனானவன் வடிவைக்கொண்டு ரக்ஷகரான நீங்கள் என் செய்ய நலிகிறிகோள்; ஶேஷஶேஷிகளானால் ஶேஷபூதர் தங்களிலே யொருமிடறாய் நின்று பிழைக்கவேண்டாவோ?; திருமலை

அந்வயித்து அருளிச்செய்கிறார் (தாமிருந்த விடத்திலே யித்யாதி) (உயிர் நிலை). - வளை (கைக்கூலி) - சாடு. கையில் வளை - ஆர்த்தம்; பரிதாநம்-த்வநி. ௬

நாலாம் பாட்டு—(பைம்பொழிலித்யாதி) (தருவாரார்) "நான் முடிந்தால்" இதிஶேஷ:. "பைம்பொழில்வாழ்-மயில்காள்" என்றும் கூட்டுவது. பாதகத்தின் உறைப்பாலும், அவைதான் அஞ்சாயிருக்கையாலும், ரமணோக்தியாக (பஞ்சமஹாபாதகர்) என்கிறது. (ரக்ஷகரான நீங்கள்) என்றது - இவ்வளவில் வந்தாஶ்வஸிப்பித்த வழியாலே ரக்ஷகரான என்றபடி. ஸ்வாபதேஶத்திலே தாத்பர்யாக்தர மருளிச்செய்கிறார் (ஶேஷஶேஷிகளித்யாதி)

யிலே நிற்கிற நிலையைக்காட்டி என்னை அநந்யார்ஹை யாக்கினவ னுடைய நிறத்தை நீங்கள் என்செய்ய ஏறிட்டுக்கொண்டிகோள்.

(பைம்பொழி லித்யாதி) பரமசேதநனோடு, சைதந்யமாத்ர முடையாரோடு, அசேதநங்களோடு வாசியற எல்லாருமொக்க பாதகரானால் எங்ஙனே பிழைக்கும்படி. பிரிந்தா னொருவனாய், பாதகர் பலருண்டானால் எங்ஙனே பிழைக்கும்படி. கலந்தார், பாதகராகையன்றிக்கே, அவ்வளவில் அவன்பிரிந்த ஸமயத்திலே முகங்காட்டி ஆஶ்வாஸத்தைப் பண்ணக்கடவ நீங்கள் பாதகரானால் எங்ஙனே பிழைக்கும்படி. பிரிந்தானொருவனாய் பாதககோடி பல வானாலும் பிழைக்கப்போமோ?. (அணியித்யாதி) நலியாநிற்கிறவன் நிறத்தை ரக்ஷகரான நீங்கள் என்செய்ய ஏறிட்டுக்கொண்டிகோள். அவன் நிறத்தைத் தாப்புக்கால், "எங்களுக்கு இந்நிறம்வேண்டா" என்னவேண்டாவோ, (உங்களுக்கு வேண்டாவிட்டால்.) ச

மூ.—துங்கமலர்ப்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற
சேங்கட்கருமுகிலின் திருவுருப்போல் மலர்மேல்
தொங்கியவண்டினங்காள்! தொகுபூஞ்சுனைகாள்! சுனையில்
தங்குசெந்தாமரைகாள்! எனக்கோர் சரண்சாற்றுமினே. (ரு)

ப-ரை. துங்கம் - ஓங்கின, மலர் - மலரையுடைத்தான, பொழில். சூழ் - பொழிலாலே சூழப்பட்ட. திருமாலிருஞ்சோலைநின்ற - திருமாலிருஞ் சோலைமலையிலே நின்றதிருக்கோலமா யெழுந்தருளியிருக்கிற, செம் - செந்தாமரை மலர்போன்ற, கண் - திருக்கண்களையும், கரு-கறுத்த முகிலின் - மேகத்தின் நிறத்தையுமுடைத்தான ஸர்வேச்வரனுடைய திருவுருப்போல் - அழகிய திருவடிவைப்போலே, மலர்மேல் - புஷ்பங் களிலே, தொங்கிய - தங்கின, வண்டினங்காள் - இனம் இனமான வண்டு களே. தொகு - நெருங்கியிருந்துள்ள. பூ - அழகியவான, சுனைகாள்-சுனை

---

தாதபர்யாந்தரம் அருளிச்செய்கைக்கு மீளவும் பதோபாதாநம் பண் ணுகிறார் (பைம்பொழிலித்யாதி) "எம்பெருமான்" என்கையாலே (பரம சேதநனோடு, என்றது. (சைதந்யமாத்ரம்)-குயில். குயில் மயில்களுக்கு பங்க்யந்தரேண விவரண மருளிச்செய்கிறார் (கலந்தாரித்யாதி.) "குயில் காள்" என்ற பன்மைக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பிரிந்தானொரு வனுயித்யாதி.) ச

களே!, சுனையில் - நீர்ச்சுனைகளிலே, தங்கு - பொருந்திய, செந்தாமரை காள் - செந்தாமரை மலர்களே, எனக்கு—, ஓர் சரண் சாற்றுமின் - ஒரு அடைக்கலம் சொல்லுங்கோளென்கிறாள்.

வ்யா.—அஞ்சாம் பாட்டு. (துங்கமல ரித்யாதி) ஓங்கின மலரையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட திருமாலிருஞ் சோலையிலே நின்ற. ஒருவரால் சென்று ப்ரவேஶிக்க வரிதாயிருக்கை. (க) "నగోత్తమం పుష్పితమాససాద" "நகோத்தமம் புஷ்பித மாஸஸாத." ஆற்றாமைகரைபுரண்டால் தீப்பாய்வொருப்படுமாப் போலே. (உ) "నేమాన్ పుష్పఫలద్రుమాన్" "நேமாந்புஷ்பபலத்ருமாந்" என்னும்படியாயிறே இவளுக்கிருக்கிறது. ராக்ஷஸீதர்ஶநத்தோபாதி கொடிதாயிராநின்றதாய்த்து. இவளுக்கு இவற்றினுடைய தர்ஶநமும். (செங்கட்கருமுகில்) இந்நெருப்பைக் கடந்து புக வேணுங்காணும் அநுபவிக்க. அகவாயில் நீர்மை யடங்கலும் தெரியுமாய்த்துக் கண்ணில் தண்ணளியிலே.

(மலர்மேல் தொங்கிய வண்டினங்காள்) நெருப்பிலே கால் பொருந்துமாப்போலே யிருக்கிறதிறே இவளுக்கு. குறைவற்றார் குறைவாளர் குறை தீர்க்கவேண்டாவோ?. (தொகு) அதின்கீழில் நீர் - திருமேனிக்கு ஸ்மாரகமாகாநின்றது. (சுனையித்யாதி) அதில் பூத்த பூக்கள் திவ்யாவயவாதிகளுக்கு ஸ்மாரகமாகா நின்றது.

---

அஞ்சாம் பாட்டு.—(துங்க மலரித்யாதி) "மலர்ப்பொழில்சூழ்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஒருவரா லித்யாதி.) (ஒருவரால்) - விரஹிணிகளால். அப்படி விரஹிணிகளுக்குக் கிட்டப் போகாதோ வென்ன; அருளிச்செய்கிறார் (నగోత్తమమ్ - நகோத்தமமித்யாதி.) ஆனால் கிட்டலாமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆற்றாமையித்யாதி) தரிக்கைக்குடலாகக் கிட்டினளென்றாலோ வென்ன; அருளிச்செய்கிறார் (నేమాన్-நேமாநித்யாதி.) எடுத்த ஶ்லோகத்தில், "నైషాపశ్యతిరాక్షస్యః" - "நைஷாபஶ்யதிராக்ஷஸ்யஃ" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (ராக்ஷஸீதர்ஶநேத்யாதி) (நெருப்பை) என்றது-கீழ்ச்சொன்ன புஷ்பிதமானபொழிலை "இனங்காள்" என்றதுக்குத் தாத்பர்யம் (குறைவற்றாரித்யாதி.) (அவிக்க)- தங்கள் தாபத்தை அவனவிக்க. (மலர்மேல் தொங்கிய வண்டினங்காள்)

---

(க) ரா - ஸு - உஅ - கஎ. (உ) ரா - ஸு - கசு - உரு.

(எனக்கித்யாதி) தர்மபுத்ரன் பீஷ்ம த்ரோணுதிகள் பக்கலிலே சென்று, "உங்களை நான்கொல்லும் விரகு நீங்களே சொல்ல வேணும்" என்றாப்போலே, பாதிக்கவொருப்பட்டு நிற்கிற விவற்றைப்பார்த்து, நான் உங்களைத் தப்பி ஜீவிப்பதொரு விரகு சொல்ல வல்லிகோளே? என்று கேட்கிறாள். "ஶிகண்டியை முன்னே நிறுத்துவது, வில்லைப் பொகடுகிறோம், கொன்றுகொள்" என்றாப்போலே ஒருவிரகு சொல்லவல்லிகோளே; "நாங்களில்லாத விடம் இன்னவிடம், அங்கேபோய் நீ ஜீவி" என்று ஒருபுகல் சொல்லவல்லிகோளே. இவை தனக்கொரு புகல் சொல்லவேண்டும்படி காணும் இவள்தான் புகலற்றபடி. ரு

மூ.—நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்
நூறுதடாவில்வெண்ணெய் வாய்நேர்ந்து பராவிவைத்தேன்
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில்சொன்னேன்
ஏறுதிருவுடையான் இன்றுவந்திவைகொள்ளுங்கொலோ?. (கூ)

ப-ரை. நாறு - பரிமளம் வீசாநின்றுள்ள, நறும் - நல்ல, பொழில்- பொழிலாலே சூழப்பட்ட, மாலிருஞ்சோலை- திருமாலிருஞ்சோலைமலையிலெழுந்தருளியிருக்கிற, நம்பிக்கு - பூர்ணனை சுந்தரத்தோளுடையானுக்கு, நான்—, நூறுதடாவில் - நூறுதடாக்களில், வெண்ணெய்-வெண்ணெயை, வாய் - வாயாலே, நேர்ந்து - சொல்லி, பராவிவைத்தேன் - நிறைத்துவைத்தேன்; அன்றியும், நூறுதடாநிறைந்த—, அக்காரவடிசில் - அக்காரவடிசில் ஸமர்ப்பிப்பதாக, சொன்னேன் - வாயாற்சொன்னேன்; ஏறு - மேன்மேலனப் பெருகாநின்றுள்ள, திருவுடையான் - ஸம்பத்துடையனான ஸர்வேச்வரன், வந்து - என்னிடம் வந்து, இவை - நூறுதடா வெண்ணெயும் நூறுதடா அக்காரவடிசிலுமாகிற விவற்றை, இன்று கொள்ளுங்கொலோ - இப்பொழுது அமுதுசெய்தருளுவனோ வென்கிறாள்.

---

திருக்கண்களில் கருவிழிக்கு ஸ்மாரகமாயிராநின்றதென்று கண்டுகொள்வது. (கேட்கிறாள்) ஆற்றாமையின் கனத்தாலே என்றபடி. (ஶிகண்டி)- நிர்வாணையான ஸ்த்ரீ. இவளைக்காணவே பீஷ்மர்க்கு முடிகைக்குக் காரணம். "अश्वत्थामा हतः" - "அஶ்வத்தாமாஹத:" என்றது - த்ரோணன் வில்லுப் பொகடுகைக்குக் காரணம். ரு

வ்யா.—ஆறும் பாட்டு. (நாறுநறும்பொழி லித்யாதி) சோலையில் † பரிமளம் தன்னுடைய நாற்றத்தோடே கூடினுப்போலே காணும் பூர்ணனுவது. குறைவற்றாரை வஶீகரிக்கும்போது வெண்ணெயாலே வஶீகரிக்க வேணும்போலேகாணும். (நூறுதடாவில் வெண்ணெய்) இடைச்சிகள் ப்ரார்த்திப்பது வெண்ணெயாயிருக்குமிறே. (வாய்நேர்ந்து) நினைவுமாத்ரத்தாலே போராதென்றிருக்கிறள். (க "க்ரியதாமிதிமாம்வத" "க்ரியதாமிதிமாம்வத" என்னுமாப்போலே யிராநின்றதாய்த்து இத்தலைக்கு.

"நூறுதடா நிறைந்தவெண்ணெய்" என்று பெண்பிள்ளை ப்ரார்த்தித்து வைத்தாள், கொடுத்தாளாகச் சொல்லக் கேட்டிலோம், ப்ரார்த்தித்தவற்றை யிறுக்கை அஸ்ஸந்தாந ஜாதர்க்கு பரமிறே என்றுதாம் அமுதுசெய்வித் தருளினாராம். (உ) "அங்பத்பூர்ணதபாம்கும்பா தந்யத் பாதாவநேஜநாத்" "அங்பத்பூர்ணதபாம்கும்பா தங்யத் பாதாவநேஜநாத்" என்கிற வஸ்துவுக்கு "நூறுதடா நிறைந்த" என்று இங்ஙனே பேரச்சொல்லுவானென்? என்று, நான் ஜீயரைக்கேட்டேன்; "திருவாய்ப்பாடியில் ஐஶ்வர்யத்துக்கு இதெல்லாங் கூடினாலும் ஒரு பூர்ணகும்பஸ்தாநீயம் என்றருளிச் செய்தார்" என்றருளிச்செய்வர். பூர்வார்த்த நிஷ்டர்க்கு இட்ட

ஆறும் பாட்டு.—(நாறுநறும்பொழிலித்யாதி) "நாறுநறும்பொழில்" என்று விஶேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம் (சோலையிலித்யாதி.) (தன்னுடைய) என்றது-ஆண்டாளை. "நான்" என்றதுக்குத் தாத்பர்யம் (இடைச்சிகளித்யாதி) இத்தால்-அவன் ஸ்வபாவத்தாலும் தன் ஸ்வபாவத்தாலும் வெண்ணெயை ப்ரார்த்திக்கிறளென்றபடி. "க்ரியதாமிதிமாம்வத" 'க்ரியதாமிதிமாம்வத' என்று திருவுள்ளத்தாலே நினைத்தவளவன்றிக்கே. "இன்னத்தைச் செய்யென்றருளிச்செய்ய வேணும்" என்று இளையபெருமாளருளிச்செய்தாப்போலே, இவளுக்கும் மனோரத மாத்ரம் போராமல் வாயாலே சொல்லி ப்ரார்த்திக்க வேணுமென்றபடி (என்னுமாப்போலே யிராநின்றதாய்த்து இத்தலைக்கு) என்று பாடமாயிருந்ததாகில், யதா யோக்ய மர்த்தம் கண்டுகொள்வது. அப்போதும், தாத்பர்யம இப்படியே பலிக்கும்

(க) ரா - ஆ - கடு - எ. (உ) பார -

† பரிமள மடைய.

வடி மாறியிட ப்ராப்தியில்லை; உத்தரார்த்த நிஷ்டர்க்கு, (க) "மஹம்ஸர்வம்கரிஷ்யாமி" "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" என்கிறபடியே யிருக்கவேணும். பூர்வார்த்தத்தை யநுஸந்தித்தால் (உ) "தத்தஸ்ய" "தத்தஸ்ய" என்று-பிராட்டி யிருந்தாப்போலே யிருக்கவேணும்; உத்தரார்த்தத்தை யநுஸந்தித்தால் இளைய பெருமாளைப்போலே கண்ணுறங்க அவஸரமில்லை. (ஏறுதிருவுடையான்) நாட்செல்ல நாட்செல்ல ஏறிவருகிற ஸம்பத்தையுடையவன். நிரபேக்ஷனுகை யாலே இவளிடுகிற த்ரவ்யத்தில் தாரதம்யம் பாரானுய்த்து. (இன்று வந்திவை கொள்ளுங்கொலோ) இதொரு வாங்மாத்ரமேயாய்ப் போகாமே, இத்தை அநுஷ்டாநபர்யந்தமாக்கி ஸ்வீகரிக்கவல்ல னேயோ? அத்ரிபகவானுஶ்ரமத்திலே ஸாயம்ஸமயத்திலே சென்று, "நான் இராமன், இவள் மைதிலி, இவன் லக்ஷ்மணன்" என்று நின்ருப்போலே, இவற்றை ஸ்வீகரிக்கவல்லனேயோ?.

(ஏறு திருவுடையான்) வங்கிப்புரத்து நம்பி ஸ்ரீபாதத்திலே பாய்த்துச் சிறியாத்தான் ஆஶ்ரயித்தது. போஶளராஜ்யத்தில் நின்றும்வந்த நாளிலே ராஜகேஸரியிலே ஆச்சான் நடந்திருந்தானுய், காணவேணுமென்று அங்கேசென்று கண்டிருக்கிறவளவிலே, நம்பி எனக்கிங்ஙனே பணிக்கக்கேட்டேன்; - "பாஹ்ய ஸமயங்களிலுள்ளாரும் ஒரு வஸ்துவைக்கொண்டு அது தனக்கு ஜ்ஞாநாதிக்யத்தையு முண்டாக்கிக்கொள்ளா நின்ருர்கள்; அவர்களிற் காட்டில் வைதிகஸமயமான நமக்கேற்றம்;-"'ஶ்ரிய:பதி யாஶ்ரயணீயன்' என்று பற்றுகிறவிதுகாண்" என்று பணித்தானும். ஆகையாலிறே நாம் இரண்டிடத்திலும் அவள் முன்னுக அநுஸந்திக்கிறது. ஜகத்காரணத்வாதிகளைக் கொள்ளப் புக்கால் ஒருத்த ஒருத்தன் ஸ்ரஷ்டாவாயிருக்கும், ஶ்ரிய:பதித்வந்தான் ஆஶ்ரயாந்தரத்தில் கிடப்ப தொன்றன்றே. கூ

ஆனல் அநந்ய ஸாதநனுக்கு இது ஸாதநமா யன்வயியாதோ வென்ன அருளிச்செய்கிருர் (பூர்வார்த்த நிஷ்டர்க்கித்யாதி) "வந்திவைகொள்ளுங் கொலோ" என்கைக்கு அவன் வந்தவிடமுண்டோவென்ன; அருளிச் செய்கிருர் (அத்ரிபகவானித்யாதி.) ஏறுதிருவுடையானுக்கு ஶ்ரிய:பதித்வத்

(க) ரா - அ - ௬௧ - உ௫. (உ) ரா - ஸு - ௬௬ - ௬0.

மூ.—இன்றுவந்தித்தனையும் அமுதுசெய்திடப்பெறில் நான்
ஒன்றுநூறாயிரமாகக்கொடுத்துப் பின்னுமாளுஞ்செய்வன்
தென்றல்மணங்கமழும் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் அடியேன்மநத்தே வந்துநேர்படிலே. (எ)

ப - ரை. தென்றல் - தென்றற்காற்றானது, மணம்கமழும் - பரிமளம் கொடுவந்து வீசாநின்றுள்ள, திருமாலிருஞ்சோலைதன்னுள் நின்ற திருமாலிருஞ்சோலைமலையிலிருக்கிற, பிரான் - உபகாரகனானவன், இன்று—, வந்து - என்னிடத்தே வந்து, இத்தனையும் - வெண்ணெயும் அக்காரவடிசிலுமாகிற இவ்வளவையும், அமுதுசெய்திடப் பெறில் - அமுதுசெய்தருளினால். நான்—, ஒன்று - ஒரு தடாவுக்கு, நூறாயிரமாக - நூறாயிரம் தடாவாக, கொடுத்து - கொடுப்பது மன்றி, அடியேன் - அடியாட்டியானவென்னுடைய, மநத்து - மநஸ்ஸிலே, வந்து நேர்படில் - வந்துகூடினால், பின்னும் - அதுக்குமேலே, ஆளும்செய்வன் - காலமுள்ளதனையும் அடிமையும் செய்வேனென்கிறாள்.

வ்யா.—ஏழாம் பாட்டு. (இன்றித்யாதி) நான ப்ரார்த்தித்திருக்கிற வின்று வந்து என்னிரப்பு மாறாமைக்கு ஒன்று செய்தானுப் விடுகையன்றிக்கே, தனக்கு இதொழியச் செல்லாமையுடையனுய்க் கொண்டுவந்து. (அமுதுசெய்திடப்பெறில்) இத்தனை நூறு தடாவில் வெண்ணெயும் நூறுதடாநிறைந்த அக்காரவடிசிலும் அமுதுசெய்திடப்பெறில். இவளுக்குப் பேறிதுவே, பின்னையும் அவனுக்குக் கொடுக்குமத்தனை. அவனமுதுசெய்தால் கொள்ளும் ப்ரயோஜந மென்னென்னில் (நானொன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னு மாளுஞ்செய்வன்) இது எனக்கு ப்ரயோஜநம். (நான்) அவனைப் படவேணுமென்று ப்ரார்த்திக்கிற நான். (ஒன்று நூறாயிரமாகக்கொடுத்து) நூறு தடாவுக்கும் நூறாயிரம் தடாவாகக்கொடுத்து. (பின்னும் ஆளுஞ்செய்வன்) அவனுகந்தது கொடுக்கிற நான் ஆசைப்பட்டதை விடுவேனோ?.

---

தையும் ஓரர்த்தமாக விவக்ஷித்து. ததர்த்தமாக ஓரைகஹ்ய மருளிச்செய்கிறார் (வங்கிபுரத்தித்யாதி) நம்பியும் ஆச்சியும் ஒருத்தர்; நம்பிகுமாரர் ஆச்சியென்றும் * ரோஸ்துதேய்யஃ * காரணத்துத்யேயः அன்றோ, காரணத்வம் போராதோ, ஸ்ரிய:பதித்வம் வேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஜகத்காரணத்வாதிகளை யித்யாதி.) கூ

ஏழாம் பாட்டு –(இன்றுவந்தித்யாதி இன்று வந்தென்னுதல்; இன்று உவந்தென்னுதல். உவப்பால்-ஆற்றாமை சொல்லுகிறது. ஒன்று நூறாயி

(தென்றல் மணம் கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள் நின்றபிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படில்-பின்னுமாளும் செய்வன்) வேறொன்று பெறுமதிற் காட்டிலும் அடிமைசெய்யு மித்தனையாகாதே தான் அவன் விரும்பியிருப்பது. புதியதொன்று பெறுமதிற் காட்டிலும் பழையதா யிழந்தது பெற்றாலன்றோ அவனுகப்பது.

(ஆளுஞ்செய்வன்) (க) "வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்று தமப்பனார் பாரித்திருக்குமதேகாணும் - இவளு மாசைப்படுகிறது. (தென்றலித்யாதி) அவன்பக்கல் குறையில்லை யிறே அத்தேசவாஸம் தட்டாதாகில். அவன் உபகரிக்கையிலே யொருப்பட்டான், அது தலைக்கட்டுமாகில். (அடியேன் மனத்தே வந்து நேர்படில் - பின்னுமாளும் செய்வன்) "வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம்" என்று மநோரதித் திருந்தபடியே வந்து கிட்டப்பெறில், பின்னுமாளும் செய்வன். (அடியேன்) புதிய தொன்றை ப்ரார்த்திக்கிறேனோ?. எ

மூ.—காலையெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள்
மாலின்வரவுசொல்லி மருள்பாடுதல்மெய்ம்மைகொலோ?
சோலைமலைப்பெருமான் துவராபதியெம்பெருமான்
ஆலினிலைப்பெருமான் அவன்வார்த்தையுரைக்கின்றதே. (அ)

ப - ரை. கரியகுருவிக்கணங்கள் - பரத்வாஜபக்ஷிகளானவை, காலை விடியற்காலத்திலே, எழுந்திருந்து—. சோலைமலைப்பெருமான் - திருமாலிருஞ்சோலைமலையி லெழுந்தருளி யிருக்கும் ஸ்வாமியாய், துவராபதி யெம்பெருமான் - ஸ்ரீமத்வாரகைக்கு நிர்வாஹகனாய், ஆலினிலைப் பெரு

---

மாகக் கொடுத்துப் பின்னுமாளும் செய்கை ப்ரயோஜநமென்றபடி. "நேர்படில்" - கிட்டுமாகில். "ஆளும் செய்வன்" என்றதுக்குத் தாத்பர்யம் (வேறொன்றித்யாதி.) இவள் கொடுக்கிறதைப் பற்றவும் அடிமையை அவனுகந்திருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (புதியதொன்றித்யாதி.)

"செய்வன்" என்ற ப்ரார்த்தனைக்குத் தாத்பர்யம் (வழுவிலா வித்யாதி.) இதிலும் கைங்கர்யமே அவனுக்கு புருஷார்த்தம் "பிரான்" என்கையாலே-குறையில்லை. தென்றல் பாதகமாகையாலே (தட்டாதாகிலென்கிறது.) எ

---

(க) தி - வாய் - ௩ - ௩ - க.

மானவன் - வடதள சாயியானவனுடைய, வார்த்தை - வார்த்தைகளை, உரைக்கின்றது-சொல்லாநின்றன, மாலின் - இப்படி ஸர்வேஶ்வரனுடைய, வரவு - வருகையை, சொல்லி— மருள்பாடுதல் - மருள் என்கிற பண்ணைப் பாடுகை, மெய்ம்மைகொலோ - மெய்யாகவற்றே.

வ்யா.—எட்டாம் பாட்டு. (காலையெழுந்திருந்து) ஆச்சான் பணித்ததாக ஜீயரருளிச் செய்யும்படி ;- "இவள் பிறந்த வூரில் திர்யக்குக்களுக்குத்தான் வேறு போதுபோக்குண்டோ?, கண்ணுறக்கந்தானுண்டோ" என்று * ஊரும் நாடுமுலகமும் தன்னைப் போலவிறே பண்ணிக்கொண்டிருப்பது. "𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍇 𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑍇 𑌚𑍋𑌤𑍍𑌥𑌾𑌯 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌹𑌿𑌤𑌮𑍍" "ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய சிந்தயேதாத்மநோ ஹிதம்" என்னுமாப்போலே யாய்த்து. (கரியவித்யாதி) வடிவாலும் பேச்சாலும் உபகரிக்குமவையாய்த்து. (மாலின் வரவுசொல்லி) அவன் முன்னடி தோற்றாதே வரும்படியைச்சொல்லி, "மருள் இந்தளம்" என்கிற பண்ணைப்பாடுகிறது மெய்யாகவற்றே?. "𑌕𑌿𑌨𑍍𑌨𑍁 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑍋𑌹𑍋𑌽𑌯𑌮𑍍" "கிந்நுஸ்யாச் சித்தமோஹோயம்" என்னுமாப்போலே.

(சோலையித்யாதி) எல்லாருடையவும் ரக்ஷணத்திலே யொருப்பட்டிருக்கிறவன், பதினாறாயிரம் பெண்களோடு ஆனைக்குக் குதிரை வைத்துப் பரிமாறின பரமரஸிகன், அகடிதகடநாஸாமர்த்யத்தையுடையவன்; அவன் வார்த்தை சொல்லாநின்றன. (மாலின் வரவு சொல்லி மருள்பாடுதல், மெய்ம்மைகொலோ) - இது மெய்யாகவற்றே?. அ

---

எட்டாம் பாட்டு.—(காலையித்யாதி) அசேதநமான இவை காலை எழுந்திருக்கவும் ஸர்வேஶ்வரன் வரவைச் சொல்லவும் கூடுமோவென்ன ; அருளிச்செய்கிறார் (ஆச்சானித்யாதி)

(ஆனைக்குக் குதிரைவைக்கை) ஆனை பெருத்திருந்தாலும் குதிரையைக் கிட்டித் தொடமாட்டாதாப்போலே, அவர்கள் அநேகரும் தானொருவனுமா யிருந்தாலும் "பெருமான்" என்கையாலே அவர்களெல்லார்க்கு மவ்வருகாய், ப்ரணயதாரையில் விஞ்சியிருக்குமென்றபடி.

மூ.—கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில்கொன்றைகள்மேல்
தூங்குபொன்மாலைகளோடு உடனாய்நின்றுதூங்குகின்றேன்
பூங்கொள்திருமுகத்து மடுத்தூதியசங்கொலியும்
சார்ங்கவில்நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ?.))

ப - ரை. கோங்கு - கோங்குமரங்கள், அலரும் - மலராநின்றுள்ள, பொழில் - பொழிலாலே சூழப்பட்ட, மாலிருஞ்சோலையில் - திருமாலிருஞ்சோலைமலையிலே, கொன்றைகள்மேல் - கொன்றை மரங்களின் மேலே, தூங்கு - தொங்காநின்றுள்ள, பொன் - பொன்நிறமான, மாலைகளோடு - மாலைகளோடே, உடனாய் நின்று - கூடவிருந்து, தூங்குகின்றேன் - தொங்காநிற்கிறேன்; பூங்கொள் - அழகிதான, திருமுகத்து - திருப்பவளத்திலே, மடுத்து - வைத்து, ஊதிய - ஊதின, சங்கொலியும் - சங்கத்வநியும், சார்ங்கம் - சார்ங்கமென்கிற வில் - வில்லில் எறிட்ட, நாண் ஒலியும் - நாணோசையும், தலைப்பெய்வது - கிட்டுவது, எஞ்ஞான்று கொலோ - என்றைக்கோ வென்கிறாள்.

வ்யா.—ஒன்பதாம் பாட்டு. (கோங்கித்யாதி) கோங்கலராநின்றுள்ள பொழிலை யுடைத்தான திருமாலிருஞ் சோலையில். (கொன்றையித்யாதி) தாமஸபுருஷர்கள் புகுரும் தேஶமன்று, ஸாத்விகர் இதுகொண்டு காரியங்கொள்ளார்கள். பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்து பகவதர்ஹமான வஸ்து இங்ஙனே யிழந்திருந்து க்லேஶப்படுவதே!. (பூங்கொளித்யாதி) இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினது தனக்கொருக்திக்குமே வேண்டும்படியாய்த்து இவள் தஶை. ஶிஶுபாலன் ஸ்வயம்வரார்த்தமாக வொருப்பட்ட ஸமயத்திலே, புறச்சோலையிலே

---

"கரிய குருவிக்கணங்கள் - காலை யெழுந்திருந்து - சோலைமலைப் பெருமானென்று துடங்கி, அவன்வார்த்தை யுரைக்கின்றது; இப்படி, மாவின் வரவுசொல்லி மருள்பாடுதல் மெய்ம்மைகொலோ" இத்யந்வய:.அ

ஒன்பதாம் பாட்டு. (கோங்கலருமித்யாதி) "மாலிருஞ்சோலையில் கொன்றை" என்றதுக்குத் தாத்பர்யம் (தாமஸ புருஷர்களித்யாதி) "கொன்றை" என்றதுக்குத் தாத்பர்யம் (ஸாத்விகரித்யாதி) "கொன்றை-மாருலிஞ்சோலையில்" என்றநவயித்து அருளிச்செய்வர் (இங்ஙனே இழந்திருந்துக்லேஶப்படுவதே) என்றவாக்யத்துக்கு-த்ருஷ்டாந்தாநுகுணமாக, பகவதநுகோரமு மின்றிக்கே பகவத் ஸம்பந்தமே ஹேதுவாக ஸம்ஸாரிகளுக்கும் கூட்டின்றிக்கே இப்படிக்லேஶப்படுவதே என்று தாத்பர்யம்.

ஸ்ரீ பாஞ்சஜந்யகோஷமானது வந்து செவிப்பட்டு தரிப்பித்தது ருக்மிணிப்பிராட்டியை; ராவணன் மாயாஸிரஸ்ஸைக் காட்டின போது, ஸ்ரீஸார்ங்கத்தின் ஜ்யாகோஷமானது வந்து செவிப்பட்டு தரிப்பித்தது ஸ்ரீஜநகராஜன் திருமகளை; இரண்டவதாரத்திலுள்ள வையும் மடுத்தொலிக்க வேண்டும்படியாய்த்து இவள் விடாய். அவர்களளவல்லவாய்த்து இவளாற்றாமை. கூ

மூ.—சந்தொடுகாரகிலும்சுமந்து தடங்கள்பொருது
வந்திழியுஞ்சிலம்பாறுடை மாலிருஞ்சோலைநின்ற
சுந்தரனைச் சுரும்பார்குழற்கோதை தொகுத்துரைத்த
செந்தமிழ்பத்தும்வல்லார் திருமாலடிசேர்வர்களே. (க0)

ப - ரை. சந்தொடு-சந்தனக்கட்டைகளையும், கார்-கறுத்த, அகிலும் - அகில்கட்டைகளையும், சுமந்து - அடித்துக்கொண்டும், தடங்கள் - தடாகங்களை, பொருது - அழித்துக்கொண்டும், வந்திழியும் - வந்து இழியாநின்றுள்ள, சிலம்பாறுடை - நூபுரகங்கையை யுடைத்தான, மாலிருஞ்சோலை நின்ற - திருமாலிருஞ்சோலைமலையி லெழுந்தருளியிருக்கிற, சுந்தரனை - ஸௌந்தரபாஹுவிஷயமாக; சுரும்பு - வண்டுகள், ஆர் - சப்தியாநின்றுள்ள, குழல்-கூந்தலையுடைத்தான, கோதை-ஆண்டாள், தொகுத்து உரைத்த - கல்யாணகுணங்களைச் சேர்த்தருளிச்செய்ததாய், செம்-செவ்வி தான தமிழ்பத்தும்-த்ராவிடரூபமான பத்துப்பாட்டுக்களையும், வல்லார் - அப்யஸிக்க வல்லவர்கள், திருமால் - ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனுடைய, அடி - திருவடிகளை, சேர்வர்கள் - கிட்டி கைங்கர்யம் பண்ணப் பெறுவரென்கிறார்.

வ்யா.—பத்தாம் பாட்டு. (சந்தித்யாதி) பிறந்தகத்தினின்றும் புக்ககத்துக்குப் போம் ஸ்த்ரீகள், தநங்கொண்டுபோமாப்போலே யாய்த்து. (தடங்கள்பொருது) ஒருமத்தகஜம் கரையைப்பொருது வருமாப்போலே. (சிலம்பாறுடை) பரமபதத்துக்கு விரஜைபோலே யாய்த்து - திருமலைக்குத் திருச்சிலம்பாறு. (சுந்தரனை) ஸர்வாங்க ஸௌந்தரனை யாய்த்துக் கவிபாடிற்று.

---

(க்லேஶப்படுவதே) என்று இவள்வார்த்தை கொன்றைப் புஷ்பம்போலே ஒன்றுக்கும் அர்ஹமன்றிக்கே நிஷ்ப்ரயோஜநமானேனென்று கருத்து

(அவர்களளவல்ல வாய்த்து) என்றது-அவர்களோ ரொருத்தருடைய வாற்றாமையினளவல்ல வாய்த்தென்றபடி கூ

'(சுரும்பார் குழல்கோதை) தன்னுடைய ஏகாங்க வௌஷ்
தர்பத்தாலே இவை யடையக் குமிழ் நீருண்ணும்படி பண்ண
வல்லவளாய்த்து இப்பாடுபட்டாள். (தொகுத்துரைத்த) ரத்நங்
களைச்சேரத் திரட்டினாப்போலே கல்யாணகுணங்களைச் சேர்த்துச்
சொன்ன.

(செந்தமிழ்) செவ்வியதமிழ். பாவபந்தம் வழிந்து சொல்
லாய்ப்புறப்பட்டவித்தனை. (திருமாலித்யாதி) பிராட்டியுமவனு
மான சேர்த்தியிலே யடிமை செய்யவேணுமென்றாய்த்து இவளா
சைப்பட்டது, அப்பேறுபெறுவர்கள்.

(க) [அஹம்ஶிஷ்யாச - அஹம்ஶிஷ்யாச] ஜ்ஞாதவ்யாங்க ளடங்கக்
கேட்டதும் உம்மோடே; [தாஸீச - தாஸீச] பெரியபிராட்டியாரும்
நீரும் சேரவிருந்து "இன்னத்தையெடு, இன்னத்தைவை" என்றால்
அப்படி செய்யவுரியேன்; [பக்தாச - பக்தாச] உம்முடைய அடியா
ரோடே கூடிக் கவிபாடவுரியேன். ஒரு வ்யக்திக்கே இப்படி
அநேகாகாரமாகப் பிரியவொண்ணுமோ; இப்படி கூடுமோ வென்
னில்; - [புருஷோத்தம - புருஷோத்தம] நீர் புருஷோத்தமர், நீரெவ்
வள வழிக்கவல்லீர் அவ்வளவு மழியுமத்தனை யன்றோ என்கிறது.
ஆறுபெருகி போகாநின்றால், வாய்த்தலைகளாலும் கைவாய்க்கால்
களாலும் பிறியுண்டு போகாநின்றாலும் கடலில் புகுமபமும் குறை
வற்றுப் புகுமிறே, அப்படியே எல்லாவகையாலும் அநுபவியா
நின்றாலும் அபிநிவேஶம் குறையாதிருக்குமாய்த்திவர்க்கு. கO

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஒன்பதாம் திருமொழி முற்றிற்று.

---

நிகமத்தில் (சந்தத்யாதி) "சந்து" - சந்தநம். "சுரும்பு" - வண்டு.
பாவபந்தமடியாக வுண்டாகையாலே - (செவ்விய தமிழ்) அடிமை
செய்ய ஆசைப்பட்டிருக்குமோ விவளென்ன; அருளிச்செய்கிறார் (அஹம்
ஶிஷ்யேத்யாதி - அஹம்ஶிஷ்யேத்யாதி) எல்லாவவஸ்தையு முண்டானால்
அபிநிவேஶம் குறையாதோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆறுபெருகி
யித்யாதி) கO

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

## பத்தாந்திருமொழி

# கார்க்கோடல் - ப்ரவேஶம்.

———:( o ):———

அவ.—கீழ்த்திருமொழியில்-தன் ஜீவநத்திலுண்டான நசையாலே புறம்பே சிலவற்றின் காலிலே விழுந்தாள்; அது கார்யகரமாகப் பெற்றதில்லை; அவன்றான் வந்து முகங்காட்டுதல், அவன் வரவுக்கு ஸூசகமாயிருப்பன சிலவுண்டாதல் செய்யப்பெற்று அத்தாலே தரிக்கவேண்டும்படி ஆற்றாமை கரைபுரண்டது; இவளை தரிப்பிக்கைக்குடலா யிருப்பதொன்றின்றிக்கே, அவன் வரவு குறித்துப்போன பருவம் வந்து, அப்பருவத்துக்கடைத்த பதார்த்தங்களும் ஒருமுகஞ்செய்து, அவனுடைய திருமேனிக்கும் திவ்யாவயவங்களுக்கும் அவயவஶோபைக்கும் பேச்சுக்கும் ஸ்மாரகமாய்க்கொண்டு, எடுப்பும் சாய்ப்புமாய் மேல் விழுந்து நலிய, அவற்றாலே நலிவுபட்டு, இவற்றின் ஒருமைப்பாடிருந்தபடியால் நமக்கு ஜீவிக்கை என்றொரு பொருளின்றிக்கே இருந்தது, இனிநாம் ஜீவிக்கைக்கு முதலாக நினைத்திருப்பது இரண்டு; அவன், (க) "ஸத்யஜேயஸி" "நத்யஜேயம்" என்றும், (உ) "ஏதத்வ்ரதம்மம" "ஏதத்வ்ரதம்மம" என்றும், (௩) "நமே மோகம் வசோ பவேத்" "நமேமோகம் வசோபவேத்" என்றும் சொல்லும் வார்த்தைகளும், பெரியாழ்வார் வயிற்றில் பிறப்புமாய்த்து.

---

அரு—கார்க்கோடல் ப்ரவேஶே (கீழ்த்திருமொழி - * விண்ணீல மேலாப்பு. காலிலே விழுந்தது * விண்ணீல மேலாப்பில். "பிறந்தமை பொய்யன்றே" என்றது - ஸம்ஶயம்; "அதுகாண்டும்" என்றது - நிஶ்சயம்; இந்த இரண்டு பதத்தையும் பற்ற வருளிச்செய்கிறார் (அவன் றனித்யாதி) (பருவம் வந்து) என்றது-காலம் வந்தென்றபடி (எடுப்பும் சாய்ப்புமாய்) என்றது *சிந்துரச் செம்பொடியான திருமொழியில். "குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே" என்றத்தைப்பற்ற (அவன் ஸத்யஜேயஸி - நத்யஜேயமென்று மித்யாதி.)

---

(க) ரா - யு - ௧அ - ௩. (உ) ரா - யு - ௧அ - ௩௩.

(௩) பார -

அவன் சொல்லும் வார்த்தைகளைக்கொண்டு ஜீவிக்க நினைத்திருந்தாலும் ஸ்வதந்த்ரனை யிவைகொண்டு வளைக்கவொண்ணாதிறே. வடுவன் ஒரோ வ்யக்திகளை அபேக்ஷித்தால், அதுக்கு நிவாரகரில்லையிறே, ஸ்வதந்த்ரனாகையாலே. இனி அது தப்பிற்றாகவிருந்தாலும், தப்பாதென்றிருக்கலாவது பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பு; "அதுதானும் நமக்கு பலிக்கப் புகாநின்றதோ?, அதுக்குத்தான் விஷயபூதர் நாமல்லோமோ?" என்று அதிலேயும் அதிஶங்கை பண்ணி, பின்னையும் "அல்லாதவையெல்லாம் தப்பிற்றாகிலும் பெரியாழ்வாரோடுண்டான ஸம்பந்தம் தப்பாது, அவன் ஸ்வாதந்த்ர்யத்தையும் மாற்றி, நம்மையும் அவன் திருவடிகளிலே சேர்த்தல்லது விடாது" என்றத்யவஸித்து, அத்தாலே தரித்தாளாய்த் தலைக்கட்டுகிறது.

அவன் (க) "నత్యజేయమ్" "நத்யஜேயம்" என்றாலும், (உ) "ఆనయైనంహరిశ్రేష్ఠ" "ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்ட" என்பார் வேணுமிறே. பட்டர், வாணவதரையனைக்காண வெழுந்தருளி ஸ்ரீதேவி மங்கலத்திலே யிருக்கச்செய்தே, அங்குத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸம்ப்ரமங்கண்டு அருளிச்செய்தவார்த்தை. *

மூ.—கார்க்கோடல்பூக்காள்! கார்க்கடல்வண்ணனென்மேலும்மைப்
போர்க்கோலஞ்செய்து போரவிடுத்தவனெங்குற்றான்?
ஆர்க்கோவினிநாம் பூசலிடுவது? அணிதுழாய்த்
தார்க்கோடும்நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேனந்தோ!. (கக)

ப - ரை கார் - கறுத்த. கோடல் பூக்காள் - காந்தள் பூக்களே, கார் கறுத்த, கடல் - கடல்போன்ற, வண்ணன் - திருநிறத்தையுடைய னார்வே

மித்யாதி.) "நல்லவென்தோழி" என்கிறபாட்டைக் கடாக்ஷித்து (பின்னையுமித்யாதி) "నత్యజేయమ్ - நத்யஜேயம்" என்னாநிற்க புருஷகாரம் வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவன் நத்யஜேயமித்யாதி.) புருஷகாரம் வேணுமென்னுமதுக்கு ஸம்வாதமாக ஒரைதிஹ்யமருளிச்செய்கிறார் (பட்டரித்யாதி) அருளிச்செய்த வார்த்தையாவது - "பெருமாளிருக்க, உம்மிடத்திலே ஸ்ரீ வைஷ்ணவர்களித்தனை ப்ரதிபத்தி பண்ணுகைக்கு ஹேதுவேது" என்று தடஸ்தர்கேட்க; "பகவல்லாபத்துக்கு பாகவதர் கடகராகையாலே ஆழ்வான் ஸம்பந்தத்தைப்பற்றச் செய்தார்கள்" என்றருளிச்செய்த வார்த்தை. *

(க) ரா - யு - கஅ - ௲.    (உ). ரா - யு - கஅ - ௲ச.

ஸ்வான், எம்மேல் - எங்கள்பேரில், உம்மை - உங்களை. போர்க்கோலம் செய்து - யுத்தாலங்காரம் பண்ணி, போரவிடுத்தவன் - அனுப்பினவன், எங்குற்றான் - எங்கேயிருக்கிறான்; அவனோவந்திலன், அவன் விபூதியோ பகையாயிற்று, நாம்—, இனி - இப்படியானபின்பு, ஆர்க்கு-ஆரிடத்திலே போய், பூசலிடுவது - முறையிடுகிறது; அணி - அழகிய, துழாய்த்தார்க்கு - திருத்துழாய்மாலையை ஆசைப்பட்டு, அது பெறாமையாலே, ஓடும்-வருந்தும்படியான, நெஞ்சந்தன்னை - மநஸ்ஸை, படைக்க வல்லேன் - பெற்றுடையேனாயிராநின்றேன், அந்தோ - ஐயோவென்கிறாள்.

வ்யா.—முதற் பாட்டு. (கார்க்கோடல் பூக்காள்) கார்காலத்தில் கோடல் பூக்காளென்னுதல்; அன்றிக்கே, அவைதான் நாநா வர்ணமாயிருக்குமிறே. (கார்க்கோடல் பெருத்தகோடல் பூக்காளென்னுதல்); அக்காலே-கறுத்த நிறத்தை யுடைத்தானவென்னுதல், காலபரமானபோது, "அவன் குறித்துப்போன காலத்துக்கு ஸ்மாரகமாகாநின்றன என்றுகிறது; மற்றைப்போது, அவன் வடிவுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடியாகிறது. (கார்க்கோடல் பூக்காள்) முதலிலே தன்னோடே கலந்து பிரியக்கடவனாக நினைத்தவளவிலே தன்னை நலியக்கடவதாக, இப்பதார்த்தங்களை, அவன் அடியிலே ஸ்ருஷ்டிக்குவிட்டா னென்றிருக்கிறாள். "ஜகத்ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் மோக்ஷம்" என்றிருக்கை தவிர்ந்து, தன்னை நலிகைக்கு உடலாக வுண்டாக்கினனென் றிருக்கிறாள். ஒருவிஷயத்தைப் பிரிந்து நோவுபடுவார்க்கு இத்தனை பதார்த்தங்கள் பகையாவதே!; பிராட்டியைப் பிரிந்த வநந்தரம் ராக்ஷஸஜாதியாகப் பகையானாப் போலே. மூலபலத்தினன்று ராக்ஷஸஜாதியாகச் சூழப்போந்தாப்

---

முதற் பாட்டு. (கார்க்கோடல்) "கார்"-பெருமை. "கோடல்" - காந்தள். "கார்" கறுப்பும், பெருமையும். அது சிவந்தன்றோ விருப்பதென்ன; அருளிச்செய்கிறார் (அவைதானித்யாதி) (ஸ்மாரகமாய்) - அவயவங்களுக்கும் திருமேனிக்கும் ஸ்மாரகமாயென்றபடி. "போரவிடுத்தவன்"-போரவிட்டவன். "போரவிடுத்தவன்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (முதலிலே இத்யாதி.) கீழ்வாக்யவிவரணம் (ஜகத்ஸ்ருஷ்டிக் கித்யாதி) மேலில் பாட்டுக்களையும் பற்ற வருளிச்செய்கிறார் (ஒரு விஷயத்தையித்யாதி.) பஹுவசநத்தைப் பற்ற வருளிச்செய்கிறார் (மூலபலத்தினன்றித்யாதி.) மேகங்களைக்கேட்பது, பூக்களைக் கேட்பதாகிற விதுக்கு வாசி யேதென்ன; அருளிச்செய்கிறார் (விண்ணீல மேலாப்பித்யாதி)

போலே, பார்த்த பார்த்த விடமெங்கும் இவையேயாய்க் கிடவா நின்றன. "விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல்" என்றவிடத்தில் வாயு ப்ரேரிதமாய்க் கொண்டாகிலும் ஸஞ்சரிக்கைக்கு யோக்யதை யுண்டிறே மேகங்களுக்கு; அங்ஙன் கால்வாங்கமாட்டாதே நிற்கிறவற்றுக்கு வார்த்தை சொல்லுகிறாளிறே கலங்கினபடியாலே. (பூக்காள்) உங்களுடைய ஸ்வாபாவிகமான மேன்மையைப் போகட்டு ஓரபலையை நலிகைக்கு இவ்வன்மையை யேறிட்டுக்கொண்டுவருவதே!.

(கார்க்கடல் வண்ணன்) கறுத்த நிறத்தையுடைத்தான கடல்போன்ற நிறத்தையுடையவன். இதர பதார்த்தங்களினுடைய ஸத்பாவம் ஸ்வேச்சாதீநமா யிருக்குமாப்போலே, இவ்விக்ரஹ பரிக்ரஹமும் ஸ்வேச்சாதீநமா யிருக்குமிறே. இவ்விக்ரஹத்தை யேறிட்டுக்கொண்டதும் தன்னை நலிக்கைக்கு என்றிருக்கிறாள். (எம்மேல்) கலக்கையுங்கூட மிகையாம்படி, ஆஸ்ரயமுங்கூட வின்றிக்கே யிருக்கிறவென்மேலே. (உம்மை) நலிகைக்கு ஏகாந்தமான நிறத்தை ஏறிட்டுக்கொண்டுவந்து நிற்கிறவுங்களை. விரஹத்தாலே முன்பே தொட்டார்மேல் தோஷமாம்படி சென்றற்றிருக்கிறவென்மேல். (உம்மை) மென்மையன்றிக்கே, வன்மையுடையாரையும் முடிக்கவல்ல வுங்களை. "நிர்ஜீவ ஶரீரத்திலேயும் உயிரைக் கொடுத்து நலியவல்லவை" என்றிருக்கிறாள்.

(போர்க்கோலஞ்செய்து) இந்த்ரஜித்வதத்துக்கு இளையபெருமாளைப் பெருமாள் அலங்கரித்துப் புறப்பட விட்டாப்போலே,

---

பாதகபதார்த்தங்களைச் சொல்லுகிற விடத்திலே விக்ரஹத்தைச் சொல்லுவானென், இதுவும் பாதகமன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (இதரபதார்த்தங்களித்யாதி) (ஸத்பாவம்) - பாதகமாக புஷ்பங்களை உண்டாக்குகை (எம்மேல்)-ஸ்வாபாவிக மார்த்தவ மென்னுதல்; விரஹகார்ஶ்யமென்னுதல் *(உம்மை)-நிறத்தாலே என்னுதல்; பலத்தாலே யென்னுதல். (கலக்கையுங்கூட) என்ற வாக்யவிவரணம் (விரஹத்தாலே யித்யாதி) (மென்மையன்றிக்கே) என்றவாக்யம் - தாத்பர்யாந்தர மாதல். (நலிகைக்கு ஏகாந்தமான) என்றவாக்யவிவரணம் (நிர்ஜீவேத்யாதி ;) அன்றிக்கே, சென்றறிந்ததாகில் நலியக்கூடுமோவென்ன ; அருளிச்செய்கிறார் (நிர்ஜீவேத்யாதி) என்னவுமாம்.

தன்னை முடிக்கைக்கு இவற்றை யொப்பித்துப் போரவிட்டானென்றிறே யிருக்கிறாள். அங்கு ப்ரணயிநியைப் பிரித்தாரை முடிக்கைக்குப் புறப்படவிட்டான்-சக்ரவர்த்தித்திருமகன்; இங்கு ப்ரணயிநியை முடிக்கைக்கு க்ருஷ்ணன் தன்நிம்பாலே இவற்றை வரவிட்டானென்றாய்த்து நினைத்திருக்கிறது. (செய்து) இவற்றுக்கு நிறங்கொடுத்தான் அவனிறே. (க) "కృష్ణ ఏవహిలోకానా ముత్పత్తి రపిచాప్యయః" "க்ருஷ்ண ஏவ ஹிலோகாநா முத்பத்திரபிசாப்யய:." (போரவிடுத்தவன்) "இவற்றுக்கு த்வரைபோராது" என்றுபார்த்து. "நீங்கள் போங்கோள், என்று அவன்றானே பின்னே நின்று த்வரிப்பிக்கிறான்" என்றிறே யிருக்கிறாள்.—ராஜாக்கள், எதிரிகளரணழியாவிட்டால், தாங்கள் முகந்தோற்றாமே நின்று, தங்களுக்கு அஸாதாரண சிஹ்நமான சத்ரசாமராதிகளைப் போகவிடுமாப்போலே, இவற்றுக்குத் தன்னிறத்தைக் கொடுத்துப்போகவிட்டானவனென்றிறே யிருக்கிறாள்.

நம்மை நலிகைக்குடலாக இவற்றை யுண்டாக்கினானன்றாகில் நங்கண் வட்டமொழிய நிறுத்தவுமாமே!. (எங்குற்றான்) (உ) [తేననాదేనమహతా నిర్జగామహరీశ్వరః-தேநநாதேநமஹதா நிர்ஜகாமஹரீஸ்வர:] மஹாராஜருடைய மிடற்றோசையின் தசைப்பைக் கேட்டு, "முன்புபோலே கோழைத்தனமாயிருந்ததில்லை. ஓரடியிவனுக் குண்டாகவேணும், நமக்கிரைபோருமாகில் பார்ப்போம்" என்று புறப்பட்டானிறே. அப்படியே. இவற்றினுடைய வுத்யோகமிருந்தபடியையும் பாதகத்வ மிருந்தபடியையும் கண்டோமுக்கு, "இவற்றினளவல்ல, அவன் பின்னேவந்து நின்றான்" என்று, "எங்குற்றான்" என்கிறாள்.

---

கோலமாவது - நிறம். நிறங்கொடுத்தான்-ஸ்ர்ஷ்டித்தான். "போர்க் கோலம்செய்து" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (ராஜாக்களித்யாதி) முந்தினது - ஸாமாந்யேந அவற்றுக்கு நிறங்கொடுக்கை; இரண்டாவது - தன்னிறத்தைக் கொடுக்கை. ஸ்மாரகத்வேநபாதகத்வம், இரண்டு தாத்பர்யத்துக்கும் ஸமாநம். அவன் போரவிட்டானென்கைக்கு ஜ்ஞாபகமென்ன; அருளிச்செய்கிறார் (ராஜாக்களித்யாதி வாக்யத்வயத்தாலே.)

---

(க) பார-ஸபா-கூஅ-உகூ, (உ) ரா-பா-க-கூஅ.

தன்னை முடிக்க நிற்கிற விவற்றை "எங்குற்றான்" என்கிற தென்னென்னில்; இவை முடிக்கை தவிராதாகில் அவ்வடிவை யொருக்கால் கண்டு முடியலா மென்னுமத்தாலே. நம்மபிமதமும் பெற்றோமாகில் பெருகிறோம், அவன் நினைவும் தலைக்கட்டிற்று கிறது. இவளுக்கு அபிமதம் அவன்வடிவைக் காண்கை; அவனுக்கபிமதம் இவளை முடிக்கை. "எங்குற்றான்" என்றால், "இங்குற்றான்" என்று அவற்றுக்கு மறுமாற்றம் சொல்லவேண்டும்படியிறே தன்னவஸ்தைதான். (க)[க்ஷிப்ரம் ராமாய ஶம்ஸ- க்ஷிப்ரம்ராமாயஶம்ஸத்வம்] அவற்றுக்கு அபிமானியான தேவதா முகத்தாலே யாகிலும் வார்த்தை சொல்லுகைக்கு யோக்யதையுண்டிறே - அங்கு; அதுவுமில்லையிறே இவற்றுக்கு;

இவை யொருவார்த்தை சொல்லக்கேட்டிலள், "இவை யொருவார்த்தை சொல்லமாட்டா" என்றறியாதே, "அவன் வாராமையாலேயிறே இவைபேசாதே நிற்கிறது" என்று பார்த்து (ஆர்க்கோவினி நாம் பூசலிடுவது) என்கிறாள். அவனோ வந்திலன், அவன் விபூதியோ நமக்குப் பகையாய்த்து, வ்ருத்தகீர்த்தநம் பண்ணி தரிப்போமென்றால், *போதயந்த: பரஸ்பரம்- போதயந்த:பாஸ்பாம் பண்ணுகைக்கும் ஆளில்லையாய்த்து; இனி நாம் ஆர்வாசலிலே கூப்பிடுவோம்.

இவற்றுக்குத் தன்னிறத்தைக் கொடுத்துவிட்டது தன்னை நலிகைக் கோவென்ன; அருளிச்செய்கிறார் (நம்மையித்யாதி.) "எங்குற்றான்" என்று இவற்றைக் கேட்கைக்கு ப்ரஸக்தியேதென்ன; அருளிச்செய்கிறார் (தேநாதேந - தேநாதே நேத்யாதி.) "எங்குற்றான்" என்கைக்கு கிட்ட நிற்கிறானோ வென்ன; அருளிச்செய்கிறார் (மஹாராஜரித்யாதி) அசேதநத்தைக்கேட்டால் சொல்லுமோவென்ன; அருளிச்செய்கிறார் (எங்குற்றானென்று வித்யாதி.) அப்படி அசேதநத்தைக் கேட்டபேருண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (க்ஷிப்ரம் ராமாய-க்ஷிப்ரம் ராமாயேத்யாதி.) பிராட்டி கோதாவரியாகிற நதியைக் குறித்துச் சொன்னாளென்றபடி. வ்யாவர்த்தி அவற்றுக்கு; அதுவுமில்லையிறே இவற்றுக்கு. (இப்படியிருக்க, அவற்றுக்கு மறுமாற்றம் சொல்லவேண்டும்படியிறே தன்னவஸ்தைதான்) என்று கீழோடே ஸம்பந்தம். "பூசலிடுவது" -கூப்பீடு. 'அணி"- அழகு. மேலுக்கவதாரிகை (இவை யித்யாதி) (அவன் விபூதி) என்றது - கார்க்கோடல் பூக்களை..

(க) ரா-ஆரசக-நிக.

அவன் நமக்கு பாதகனானவன்றும் அவன் விபூதி ஓரகத் தடியாராய் நம்கருத்திலே நிற்குமென்றிருந்தோம், அதுவும் அவன் கருத்திலே நின்றபின்பு, நாம் இனி யார்வாசலிலே கூப்பிடுவோம்.

(அணியித்யாதி) அவனும் அவன் விபூதியும் ஒருமிடறானால் நானும் என்விபூதியும் ஒருமிடறாகப் பெற்றேனோ? அதுவும், அவன் திருமேனியிலே சாத்தின திருத்துழாய்மாலை யென்றவாறே உடை குலைப்படாநின்றது. (க) "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:" "மநஏவமநுஷ்யாணாம் காரணம்பந்தமோக்ஷயோ:" என்னக்கடவதிறே. அதுவும் இப்போது பந்தகமாயவிட்டதித்தனை. (நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேன்) நெஞ்சு எனக்கில்லாவிட்டால் நானோதான் எனக்குளேனாயிருக்கிறேன். நெஞ்சுக்கு ஆஶ்ரயமான தேஹ பரிக்ரஹத்துக் கடியான கர்மம்பண்ணினேன் நானேயன்றோ? (அந்தோ) அவனில்லையாய்த்து, அவன் விபூதியில்லையாய்த்து; தானில்லையாய்த்து, தன் விபூதியில்லையாய்த்து. இத்தஶைகண்டு இரங்கி க்ருபைபண்ணுகைக்குப் புறம்பு ஒருவருமில்லையாய்த்தே; தன்தஶைக்குத் தானேயிரங்கி ஐயோ! என்கிறாள். க

அவன் பகையானால் விபூதியும் பகையாகாதோவென்ன; அருளிச்செய்கிறார் (அவன் நமக்கித்யாதி) (ஓரகத்தடியார்) - அகத்திலவளாயிருக்கிற க்ருஹிணிக்கு அடியாரென்றபடி. (இவள் விபூதி.) நெஞ்சு (ஒருமிடறாகப்பெற்றேனோ) என்றது - தாரகத்வேந ஒருமிடறாகப் பெற்றேனோ வென்றபடி. ஆசைப்பட்டுக் கிடையாமையாலே உடைகுலைப்படாநின்றதென்றபடி. நெஞ்சுபோனால் தரிக்கவொண்ணாதோவென்ன; அருளிச்செய்கிறார் (மந ஏவ - மநஏவேத்யாதி) நெஞ்சு எல்லாவத்துக்கும் பொதுவாகையாலே, அதில்லாவிட்டால் தரித்திருக்கப் போகாதென்று தாத்பர்யம். அதாவது - பகவத் விஷயத்தைப்பற்றுகையாலே மோக்ஷஹேதுவாகிற ஆகாரம் போய், து:கஹேதுத்வேந பந்தகமாய்விட்டதென்றபடி. அவனை விடுகை இஷ்டமாய், கூடுகை அநிஷ்டமாயிருக்கையாலே பந்தகமாய் விட்டதென்று வெறுப்பு. "நெஞ்சந்தன்னை" என்று முழுச்சொல்லாய். இப்படிப்பட்ட நெஞ்சைப் படைக்கும்படியான பாபத்தைப் பண்ணினேனென்று ஶப்தார்த்தம். நெஞ்சில்லாமையாலே அர்த்தந்தானுமில்லை யென்கிறார் (நெஞ்செனக்கில்லா வித்யாதி) இரண்டு

(க) வி·பு-ஙு எ-உ அ.

மூ —மேல்தோன்றிப்பூக்காள்! மேலுலகங்களின்மீதுபோய்
மேல்தோன்றுஞ்சோதி வேதமுதல்வர்வலங்கையின்
மேல்தோன்றுமாழியின் வெஞ்சுடர்போலச்சுடாது எம்மை
மாற்றோலைப்பட்டவர்கூட்டத்துவைத்துக்கொள்கிற்றிரே. (உ)

ப-ரை. மேல்தோன்றிப்பூக்காள் - செங்காந்தள் மலர்களே, மேலுலகங்களின்மீது போய் - அண்டங்களைக்கடந்து மேலேபோய். இங்குள்ள தேஜஸ்ஸுக்களெல்லாவற்றிலும், மேல்தோன்றும் - மேலாகத்தோன்றுகிற, சோதி - தேஜோமயமான பரமபதத்திலே வீற்றிருக்குமவராய், வேதமுதல்வர் - வேதங்களாலே முதல்வராகச்சொல்லப்படுகிற நாராயணனுடைய, வலங்கையின் மேல் - வலத்திருக்கையிலே, தோன்றும் - ப்ரகாசியாநிற்கிற, ஆழியின் - திருவாழியாழ்வானுடைய, வெம் - வெவ்விய-சுடர்போல - தேஜஸ்ஸைப்போல, சுடாது - வருத்தாமல், எம்மை, எங்களை, மாற்றோலைப்பட்டவர்கூட்டத்து - அடியார்கள் திரளின்நடுவே, வைத்துகொள்கிற்றிரே-வைக்கவல்லீரோவென்கிறாள்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (மேல்தோன்றி யித்யாதி) த்ருஷ்டிவிஷம்போலே கோடல் பூக்கள் பாதகமாகப்புக்கவாறே அவற்றுக்கு இறாய்த்து கண்ணை மேலே வைத்தாள்; அங்கே மேல்தோன்றிப்பூக்களாயக்கிடந்தது, அவற்றை நோக்கி (மேல்தோன்றிப்பூக்காள்) என்கிறாள். "அதுக்குத் தப்பினுரையும் அழிக்கக்கடவோம்" என்று அதுக்கு ஒரு பேரும் பெற்று நீங்கள் மேலே புக்குநிற்பதே! (க) "ബഹുസ്യാമ്" "பஹுஸ்யாம்" என்று "அவன் அநேகங்களை ஸ்ருஷ்டிக்கும்" என்று கேட்டிருந்தோம், நாட்டில் கோடல்பூக்களுமில்லையோ. தேவாதி பேதங்களுண்டாம்

மில்லாமைக்கு ஹேதுகர்மமென்கிறார் (நெஞ்சுக்காஶ்ரய மித்யாதி.) (ஆஶ்ரயமான கர்மம் - ஹேதுவான பாபம். (தானில்லையாய்த்து) என்றது - தன்னுடைய ஸ்த்ரீத்வ ஸ்வரூப மில்லையென்றாய், அதுண்டானால் வாய் திறக்கவொட்டாது, ஸ்த்ரீத்வ மில்லாமையாலே கூப்பிடுகிறாளென்றபடி. (க)

இரண்டாம்பாட்டு. (மேல்தோன்றி யித்யாதி) "மேல்தோன்றி"-காந்தள். (த்ருஷ்டிவிஷம்) - கண்ணுக்கு அஸஹ்யமாயிருக்கை. கார்க்கோடல் பூக்களோபாதி, நாங்களும் அவன் ஸ்ருஷ்டிக்க வந்தோம், எங்களை வெறுக்கவேண்டாவென்று கருத்து. "ബഹുസ്യാമ്" "பஹுஸ்யாம்" இத்யாதி வாக்யத்துக்கு கேட்டிருந்தோம் அப்படியே அநேகமா யிருந்திகோளென்றபடி மேல்தோன்றிப் பூக்களும் கோடல்பூக்களிலே ஒருஅவாந்தர

(க) தை-ப்ரு.

படியிறே ஸ்ருஷ்டிப்பது. (மேலுலகங்களித்யாதி) அண்டங்களை யும் ஆவரணஸப்தகத்தையும் கடந்து மேலேபோய். "அவ்யக்தமக்ஷரம்தம:" "அவ்யக்தமக்ஷாரம்தம:" என்றாப்போலே சொல்லு கிறவற்றுக்கு மேலேபோய்.

* மேல்தோன்றும் சோதியுண்டு (க) "அத்யர்க்காநலதீப்தம்தத்ஸ்தாநம்" "அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம்" என்றுசொல்லும்படி யிருக்கிற பரமபதத்திலே. (உ) "தமஸ:பரமோதாதா" "தமஸ:பரமோ தாதா" (ந) "தமஸஃபரஸ்தாத்" "தமஸ:பரஸ்தாத்" என்கிறபடியே- வேதைகஸமதிகம்யராயிருக்கிறவருடைய வலத்திருக்கையின்மே லேதோன்றுகிற திருவாழியின் வெவ்விய சுடர்போலச்சுடாதே.

இவ்வருகுண்டான ஆதித்யாதிகளுடைய தேஜஸ்ஸிற்காட் டில் இந்த்ராதிகளுடைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; அதிற் காட்டில் ப்ரஹ்மாதிகளுடைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; அதில் காரணத்வ ப்ரயுக்தமாய் வருமதாகையாலே மூல்ப்ரக்ருதியினு டைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; "அதுதான் தமஸ்ஸு" என் னும்படி பரமபதத்தில் புகா அதுக்கு ப்ரகாஶத்தைப்பண்ணும்; திவ்ய மங்கள விக்ரஹம் அதுக்கு ப்ரகாஶத்தைப்பண்ணும்; அதுக்குமேலேயிறே திருவாழியாழ்வான் தேஜஸ்ஸு.

(ஆழியின் வெஞ்சுடர்போலச்சுடாது) மஹாநஸாதிகளிலே அக்நிக்கும் தூமத்துக்கும் ஸாஹசர்யத்தைக்கண்டு பின்னையிறே பர்வதத்தில் அநுமிப்பது; அப்படியேயிங்குள்ளவற்றுக்கும் அவ்விபூதியிலுள்ளவற்றை த்ருஷ்டாந்தமாகச் சொல்லலாம்படி

---

மாகையாலே மேலேதோன்றுகிற பூக்களொழிய, (நாட்டில் கோடல் பூக் களும் இல்லையோவென்கிறாள்) என்றபடி. பூக்களையும் ஸ்ருஷ்டிக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (தேவாதிபேதங்களித்யாதி.)

பாதகத்வத்துக்கு த்ருஷ்டாந்தமாகச்சொல்லும்போது ஆதித்யாதிக ளைச்சொல்லாமல் திருவாழி யாழ்வானைச் சொல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (இவ்வருகுண்டான வித்யாதி.)

ப்ரத்யக்ஷமானத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லாதே பரோக்ஷத் திலே ஒன்றைச் சொல்லக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (மஹா நஸாதிகளித்யாதி) (விதேயமானபடி) விசதமானபடி. இவ்விடம் விதே யமன்றோவென்ன; அருளிச்செய்கிறார் (இவ்விடமித்யாதி.) விஶத

---

(க) பார-ஆர-கருக கக (உ) ரா-யு ககச-கடு. (ந) புருஷஸூ.

யாய்த்து—அவ்விடம் விதேயமானபடி. இவ்விடம் மேடாய் அவ்விடம் பள்ளமாய்த் தோற்றினபடி. ப்ரஸித்தத்திலேயிறே வ்யாப்திக்ரஹிப்பது. (க)"அயர்வறு மமரர்க ளதிபதி" என்று முற்பட நித்யவிபூதியைச்சொல்லி, பின்னை மூன்றும்பாட்டிலே யிறே லீலாவிபூத்யநுஸந்தாநம் பண்ணிற்று. (சுடாதெம்மை) அவன் உகவாதாரையிறே முடிப்பது; நீ உகந்தாரை முடியா நின்றாய். (உ)"அருளார்திருச்சக்கரம்" என்றும், (௩)"அருளாழி" என்றுமிறே உகப்பார்க்கிருப்பது.

(மாற்றித்யாதி) இதுக்குத்திருமலைநம்பி பணிக்கும்படி ;— "தான்பிரிவாலே நொந்தபடியாலே (ச)"ஜராமரணமோக்ஷாய" "ஜராமரணமோக்ஷாய" என்று, "ஆஸ்ரயிக்கும்திரளின் நடுவே பெண்ணைக் கொடுபோய்வைக்கவல்லையே என்கிறாள்" என்றருளிச்செய்வர். பகவதநுபவம் பண்ணுமதிலும் துःகநிவ்ருத்தி தேட்டமாகையாலே சொல்லுகிறாளென்று.

"கேவலர் தனித்தனியேயாய்த்தநுபவிப்பது. திரளாயிருக்கக்கூடாது" என்று எம்பார் அருளிச்செய்யும்படி. "மாற்றோலைப்பட்டவர் கூட்டமாகிறது - * அடியார்கள் குழாங்களாய், என்னை அத்திரளின் நடுவே கொடுபோய் வைக்கவல்லையே" என்கிறாளென்று, ஸம்ஸாரத்திலோலை மாற்றப்பட்டவர்கள். நம்

---

மானதுகொண்டு இங்குத்தைக்கு அவ்விடத்தி லதுத்ருஷ்டாந்தமாக வேணுமோவென்ன ; அருளிச்செய்கிறார் (ப்ரஸித்தத்திலேயிறே யித்யாதி.) (ப்ரஸித்தத்திலே) என்றது - ப்ரத்யக்ஷத்திலே யென்று தாத்பர்யம். இவ்விடத்தைப்பற்றவும் அவ்விட மண்ணிமையாகச் சொன்ன பேருண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (அயர்வறு மித்யாதி.)(அவன்)- திருவாழியாழ்வான். "மாற்றோலைப்பட்டவர்" - கேவலர். மாற்றுகை - நீங்குகை. (மாற்றோலை) - ஓலைமாறப்படுகை. கேவலர்க்கும் முக்தர்க்கும் ஒக்கும். திருமலைநம்பி நிர்வாஹத்துக்கு, "மாற்றோலைப்பட்டவர்" என்றது - பகவதநுபவத்துக்கு மாற்றோலைப்பட்டவ ரென்றபடியாய், கேவலர்கூட்ட மென்றபடி. அன்றிக்கே, ஸம்ஸாரத்திலே ஓலைமாற்றப் பட்டவரென்னவுமாம் அத்தைச் சொல்லலாமோவென்ன ; அருளிச்செய்

---

(க) தி-வாய்-க-க-க. (உ) திருவி-௬௬
(௩) தி வாய் க-ச-௬. (ச) கீ-எ-உ-௬

ரஹஸ்யத்திலும் அநுஸந்திப்பது ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாக வநுபவிக்கும் அநுபவத்தையிறே. இங்கே பகவதநுபவமுண்டா ளுலும் காதாசித்கமிறே. ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமாகப் பெறுமன்றிறே பரிபூர்ண கைங்கர்யத்தைப்பெறலாவது.

அங்ஙனன்றிக்கே, ஆப்பான்பணிக்கும்படி, ஆழ்வான் பணிக்கக் கேட்டிருக்கவுமாமிறே;—"அவன் கொடுவரச்சொன்னவர்களைத்தவிர்ந்து 'மாற்றோலைப்பட்டோம்' என்று அவர்கள் திரளிலே யென்னை வைக்கவல்லையே, என்கிறாள்" என்று. உ

---

-கிறார் (பகவதநுபவ மித்யாதி) அநுபவத்தையிட்டு நிரூபியாமல், "மாற்றோலைப்பட்டவர்" என்று-ஸம்ஸார நிவ்ருத்தியையிட்டு நிரூபிப்பானென்னென்ன ;அருளிச்செய்கிறார் (நம்ரஹஸ்யத்திலுமித்யாதி )உத்தரவாக்யத்தில், நமஸ்ஸப்தத்தாலே-ஸம்ஸார நிவ்ருத்தியையும், சதுர்த்தியாலே - அநுபவகைங்கர்யத்தையுமிறே அநுஸந்திப்பதென்றபடி. ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமாக வேணுமென்கிறதென்று. இங்கே அர்ச்சாவதாரத்திலே அநுபவமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (இங்கே பகவதித்யாதி.) (கேட்டுஇருக்கவமாமிறே) "ஶிஷ்யாசையாலே" இதிஶேஷ:-மூன்றும் பொருளுக்கு "மாற்றோலைப்பட்டு, அவர் கூட்டம்" என்று பதமாய், ஓலை மாறுடிக்கொடுவந்தோமென்றபடி என்று விவக்ஷித்துப் பொருளருளிச் செய்கிறார் (அவன் கொடுவர) என்று. (அவன்)-ஈஶ்வரன். ஓலைமாறுடுகையாவது -"ஒருத்தியை பாதிக்கவேணும், கொடுவாருங்கோள்" என்று ஓலை வரவிட்டால், வந்தவர்கள் அவளைவிட்டு இவளைக்கொடுபோய் முன்னே விட்டால், "இது என்றான் சொன்னவளெங்கே" என்று ஈஶ்வரன் கேட்டால், ஓலை மாறுடிஞேமென்று சொல்லுகை இது லோகஸாந்தரே. அதவா. (கொடுவரச் சொன்னவர்களை) என்றது - பாதிப்பதாகக் கொடுவரச் சொன்னவர்களை என்றபடி. (தவிர்ந்து) என்றது - நீங்கள் கொடு போகவேண்டாவென்று தவிர்ந்தென்றபடி. (மாற்றோலைப் பட்டோமென்று) அதாவது ;-நீங்கள் பாதிக்கைக்கு உறுப்பாகக் கொடுவந்த ஓலைக்கு மாறான ஓலையாவது-பாதிக்கவேண்டாவென்று ஓலை கொடுவந்தோமென்று சொல்லி என்றபடி.

அன்றிக்கே, ஈஶ்வரன் முன்னே கொடுவரச் சொன்னவர்களைக் கொடுபோகவேண்டாவென்று நீங்கள் நிஷேதித்து இவள் நமக்கு ஶத்ரு

அவ.—மூன்றாம்பாட்டு. (கோவையித்யாதி) மேலில் கண்ணை மாறி, பக்கத்திலே கண்ணை வைத்தாள்; அங்கே செடியிலே கோவைபடர்ந்து பழுத்துக்கிடந்தது; அத்தைப்பார்த்து வார்த்தை சொல்லுகிறாள். கார்க்கோடல், நிறத்துக்கு ஸ்மாரகமாய் நலிந்தது; மேல்தோன்றி, திருவாழிக்கு ஸ்மாரகமாய் நலிந்தது; கோவைப்பழம், திருவதரத்துக்கு ஸ்மாரகமாய் நலிகிறதாய்த்து.

மூ.—கோவைமணாட்டி! நீ உன்கொழுங்கனிகொண்டு எம்மை
ஆவிதொலைவியேல் வாயழகர்தம்மையஞ்சுதும்;
பாவியேன்தோன்றிப் பாம்பணையார்க்கும்தம்பாம்புபோல்
நாவுமிரண்டுளவாய்த்து நாணிலியேனுக்கே. (௩)

ப-ரை. கோவை - கோவைக்கொடியாகிற, மணாட்டி - ஸ்த்ரீயே, நீ—, உன் - உன்னுடைய, கொழும் - அழகிய, கனிகொண்டு - பழங்களாலே, எம்மை - எங்களுடைய, ஆவி - ப்ராணனை, தொலைவியேல் - போக்காதே கொள். வாயழகர் தம்மை - அழகிய திருவதரத்தையுடையவர் விஷயத்திலே, அஞ்சுதும்-பயப்படாநின்றோமென்ன, அதாவதென் என்ன, பாவியேன் - மஹாபாபியான நான், தோன்றி - பிறந்தபின்பு, நாண் இலியேனுக்கு - லஜ்ஜையில்லாதவளான என்விஷயத்திலே, பாம்பணையார்க்கு - திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய அழகிய மணவாளனுக்கு, தம் - தம்முடைய, பாம்புபோல் - பாம்புபோலே, நாவும் - நாக்கும், இரண்டு—, உளவாய்த்து - உண்டாயிற்று என்கிறாள்.

---

வென்று ஈஶ்வரனாலே ஓலையெழுதப்பட்டோமென்று அந்த ஶத்ருக்கள் கூட்டத்திலே வைக்கவல்லலையே யென்கிறாளென்றுமாம். இத்தால் - அவர்கள்நடுவே யிருக்குமதிலும் கொடிதாயிருக்கிறது நீங்கள் பாதிக்கிற படிஎன்று தாத்பர்யம். அங்ஙனுமன்றிக்கே, ஸர்வேஶ்வரன் தன்பக்கலிலே கொடுவரச்சொன்னவர்களை "வேண்டா" என்று தம்முடைய ஶத்ருக்களான ஶிஶுபாலாதிகள்நடுவே கொடுபோகச்சொல்லி ஓலையெழுதப்பட்டோமென்று அந்த ஶத்ருக்கள்நடுவே கொடுபோய்வைக்கவல்லலையே என்கிறாளென்றுமாம் இவைகளில் முந்தினதே ஸ்வரஸம். மூன்றாம் நிர்வாஹத்தில், மாற்றோலைப் பட்டோமென்றவர்கள் திரளாவது - யமலோகத்திலேபோய், ஓலைமாறப்பட்டுத் திரும்பி வந்தோமென்ற ஸம்ஸாரிகள் திரளிலே என்னுதல்; யமன் "இவனை என்கொண்டுவந்தீர்கோள்" என்று தூதரைக்கேட்டால், "மாற்றோலைப்பட்டோம்" என்ற தூதர் திரளிலே யென்னுதல் முடித்துவிடவல்லலையே என்றபடி. உ

வ்யா.—(கோவைமணாட்டி) கொடியாகையாலே ஸாபத்ந்யத்தாலே நலிந்தாப்போலே யிராநின்றது; மணமுடைமை சொல்லுகிறது. அது இங்குண்டோ பின்னையென்னில்; உபமேயத்தைப்பற்றச் சொல்லுகிறது. (க) "ஸர்வகந்தஃ, ஸர்வகந்தஃ" என்கிற வஸ்துவையிறே உபமேயமாகச் சொல்லுகிறது. (உ) "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ" என்று கேட்பதும் செய்தாளே. (நீ) கோடலும் மேற்றோன்றியுமே அமையாதோ?, ஒருதுற்றிலே கிடந்து நலிகைக்கென்றே பழுப்பதே!. (உன்) உனக்கு முன்னம் நலிவில்லையே. தன்னைத்தானே நலிந்துகொள்ளவேணுமென்பதில்லையிறே அதுக்கு. தன்னைத்தானறிந்ததாகில் "பிறர்க்கு நலிவு பண்ணக் கடவோமல்லோம்" என்று "கண்வட்டத்தினின்றும் கடக்க நிற்கவேண்டாவோ?" என்றிருக்கிறாள். (கொழுங்கனி கொண்டு) அதுக்குச் செவ்வியுண்டாயிருக்குமிறே. (எம்மை) இப்பாரிப்புக்கெல்லாம் இங்குவிஷயமுண்டோ?.

(ஆவி துலைவியேல்) தோற்புரையே நலிந்துவிடுகை யன்றிக்கே, உயிர்நிலையிலே நலியாநின்றது. கோடலும் மேல்தோன்றியும் அலைத்த ஆவியை நீ பொன்செய்யத் துலைக்கிறாய். "துலைவியேல்" என்றதுக்கு, "நான் துலைக்கிறதுண்டோ" என்ன, அதுக்கு வாயில்லையே.

---

மூன்றாம்பாட்டு. (கோவையித்யாதி) "மணாட்டி" என்றது - ஸ்த்ரீத்வமென்னுதல்; மணமுடைமையென்னுதல் மணாட்டியாவதென்னென்ன; அருளிச்செய்கிறார் (மணமுடைமை சொல்லுகிறது) என்று. அவன்றன்னை, "உன்னைக் கண்ணாடிப் புறத்திலுங் கண்டறியாமைய, கண்டால் பிரியாயே" யென்னுமாப்போலே, கொடியாகையாலே ஸ்த்ரீத்வ ஸாம்யத்தை விவக்ஷித்தருளிச் செய்கிறார் (உனக்கு முன்னமித்யாதி.) தன்வைலக்ஷண்யம் அறியாதோவென்ன (தன்னைத்தானித்யாதி) (இல்லையிறே அதுக்கு) ஆகையாலே, 'எம்மைமாலி துலைவியேல்" என்கிறாளென்று தாத்பர்யம். "கொழும்" என்ற விசேஷணத்துக்குத் தாத்பர்யம் (தன்னைத்தானறிந்ததாகில்) என்று. (தன்னைத்தானறிந்ததாகில்) - தன் வைலக்ஷண்யமறிந்ததாகிலென்றபடி. "கொழுங்கனி" என்று விசேஷிப்பானென்னென்ன (அதுக்கித்யாதி) அதுக்கு - திருவதாத்துக்கு.

---

(க) சாந்தோக்யே. (உ) ௭-௧.

(வாயழகர்தம்மை யஞ்சுதும்) கலக்கப்புக்காலும் அஞ்சி, நான் கண் செம்பளித்தபடியேகா ணிருப்பது. முன்பேயஞ்சிக்காண் நான் அதுக்கிருப்பது. "அஞ்சுதும்" என்றால் நீயஞ்சவேண்டா காண். (க) "ஸூஹ்ருதஃ" "மாஶுசஃ" என்று - என் கண்வட்டத்தினின்றும் கடக்கநிற்கவிறே யடுப்பது; அது செய்ததில்லை.

(பாவியேன் தோன்றி) இதனைக் காற்கட்டும்படி அவன் ஸ்வபாவம் அந்யதாகரித்தது என்னைத் தோற்றிக்கிறர். பெரியாழ்வாரும் ஸர்வேஶ்வரனுமாய் ரஹஸ்யங்களுண்டாய்ப் போருகிற காலங்களில் இவையெல்லா மில்லைகிறர். அப்பரிபாற்றங்களெல்லாம் குலைந்தது என்னைத்தோற்றிக்கிறர். (பாவியேன் தோன்றி - நாவுமிரண்டுள வாய்த்து) பெரியாழ்வார் காலத்தில் இரண்டு வார்த்தை சொல்ல வொண்ணுதாய்த்து அவனுக்கு. அதாவது - இரண்டு வார்த்தை சொல்லில் அவரைக்கிடையாதே. ஆகையால் ஒரு வார்த்தையேயாய்த்து அவர்காலத்திலுள்ளது. (உ) "ஒன்றேயுரைப்பான் ஒருசொல்லே சொல்லுவான்" என்று ஐபரை யிடுவித்துக் கவிபாடுவித்துக் கொண்ட தித்தனையிறே.

---

(துலைவியேல்) "மர்மத்திலே என்னுதல்; நொந்திருக்கிற ஆவியென்னுதல்" என்று தாத்பர்யம். இவற்றை வாக்யத்வயத்தாலே அருளிச்செய்கிறார் (தோற்புரையே யித்யாதி.) ஆத்மாவை நலிப்பியாதேகொள்ளென்ற ஸப்தார்த்தம். பலிதம் (கோடலுமித்யாதி) கொழுமை - அழகு ஆவி-உயிர். துலைவு - மாள்வு. "வாயில்லை" என்றது - அசேதநத்வாத் என்னுதல்; பாதகத்வ முண்டாகையாலே யென்னுதல்

உபமாநமானபழத்தை உபமேயமாகவிவக்ஷித்து அருளிச்செய்கிறார் (வாயழகரித்யாதி) (கண்செம்பளித்தபடியே) என்றது-போக்யதாப்ரகர்ஷத்தாலே வாய்புகுநீராகையாலேயென்றபடி. அன்றிக்கே, விஶ்லேஷஸமயத்தில் இதுக்கு ஸ்மாரகமாய், பதார்த்தங்கள் நலியுமென்னுமத்தைப் பற்றவாதல்

அவர்காலத்திலேதான் ஒருவார்த்தையா யிருக்குமதுண்டே என்ன; அருளிச்செய்கிறார் (ஒன்றே யித்யாதி. அதாவது - எனக்கு இப்போது பலியாமை யாலே அதுவும் வலியக்கவி பாடுவித்துக் கொண்டானுமித்தனை என்றபடி. அன்றிக்கே, என்னைத் தோன்றி பெரியாழ்வார் காலத்திலும் வார்த்தை யிரண்டென்று தாத்பர்யாந்தரம் விவக்ஷித்து,

---

(க) கி-க௮-௩௩ (உ) பெரி-தி-உ.

நடுவே "ஜீவிக்கிலும் ஜீவிக்கிறாள், முடியிலும் முடிகிறாள் - நாம் வேண்டிற்றுச் சொன்னால்" என்றிருக்கலாவது எனக்கிறே. (பாவியேன்தோன்றி) (க) "[Grantha]" "ஸங்கேமத பாக்ய ஸம்க்ஷயாத்" (உ) "[Grantha]" "மமைவதுஷ்க்ருதம் கிஞ்சித்" (௩) "[Grantha]" "மத்பாபமேவ" என்னுமாப் போலே சொல்லுகிறாள்.

(பாம்பணையார்க்கும்) இவனும் இரண்டுவார்த்தை சொல்லுவானாய்ச் சொன்னனல்லன், நடுவே பள்ளிக்கோழமை பலித்தது; அதுவே யன்றிக்கே. ஓதிற்றும் ஒருகிடையிலேயிறே. (பாம்பணையார்க்கும்) தம்முடம்போடே யணையவென்றாசைப்பட்டார்க்கு உடம்பு கொடுத்துப் போருமவர்க்கு. (தம்பாம்புபோல்) அவனோடுண்டான ரோஷம் திருவநந்தாழ்வானளவும்செல்ல அசலிட்டு, தன்படுக்கையா யிருக்கச் செய்தேயும் "தம்பாம்பு" என்று அவனோடே சேர்த்துச்சொல்லுகிறாள். இப்போகத்தாலேயிறே நம்மைமறந்துதரிக்க வல்லானாய்த் தென்னுமத்காலே; பிறரைக்கெடுக்க நினைத்தால் சேர்த்துச்சொல்லுவது அவனோடேயாய்த்து. (ச)"பாஞ்ச சன்னியத்தைப் பற்பநாபனோடும் வாய்ந்த பெருஞ்சுற்றம்" என்று - ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானை அவனோடே சேர்த்துச்சொன்னாப்போலே, இவனையும் அவனோடே சேர்த்துச் சொல்லுகிறாள். தன்னோடு உறவறுக்கையிறே அவனைக்கெடுக்

ஆனால் "அவரேயன்றோ ஸத்யவாதி" என்றது என்ன; அருளிச்செய்கிறார் (ஒன்றே என்றுமாம். முந்தின அர்த்தத்திலே (ஜீவிக்கிலுமித்யாதி) ஆனால் இதுவாஸ்தவமான ஆகாரமோ வென்ன; அருளிச் செய்கிறார் ([Grantha], ஸங்கே இத்யாதி) அதாவது-அத்தலைக்கு ஒருகுறை சொல்லவொண்ணாதென்று தன்மேலே ஏறிட்டுச் சொல்லுகிறாளென்றபடி.

(பள்ளிவாசித்ததும்) - அத்யயநம் பண்ணிற்றம் அவதாரங்களிலே கண்டுகொள்வது. (ஓதிற்றும் ஒருகிடையிலே) திருவநந்தாழ்வனோட்டைச்சேர்த்தியாலே இரண்டு வார்த்தை சொன்னானென்னுதல்; சொன்னது தான் கண்வளர்ந்த அவஸ்தையிலே யென்னுதல். தாத்பர்யாந்தரம் (தம்முடம்பித்யாதி.) "தம்பாம்பு" என்று வெறுக்கைக்கு ஹேத்வந்தரம் (இப்போகத்தாலே) என்று. பலிதம் (பிறரை இத்யாதி) (தன்னோடு உறவறுக்கை) என்கைக்கு அப்படி தன்னதாயிருக்குமோ வென்னவருளிச்

(க) ரா-ஸு உகூ-க௩. (உ) ரா-ஸு ௩அ-சஎ.
(௩) (ச) எ-கக.

கையாவது, படுக்கைதன்னதே. தனக்கு விஷயமாகவிட்டத்தையும் படுக்கைப்பற்றென்றிறே சொல்லுவது. பெரியாழ்வாரை அவனோடே சேர்த்துச்சொன்னப்போலேயிறே - இவளையும் அவனோடே சேர்த்துச் சொல்லுகையாவது.

(நாவுமிரண்டுளவாய்த்து) இரண்டு நாவுண்டானால் பிறக்குங் கார்யம் பிறக்கையாலே, "நாவுமிரண்டுளவாய்த்து" என்கிறாள். இரண்டு நாவுடையார்க் கல்லது இரண்டு வார்த்தை சொல்ல வொண்ணாதென்றிருக்கிறாள். (க) "ராமோ த்விர் நாபி பாஷதே" "ராமோத் விர்நாபி பாஷதே" (உ) "ந மே மோகம் வசோ பவேத்" "நமேமோகம் வசோபவேத்" என்றவை யெல்லாம் தமக்கன்றாய் விட்டது. 'நின்னைப்பிரியேன், பிரியிலாற்றேன்' என்று சொல்லிவைத்துப் பிரிந்தது தனக்கிறே. இப்போதும் அவை யெல்லாம் ஒருவார்த்தையாயிராநின்றதிறே நாட்டார்க்கு. (நாணிலியேனுக்கே) அவன் ஸ்வரூபம் அந்யதாபவிக்குங்காட்டில் என் ஸ்வரூபம் அந்யதாபவிக்கவேணுமோ?. அவன் ரக்ஷகத்வத்திலே சிறிது குறைநிற்குங் காட்டில் அத்தை மறக்கையன்றிக்கே ஜீவிக்கைக் குறுப்பாக அவன் குணஹாநியை விளக்கும்படி லஜ்ஜாஹீநையாகவேணுமோ நான். தம்மைப்பேணாதே அக்கலைக்குவரும் அவத்யத்தை ப்பரிஹரித்து, அவனைப்பேணும் பெரியாழ்வார் வயிற்றிற்பிறப்புக்கும் இதுக்கும் என்னசேர்த்தியுண்டு. ௩

செய்கிறார் (படுக்கை தன்னதே) என்று தன்னதென்னுமத்தை இசைவிக்கிறார் (தனக்கித்யாதி) (விஷயம்)-ஸ்த்ரீ தநமாய் விட்டதேஶம். ரீத்யந்தரேண தன்னதென்னுமத்தைச் சொல்லுகிறாள் (பெரியாழ்வாரையித்யாதி.) "தங்கள் தேவர்" என்று - அவனோடே சேர்க்கை.

"நாவமிரண்டுளவாய்த்து" என்கைக்கு இரண்டு நாவுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் இரண்டு நாவுண்டானாலித்யாதி) (பிறக்கும் கார்யமவது) - இரண்டு வார்த்தை. இரண்டு நாவுண்டானாலல்லது இரண்டு வார்த்தை சொல்லவொண்ணாதோ வென்ன; அருளிச்செய்கிறார் (இரண்டு நாவுடையார்க்கல்லதித்யாதி.) "ராமோ த்விர் நாபி பாஷதே" 'ராமோத்விர் நாபிபாஷதே" என்றானேயென்ன (ராமோத்விரித்யாதி.) (தமக்கன்றாய் விட்டது) என்கிறவ்யதிரேகேண பலித்தவர்த்தம் (இப்போது மித்யாதி.)

(க) ரா-அயோ-௧அ ௩0. (உ) பார-

அவ;—நாலாம்பாட்டு. கோவைப் பழமானது திருவதாக்துக்கு ஸ்மாரகமாய் பாதகமாகப் புக்கவாறே, அதுக்கு அவ்வருகாகக் கண்ணைவைத்தாள்: அங்கே முல்லையானது நன்றாகப் பூத்துக்கிடந்தது; (க) "உள்ளே வெண்பலிலகு சுடரிலகு" என்னக்கடவதிறே. அது ஸ்மிதத்துக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி சொல்லுகிறது.

ஙு—முல்லைப்பிராட்டி! நீஉன்முறுவல்கள்கொண்டு எம்மை
அல்லல்விளையேல் ஆழி நங்காய்! உன்னடைக்கலம்
கொல்லையரக்கியைமூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும்பொய்யானால் நானும்பிறந்தமைபொய்யன்றே. (ச)

ப-ரை. முல்லை - முல்லைக்கொடியாகிற, பிராட்டி - ஸ்வாமிநியாய், ஆழி கம்பீரஸ்வபாவையான, நங்காய் - பெண்ணே, நீ— உன் - உன்னுடைய, முறுவல்கள்கொண்டு - புன்னகைகொண்டு, உன் அடைக்கலம்- உன்னடைக்கலமான, எம்மை - எங்களை அல்லல் விளைவியேல்-வருத்தாதேகொள்; கொல்லை - வரம்பழிந்த செய்கையையுடைய அரக்கியை- ராக்ஷஸியான சூர்ப்பணகியுடைய, மூக்கு - மூக்கை,அரிந்திட்ட - இளைய பெருமாளைக்கொண்டு அறுத்துப்போகட்ட, குமரனார் - யுவாவான சக்ரவர்த்தித்திருமகனாருடைய, சொல்லும்—. பொய்யானால் - பொய்யாகிவிடுமானால், நானும்—, பிறந்தமை-பிறந்தது, பொய்யன்றே - பொய்யன்றோ என்கிறாள்.

வ்யா.—(முல்லைப்பிராட்டி) வழிபறிக்குமவனைக் கண்டால், "பிரான்" என்னுமாப்போலே. (நீ) ஒருகோவையிலே யகப்பட்டுத் தப்பி யுள்ளே புகுந்தாரையும் நலியக்கடவையோ? அக்கோவையைத் தப்பினோமிறே யென்றிருந்தோம். திரியவும் நீ

தாமாய் விடுகைதம் நினைவிலே தமக்குண்டென்றிருக்கிறாரத்தனை. இங்கு பலிக்கக் கண்டதில்லை யென்றபடி. இவளுக்கு பலிதத தேசென்ன; அருளிச்செய்கிறார் (நின்னைப் பிரியேனித்யாதி.) இவளுக்கு இப்படியானால் அவன் வார்த்தை நாட்டார் கேட்டபடி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (இப்போதுமித்யாதி.) அவன் வார்த்தை தனக்கு பேதித்ததொழிய நாட்டார்க்கும் அவனுக்கும் ஏகரூபமென்றபடி. லஜ்ஜை யின்றிக்கே பதறினால் விரோதமேதென்ன; அருளிச்செய்கிறார் (தம்மைப்பேணாதே இத்யாதி.) ரு

(க) யாகவதி-அ -.-அ-

புகுந்து நலியாநிற்பதே!. நொந்தாரை "ஐயோ!" என்கை யன்றிக்கே, நலிகைக் கொருகொடியா யிருந்தாய் நீயும். (உன் முறுவல்கள் கொண்டு) உன் பூவில் விகாஸத்தைக் கொண்டு (எம்மை) முன்பே முடிந்தாரையும் முடிக்கத் தேடுவர்களோ?

(அல்லல்விளைவியேல்) திருவதாரத்துக்குள்ளான திரு முத்து நிரைக்கு ஸ்மாரகமாய், இது நலிகிற நலிவு பேச்சுக்கு நிலமல்லாமையாலே "அல்லல்" என்கிறாளாய்த்து. அவனுடைய ஸ்மிதத்தை ஸ்மரிப்பித்து என்னைத் தடுமாறப் பண்ணாதேகொள். (ஆழி நங்காய்) மேலே கடலைச்சொல்லுகிறதொரு பாட்டுண்டாகையாலே, முல்லைதன்னையே சொல்லுகிறது. காம்பீர்யத்தாலும் நிறைவுடைமையாலும் இரந்தார் காரியஞ்செய்யவேண்டாவோ? வட்டமாகப்பூத்த பூக்களநும் மதுவுமாய், ஸந்நிவேஸந்தானே ப்ரியமாயிருக்குமிறே (உன்னடைக்கலம்)(க)"𑌅𑌰𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌵𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾" "அரிঃப்ராணாந்பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய꞉க்ருதாத்மநா" என்னக்கடவதிறே. ஸாத்ரவம் மாறாதே செல்லச்செய்தேயும் "ஸரணம்" என்கிற வுக்திபுண்டாய் அது செவிப்பட்டால் சேதநாசேதந விபாகமற இரங்கவேண்டியிருக்கும் தன்வாஸநையாலே சொல்லுகிறாள்.

(கொல்லையரக்கியை) வரம்பழிந்த செயலையுடையவள். மர்யாதையைத் தப்பி நின்றவளிறே. பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு பெருமாளைப்பற்ற ப்ராப்தமாயிருக்க, அவளோடே மலை

---

நாலாம்பாட்டு. (முல்லை இத்யாதி) திருவதாரத்துக்குப்பின்பு திருமுத்து அநபாய்யமென்னுமத்தை யருளிச்செய்கிறார் (உள்ளே வெண்பவித்யாதி) பிரானேயென்னுமாப்போலே, "பிராட்டி" என்று உபசாரம். (கோவை)-சாடு; கூட்டம-த்வநி. கொடி - சாடு. கூறை - த்வநி. 'ஆழி" என்று காம்பீர்யமாதல்; வட்டமாதல். காம்பீர்யமும் நிறமுமேதென்ன; அருளிச்செய்கிறார் (வட்டமாக வித்யாதி.) "நங்காய்" என்றதுக் கர்த்தம் (நிறைவுடைமையாலும்) என்று. "உடைக்கலம்" என்றால் கார்யமாமோ வென்ன; அருளிச்செய்கிறார் (𑌅𑌰𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 அரிঃப்ராணாநித்யாதி) ஸத்ருவமாய் அசேதனமுமானது ரக்ஷிக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸாத்ரவமித்யாதி)

---

(க) ரா-யு-கஅ-உஅ.

ந்து பெறப்பார்த்தவளை. "இவளையிறே இவனுடைய அநுபவ
த்துக்குத் தண்ணீர்த்துரும்பு" என்று அவள்மேலே விழுந்தாளா
த்து. (மூக்கரிந்திட்ட) தமக்கு அநந்யார்ஹரா யிருப்பாரோடே
டான ஸம்ஶ்லேஷத்துக்கு விரோதிகளாய் வருவாரை யழிய
செய்யுமவர்கிடீர். (குமரனார்) நோவுபட்டவள் (க) "[illegible]
[illegible]" "தருணௌ ரூபஸம்பந்நௌ" என்று கூப்பிடும்படி யா
பருவம் படைத்தவர். தான்பட்ட பரிபவத்தை முறைப்படச்சொ
றவளிறே. "[illegible]" "தருணௌ" என்கிறாள் அப்பருவத்திலே
துவக்குப்பட்டபடியாலே. தான்பட்ட நலிவை ஸம்போக மத்ய
திலே பிறந்த போக விஹ்நத்தோபாதியாக நினைத்திருந்தாளா
த்து; இல்லையாகில் பருவத்தைப் பேசக்கூடாதிறே.

(சொல்லும்பொய்யானால்) ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ விரோதி
களைப் போக்குமிடத்தில் அர்த்தக்ரியாகாரியாம்படி பண்ணித் தலை
கட்டுமவர், இங்கு உக்தியையும் தலைக்கட்டுகிறிலர்; தம்மை ஆ
ஶ்ரயித்தவர்கள் விரோதியைப் போக்கக்கடவவர், தம்மை
அப்போது நியமிக்கமாட்டுகிறிலர். அவ்வார்த்தை பொய்யா
ன்று "பொய்யானால்" என்கிறாளல்லள், அதுக்கு விஷயம் நா
கையாலே தப்பிலும் தப்புமென்கிறாள். (நானும் பிறந்தமை
பொய்யன்றே) இது வ்யபிசரித்தாலும் வ்யபிசரியாதென்று ந
நினைத்திருந்தது பெரியாழ்வார்வயிற்றில் பிறப்பையிறே. அத
கும் இலக்கு நாமானபின்பு, இனி, அதுதான் நமக்கு கார்யகர

மர்யாதை தப்பவந்தால் அங்கீகரியாமை யொழிய ஹிம்ஸிக்கலாமோ
வென்ன; அருளிச்செய்கிறார் (இவளையிறே யித்யாதி) பருவத்தி
தான் ஈடுபட்டாலும் வைரூப்யத்தைப் பண்ணினீரோவென்ன; அருளி
செய்கிறார் (தான் பட்ட வித்யாதி.) நோவு பட்டால் "[illegible]
தருணௌ" என்னக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (தா
பட்டவித்யாதி.) கொல்லை - வரம்பில்லாமை.

"கொல்லையரக்கியை" இத்யாதியையுட்கொண்டு தாத்பர்யம் (ஆ
ஶ்ரித ஸம்ஶ்லேஷேத்யாதி.) (அப்போது நியமிக்கமாட்டுகிறிலர்) என்ற
இப்போது என்கார்யம்செய்யத் திருவுள்ளமில்லாவிட்டால் "[illegible]
நத்யஜேயம்" என்கிற அப்போது தம்மையமைத்து, அவ்வார்த்தை செ
லாகிருக்கமாட்டிற்றிலனென்றபடி. யதிப்ரஸக்தத்துக்கருளிச் செய்கி

(க) ரா·ஆ-க௯-க௮.

ப்புகாநின்றதோ? பெரியாழ்வாரோட்டை ஸம்பந்தம் பசுவல்லாபத்தோடே நம்மை ஸத்திப்பித்துவிடுமென்றிருந்தோம்; இனி அதுவும் தப்பிற்றிறே. "பொய்யன்றே" என்றது - பொய்யாயிற்றேயென்கை. பூதார்த்தத்தோடு பவிஷ்யதார்த்தத்தோடு வாசியென்? இப்போது கார்யகரமாகாவிட்டால். ... ச

அவ.—அஞ்சாம்பாட்டு. முல்லைப்பூவானது கண்ணுக்கிலக்காய் நின்று பாதகமாகப்புக்கவாறே, அங்கு நின்றும் முகத்தை மாறவைத்துக் கண்ணைப்புதைத்தாள்; செவிபுதைக்க வறியாமையாலே யகப்பட்டாள்.

மூ.—பாடுங்குயில்காள்! ஈதென்னபாடல்! நல்வேங்கட
நாடர்நமக்கொருவாழ்வுதந்தால் வந்துபாடுமின்
ஆடுங்கருளக்கொடியுடையார் வந்தருள்செய்து
கூடுவாராயிடில் கூவிநும்பாட்டுக்கள்கேட்டுமே. (ரு)

ப-ரை. பாடும் - செவிக்கு இனிதாகப்பாடாநின்றுள்ள, குயில்காள் - குயில்களே! ஈது - இது, என்னபாடல் - என்னப்பாட்டு, நல்-விலக்ஷணமான, வேங்கடம் நாடர் - திருமலையை வாஸஸ்தாநமாகவுடையவர் நமக்கு— ஒருவாழ்வு - உங்கள் பாட்டுக்கேட்டுக் களிக்கும்படியான ஒரு வாழ்ச்சியை, தந்தால் - கொடுப்பாரேயானால், வந்து - நீங்கள் என்னிடத்தே வந்து, பாடுமின் - பாடுங்கோள்; ஆடும் - ஆடாநின்றுள்ள. கருளக்கொடியுடையார் - கருடத்வஜத்தை யுடையவர், வந்து—, அருள்செய்து-க்ருபைபண்ணி, கூடுவாராயிடில் - ஸம்ஶ்லேஷிப்பரேயானால், கூவி - உங்களை வரவழைத்து, நும் - உங்களுடைய, பாட்டுகள் - பாட்டுகளை, கேட்டும் - கேட்போமென்கிறாள்.

வ்யா.—(பாடுங்குயில்காளீதென்னபாடல்) ஸம்ஶ்லேஷ ஸமயத்திலும் உங்கள்பாட்டுக்கேட்டு அறியுதோமிறே; இன்றுதுடங்கிப் பாடுகிறிகோளன்றே; என்றுமொக்கப் பாடிப்போராநிற்கச் செய்தே செவிவழியே நெருப்பைச சொரிந்தாப்போலே, இற்றைக்கு உதவ இதொருபாட்டு எங்கே தேடினிகோள். (பாடும்

(அவ்வார்த்தை யித்யாதி) முன்னும் அவரை யிட்டுக்கலந்து. மேலும் அவரையிட்டுக் கலப்பானாயிருக்க "பொய்யாம்" என்பானேன்னென்ன அருளிச்செய்கிறார் (பூதார்த்ததோடித்யாதி) (பூதார்த்தம்)-பகவதுக்தி (பவிஷ்யதார்த்தம்) - பெரியாழ்வாரோட்டை ஸம்பந்தம். ச

(குயில்காள்) (௧) "ஜஹுராக்ஷஸசேஷ்டித:" "நதுராக்ஷஸ சேஷ்டித:" என்கைக்கு ஒருவரைப்பெற்றிலோமீ!. (ஈதென்னபாடல்) இக் காலத்திலே பாடுவதே!; இப்பாட்டைப்பாடுவதே!. இரண் டருகும் நெருப்புப்பற்றி எரியாநிற்கச்செய்தே நடுவேயிருந்து சாந்து பூசுவாரைப்போலே யிருந்து பாட்டுக்கேட்கும் தசையோ என்தசை. நெருப்புக்கிடந்தவிடத்தே சுடுமாப்போலே அவற்றி னுடைய ஆஸ்ரயத்தையும் அழிக்குமென்றிருக்கிறாள். கெடுவி காள்!, உங்களுக்குச்செவியில்லையோ?

(நல்வேங்கடமித்யாதி) ஆற்றுப்பெருக்கில் முன்னே சிறை யாறுபடுமாப்போலே, அவன் வரவுக்குறுப்பான நற்குறிகள் உண் டாயிராநின்றன; அதுபலித்தால் வந்து பாடப்பாரிகோள். ஆஸ்ரி தர்க்கு அருமைப்படவேண்டாதபடி வந்து நிற்கிறவராய்த்து-பர மபதம் கலவிருக்கையாயிருக்க, அத்தைவிட்டுத் திருமலையிலே வந்து முகங்காட்டினார்; ஸ்ரீவில்லிபுத்தூரிலே போலே யிருந்தது

அஞ்சாபாட்டு. (பாடுமித்யாதி) "பாடும்" என்று - ஸாமாந்யமா யிருக்கையைக்கொண்டு தாத்பரியமருளிச் செய்கிறார் (ஸம்ப்ஸலேஷேத் யாதி). (உதவ)கொடுக்க என்று வ்யங்க்யம். பஹுவசனத்தைப்பற்றவருளிச் செய்கிறார் (ஜஹுராக்ஷஸ - நதுராக்ஷஸேத்யாதி) லங்கையிலே விபீஷணன் ஒருவனுண்டானாப்போலே, ஒருகுயிலாகிலும் பாடாதிருக்கக்கண்டிலோமீ! என்றபடி. "ஈது" என்றது-காலபரமாதல், பாட்டுக்கு விஸேஷணமாதல். பாடினால் குறையேதென்ன (இரண்டருகு மித்யாதி) (நெருப்புப்பற்றி எரிகை) கீழில்பாட்டு. மேலில்பாட்டு - ஸ்மாரக பதார்த்தம் டாதிக்கை. "ஈதென்னபாடல்" என்று அஸஹ்யத்தோற்றச் சொல்லுகைக்கு அவற் றுக்கு பாதகமாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (நெருப்பித்யாதி)

இப்போது அஸஹ்யமானால் எப்போது பாடுவது என்ன; அருளிச் செய்கிறார் (ஆற்றுப்பெருக்கி லித்யாதி) (வரவுக்குறுப்பான நற்குறிகள்) என்றது-"கருளக்கொடியுடையார்" என்றத்தைப்பற்ற. "ஆடுங்கருளக் கொடியுடையார்" என்று மேலே பரமபதநாதனைச் சொல்லுகையாலே, அவன் ஸ்ரீவில்லிபுத்தூரிலே வந்து தன்னோடே கலக்கைக்குத் திருமலை யில் நிலை சிறையாறு ஸ்தாநம்.

"நல்வேங்கடநாடர்" என்றவிடத்தில் நன்மையைப்பற்ற வருளிச் செய்கிறார் (ஆஸ்ரிதர்க்கித்யாதி). "ஆடும்" என்றது - களிக்கையாதல்;

(௧) ரா - ஆ - ௧௭ - உ௪.

பயணம், (நமக்கொரு வாழ்வு தந்தால் வந்து பாடுமின்). உங்கள் பாட்டுக் கேட்கைக்குச் செவியுண்டானால் வந்து பாடுங்கோள். இப்போது இவள்கரணங்கள் ஸ்வஸ்வவிஷயங்களை க்ரஹிக்கமாட்டாதேயிறேகிடக்கிறது; (க) "என்னைம்புலனுமெழிலுங்கொண்டு" என்கிறபடியே. (வந்து பாடுமின்) இப்போது உங்கள் ஸந்நிதி எனக்கு அஸஹ்யமாயிராநின்றது, போங்கோளென்றபடி. உங்கள் ஸந்நிதி அபேக்ஷிதமாயிருப்பதும் ஒருபோதுண்டிறே, அப்போது வந்து பாடுங்கோள்.

(ஆடும் கருளக்கொடி) தாம்வருவதற்குமுன்னே தம்வரவுக்கு ஸூசகமான பரிகாரத்தையுடையவர். அலாபத்தாலே துடிக்கைக்கென்ன ஒரு விபூதியைக் கண்டுவிட்டாப்போலே, லாபத்தாலே களிக்கைக்கு ஒரு விபூதியைக் கண்டுவிட்டார். விடாயர் இருந்தவிடத்தே சாய்கரகத்தைக் கொடுவந்து சாய்ப்பாரைப்போலே, ஆசைப்பட்டாரிருந்தவிடத்தே கொடுவந்து சாய்க்கும்பரிகாரத்தையுடையவர். (வந்தருள்செய்து கூடுவாராயிடில்) கூடவேணுமென்றிருக்கிறவோபாதி இங்ஙனேயுமொரு நிபந்திவேணுமாய்த்து-இவளுக்கு. தான் அவனிருந்தவிடத்தே சென்று தன்னாற்றாமையை ஆவிஷ்கரித்துப் பெறும்பேறு காலன்கொண்டு மோதிரமிடு மோபாதியாகவாய்த்து நினைத்திருப்பது. அத்தலையாலேவந்து கூடவும் வேணும்; தன்னாற்றாமை தோற்றவும்வந்துகூடவும்வேணும். (உ) "తానహం ద్విషతః క్రూరాన్ సంసారేషు నరాధమాన్ । క్షిపామి" "தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாமி" என்னவேண்டும்படியிருக்கும் என்வழியாலே பெறுகையன்றிக்கே (ஙு) "దదామి బుద్ధియోగం తమ్" "ததாமிபுத்தியோகந்தம்" என்னும் அவன்வழியாலே பெறுகவேணும்.

---

ஸஞ்சரிக்கையாதல். தான் துடிக்கையாலே விபூதியாகத்துடிக்கிறதென்கிறான். (நியா யாவது) அவன் தானே வருகையும், வருமிடத்தில் ஆற்றாமையோடே வருகையும். இவள் தானே போனால் விரோதமேதென்ன வருளிச்செய்கிறார் (தான் அவனித்யாதி.) "அருள்செய்து" என்றதுக்குத் தாத்பர்யம் (அத்தலையாலே யித்யாதி.) "வந்து" என்றதுக்குத் தாத்பர்யமாம் (தன்னாற்றாமையித்யாதி.)

---

(க) தி மொ-எ-ரு-க. (உ) கீ-கசு-ககூ. (ஙு) கீ-க0-க0.

"ஶிஶுபாலனும் எம்பெருமானைப்பெற்றானிறே" என்றார்களாய் ஆளவந்தார் கோஷ்டியிலே, "அவன் பெற்றத்தைப் பேறாகச் சொல்லவொண்ணாது, ருசிமுன்னாகப் பெறும்பேறுப்த்துப் பேறுவது; அவனிருக்கில் நாடழியுமென்று கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றி யெறிந்தா னத்தனைகாண்" என்றாராம். 'பெரியதேவப்பிள்ளை" என்றுபட்டர் ஸ்ரீபாதத்திலேவர்த்திப்பானொருவனுண்டு, அவன் அகத்திலுள்ளாரெல்லாரையும் அடர்த்து வார்த்தை சொல்லிக்கொண்டு போரும்; அவன் கிழக்கே கார்யமுண்டாய்ப் போனவளவிலே; நஞ்ஜீயர், "அவன் போனபடியாலே அகத்திலுள்ளவர்கள் சிலநாளைக்குப் பிழைத்தார்களிறே" என்றாராம். அத்தைக்கேட்டருளி, "நம்மோடே யொருஸம்பந்தத்தைச் சொல்லி நாட்டை ஹிம்ஸிக்குமதில் நம்மைத் தேய்த்துத் தின்றாகிலும் இங்கே கிடக்கை யழகியதன்றோ?" என்றருளிச்செய்தார்.

ப்ரீதிகாரிதமாக அஶேஷாவஸ்தைகளுக்கும் உசிதமான கைங்கர்யத்தைப் பெறுமன்றிறே இதுபேறுவது. "அவனே உபாயம்" என்று அத்யவஸித்து, சரணம்புகச் செய்தேயும் பரமபக்தி பர்யந்தமாக ப்ரார்த்தித்தாரிறே; கைங்கர்யம் ரஸிக்கைக்காக. பரபக்தி தொடங்கி பரமபக்திபர்யந்தமாக நடுவுபிறக்கிறவையடைய ப்ராப்யாந்தர்க்கதமாகிறதிறே இவர்க்கு.

---

"ஸாபராதனான தன்வழியாலே பெற்றபேறு பேறன்று" என்னுமதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்யமருளிச் செய்கிறார் (ஶிஶுபாலனுமித்யாதி.) நாடழியாமலுள்ளே பொகட்டு வைத்ததுக்கு ஸம்வாதமாக வருளிச்செய்கிறார் (பெரிய தேவப்பிள்ளையித்யாதி.)

(ருசிமுன்னாக) என்றத்தைவிவரிக்கிறார் (ப்ரீதிகாரிதமித்யாதி) (இது) மோக்ஷம். இவனுக்குஉத்தேஶ்யம் கைங்கர்யமாய், தத்ஸித்த்யர்த்தமாக ஈஶ்வரனை உபாயத்வேந அத்யவஸித்திருந்தால் ஈஶ்வரனே தத்ஸித்தியைப் பண்ணிக்கொடுக்குமே, ருசிவேணுமென்கிற நிர்ப்பந்தமென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவனே யித்யாதி) பக்தியை அபேக்ஷித்தால் உபாயமாகாதோவென்ன; அருளிச்செய்கிறார் (பரபக்தி யித்யாதி) (ப்ரார்த்தித்தாரிறே) "பாஷ்யகாரர்" என்றபடி.

ஓரதிகாரிக்கு உபாயத்தில் தலையாடியாயிருக்கும்; ஓரதிகாரிக்கு ப்ராப்யத்தி லுபக்ரமமாயிருக்கும். (கூவி) உங்கள் பாட்டுக் கேட்கை யபேக்ஷிதமாயிருப்பதொருபோ துண்டிறே, அப்போதழைத்துக் கேட்கிறோம். (பாட்டுக்கள்) ஶிக்ஷாபலத்தாலுள்ளவையும், நீங்கள் கைவந்து பாடுமதெல்லாம் செவிதாழ்த்துக் கேட்டுத் தருகிறோம். ரு

மூ.—கணமாமயில்காள்! கண்ணபிரான்திருக்கோலம்போன்று
அணிமாநடம்பயின்றுடுகின்றீர்க்கு அடிவீழ்கின்றேன்;
பணமாடரவணைப் பற்பலகாலமும்பள்ளிகொள்
மணவாளர் நம்மைவைத்த பரிசிதுகாண்மினே. (சு)

ப-ரை. கணம் - திரளாய், மா - நினைத்தது முடிக்கவல்ல பெருமையை யுடையீரான, மயில்காள் - மயில்களே, கண்ணபிரான் - உபகாரகனான, க்ருஷ்ணனுடைய. திரு - அழகிய, கோலம்போன்று - ஒப்பனையை யுடையராய்க்கொண்டு, அணி - கண்ணுக்கு அழகிதாய், மா - ஒருவரால் ஆடப்படாத, நடம்பயின்று - கூத்துக்களிலே பழகி, ஆடுகின்றீர்க்கு - இடைவிடாமல் ஆடாநின்றுள்ள உங்களுடைய, அடி - பாதங்களிலே, நீங்கள் கூத்தாடாமலிருக்கும்படி, வீழ்கின்றேன் - தெண்டனிடுகிறேன்; ஆடு - ஆடாநின்றுள்ள, பணம் - படத்தையுடைய, அரவு - திருவநந்தாழ்வானாகிற. அணை - திருப்படுக்கையிலே, பற்பலகாலமும் - பலபலகாலமும், பள்ளிகொள் - பள்ளிகொண்டருளுகிற. மணவாளர் - அழகியமணவாளர், நம்மை—, வைத்தபரிசிது - வைத்தப்ரகாரம் இது, காண்மின் - காணுங்கோளென்கிறாள்.

வ்யா.—ஆறாம்பாட்டு, (கணமாமயில்காள்) கணமாய், நினைத்தகாரியஞ்செய்து தலைக்கட்டுந்தனையும் அளவுடையீகோளாயிருக்கிற நீங்கள். "மாற்றோலைப்பட்டவர் கூட்டத்து வைத்துக்கொள்கிற்றியே" என்றன்று, அநுகூலமாயிருப்பதொருதிரளிலேபோய்ப் புகவேணுமென்று ஆசைப்பட்ட வெனக்கு, ப்ரதிகூலமான திரள் கிடந்த வெள்ளமென்? * நின்றாடு கணமயில்போல் நிறமுடைய

பக்தி ஆருக்கு உபாயமென்ன; அருளிச்செய்கிறார் (ஓரதிகாரிக்கித்யாதி.) ஓரதிகாரி - உபாஸகன் (தலையாடி) - முடிந்தநிலம் (ஓரதிகாரி) ப்ரபந்நன் (உபக்ரமம்) - போஜநத்துக்கு க்ஷுத்துப்போலே கைங்கர்யத்துக்கு பூர்வபாவி. (கூவி) - அழைத்து. ரு

நெடுமாலுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. (கண்ணபிரான் திருக்கோலம் போன்று) (க) மங்கல நல்வனமாலைமார்பிலிலங்க மயில் தழைப் பீலிசூடி, பொங்கிளவாடையரையில் சாத்திப் பூங்கொத்துக்காதில் புணரப்பெய்து" என்னும்படியிருக்கும் க்ருஷ்ணனுடைய ஒப்பனைபோலே யிருந்ததீ!

(அணிமாநடம்பயின்று கண்ணுக்கழகிதாய், பாதத்திலே பெழுதியறியாமையாலே யொருவராடியறியாதே கிடக்குங் கூத்துக்க ளெல்லாவற்றையுமாடி. (ஆடுகின்றீர்க்கு) ஒருக்காலாடிற்றாய்த் தலைக்கட்டுகை யன்றிக்கேயிருக்கை. (அடிவீழ்கின்றேன் இக்கூத்து மாறவேணுமென்று உங்கள்காலிலே விழுகிறேன்• "நாங்கள் உன் காலிலே விழுமத்தனைபோக்கி, கூத்தை மாறவேணும், என்று எங்கள் காலிலே விழக்கடவதாகச் சொல்லக்கடவதோ!, இதுவும் ஒருவார்த்தையே!" என்று அவற்றுக்கருத்தாக;

(பணமித்யாதி) செய்யலாவதுண்டோ? எல்லார்க்கும் அவனைப் பின்செல்லவேணுமே தம்மைக்கிட்டினாரைத் தரிப்பிக்கக் கடவர், நமக்கு ஸோகத்தை யுண்டாக்கி உங்கள்காலிலே விழும்படி பண்ணினல், இனி நம்மால் செய்யலாவதுண்டோ? தம்மோட்டை ஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடையராய், நித்யாநுபவத்தாலே களித்து வர்த்திக்கிற திருவநந்தாழ்வானைப்படுக்கையாக வுடையவர். தம்முடம்போடே யணைய வாசைப்பட்டார்க்கு உடம்பு கொடுக்குமவர் (பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளர்) அவர் அநாதிகாலங் கூடிய பண்ணின க்ருஷிபலமன்றோ- நான் உங்கள் காலைப் பிடிக்கிறது, பெரிய பெருமாள்போலே காணும் இவனை யிப்பாடுபடுத்தினர்.

---

ஆறும்பாட்டு (கணமித்யாதி) ப்ராதிகூல்யம் எவ்வாகாரத்தாலே யென்ன; அருளிச்செய்கிறார் (நின்றுடித்யாதி) இன்னம் ஒருவழியாலே பாதகத்வத்தைக் காட்டுகிறார் (மங்கல நல்லித்யாதி) "கணம்" திரள்.

அணி - அழகு நடம் - கூத்து (பரதம்) பரதஶாஸ்த்ரம்.

(அவனைப் பின்செல்ல) - அவன் நினைவைப் பின்செல்ல. "அணை" என்றதுக்குத் தாத்பர்யம் (தம்முடம்போடே யித்யாதி)

---

(க) பெரு - தி - கூ - க.

(நம்மை யித்யாதி) கலக்கவென்றொருபேரையிட்டுத் தாம் வந்து எங்கள்காலை முற்படப்பிடித்து, பின்னைப்போர நின்று இப்போது நான் உங்கள் காலைப்பிடிக்கும்படி அவர் பண்ணிவிட்டால் நம்மாற் செய்யலாவதுண்டோ?. உங்களுக்கும் கால்தரவேண்டி எனக்கும் உங்கள்கால் பிடிக்கவேண்டும்படியன்றோ அவர்பண்ணி விட்டது. இப்புத்தியில்லையாகில் இவற்றின் கால் பிடியாளே· அவற்றுக்கும் கால்கொடுக்கவேண்டுகிறதிறேபாரதந்த்ரியத்தாலே; (க)" நித்யாபிவாஞ்சிதபரஸ்பரநீசபாவை: " " நித்யாபிவாஞ்சிதபரஸ்பரநீசபாவை:" என்னக்கடவதிறே. இங்ஙனன்றாகில், கால்கொடுக்க முறையுள்ளது ஒருவனுக்கிறே. இவன் தன்னை இஷ்டவிநியோகார்ஹமாக்கிவைத்தால், பின்னை அவர்கள் வேண்டினபடி விநியோகம் கொள்ளுமித்தனையிறே. அம்மணியாழ்வான், ஒருவனுக்கு ஹிதத்தைச்சொல்லி அவன்காலிலே தண்டனாகக் கிடக்குமாம். "நாம் ஒருவனை வைஷ்ணவனென்றன்றோ ஆதரிக்கிறது, நம் நெஞ்சறிந்த வைஷ்ணவனன்றோ விவன்" என்று; அத்தை ஜீயர் கேட்டருளி, "அது அவன் செய்தானேயாகிலும் ஶிஷ்யனுக்கு அநர்த்தம்" என்றாராம்; "இவன் தண்டனிடாதவன்றாக அவன் இன்ன

இவ்விடத்தில் மயில்களை ஶிஷ்ய ஸ்தாநேயாக்கி, கடகையான நீ பிடிக்கலாமோ? நாங்கள்தான் தரலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (உங்களுக்குமித்யாதி.) (உங்களுக்கும் கால்தரவேண்டி) என்றது - உங்களுக்கு நான் கால்தரவேண்டி யென்றபடி. (இப்புத்தியில்லையாகில்) என்றது - ஈஶ்வரநியமநமென்கிற புத்தியில்லையாகி லென்றபடி. ஶிஷ்யன் பாரதந்த்ர்யத்தாலே கொடுத்தாலும் இவன் பிடிக்கலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (நித்யாபிவாஞ்சித - நித்யாபிவாஞ்சிதேத்யாதி.) அன்றிக்கே, ஈஶ்வரபுத்யதீநமென்கைக்கு நியாமகமேதென்ன (நித்யேத்யாதி)

(இப்புத்தி) என்கிறவாக்யம் அநந்தரமதுஸந்தேயம். (இங்ஙனன்றாகில்) இப்பாரதந்த்ர்ய புத்தியன்றாகில். (ஒருவனுக்கு) - ஆசார்யனுக்கு. "அவற்றுக்கும்" என்ற வாக்ய விவரணம் (இவன் தன்னை) என்று. கடகர் பிடிக்குமதுக்கு ஸம்வாதமாக ஐதிஹ்யமருளிச்செய்கிறார் (அம்மணியாழ்வானித்யாதி) அவிவேகியான ஶிஷ்யனைத் தண்டனிட்டால் அநர்த்

(க) வை - ஸ்தவ - எ௫.

தாகத் துடங்குமிறே, அவிவேகியாகையாலே;" "அதுவென்? இவன் விவேகியாயன்றோ தன்னையவனுக்கு இஷ்டவிநியோகார்ஹமாக்கு கிறது. அவனுடைய விநியோகப்ரகாரங்கொண்டு கார்யமென் நமக்கென்று, தன்னை யங்கே நிவேதித்தன்றோ வைப்பது" என் றானும் பிள்ளான். (க) "மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாள்" என்னாநின்றதிறே. அநுநினைவில்லாதாரை. பிள்ளை திருநறையூ ரரையர், பட்டர் சிலவார்த்தை யருளிச்செய்யக் கேட்டு. "இற் றைக்கு முன்பு ஓராசார்யன் பக்கலிலும் இவை கேட்டறியோம்" என்றாராய், "பிள்ளாய்! முன்பும் இவ்வார்த்தை சொன்னா ருண்டுகாணும், ஒருதிர்யக்கைத் திருநாமத்தைக் கற்பித்து பின்னை அதின்வாயிலே கேட்டு அதின்காலிலே விழுந்தாருமுண்டி கர்ணும்" என்றருளிச் செய்தாராம். கூ

மூ.—நடமாடித்தோகைவிரிக்கின்ற மாமயில்காள்! உம்மை
நடமாட்டங்காணப் பாவியேன்நானோர்முதலிலேன் ;
குடமாடுகூத்தன் கோவிந்தன்கோமிறைசெய்து எம்மை
உடைமாடுகொண்டான் உங்கட்கினியொன்றுபோதுமே. (எ)

ப - ரை நடமாடி - கூத்தாடிக்கொண்டு, தோகை - தோகைகளை, விரிக்கின்ற - விரிக்கிற, மா - ச்லாக்யமான, மயில்காள் - மயில்களே!, உம்மை-உங்களுடைய, நடமாட்டம் - நர்த்தநத்தை, காண - பார்க்கைக்கு, பாவியேன் - மஹாபாபியான, நான்— ஓர் - ஒரு முதலிலேன் - கண் ணுடையேனல்லேன் ; குடமாடு கூத்தன் - குடக் கூத்தாடினவனாய், கோவிந்தன் - பசுக்களைக் காக்குமவனான க்ருஷ்ணன். கோ - ஸ்வதந்த்ர னான அரசன் பண்ணக்கடவ. மிறைசெய்து - மிறுக்குகளைப் பண்ணி,

---

தமாமென்று ஜீயருக்குக் கருத்து. விவேகியானவன். "ஆசார்யனுடைய விநியோகப்ரகாரங்கொண்டு கார்யமேது" என்றிருக்கையாலே அவனுக்கு அநர்த்தமில்லை. விவேகியானவனைத் தண்டனிடலாமென்னு மத்தை யருளிச் செய்கிறார் (மடக்கிளியை யித்யாதி) (அநுநினைவில்லாதாரை) என்றது - அநுவர்த்தியாதபோது வெறுக்கும் நினைவில்லாரை யென்ற படி. மிஷ்யனை வணங்கினமாத்ரமன்றிக்கே கொண்டாடவுமாமென்னு மதுக்கு ஸம்வாதமாக ஐதிஹ்யமருளிச்செய்கிறார் (பிள்ளை திருநறை யூரித்யாதி) அரையர் பட்டரைக்கொண்டாட, பட்டர் இப்படி செய்ய லாமோவென்று நடுங்க, அவரைப்பார்த்து. "பிள்ளாய்! முன்பும் இப்படி செய்தாருண்டு" என்று அரையரருளிச்செய்தா ரென்றபடி. கூ

---

(க) திருநெ - கச.

எம்மை உடை - என்னுடைமையான. மாடு - தநத்தை, கொண்டான்; அபஹரித்துக்கொண்டான்; இனி—, ஒன்று - (அவனைப்பிரிந்திருக்கிற என்முன்னே) ஆடிநலிகை, உங்கட்கு-உங்களுக்கு, போதுமே-கூடுமோ?.

வ்யா.—ஏழாம்பாட்டு. (நடமாடித்தோகைவிரிக்கின்ற மாமயில்காள்) தங்கள் காலிலே விழும்படி இவ்வெளிமைபட்டாளென்றறிந்தவாறே, நாம் நினைத்தகாரியம்செய்து தலைக்கட்டுகைக்கு ஒருகுறையில்லை யென்று வடிவைக்காட்டுவது, ஆடுவதானவளவன்றிக்கே, மயில்கள் தோகையையும் விரிக்கத்துடங்கின. (நடமாடி) அத்தால் வந்தஹர்ஷத்துக்குப் போக்கு வீடாகத் தோகையை விரிக்கின்ற மாமயில்காள்!. என்னை நலிய உங்களுடம்பிலே கிடக்கிற பாதகவெள்ளமென்?.

(உம்மை யித்யாதி) கண்ணுடையவர்களுக்கு நல்ல காட்சியிறே. (க) [ராமம்மே - ராமம்மே இத்யாதி] கடல்கொண்ட வஸ்து இனிமீளப்புகுகிறதோ?. [மே - மே] அக்கடலிலே இழியாதிருக்கமாட்டாதார்க்கு ஏறப்போமோ?. [அத்யாபிநிவர்த்ததே - அத்யாபிநிவர்த்ததே] அவரைக் காணப்பெறுவிட்டால் அவரைப்பெற்ற ஸௌபாக்யமுடையவனைக் காண்கைக்கு நல்லகாலமிறே; இவ்வளவிலும் மீளுகிறதில்லை. [நத்வாபஶ்யாமி கௌஸல்யே - நத்வாபஶ்யாமி கௌஸல்யே] பெருமாள் முகத்திலே விழிக்கப்பெறாதே, கைகேயி

ஏழாம்பாட்டு. (நடமாடியித்யாதி) "தோகை"-பீலி. "நடமாட்டம்"-கூத்தாட்டம். கீழிற்பாட்டோடே ஸங்கதி (தங்கள் காலிலே) என்று. (நினைத்தகாரியம்) பாதிக்க நினைக்கை. (பாதகவெள்ளம்)-தோகை. அன்றிக்கே, நடமாடி. அத்தால்வந்த ஹர்ஷத்தாலே தோகையை விரிக்கிறன வென்னுதல். (நல்லகாட்சியிறே) எனக்கு அவனைப் பிரிகையாலே கண் தோற்றுகிறதில்லை யென்றபடி. அவன் பக்கலிலே கண்போகையாலே காண்கைக்கு ஸாதநமான கண்ணில்லை என்றபேருண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (ராமம்மே - ராமம்மே யித்யாதி) என் ஸ்வபாவத்தாலும் மீளாதென்கிறார் (அக்கடலிலே) என்று. "கௌஸல்யேத்வாம்நபஶ்யாமி" "கௌஸல்யேத்வாம்நபஶ்யாமி" என்றாய், "நபஶ்யாமி - நபஶ்யாமி" என்று - இழவு படுகைக்கும் காணவேண்டுகைக்கும் ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (பெருமாள் முகத்திலே யித்யாதி)

(க) ரா - அயோ - சஉ - ருச.

முகத்திலே விழித்தத்தால் வந்ததாபமெல்லாம் ஆறும்படி உன்னைக்காணவேணுமென்று ஆசைப்படா நின்றேன், அது செய்யப்பெறுகிறிலேன். [𑌸𑌾𑌧𑍁𑌮𑌾𑌪𑌾𑌣𑌿𑌨𑌾𑌸𑍍𑌪𑍃𑌶 - ஸாதுமாபாணிநாஸ்ப்ருஶ] இந்த்ரியங்கள் தான் நித்யாதீந்த்ரிய வஸ்துக்களாகையாலே கார்ய கல்ப்யமிறே. ரூபக்ரஹணாபாவத்தாலே சக்ஷுரிந்த்ரியம் குடிபோய்த்ததென்றிருந்தேன், த்வகிந்த்ரியம் கிடந்ததோ இல்லையோவென்று ஸ்பர்ஶித்துப் பார்க்கவல்லையோ?. [𑌸𑌾𑌧𑍁𑌸𑍍𑌪𑍃𑌶-ஸாது ஸ்ப்ருஶ] "கைகேயியோடே க்ருதஸங்கேதனாய்ப் பெருமாளைக் காடேறப் போகவிட்டான்; 'அவர் கைகழியப்போனார், இனி மீளார்' என்றறிந்தவாறே, பொய்யே கூத்தடிக்கிறான்" என்றிறே, இவனுக்கு இது ஸம்ஸர்க்கத்தாலே வந்தது ஐயோ! என் செய்வான், பாவி அகப்பட்டான் என்னும் நெஞ்சோடேகூட என்னை ஸ்பர்ஶிக்க வல்லையே.

(நானோர் முதலிலேன்) அவன் கூடவிருந்தாப்போலே காணும் இவளுக்குக் கண்ணுள்ளது. விஷயத்தை யுண்டாக்கினால் ப்ரயோஜநமில்லை, கண்ணுண்டாய்க் காணவேணுமே. (க) "𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑍍" "சக்ஷுர்த்தேவாநாம்" என்னக்கடவதிறே. (குடமாடிகூத்தன்) அவன் தன் ஸ்வரூபத்தை அந்யதாபவிப்பித்ததுகாணுங்கோள், என் ஸ்வரூபத்தை அந்யதாபவிப்பித்ததுமன்றியிலே தன்னை எல்லாரும் கண்டநுபவிக்கும்படி குடக்கூத்தாடினான், கண்களையுண்டாக்கி விஷயத்தையும் காட்டினான்; தான்கூட

---

கண்ணுண்டாயிருக்க "முதலிலேன்" என்பானென்னென்ன. அருளிச்செய்கிறார் (அவன்கூட வித்யாதி.) அதாவது - அவனை விஶ்லேஷிக்கையாலே கண்ணில்லையென்றபடி. அன்றிக்கே, கண்ணுக்கு நிர்வாஹகனானவனைப் பிரிகையாலும், கண்ணில்லையென்கிறார் (விஷயத்தை யித்யாதி) கூடவிருந்தால் கண்ணுண்டாய், பிரிந்தால் கண்ணில்லாமையாலே, அவன்றானே கண் என்றதாய், அவன் கண்ணேயென்ன; அருளிச்செய்கிறார் (𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑍍-சக்ஷுர்தேவாநாமித்யாதி.) (தன் ஸ்வரூபத்தை) தன் மேன்மையை. "எம்மையுடை மாடுகொண்டான்" என்றதைப்பற்றி (என் ஸ்வரூபத்தை அந்யதா பவிப்பித்தது) என்றது.

---

(க) யஜு - கா - ச - ப்ர - கூ அநு-டு-உ.

நிற்கையாலே கண்ணுண்டாமிறே. திவ்யசக்ஷுஸ்ஸையும் கொடுத்து வைஶ்வரூப்யத்தையும் காட்டினுப்போலே, தன்னங்கபங்கிகளை எல்லாருங் கண்டநுபவிக்கும்படி பண்ணினவன்.

(கோவிந்தன் கோமிறைசெய்து) பசுக்களுக்கும் இடையர்க்குங்கூட ஸுலபனானவன், ஸ்வதந்த்ரன் பண்ணும் மிறுக்கைப் பண்ணி. கோக்கள் பண்ணக்கடவ மிறுக்குக்களைப்பண்ணி. (எம்மையித்யாதி) என்னுடைமையான தநத்தைக் கொண்டானென்னுதல்; என்னுடைமையையும் தநத்தையுங்கொண்டானென்னுதல்; என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினுனென்னுதல். (உங்கட்கினியொன்று போதுமே) அவனல்லாத வுங்களுக்கு என்முன்னேயாடி நலிகை போருமோ? (இனி) அவன் குடக்கூத்தாடுவதற்கு முன்னே யாடினீகோளாகிலன்றோ ப்ரயோஜநமுள்ளது; சைதந்யம் நடையாடினுல் பின் ஆடக்கடவதோ? அவனிற்காட்டிலும் உங்களுக்கு ஒருவாசி வேண்டாவோ? பிறர் நலிந்தாரையும் நலியக்கடவிகோளோ? எ

அவ.—எட்டாம் பாட்டு. கண்ணுல் கண்ட பதார்த்தங்களையெல்லாம் பாதகமாக்கி, பின்னையும் விடாதே மேகங்கள் நின்று வர்ஷிக்கப் புக்கதாய்க்கொள்ளீர். திருமலைநம்பி, இவ்விரண்டு பாட்டையும் ஆதரித்துப் போருவராய், அவ்வழியாலே நம்முடையவர்களெல்லாரு மாதரித்துப்போருவர்கள்; இப்பாட்டையும் மேலிற்பாட்டையும் அநுஸந்தித்து, கண்ணும் கண்ணீருமாய் ஒரு வார்த்தையும் சொல்லாதே வித்தராயிருப்பராம்.

---

"மிறை"-மிறுக்கு. "கோ"-நிர்வாஹக னென்றபடி. "மாடு" தநம்; முந்தினவர்த்தத்துக்கு, "உடை" - அவ்யயம், "உடை" என்று-ஸாகல்ய வாசி. இரண்டாலும் பலித்ததை அருளிச் செய்கிறுர் (என்னை ஸர்வஸ்வாபஹார மித்யாதி.)

அவனல்லாத உங்களுக்கு - அவனைப்போலே நலிகை ஸ்வபாவமல்லாத உங்களுக்கென்றபடி. ப்ராப்தியின்றிக்கே யிருக்கிற உஙகளுக்கென்றுமாம். அவனுடினுல், எங்களுக்கும் ஆடவொண்ணுதோ வென்ன - அருளிச்செய்கிறுர் (சைதந்யமித்யாதி;) சைதந்யம் உங்களுக்குண்டானுலென்றபடி. (வாசிவேண்டாவோ) என்றதின் கருத்தை அருளிச்செய்கிறுர் (பிறர் நலிந்தாரையு மித்யாதி.) நலிவுபட்ட வென்னைநலிகை உங்கள் ஜ்ஞாநத்துக்குப் போராதென்றபடி. எ

மூ.—மழையே! மழையே! மண்புறம்பூசி உள்ளாய்நின்று
மெழுகூற்றினாற்போல் ஊற்றுநல்வேங்கடத்துள்நின்ற
அழகப்பிரானார்தம்மை என்னெஞ்சத்தகப்படத்
தழுவிநின்று என்னைத்ததைத்துக்கொண்டு ஊற்றவும்வல்லையே.

ப - ரை. மழையே மழையே - ஓ!!! மேகங்களே, மண் - மண்ணை, புறம்-புறம்பிலே, பூசி—, உள்ளாய் நின்று-உள்ளே, மெழுகு-மெழுக்கை, ஊற்றினாற்போல் - ஊற்றுமாப்போலே, ஊற்றும் - பொழியா நின்றுள்ள, நல் - விலக்ஷணமான, வேங்கடத்துள் - தெற்குத் திருமலையிலே, நீங்கள் சென்று கட்டிக்கொள்ளலாம்படி, நின்ற - அணித்தாக நிற்குமவராய், என்னை இப்பாடு படுத்துகைக்கீடான, பிரானார் - உபகாரகரான, அழகர் தம்மை - அழகரை, என்நெஞ்சத்து - என்மநஸ்ஸிலே, அகப்பட - ப்ரகாசிக்க, தழுவிநின்று - நான் அணைக்கும்படி பண்ணி, என்னை—, ததைத்துக் கொண்டு-நெருக்கிக்கொண்டு, ஊற்றவும் வல்லையே-வர்ஷிக்கவும் கூடுமே யென்கிறாள்.

வ்யா.—(மழையே மழையே) இவ்வீப்ஸைக்குக் கருத்து - மேகங்கள் தூரப்போமே, அவற்றுக்குச் செவிப்படும்படி கூப்பிடுகிறாள். (மண்ணித்யாதி) மண்ணைப்புறம்பேபூசி, உள்ளில் மொழுக்கைவெதுப்பியூற்றுமாப்போலே. (ஊற்றும்) உடம்பிலே அணைந்து அசுவாய் குடிபோம்படி பண்ணுமவராய்த்து. (நல்வேங்கடத்துள் நின்று) உங்களுக்குச் சென்று கூடிக்கொள்ளலாம்படி அணித்தாக நிற்கிறவர்.

(அழகப்பிரானார் தம்மை) என்னை இப்பாடு படுத்துகைக் கீடான பரிகரத்தையுடையவர். (என்னெஞ்சத் தகப்படத்தழுவி நின்று) நெஞ்சிலே ப்ரகாஸித்து அணைக்கக் கோலிக் கையைநீட்டி

எட்டாம் பாட்டு. மழையித்யாதி.) "மழை" - மேகம். வர்ஷாகாலத்திலே மயில்கள் முதலானவை ஆலிக்குமாகையாலே (பதார்த்தங்களையெல்லாம் பாதகமாக்கி) என்றது. "புக்கதாய்க்கொள்ளீர்" - புக்ததாக வேணும்போலே என்றபடி. வார்த்தைப்பாடு. ஆர்த்த்யதிஸயம் தோற்றியிருக்கையாலே திருமலைநம்பி யீடுபெட்டிருப்பராம் என்றபடி.

த்ருஷ்டாந்தத்தில் ஸிக்ஷித்த வர்த்தத்தை தார்ஷ்டாந்திகத்திலே காட்டுகிறார் (உடம்பிலே யித்யாதி.) (பரிகரம்) - அழகு. "என்னெஞ்சத் தகப்படத்தழுவி நின்று" நெஞ்ஜிலே யகப்படும்படி பாஹ்யத்திலும் தழுவும்படிபண்ணி யென்றபடி; - நெஞ்சிலே யகப்பட்டபடியே பாஹ்யத்திலும் தழுவும்படி பண்ணி என்றபடியும். "ததைத்துக்கொண்டு" - பாதித்துக்கொண்டென்றபடி. "ஊற்றவும்" - வர்ஷிக்கவும்.

அகப்படக் காணுமையாலே நோவுபடுகையன்றிக்கே, நெஞ்சிலே ப்ரதிபாஸிக்கும்படியே நானணைக்கும்படி பண்ணி. உஷையையும் அநிருத்தனையுங்கூட விலங்கிட்டு வைத்தாப்போலே. (என்னைத் ததைத்துக்கொண்டு) என்னை நெருக்கிக்கொண்டு. (ஊற்றவும் வல்லையே) அப்போது இதுதான் தேட்டமாயிருக்குமிறே. அ

அவ.—ஒன்பதாம் பாட்டு. அநந்தரத்திலே கடலானது ஓதங்கிளரத் துடங்கிற்று.

மூ.—கடலே! கடலே! உன்னைக்கடைந்துகலக்குறுத்து,
உடலுள்புகுந்து நின்றூறலறுத்தவர்க்கு என்னையும்
உடலுள்புகுந்து நின்றூறலறுக்கின்றமாயர்க்கு என்
நடலைகளெல்லாம் நாகணைக்கேசென்றுரைத்தியே. (௯)

ப - ரை.—கடலே கடலே - ஓ!!! ஸமுத்ரமே, உடலுள்புகுந்து - உன்னுடலிலே புகுந்து, நின்று-ஒருபடிப்பட நின்று, உன்னைக்கடைந்து—, கலக்குறுத்து-உறுத்துக்கலக்கி, ஊறலறுத்தவர்க்கு-ஊற்றுமாறப் பண்ணுமவராய், என்னை - என்னுடைய. உடலுள் - மநஸ்ஸினுள்ளே, புகுந்து நின்று - ப்ரவேசித்து நின்று, ஊறல் அறுக்கின்ற - என் ப்ராணனைக் கொள்ளைகொள்கிற, மாயர்க்கு - ஆச்சர்யபூதரானவரிடத்தில் விண்ணப்பம் பண்ணும்படி, என் - என்னுடைய, நடலைகளெல்லாம் - துக்கங்களையெல்லாம், நாகணைக்கு - அவருக்குப் படுக்கையான திருவநந்தாழ்வானிடத்தில், சென்று—, உரைத்தி - நீபோய்ச் சொல்லவேணுமென்கிறாள்.

வ்யா.—(கடலேகடலே) இங்கு இரட்டிக்கிறதென்னென்னில்; இவள் ஒருக்கால் வார்த்தைசொன்னால் அது கேளாதே கோஷிபாநிற்குமாய்த்து. அதின் த்வநி அபிபூதமாய் மேலே கேட்கும்படி கூப்பிடுமாய்த்து. (உன்னைக்கடைந்து கலக்குறுத்து) நீதான் என்செய்தாய், தாசித்தலையிலே படையறுப்பாரைப்போலே உன்னையன்றோ நெருக்கிக்கடைந்து கலங்கப்பண்ணிற்று. படுக்கையென்று பாராதேயன்றோ நெருக்கிற்று. இடங்கொடுத்தார் நெஞ்சிலே கல்லையிட்டு நெருக்கிச் சாறுபெறுத்துமவரன்றோ.

"தழுவிநின்று - என்னைத் ததைத்துக்கொண்டு-என்னெஞ்சத் தகப்படத்தழுவும்படி பண்ணி நின்று ஊற்றவும் வல்லையே" என்று க்ரிமை". அ

(உடலுள் புகுந்து நின்று ஊறலறுத்தவர்க்கு) உன்னைப் புடுக்கையாகக்கொண்டு, உன்னோடே யணைந்து. பின்னையும் உன்னை நெருக்கிக்கடைந்து, பசையறப்பண்ணிநவநன்றோ? அவன் இரங்தார் காரியமோ செய்தது. (என்னையு முடலுள் புகுந்து நின்று ஊறலறுக்கின்ற) இவளையும் அணைத்தாய்த்து அகவாயில் பசையறுத்தது. (மாயர்க்கு) இப்படி நெருக்கினானென்று பின்னையும் விடவொண்ணாதிருக்கை. (என் நடலைகளெல்லாம்) நீபட்டதெல்லாம் படாநின்றேன்காண் நானும். போவது, வருவது, கண்ணுறங்கா தொழிவது, கூப்பிடுவது, விடமாட்டாதொழிவதாய்ப்படாநின்றதிறே; இவளும் நிற்பது இருப்பதாய், விழுவது எழுவதாய் ஆதியாயிறே படுகிறது. (நாகணை யித்யாதி) நீ அங்கேசென்றறிவிக்கையிலுண்டான வருமையே, பின்னை நம்மாள் அங்கேயுண்டு. (க)"நாகணை மிசைநம்பிரான் சரணேசரண் நமக்கு" என்றிறேயிருப்பது கூ

ஒன்பதாம் பாட்டு. (கடலித்யாதி) (இரட்டிக்கிற தென்னென்னில்) என்கிற ஶங்கைக்குத் தாத்பர்யம்;–கீழே மேகமாகையாலே ஸஞ்சாரித்வத்தைப்பற்ற இரட்டிப்புக் கூடும்; கடல் ஸ்தாயியாய்க்கொண்டு ஆஸந்நவர்த்தியாகையாலே இரட்டிப்பு என்? என்று. (நீதான் என்செய்தாய்)-உபகாரமன்றோ பண்ணிற்று யென்றபடி. (தூசித்தலையிலே படையறுக்கை)-ஸங்ஹாரத்தோடேவந்த படையை முதலிலே ஸம்ஹரிப்பாரைப்போலே மஹத்தத்வமான வுன்னையுங்கடைந்தது. இத்தால் தன் வார்த்தை கேட்கைக்காக, அதுக்கு அவன் பண்ணின நிலைவைச் சொல்லுகிறாள் (படையறுப்பாரைப்போலே) என்று; ஸ்வகீயனாய் அநுகூலனானவனை விரோதிப்பாரைப்போலே என்றபடி. "கலக்கு உறுத்து"-மலையை உறுத்துக்கலக்கி. சாறுபெறுத்துகை) - ஸாரம்வாங்குகை; மூச்சுச்சாரம் போடுகை என்றுமாம். "ஊறல்"-ப்ராணன். சாடுவுக்கு "ஊறலறுக்கின்ற" என்றத்தைப் பற்ற கீழ் உக்தசாடு. (அவன் இரங்கார்காரியமோ) என்றது மேலுக்கவதாரிகை. "உடலுள் புகுந்துநின்று-உன்னைக்கடைந்து கலக்குறுத்து-ஊறலறுத்தவர்க்கு" என்றந்வயம். "மாயர்" - ஸௌந்தர்யாதிகளால் ஆஶ்சர்யபூதர். "நடலை" - துஃகம் திருவநந்தாழ்வானைப் புருஷகாரமாகப் பற்றினவிடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (நாகணைமிசை யித்யாதி.) கூ

(க) தி - வாய் - ரு - கO - கக.

அவ.—நிகமத்தில், (நல்லவித்யாதி) தோழியானவள் இவள் தன்னிலும் காட்டில் இறவுபட்டு, 'இவள் தனக்குப் பேற்றுக் குடலாக நினைத்திருப்பது இரண்டை; - பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பையும், அவன் "ஆநுகூல்யமுடையாரை விடேன்" என்ற வார்த்தையையுமாய்த்து. அதுதன்னிலேயும் அதிசங்கை பண்ணாநின்றாள்;—இவள், ஜீவித்தாளாய்த் தலைக்கட்டுகைக்கு ஒருவழி கண்டிலோம், எவ்வழியாலே இவளை தரிப்பிப்போம் என்றிருந்தாள்; அவளைப்பார்த்து, நீ அஞ்சவேண்டாகாண், நமக்கு ஜீவிக்கைக்கு ஒருவிரகுகண்டேன் காணென்கிறாள்.

மூ.—நல்லவென்றோழி! நாகணைமிசைநம்பரர்
செல்வர்பெரியர் சிறுமானிடவர்நாம்செய்வதென்?
வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள்தேவரை
வல்லபரிசுவருவிப்பரேல் அதுகாண்டுமே. (கo)

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ப-ரை என்நல்லதோழி - என்னிழவுக்கு வ்யஸநப்படும் நல்ல தோழியே, நாகணைமிசை - திருவநந்தாழ்வானாகிற திருப்படுக்கையிலே பள்ளிகொண்டருளுமவனாய், நம் - ஆச்ரிதரான நமக்கு, பரர் - ஸர்வ ஸ்வாமியாய், செல்வர் - ச்ரிய:பதியாய், பெரியர் - ப்ரம்மா முதலானார்க்கும பெரியரானவரை, சிறு - மிகத்தண்ணியராய், மானிடவர் - மநுஷ்யரான, நாம்—, செய்வது - செய்யத்தக்கது, என் - என்னவிருக்கிறது; வில்லிபதுவைநகர் - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, நம்பி - நிர்வாஹகரான. விட்டுசித்தர் - பெரியாழ்வார், தங்கள் - தம்முடைய, தேவரை - ஸ்வாமியானவரை, வல்ல பரிசு - திரு அக்கிக்காப்பிடல் முதலாகச்செய்யக்கூடிய ப்ரகாரங்களாலே, வருவிப்பரேல் - எழுந்தருளப் பண்ணுவரேயாகில், அதுகாண்டும் - அவ்வழியாலே காணக்கடவோமென்கிறாள்.

---

நிகமத்தில்; இப்பாட்டிற் செல்லுகிற பெரியாழ்வார் ஸம்பந்தம், புருஷகாரத்வேஷவம் ஸ்வதந்த்ரோபாயத்வேஷவம் இரண்டு வகையாலும் தோற்ற வ்யாக்யாநம் பண்ணுகிறதென்று கண்டுகொள்வது (அதுதன்னிலேயும் அதிசங்கை பண்ணாநின்றாள்) என்றது - "குமரனார் சொல்லும் பொய்யானால் நானும்பிறந்தமை பொய்யன்றே" என்று - அவ்விரண்டிலும் அதிசங்கை பண்ணாநின்றாளென்றபடி. பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்பை, கீழே அதிசங்கை பண்ணிற்று; தன்னையிட்டு இங்குத் தெளிகிறது அர்த்த ஸ்திதியைப்பற்ற என்று தாத்பர்யம்.

வ்யா.—(நல்லவென்றோழி) என்னிலும் என்னிழவுக்கு நொந்திருப்பாய் நீயேயிறே. (நாகணையித்யாதி) அநந்தஶாயியாய் ஶ்ரிய:பதியுமாய் உயர்ந்தா ரொருத்தராயிருக்கிறவரை, அதிக்ஷுத்ரராயிருக்கிற நம்மாலே செய்யலாவதுண்டோ?. (க) "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று ஶரணம்புக வொருப்பட்டவர், அதுக்குறுப்பாக (௧) "அகலகில்லே னிறையுமென்று அலர்மேல்மங்கை யுறை மார்பா" என்றும், (௨) "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும் - தம்பேற்றுக்குடலாக நினைத்திருந்தவை தன்னையும் இழவுக்குடலாகச்சொல்லிக் கைவாங்கும்படி காணும் கண்ணுஞ்சுழலையிட்டபடி. (நாகணைமிசை) அநந்தஶாயியாயிருக்கைக்கு மேற்படவில்லையிறே ஒருவனுக்கு எற்றத்துக்கு.

(நம்பரர்) அநந்யபரமான வாக்யங்களாலே ப்ரஸித்தமான பரத்வத்தையுடையவர். (௩) "[illegible]" "நாராயணபரம் ப்ரஹ்ம" இத்யாதிகளில் சொல்லுகிறபடியே (செல்வர்) ஸ்ரிய:பதிகள். (௪) "அணைவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது" (௫) "[illegible]" "ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" என்கிறபடியே. ஆகையாலே (பெரியர்) நமக்கும் அவர்க்கும் பர்வதபரமாணுக்களோட்டை வாசிபோரும். (சிறுமானிடவர்) தேவயோநியிலே பிறந்து சிறிது அணைய நிற்கையுமன்றிக்கே, அஜ்ஞராய் அவனோடணைய நிற்கையுமன்றிக்கே, அதிக்ஷுத்ரரான மநுஷ்யர். (நாம் செய்வதென்) முன்பே யொருவார்த்தை சொல்லிவைத்தா ரென்றத்தைக்கொண்டு நம்மாலே அவரை வளைக்கப்போமோ?

---

(ஶ்ரிய:பதியுமாய்) அத ஏவ (உயர்ந்தா ரொருத்தராய்) என்றபடி. "நம்" என்ற ப்ரஸித்தியை "பரர்" என்ற பதத்துக்கு விஶேஷணமாகக் கீழே அருளிச்செய்து, "நம் - செல்வர்" என்று கூட்டித் தாத்பர்யம் (அணைவதித்யாதி.) (நம்பரர்) நம் - ப்ரஸித்தி. திருவநந்தாழ்வான் அவ்வநுபவத்துக்குத் தண்ணீர்த்துரும்பாக வொண்ணாதென்று தன்ஜ்ஞானத்தை யமைத்து அஜ்ஞனாய் அசித்வத்பாரதந்த்ரனா யிருக்கையாலே (அஜ்ஞராய் அவனோடணைய நிற்கையும்) என்கிறது. "ப்ராஜ்ஞராய் அவனோடு அணைய" என்றும் பாடமுண்டு.

---

(௧) தி - வாய் - ௬ - ௧௦ - ௧௦. (௨) தி - வாய் - ௫ - ௧௦ - ௧௧.
(௩) தை - நா -
(௪) தி - வாய் - ௨ - ௮ - ௧.
(௫) புருஷஸூக்தம்.

ஆனல் நாம் இழந்தேபோமித்தனையோ வென்ன; நமக்கு இழக்கவேண்டாகாண், (௧) "த்வயிகிஞ்சித்ஸமாபந்நே கிங்கார்யம் ஸீதயாமம" "த்வயிகிஞ்சித்ஸமாபந்நே கிங்கார்யம் ஸீதயாமம" என்றவனுக்குச் சொல்லவேண்டுவதும் ஒருவிஷய முண்டுகாண். நீ பின்னையும் பேற்றுக்குடலாக நினைத்திருந்ததென்னென்ன (வில்லிபுத்யாதி- தங்கள்தேவரை) ஸர்வஸாதாரணமாக விருக்கும் வஸ்துவென்று பற்றக்கடவதன்று, ஆசார்யனுக்கு விதேயம் அவ்வஸ்து, அவன் வழியாலே நடக்கக் கிடைக்குமென்றிருக்க வடுக்கும். ஸம்பந்தம் நமக்கும் அவனுக்கும் ஒக்குமென்று நினைக்கலாகாது, ஸம்பந்தம் நித்யமாயிருக்கச் செய்தேயிறே இந்நாள்வரை கிடந்தது. "தங்கள்தேவரை" என்று-தன்னோடுறவறுத்துப் பெரியாழ்வாரோடே சேர்த்துச் சொல்லுகிறாள். பெரியாழ்வாருகந்தவரென்றாய்த்து உகந்தது; த்ரிபுராதேவியார் வார்த்தையை நினைப்பது.

(வல்லபரிசுவருவிப்பரேல்) ஒரு பூவையிட்டு வாப்பண்ணவு மாம்; ஒரு இசையைச்சொல்லி இசைவிக்கவுமாம்; கிழியை

பெரியாழ்வாரை கடகத்வேநச் சொல்லுகிற பக்ஷத்திலே நோக்காக மேலுக்கவதாரிகை அருளிச்செய்கிறார் (ஆனலித்யாதி) (ஒரு விஷயம்) - மஹாராஜரைப்போலே அபிமதமான விஷயம். பெரியாழ்வார், (சொல்ல வேண்டுவதும் ஒரு விஷயமுண்டு காண்) என்றது "விஷ்ணுச்சித்தஸ்ய" "விஷ்ணுச்சித்தேயஸ்ய" என்றகொண்டு; (௨) "அநந்தன்பாலும்" இத்யாதிப்படியே - அவர்களையும் காற்கடைக்கொண்டு ஆவர் ஹ்ருதயத்திலே விரும்பி வர்த்திக்கும்படி அபிமதவிஷயமான பெரியாழ்வார் கடகத்வேந உண்டுகாணென்றபடி. பெரியாழ்வாரை உபாயத்வேந சொல்லுகிற பக்ஷம் தோற்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதி) (அஜ்ஞராய் அணைந்தவர்கள்- இடைச்சிகள்.) "தங்கள்" என்று விசேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம (ஸர்வஸாதாரணேத்யாதி.) இதெல்லாம் புருஷகாரத்வ பக்ஷத்திலே. (ஸர்வஸாதாரணமாக விருக்கும் வஸ்துவென்று பற்றக் கடவதன்று) என்ற வாக்ய விவரணம் (ஸம்பந்த மித்யாதி.) (அவனுக்கும்) - ஆசார்யனுக்கும் அவனோபாதி நமக்கும் ஸம்பந்த முண்டேயென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்பந்தம் நித்யமாயித்யாதி.) உபாயத்வபக்ஷே (பெரியாழ்வா ருகந்தவரென்றாய்த் தித்யாதி.) "த்ரிபுராதேவியார் காடிச்சால்

(௧) ரா - யு - ௬௧ - ௬ (௨) பெரி - ௬ - ௫ - ௬ - ௮.

யறுத்து வரப்பண்ணவுமாம்; திருமஞ்சநத்தைச் சேர்த்து அழைக்கவுமாம்; திருக்குழல்பணியைச் சேர்த்துவைத் தழைக்கவுமாம்; அன்றிக்கே திருவந்திக்காப்பிட்டு அழைக்கவுமாம்; "வெண்ணெயளைந்த குணுங்கும்" "ஆனிரைமேய்க்க நீபோதி" "இந்திரனோடு பிரமன்" இத்யாதிக ளநேகமிறே. அன்றிக்கே, நான் தம்மை முன்னிட்டாப்போலே, தமக்கு புருஷகார மாவாரை முன்னிட்டு வரப்பண்ணவுமாம் (அதுகாண்டுமே) அவ்வழியாலே பெறக்கடவோம். (க)"पितामहं नाथमुनिं विलोक्य प्रसीद" "பிதாமஹம்நாதமுநிம் விலோக்யப்ரஸீத" என்னுமாப்போலே.—(உ)"त्वत्पादमूलं शरणं प्रपद्ये" "த்வத்பாதமூலம் ஶரணம்ப்ரபத்யே" என்று - ஶரணம்புக்குவைத்து ப்ரபத்தி பண்ணினோம் நாமாகையாலே, அதுவும் போட்கனுகக் கூடுமென்று அக்குறைதீர, நாதமுநிகளை முன்னிட்டாப்போலே, இவளும் பெரியாழ்வாரை முன்னிடுகிறாள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பத்தாம் திருமொழி முற்றிற்று.

---

## பதினோராந் திருமொழி

# தாமுகக்கும் — ப்ரவேசம்.

:(o):

அவ:—அவர் இரண்டுவார்த்தை சொல்லாரென்றும், அது தான் தப்பிற்றாகிலும் தப்பாததொன்றுண்டு; - நமக்குப் பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பானது நம்மை பலத்தோடே ஸங்கிப்பித்தல்லது விடாதென்று அத்யவஸித்திருக்கச் செய்தேயும், அவன்றான் வந்து உதவக்கண்டிலள்; அர்ஜுநன்கையி லம்புக

---

மூலையில் தேவதையாகிலும், எம்பெருமானார் பற்றினால் எங்களுக்கும் அதுவே யமையும்" என்ற வார்த்தை. (அதிஶங்கைபண்ணி என்றது - "கொல்லையாக்கியை" என்ற விடத்தில்; அங்கு - ஸ்வகதம்: இங்கு - பாரகதம்.) கO

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

(க) ஸ்தோ - ர - கூ௫. .. (உ) ஸ்தோ - ர - உக.

ளாலே உளையவேவுண்டு சரதல்பத்திலே கிடந்த ஸ்ரீ பீஷ்மரைப் போலே, ஸ்மாரகபதார்த்தங்களாலே போர நோவுபட்டுக்கிடக்கிற தசையைக் கண்டு, "இவளுக்கோடுகிற தின்னதென்றறிய வேணும்" என்று தாய்மார் தோழிமார் அந்யபரைகளாயிருப்பாரடையப்புகுந்து திரண்டுகிடக்க, அவர்களைப்பார்த்து, "நான் அத்யவஸித்திருந்தபடி கண்டிகோளே, என்தசை யிருந்தபடி கண்டிகோளே, இவ்வளவிலே அவன்வந்துதவினபடி கண்டிகோளே, அவன் ஸ்வபாவமிருந்தபடி கண்டிகோளே" என்றின்னாதாய், பின்னையும் "தன்திறத்திற் பெண்களிலே சிலருக்கு உதவினவன் நமக்கு உதவாதொழிகிறானல்லன்" என்று வருந்தி, ஒருபடி தரித்தாளாய்த் தலைக்கட்டுகிறாள். ... ... *

மூ.—தாமுகக்கும்தங்கையில் சங்கமேபோலாவோ?
யாமுகக்குமெங்கையில் சங்கமுமேந்திழையீர்!
தீமுகத்துநாகணைமேல் சேரும்திருவரங்கர்
ஆ! முகத்தைநோக்காரால் அம்மனே! அம்மனே!. (க)

ப-ரை. ஏந்து - தரிக்கப்பட்ட, இழையீர் - ஆபரணங்களை யுடையவர்களே!, தாம் - அவர், உகக்கும் - மெச்சிக்கொள்ளுகிற, தம்கையில் - தமது திருக்கையிலுள்ள சங்கம் - சங்கத்தை, யாமுகக்கும் - நானுகக்கிற எம்கையில் - என் கையிலுள்ள, சங்கம் - சங்குவளையல்கள், போலாவோ - ஒவ்வாதோ; தீ - க்ரூரமான முகத்து - முகத்தையுடைய, நாகணைமேல் - திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே, சேரும் - பள்ளிகொண்டருளுகிற, திருவரங்கர் - அழகிய மணவாளர், முகத்தை - என்னுடைய முகத்தை, நோக்கார் - நோக்குகிறாரில்லை; ஆ - கெட்டேன்!, அம்மனே அம்மனே!- அவரை நினைக்கவுங்கூட அச்சமாயிராநின்றதீ! என்கிறாள்.

---

அரு;—தாமுகக்கும் ப்ரவேசம்; "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அதுகாண்டும்" என்றத்தைப்பற்ற (நான் அத்யவஸித்திருந்தபடி) என்றது. "கழல்வளையேயாக்கினர்" என்றத்தைப்பற்ற (என்தசை யிருந்தபடி கண்டிகோளே) என்றது. "இத்தெருவே போதாரே" என்றத்தைப்பற்ற (இவ்வளவிலே) என்றது. "உண்ணாதுறங்காது" இத்யாதியைப்பற்ற (அவன் ஸ்வபாவ மித்யாதி.) "கண்ணாலங்கோடித்து" இத்யாதியைப்பற்ற (பின்னையும்) என்றது *

வ்யா.—முதற்பாட்டு. (தாமுகக்கு மித்யாதி) "இவ்வவஸாதத்தில் வந்து நீர் உதவா தொழிந்ததென் ?" என்று கேட்டால், இன்னத்தாலேயென்று நமக்கு மறுமாற்றமாகச் சொல்லலாவதொன்றுண்டென்று நினைத்திருக்கிறரோ, கேளிகோள். என்னுகப்பில் குறையுண்டாயோ?, தம் உகப்பில் குறையுண்டாயோ?, தம்முடைய ரக்ஷணத்தில் குறையுண்டாயோ?, என்னுடைய ரக்ஷ்யபாவத்தில் குறையுண்டாயோ, எத்தாலே "நானுதவிற்றிலன்" என்று சொல்லவிருக்கிறர். தம்கையில் குறையில்லை, என்கையில் குறையில்லை, இனியென்சொல்லுவதாக விருக்கிறர்.

"ஸ்வதந்த்ரரா யிருப்பார் தாம் தாம்நினைத்தது செய்து தலைக்கட்டு மத்தனையன்ரே?" என்று சொல்ல நினைத்திருக்குமதுவும் வார்த்தையல்ல; "பரதந்த்ரரா யிருப்பார் செய்தபடி கண்டிருக்குமத்தனையல்லது, நிர்ப்பந்திக்கக் கடவர்களோ?" என்று நினைத்திருக்குமதுவும் வார்த்தையல்ல. "நம்கையிலுள்ளதொன்றும் கொடோம், பிறர்கையிலுள்ளது கொள்ளக்கடவோம்" என்று

அரு—முதற்பாட்டு (தாமுகக்கு மித்யாதி) 'எங்கிழையீர்-தாமுகக்கும் தங்கையிற் சங்கமேபோலாவோ யாமுகக்கு மெங்கையிற்சங்கமும் - தீமுகத்துநாகணைமேற் சேரும்திருவரங்கர் - முகத்தை நோக்காரால் - ஆ - அம்மனே அம்மனே" என்றந்வயம். ஸ்த்ரீகளைப்பார்த்துந்யாயம் கேட்கிறதாயிருக்கிறது இப்பாட்டு. பதங்களைக் கடாக்ஷித்துக் கொண்டவதாரிகை அருளிச்செய்கிறர் (இவ்வவஸாதத்தி லித்யாதி.) (இன்னத்தாலே) என்றது - என் குறையாலேயாதல்; தம்குறையாலேயாதல். அவதாரிகையைவிவரிக்கிறர் (என்னுகப்பில் குறையுண்டாயோ வித்யாதி.) (என்னுகப்பு)-வளையிழந்து அவன் வளையையாசைப்படுகை. (தம் உகப்பு)-என்வளையைக் கைக்கொள்ளுகை. (ரக்ஷணம்) - கோயிலிலே சேருகை. (ரக்ஷ்யபாவம்) "முகத்தைநோக்காரால்" என்றிருக்கை. இவற்றால் பலிதத்தை அருளிச்செய்கிறர் (தங்கையிலித்யாதி.)

"தாமுகக்கும் தங்கையிற் சங்கமே போலாவோ யாமுகக்கு மெங்கையிற் சங்கமும" என்றது - தஙகையிற் சங்கத்தைத் தாமுகக்குமாப்போலேயன்ரே எங்கையிற் சங்கமும் யாமுகப்பதென்று அர்த்தமாய், என்வளைகொண்டால் தம் வளைதன்னைத் தரவேண்டாவோவென்று இவளுக்குக் கருத்தாக, அதுக்குஅவன் கருத்தை அநுவதித்து உத்தரம் சொல்லுகிறர் (ஸ்வதந்த்ரரா யித்யாதி வாக்யத்வயத்தாலே.) இதைவிவரிக்

நினைத்திருக்குமதுவும் வார்த்தையல்ல; "வன்மையுடையார்செய்த படி கண்டிருக்குமத்தனையன்றோ, மென்மையுடையார்" என்று நினைத்திருக்கக்கடவரல்லர், "உம்முடைய கையில்வளை நீர்கொடா தொழிகிறதென்?" என்று கேட்டால் "நானுகந்திருக்கையாலே" என்று சொல்ல நினைத்திருக்கிறீரோ?; அதுபின்னை பிறர்க்கில்லையோ?. கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமுமான அழகைப்போலே காணும் இவள்தான் கணுக்கண்டு கிடக்கிறது, "நாமும் கணுக்கண்டு கிடப்பது இத்தையன்றோ" என்று சொல்லவிறே அவரும் நினைத்திருப்பது; அது தமக்காகக்கண்டதோ; (க) "ந தேரூபம் - நாயுதாநி - பக்தாநாம" "நதேரூபம் - நாயுதாநி - பக்தாநாம" என்றன்றோவிருப்பது.

(தாமுகக்கு மித்யாதி) நாமுகந்தது நம்கையிலே கிடக்குமித்தனை; பிறருகந்ததும் நம்கையிலே கிடக்குமித்தனை. "நாமுகந்ததும் கொடோம். பிறருகந்ததும் கொடோம்" என்று நினைத்திருக்குமதழகோ?. உகந்தாருகந்தது பெறுதல், உடையாருடை

---

கிறார் (நம்கையிலுள்ளதித்யாதி வாக்யத்வயத்தாலே.) வன்மை - புருஷஸ்வபாவம் (மென்மை)-ஸ்த்ரீஸ்வபாவம். (அதுபின்னை பிறர்க்கில்லையோ) என்றது- உம்முடைய சங்கிலாசை எனக்கில்லையோ என்றபடி. இவள்தான் சங்கை ஆசைப்பட்டிருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (கையும் ஸ்ரீ பாஞ்சஜந்யமுமித்யாதி.) (இத்தையன்றோ,-பாஞ்சஜந்யத்தையன்றோ.

இத்தால் - "எனக்கிஷ்டமான என்கையில் வளை தாராவிட்டால், தமக்கிஷ்டமான தன்கையில் வளையாகிலும் தரவேண்டாவோ" என்று இவளபேக்ஷிக்க, அவன் "ஸ்வாதந்த்ர்ய கார்யமான பலத்தாலும், தன் வளையில் தனக்குண்டான ஆசையாலும் கொடோம்" என்றதுக்கு உத்தரம் சொன்னளாய் நின்றதுகீழ்; மேல் இரண்டாமர்த்த மருளிச்செய்கிறார் (தாமுகக்குமித்யாதி) "தாமுகக்கும் - என்கையில் சங்கமே போலன்றோ யாமுகக்கும் - தம்கையில் சங்கமும்" என்றந்வயித்து. "தாமுகந்த சங்கு கொண்டாராகில் நானுகந்த சங்குதரவேண்டாவோ" என்று இவளுக்குக் கருத்தாக, அவன் கருத்தையநுவதித்து அதுக்கு உத்தரம் சொல்லுகிறார். (நாமுகந்தது நம்கையிலித்யாதி.)

---

(க) ஜிதந்தா - க - அ.

யது பெறுதல் செய்யவேண்டாவோ ?; உகந்தா ருகந்தது பெறும் போது தன்கையிலுள்ளவை என்கையிலே வரவேணும் ; உடையாருடையது பெறில் என்கையிலவை என்கையிலே கிடக்க வேணும், இரண்டும் ஸம்ஶ்லேஷத்தை யொழியக் கூடாதிறே.

(க) "வெள்ளை விளிசங்கிடங்கையில் கொண்ட விமலன்" என்று ஒரு சங்குபெற வாசைப்பட்டவென்னை, "தான்கொண்ட சரிவளைகள்" என்று ஒருஜாதியாக இழக்கும்படி பண்ணுவதே!. "ஈஶ்வரஜாதி" என்று ஒருஜாதி யுண்டாகிலிறே தங்கையில்வளையோடு ஸஜாதீய முண்டென்று சொல்லலாவது. (தம்கையில் சங்கமேபோலாவோ யாமுகக்கு மென்கையில் சங்கமும்) தம்கையில்வளை ஆபரணமாய்த் தோற்றுகையாலே, அவன்கையில் ஸ்ரீபாஞ்சஜந்யமும் ஆபரணமாய்த் தோற்றுகிற வித்தனையல்லது, ஆயுதமாய்த் தோற்றுகிறதில்லைகாணு மிவளுக்கு. * நாரீணு முத்தமையாய் வளையிட்டாப்போலே, அவன் புருஷோத்தமத்வத்துக்கும் வளையிட்டானென்றிருக்கிறாளாய்த்து.

(எந்திழையீர்) எந்தப்பட்ட இழையையுடையீர்! - தரிக்கப்பட்ட ஆபரணத்தையுடையீர். ப்ரளயத்திலும் தப்பிக்கிடப்பாரைப்போலே நீங்களெங்கே தப்பிக் கிடந்தீர்கோள், (உ) "మయూరస్యవనేనూనం రక్షసానహృతా ప్రియా" "மயூரஸ்யவநேநூநம் ரக்ஷஸா நஹ்ருதாப்ரியா" என்று இருவரா யிருப்பாரை யெல்லாம் பிரித்தா

நீயாசைப்படக் கொள்ளவன்றோ அவன் கொண்டது ; உனக்கு வெறுப்பென்னென்ன ; அருளிச்செய்கிறார் (வெள்ளைவிளிசங்கித்யாதி.) ஆசைப்பட்டவள வன்றிக்கே அதிகமாகக் கொள்ளுகையாலே வெறுப்பு. தாமும் அநேகத்தை ஆசைப்பட வொண்ணுதோவென்ன ; அருளிச்செய்கிறார் (ஈஶ்வரஜாதீத்யாதி.) பரிஹாரம் பண்ணுவாராய், பதோபாதாநம் பண்ணுகிறார் (தம்கையில் சங்கமேயித்யாதி) அது திவ்வாயுதமன்றோ, அத்தையபேக்ஷிப்பானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (தங்கையில்வளை யித்யாதி.) ஆபரணமாய்த் தோற்றுகைக்கு ஜ்ஞாபகமேதென்ன வருளிச்செய்கிறார் (நாரீணும்த்யாதி.)

தானிழக்கையாலே எல்லாரும் இழந்ததாக நினைத்தபேருண்டோவென்ன ; அருளிச்செய்கிறார் (మయూరస్యవనే - மயூரஸ்யவநேயித்யாதி.)

(க) கு - உ. (உ) ரா - கி -

னென்றிருந்தாரிறே பெருமாள்; அப்படியே "வளை கையில் தொங்கின ஒருவருமில்லை" என்றிருந்தாள்போலே காணும். நீங்கள் தப்பிக்கிடந்தபடி எங்ஙனேயென்கிறாள். அவனோடுகலந்து பிரிந்தபடியால் ப்ராதேஶிகமாகமாட்டாதென்று தோற்றியிருந்த தாய்த்து. ஆபரணமிழந்தார் வழக்கு ஆபரணம் பூண்டிருந்தார் பக்கலிலே கேட்குமித்தனையிறே; குறைவாளர் வழக்கு, குறைவற்றார் பக்கலிலேயிறே கேட்பது; யுவாக்கள் வழக்கு ஸந்யாஸிகள் பக்கலன்றே கேட்பது; யுவாக்கள் பக்கலிலேயிறே கேட்பதும். "நீயும் சிலநாள் வைத்துக்கொண்டிரு" என்பார் பக்கலன்றே கேட்பது.

ஆண்களோபாதியிறே இவளுக்கோடுகிற தஶை யறியாமைக்கு இவர்களும். (தீயித்யாதி) இவர்களை விளர்!, நம் தஶையை யறிவானொருவனைப் வைத்து அவனுக்கு உடம்பு கொடுக்கிறவனைச் சொல்லீர். விஶ்லேஷத்தால் வரும் வ்யஸநமறியானித்தனைபோக்கி, ஸம்ஶ்லேஷரஸ மறியாமையில்லையே; ஸம்ஶ்லேஷந்தான் நித்யமாயிருக்கச்செய்தேயும் பிரிந்தார் படுமதுபடுமவனாய்த்து.

இப்படிப்பட்டவன்றான் அவனுக்கு முகம் கொடுக்கக்கடவனோ?, என்னை யொழிய அவன்போகத்திலே அந்வயிக்கப் புக்கால் போகியான தான் உடம்பு கொடுக்கக்கடவனோ? பெரியாழ்வாரோ பாதியாகவிறே நினைத்திருப்பது. தான் வெறுத்

எல்லாரும் இழந்தா ரென்றிருக்கைக்கு ஹேது, தன்னிழவாலேயாதல்; அவனெடுப்பாலேயாதல். இவர்களைக் கேட்பானென், வேறே சிலரைக் கேட்கவொண்ணாதோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆபரணம் இழந்தாரித்யாதி) ஸம்ஶ்லேஷமறியாதே "நீயும் சிலநாள் அவன் வளையைக் கொண்டிரு" என்பார் பக்கல் கேட்கவொண்ணாதென்றபடி.

அவன் விஶ்லேஷ துஃகமறியானோ வென்ன; அருளிச்செய்கிறார் (விஶ்லேஷத்தா லித்யாதி.) ஸம்ஶ்லேஷ ஸுகமறிந்தால் விஶ்லேஷ துஃகமறியும்படி எப்படியென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷந்தானித்யாதி.) பிரிந்தார் படுமது படுமவனாயிருக்கையாலே விஶ்லேஷ துஃகமறியுமென்றபடி. கீழ் "தீமுகத்து" என்று வெறுப்பாகச் சொல்லலாமோவென்ன: அருளிச்செய்கிறார் பெரியாழ்வாரித்யாதி.) அவர் தம்மை வெறுத்ததே துக்காகவென்ன: அருளிச்செய்கிறார் (தான் வெறுக்கித்யாதி) தான்

திருக்க, பிறந்தகத்துற்றார். புக்ககத்தாற்றுரோடே கைவைத்தால் சொல்லுமாப்போலே சொல்லுகிறுளிறே, (க) [பித்ரு தேசம் நியமேந க்ருத்வா - பிதுர்நிதேஸம் நியமேநக்ருத்வா] இவ்விடத்தில் வார்த்தையைச் சொல்லிக்கொள்வது.

(தீமுகத்து) நொந்தாரை "ஐயோ!" என்று தண்ணளி பண்ணவேண்டி யிருக்க எதிர்விழிக்கவொண்ணுதபடி நெருப்பை யுமிழ்ந்தாப்போலே யிராநின்றதாய்த்து. அவர் தமக்கும் இவ ளோடு ஒரு குருகுலவாஸம் பண்ணவேண்டி யிருந்தது வெட்டி மைக்கு. அன்றிக்கே, தான் படுக்கையிலே சாயப்புக்கால் விரோதி போக்குகைக்கு வேறோராயுதந் தேடவேண்டாதபடி யிருப்பா னொருவனுய்த்து. உகவாதார்க்கு வந்துகிட்டவொண்ணுதபடியா யிருக்கை. கிட்டிலுருண்டாகில், (உ) "வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகி மாண்டார்" என்று முடிந்துபோம்படி யிருக்குமவ னென்னுதல். (சேரும்) அவர்படி விஸஜாதீயமாயிராநின்றது. இருவர்க்குப் படுத்தப்படுக்கையிலே தனியே சாயவல்லராவதே!. (திருவரங்கர்) ஆர்த்தரக்ஷணம்பண்ணப்போந்தவர் அத்தைமறந்து படுக்கை வாய்ப்புக்கொண்டாடி சாய்ந்துகிடந்து உறங்காநின்ருர். இவ்வளவில் பரமபதத்திலே யிருந்தாரொன்றுதான் ஆறியிருக் கிறேனே?.

(ஆ) கெட்டேன்!. (முகத்துநோக்காரால்) பிரிந்தால் கழற்ற வேண்டுவது ப்ரணயித்வமன்றோ. கண்ணோக்கமும் தவிரவேணு மோ?. (அம்மனே அம்மனே) பிரிந்து ஆற்ருதஸமயத்திலே அநு ஸந்தித்தால் நாநீர்வரும்படி யிருக்குமவர், "புலி, ஸர்ப்பம்" என்றுப்போலே நினைக்கவும் பயாவஹமாம்படியாவதே!; இவர் படி இருந்தபடியென்: இவர் ஸ்வபாவம்போய், வேறுபட்டபடி யென்?. (ங) "[Grantha]" "ப்ராபதாபோஹிபீஷ்ம:" என்று - முடியுமளவில முகத்திலே விழிக்கலாவதும் ஆண்களுக் காய்க் கொள்ளீர். க

ஸர்வரோடே வெறுத்திருக்க. பெரியாழ்வார் அவரோடே கூடியிருக்கை யாலே, "தங்கள்தேவர்" என்று அவரோடேகூட்டி வெறுக்கககூடும். அந் ந்யாயம் இங்கு மென்றபடி. (பிதுர்நிதேஸம்) என்கிறவாக்யம் தெரியாது "அம்மனே! அம்மனே!" என்று - பயாவஹமான சொல்லு. ச

(க) (உ) ங - திருவ - ககை.

(ங) பார -

மூ.—எழிலுடைய அம்மனைமீர்! என்னரங்கத்தின்னமுதர்
குழலழகர்வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
எழுகமலப்பூவழக ரேம்மானுர் என்னுடைய
கழல்வளையைத் தாமும்கழல்வளையேயாக்கினரே. (உ)

ப - ரை. எழிலுடைய - அழகையுடைத்தான. அம்மனைமீர் - தாய்மார்களே! என் - எனக்காக, அரங்கத்து - கோயிலிலேவந்து சாய்ந்தருளுமவராய், தேவர்கள் விரும்பும் அம்ருதம் கோது என்னலாம்படி, இன் - பரமபோக்யமான, அமுதர்-அம்ருதமானவராய், குழலழகர்-அழகிய மயிர் முடியுடையராய், வாயழகர் - அழகிய திருப்பவளத்தையுடையராய், கண்ணழகர் - நேர்நின்று நோக்கவொண்ணாத கண்ணழகையுடையராய், கொப்பூழில்-திருநாபியிலே, எழு-உண்டான, கமலப்பூவழகர்-அழகிய கமலத்தையுடையராய், அதுக்கு மேலே, எம்மானுர் - இப்படிப்பட்ட அழகையுடையவரென்று அளவிட்டுச்சொல்ல வொண்ணாதவரானவர், என்னுடைய—, கழல் வளை— தாமும் - தானும், கழல்-மணிக்கட்டுவரைக்கும் கழலும்படியான, வளையே - வளையாகவே, ஆக்கினர்-செய்தாரென்கிறுள்.

வ்யா.—இரண்டாம் பாட்டு. (எழிலுடைய வம்மனைமீர்) ஆபரண மிழந்தார் வழக்கு ஆபரணம் பூண்டாரைக் கேட்குமித்தனையிறே என்றுப்போலே, எழிலிழந்தார் எழிலிழவாதாரைக் கேட்குமித்தனையிறே. (அம்மனைமீர்) எழிலுண்டாக்கிக் காட்ட வேண்டுமவர்களுக்கிறே எழிலிழந்தமைசொல்லுகிறது. தன்தசை

இரண்டாம் பாட்டு. (எழிலித்யாதி) "எழில்" - அழகு "எழிலுடைய வம்மனைமீர்" என்று-அவர்களுடைய எழிலுடைமை சொல்லுகிறதுக்குக் கருத்தென்ன; அருளிச்செய்கிறூர் (ஆபரணமிழந்தார் வழக்கித்யாதி.) அதாவது - கீழிற்பாட்டிலே தனக்கு ஆபரணமான சங்கு இழக்கையாலே, "ஏந்திழையீர்" என்றும், இங்கும் "எழிலுடைய" இத்யாதியாலே - அர்த்தாத் தன்னெழிலிழந்தமை பித்தமாகையாலே சொல்லுகிறது. ஆனுல் தாய்மாரோடே தானெழிலிழந்தமை சொல்லலாமோவென்ன; அருளிச்செய்கிறூர் (எழிலுண்டாக்கியித்யாதி.) (எழிலுண்டாக்கிக் காட்ட வேண்டுமவர்களுக்கிறே) என்றது - தான் எழிலிழந்தாலும் தாய்மார் கௌரவ்யராகையாலே, எழிலிழந்தோமென்று காட்டலஜ்ஜித்து எழிலுண்டாக்கிக் காட்டவேண்டுமவர்களுக்கிறே என்றபடி. அன்றிக்கே, "எழிலுண்டாக்கி" என்றது - தன்ப்ராவண்யம் தாய்மாருக்கு மறைக்கவேண்டி யிருக்கச் சொல்லு

யிருந்தபடி. (க) "సౌమిత్రే శోభతే పమ్పా" "ஸௌமித்ரே ஶோபதே பம்பா" என்னுமாப்போலே. (என்) தேவஜாதிக்குப் பொதுவான அம்ருதம்போலன்று, இவளுக்கு ஸ்வம்மான அம்ருதமாய்த்து. (அரங்கத்து) இது ஸ்வர்க்கத்திலேயிருக்கு மம்ருதமன்று. (இன்னமுதர்) ஶரீரத்துக்கு ஸ்தைர்யத்தைப் பண்ணிக்கொடுக்கும் அம்ருதமன்று.

(குழலழகரித்யாதி) கண்ணாலே பருகுமம்ருதம். அம்புக்கு நேர்நிற்க வொண்ணாதாப்போலே, நோக்குக்குநேர் நிற்கவொண்ணாமே திருக்குழலிலே யொதுங்கினாள்; அது வாய்கரையிலே போரவீசித்து; அதுக்குத்தோற்றுத் திருவடிகளிலே விழப்புக்கவாறே, நடுவே வயிறுபிடியாய்த்துக்காணும்; நடுவே வழிபறித்தது திருநாபீகமலம்; காமிநியிறே. (அம்மானார்) (உ) "జితన్తే" "ஜிதந்தே" என்னுமாப்போலே ஸ்வாபாவிகமான ஶேஷித்வத்துக்குத் தோற்றுச்சொல்லுகிற வார்த்தையல்ல.

(என்னித்யாதி) "எழில்கொண்டார்" என்று அவர்க்கு இத்தை எங்ஙனேநாம் குற்றமாகச்சொல்லும்படி, ப்ராணயித்வத்தில் ஏதேனும் தப்பநின்றாராகிலன்றோ நம்மாலவர்க்கு குற்றஞ்சொல்லலாவது, ஏககண்டரானவர்க்கு நாம் என்னகுற்றம் சொல்லு

கிறதென்றபடி. அப்படிமறைக்கவேண்டும் விஷயத்திலும் ஆர்த்தியாலே ஸ்வதஶையைச் சொன்னபேருண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (సౌమిత్రే ஸௌமித்ரே யித்யாதி.)

வாயாலே பருகுமம்ருதத்தை வ்யாவ்ருத்திக்கைக்காக (கண்ணாலே பருகுமம்ருதம்) என்று "கண்ணழகர் - குழலழகர்-வாயழகர்" என்றந்வயம். இருந்தபடியே அர்த்தமருளிச் செய்யாமல், * கண்ணை முன்னாகச் சொல்லுகிறது அர்த்த ஸ்வாரஸ்யத்தைப்பற்ற. ஸ்வரூபகுணமிருக்க, விக்ரஹ குணத்திலே யிழிவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (காமிநியிறே) என்று. (வார்த்தையல்ல) "జితన్తే" "ஜிதந்தே" இத்யாதிவத், அழகுக்குத்தோற்று "அம்மானார்" என்கிறாளென்று பூரிப்பது.

எழில்கொண்ட மாத்ரமன்றிக்கே வளையுங்கழலப் பண்ணுகையாலே வ்யங்க்யமாகச்சொல்லுகிறாள் (எழில்கொண்டாரித்யாதி). ஏதேனும் தப்ப நின்றார்) என்றது - வ்யங்க்யம்; (ஏக கண்டர்) என்றதும் - வ்யங்க்யம். இத்தைக்காட்டுகிறார் (அவர் பிரிந்தாலுமித்யாதி.) "கழல்வளை" என்றது -

(க) ரா-கி-க-ந. (உ) ஜிதந்தா.

வது. அவர் பிரிந்தாலும் கழலாதபடி திண்ணியவளை தேடியிட்டோமானோம் நாம், அவர் இதினுடைய நாமத்தைமெய்யாக்கினார். விஶ்லேஷத்திலும் தொங்கும் வளை தேடியிட்டோமானோம் நாம், அவர் ஒருக்ஷணமும் தொங்காதபடியாக்கினார்.

"தாமும்" என்ற அழகுபாரீர், இது அங்கும் ஏறப்பெற்றதில்லை, அவர் கையில் வளைகழன்றதாகில் இவள்கையில் வளை தொங்குமிறே. அவர்க்கும் இச்செல்லாமை யுண்டென்றறிந்தால் இவள் கையில் வளைகழலாதாய்த்து; சலிக்கிறபடி. "நீயொருத்தியும் இழந்தாயாகச்சொல்லுகிறதென், இங்ஙனேயன்றோ எல்லாரும் இருப்பது" என்ன; என்னையொழிய ஆரேனும் வளையிழந்தாருண்டோ வென்கிறாள். ... ... உ

அவ.— மூன்றாம்பாட்டு. உன்பக்கலுகப்பாலே யன்றோ அவன் உன்கையில் வளைகொண்டதென்ன: தம்முடைய ஐஶ்வர்யத்திலே யொருகுறை யுண்டாய்த்து பூரிக்கவேண்டி, இதொழியச் செல்லாமையிடாய்பட்டு இது பெற்ற பின்னை அது தீர்ந்தாராயிருந்தாரோ; என்னை இடர் விளைக்கைக்காகச் செய்தாரித்தனையன்றோ வென்று வெறுக்கிறாள்.

---

"வெள்வளை" என்னுமாப்போலே வளைக்குப்பே ரென்றருளிச் செய்வர். (மெய்யாக்கினார்) என்றது, "𑌨 𑌨𑌾𑌮𑌤𑌃 𑌕𑍇𑌵𑌲𑌮𑌰𑍍𑌥𑍋𑌽𑌪𑌿" "நநாமத: கேவலமர்த்தோபி" இதிந்யாயேந யோகரூடமாக்கினா ரென்றபடி. விவரணம் (தொங்கும்வளை யித்யாதி.) இத்தால் தாத்பர்யம் - விஶ்லேஷஸமயத்தில் வளையைக்கழலப்பண்ணி, அவ்வழியாலே கன்பக்கல் எனக்கு ப்ராவண்யமுண்டென்று எல்லாருமறியும்படி பண்ணினாராகையாலே நம்மோடேச கண்டா ரென்றபடி.

நான்கழலாதே இட்டவளையைக் கழல பண்ணினானென்றால் சலம் பண்ணினானென்று அர்த்தமாகவுங் கூடுமாயிருக்க, ஜககண்டியத்துக்குடலாகச் சொல்லுகைக்கு நியாமகமேதென்ன; (தாமும் என்றவழகு பாரீர், என்கிறார்.) "நாம்கழல்வளை" என்னலாயிருக்க, "தாமும்" என்று ஈடுபாடு தோற்றச் சொல்லுகையாலே என்று தாத்பர்யம். அன்றிக்கே, என்னுடைய கழல்வளையையே தாம் கழல்வளை யாக்கினாரென்றாய், வெறுப்பிலே தாத்பர்யம் (இது அங்குமித்யாதி.) இது-கழலுகிற விது, (சலிக்கிறபடி) என்ற ஸப்தார்த்தம். மணிக்கட்டுக்குக்கீழ் கழலாமல் சலிக்கிறதென்றபடி. "என் - கழல்வளை" என்றதைப்பற்ற வருளிச்செய்கிறார் (நீயொருத்தியு மித்யாதி.) உ

மூ.—பொங்கோதம்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும்
அங்காதுஞ்சோராமே ஆள்கின்றவெம்பெருமான்
செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார்
எங்கோல்வளையால் இடர்தீர்வராகாதே? (௫)

ப-ரை. பொங்கு ஓதம் - ஓதங்கிளர்ந்த கடலாலே, சூழ்ந்த - சூழப்பட்ட, புவனியும் - பூமியும், விண்ணுலகும் - பரமபதமுமாகிற, அங்கு - அவ்விரண்டு விபூதியிலும், ஆதும்சோராமே - ஒருகுறையும் வாராதபடி, ஆள்கின்ற - நிர்வஹித்துக்கொண்டு போருமவராய், எம்பெருமான் - எனக்கு மூன்றும் விபூதியாக ஆளுமவராய், செங்கோலுடைய - தாம் நேராகச்சொல்லி ஆஜ்ஞை செலுத்தும்படி, திருவரங்கச்செல்வனார் - திருவரங்கத்தில் பள்ளிகொண்டருளுமவர், எம்கோல் வளையால் - என்னுடைய அழகியவளையாலே, இடர்தீர்வராகாதே - தம்துயர்தீரப்பெறுவரென்கிறாள்.

வ்யா.—(பொங்கோதம் சூழ்ந்த புவனியும்) ஓதங்கிளர்ந்த கடலை வேலியாகவுடைய பூமியும். மர்யாதையில் ஒன்றுங்குறைந்ததில்லையிறே அங்கு; பூமிக்குமேலே விஞ்சிவாராநிற்கச்செய்தேயும் கரையேறமாட்டாதே கிடக்கிறதிறே கடல். (விண்ணுலகும்) ஒருமர்யாதையில்லாத த்ரிபாத்விபூதியும். (அங்காதும் சோராமே யாள்கின்ற) உபய விபூதியிலும் ஒருகுறைபிறவாமே நிர்வஹித்துக்கொண்டு போருகிற. அழிந்ததென்று தன்மேலே ஏறிட்டுக்கொண்டு நோக்கியும், உண்டாக்கினவன்று தன்னிலையிலே நிறுத்தியும் நடத்தும் இவ்விபூதியை; நித்யஸம்ஶ்லேஷத்தாலே ஸத்தையைக்கொடுத்து நோக்கும் அவ்விபூதியை. (எம்பெருமான்) என்னையொரு மூன்றும் விபூதியாக ஆளாநின்றான். ஶப்தாதிகளாலே களிக்கும்படி பண்ணிவைத்தான் இவ்விபூதியை; தன்னை அநுபவித்துக் களிக்கும்படி பண்ணிவைத்தான அவ்விபூதியை; நான் இங்குள்ளார்க்கும கூட்டன்றிக்கே அங்குள்ளார்க்கும் கூட்டன்றிக்கே, நடுவே நோவுபடும்படி பண்ணிவைத்தான் என்னையொருத்தியையும்

---

மூன்றும்பாட்டு. (பொங்கோதமித்யாதி) "அங்கு" இங்குமர்யாதை தப்பிக் கிடக்கிறதென்று கருத்து. "ஆதும்" ஒன்றும். (ஶப்தாதிகளாலே யித்யாதி) தாத்பர்யார்த்தம்.

(பெருமாளுமல்லகாணும்) என்றதுக்குத் தாத்பர்யம் - செங்கோலாய்த்தென்றபடி. "செங்கோல்" ஆஜ்ஞை. "எம் கோல்வளை" என் அழகிய

(செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார்) தம்முடைய ஆஜ்ஞாநுவர்த்தநம் ஸ்வஸங்கல்பத்தாலே நடத்துமது போராதென்று கோயிலிலே வந்து சாய்ந்தவர். பெரிய பெருமாளோ பின்னை உபயவிபூதியையும் ஆளுகிறுரென்னில்; அல்ல, அவரிட்டதோரேவலாள் (திருவரங்கச்செல்வனார்) பெரிய பெருமாளுமல்லர் காணும். (எங்கோலித்யாதி) தமக்கொரு குறையுண்டாய், என்கையில் வளையொழியச் செல்லாமே குறைப்பட்டு, அவ்விடர் தீர்க்கைக்காகக் கொண்டாரோ? எனக்கு க்லேஶத்தை விளைக்கைக்காகச் செய்தாரித்தனையன்றோ? கழலாதபடி திண்ணிதாக இட்டவளையையும் கொண்டார். கோல்வளையையுங் கொண்டார். ... ... ... ... ந

அவ.—நாலாம்பாட்டு. அல்லாதாரெல்லாம் வளையிட்டிருக்கச்செய்தே கையில் வளைகொண்டது உன்பக்கலுக்கப்பாலேயன்றோ; அது ஹர்ஷஹேதுவித்தனையல்லது ஶோகஹேதுவாகவற்றோவென்ன; ஓம்; உகப்பு. ஒன்றிலேயாய், மற்றையதிலின்றிக்கேயாகாதே யிருப்பதென்கிறாள். "தாம் விரும்பியிருக்கும் வளை" என்று, அதுகொண்டாகிலும் எங்கள் ஸத்தையை நோக்கிக்கொண்டு கிடக்கவேணுமென்றிருந்தோம். அதொழியத் தம்ஸத்தை நோக்கவரிதாய், அதிலே விருப்பத்தைப்பண்ணி அத்தைக்கொண்டாராயிருக்குமாகில், எங்கள் ஸத்தை கிடக்கவேணுமென்று கண்வட்டத்தே இத்தெருவேயாகிலும் ஒருக்கால் போகாரோ?

மூ.—மச்சணிமாட மதிளரங்கர்வாமனனார்
பச்சைப்பசுந்தேவர் தாம்பண்டுநீரேற்ற
பிச்சைக்குறையாகி என்னுடையபெய்வளைமேல்
இச்சையுடையரேல் இத்தெருவேபோதாரே?. (ச)

ப-ரை. மச்சு - மேல்தளங்களாலே, அணி - அலங்கரிக்கப்பட்ட, மாடம் - மாடங்களையும், மதிள் - அரணாகப்பொரும்படியான மதிளையுமுடைத்தான, அரங்கர் - கோயிலேவந்து நித்யஸந்நிதி பண்ணுமவராய், தம்முடைமை பெறுகைக்காக, வாமநனார் - *குறட்பிரமசாரியானவராய், பச்சைப்பசுந்தேவர் தாம் -

வளை. கோல்வளை - வளைவிஶேஷம். (திண்ணிதாக இட்டவளையும் கொண்டார்) என்றது - கீழிற்பாட்டிலது. ந

கலப்பற்ற பரதேவதையானவர், பண்டு - தேவர்கள் மஹாபலிகையில் ராஜ்யத்தைப் பறிகொடுத்துத் திகைத்த முற்காலத்திலே, நீரேற்ற - "மூவடிதா" என்று இரந்து நீரேற்றுப்பெற்ற, பிச்சை - பிச்சையில், குறையாகி - குறைவுடையராய், அக்குறை தீர்க்கைக்காக, என்னுடைய—, பெய்வளைமேல் - பெய்வளையிலே, இச்சையுடையரேல் - ஆசையையுடையரேயானால், இத்தெருவே - இத்தெருவின் வழியாக, போதாரே - எழுந்தருளாரோ? என்கிறாள்.

வ்யா.— மச்சணிமாடமித்யாதி) மச்சுக்களாலே அலங்க்ருதமான மாடங்களையும் அரணாகப்போரும்படியான மதிள்களையுமுடைத்தான கோயிலிலே வந்து தம்முடைமை பெறுகைக்காகத் தாம் அர்த்திகளாய்க் கண்வளர்ந்தருளுகிறவர். (மச்சணிமாட மதிளரங்கர்வாமனனார்) மாடமெடுக்கவும் மாளிகைகளெடுக்கவும் கற்றாரித்தனைபோக்கி, ஒருக்காலும் ப்ரணயித்வத்தில் புகியதுண்டிலர் காணும். (வாமனனார்) சிறியவன்பெற்ற செல்வமிறே; எத்தைச் செய்வனென்றறியானே. (வாமனனார்) * சக்கிரமேந்தித் தனியொருமாணியாய் உத்தரவேதியில் நின்ற ப்ரஹ்மசாரியையிறே இவள் தானாசைப்படுகிறது.

(பச்சைப்பசுந்தேவர்) அழைத்த அநுபவத்திலன்றே, விடவொண்ணாதபடியாயிருக்கை வடிவழகு (௧) "[illegible] மேகஶ்யாமம்] "கைகேசி வயிற்றிற் பிறப்பால் வந்த தாபமாறுங்கிடீர், அவ்வழகிய வடிவிலே விழிக்கப்பெற்றேனாகில்" என்றானிறே ஸ்ரீபரதாழ்வான். அன்றிக்கே, கலப்பற்ற பரதேவதை. (௨) "அங்குவைத்திங்குப்பிறந்த" என்னக்கடவதிறே. (தேவர்) த்யோதநாதி குணயோகத்தையுடையவர். (தாம்பண்டு நீரேற்ற) (௩) "கொள்வன் நான் மாவலி" என்று. அதுபெற்றன்றிக் கரி

---

நாலாம்பாட்டு. (மச்சணியித்யாதி) "பண்டுநீரேற்ற" என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார் * (உகப்பொன்றிலே யித்யாதி.) கீழ்வாக்ய விவரணம் (தாம் விரும்பியித்யாதி). "இத்தெருவே போதாரே" என்றதைப்பற்ற அவதாரிகாந்தரமருளிச்செய்கிறார். (தாம் விரும்பியித்யாதி) "மச்சு" மேல்தளம். (எத்தைச் செய்வன்) என்றது - அல்பனுக்கு வந்த ஐஶ்வர்யமாகையாலே மச்சு முதலானதுங்கட்டத்துடங்கினாரென்றபடி.

"பச்சைப்பசுந்தேவர்"—கலப்பற்ற உத்க்ருஷ்டத்தையுடையவர். "பச்சைப்பசும்" என்றது - ஶ்யாமமான திருமேனி என்று அர்த்தாந்தர விவக்ஷயா

---

(௧) ரா-அ. (௨) தி-வாய்-௫-௫-௫. (௩) தி-வாய்-௫-௮-௯.

யாதானுய், (க) "ஒண்டாரை நீரங்கைதோய நிமிர்ந்திலே" என்கிறபடியே உகதபூர்வகமாகக்கொண்ட.

(பிச்சைக்குறையாகி) மஹாபலிபக்கல் பெற்றுக்குறையுண்டாய், அது என்கைபாலே பெறவேணுமென்னும் இச்சையாலே. (என்னுடைய பெய்வளை மேலிச்சைவுடையரேல்) அம்மண்ணேபாதி இச்சையும் என்வளையிலே யுடையாராகிலென்னுமாம். ‡ என்கையில்வளையாலே குறைநிரப்ப வேணுமென்னும் இச்சையுண்டாகில். (இக்தெருவேபோதாரே) "நந்தெருவின் நடுவே

‡ தாமிரந்த மண்ணில் வீறும் என்கையில் வளையில் வீறும் தாம் சொல்லக்கேட்டிருக்கு மத்தனையிறே நாம்; தாமிரந்த பூமியார்க்கு ஆபரணமாகவற்று. இடப்பட்டவளையின்மேலே; ஸ்ரீயஃபதியாய்க்கொடுத்து வளர்ந்த கையையுடையராயிருக்கிறவர் தாம் கழஞ்ஜுமண்பெறுகைக்குத் தம்மை இரப்பாளராக்கி, அதில்பண்ணின விருப்பம் என்பக்கலிலே பண்ணி இருந்தாராகில்; என் கையில் வளையாலே குறைதீரவேணுமென்னு மிச்சையுண்டாகில்.

(இக்தெருவே போதாரே) என்கண்வட்டத்திலே நடந்தவலாகாதோ?; தன்னுடைமையல்லாததைக் கொடுத்து ஔதார்யம் கொண்டிருக்கிறவனைப்போலே இருப்பனோநான். "* ஒன்று நூறாயிரமாகக்கொடுத்துப்பின்னுமாளும் செய்வன்" என்றிருக்குமவளன்றோ நான் [கொண்டானையல்லால் கொடுத்தானை யார்பழிப்பார்] தன்னதல்லாதவற்றைக் கொடுத்தவனைக் குறைசொல்லுவாரில்லை. "தனக்கு கொடுத்தவனுக்கு அபகாரத்தைப்பண்ணு

(அங்குவைத்து) என்று, இந்த யிரண்டாமர்த்தத்திலே (த்யோதநாதி யென்று.)

"பிச்சைக்குறையாகி" ஏற்ற பிச்சையிலே குறையுண்டாய், அத்தை நிரப்ப இச்சையுடையரேலென்னுதல்; அன்றிக்கே, பிச்சை ஏலாமையாலே குறைப்பட்டு, அக்குறைதீர மண்ணேற்றாப்போலே, என்வளையை யிரவாத போது குறையுண்டாய், குறைதீர இச்சையுடையரேலென்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் (அம்மண்ணித்யாதி.) (அம்மண்ணேபாதி) என்ற வாக்யத்தில் அர்த்தாந்தரத்துக்குச்சேர அந்வயிக்கும்போது "நீரேற்ற பிச்சையிலே குறையானுப்போலே" என்றந்வயிப்பது என்றருளிச்செய்வர். ச

(க) க-திரு-எகூ.

"தாமிரந்த" என்பது முதல் "யதோபாஸநம்

வந்து" என்கிறபடியே-எங்கள் தெருவிலே எழுந்தருளாரோ? பின்னை அஸுரனுடைய யஜ்ஞவாடத்திலே நடந்த நடையை இத்தெருவிலே நடந்தாலாகாதோ? ... ௪

---

வதே, இவன்தன்னில் க்ருதக்நரில்லை" என்னாநிற்பர்கள். தன்னதல்லாதவற்றைக் கொடுத்தவனையன்றோ நெல்லிலே வைத்துத் தெரிக்கவேண்டுவதென்கிறாள்.

நம்முடைய ஆத்மஸமர்பணம்போலே அவனுடைய ஔதார்யமும்; அவனுடைய வஸ்துவையிறே அவனுக்குக் கொடுக்கிறது, ஆனால் ஆத்மஸமர்பணம் குற்றமோவென்னில்; "என்னது" என்றிருந்தவன்று "அவனுக்கு" என்று கொடுக்க ப்ராப்தம். ப்ரமித்தவன்றாய்த்தது கொடுக்க ப்ராப்தியுள்ளது. உணர்த்தியுண்டானவாறே "[illegible]" "அதவாகிந்நுஸமர்பயாமிதே" என்னா நின்றார்களிறே. ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தால் அவனுடைய ஸ்வரூபகுணங்களோபாதி அங்கே தோற்றக்கடவதாய்த்து இது; அவனுடைய ப்ராப்யத்வத்தி லேகதேசமாய் அன்வயிக்குமத்தனை. ஆத்மயாதாத்ம்யஜ்ஞானம் முன்னாகப் பற்றினால் அனுபவஸமயத்திலும் ஆத்ம யாதாத்ம்யஜ்ஞானம் முன்னாகவிறே அனுபவிப்பது. *யதோபாஸநம் பலமாகையாலே.

---

மூ.—பொல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில்நீரேற்று
எல்லாவுலகும் அளந்துகொண்டவெம்பெருமான்
நல்லார்கள்வாழும் நளிரரங்கநாகணையான்
இல்லாதோம்கைப்பொருளும் எய்துவானொத்துளனே. (ரு)

பதவுரை. பொல்லா - அழகுமிக்கிருந்துள்ள, குறளுருவாய் - வாமநாவதாரஞ்செய்தருளி, பொன் - அழகிய, கையில் - கையிலே, நீரேற்று-நீரையேற்று, எல்லாவுலகும் - ஸகலலோகங்களையும், அளந்து—, கொண்ட - தன்காற்கீழேயிட்டுக்கொண்டவனாய், எம்பெருமான் - அச்செயலாலே யென்னை அநந்யார்ஹையாக்கினவனாய், நல்லார்கள் - அநந்யப்ரயோஜநர், வாழும் - நித்யவாஸம் பண்ணுமதாய், நளிர் - ஆச்ரிதாபத்தை யாற்றவற்றன குளிர்த்தி மிக்கிருக்கிற, அரங்கம் - கோயிலிலே, நாகணையான் - திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளுமவர், இல்லாதோம் - நம்மையொழிய வேறுதுணையில்லாத வென்னுடைய, கைப்பொருளும் - கைம்முதலையும், எய்துவானொத்துளன் - லபிக்கத் தேடுமவனைப்போலே யிராநின்றானென்கிறாள்.

---

பலமாகையாலே" என்றுமளவாக அதிக பாடம் காண்கிறது.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பொல்லாக்குறளுருவாய்) கண்ணெச்சில் வாராமைக்குக் கரிபூசுகிறாராதல்; அழகிலே விஜாதீயதையாலே "அழகிது" என்னில், நாட்டிலழகோடொக்க நினைக்கக்கூடுமென்று "பொல்லா" என்கிறாராதல். (குறளுருவாய்) கோடியைக் காணியாக்கினாப்போலே பெரியவடிவழகையெல்லாம் இவ்வடிவழகிலேயமைத்து அநுபவிக்கலாம்படி அடக்கினபடி. (பொற்கையில் நீரேற்று) அழகியகையிலே நீரையேற்று. அவனுக்குப் பொற்கலத்தில் பிக்ஷையாய்த்தே.

(எல்லாவுலகு மளந்துகொண்ட) பரஸ்வாபஹாரத்துக்கு அடியிடுகிறபடி. ஒன்றைக்கொள்ளப் புக்கானாகில் கொடுத்தவர்களுக்கு பாதாளமே கதியாம்படியிறே கொள்ளுவது; * இறைப்பொழுதில் பாதாளம் கலவிருக்கை கொடுத்துகந்தவனிறே. தனக்கு இரப்பிட்டவர்களைக்குழியிலே தள்ளி ஹ்ருஷ்டனுமவனிறே. (எம்பெருமான்) அச்செயலாலே என்னை அநந்யார்ஹையாக்கினவன். (க) "மூவடி மண்கொண்டளந்த மன்னன்சரிதைக்கே மாலாகிப் பொன்பயந்தேன்" என்கிறபடியே அச்செயலிலே காணும் இவள் ஈடுபட்டது.

(நல்லார்கள் வாழும் நளிரரங்கம்) அநந்யப்ரயோஜநர் வர்த்திக்கிற தேஶம். (உ) 'மறைப்பெருந்தீவளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார், சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே" என்னக்கடவதிறே. அத்தேஶ வாஸநதானே வாழ்ச்சி. (ந) "வேங்கடத்தைப்பதியாக வாழ்வீர்காள்" என்னக்கடவதிறே. (நளிரரங்கம்) நளிர்-குளிர்த்தி. ஶ்ரமஹரமாய் தாபத்ரயங்களும் தட்டாததேஶம். (நாகணையான்) அநந்தஶாயி. என்னையொழியவும் படுக்கைபொருந்துவதே!

---

அஞ்சாம் பாட்டு. (பொல்லாவித்யாதி) (கோடியைக் காணியாக்குகை) - கோடித்ரவ்யத்தையிட்டு ஒரு ரத்நத்தைவாங்கி, அந்தை மார்பிலே வைத்தநுபவிக்கை.

(அடியிடுகிறபடி) என்றது - சாடுவுமாப், "கைப்பொருளு மெய்துவானெத்துளன்" என்றதிலும் நோக்காயிருக்கிறது. "பொற்கை" - "அழகியகை." "அளந்த" என்றத்தைப்தற்ற்வருளிச்செய்கிறார்(தனக் கித்யாதி.) "நளிர்" - குளிர்த்தியும், நடுக்கமும். "எய்துவான்" - கிட்டுவான். ரு

---

* இவ்விரண்டு வாக்யங்களுக்குத் தக்க மூலவாக்யத்தைக் கோசாந்தரங்களில் கண்டு கொள்வது.

(க) தி-மொ-கூ-ச-உ. (உ) பெரி-தி-ச-அ-உ. (ந) அ-கூ.

(இல்லாதோம் கைப்பொருளும்) அப்படுக்கையிலேற பாக்ய மில்லாத என்கையில், மஹாபலியைப்போலே தம் அபேக்ஷிதம் பூர்ணமாகக் கொடுக்கைக்கில்லாதவென்னுதல்; தம்மையொழி யத் துணையில்லாதவென்னுதல். (கைப்பொருளும்) - கைம்முத லும். (எய்துவானொத்தளனே) இது கைக்கொள்ளுவான்பே, லே யிராநின்றான்.

வ்யாக்யாநாந்தரத்தில் வார்த்தை ;—(நளிரரங்கம்) இத்தேஶ த்திலே வர்த்திக்கிறவன்கிடீர் ஸ்த்ரீகாதுகர் செய்வுத்தைச் செய்கி றான். ஒரோ ப்ரதேஶங்களிலே ஸுக்ருதிகளடங்கலும் வர்த் திக்கும் தேஶமாயிருக்கும். (நல்லார்கள்) ஸாதநாநுஷ்டாநம் பண்ணி வர்த்திக்கையன்றிக்கே பலாநுபவம்பண்ணி வர்த்திக் கும் தேஶமாய்த்து. ப்ராப்ய வஸ்து ஸுலபமாய் நித்யஸந்நிதி பண்ணுகையாலே அநுபவமாய்ச் செல்லாநிற்கும்; அத்தேஶத் தில் வாஸத்தை யாசைப்பட்டார்க்கு அநுபவமொழியவுண்டோ?. "பரமபதம் வரில் செய்வதென்"? என்று நடுங்குவர்கள் போலே காணும் அவ்வூரில் வர்த்திக்கிறவர்கள்: (க) "இச்சுவை தவிர யான்போ யிந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண் டேன்" என்னும்படியே.

பட்டரை, முதுகில் புண்ணாலே ஞொந்துகிடக்கச்செய்தே அருள்பாடிட்டு, பெருமாள், "வாராய்! அஞ்ஜிநாயோ" என்று கேட்டருள; "நாயன்தே! எனக்குச் செய்து தந்தருளாத தாமில்லை, இங்கேயிருக்கச்செய்தேயும் பரமபதம் என் ஶிறுமுறிப் படி ஶொல்லும்படி பண்ணியருளிற்று; அதிலொரு குறையு மில்லை. இங்கே குளிர்ந்தமுகத்தையும் திருநாமத்தழும்பையும் முறுவலையும் இழக்கவென்றால் அடியேன் நெஞ்ஜேனோ?" என்றார்.

ஆளவந்தார் மகனார் ஶொட்டைநம்பி, ஓரளவிலே திருக் கோட்டியூர் நம்பியை னெகிழ ஒருவார்த்தை ஶொன்னாராய், "நீ கடக்கவர்த்தி" என்றருளிச்செய்ய; அவரும படைவீட்டிலே ராஜஸேவைபண்ணித் திரிந்தாராய், பின்பு இவருடைய சரம ஸமயத்திலே இவருடைய அத்யவஸாயம் அறியவேணுமென்று, "நீ னினைக்கக்கிடக்கிறதென்?" என்று கேட்டார்களாய்; "ஆள வந்தார் ஸ்ரீபாதத்தின் ஸம்பந்தம் பரமபதப்ராப்திபண்ணித் தந்தல்

(க) திருமா - உ.

லதுவிடாது; அங்கேபோனல் ஸ்ரீ வைகுண்டநாதன் முகம் நம்பெருமாள் திருமுகமண்டலம்போலே குளிர்ந்திருந்த தில்லையாகில் முறிச்சுகொண்டு வருவதாக நினைத்திருந்தேன்" என்றாராம்;- (க) "ந ச புநராவர்த்ததே", "நசபுனராவர்ததே" எங்கிற மர்யாதையை இடறிப்போரவேணுமே" என்றாராம்.

(நளிரரங்கம்) தாபத்ரய மாறுகைக்குப் பரமபதம் தேடிப் போகவேண்டா. (நாகணையான்) ப்ராப்யவஸ்துவை அநுபவிக்கும்போது படுக்கையிலேகண்டு அநுபவிக்கலாயிருக்கை.

(இல்லாதோம் கைப்பொருளும்) வேணுமாகில் அவன் பக்கலுள்ளதுகொள்ள ப்ராப்தம்; "தன்னது" என்றிருக்கிறவென்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணுகிறது எதுக்காக. தம்மையொழிய ஆஶ்ரயமில்லாத வெங்களுடைய கைப்பொருளுண்டு - உடம்பு; அதுபோலேகாணும் ஶேஷித்தது. "இல்லாதோம்" என்னு நிற்கச்செய்தே, "கைப்பொருள்" என்பானென்னென்னில்; அவன் விரும்பியிருக்கும் வழியாலே. (எய்துவானொத்துளனே) தம்முடம்பை ப்ராப்யமென்று நினைத்திருப்பார் அது பெறுகைக்குப் படும்பாடத்தனையும், தாம் என்னுடம்பை ப்ராப்யமென்று, அது பெறுகைக்குப் படாநின்றார்; தந்தாமுக்கில்லாதது பெற்றாப்போலே. ௫

௬.-கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச்செல்வனார்
எப்பொருட்கும் நின்று ஆர்க்குமெய்தாது நான்மறையின்
சொற்பொருளாய்நின்று ஆரென்மெய்ப்பொருளும்கொண்டாரே.

ப - ரை. முன்னமே - பிறக்கிறபோதே, கைப்பொருள்கள் - கையில் தரித்தவளைகளை, கைக்கொண்டார் - கைக்கொண்டவராய், காவிரிநீர் - திருக்காவேரியின் ப்ரவாஹமானது, செய் - வயல்களிலே, புரள - புரளும்படி, ஓடும்- ஓடாநின்றுள்ள, திருவரங்கச் செல்வனார் - ஸ்ரீரங்க ஸ்ரீயையுடையவர், எப்பொருட்கும் - குரங்கு வேடுவிச்சி யிவர்களுக்கு, நின்று - ஸுலபனாய் நின்று, ஆர்க்கும் - எத்தனையேனு மறிவுடையார்க்கும், எய்தாது - கிட்டாதவராய், நான்மறையின் - நான்கு வேதங்களிலுள்ள, சொல் - சொல்லுக்கு, பொருளாய் நின்றார் - பொருளாய் நின்றவர், என் மெய்ப்பொருளும் - என் ஆத்மாத்மீயங்களிரண்டையும், கொண்டார் - கைக்கொண்டாரென்கிறாள்.

---

(க) சாந்தோ-

வ்யா.—ஆறும் பாட்டு. (கைப்பொருள்க ளித்யாதி) கைம் முதலுள்ளவையும் முன்னே கைக்கொண்டார். (காவிரிநீர் செய்ப் புரளவோடுந் திருவரங்கச்செல்வனார்) அசேதநமான ஜலமுங்கூட ரக்ஷ்யவர்க்கத்தை ரக்ஷிக்கும் தேஶமாய்த்து. தாம் பரமசேதநர், தேஶமது, அத்தேஶவாஸத்துக்கும் என்னை ஸர்வஸ்வஹரணம் பண்ணுகைக்கும் தமக்கென்ன சேர்த்தியுண்டு

(எப்பொருட்கும் நின்று) ஒருவேடுவிச்சி குரங்கு இவர்களுக்கு ஸுலபனாய் நின்று. (ஆர்க்குமெய்தாது) எத்தனையேனு மதிஶயிதஜ்ஞாநரேயாகிலும் ஸ்வயத்நத்தால் ப்ராபிக்க நினைப்பார்க்கு துஷ்ப்ராபராய். (நான்மறையித்யாதி) வேதைகஸமதிகம்யராய் நின்றார். (க) "வேதாந்த விழுப்பொருளின்மேலிருந்த விளக்கு" என்னக்கடவதிறே. (என்மெய்ப்பொருளுங்கொண்டாரே) ஆத்மாத்மீயங்க ளிரண்டையும் கொண்டார். ... ... *

வ்யாக்யாநாந்தரத்தில் வாக்யம்;—(கைப்பொரு ளித்யாதி) இவளுக்கு முலைப்பாலோடேகூடப்புகுந்ததிறே பகவத்ஸம்பந்தம். * 𑌸𑍃𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑌨𑌵𑌾𑌸𑌾𑌯 * ஸ்ர்ஷ்டஸ்த்வம்வநவாஸாயபோலே, பிறக்கிறபோதே வளையிழந்துகொண்டுபோலே காணும் பிறந்தது; இத்தனையும் சொல்லத்தகும்படி யோக்யவஸ்துவிறே. (உ) [𑌬𑌾𑌲𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿 𑌸𑍁𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌃 - பால்யாத்ப்ரப்ர்திஸுஸ்நிக்த:] அந்வயத்தில் தரித்தும் வ்யதிரேகத்தில் தரியாமையும் இவளுக்கு ஸத்தாப்ரயுக்தமாய்த்து.

(காவிரியித்யாதி) ஸாதநம் ஸாத்யத்தோடு தோள்தீண்டியாய் வ்யபிசரியாத தேஶத்திலே வர்த்திக்கிறவர். ஸாதநாநுஷ்டாநம் பண்ணி பலம் விபலித்தல், ப்ரபல கர்மப்ரதிருத்தமாய் நிற்கச் செய்கையன்றிக்கே கைப்புகுந்து வர்த்திக்கிற தேஶம்; விளையுமதிலே விளைவிக்குமது வவ்வால்நாற்றியாகவந்து விழாநிற்குமாய்த்து.

உபாய ஸ்வீகாரம் பண்ணுகிறவனும் ஸ்வீகாரமும் கிடக்கச் செய்தே, தானே உபாயமாகவேண்டுகிறது. பலத்தோடு வ்யபிசரியாததொன்று உபாயமாக வேண்டுகையிறே. உபாய புத்தி பண்ணுகிற இவன்பக்கல் உபாயபாவம் கிடையாதே. பலத்துக்கு பூர்வக்ஷணவர்த்திகளானவற்றுக்கெல்லாம் உபாயபாவமில்லையே.

---

(க) பெரி - தி - ச - ௩ - கக. (உ) ரா - பா - கஅ - உஎ.

கரண ஶரீராந்தர்க்கதமானதிலேயிறே உபாய பாவம்கிடப்பது. அவ்வூரில் ஸம்பந்தத்தைச் சொல்லிவாழ்கிறவர்.

(எப்பொருளித்யாதி) ஒருகுரங்கு, வேடுவிச்சி இவர்களுக்கு ஸுலபனாய் நின்று. (க) "ஸுக்ரீவம் ஶரணம் கத:" "ஸுக்ரீவம்ஶரணங்கத:" (உ) "ஸுக்ரீவம் நாதமிச்சதி" "ஸுக்ரீவம் நாதமிச்சதி" என்கிறபடியே தான்சொல்லுகை யன்றிக்கே அருகுநின்றாருங்கூடச் சொல்லலாம்படி தம்மை யமைத்து வைக்கை. [லோகநாத: புரா பூத்வா - லோகநாத:புராபூத்வா] லோகநாதனுனவிது மஹாராஜர் பக்கல் பாரதந்த்ரியத்துக்கு குருகுலவாஸம் பண்ணினபடி. இப்பாரதந்த்ரியம் குணமாகைக்கு வேண்டும் ஸ்வாதந்த்ரியமே யாய்த்து உள்ளது. எளியவன் தாழநின்றால அது குணமாகாதிறே. [இச்சதி- இச்சதி] எல்லாரும் தந்தாமுக்கில்லாதத்தை யாசைப்படுமித்தனை யிறே. * அநாதனிறேயிவன். இடைச்சிக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி நின்றும். வேடுவிச்சிக்குக் கிட்டி அஸாதாரணர் பண்ணும் பரிசர்யைகள் பண்ணலாம்படி நின்றும் போரும்படியும்.

ஒருநாள் பரத்வமே பிடித்து ஸௌலப்யத்தளவும் செல்லவுபபாதித்தருள, அத்தைக்கேட்டு எம்பார், கண்ணும் கண்ணீருமாய் வித்தராயிருக்க, அவரைப் பார்த்தருளி, "அவனுடைய ஸௌலப்யத்தைச் சொன்னவாறே நாட்டார், 'இத்தனை எளியவனோ' என்று கைவிட்டுப்போனார்கள். பாக்யஹாநியாலே, 'அப்பெரியவன் இப்படி எளியவனுவதே! என்று நெருங்குகைக்குடலாய்த்து உமக்கொருவாக்கும்" என்றருளிச் செய்தருளினராம். (ரு) 'வானரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே' 'வாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே' (ச) 'ஏதத்வ்ரதம் மம' 'ஏதத்வ்ரதம்மம' (ரு) 'நத்யஜேயம் கதஞ்சந' 'நத்யஜேயம் கதஞ்சந' என்றதுக்கு "இருவரும் ஶரணாகதபரித்ராணம் பண்ணுகிறார்கள்" என்று பட்டர்; இவர், (க) "ஸுக்ரீவம் ஶரணம் கத:" "ஸுக்ரீவம் ஶரணங்கத:" என்றார்; அவர் (கூ) "ராகவம் ஶரணம் கத:" "ராகவம்ஶரணங்கத:"

---

ஆறாம் பாட்டு. (கைப்பொருள்க ளித்யாதி) "எப்பொருள்" - எல்லா பதார்த்தங்களும். "ஆர்க்கும்" - எத்தனையேனும் அறிவுடையார்க்கும் "எய்தாது" - கிட்டாது; நான்மறையாகிற சொல்லுக்குப் பொருளாய் நின்றாரென்றபடி. "மெய்ப்பொருள்" - ஆத்மா. "கைப்பொருள்" - ஆத்மீயம். ஆக, கீழ்ச்சொன்ன கைப்பொருளும் ஆத்மீயங்கள். சூ

---

(க) ரா - கி - ச - கக. (உ) ரா - கி - ச - கஅ.
(ந) ரா -
(ச) ரா - யு - கஅ - நந.
(ரு) ரா - யு - கஅ - ந.
(கூ) ரா - யு - கந - நஉ.

என்றார்; இனி யாரையார்விட; விபீஷணனை ஸ்வீகரிக்கையாவது-பெருமாளை அவன்கையிலே காட்டிக்கொடுக்கை என்றிருக்கிறவர். அவர் முதிரநிற்க நமக்குடலென்றிருக்கிறாராய்த்து இவர்; நாம் முன்பே ப்ரதிஜ்ஞைபண்ணினோம், இனியது தலைக்கட்டுமித்தனையிறே என்கிறார்.

(ஆர்க்கு மெய்தாது) எத்தனையேனும் மதிஶாயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் கிட்டவரியனாயிருக்கும். (க) "பெண்ணுலாம்சடையினானும்" இத்யாதி. (ஆர்க்கு மித்யாதி) ஸர்வாந்தராத்மாவாய் நின்று எய்தானென்றுமாம். (நான்மறை யித்யாதி) வேதார்த்தம், வேதப்ரதிபாத்யன்.

(என்னித்யாதி) ஓலைப்புறத்திற் கேட்டுப்போரும் வஸ்து கண்ணுக்கிலக்காய் வந்துகிட்டி இட்டீடிட்டுக்கொள்ளு முடம்பைக் கொண்டு; தன்னை புஜிக்குமவர்கள் ஸ்வரூபங்களைவிட்டுத் திருமேனியை விரும்புமாப்போலே, தானும் ததீய விஷயத்தில் ஸ்வருபாதிகளைவிட்டு உடம்பையாய்த்து விரும்புவது. இருவருமுடம்பையாய்த்து விரும்புவது.

திருமாலையாண்டான், "ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை த்யாஜ்யமென்று கேட்டுப்போராநிற்கச்செய்தேயும், இத்தை விடவேண்டியிருக்கிறதில்லை, ஆளவந்தார் ஸ்ரீ பாதத்தை யாஶ்ரயிக்கைக்குறுப்பாமென்று ஆதரியாநின்றேன்" என்றாராம். கூ

மூ.—உண்ணாதுறங்காது ஒலிகடலையூடறுத்துப்
பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்றபேதெல்லாம்
திண்ணார்மதிள்சூழ் திருவரங்கச்செல்வனார்
எண்ணாதே தம்முடைய நன்மைகளேயெண்ணுவரோ. (எ)

ப - ரை. திண் - த்ருடமாய், ஆர் - ஓங்கியிருப்பதான, மதிள் - மதிளாலே சூழ் - சூழப்பட்ட, திருவரங்கம் - ஸ்ரீரங்கத்தில் வஸிக்கிறவராய், செல்வனார் - செல்வத்தையுடையரான அழகிய மணவாளன், பெண் - பிராட்டியுடைய, ஆக்கை - திருமேனியிலுண்டான ஆஸக்தியாலே, ஆப்புண்டு-கட்டுண்டவராய், உண்ணாது - அமுதுசெய்யாமலும், உறங்காது - கண்வளர்ந்தருளாமலும், ஒலி - சப்தியாநின்றுள்ள, கடலை - ஸமுத்ரத்தை, ஊடறுத்து - இருகூறும்படி ஸேதுபந்தம் பண்ணி, இவ்வகையாக, தாம் உற்ற - தாம்பட்ட, பேதெல்லாம் - எளிமையையெல்லாம், எண்ணாது - எண்ணாமல், தம்முடைய—, நன்மைகளே - பெருமைகளையே, எண்ணுவர் - எண்ணாநின்றாரென்கிறாள்.

---

(க) திருமாலை - சச.

வ்யா.—ஏழாம் பாட்டு. (உண்ணாது) (க) "ந மாம்ஸம் ராகவோ புங்க்தே ந சாபி மது ஸேவதே" "நமாம்ஸம்ராகவோபுங்க்தே நசாபிமது ஸேவதே" என்கிறபடியே பார்த்துப் பரிந்தூட்டுமவள் போனால், இனி யார் அவரைப்பரிந்தூட்ட. * மாமலர்மங்கை மணநோக்க முண்டானிறே. அவள் போனால் இவனுக்கு ஊணில்லையிறே. (உறங்காது) (உ) "அநித்ரஸ் ஸததம் ராம:" "அநித்ரஸ்ஸததம்ராம:" என்கிறபடியே கண்ணுறக்கமற்று. ஊணுமுறக்கமுமற்று. (ஙு) "ஸுக்ரீவம் ஶரணம் கத:" "ஸுக்ரீவம்ஶரணம்கத:" என்று - கண்ட காபேயர்கால்களிலே விழுந்து. (ஒலிகடலை யூடறுத்து) ஓதம் கிளர்ந்தகடலை யூடறுத்து. கூற்றறுத்தடைத்து. (ச) "ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி" "ஸமுத்ரம்ராகவோராஜா ஶரணம் கந்துமர்ஹதி" என்று-ராக்ஷஸனுக்கு ஶிஷ்யராய்ப் புக்கு, அவன் சொல்லக் கடலைச் சரணம்புக்கு. (பெண்ணாக்கையாப் புண்டு) பிராட்டிவடிவிலே பத்தராய். ஒரு பெண்கொடியாலே கட்டுண்டு. (தாமுற்றபேதெல்லாம்) தாம்பட்ட எளிமையெல்லா மெண்ணாதே. (திண்ணரித்யாதி) த்ருடமாய் ஓங்கியிருப்பதான மதிளாலே சூழப்பட்ட * திருவரங்கந் திருப்பதியிலே வாஸமாகிற செல்வத்தை யுடையவர். (ரு) "தைர்யேண ஹிமவாநிவ" "தைர்யேண ஹிமவாநிவ" என்னக்கடவ தமக்கு தைர்யமில்லாமையை எண்ணாதே. தம்முடைய நன்மைகளை எண்ணுவரோ) நம்மைப்பிரிந்தார், நோன்பு நோற்பது, காமன்காலிலே விழுவது, கூடலிழைப்பது, இத்யாதிகளைச் செய்யாநிற்பரென்று தம்முடைய வீறுகளை எண்ணுகிற்பர்.

---

ஏழாம் பாட்டு. "ஊடு" - நடு. "ஆக்கை" - ஶரீரம். (பார்த்து) - நோக்கி. அவனுக்கு ஊணேவென்ன வருளிச்செய்கிறார் (மாமலரித்யாதி.) "பேது" - துக்கம். அர்த்தாத் அருளிச்செய்கிறார் (ஸுக்ரீவ - ஸுக்ரீவமித்யாதி) "தாமுற்ற பேதெல்லாம்" என்று. அவனுடைய எளிமை சொல்லுகையாலே, அத்தைப்பற்ற (ஸுக்ரீவம் ஶரணம்கத: - ஸுக்ரீவம் ஶரணம்கத:) என்றும் (ராக்ஷஸனுக்கு ஶிஷ்யராய்ப் புக்கு) என்றும் சொல்லுகிறது. (கூற்றறுத் தடைத்து) என்றது - கூறிட்டடைத்தென்றபடி. அதாவது - இரு கூறாகப்பண்ணி. "ஆக்கை" - ஶரீரமாதல்; கொடியாதல். "திண்" - வலி. "எண்ணம்" - நினைவு. எ

---

(க) ரா - ஸு - ருகூ - சக. (உ) ரா - ஸு - ருகூ - சச.
(ங) ரா - கி - ச கக. (ச) ரா - யு - கக - ருக.
(ரு) ரா - பா - க - கஎ.

வ்யாக்யாநாந்தரத்தில் வாக்யம்; - (உண்ணாது) தேஹயாத்ரை தான்பேணினரோ, தமக்குள்ளது பிறர்க்காக்குகை குற்றமோ. (ஆக்கையாப் புண்டு) உடம்பாராய்ந்ததுக்கவ்வருகு போகமாட்டாதே. (தாமுற்ற) வஸிஷ்ட ஶிஷ்யன் பட்டபடி பார்த்தால் அறிவுநுழையாத பெண்பிறந்தார்க்கு எத்தனைபடவேணும். நம்பிக்கன்றோ சொல்லுவது அபிமதாலாபம். (எண்ணாதே) ஊரும் மதிளுமாய் வாழப்புக்கால் பட்டது மறப்பார்களோ. ஐஶ்வர்யச் செருக்கிறே. (திருவரங்கச் செல்வனார்.) எ.

அவ.—எட்டாம் பாட்டு. "தாமுற்ற பேகிதல்லாம் எண்ணாதே, தம்முடைய நன்மைகளே யெண்ணுவர்" என்று - நீயிங்ஙனே இன்னாதாகக் கடவையோ?, இழவை மறந்து வருந்தியாகிலும் குணஜ்ஞாநத்தாலே தரித்திருக்கவேண்டாவோ வென்ன; நானும், மறந்து தரிக்கலாமோ வென்று பாராநின்றேன்; என்னால் மறக்கலாயிருக்கிறதில்லை யென்கிறாள்.

மூ —பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்
மாசுடம்பில்நீர்வாரா மானமிலாப்பன்றியாம்
தேசுடையதேவர் திருவரங்கச்செல்வனார்
பேசியிருப்பனகள் பேர்க்கவும்பேராவே. (அ)

ப - ரை. பண்டொருநாள் - ப்ரளயங்கொண்ட முன்பொருகாலத்திலே, பாசிதூர்த்துக்கிடந்த - பாசிபற்றிக்கிடந்த, பார்மகட்கு - ஸ்ரீபூமிப் பிராட்டியை உத்தரிக்கைக்காக; மாசு - அழுக்கேறின, உடம்பில் - சரீரத்தினின்றும், நீர் - ஜலமானது, வாரா - ஒழுகாநிற்பதாய், மானமிலா - மிகத்தண்ணிதான, பன்றியாம் - வராஹாவதாரஞ்செய்தருளி, தேசுடைய - அத்தால்வந்த தேஜஸ்ஸையுடையரான, திருவரங்கச் செல்வனார்—, பேசியிருப்பனகள் - கூடியிருந்தபோது சொன்ன சொலவுகள், பேர்க்கவும்பேரா - நெஞ்சைவிட்டுப் பேர்க்கப் போகிறன வில்லையென்கிறாள்.

வ்யா.—(பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்கு) பூமியானது ப்ரளயங்கொண்டு நீர்செழும்பேறிக் கிடந்ததாய்த்து; இதுதான் இதுக்கு அபிமாநிநியான ஸ்ரீ பூமிப்பிராட்டி யுடம்பிலேறின அழுக்காயிருக்குமிறே. இது அவளுக்கு ப்ரகாரமாகையாலே.

---

எட்டாம் பாட்டு. (பாசியித்யாதி) "பேர்க்கவும் பேராவே" என்றதைப் பற்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் (தாமுற்றபேதெல்லா மிதியாதி)

ரஸிகராயிருப்பார் ப்ரணயிநிகளுடம்பு அழுக்கேறி யிருக்கத் தங்களுடம்பு பேணிக்குளித்திரார்களிறே; அப்படியே ஸ்ரீ பூமிப்பிராட்டியுடம்பு அழுக்கேறினவாறே தானும் நீருக்கும் சேற்றுக்கும் இருபாதவடிவைக் கொண்டானுய்த்து. (பண்டொருநாள்) அன்றொருநாள்; இன்றொருநாளேதான். (மாசித்யாதி) அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தை; "அழுக்குடம்பு" என்று சொல்லுமவர்களுடம்பளவிலு மன்றிக்கே. தேஹாத்மாபிமாநம் பண்ணி யுடம்பையே விரும்பி யிருக்குமவர்களுடம்புக்கு மவ்வருகே யாம்படியாக்கினான். "உடம்பழுக்கேறிற்று" என்று லஜ்ஜிக்கவேண்டாத ஜந்மத்தை யாய்த்து எறிட்டுக்கொண்டது.

(மாநமிலா) (க) "அஹம்ஸோ யாந்தோ ஜாத:" "அஹம்வோபாந்தவோ ஜாத:" என்றும், (உ) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்றும் சொல்லுமளவன்றிக்கே, தாரகத்ரவ்யங்களும் வேறுபட்டு அஜ்ஜாதிக் கடைத்தவையே தாரகமுமாய், ஸ்வபாவமு மப்படியேயாம்படியாகவாய்த்து அவற்றோடே தன்னை ஸஜாதீயமாக்கினபடி. முத்தக்காசை அமுது செய்யப் பண்ணும்படியிறே தாழவிட்டபடி. மாயாம்ருகத்தைக் கண்டு அல்லாத ம்ருகங்கள் மோந்துபார்த்து வெருவியோடிற்றினவிறே; அப்படியன்றிக்கே, ஸஜாதீயங்கள் மோந்து பார்த்தாலும் "நம்மினம்" என்று மருவும்படியாய்த்து. (மாநமிலா) ஈஶ்வராபி

பாருக்கன்றேபாசி. "பார்மகள்" என்று பூமிப்பிராட்டியைச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இதுகானித்யாதி.) "ஸம்ஶ்லேஷித்தவன்று மொருநாள், விஶ்லேஷித்த வின்று மொருநாள்" என்று ஈடுபாடு. "அழுக்குடம்பு" என்று சொல்லுமவர்கள் - முமுக்ஷுக்கள். (மாசுடம்பு) முதலிலே தேஹந்தன்னை "அழுக்குடம்பு" என்று கழிக்கிற முமுக்ஷுக்களுடைய தேஹத்தையும், மேலெழுந்த அழுக்கைப் போக்கிக்கொண்டிருக்கிற ஸம்ஸாரிகளுடைய தேஹத்தையும்போலே அருசிப்பட வேண்டாதபடி ருசியையுடைத்தாய், அழுக்குதானே போக்யமாம்படியான வுடம்பைப் பரிக்ரஹித்தென்றபடி. "நீர்வாரா" - நீர் ஒழுக. (அப்ராக்ருததிவ்யஸம்ஸ்தாநத்தை-அவ்வருகேயாம் படியாக்கினான்) என்று அந்வயிப்பது.

"பன்றியாம்" என்கிற மெய்ப்பாட்டுக்கு த்தாத்பர்யம் (அஹம்ஸோ-

(க) வி-பு-ரு-கா-கா. (உ) ரா-யு-கஉ0-கக.

மாநம் வாஸநையோடே போனபடி. (பன்றியாம் தேசுடைய தேவர்) ஆஸ்ரிதார்த்தமாகத் தன்னையழிய மாறுகையால்வந்த தேஜஸ்ஸு. (க) "தனக்கு வேண்டுருக்கொண்டு" என்கிறபடியே - இச்சா க்ருஹீதமான வடிவாகையாலே எறிக்கிருக்கு மிறே ரக்ஷகத்வம்.

(திருவரங்கச் செல்வனார்) "அவ்வவதாரத்திக்கு உதவினோமில்லை" என்கிற இழவுதீரும்படி கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறவர். (செல்வனார் பேசியிருப்பனகள்) "செல்வர்சொல்லுக்கஞ்சாரே" விபூதி விஷயமாகவும் ஆஸ்ரிதர் விஷயமாகவும் சொல்லி யிருக்குமவை யென்னுதல்; அன்றிக்கே, "நின்னைப் பிரியேன் பிரியிலுமாற்றேன்" என்றாப்போலே, கூடி யிருந்தபோது சொன்னவை யென்னுதல். (பேர்க்கவும் போராவே) இவற்றை மறந்து பிழைக்கவென்று பார்த்தால் நெஞ்சில் நின்று பேர்க்கவும் பேருகிறதில்லை. "தாமுற்றபேதெல்லாம் எண்ணாதே, தம்முடைய நன்மைகளை எண்ணி அவர் நம்மை மறந்தாலும் (உ) "கொடியவென்னெஞ் சமவனென்றேகிடக்கும்" என்னும் படியே-நம்மால்மறந்து பிழைக்கப்போகிறதில்லை யென்கிறாள். அ

அவ.—ஒன்பதாம் பாட்டு. என்னுடைமை யடையக் கைக் கொண்டா னென்றாள்; தாம் படுமவற்றைப் பாராதே பிறர்படு மவற்றையே பாராநின்றானென்றாள்; நான் அவனை மறக்கவென்று புக்கவிடத்தில் எனக்கு, அவன் குணசேஷ்டிதங்கள் மறக்கவொண்ணாதபடியாயிராநின்றதென்றாள்; ருக்மிணிப் பிராட்டியுடைய ப்ரதிபந்தகத்தைப் போக்கி அவளுக்கு உதவினபடியை

அஹம்வோ இத்யாதி.) "தேசு" - அழகு. "தேவர்" என்றதுக்கு - ரக்ஷணத்தால்வந்த தேஜஸ்ஸினுடைய ஆதிக்யத்தைச் சொல்லி, இதுக்கு ஹேது வேதென்ன ;அருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி.) (எறிக்கிருக்கை) அதிசயித்திருக்கை. (எறிப்பு) ப்ரகாசம்.

(செல்வர் சொல்லுக்கஞ்சார்) என்றது-ஐஶ்வர்யவான்கள் வேண்டினதெல்லாம் சொல்லுவர்களென்றபடி. முந்தினது விபூதி விஷயம். பூம்யுத்தரண நிமித்தமாக ; பூமிப்பிராட்டிவிஷயமாக என்றபடி ; (ஆஶ்ரிதவிஷயம்) (ந) "అభయం సర్వభూతేభ్యః" "அபயம்ஸர்வபூதேப்ய:" (ச) "మిత్రభావేన సంప్రాప్తం" "மித்ர்பாவேநஸம்ப்ராப்தம்" என்றவை. அ

(க) தி-வாய்-கூ-ச-எ. (உ) தி-வாய்-ரு-ந-ரு.
(ந) ரா-யு-கஅ-நந. (ச) ரா-யு-கஅ-ந.

அநுஸந்தித்து, இவளுக்கு உதவின விது பெண்பிறந்தார்க்கெல்லா முதவினபடியன்றோ வென்று அவ்வழியாலே தரிக்கிறாள்; அர்ஜுநனுக்குச் சொன்ன வார்த்தையை நாமெல்லாரும் விஸ்வஸித்திருக்குமாப்போலே. ஸர்வஸாதாரணமா யிருப்பார். ஒருவனைக் குறித்துச் சொன்ன வார்த்தை அவனோட்டையார்க்கெல்லாம் பொதுவிறே.

மூ.—கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக்கைப்பிடிப்பான்
திண்ணார்ந்திருந்த சிசுபாலன்தேசழிந்து
அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக்கைப்பிடித்த
பெண்ணாளன்பேணுமூர் பேருமரங்கமே. (கூ)

ப - ரை.—கண்ணாலம் கோடித்து - கல்யாணத்துக்குச் செய்யவேண்டிய பாரிப்புக்களைப்பண்ணி, கந்நிதன்னை - கந்நிகையான ருக்மிணிப்பிராட்டியை, கைப்பிடிப்பான் - பாணிக்ரஹணம் பண்ணப் புகுகிறோமென்று, திண்ணார்ந்திருந்த - த்ருடசித்தனாயிருந்த, சிசுபாலன் - சிசுபாலனானவன், தேசழிந்து - தேஜோஹாநிப்பட்டு, அண்ணாந்திருக்க - ஒருசெயலுமற்றிருக்க, ஆங்கு-அந்த மணப்பந்தலிலே, அவளை - அந்த ருக்மிணிப் பிராட்டியை, கைப்பிடித்த - பாணிக்ரஹணம் செய்தவனுடைய, பேர் - பேரோவென்றால், பெண்ணாளன்-பெண்களை யாளுமவன்; பேணும்-அவன் விரும்பி வர்த்திக்கிற, ஊர் - தேசத்தினுடைய, பேரும்—, அரங்கம் - பெரியபிராட்டியார்க்கு ந்ருத்தஸ்தாநமாம்.

வ்யா.—(கண்ணாலம் கோடித்து) முன்புநெடுநாள் தேடிற்றெல்லாம் தோழிப்புழுங்கலிலே நேர்ந்தானாய்த்து. கன்னி தன்னைக் கைப்பிடிப்பான் "புதுப்பூமொக்கவேணும்" என்று ஆசைப்படுமாப்போலே. (திண்ணார்ந்திருந்த சிசுபாலன்) நாம் ஆத்மாபஹாரத்தைப் பண்ணியிருக்குமாப்போலே, ஸர்வேஶ்வரனுடைமையைத் தன்னதென்று புத்திபண்ணி த்ருடசித்தனாயிருந்தானாய்த்து. திண்ணார்ந்து - திண்மையையுடையனாய். (தேச

ஒன்பதாம்பாட்டு. (கண்ணாலமித்யாதி) ஒருவனுக்குச்செய்தால்எல்லாருக்கும் செய்ததாமோவென்ன ; அருளிச்செய்கிறார் (ஸர்வஸாதாரணரித்யாதி.)

தோழிப்புழுங்கலாவது - விவாஹத்தில் மூன்றாம்நாள் அம்மாணகத்திலவர்களெல்லாருங் கூடி பொங்கல் ப்ரஸாதப்படுகை. "தேசழிந்தண்ணாந்திருக்க" என்று விஶேஷிக்கையாலே முன்பு அண்ணாந்திருந்ததை யருளிச் செய்கிறார் (மணவாளப்பிள்ளையித்யாதி.)

ழிந்தண்ணாந்திருக்கவே) மணவாளப்பிள்ளையாயிருமாந்து பதர்க் கதிர்ப்போலே, கவிழ்ந்து, பார்க்கமாட்டாதே இருந்தபடி.

(அண்ணாந்திருக்க) தன்தேஜஸ்ஸெல்லா மழிந்து க்ருஷ்ண னாலே பரிபூதனாய் ஒருதிக்கிலும் பார்க்கமாட்டாதே இவ்விருப் பிலே யிருந்தானாய்த்து. (ஆங்கவளைக்கைப்பிடித்த) "முன்புள்ள சடங்குகள் அவன்செய்தானாகில் புநரபி அநுஷ்டிக்கவேணுமோ" என்றுதான் பாணிக்ரஹணம்பண்ணினானாய்த்து. (பெண்ணாளன்) அவளொருத்திக்குச் செய்ததன்றே, அஜ்ஜாதிக்காகச்செய்த செய விறே. (பேணுமூர்) அவன்விரும்பி வர்த்திக்கிறதேஶம். (பேரு மரங்கமே) அவ்வூரின்பேரும் பெரிய பிராட்டியார்க்கு ந்ருத்த ஸ்தாநம். சு

மூ.—செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த
மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர் ;
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும்சொல்
தம்மிடையேபொய்யானால் சாதிப்பாராரினியே ? (௧௦)

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

ப-ரை. செம்மையுடைய - நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப் பட்டிருக்கிற, திருவரங்கர் தாம் - அழகியமணவாளர், பணித்த-அருளிச்செய்த தாய், மெய்ம்மை - யதார்த்தமுமாய், பெரு - சீரியதுமான, வார்த்தை - "సర్వ ధర్మాన్ పరిత్యజ్య మామేకం శరణం వ్రజ। అహం త్వా సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి మా శుచః" "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய மாமேகம்ஶரணம்வ்ரஜ। அஹம்த்வா ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமிமாஶுச:" என்றவார்த்தையை,விட்டுசித்தர்-பெரியாழ்வார், கேட்டு—, இருப்பர்-தந்நிஷ்டராயிருப்பர் ; தம்மையுகப்பாரை-தம்மைக் கொண்டாடுமவர்களை, தாம் - தாங்கள், உகப்பர் - கொண்டாடுவர்கள், என்னும்சொல்-என்கிற பழமொழி, தம்மிடையே - தம்மிடத்திலேயே, பொய்

"அண்ணாத்தல்" - செயல்மாட்சி ருக்மிணிப் பிராட்டியைக் கைப் பிடித்தானாகில் "அவளை யுடையவன்" என்னாதே "பெண்ணாளன்" என்று ஸாமாந்யமாகச் சொல்லுவானேன்னென்ன ; அருளிச்செய்கிறார் (அவளொருத்திக்கித்யாதி.) பெண்ணாளன் பேணுமூரினுடைய பேருமரங்கமென்றபடி. "பேரும்" என்கிற சஶப்ததாத்பர்யம் - அவனும் பெண்ணாளன், ஊரின் பேரும் அரங்கமென்றாய், பிராட்டிக்கு ந்ருத்த ஸ்தாநமாகையாலே பெண்களுக் கெல்லாம் பொதுவென்றபடி.

யானல் - பொய்யாய்ப் போய்விட்டால், இனி—, சாதிப்பார் ஆர் - இங்ஙன் செய்யத்தக்க தல்லவென்று நியமிக்கவல்லாரார்; ஒருவருமில்லை யென்கிருள்.

வ்யா.—நிகமத்தில்; (செம்மையுடைய திருவரங்கர்) மநோவாக்காயங்கள் மூன்றும் மூன்றுபடியா யிருப்பாரை ஒருங்க விடுகைக்கு, தாம் மநோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப் பட்டிருக்குமவர். (க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே - ஶோபநமான ஹ்ருதயத்தை யுடையராயிருப்பர். குற்றஞ்செய்தாரையும்விடமாட்டாதே, (உ) "ஸர்வ ஜயம்" "தத்யமேஜயம்" என்று வார்த்தைசொல்லுமவர், அதுதன்னை அர்த்தக்ரியாகாரியாக்கிக்கொண்டு கோயிலிலே சாய்ந்தருளினர். (தாம்பணித்த) நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டவர்தா மருளிச்செய்த.

(மெய்ம்மைப் பெருவார்த்தை) யதார்த்தமுமாய், சீரியதுமாய், ஸுலபமுமானவார்த்தையாய்த்து. அதாவது - "உன் காரியத்துக்கு நானுளேன், நீ ஒன்றுக்கும் கரையாதே, உன் ஸர்வபரத்தையும் என்தலையிலே ஸமர்ப்பித்து நிர்ப்பரனாயிரு" என்று திருத்தேர்த்தட்டிலே நின்று அருளிச்செய்தவார்த்தை. "பிள்ளை அர்ஜுநனுக்கன்றோ சொல்லிற்று, இவரென்" என்னில்; அவன் ஸர்வஸமனாகையாலே "என்கார்யம் என்னால் செய்யவொண்ணாது" என்றிருப்பார்க் கெல்லார்க்குமாக அடியிலே சொன்னவார்த்தையிறே; ஆகையாலே இவர் கேட்டிருக்கக் குறையில்லை. (கேட்டிருப்பர்) அவ்வார்த்தையைக் கேட்டபின்பு உபாயத்வேந விலங்கின துரும்பு நறுக்கியறியார், ப்ராப்யத்வேந வேண்டிற்றெல்லாம் செய்வர்.

(தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும் சொல்) நாட்டுவார்த்தை;—"நீ ஆர்க்கு நல்லை" என்றால், "நல்லார்க்கு நல்லன்" என்றொருவழக்குச்சொல்லுண்டு; "நல்லார்க்குத்தீயாருண்டோ" என்றுமுண்டு; இவை யிரண்டும் (தமிடையே) பொய்யானல்

---

நிகமத்தில்; "செம்மை"-அழகு. மநோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப் பட்டிருக்கு மென்னுமத்தைக் காட்டுகிறார் (ஸுஹ்ருதம் - ஸுஹ்ருதமித்யாதி.) "பெரு" என்கையாலே (சீரியதுமாய்)என்றது. "வார்த்தை" என்கையாலே-ஸுலபதை. "பிள்ளை" - க்ருஷ்ணன்.

(இரண்டும்) என்றது-அந்வயவ்யதிரேகத்தாலே சொன்ன லோகவார்த்தை

(க) கீ-நி-உக. (உ) ரா-யு-கஅ-ந.

சாதிப்பாராரினியே) தாமே இத்தை அந்யதாகரிக்கப் புக்கால், "இங்ஙனே செய்யக்கடவதல்ல" என்று தம்மை நியமிக்க வல்லாருண்டோ. உண்டானால் நான்செய்வதென் "உம்மை உகந்தவனை நீருமுகக்கவேணும்" என்று கசையெடுத்து உகப்பிக்கவோ. ௧௦

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பதினொரும் திருமொழி முற்றிற்று.

---

## பன்னிரண்டாந் திருமொழி
# மற்றிருந்தீர்கள் ப்ரவேஶம்.

———:(o):———

அவ.—மேல் சொல்லி என்; பகவத்விஶ்லேஷத்தால் நொந்து இவள் தனக்குத் தஞ்சமாக நினைத்திருப்பதிரண்டாய், அவ்விரண்டிலும் தான் அதிஶங்கைபண்ணி, "அத்தலையாலேபேறு" என்றறுதியிட்டு, "அதுபார்த்திருக்க வொண்ணாது. அத்தலையில் ஸ்வாதந்த்ர்யத்தாலே யானாலும், கேவலம் ஸ்வாதந்த்ர்யமேயன்றிக்கே ஆஶ்ரித பாரதந்த்ர்யமென்றுமொன்றுண்டு அவனுக்கு; ஆனபின்பு பெரியாழ்வாரளவிலும் அவனுக்கு அந்த ஸ்வாதந்த்ர்யம் ஜீவியாது, அவர் ஸம்பந்தம்கொண்டு நமக்குப் பெறுகைக்கொரு தட்டில்லை" என்றுகொண்டு அத்யவஸித்திருந்த இவள், பின்னை

---

யான (நல்லார்க்கு நல்லர்) என்றதும், (நல்லார்க்குந் தீயாருண்டோ) என்றதும்; ஆக, இரண்டுவார்த்தையு மென்றபடி. (உகப்பிக்கவோ) நியமிப்பாருண்டானாலும் வலிய உகப்பிக்கப்போமோவென்றபடி, ௧௦

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அரு.—மற்றிருந்தீர் ப்ரவேஶ. (மேற்சொல்லி யென்) மேல்பல சொல்லுகிற ப்ரமேயமேதென்றபடி. (பகவத்விஶ்லேஷத்தால்) என்று தொடங்கி, (அத்யவஸித்திருந்த இவள்) என்னுமளவும் கார்க்கோடல் ப்ரமேயம். இரண்டிலும் அதிஶங்கைபண்ணினால் ப்ரதம பர்வத்தைவிடுகைக்கு ஹேதுவேது, சரமபர்வத்தைப் பற்றுகைக்கு ஹேதுவேதென்ன; இரண்டு ஹேதுவையு மருளிச்செய்கிறார் (அத்தலையாலேயித்யாதி.) (அத்யவஸித்திருந்த இவள்) என்றது - "நல்லவென்தோழி" என்கிற பாட்டைக்கடாக்ஷித்து. இப்படிசரம பர்வத்தைப்பற்றினவள் திரியவும் *தாமுகக்கவிலே ப்ரதமபர்வத்தைப்பற்றுவா

யும் அவன்றான் குணுகிகனுமாய் ஸவிபூதிகனுமா யிருப்பானொருவ ஞகையாலே, ஆச்ரித விஷயத்தில் தன் ஸ்வாதந்த்ர்யம் நடத்துகை யாவது - இவற்றை யிழக்கை; இவற்றை யிழக்கக் காரியம்செய் யான். இனித்தான் அவன் ஸ்வாதந்த்ர்யம் நமக்குப்பேற்றுக்குட லித்தனைபோக்கி இழவுக்குடலோ; காரியம்செய்வானுக நினைத்த போது அதுக்கு நிவாரகரில்லையித்தனையன்றோ?'' என்று அத்தை யும் பெரியாழ்வார் வயிற்றிற்பிறப்போபாதி பேற்றுக்குடலாக அத் யவஸித்தாள்;

இப்படி அத்யவஸித்திருக்கச செய்தேயும் அவன் சடக் கெனவந்து தன்னுற்றமை பரிஹரிக்கக்கண்டிலள்; ஆனாலும் அவன் வருமளவும் க்ரமப்ராப்தி பார்த்து ஆறியிருக்கவல்ல ப்ரக்ருதியன்றே, கடுகப் பெற்றுக்கொடு நிற்கவேண்டும்படியிறே இவளுடைய த்வரை; தன்ஸ்வரூபத்தோடுசேர்ந்த செயலாகிறது. அவன் வரப் பார்த்திருக்கையே; அவ்வளவல்லவே இவளுக்கு இப்போது ஓடுகிறது. "ஸ்வரூபஹானி வரப்பொறுத்ததே; தன் ஸ்வரூபத்தோடு சேராதாகிலும் அத்தைப்பொறுத்து அவன் முகத்திலேவிழிக்கவேணும்" என்றுபார்த்து, அதுக்குக்கால்நடை தாராதபடி பலநாநிமிக்கது; இனிதன் தசையை அநுஸந்தித் தார்க்கு ஈச்வரனுபாதியும் பெரியாழ்வாரோபாதியும் தன் காரி யம் செய்யவேண்டுமென்றுயித்துத்தான் நினைத்திருப்பது. "தனக் குக் கால்நடைதாராதாய்த்து, அவன் தன் தசையறிந்துவந்து முகங்காட்டுவானொருவனன்றிக்கே யிருந்தான்; இனித்தான் கண் வட்டத்திலே நின்று தன் தசையையறிந்து கால் நடைதரு

னென்னென்ன; விடுகைக்கு ஹேதுவான ஸ்வாதந்த்ர்யந்தானே அவஸ்தாபே தத்தாலே பற்றுகைக்குடலாய்த்தோற்றப் பற்றினுளென்னுமத்தை அருளிச் செய்கிறார் (பின்னையும் அவன்று னித்யாதி). "பாசிதூர்த்துக்கிடந்த" இத் யாதியைப்பற்ற (குணுதிகனுமாய்) என்றது.) "பாங்கோதம்" இத்யாதி யைப்பற்ற(ஸவிபூதிகனுமாய்) என்றது) (பேற்றுக்குடலாக அத்யவஸித்தாள்) என்றது "பெருவார்த்தை" என்றதைப் பற்ற அருளிச்செய்வர்.

ஆனால் "தம்மைஉகப்பாரை" என்று வெறுப்பானென்னென்ன; அரு ளிச்செய்கிறார் (இப்படி அத்யவஸித்தித்யாதி.) (கண்டிலள்) ஆகையாலே வெ றுத்தாளென்றபடி.

வார்க்குத் தன் காரியம்செய்கை பரமிறே. அவன் வர்த்திக்கை யாலே ப்ராப்யமான தேஶபரிஸரத்திலே என்னைக் கொடுபோய் நீங்கள் பொகடப்பாருங்கோள்" என்கிறாள். ... ... *

அவ.—முதற்பாட்டு. "அத்தலையாலே பேறென்றறுதியிட் டால், அவன் வருமளவும் க்ரமப்ராப்தி பார்த்து ஆறியிருக்க வேணுங்காண், நீ இங்ஙனே பதறலாகாதுகாண்" என்ன; "என்தஶையை அறியாதேசிலசொல்லுகிறவுங்களுக்கும் எனக்கும் வார்த்தைசொல்ல ப்ராப்தியில்லை, உங்கள் வார்த்தையைச் செவி தாழ்த்துக் கேட்கைக்கும் எனக்கு ப்ராப்தியில்லை" என்கிறாள்.

மூ.—மற்றிருந்தீர்கட்கறியலாகா
மாதவனென்பதோரன்புதன்னை
உற்றிருந்தேனுக்குரைப்பதெல்லாம்
ஊமையரோடுசெகுடர்வார்த்தை
பெற்றிருந்தாளையொழியவேபோய்ப்
பேர்த்தொருதாயில்வளர்ந்தநம்பி
மற்பொருந்தாமற்களமடைந்த
மதுரைப்புரத்தென்னை யுய்த்திடுமின்.

ப-ரை. மற்றிருந்தீர்கட்கு-அத்யவஸாயநிஷ்டரான வுங்களாலே, த்வார நிஷ்டையானவென்தசை, அறியலாகா - அறியக்கூடாது; மாதவனென்பது - ஶ்ரியஃபதி விஷயத்தில், ஓர் - அத்விதீயமான, அன்புதன்னை யுற்று - அன்பை யடையேனாய், அத்தாலே, இருந்தேனுக்கு - அவனிருக்குமிடம் தேடிப்போக மாட்டாமே யிருக்கிறவெனக்கு, நான் அவ்விடம்போய்ச் சேராமைக்குறுப்பாக, உரைப்பதெல்லாம்-நீங்கள் சொல்லுவதெல்லாம், செகுடரோடு-செவிடரோடே, ஊமையர் வார்த்தை - ஊமைகள் வார்த்தைசொல்லுவதுபோ லிராநின்றது; பெற்றிருந்தாளை - தன்னைப் பிள்ளையாகப்பெற்ற தேவகிப்பிராட்டியை, ஒழிய- விட்டு, போய் - நந்தகோகுலத்திலேபோய், பேர்த்தொருதாய் - வேறு தாயாரான யசோதைப்பிராட்டியுடைய, இல் - திருமாளிகையிலே, வளர்ந்த - வளர்ந்தவ னாய், நம்பி-பூர்ணனான கண்ணன், மல்-மல்லரானவர்கள், பொருந்தா-யுத்தபூமி யைக் கிட்டுவதற்குமுன்பே, மற்களம்-யுத்தபூமியை, அடைந்த-சென்று கிட் டின, மதுரைப்புரத்து-மதுரையின் பரிஸரத்திலே, என்னை—, உய்த்திடுமின் - கொடுபோய்ப் பொகடுங்கோளென்கிறாள்.

---

அரு. முதற்பாட்டு.-(மற்றித்யாதி) "ஊமையரோடு செகுடர்வார்த்தை" என்றதைப்பற்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் (அத்தலையாலேயித்யாதி.)

வ்யா.—(மற்று) வேறாயிருந்தீர்கட்கென்னுதல்; "மற்று - உரைப்பதெல்லாம்" என்று மேலேகொடுபோய் அந்வயித்தல். (இருந்தீர்கட்கறியலாகா) ஏகதேஸவாஸமே போராது காணுங்கோள், எனக்கு ஓடுகிற தஸையறிகைக்கு. நானிருந்த தேஸத்திலே நீங்களுமிருந்திகோளென்னு, எனக்கோடுகிற தஸை உங்களால் அறியப்போகாது.(க) "ப⁴க்த்யா ஶாஸ்த்ராத்³வேத்³மி ஜநார்த³நம்" "பக்த்யா ஶாஸ்த்ராத்வேத்மிஜநார்த்தநம்" என்னக்கடவதிறே. (க) "மாயாம் ந ஸேவே" "மாயாம்நஸேவே" இத்யாதி. "ஶாஸ்த்ரத்தில் வாஸனை உனக்குமெனக்குமொக்கும், புத்தியோகத்திலும் எனக்குக் குறையில்லை, இங்ஙனே யிருக்கச்செய்தே உனக்கு அர்த்தம் உள்ளபடி ப்ரகாஶியாநின்றது, எனக்கு நீ சொல்லக்கேட்கவேண்டி யிராநின்றது, இதுக்கடியென்" என்ன; "நான் வஞ்சகனானல்லேன். சல தர்மங்களநுஷ்டித்தறியேன், ஶுத்தஸ்வபாவனுயிருப்பன், நீ கற்றவரிபடைவுகொண்டு அறியவிரும்புதி" நான் அங்ஙனன்றிக்கே பக்திஸஹக்ருதஶாஸ்த்ரங் கொண்டறிய விருப்பன், ஸித்தாஞ்ஜநமிட்டு பதார்த்த தர்ஶநம் பண்ணுவாரைப்போலேகாண் என்பவ" என்றானிறே.

(மாதவனித்யாதி) ப்ரஹ்மசாரி எம்பெருமானை ஆசைப்பட்டேனுகில்தான் ஆறியிரேனே? மாதவன் விஷயமான அன்பென்னுதல்; மாதவனுகிற அன்பென்னுதல். "அன்பு" என்றும் அன்புக்கு ஆஶ்ரயம்" "என்றும் தோற்றுதே, அன்புதானென்னலாயாய்த்திருக்கிறது. (உ) "தேந தேந மநுஜா:" "தேநதேத மநு

மற்று - வேறு; வேறாயிருக்கை - தன்னைப்போலே த்வாரநிஷ்டரா யிருக்கையன்றிக்கே, அத்யவஸாயநிஷ்டராயிருக்கை. (என்னித்யாதி) "என் தஸையையறியாதே சில சொல்லுகிற உங்கள் நிலையும் என் நிலையும்பார்த்தால், உங்களுக்கும் எனக்கும் வார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை" என்று வாக்யத்துக்குத் தாத்பர்யம். (கேட்கைக்கும் எனக்கு ப்ராப்தியில்லை) என்றதுக்குச் சோவேண்டுகையாலே இரண்டாமர்த்தத்துக்கு அநுகுணமாக "இருந்தீர்கட்கறியலாகா" என்றது. ஓரிடத்தேயிருந்தாலும் பக்தியில்லாவிட்டால் அறியப்போகாதென்னுமதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (ப⁴க்த்யேதி - பக்த்யாஶாஸ்த்ராதித்யாதி.) த்ருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் சொல்லுகிறான் (ஶாஸ்த்ரத்திவித்யாதி.)

(க) பார-உத்யோ-கூஅ-டு. (உ)

வ்ராதா:" என்கிறபடியே - தான்முந்துற இத்தலையிலே அன்பைப் பண்ணி, பின்னையாய்த்து இத்தலையிலன்பைவிளைத்தது. (க)"கோல மலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ" என்னுமாப்போலே, ஸர்வப்ரகாரத்தாலும் விலக்ஷணமான விஷயத்தையிறே இவள் தானாசைப்பட்டது; அப்படிப்பட்ட வைலக்ஷண்யமுள்ளது ஸ்ரிய꞉ பதிக்கிறே அவன் பக்கலிலே யாய்த்து இவள் அன்பைப் பண்ணிற்று.

(அன்புதன்னையுற்று) அவனைக்கிட்டி என்னுதல்; அவன் விஷயமான பக்தியை மறுபாடுருவவுடையேனு யென்னுதல். (உ) "நிறந்த னூடுபுக்கு" என்னுமாப்போலே. (இருந்தேனுக்கு) இப்படி அவனையொழியச் செல்லாமையுண்டானல் அவனிருந்தவிடத்திலே சென்று கிட்டவிறேயடுப்பது; அதுக்குக் கால்நடை தாராதபடி யிருக்கிறவெனக்கு. (உரைப்பதெல்லாம்) அங்கேசென்று கிட்டவாசையுடையவெனக்கு நான்சென்று சேராமைக் குறுப்பாகச் சொல்லும் வார்த்தையெல்லாம். (மற்று - உரைப்பதெல்லாம்) அவனோடு கிட்டாமைக்குச் சொல்லும் வார்த்தையெல்லாம். (ஊமையரோடு செகுடர்வார்த்தை) என்தசையை யறியாத வுங்களுக்குத் தோற்றினபடி சொல்லுகைக்குப் பரிகாரமில்லை, எனச்சுக் கேட்கைக்குப் பரிகாரமில்லை. ஊமைக்கு வ்யவஹாரயோக்யதை யில்லை, செகுடர்க்குக்கேட்கைக்கு யோக்யதையில்லை, "உனக்கோடுகிறதசையை யொருவர்க்குமறியவொண்ணுதென்று சொல்லுவானென், உனக்கு இத்தசையை விளைத்தவன் றனக்குத்தெரியாதோ?" என்ன; தாய்செல்லாமையறியாதவனோ கலந்தார் செல்லாமை யறியப்புகுகிறுன்.

---

அவனை அன்புதானுக இப்போது சொல்லுகைக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறுர் (**தேந தேத** - தேநதேதமித்யாதி.) (அன்புதானென்னலா யிருக்கும்) என்றதுக்கு ப்ரமாணம் (கோலமலர்ப்பாவைக்கித்யாதி.) முந்தினவர்த்தத்திலே "மாதவன் விஷயமான அன்பு" என்று விஶேஷிக்கிற தென்னென்ன (ஸர்வப்ரகாரேத்யாதி.)

"உற்று" - கிட்டி. (அவனைச்செல்லாமை) - அவனையொழியச் செல்லாமை. "செகுடரோடே, ஊமையர் சொல்லுமாப்போலே" என்றந்வயிப்பது.

---

(க) தி-வாய்-கு-கo. (உ) தி-வாய்-நி-க-க.

(பெற்றிருந்தாளையொழிய) அநந்தவ்ரத மநுஷ்டித்துப் பின்னைப் பிள்ளை முகத்திலே விழிக்கவேணுமென்று க்லேஶப்பட்டுப் பெற்றுப், பின்னைப்போகவிட்டு இழந்திருந்தாளாய்த்து. (போய்ப் பேர்தது) இவள் இரக்கத்தாலே இழவு பொறுக்க மாட்டாமே கண்ணும் கண்ணீருமாக விருந்தாள்; அவன் முலைச்சுவடறியாமையாலே கால் தாழவும் மாட்டாதே போனான். (பேர்த்தொருதாய் இல்வளர்ந்த) வேறொருதாய் க்ருஹத்திலே வளர்ந்தானாய்த்து. பெற்றவள் இழவோடேயிருக்க. அவளுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி தாயானமையில் ஒருவாசி தோற்றுதபடியாய்த்து வளர்ந்தது. அவள்தானும் (க)" திருவிலேனொன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யஶோதைபெற்றாளே" என்றாளிறே. (உ)"தொல்லையின்பத்திறுதிகண்டாள்" என்னக்கடவதிறே.

(பெற்றிருந்தாளையித்யாதி) தன்னையொழியச் செல்லாமையுடையாரை நலிகை அவனுக்கு ஸத்தாப்ரயுக்தமாய்த்து. (ங)[தாய்முலை இத்யாதி] இதிறே ஊடினார் வார்த்தை. முலைகொடுத்தல்லது தரியாதாளாய்தது. தனக்கு ஜீவநஹேதுவாய்த் தான்வந்து முலையுண்ணாமையாலே முலைகண்ணெறித்தவளிருக்க, தன்மௌக்த்யம் தோற்றத் தனக்கு விநாஶத்தை பலிக்குமதான விஷத்தையுண்டு, அத்தாலே"பாவபந்தமுடையார்க்கும்பாவதோஷமுடையார்க்கும் வாசியறியாதானொருவன்காண் இவன்" என்று கண்டார் இகழும்படி நின்றான். (நம்பி) சாலபூர்ணனாய்த்து.

(மற்பொருந்தாவித்யாதி.) தன்னுடம்போடேயணையவேணுமென்னுமாசையுடைய நானிருக்க, இத்தனை போது புறப்பட்டு முரட்டுமல்லரோடே அணைகைக்குப் போகாநிற்கும். மல்லரான

(அநந்தவ்ரதம்)-சாடு; அநந்தமான வ்ரதமென்று த்வநி.

தன்னையொழியச் செல்லாமையுடையாரை உபேக்ஷித்து நலிவுபண்ணுமென்னுமதுக்கு ப்ரமாணம் (தாய்முலையித்தியாதி;) சங்கைக்கர்த்தம் (முலை கொடுத்தல்லதித்யாதி.)

மல்-மிடுக்கு. "மற்பொருந்தாமற்களமடைந்த" என்றதுக்கு இரண்டு பொருள்; மற்பொருந்தா - என்னிடத்திலே பொருந்தாதே, மற்களம் - மல்லருடைய யுத்தபூமியை யடைந்தவனென்னுதல்; அன்றிக்கே, மல்லாலே

(க) பெரு-தி-எ-ரு. (உ) பெரு-தி-எ-அ, (ங) பெரு-தி-கூ-ச.

வர்கள் மற்பொருகைக்கு யுத்தபூமியிலே சென்று கிட்டுங் காட்டில், தான் யுத்தபூமியிலே சென்று கிட்டுமாய்த்து. அவன் மல்லரோடம்பொரோடே யண்ணவதற்கு முன்னே இடையிலே நான்சென்று கிட்டிக்கொள்ளுடம்படி என்னை மதுரையின் பரிஸரத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள். க

அவ ;—இரண்டாம் பாட்டு. எல்லாம் செய்தாலும் இப்படித் துணிந்து முடிகைக்கிறதுமது அவனுக்கு அவத்யாவஹம், நீ அவனுக்கு அவத்யத்தை விளைக்கக்கடவையோ, உன்னுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்கவேண்டாவோ வென்ன ;

மூ.—நாணியினியோர் கருமமில்லை
நாலயலாருமறிந்தொழிந்தார்,
பாணியாதென்னை மருந்துசெய்து
பண்டுபண்டாக்க வுறுதிராகில்,
மாணியுருவாயுலகளந்த
மாயனைக்காணில் தலைமறியும்,
ஆணையால் நீரென்னைக்காக்கவேண்டில்
ஆய்ப்பாடிக்கே யென்னையுய்த்திடுமின். (உ)

ப - ரை. இனி - இனிமேலது, நாணி - வெட்கப்பட்டு, ஓர்கருமமில்லை - ஒரு ப்ரயோஜனமில்லை ; நாலயலாரும் - ஊரிலுள்ளாரெல்லாரும், அறிந்தொழிந்தார் - அறிந்தார்கள் ; ஆகையால், பாணயாது - தாமஸியாமல், மருந்துசெய்து - அவனோடு ஸம்ஶ்லேஷிப்பதற்கு வேண்டும்பரிஹாரங்களைப்பண்ணி, என்னை-, பண்டு - ஸம்ஶ்லேஷம்பெறுவதற்குமுன்பு, பண்டாக்கவுறுதிராகில் - முன்புத்தைக் கன்னிகாவஸ்தையையுண்டாக்கப் பார்த்திகோளாகில்; மாணியுருவாய - வாமநாவதாரம் செய்தருளி, உலகு-ஸ்வர்க்காதி மூன்றுலோகங்களையும், அளந்த-தன் திருவடிகளாலே யளந்துகொண்ட, மாயனை - ஆச்சர்யபூதனை, காணில் - கண்டால், தலைமறியும்-ஆற்றாமையால் வந்த வ்யாதி தீரும்படியான, ஆணையால் - உங்களாஜ்ஞையாலே, நீர்-நீங்கள், என்னை—, காக்கவேண்டில்-நோக்கப் பார்த்திகோளாகில், ஆய்ப்பாடிக்கே - திருவாய்ப்பாடியிலே, என்னை—, உய்த்திடுமின் - கொண்டுபோய்ப் பொகடுங்கோள்.

---

பொருந்தாதே யிருக்கிற களமடைந்தவ னென்னுதல். அதாவது - அவர்கள் கிட்டுவதற்கு முன்னே என்றபடி. மல்பொருந்தாமல் - மல்லரானவர்கள் பொருந்துவதற்கு முன்னே யென்னுதல் ; மல்லரோடே பொருந்துவதற்கு முன்னே யென்னுதல். "களம்"-யுத்தபூமி. க

வ்யா ;—நாணியினியோர் கருமமில்லை) நாணி நான் என்னுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்குகிற வித்தால் என்ன ப்ரயோஜநமுண்டு நாணுகையாவது-லஜ்ஜிக்கையிறே லஜ்ஜித்து மீளவேண்டுவது இன்னமும் சிலநாளிருந்து அவ்வஸ்துவை லபிக்கவேணுமென்றிருப்பார்க்கே. லஜ்ஜைபோகையாவது-முடிகையிறே. முடியுமளவானாலும் ஜீவித்திருப்பார் செய்யுமது செய்யப்போமோ? ஸத்தை கிடக்கிலிறே லஜ்ஜை நோக்கலாவது; ஸத்தையழியாநிற்கச்செய்தே நோக்குவதொரு லஜ்ஜையுண்டோ? தர்மியை அநுபந்தித்திறே லஜ்ஜையிருப்பது; தர்மிலோபம் பிறக்குமளவானால் இனி நோக்குகையென்றொருபொருளுண்டோ?. (இனி) இவள்தான் ஆமளவும் நோக்கிப்பார்த்தாள்போலே காணும்.

இனியொருகாரியமில்லையென்கைக்கு இப்போது உனக்குவந்ததென்னென்ன ; (நாலயலாரு மித்யாதி) இதுதான் பிறரறியாமைக்கே தான் பரிஹரிக்கப் பார்க்கிறது, இதறியாதார் சிலருண்

---

இரண்டாம்பாட்டு. (நாணியித்யாதி) (உன்னுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்கவேண்டாவோ) உன்னுடைய ஸ்த்ரீத்வத்தையும் நோக்கவேண்டாவோ வென்றபடி.

“நாணியினி” என்கிறவிடத்திலே * இனிக்கு நாலுதாத்பர்யம். அதாவது-அவன் வந்து முகங்காட்டாத பின்பு நாணி நான் என்னுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்குகிற வித்தால் என்ன ப்ரயோஜநமுண்டென்னுதல் ; (ஸ்த்ரீத்வத்தை) என்றது-ஸத்தையை என்றபடி. நாணமில்லாதபோது ஸ்த்ரீத்வத்தை நோக்கவேண்டுமோவென்ன ; (லஜ்ஜைபோகையாவது முடிகையிறே) என்று மேலே யிருக்கிற வாக்யத்தை இவ்விடத்திலே யோஜித்துக் கொள்வது. அன்றிக்கே, முடியுமளவான பின்பு லஜ்ஜிக்கவேண்டாவென்னுதல் ; இத்தை யருளிச்செய்கிறார் (நாணுகையாவதித்யாதி.) முடியுமவஸ்தையானாலும் பரிஹரிக்கவேண்டாவோ வென்ன ; அருளிச்செய்கிறார் (முடியுமளவித்யாதி.) (முடியுமளவானாலும்) என்றுதுடங்கி, (இவள்தானுமளவும்) என்ற வாக்யத்தளவும் உத்தரோத்தரவிவரணம். அன்றிக்கே, ஜீவிக்கையாலுண்டான நைராஸ்யத்தைச் சொன்ன “இனி நாணிக்கருமமில்லை” என்கிறுளாதல் ; இத்தையருளிச்செய்கிறார் (இவள்தானித்யாதி.) இதுக்கு முந்தின அர்த்தத்தைப்பற்றப் ப்ரகாராந்தரேணப்ரமுண்டு ; அங்கு-ப்ரகாசும் ; இங்கு-ஸ்வகதம்.

அன்றிக்கே, “நாலயலாருமறிந்தொழிந்தார், இனி-நாணி-ஓர்கருமமில்லை” என்னுதல் ; இத்தை யருளிச்செய்கிறார் (இனியொருகாரியமில்லையித்யாதி.)

டாய் பரிஹரிக்கவேணுமே. இவள்தான் முந்துறவறியாமே பரிஹரித்து, அநந்தரம் அதுக்கு அசலிலுள்ளாரறியாமல் பரிஹரித்து, இப்படி போராநிற்கச்செய்தே ஓரசலறிந்து, மற்றவசலறிந்து, அவ்வளவிலடங்காதே அவ்வூரிலவர்களறிந்து அதுதான் புறவெள்ளமிட்டு, அவ்வழியாலே யெங்குள்ளார்களும் அறிந்தார்களாய்த்தது. (அறிந்தொழிந்தார்) இவள்தான் திருக்கோட்டியூர் நம்பியைப்போலே "பகவத்விஷயம் ஒருவரா லறியலாகாது" என்று மறைத்துக்கொடுபோரு மவளொருத்திபோலேகாணும்.

நம்பிதாம் ஒருதிண்ணையிலே ஒருவரு மறியாதபடி பகவத்குணாநுஸந்தாநம் பண்ணியிருப்பர்; எம்பெருமானார் எழுந்தருளி "நம்பிமடமேது" என்றுகொண்டு தண்டனிட்டவாறே, அங்குள்ளார், "எம்பெருமானார், நம்திருக்குருகைப்பிரானகத்தை நோக்கித் தண்டனிடாநின்றார்" என்ற பின்பிறே நம்பியுடைய ப்ரபாவம் அங்குள்ளாரறிந்தது. ஆழ்வானும ஆண்டானும் ஓராறுமாஸம் ஸேவித்திருந்த ஸந்நிவேஶத்தைக்கண்டு போரும்போது ஒருவார்த்தைகேட்டுப் போருவர்களோ; ஆழ்வான் ஒருவிசை ஆறுமாஸம் ஸேவித்து நின்று போரப்புகாநிற்கச்செய்தே, ஆழ்வானை, ' நம்மாழ்வார் (க) அடியேனுள்ளான் என்றபடி கண்டாயே" என்று பணித்தாராம்; "அடியேன் க்ருதார்த்தனே" என்று போந்தானும்; "என்னுள்ளான்" என்று - அஹமர்த்தத்தை நிஶ்சயிக்கிறவிடத்திலே, "அடியேன்" என்று-ஶேஷத்வத்தை நிரூபகமாகச் சொல்லுகிறதிறே. ஜ்ஞாநாநந்த லக்ஷணமுமாய் ஜ்ஞாநகுணகமுமாய் அசித்வ்யாவ்ருத்தமுமாயிருக்குமென்னுமிடத்தை மூன்றும் பதத்தாலே நிரூபியாநிற்கச்செய்தே, முன்பே பாடக்ர

---

(இவள்தான் முந்துற) தாயார்முந்துற. அறிந்துவிட்டா ரென்கையாலே - மறைத்தது தோற்றுகிறது.

(ஸந்நிவேஶம்) - கம்பீரம். "அடியேன்" என்றால் சேஷத்வந் தோற்றும்படி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (என்னித்யாதி.) சேஷத்வம் போலே ஜ்ஞாநாநந்தங்களும் நிரூபகமன்றோ வென்ன, அருளிச்செய்கிறார் (ஜ்ஞாநாநந்தேத்யாதி.) (மூன்றும்பதம்)-மகாரம். (பாடக்ரமம்) அகார உகார மகார மென்கிற வடைவிலே.

---

(க) தி-வாய்-அ-அ-உ.

மத்தாலே ஶேஷத்வத்தையிட்டுச் சொல்லவேண்டும்படியிறே ஶேஷத்வம் ஸ்வ ஸ்வரூபமாயற்றபடி.

நீ கைவாங்கிறு யென்று, " உன்னிடையாட்டத்திலே நாங்கள் கைவாங்கப் பாரோமே, ஆந்தனேயும் ஹிதம்சொல்லி நோக்கத் தேடுவுதோமிறே, எங்களுக்கு உன்பக்கலுண்டான நசையாலே" என்ன; என்னை மெய்யே நோக்கப்பார்க்கிறீர்களாகில், தன்னுடைமை பெறுகைக்காகத் தன்னை இரப்பாளனாக்கினவனை என் கண்ணுக்கு இலக்காக்கப் பாருங்கோள். பாணித்தல்-தாழ்த்தல். தாழாதே எனக்குவேண்டும் பரிஹாரம் பண்ணி. (பண்டு பண்டாக்க வுறுதிராகில்) ஸம்ஶ்லேஷிப்பதற்கு முன்புத்தை பூர்த்தி யெனக்குண்டாக்கப்பார்த்திகோளாகில். கலக்கப்புக்கவன்று தொடங்கி மெலிவுக்கேயிறே க்ருஷி பண்ணிற்று.

(மாணியுருவாய்) "உண்டு" என்று இட்டபோதோடு "இல்லை" என்று தள்ளிக்கதவை யடைத்தபோதோடு வாசியற முகமலர்ந்துபோம்படி இரப்பிலே தகணேறின வடிவையுடையனாய். (உலகளந்தமாயனைக்காணில்) த்ரைலோக்யத்தையு மளந்து கொண்ட ஆஶ்சர்யபூதனைக்காணில். குணஜ்ஞாநத்தாலே ஜீவித்திருக்கு மவஸ்தை யில்லையென்றது. (தலையறியும்) அடருகிற பாம்பைத் திரியவிடுவிக்குமாப்போலே. (ஆணையித்யாதி) உங்களாணையே, நீர் என்னை நோக்கவேண்டி லென்னுதல்; நான் தெரிந்திருந்து உங்களுடைய ஆஜ்ஞாநுவர்த்தநம் பண்ணும்படியாக என்னை நோக்கப்பார்க்கி லென்னுதல்.

(ஆய்ப்பாடிக்கே யென்னையுய்த்திடுமின்) அவன் தீம்புக்குப் பெற்ற தாய் பெருநிலைநிற்குமூரிலே என்னைக் கொண்டுபோய்ப் பொகடப் பாருங்கோள். (க) "அங்ஙனும் தீமைகள் செய்வர்களோ நம்பீ ஆயர் மடமக்களை" என்றிறே அவள் சொல்லுவது;

"பண்டு"-விஶ்லேஷத்துக்கு பூர்வமான ஸம்ஶ்லேஷம். அதுக்குப்பண்டு கந்நிகாவஸ்தை. ஸம்ஶ்லேஷாவஸ்தையை அபேக்ஷியாதே அதுக்கு பூர்வாவஸ்தையை அபேக்ஷிப்பா னென்னென்ன அருளிச்செய்கிறார் (கலக்கப்புக்கவன்றித்யாதி.)

"தலைமறியும்" - ஆற்றாமையால் வந்த வ்யாதி திரும்பும். உ

(க) தி-மொ-கo-எ-கக.

இத்தையிறே (க) "அஞ்சவுரப்பாளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்" என்கிறது. (உ) "உந்தமடிகள் முனிவர் உன்னை நானென்கையிற் கோலால், நொந்திட மோதவும் கில்லேன்" என்னுமவள் ஸந்நிதியில், (௩) "படிறுபலசெய்திப்பாடி யெங்கும் திரியாமே - என்பிள்ளையைப் போக்கினேன்" என்று அவன் தீம்புசெய்யப் பெறாததுக்கு வயிறுபிடிக்கிறாளிறே.

[அஞ்சவுரப்பாளசோதை] இவன் தீம்பிலே புண்பட்டபெண்கள், "இவன் தான் ஒருன்றியல்லனே, இவனுக்கொருதாயுண்டே, அவளுக்கறிவிப்போம்" என்று முறைப்படச் சென்றால் அஞ்சும்படி பொடியாள். அவன் தீம்பிலே ஸதஸாகமாகப் பணைக்கும்படியாக வாய்த்துப் பொடிவது. சிரித்துக்கொண்டு, (ச) "அங்ஙனும் தீமைகள் செய்வர்களோ நம்பீ" என்னும்; இவன் இங்கிதஜ்ஞனாய் (ரு) "இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்து விழிக்கும்" என்கிறபடியே - அப்போதே அவ்விடந் தன்னிலே நின்றவர்களும் தானுமறிந்ததாகச் சில தூர்த்தக்ருத்யக்களைப் பண்ணும்; [ஆணாடவிட்டிட்டிருக்கும்] அவனை ஆணாட்டமடிக்க விட்டு ஆநந்த நிர்ப்பரையாயிருக்கும். "என்மகனுக்குத் தோற்றுச் சிலர் வந்து முறைப்படப்பெறுவதே" என்று பெறாப்பேறு பெற்றாளாய்க் க்ருதார்த்தையாயிருக்கும். உ

அ.—மூன்றாம்பாட்டு. இவளும் நம்மோபாதி பெண்பிறந்தாளொருத்தியன்றே, இவளைவிடாய். தமப்பனார் நியமிக்கைக்கு ஸக்தனாயிருக்கச்செய்தே நியமியாதேயிருக்கிற ஸ்ரீ நந்தகோபன் வாசலிலே கொடுபோய்ப் பொகடுங்கோளென்கிறாள்.

மூ.—தந்தையும் தாயுமுற்றாரும்நிற்கத்
தனிவழி போயினாளென்னும்சொல்லு,
வந்தபின்னைப் பழிகாப்பரிது
மாயவன் வந்துருக்காட்டுகின்றான்,
கொந்தளமாக்கிப் பரக்கழித்துக்
குறும்புசெய்வானோர் மகனைப்பெற்ற,
நந்தகோபாலன் கடைத்தலைக்கே
நள்ளிருட்கணென்னை யுய்த்திடுமின். ௩.

(க) ௩-௯. (உ) தி-மொ-கo-ச-அ.
(௩) பெரி-தி-௩-உ-ௐ. (ச) தி-மொ-கo-எ-கக.

ப - ரை. ஒருபழி வாராமல் காக்கைக்கு, தந்தையும் - தமப்பனும், தாயும்-தாயாரும், உற்றாரும் - பந்துக்களும், நிற்க - இருக்கச்செய்தே, தனிவழி-தனி வழியே, போயினள் - போனாள், என்னும்செல்லு - என்கிறசொல், வந்த பின்னை - வந்த பின்பு, பழி - அந்தப்பழியை, காப்பு அரிது - ஒருவராலும் காக்கப்போகாது என்ன ; நீ க்ரமப்ராப்தி பார்த்துப் பொறுத்திருக்கலாகாதோ வென்ன ; மாயவன் - ஆஸ்சர்யஸக்தியுக்தனானவன், வந்து-என் ஸ்வப்நத்திலே வந்து, உரு - தன் வடிவழகை, காட்டுகின்றான் - காட்டாநின்றான் ; ஆதலால், கொந்தளமாக்கி - கிலுகிட்டு, பரக்கழித்து - பழியைவிளைத்து, குறும்புசெய்வான் - வன்னியமடிக்கைக்காக, ஓர் - ஒப்பற்ற, மகனை-மகனானக்ருஷ்ணனை, பெற்ற - நோன்புநோற்றுப்பெற்ற, நந்தகோபாலன் - ஸ்ரீ நந்தகோபருடைய, கடைத்தலைக்கே-வாசலிலே, நள் இருட்கண் - நல்லவிருளிலே, என்னை—, உய்த்திடுமின் - கொண்டுபோய்ப் பொகடுங்கோளென்கிறாள்.

வ்யா.—(தந்தையும் தாயும் உற்றாரும் நிற்க) பழிவிளைந்தால் பழிபரிஹரிக்கைப் பணியுடைத்து. நீங்கள்தான் பழிபரிஹரியாமலிருக்கவல்லவர்களல்லிகோள், இனி அதுவும் பிறக்கக்கொள்ளப் பின்னை நின்றும் இருக்குப்படாதே, ஏற்கவே பரிஹரிக்கப்பாருங்கோள், எனக்கு விளம்பம் பொறுக்கலாமாய்த்தாழ்க்கிறேனல்லேன்: உங்களைப்பார்த்துக்கால் தாழ்க்கிறேனித்தனை; அதுதான் இனிச்செய்யப்போகாது; ஆனபின்பு, ஏற்கவே பரிஹரிக்கப்பாருங்கோள். கடகரைமொழியத்தனியே புறப்பட்டுப்போகைக்குமேற்பட்ட பழியில்லை. "தாய் தமப்பன் உறவுமுறையாரென்கிற இவர்களைவிட்டுத் தனிவழிபோயினள், நாயகன்பின்னே போகையுமன்றிக்கே தானேதனியேபோயினள்" என்கிற இந்த சொல்லு நாட்டிலே வார்த்தையானல், பின்னைப் பரிஹரிக்கப்போகாது. (க) "வயோஸ்யாஹ்யதிவர்த்ததே" "வயோஸ்யாஹ்யதிவர்த்ததே" என்னக்கடவதிறே.

மூன்றாம் பாட்டு (தந்தையுமித்யாதி) "பழிகாப்பரிது" என்றதைப் பற்ற வருளிச்செய்கிறார் (பழிவிளைந்தாலென்று துடங்கி, ஏற்கவே என்னுமளவாக.) நீ தனிவழி போனாலன்றோ பழி சொல்லுவது, இவ்வளவும் தாழ்த்து நீதான் மேலும் தாழ்க்கலாலோ வென்ன ; அருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி) தானே போகை பழியோவென்ன ; ஸ்வாபதேஸம் (கடகரையித்யாதி.) பரிஹரிக்கப் போகாமைக்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (வயோஸ்யாஹி - வயோஸ்யாஹி இத்யாதி.)

(க) ரா-யு-௫ ௫.

மேலும், "இப்பேற்றையன்றோ பெறவிருக்கிறது" என்று வரும்நாளை நினைத்து ஆறியிருக்கப்போகாது, "முன்பு இழந்ததும் இப்பேற்றையாகாதே!" என்று வெறுக்கவேணும், இது தான் பழியென்று புத்திபண்ணிப் பரிஹரிக்கவும் வேணுமென்றிருந்தாயாகில், முதலிலே இது பிறவாதபடி க்ரமப்ராப்திபார்த்துப் பொறுத்து எங்களுக்காக இருந்தாலோவென்ன; (மாயவன் வந்துருக்காட்டுகின்றான்) ஒரு தாய் தமப்பனைப்பார்த்து ஆறியிருக்கலாம்படியாயோ அவனுடைய ஸௌந்தர்யசீலாதிகள் வந்து நலிகிறபடி. நானும் ஆந்தனையும் பாராநின்றேன், அவன் உருவெளிப்பாட்டிலே முற்பாடனாகா நின்றான். (க) "𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾 𑌬𑌹𑌿𑌰𑍍𑌗𑍁𑌰𑍁𑌮𑍍" "த்ருஷ்ட்வாஸ்தித்வா பஹிர்குரும்" என்கிறவிடத்துக்கு பட்டரருளிச்செய்யும்படி ;- "திருவாய்ப்பாடியில் க்ருஷ்ண ஸம்ஸ்லேஷத்தில் இவளைப்போலே புதியாரில்லை" என்று. அதாவது - குருதர்ஶநம்பண்ண வல்லளானாளே; (க) "𑌯𑌯𑍌 𑌚 𑌕𑌾𑌚𑌿𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌮𑌾𑌨𑍍𑌧𑌾" "யயௌசகாசித்ப்ரேமாந்தா" என்கிறதிறே.

ஒருத்தி போனாளென்கிறது, வழிகாட்டினாரென்றால்; ப்ரேமத்தாலே நெஞ்சு இருண்டது, அந்த இருட்சி வழிகாட்டப்போனாள். (உ) "𑌗𑍁𑌰𑌵𑌃 𑌕𑌿𑌂𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿" "குரவஃகிங்கரிஷ்யந்தி" இத்யாதி. (௩) [தூவலம்புரியித்யாதி] பலவகைப்பட்ட அரண்களிலே பெண்களைக் கொடுபுக்குக் கட்டிக்கொடு கிடந்தார்கள்; உறவுமுறையாரிட்ட அரணையும்கடந்து, காத்துக்கிடக்கிறவர்களையுமுறக்கிச் செவியிலே வார்த்தை சொல்லவல்லதொரு தூதுபோனான்; குழலோசை செவிப்பட்ட வநந்தரம் முலைகளுணர்ந்து, பெண்களை எழுப்பி, "குழலோசைவந்தது; நாம் † போருங்கோள்" என்ன; அவர்கள்,

---

பெருமாள் தான் வெறுப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (மேலும் இப்பேற்றை யித்யாதி.) உரு வெளிப்பாடானாலும் ஆறியிருந்தவிடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾-ஸ்தித்வாத்ருஷ்ட் வேத்யாதி.) புதியளாகையாலே என்றபடி. பழையளானால் குருதர்ஶநம் பண்ணாமல் போனவிடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (𑌯𑌯𑍌 𑌚 𑌕𑌾𑌚𑌿 - யயௌசகாசித்யாதி.)

ஆறியிருக்கப் போகாமைக்கு ப்ரமாணம் (𑌗𑍁𑌰𑌵𑌃 - குரவஃ இத்யாதி.) (தூதுபோனான்)-போகவிட்டான். "அசேதநங்களான முலைகள், எழுப்புகை

---

(க) வி-பு-ரு-கங-உ. (உ) வி-பு-ரு-கஅ-உஉ. (௩) பெரி-தி-௩-௬ க.

"காத்துக்கிடக்கிறவர்கள் ; உறங்கிடுகிடாய்" என்ன ; "ஆனால் நீங்களும், அவர்களுறங்கினால் வாருங்கோள், நாங்கள் முன்னே போகிறோம்" என்றன. [குதுகுலிப்ப] என்று இவற்றை சேதந ஸமாதியாலே சொல்லும்போது அங்ஙனே யாக்கவேணுமிறே. [இளம்கொங்கை] சொற்கேளா ப்ரஜைகளாய்த்து. [காவலும்கடந்து] க்ஷுத்ர பாஷாணங்கள் கிடக்க, மேலே நீர் போமாப்போலே. நீர் வெள்ளமானால் மலைமேலேயோடும்; அப்படியே இட்ட ஆணையை ஒன்றாக நினையாமைக்கு ஹேது - கௌதூஹலத்தின் மிகுதியிறே. அப்படியே தாய்தமப்பனை நாக்குவளைக்கப்பண்ணின வடிவழகிருக்கிறபடி.

(கொந்தளம்) சிலுகிடுகை. பரக்கழிக்கை - பழிவிளைக்கை' ‡(குறும்புசெய்வானோர்மகனைப்பெற்ற)ஸ்ரீநந்தகோபர், தம்முடைய ராஜ்யத்திலே வன்னியமடிக்கைக்காக நோன்புநோற்றுப் பிள்ளை பெற்றாராய், அதுகண்டிகோளே ; அவன் இவனை நியமியாதே யிருக்கிறபடி. "நந்தகோபாலன் கடைத்தலை" என்றால் ப்ரஸித்தமிறே - பட்டர் அருளிச்செய்வரென்று ; இவனாலே புண்பட்ட பெண்களுடையக் கட்டணங்களும்கையும் பசும்துவலுமாயாய்த்து அவர் வாசல். விஷம் தீர்ப்பார் வாசல்போலே. (நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின்) நடுவான இருளிலே கொடுபோய்ப் பொகடுங்கோள். நீங்கள் வெளியிலே கொடுபோய்ப்பொகட்டு, அவன் பித்ராதிகளுக்கு லஜ்ஜித்துப் புறப்படமாட்டாதிராமே, இருளிலே கொடுபோய்ப் பொகடுங்கோள். * இருளன்னமா மேனியாகையாலே தன்னிறத்தோடு விகல்பிக்கலாமிருளிலே புறப்பட்டவன் அணைக்கலாமபடி. (மகனைப்பெற்ற நந்தகோபாலன்) இவனைப் பெறுகைக்கு நோன்பு நோற்றவனிறே.

தான் பண்ணின துஷ்கர்மபலம் தானே யநுபவிக்கும்படி அவன் வாசலிலே பொகடுங்கோள். அங்கே பொகடச்செய்தே பின்னையும் உங்களுக்குப் பழிவரவிராதே கொள்ளுங்கோள். வெளியிலே கொடுபோய்ப்பொகட்டு அவன் உறவுமுறையார்க்கு லஜ்ஜித்

---

முதலானவற்றைச்செய்யவற்று" என்கைக்கு ஜ்ஞாபகஸப்தமேதென்ன ; அருளிச்செய்கிறார் (குதுகுலிப்பவித்யாதி.) (நாக்குவளைக்க) பழிசொல்ல; அபஹஸிக்கப்பண்ணின என்றும் (பசும்துவல்) - வைவர்ண்யம். ௩

துப் புறப்படமாட்டாதே யிருக்கும், அவ்வளவிலே நான் முடி வன், பின்னையும் உங்களுக்குப் பழிவாராதபடி பரிஹரிக்கப் பாருங்கோள். ௩

மூ.—அங்கைத்தலத்திடை யாழிகொண்டான்
அவன்முகத்தன்றி விழியேனென்று
செங்கச்சுக்கொண்டு கண்ணுடையார்த்துச்
சிறுமானிடவரைக்காணில் நாணும்,
கொங்கைத்தலமிவைநோக்கிக் காணீர்
கோவிந்தனுக் கல்லால்வாயில்போகா
இங்குத்தைவாழ்வையொழியவேபோய்
யமுனைக்கரைக் கென்னையுய்த்திடுமின். (௪)

ப - ரை. அம் - அழகிய, கைத்தலத்திடை - திருக்கையிலே, ஆழி - திருவாழியை, கொண்டானவன் - தரித்த க்ருஷ்ணனுடைய, முகத்தன்றி - முகத்திலேயல்லாமல், விழியேனென்று-மற்றொருவர் முகத்திலே விழியேனென்று, செம் - சிவந்த, - கச்சு ஆடைகொண்டு - ரவிக்கையாகிற ஆடையாலே, கண் முலைக்கண்ணை, ஆர்த்து மூடி, சிறு - தண்ணியரான, மானிடவரை - மநுஷ்யரை, காணில் - கண்டால், நாணும் - உள்ளே புகாநிற்கிற, கொங்கை தலம் - இந்தஸ்தநங்கள் வீங்கினபடியை, நோக்கிக் காணீர் - நன்றாகப்பாருங்கோள்; இவை - இந்தஸ்தநங்கள், கோவிந்தனுக்கல்லால்-தீம்பிலே கைவளரும் க்ருஷ்ணனுக்கொழிய, வாயில் - நல்வழியில் நிற்கின்ற சக்ரவர்த்தித் திருமகனுடைய வாசலிலே, போகா - போகாவாம்; ஆகையால், இங்குத்தை வாழ்வையொழிய -உருவெளிப்பாட்டை யநுபவிக்கலாம் இவ்விடத்திய ஸம்ருத்தியை விட்டு, அடிச்சுவட்டைக்கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி, யமுனைக் கரைக்கு - யமுநாநதீ தீரத்திலே, என்னை—, உய்த்திடுமின்-கொண்டுபோய்ப் பொகடுங்கோள்.

வ்யா.—நாலாம் பாட்டு. (அங்கையித்யாதி) முலைகளினுடைய ஸங்கல்பவாக்ய மிருக்கிறபடி. பூவளைக்காரரைப்போலே யாய்த்து முலைகளின்படி. ராஜாக்கள் தலையில் பூமாறில் குத்திக்கொள்வார் சிலருண்டு; அப்படியே கையில் திருவாழியொழிந்தவன்று அவன் தானேவரிலும் வேண்டேன். வெறுமபுறத்திலே ஆலத்திவழிக்க

---

நாலாம் பாட்டு. (அங்கையித்யாதி)கீழே திருவாழியைச் சொல்லுமிடத்தில் பரிவுதோற்றச்சொல்லி, வெறுப்பிலேயாக்கி தாத்பர்யாந்தரம் (வெறும்புத்திரலே யித்யாதி.) 'விழியேன்'' என்றது உத்தமம்.

வேண்டும்படி. அழகியகையிலே கல்பகதருபணைத்துப் பூத்தாப் போலே யாய்த்துக் கையில் திருவாழி யிருப்பது. வெறும்புறத்திலே கொல்லவற்றாய்த்துத் திருக்கைதான், அதுக்குமேலே திருவாழியையும் தரித்தான். ப்ரதிகூலரைக் கை கழியப்போய்க் கொல்லும்; அநுகூலரைக் கைமேலே யிருந்துகொல்லும்.

(செங்கச்சித்யாதி) சிவந்த கச்சைக்கொண்டு கண்ணை மறைத்ததாய்த்து முலைகள். (சிறுமானிடவரை) பெருமானிட வருமுண்டுபோலே காணும். (க) "𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌂 𑌪𑌰𑌂𑌭𑌾𑌵𑌂" "மாநுஷீம் தநுமாஸ்ரிதம் பரம்பாவம்" என்னக்கடவதிறே. (காணில்நாணும்) சமையவளர்ந்த முலைகளானவை உள்ளே குடிபுகும். (உ) [𑌸𑍍𑌵𑌾𑌨𑍀𑌕𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑍀𑌲𑌜𑍍𑌜𑌯𑌾 - ஸ்வாநிகாத்ராணிலஜ்ஜயா] ஒருவர்க்கொருவர் அம்பேற்றுப்பெறப்படுகிற ராஜ்யம், இவர்கள் கையிலேபடுகிறபடியேறேயிது. பரதனை, "கொல்லுவன், குத்துவன்" என்றாப்போலே இளையபெருமாள் முனிதல்தீரச் சிலவார்த்தை சொல்ல; பெருமாள் பலபடிகளாலும் மாற்றிப்பார்த்தார்; பின்னையும் மீண்டிலர்; (உ) "𑌬𑌾𑌢𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿" "பாடமித்யேவ வக்ஷ்யதி" என்று - "அதுவோ பிள்ளைக்கு ராஜ்யஸ்ரத்தையோடுகிறது, பிள்ளாய்! அத்தைத் தவிர், என்று நான் சொன்னவாறே. தலைச்சுமையோ பாதிபொகட்டுப்போகிறான்" என்றவாறே,

"கண்" - முலைக்கண். "சிறுமானிடவர்" என்று-ஸம்ஸாரிகளைச் சொல்லுகையாலே, ஈஸ்வரனை (பெருமானிடவர்) என்கிறது. ஈஸ்வரனுக்கு மாநுஷத்வ முண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂𑌤𑌨𑍁𑌮𑍍 - மாநுஷீம் தநுமித்யாதி.) (பரம்பாவம்) பெருமை; பெரியமானிடவரென்கைக்கு ப்ரமாணம். லஜ்ஜையாலே ஒடுங்கினபேருண்டோ வென்ன; இளையபெருமாள் ஒடுங்கினாரென்கிறார் (𑌸𑍍𑌵𑌾𑌨𑍀𑌕𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑍀 - ஸ்வாநிகாத்ராணிஇத்யாதி.) (இவர்கள்) என்றது - இளையபெருமாளையும், பரதாழ்வானையும். பரதாழ்வான் ஊரி நின்றும்வர, இளையபெருமாளெதிர்க்க, அவ்வளவிலே பெருமாள், அவன் விரோதியாய் வரவில்லை யென்று சிலசொல்லாநிற்கச்செய்தேயும் கேளாமையாலே, "ஆனால் பரதனை நாம் கூடிக்கொண்டு போகிறோம்" என்றவாறே நடுங்கினாரென்றபடி. "𑌬𑌾𑌢𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 - பாடமித்யேவவக்ஷ்யதி" என்றது-பரதாழ்வானை நாமழைத்தால் "ஓம்" என்று சொல்லிவருவரென்றபடி. "கொங்கைத்தலமிவை நோக்கிக்காணீர்" என்றது-எப்படி யிருக்கிறதென்ன;

(க) கீ கூ-கக. (உ) ரா-அ-கூஎ-ககூ.

இளையபெருமாளைக் கண்டுவிட்டதில்லை; க) "காத்ரை: ஸ்மோகாபிகர்ஶிதை:" "காத்ரை ஶ்மோகாபிகர்ஶிதை:" என்கிறபடியே, அவற்றைக் கொண்டே யணையவேணும். "அல்லாதார் செய்தபடிசெய்ய, இச்சிறுப்ரஜைகள் கண்ணில் கண்ணநீரைப் பாரிகோள்" என்னுமாப்போலே. (இவைநோக்கிக் காணீர்) அவனை நினைத்து இவை வீங்கினபடிபாரிகோள்.

(கோவிந்தனுக்கல்லால் வாயில்போகா) பசுக்களின்பின்னே போய்த் தீம்பிலேகைவளரும் க்ருஷ்ணனுக்கல்லது, வழியேபோய் வழிவந்து ஏககாரவ்ரதனுயிருக்கும் சக்ரவர்த்தித்திருமகனுக்குவழி போகாது. (உ) [மம-மம] அஶ்வஹ்ருதயமறிகைக்குத் தன்னைத் தான் மதித்தபடியாலே "மம - மம" என்கிறுன். [து] இற்றைக்கு முன்பின்றிக்கே இற்றைக்கே யுள்ளதொரு விஶேஷமாய்த்து இது. [அஶ்வா: - அஶ்வா:] என்கருத்திலே நடந்து போநவை [நிவ்ருத்தஸ்ய-நிவ்ருத்தஸ்ய] பெருமாளை யெழுந்தருளுவித்துக் கொடு போகிறபோது போய்க்கின. [நப்ராவர்த்தந்த வர்த்மநி - நப்ராவர்த்தந்த வர்த்மநி] வழிசெய்து கிடக்கிற பெருவழியைவிட்டுக் காடுபோகத் தொடங்கிற்றின. (இங்குத்தையித்யாதி) அடிச்சுவடு உரு வெளிப்பாடா யநுபவிக்கலா மிங்குத்தை ஸம்ருத்தியைவிட்டு அடிச்சுவட்டைக்கண்ணாலே கண்டநுபவிக்கலாம் தேஶத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள். * தூயபெருநீர் யமுனையிறே. தானுமவனுமாய் ஜலக்ரீடைபண்ணி விளையாடக்காணும் நினைவு.

அ.—அஞ்சாம் பாட்டு. (ஆர்க்குமித்யாதி) நோவறிந்து அதுக்கிடாக பரிஹாரம் பண்ணவேணுமிறே யென்று அதிலே துடிக்கப் படத் தொடங்கினுர்கள்; உறவுமுறையாரென்னு உங்களுக்கு என்னோவு அறியப்போகா தென்கிறுள்

---

பிராட்டி திருவடிக்குக் காட்டினுப்போலே யிருக்கிறதென்கிறுர் (காத்ரை: - காத்ரைரித்யாதி.) (அல்லாதார்) என்ற வாக்யம் தாத்பர்யாந்தரமாதல். தாத்பர்ய பேதமுண்டான பக்ஷத்தில் முந்தின தாத்பர்யத்திலே. "நோக்கிக்காணீர்" என்றதுக்கர்த்தம் (அவனைநினைத்தியாதி.)

"கோவிந்தன் வழியொழிய என்வழியே வாவில்லை" என்கிறது "எப்படியிருக்கிறதென்ன; பெருமாளைவிட்டுத் திரும்புகிறபோது ஸுமந்த்ரர் "குதிரைகள் என் வழியே வாவில்லை" என்றப்போலே யிருக்கிறதென்கிறுர் (மமத்வ - மமத்வித்யாதி.) துஶப்தார்த்தம் (இற்றைக்கித்யாதி.) "யமுனை" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறுர் (தூயபெருநீரித்யாதி.) ச

---

(க) ரா-ஸு-சo-ங. (உ) ரா-அ ருகூ ரு.

மூ.—ஆர்க்குமென்னோயிதறியலாகாது
அம்மனைமீர்! துழதிப்படாதே
கார்க்கடல்வண்ண னென்பானொருவன்
கைகண்டயோகம்தடவத்தீரும் ;
நீர்க்கரைநின்ற கடம்பையேறிக்
காளியனுச்சியில் நட்டம்பாய்ந்து
போர்க்களமாகநிருத்தம்செய்த
பொய்கைக்கரைக்கென்னையுய்த்திடுமின்.

ப - ரை. அம்மனைமீர் - தாய்மார்களே, என் இதுநோய் - என்னுடைய இந்த நோயானது, ஆர்க்கும் - இத்தையுண்டாக்கினவனுக்கும் கூட, அறியலாகாது - அறியக்கூடாது, துழதிப்படாதே - நீங்கள் துஃகப்படாதிருங்கள் என்ன ; ஆகில் இதுக்கு பரிஹாரமென்னென்ன ; கார்க்கடல்வண்ணனென்பானொருவன் - கருங்கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனான க்ருஷ்ணன், கைகண்டயோகம் - இந்த நோய்க்குக் கைகண்டபரிஹாரம்; தடவ - அவன் திருக்கைகளாலே ஸ்பர்சிக்க, தீரும் - இந்த வ்யாதி தீரும்; இப்படியிருக்கையாலே, நீர்க்கரை நின்ற - காளிங்கமடுவின் கரையில் இருக்கிற, கடம்பையேறி - கடம்பமரத்திநுச்சியிலே யேறி, காளியன் உச்சியில்-காளியனென்னும் ஸர்ப்பத்தின் தலையிலே, நட்டம்பாய்ந்து - திருவடிகள் படும்படி குதித்து, இந்தச்செய்தி கேட்டவர்களெல்லாரும், போர்க்களம் - யுத்தபூமியில் பிணம் போலே, ஆக - மூர்ச்சித்து விழும்படி, நிருத்தம் செய்த - நடநம் செய்தருளின, பொய்கைக்கரை - பொய்கைக் கரையிலே, என்னை—, உய்த்திடுமின்-கொண்டு போய்ப் பொகடுங்கோள்.

வ்யா.—(ஆர்க்குமித்யாதி) இந்நோவு விளைத்தவனுக்கும் இவ்வளவென்று பரிச்சேதிக்கவொண்ணாது. (க) "இசைப்பின்றி நீரணங்காடு மிளந்தெய்வமன்றிது" என்னக்கடவதிறே. (உ) "யஸ்யாமதம் மதம் தஸ்ய" "யஸ்யாமதம்தஸ்யமதம்" என்கிறதுக்குள்ளே புக்கானிறே அவனும். தன்னை பரிச்சேதித்தாலிறே என்னோயை பரிச்சேதிக்கலாவது.

அஞ்சாம் பாட்டு (ஆர்க்குமித்யாதி) "ஆர்க்கும்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (இந்நோவு விளைத்தவனுக்கு மித்யாதி.) அவர்களுக்கும் அவனுக்கும் அறியப்போகாதென்னு மத்தை ப்ரமாணத்வயத்தாலே அருளிச்செய்கிறார் (இசைப்பின்றியித்யாதி.) அதாவது - தேவதாந்தரமடியாக வந்ததோவென்று கலங்குகையாலே என்றபடி. ஸர்வஜ்ஞனன்றோ ஸர்வேஶ்வரன், அவனுக்

(க) தி-வாய்-ச சு உ. (உ) கேந-உ-ங.

(என்நோய்) ஸ்ரீபரதாழ்வான் மோஹித்தவத்தைக்காண, அவனருகுநின்றமந்தரை, கைகேயிக்கு மோஹிக்கவொண்ணு கிறதே. (க [illegible] - அஸ்யராஜ குலஸ்யாத்ய த்வதநீநம்ஹிஜீவிதம்] "பெருமாள் காடேறப்போனார், சக்ரவர்த்தி துஞ்சினான். இனி நோக்குமித்தனையிறே எங்களை" என்கிறார்களல்லர், "உன் முகத்தில் பயிர்ப்பைக் கண்டுபோனவர் உன்னையிழக்கமாட்டாமைபோலே மீள்வர்" என்னுமிது பற்றுசாகவிறே நாங்கள் ஜீவித்திருக்கிறது.

[[illegible] - புத்ரவ்யாதி ர்நதேகஸ்சித்] நின்றாப்போலே நில்லா, ரஸவாதிகள் போமாப்போலே மோஹித்துக்கொண்டு நிற்கக்கண்டார்கள். "பிள்ளாய்! உனக்கோடுகிற நோயென்" என்று கேட்கிறார்கள். ராமவிரஹம் ஸர்வஸாதாரணமாய்த்து, தங்களுக்கும் உண்டாயிருக்க "உனக்கோடுக்கிற தசையென்?" என்று கேட்கும்படியாய்த்து இவன்மோஹித்த சடக்கு தங்களளவிலே யாகிலிறே இவனுக்கும் அதுவேயென்று நினைத்திருக்கலாவது. (உ)"[illegible]" 'அபிவ்ருக்ஷா:' என்னுமாப்போலே, மரங்களும் வாடாநிற்க, இவனைக் கேட்கவேண்டாவிறே. ஒரு வ்யக்திகதமான விசேஷமுண்டானால் அந்தவ்யக்தி தன்னையே

குப் பரிச்சேதிக்கவொண்ணாதோ வென்ன அருளிச்செய்கிறார் ([illegible] யஸ்யாமதமித்யாதி.) (புக்கானிறேயவனும்) என்றது (-ந)"[illegible]" "ஸோஅங்கவேதயதிவாநவேத" என்கையாலே என்றபடி. ஆகை யாலே தன்னைப் பரிச்சேதித்தாலிறே என்று கூட்டி நிர்வஹிப்பது.

"என்நோய்" என்கையாலே-"அவர்களுக்கில்லை" என்னுமதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (ஸ்ரீபரதாழ்வானித்யாதி.) அவன் மோஹித்தானோ வென்ன அருளிச்செய்கிறார் ([illegible]-அஸ்யராஜகுலேத்யாதி.) ரஸவாதிகள் ரஸகுளிகை கொடுத்தாப்போலே அது பலிக்குமோ பலியாதோ வென்று தாங்கள் பற்றின த்ரவ்யந்தக்குதைக்கு ஸங்க்ரமாக ஒளிப்பர்கள். அன்றிக்கே, பெரியாழ்வார் ஸம்பந்தமுடையவர்களன்றோ, ஆனபின்பு அவர்களுக்கு அறியவொண்ணாதோவென்ன ([illegible] - அஸ்யேத்யாதி) என்னவுமாம். கெடுக்கைக்கு ஹேத்வந்தரம் (தங்களளவிலே யாகிலிறே) என்று தங்களைப் பற்ற அவனுக்கு அதிகமா யிருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் ([illegible] - அபிவ்ருக்ஷா: இத்யாதி.) (இவனைக்கேட்க) இவனுக்குச் சொல்ல

(க) ரா-அ அ-எ அ. (உ) ரா-அ ருக-அ. (ந)

கேட்டறியவேணுமிறே. (என்நோய்)(க) "தெய்வநன்னோய்" என்னுமாப்போலே, இவள்தனக்கும் ஆதரவிஷயமாய் உத்தேஶ்யமாயிருக்கிறது காணும் இந்நோய்தான். (அம்மனைமீர்) பெற்ற ப்ராப்தி கொண்டறிவோம் என்றால் அறியப் போமோ? உங்களுக்கும் இப்போதாகப் பாகம்பிறந்தது, முன்பு பாலைகளாயன்றோ?. (துழதிப்படாதே) து:கப்படாதே. (துழதி) து:கம். இது நீங்களறிந்த வகையாலே பரிஹரிக்கப் பார்த்திகோளாகில் உங்களுக்கு து:கமே ஶேஷித்துவிடுவது.

"நீ கைவாங்கினுயென்று நாங்களும் கைவாங்கமாட்டோமே, நாங்கள் உன்னையிழக்கமாட்டோமே. நீ பரிஹாரமாக நினைத்திருந்ததென்" என்ன; கேள் என்று சொல்லுகிறாள் (கார்க்கடலித்யாதி) கருங்கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனுயிருப்பான் ஒருவனுண்டு. நோவுக்கு நிதாநத்தைச் சொல்லிச் செல்லுகிறாளாய்த்து. பரிஹாரத்தை இவர்கள் தாங்களும் அடியேபிடித்து இவள் தன்பக்கலிலே கேட்டறிய வேண்டும் படியாய்த்துக் கலங்கினபடி. (ஒருவன்) நீங்களும் பரிஹாரத்திலே இழியுமத்தனை போக்கி, உங்களுக்கும் அடி ஆராயப் போகாதாய்த்து. (கார்க்கடல்வண்ணனென்பானொருவன்-தடவத்தீரும், கைகண்டிருந்திறே இவள்தான் சொல்லுகிறது. (யோகம்) ப்ரயோகம். இவள் முன்பு சொல்லிப் போரும் வார்த்தைகளிலே யொன்

வேணுமோ வென்றபடி. இவன் றன்னையே கேட்கவேணுமோ, தங்களுக்குத் தெரியாதோவென்ன அருளிச்செய்கிறார் (ஒரு வ்யக்திகதமான வித்யாதி.) "என்னோ யிது" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (தெய்வநன்னோயித்யாதி.)

தாத்பர்யாந்தரம் (உங்களுக்கு மித்யாதி.) (பாலைகளாய்) நீங்களும் பால்யத்திலே த்வரையை யுடையாராயன்றோ விருந்திகோள், ஆகையாலே என் விஷயமாக து:கப்படவேண்டாவோ வென்றபடி. நீங்களறிந்த வகையாவது; தேவதாந்தர மடியாக வந்ததோ என்றறிந்தவகை என்றபடி. (ஶேஷித்து விடுவது) ஆகையாலே கைவாங்குங்கோளென்றபடி.

நிதாநம் இவள் சொல்லவேணுமோ, தாங்களே யறியார்களோ வென்ன அருளிச்செய்கிறார் (பரிஹாரத்தை யித்யாதி.) (அடியே பிடித்து) நிதாநமே பிடித்து. "தடவத்தீரும்" இது - கைகண்டயோகம். யோகம்-ப்ரயோகமாதல்;

(க) திருவி - ருஉ.

றிறே இப்போது சொல்லுகிற பரிஹாரமு மென்னவொண்ணாது, கைகண்டவுபாயம். யோகம் - உபாயம். (க) [[illegible] - கௌந்தேயப்ரதிஜாநீஹி] இவ்வர்த்தத்தில் நம்மைப் பார்த்திருக்க வேண்டுவதில்லைகாண், நீ ப்ரதிஜ்ஞை பண்ணு. "[illegible]" ப்ரதிஜ்ஞாம்குரு" என்கிற படியே - நம்மை யறியாயோ நீ [[illegible] - நமேபக்தஃப்ரணஶ்யதி] நம்மைப் பற்றினார்க்கு ஒரு காலமும் அநர்த்தம் வாராதுகாண், * [illegible] - அக்நிநாஸிஞ்சேத்போலேஅஸங்கதம் (உ)[ஆரேதுயருழந்தார் இத்யாதி] பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணினாரில். "[illegible]" "அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிற பாபபலங்கள் அநுபவித்தாருண்டென்று கேட்டறிவாருண்டோ. துயருழந்தாரில், துன்புற்றாருண்டோ - துன்புற்றாரோ? பாபங்களைப்பண்ணிவைத்து நம்மை ஆஶ்ரயித்துப்பின்னும் அதினுடைய பலாநுபவம் பண்ணினாருண்டென்று கேட்டறிவாருண்டோ? பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணினாரில் முன்பு கைவந்தபடி திரிந்தார்களேயாகிலும், அவன் திருவடிகளிலே தலைசாய்த்தவாறே இவை தானே ஸவாஸநமாகக்கழிந்து நிற்றலன்றிக்கே, உகவாதார்மேலே யேறிடுதலன்றியே, தன்மேலே யேறிட்டுக்கொள்ளுதல்செய்யுமித்தனை. (ங)*[illegible] உரஸாப்ரதிஜக்ராஹபோலே.

(நீர்க்கரை யித்யாதி) இங்கேயிருந்து எனக்குப் பரியாதே, அவனுக்குப்பரியலாம் தேஶத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள், (நீர்க்கரைநின்ற கடம்பையேறி) முதலிலே தொடங்கி பயாவஹமாயிருப்ப தொன்றாய்த்து. முதலிலே விஷஜலம் தாரகமாக முளைத்து வளர்ந்ததிறே. ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு சென்று காளியனைக்கிளப்பி, அவன் கிளம்பினவாறே அவன் தலை

உபாயமாதல். ஸ்வாபதேஶத்திலே பகவத்ஸமாஶ்ரயணம் தப்பாத உபாயமென்னுமதுக்கு ப்ரமாணத்வய மருளிச்செய்கிறார் ([illegible]-கௌந்தேய ப்ரதிஜாநிஹீத்யாதி.) (ஆண்டையார்) ஆஶ்ரயித்த பழையார். (துயருழந்தார்) பாபம்பண்ணினார். ஸவாஸநமாகக்கழிந்துநின்றது-ஆர்த்த விஷயம்.

(முதலிலே தொடங்கி) என்றது - சாடு. அதாவது - கடம்பிலே ஏறினதும் பயாவஹமென்றபடி. அது எப்படியென்ன (முதலிலே) என்று. (தலைகாலாக) சாடு. தலையிலே காலாக என்று அர்த்தம்; அவன் தலைகீழாகவென்று த்வநி.

(க) கீ - கூ - ஙக. (உ) ங - திருவ - உஎ.
(ங) பாரா -

யிலக்காகப் பாயலாம்படி கடம்பிலே உயரவேறினுய்த்து. (காளியனுச்சியில் நட்டம் பாய்ந்து) பாய்கிறபோதே காளியன்தலை காலாகப் பாய்ந்தான்.

(போர்க்களமித்யாதி) "இதுக்கு பட்டரருளிச்செய்ய நான் கேட்டேன்" என்று அருளிச்செய்வர்; —"காளியன் தலையிலே க்ருஷ்ணன் பாய்ந்தான்" என்று கேட்டார் கேட்டவிடங்களிலே ஆழவிழுந்ததாய்த்து; பொய்கையளவும் கால்நடை தந்துபோய்ப் புகவல்லாரில்லையாய்த்திறே. அநந்தாழ்வான், "எம்பெருமானைக் காணவேணும்" என்று வாராநிற்கச்செய்தே, வடகரையளவிலே வந்தவாறே "திருநாட்டுக்கு எழுந்தருளினர்" என்று சில ஏகாங்கிகள் தலைகளையும் சிரைத்து ஏறினார்கள்; அவர்களைக்கண்டு ஸ்ரீநம்பி குஹதாஸர், மரத்திலேயேறி விழுவதாக வேறினராய், "தெளிந்து ஏறினநீ சாவமாட்டாய்காண், போந்திழி" என்றாரும். (பொய்கைக்கரை என்னை யுய்த்திடுமின்) இங்கே தெளிவோடேயிருந்து க்லேஶப்படாதே மோஹித்துக்கிடக்கலாம் தேஶத்திலே கொடுங்கோள் ... ... ... ரு

கார்த்தண்முகிலுங்கருவிளையும்
காயாமலரும்கமலப்பூவும்
ஈர்த்திடுகின்றனவென்னைவந்திட்டு
இருடீகேசன்பக்கல்போகேயென்று
வேர்த்துப்பசித்துவயிறசைந்து
வேண்டடிசிலுண்ணும்போதீதென்று
பார்த்திருந்துநெடுநோக்குக்கொள்ளும்
பத்தவிலோசநத்துய்த்திடுமின். (கூ)

ப - ரை. அன்னைமார்களே, கார் - மழைக்காலத்திலுண்டாகிற, தண் - குளிர்ந்த, முகிலும் - மேகமும், கருவிளையும் - காக்கணம்பூவும். காயாமலரும் - காசாம்பூவும், கமலப்பூவும் - தாமரைப்பூவுமாகிறவிவைகள், வந்திட்டு - வந்து, இருடீகேசன்பக்கல் போகு என்று - ஹ்ருஷீகேசனை க்ருஷ்ணனிடத்திலே

"போர்க்களமாக" கேட்டார் கேட்டவிடங்களிலே படுகளப்பட்டு ஈடுபடும்படி, உத்தேஶ்யவிஷயத்தில் ஆபத்து ஈடுபடுத்துமென்னு மதுக்கு ஸம்வாதமாக ஒரைதிஹ்ய மருளிச்செய்கிறார் (அநந்தாழ்வானித்யாதி.) "ஈர்க்கரை" இத்யாதிக்குக்கீழே ஒரு தாத்பர்ய மருளிச்செய்து, தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (இங்கே தெளிவோடே யித்யாதி.) ... ... ரு

போவென்று, என்னை—, ஈர்த்திடுகின்றன - பற்றியிழாநின்றன ; இப்படியிருக்கையிலே, பசுக்களைப் புல்லுள்ள விடம்தேடி மேய்க்கையாலே, வேர்த்து—, பசித்து—, வயிறசைந்து - வயிறுதளர்ந்து, வேண்டடிசில் - ரிஷிகள் ப்ரார்த்தித்து இட்ட அடிசிலை, உண்ணும்போது - அமுதுசெய்யும் காலம், ஈதென்று - இதுவென்று, பார்த்திருந்து—, நெடுநோக்குக்கொள்ளும் - பூர்ண கடாக்ஷம் பண்ணுகிற, பத்தவிலோசநத்து - பத்தவிலோசநத்திலே, உய்த்திடுமின் - கொண்டுபோய்ப் பொகடுங்கோள், பத்தவிலோசநம் - சோறுபார்த்திருக்குமிடம்.

வ்யா.—ஆறும்பாட்டு (கார்க்கண்முகிலும்) கார்காலத்தில் குளிர்ந்தமுகிலும், கருவிளைப்பூவும், காயாமலரும், மேகத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லப்புக்கவள் ஒன்றும் போராமையாலே பலவற்றிலேயும் கதிர் பொறுக்குகிறாள். (கமலப்பூவும்) அவயவ ஶோபைக்கு. (ஈர்த்திடுகின்றனவென்னைவந்து) பற்றியிழாநின்றன. என்சொல்லி யென்னில், (இருடீகேசன் பக்கல் போகேயென்று) (க) "[illegible]" "லக்ஷ்மணோநுகதாம்கதிம்" என்கிறபடியே-கரணங்கள் உடையவன் பக்கலிலேபோனால் அவற்றின்பின்னே போகையிறேயுள்ளது ; * "[illegible]" - யஸ்யாத்மா ஶரீரமன்றோ. (உ) "[illegible]" "காரணாதிபாதிப:" என்னக்கடவதிறே. பரமஶேஷியைக் கண்டால் பின்னை த்வாரஶேஷிகளளவிலே நில்லாதிறேபவை.

---

ஆறும்பாட்டு. (காரித்யாதி) "கருவிளை" - காக்கணம். "இருடீகேசன்" என்றதுக்கு, "[illegible] - [illegible]" ஹ்ருஷீகாணீந்த்ரியாண் யாஹுஸ்தேஷா மீஶோயதோபவாந் - ஹ்ருஷீகேஶஇதிக்யாத:" என்கிற வசநத்தைப்பற்ற (உடையவன்பக்கலிலே) என்றது. ஆத்மாவன்றோ அவற்றுக்கு உடையவனென்ன; அருளிச்செய்கிறார் ([illegible] - யஸ்யாத்மா ஶரீ மித்யாதி) அதாவது - இவன் அவனுக்கு ஶரீரமென்றபோதே இவனுடைய ஶரீரத்துக்கும் உடையவனவனிறே என்றபடி. இவனுக்கு ஸ்வாமியான வழியாலும் அவனே யுடையவனென்கிறார். ([illegible] - காரணாதிபாதிப: என்னக்கடவதிறே) என்று. "ஆகையாலே, பரமஶேஷியைக் கண்டால்" என்று கூட்டுவது. "[illegible]" லக்ஷ்மணோநுகதாம்கதிம்" என்கிறபடியே காரணவத்பாரதந்த்ர்யரான இளையபெருமாள் போனவழியே பெருமாள் போனாப்போலே, நீயும் உன் கரணங்கள் போனவழி

---

(க) ரா - உ - கடுஎ - ௩.        (உ) ஶ்வே - கூ - கூ.

(வேர்த்தித்யாதி) நானேசென்று முறைகெடப் பற்றினேனாகாமே முறையேசென்று பற்றினேனாகப் பாருங்கோள். என் செல்லாமை பரிஹரிக்கைக்காக வன்றிக்கே, அவன் செல்லாமை பரிஹரிக்கப்போனேனும்படி பண்ணப்பாருங்கோள், (வேர்த்து) பசுக்களைக்கொண்டுபோனால் காதம் இருகாதம் அவ்வருகே கைகழியவிட்டு, அங்கே ரிஷிகளுடைய ஆஶ்ரமங்களிலே சேமம் வேண்டிவிட்டு அவர்கள் க்ரியாப்ரதாநரா யிருந்தவாறே, பத்நிஶாலைகளிலே வேண்டிப்போகவிடும்; அவர்கள் சேமம்கொடுத்து விட்டால் அதின் வரவு பார்த்துத் திருமேனியெங்கும் வேர்த்துப் பசித்துத் தடுமாறி வேண்டடிசிலாய்த்து. ப்ரயோஜநாந்தரபரிடுமவற்றைக் குழியிலே கால்கழுவினாரோ பாதியாக வாய்த்துக் கொள்ளுவது. பெரியாழ்வார் பெண்பிள்ளை யிடுமதுபோலே, (க) "இன்றுவந்தித்தனையும் அமுது செய்திடப்பெறில் நான் ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னுமாளும் செய்வன்" என்னுமாப்போலே பெரியாழ்வார் மகளாயிழந்திராதே ஒரு பட்டை சோற்றைக்கொண்டுபோயாகிலும் கிட்டுவோமென்கிறாள். (பத்தவிலோசநத்துய்த்திடுமின்) சோறு பார்த்திருந்தவிடமாய்த்து. "பத்தம்" என்று சோற்றுக்குப்பேர். "விலோசநம்" பார்வை. சோருபார்க்கிருக்கு மிடத்திலே, என்றபடி. கூ

---

யே போவென்றபடி. "இருடீகேசன்" என்கையாலே - காணம்போனது ஸித்தம்; த்வாரஶேஷி - சாடு. இந்த்ரிய த்வாரா ஶேஷியாண வவனளவில் நில்லாதென்றர்த்தம்; ராஜாவைக்கண்டால் வாசல் ப்ரதாநியளவில் நில்லாதென்று த்வநி; பரமஶேஷியான ஈஶ்வரனைக்கண்டால் அந்தர்யாமித்வேந த்வாரஶேஷிகளான அக்நீந்த்ராதி தேவதைகள் பக்கலிலும் நில்லாதென்றும் த்வநிக்கிறது.

(அவன் செல்லாமை) பார்த்திருந்து நெடுநோக்குக்கொள்ளுகை - (சேமம்) ஈளிகை. (வேண்டடிசில்) - வேண்டியிட்டசோறு. வேண்டடிசில் - ராகப்ராப்தமாய் வந்தவடிசில். ப்ரயோஜந ப்ரயுக்தமானத்தையும் ராகப்ராப்தமானத்தையும் கொள்ளும் ப்ரகாரமேதென்ன அருளிச்செய்கிறார் (ப்ரயோஜநாந்தரபரித்யாதி வாக்யத்வயத்தாலே.) (குழியிலித்யாதி) குழியில் கால்கழுவினார் - பித்ருக்கள் நிமித்தமாக வரிக்கப்பட்டாப்போலே தானும் விதிப்ரேரிதனாகக் கொள்ளுமென்றபடி, (பத்தம்) - சோறு. (விலோசநம்) பார்வை. பெரியாழ்வார் மகளாயிருந்து வைத்து இத்தை இழந்திராதே ரிஷிபத்நிகளைப்போலே நாமும் பட்டைச்சோற்றைக்கொண்டு கிட்டுவோமென்றபடி. கூ

---

(க) கூ - எ.

அவ;—ஏழாம்பாட்டு. உனக்கு இஸ்வபாவாந்யதா பாவம் எத்தாலே தீரக்கடவதென்ன அது இன்னதென்கிறாள்; - அவன் வெற்றிமாலையிட்டு நிற்கிறவிடத்திலே என்னைக் கொடுபோய்ப் பொகடுங்கோளென்கிறாள்.

வண்ணந்திரிவும்மநங்குழைவும்
மாநமிலாமையும்வாய்வெளுப்பும்
உண்ணலுறாமையுமுள்மெலிவும்
ஓதநீர்வண்ணனென்பானொருவன்
தண்ணந்துழாயென்னும்மாலைகொண்டு
சூட்டத்தணியும்பிலம்பன்றன்னைப்
பண்ணழியப்பலதேவன்வென்ற
பாண்டிவடத்தென்னையுய்த்திடுமின். (எ)

ப-ரை.—வண்ணம் திரிவும்-வைவர்ண்யமும், மநம்குழைவும் - மநத்தளர்ச்சியும், மாநமிலாமையும் - ஸ்த்ரீத்வாபி மாநமில்லாமையும், வாய்வெளுப்பும் - வாய்வெளுக்கையும், உண்ணலுறாமையும் - வேறொருபதார்த்தங்களை யுண்ணுமையாலே சரீரத்திலுண்டான பலஹாநியும், இவையெல்லாவற்றுக்கு மடியான, உள்மெலிவும் - ஜ்ஞாநஸங்கோசமுமாகிற இவையெல்லாம், ஓத நீர் வண்ணனென்பானொருவன் - ஓதம் கிளர்ந்தகடல்போலே ச்ரமஹரமானவடிவையுடையானொருவன் சாத்தியருளினதாய், தண் - குளிர்ந்து, அம் - அழகிதாயிருந்துள்ள, துழாய் என்னும் மாலை - திருத்துழாய் மாலையை, கொண்டு - கொடுவந்து, சூட்ட—, தணியும் - வைவர்ண்யம் முதலானவை தணியும்; ஆகையால், பலதேவன் - பலபத்ரன், பிலம்பன்றன்னை - ப்ரலம்பாஸுரனை, பண்ணழிய - கட்டுக்குலைந்து சிதிலனும்படி, வென்ற - ஜயித்தவிடமான, பாண்டிவடத்து - பாண்டீரவடத்திலே, என்னை—, உய்த்திடுமின் - கொடுபோய்ப் பொகடுங்கோளென்கிறாள்.

வ்யா,—(வண்ணம்திரிவும்) நிறத்தினுடைய அந்யதாபாவமும், லாபாலாபங்களுக்கு இடையக்கடவதல்லாத நெஞ்சினுடைய நெகிழ்ச்சியும், எல்லாவளவிலுமுண்டான ஸ்த்ரீத்வாபிமாநம் வாஸநையோடே குடிபோகையும், (க) "வாய்ப்புறம் வெளுத்து" என்கிறபடியே போக்யத்ரவ்யங்களைக் குறைக்கையினாலே வா

ஏழாம்பாட்டு.—(வண்ணமித்யாதி) (அதின்னதென்கிறாள்) என்றது - இன்னத்தாலே என்கிறாளென்றபடி. இதினுடைய உபபாதநம் (அவன் வெற்றிமாலையித்யாதி.)

(க) க அ.

யிலுண்டான வெளுப்பும், வேறேயொன்றும் தாரகமாயிருப்பதில்லாமையாலே ஶரீரத்திலே பிறந்த பலஹாநியும், இவையெல்லாவற்றுக்கு மடியான ஜ்ஞாநஸங்கடமும், (ஓதநீர் வண்ணனென்பானொருவன்) இவையெல்லாம் இப்படிபண்ணி வேறுபடுத்தினவடிவழகிருக்கிறபடி. ஓதம்கிளர்ந்தகடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையா னொருவன். (ஒருவன்) - இதரவிஸஜாதீயன்.

(தண்ணந்துழா யித்யாதி) அவன்றான் இதரவிஸஜாதீயனாயிருக்குமாப்போலேயாய்த்து அம்மாலையின்படியும்; அத்தைக்கொடுவந்து ஸ்பர்ஶிப்பிக்க இதுதணியும். (பிலம்பனித்யாதி) ப்ரலம்பாஸுரன், கட்டழிந்து, ஸந்திபந்தங்கள் குலைந்து ஶிதிலனும்படியாக நம்பிமூத்தபிரான் வென்ற பாண்டீரவடத்திலே கொடுபோய்ப் பொகடப்பாருங்கோள் இளையபெருமாள் இந்த்ரஜித்வதம் பண்ண, அந்தவெற்றி - பெருமாளதானாப் போலே யாய்த்து இங்கும் நம்பிமூத்தபிரானுடைய வெற்றியும் க்ருஷ்ணனதாயிருந்ததிறே. அவன் வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும்பண்ணி மாலையிடும்போது அவன் தனியே நில்லாமே நானுமொக்கநின்று மாலையிடும்படியாக என்னை யங்கே கொடுபோய்ப் பொகடுங்கோள். எ.

கற்றினம்மேய்க்கவும் மேய்க்கப்பெற்றான்
காடுவாழ் சாதியுமாகப்பெற்றான்
பற்றியுரலிடையாப்புமுண்டான்
பாவிகாள்! உங்களுக்கேச்சுக்கோலோ?
கற்றன பேசிவசவுணாதே
காலிகளுய்ய மழைதடுத்துக்
கோற்றக்குடையாக வேந்திநின்ற
கோவர்த்தநத்தென்னை யுய்த்திடுமின். (அ)

---

ஜ்ஞாநம் உள்ளே யிருக்கையாலே "உள்" என்று - ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. ஜ்ஞாநஸங்கடம் - ஜ்ஞாநஸங்கோசம்.

இடையர்க்குக் கருமுகை மாலையாயிருக்கத் திருத்துழாயென்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவன்றானித்யாதி.) (பாண்டிவடம்) வடம் - ஆலாய், பாண்டீர வடமென்று பேரையுடைத்தான கன்றுகள் மேய்க்கிற ப்ரதேஶம். அவதாரிகையில் சொன்ன தாத்பர்யம் தவிரவும், தாத்பர்யாந்தரம் (அவன் வீராபிஷேகம்) என்று. வீராபிஷேகம் அபிமந்யுவினது; விஜயாபிஷேகம் - அர்ஜுநனது. அபிமந்யுவுக்கு விஜயாபிஷேக மில்லையிறே. எ

ப-ரை.—கற்றினம் - கன்றுக்கூட்டங்களேயும், மேய்க்கவும் - மேய்க்கிலும், மேய்க்கப்பெற்றான் - மேய்த்தானுகிறான், காடுவாழ் - காட்டில்வஸிக்கும் படியான, சாதியுமாகப்பெற்றான் - ஜாதியானுன இடையனுமாகிறான். வெண்ணெய்திருடினதுக்காக, பற்றி - பிடித்து, உரலிடை - உரலிலே, ஆப்புமுண்டான் - கட்டுண்டானுமாகிறான் ; பாவிகாள் - மஹாபாபிகளே, உங்களுக்கு—, இவையெல்லாம், எச்சுக்கொலோ - ஓரேச்சோதான் ; கற்றனபேசி - நீங்கள் கற்றவைகளேப்பேசி, வசவு உணூதே - என்னிடத்தில் வசவுகேளாமல், காலிகள் - பசுக்களும் இடையரும், உய்ய - உஜ்ஜீவிக்கும்படி, மழை - இந்த்ரன் விடுத்த கல்வர்ஷத்தை, தடுத்து—, அத்தாலே, கொற்றம் - வெற்றிபெற்ற, குடையாக—, ஏந்திநின்ற - தரித்து நின்ற, கோவர்த்தநத்து - கோவர்த்தந மலையிலே, என்னே—, உய்த்திடுமின் - கொண்டுபோய்ப்பொகடுங்கோள்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (கற்றினமித்யாதி) கெடுவாய்! நீ இங்ஙனே கிடந்து படாநிற்கிறதென்?, பசுக்களே மேய்க்கை நித்யஸூரிகளுக்கு ஓலக்கம்கொடுத்ததென்னலாய்படி கன்றுகளின் பின்னே அவற்றினுடைய ரக்ஷணத்துக்காகத் திரிவானொரு பாலனுமாய், ஓரூரிலே தங்குகையு மின்றிக்கே பசுக்களுக்கு நீரும் புல்லுமுள்ள விடத்தே தங்குவானொருத்தனுப், எளியராயிருப்பார் செய்வுத்தைச் செய்து எளிபதர்வப்பங்களே புஜித்து இப்படி திரிவானொருவன்காண், அவனேப் பெறுகைக்கு நீ இப்படி படுகிறதென்னென்ன ;

(கற்றினமித்யாதி) * வானிளவரசாயிருக்குமவன் ; (க)"திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்கிறபடியே பசுக்களே மேய்க்கையை யுகந்தான் ; அது தன்னிலும் ஸ்வரக்ஷணத்திலும் அந்வயமில்லாத கன்றுகளே மேய்க்கையே மிகவும் பெறுப்பேறு பெற்றுனுக நினைத்திருந்தான் ; இவனுக்கொரு ஜந்மமில்லேகாணென்னும் இழவுதீரப் பசுக்களுக்குப் புல்லும் தண்ணீருமுள்ள காட்டைத்தேடி அங்கே தங்கும்படியான ஜந்மமாகவும் பெற்றான்.

---

எட்டாம்பாட்டு. (கற்றினமித்யாதி) "மேய்க்கவும்" மேய்க்கிலும். கற்றினம் மேய்க்கை தொடக்கமானவை ஏச்சாகையன்றிக்கே குணுதிக்யத்துக் குடலாக வருளிச்செய்கிறார் (வானிளவாசித்யாதி.) (உ) "கன்றுமேய்த்தினிதுகந்த" என்றதைப்பற்ற (கன்றுகளே மேய்க்கையே மிகவும் பெறுப்பேறித்யாதி.) (இழவுதீர) "ஜந்மமில்லை தான்தோன்றி" என்கிற இழவுதீர.

---

(க) தி - வாய் - கo - ரு - கo.
(உ) திருநெ - கக.

(பற்றியித்யாதி) வெண்ணெயைத் தனக்கு தாரகமாகக்கொண்டு, அதுதானும் நேர்கொடு நேர்கிடையாமே களவுகண்டு புஜிக்கப்புக்கு. அதுவும் தலைக்கட்டமாட்டாமே ஓரபலைகையிலகப்பட்டு, அவள்வாவிழுத்து ஒன்றோடே கட்டக்கட்டுண்டு. * ஸம்ஸாரபந்த ஸ்திதிமோக்ஷஹேதுவான தான் ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே நின்றான். சக்ரவர்த்தித் திருமகன் காடேறப் போனவிடத்திலே பிதாவாலே உபேக்ஷிக்கப்பட்டானென்று உகவாதார்க்குச் சொல்லலாயிருப்ப தொன்றுண்டிறே, அதுவுமில்லையாய்த்து இவனுக்கு (பாவிகாள்) மஹாபாபத்தைப் பண்ணினீகோளோ? (உங்களுக்கு எச்சுக்கொலோ) உங்களுக்கு குணமே குற்றமாகைக்கு நீங்கள் ஶிஶுபாலன் பிறந்த முஹூர்த்தத்திலேயோ பிறந்தது. எங்கள் வர்க்கத்திலுள்ளார் (க) "எத்திறம்" என்னுமது உங்களுக்கு எச்சுக்குடலாவதே!

(கற்றன) நீங்கள் உங்களுக்கு ப்ரதிபந்தங்களைச் சொல்லி என்வாயாலே தக்கன கேளாதே, பண்ணின வுபகாரமறியாத பசுக்களும் தத்ப்ராயரான இடையரும் உஜ்ஜீவிக்கும்படி மழையால் வந்த நலிவை பரிஹரிக்கைக்காக மலையை யெடுத்துப் பிடித்துக் கொண்டு நின்றானுப்பது, தன்னைப்பேணாதே பாரக்ஷணமே பண்ணுமிதுவே யாத்ரையாயிருப்பா னொருவன். (காலிகளித்யாதி) தலைக்காவலாகவைத்த இந்த்ரன்றானே பாதகனாக, அவனால் வந்த நலிவைப்பரிஹரிக்கைக்காக ரக்ஷணத்துக்கு பரிகாரமாகக்கொண்டு அவன் கோவர்த்தநத்தை தரித்துக்கொண்டு நின்றான், அவன் தனியே நில்லாமே நானும் ஒருதலை தாங்கும்படி என்னை அங்கே கொடுபோய்ப் பொகடப் பாருங்கோள். ... ... அ

கூட்டிலிருந்து கிளி எப்போதும்
 கோவிந்தா! கோவிந்தா! என்றழைக்கும்
ஊட்டக்கொடாது செறுப்பனாகில்
 உலகளந்தான்! என்று உயரக்கூவும்
நாட்டில் தலைப்பழியெய்தி உங்கள்
 நன்மையிழந்து தலையிடாதே
சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்துதோன்றும்
 துவராபதிக்கென்னை யுய்த்திடுமின். (கூ)

---

கட்டுண்டது குணமானபடி எப்படியென்ன; அருளிச்செய்கிறார். (சக்ரவர்த்தித் திருமகனித்யாதி.) "உங்களுக்கு எச்சுக்கொலோ" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (எங்கள் வர்க்கத்திலுள்ளாரித்யாதி.) அ.

---

(க) தி - வாய் - க - ரு - க.

ப-ரை.—கிளி - நான்வளர்த்தகிளியானது, கூட்டிலிருந்து - கூட்டிலிருந்துகொண்டு, எப்போதும் - எல்லாக்காலத்திலும், கோவிந்தா கோவிந்தா என்று—, அழைக்கும் - கூவாநின்றது ; ஊட்டக்கொடாது - உண்ணக்கொடாமல், செறுப்பனாகில் , கோபித்துக்கொள்ளுவேனாகில், உலகளந்தான் என்று - மூன்று லோகங்களையு மளந்து திருவடிகளின் கீழே யிட்டுக்கொண்டவனே ! என்று, உயரக்கூவும் - உரத்துக்கூவாநின்றது : நீங்கள், நாட்டில் - நாட்டிலே, தலை - தலையான, பழி - பழியை, எய்தி - ப்ராபித்து, உங்கள் - உங்களுடைய, நன்மை - நன்மையை, இழந்து—, தலையிடாதே - லஜ்ஜித்துக் கவிழ்தலையிடாமல், உயர் - உயர்ந்த, சூட்டு - கொடுங்கைகளையுடைய, மாடங்கள் - மாளிகைகளாலே, சூழ்ந்து - சூழப்பட்டு, தோன்றும் - தோன்றா நின்றுள்ள, துவராபதிக்கு - ஸ்ரீமத்வாரகையிலே, என்னை—, உய்த்திடுமின் - கொண்டுபோய்ப் பொகடுங்கோள்.

வ்யா.—ஒன்பதாம் பாட்டு. (கூட்டிலித்யாதி) இவள் விரஹத்தாலேதரிப்பற்று நோவுபடுகிற ஸமயத்திலே வளர்த்தகிளியானது முன்பு கற்பித்துவைத்த திருநாமத்தை, இவளுக்கு ஸாத்மியாதசையிலே சொல்லிக்கொண்டு அங்கேயிங்கே திரியத்தொடங்கிற்று; “இதுதான் ஸ்வைரமாக ஸஞ்சரிக்கும்போதன்றோ நம்மை நலிகிறது”என்று பார்த்துக் கூட்டிலே பிடித்தடைத்தாள்; அங்கேயிருந்து “கோவிந்தா, கோவிந்தா” என்னத் தொடங்கிற்று. (கோவிந்தா கோவிந்தா) நாராயணாதி நாமங்களு முண்டிறே ; இவள்தான் (க) “நாராயணனே நமக்கே பறைதருவான்” என்று கற்பித்துவைக்குமிறே ; அது மர்மமறிந்து உயிர்நிலையிலே நலியாநின்றது. இவன்றான், பசுக்களைவிட்டுக்கொண்டு தன்னைப்பேணாதே அவற்றினுடைய ரக்ஷணத்துக்காக அவற்றின் பின்னேபோம் தனிமையிலேயாய்த்து இவள்தான் நெஞ்சுருகிக்கிடப்பது ; இப்போது அந்த மர்மமறிந்து சொல்லாநின்றதாய்த்து. “இது சோற்றுச் செருக்காலேயிறே இப்படிசொல்லுகிறது, அத்தைக் குறைக்கவே தவிருகிறது” என்று பட்டினியே விட்டுவைத்தாள்; “ஊணடங்க வீணடங்கும்” என்றிறே இவள் நினைவு. விண்ணப்பம்

---

ஒன்பதாம் பாட்டு. (கூட்டிலித்யாதி) (நாமங்களுமுண்டிறே) “அத்தைச் சொல்ல இல்லை” என்று பூரிப்பது. அத்தைச்சொல்ல வறியுமோ வென்ன ; அருளிச்செய்கிறார். (இவள்தா னித்யாதி) (கற்பித்துவைக்குமிறே) “அத்தைத்

---

(க) திருப்பாவை - க.

செய்வார்கள்மிடற்றுக்கு எண்ணெயிட்டுப்பட்டினிவிட்டு மிடற்றில் கநமாற்றிப் பாடுமாப்போலே, உயரப்பாடுகைக்கு உடலாய் விட்டது. அவன் திருவடிகளைப் பரப்பினவிடமெங்கும் இது த்வநியைப் பரப்பாநின்றது. க்ருஷ்ணவதாரத்தைவிட்டு அவ்வருகே போந்ததாகில் அத்தோடு போலியான ஸ்ரீவாமநாவதாரத்தைச் சொல்லியாய்த்து நலிவது.

(நாட்டி லித்யாதி) நாட்டிலே தலையான பழியைப் ப்ராபித்து. "நாட்டார்க்கு துக்கநிவர்த்தகமாய் நமக்கு தாரகமான திருநாமம் இவளுக்கு மோஹஹேதுவாகாநின்றது, இது என்னாய்த்தலைக்கட்டக் கடவதோ!" என்று நாட்டிலே தலையாயிருப்பதொருபழியைப் ப்ராபித்து. (உங்கள் நன்மையிழந்து தலையிடாதே) "அவன்றானே வருமளவும் பார்த்திருந்திலள், இவள் தானே போவதாக வொருப்பட்டாள்" என்று உங்கள் நன்மையை யிழந்து கவிழ்தலையிடாதே. (சூட்டித்யாதி) நெற்றிகளுயர்ந்து தோன்றா நின்றுள்ள மாடங்களாலே சூழ்ந்து தோன்றா நின்றுள்ள ஸ்ரீமத்வாரகையிலே கொடுபோய்ப் பொகடுங்கோள். பதினாறாயிரத் தொருமாளிகையாக வெடுத்து, என்னை அதிலே வைத்து அவன் அவர்களோடொக்க வநுபவிக்கும்படியாக, என்னை யங்கே கொடுபோய்ப் பொகடுங்கோள். ... ... ... கூ

மன்னுமதுரைதொடக்கமாக
வண்துவராபதிதன்னளவும்
தன்னைத்தமருய்த்துப்பெய்யவேண்டித்
தாழ்குழலாள்துணிந்ததுணிவை
பொன்னியல்மாடம்பொலிந்துதோன்றும்
புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை
இன்னிசையாற்சொன்னசெஞ்சொல்மாலை
ஏத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே. (கO)

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

---

தவிர்ந்து" என்று கூட்டிக்கொள்வது. கோவிந்தனை யொழியச்சொல்லாத்து வாமநனைச் சொல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணவதாரத்தை இத்யாதி.)

"தலையிடாதே" - லஜ்ஜித்துக் கவிழ்தலையிடாதே. "சூட்டு" என்று - லக்ஷணையாலே நெற்றியாய், மேல் தளங்களின் கொடுங்கையைச் சொல்லுகிறது. நெற்றியாலே - உயர்ந்தபுலிமுகத்தாலே, (உயர்ந்தநெற்றி) - புலிமுகம். (என்னையதிலே வைத்தவன்) என்றது - முன்பே வைத்தவனென்றபடி. கூ.

ப-ரை.—பொன் இயல்-பொன்னினாலேசமைத்த, மாடம்-மாடங்களாலே சூழப்பட்டு, பொலிந்துதோன்றும் - மிகவும் விளங்காநின்றுள்ள, புதுவையர் கோன் - ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகரான, விட்டுசித்தன் - பெரியாழ்வார் திருமகளாராய், தாழ் - தாழ்ந்த, குழலாள் - குழலையுடையளான, கோதை - ஆண்டாள் ; மன்னு - நிலைபெற்ற, மதுரைதொடக்கமாக - வடமதுரைதொடங்கி, வண் - வளப்பத்தையுடைய, துவராபதி தன்னளவும் - ஸ்ரீமத்வாரகையளவாகச் சொன்னவிடங்களிலே, தன்னை—, தமர் - தாய்மார் முதலானார், உய்த்துப் பெய்யவேண்டி - கொண்டுபோய்ப் பொகடும்படி விரும்பி, துணிந்த துணிவை—, இன் - இனிய, இசையால் - பண்ணாலே, சொன்ன - அருளிச்செய்ததாய், செம்சொல் - செவ்விய சொல்லாலே செய்யப்பட்ட, மாலை - மாலையான இப்பத்துப்பாட்டையும் சொல்லி, ஏத்தவல்லார்க்கு-ஸ்தோத்ரம்பண்ண வல்லவர்களுக்கு, இடம் - அர்ச்சிராதிமார்க்கத்தாலே போய்ச்சேருமிடம், வைகுந்தமே - பரமபதமேயாம்.

வ்யா —நிகமத்தில். (மன்னுமதுரையித்யாதி) அவ்வளவு போலே பூமியுள்ளது. "மதுரைப் புறத்து" என்று தொடங்கி, "வண்டுவராபதி - உய்த்திடுமின்" என்கிறாளிறே. தன்னை உறவுமுறையார் உய்த்துப்பெய்து கொடுபோய் விடவேண்டி. (தாழ்குழலாள் துணிந்த துணிவை) தன்மயிர் முடியைப்பேணாமையிலே தோற்று அவன்தன் வழிவரும்படியிருக்கிற இவள்தான் துணிந்த துணிவை.

(பொன்னியலித்யாதி) ஸ்ரீமத்துவாரகையில் மாளிகைபோடொக்குமாய்த்து இவ்வூரும். இனித்தான் பண்மிக்கு பாவபந்தம்வழிந்து புறப்பட்ட சொல்லென்று தோற்றி யிருக்கிறவற்றை அப்யஸிக்க வல்லவர்கள். தனக்குக் கால்நடை தாராத தசையிலே தேசிகரைப்பார்த்து நீங்கள் என்னைக் கொடுபோங்கோளென்ன வேண்டாதே, அவனநுமதிப்படியே ஆதிவாஹிககணம்நடத்த அர்ச்சிராதிமார்க்கத்தாலேபோய் ஸ்ரீ வைகுண்டத்திலே அநுபவிக்கப்பெறுவர். ... ... கO.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பன்னிரண்டாம் திருமொழி முற்றிற்று.

---

நிகமத்தில். "அவ்வருகு பூமியில்லை" என்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (மதுரைப்புறத்தித்யாதி.) சொல்லுக்குச் செம்மை - பாவபந்தத்தோடே சொல்லுகை. கO.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## பதின்மூன்றாந் திருமொழி.

# கண்ணனென்னும் – ப்ரவேசம்.

——(:o:)——

அவ.–இவள் தசையை யநுஸந்தித்தார்க்கும் கால்நடை தந்துபோகலாம்படியாயிராநிறே. வருந்திப்போனார்களே யாகிலும் இவளை யொருகட்டணத்திலே கிடக்கலாம்படி பண்ணிக் கொடுபோகவும் வேணுமே; என் தசையையறிந்து பரிஹரிக்கப் பார்த்திகோளாகில் அங்கே ஸ்பர்ஶமுள்ளதொன்றைக் கொடுவந்து என்னை ஸ்பர்ஶிப்பித்து என் ஸத்தையை நோக்கப்பாருங்கோளென்கிறாள். "நீதான் மெய்யே நோவுபட்டாயோ? இப்படி நோவுபடக்கடவதோ? உன்குடியை நோக்கவேண்டாவோ? அவனுக்கு வரும் பழியைப் பரிஹரிக்கவேண்டாவோ?" என்ன; "நீங்கள் ஒரு ப்ரயோஜநத்துக்காகச் சொல்லும் வார்த்தை என் தசைக்குச் சேருவதொன்றல்ல, என்னை யுண்டாக்கவேணுமென்னும் நினைவு உங்களுக்குண்டாகில் அவன்பக்கலுள்ளதொன்றைக்கொடுவந்து என்னை ஸ்பர்ஶிப்பித்து நோக்கப்பாருங்கோள்" என்கிறாள்.

மூ:—கண்ணனென்னும்கருந்தெய்வம் காட்சிப்பழகிக்கிடப்பேனை
புண்ணிற்புளிப்பெய்தாற்போ லப்புறநின்றழகுபேசாதே
பெண்ணின்வருத்தமறியாத பெருமானரையிற்பீதக
வண்ணவாடைகொண்டு என்னை வாட்டந்தணியவீசீரே. (க)

ப-ரை —கரும் - கறுத்தநிறத்தையும், தெய்வமென்னும் - தெய்வத்தன்மையையு முடையவனென்று சொல்லப்படுகிற, கண்ணன் - க்ருஷ்ணனுடைய, காட்சி - கடைக்கண்ணிலே, பழகிக்கிடப்பேனை - ஈடுபட்டிருக்கிற

---

அ.—கண்ணன் ப்ரவேஶ.—கீழில் திருமொழியிலே - அவன் ஸம்பந்தமுள்ள தேஶத்திலே கொடுபோங்கோ ளென்றவள், இத்திருமொழியிலே "வாட்டம்தணியவீசீர்" என்றதுக்குக் கருத்தென்னென்ன ; அருளிச்செய்கிறார் (இவள் தசையை யித்யாதி.) (பண்ணிக்கொடுபோகவும் வேணுமே) "அத்தாலே அவர்கள் கொடுபோகாநிற்க அவர்களைப்பார்த்து (என் தசையையறிந்து)" என்று கூட்டி நிர்வஹிப்பது. "காட்சிப்பழகிக்கிடப்பேனை" என்றதைக் கடாக்ஷித்து (நீதான்மெய்யே நோவுபட்டாயோ) என்றது. "புண்ணில் புளிப்பெய்தாப்போல்" இத்யாதியைப்பற்ற (இப்படி நோவுபடக்கடவதோ) என்றது. (ஒரு ப்ரயோஜநம்) - பழிபரிஹரிக்கை.

என்னை, புண்ணில் - புண்ணின் துலையிலே, புளி - புளியை, பெய்தாற்போல - சொரிந்ததுபோல, புறம்நின்று - என்னை மீட்கும் விஷயத்தில் நின்று, அழகு பேசாது - ஒரு நன்மை பேசாமல், பின்னை யென் செய்ய வேணுமென்ன ; பெண்ணின் - பெண்களுடைய, வருத்தம் - வருத்தத்தை, அறியாத - அறியாதவனாய், பெருமான் - ஸர்வஸ்வாமியான க்ருஷ்ணனுடைய, அரையில் - திருவரையில் சாத்தியருளின, பீதகவண்ணவாடை - பீதாம்பரத்தை, கொண்டு - கொடுவந்து, என்னை - என்னுடைய, வாட்டம் தணிய - வாட்டம் தீரும்படி. வீசீர் - வீசுங்கோ ளென்கிறாள்.

வ்யா.—முதற்பாட்டு. (கண்ணனென்னும் கருந்தெய்வம்) "க்ருஷ்ணன்" என்றால் தன்னை யுகப்பார்க்கு இஷ்ட விநியோகார்ஹமாக்கி வைக்குமென்றிறே ப்ரஸித்தி ; இப்போது அது தவிர்ந்து, மநுஷ்யத்வே பரத்வமே ஸித்தித்துவிட்டது. க்ருஷ்ணனென்றால் நாம் நினைத்திருந்தவை யெல்லாம்போய், தான் பிறரைக் கும்பிடுகொள்ளத் தொடங்கினான். நம்மைப் பெறுகைக்குத் தான் நம்வாசலிலே அவஸர ப்ரதீக்ஷனாய்த் திரிகை யெல்லாம்போய், முகம்தோற்றாமேநின்று வயிறுவளர்த்துப் போவாரோபாதியானான். கால்தரையிலே பாவாதபடி நின்று முகத்தை மாறவைத்து ஹவிஸ்ஸைக் கொண்டுபோம் தேவதைகளோபாதியானான். க்ருஷ்ணனென்றால் உகப்பார்க்கு பவ்யனென்று சொல்லுவதொரு ஶப்தமாத்ரமாய், முன்புத்தைநிலையே அர்த்தமாய் விட்டது. ஸ்வரூபம் மாறுடினால் ஸ்வபாவமும் மாறுடினலாகாதே. இந்திறம் எப்போதுமொக்கப் படுகுலையாடிக்குமது தவிருகிறதில்லை ; க்ருஷ்ண ஶப்தார்த்தம் பொய்யாய்விட்டது. இவன் பவ்ய

முதற்பாட்டில்.—(கண்ணனித்யாதி) கண்ணனென்னும் கருந்தெய்வத்துக்கு ப்ரகாரபேதேந தாத்பர்யங்களருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனென்றா லித்யாதி வாக்யங்களாலே.) (நாம் நினைத்திருந்தவை)-தன்னை அவன் கும்பிடுகை. "தெய்வம்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (நம்மைப் பெறுகைக்கித்யாதி,) தெய்வம்-பரத்வமாதல் ; தேவதைகளினுடைய ஸ்வபாவமாதல். முந்தினது (க்ருஷ்ணனென்றாலித்யாதி, தொடங்கினனென்னுமளவும்.) பிந்தினது (நம்மை என்று தொடங்கி, ஆனானென்னுமளவும்.) முந்தின விவரணம் (க்ருஷ்ணனென்றாலித்யாதி.) "என்னும்" என்கிறது - ப்ரஸித்தியாதல் ; ஶப்தமாத்ரமாதல், (முன்புத்தை நிலை) பாத்வம். * கருமையைப்பற்ற வருளிச்செய்கிறார் (ஸ்வரூபம் மாறுடினலித்யாதி.) ஸ்வரூபம் - ஆஶ்ரிதபாரதந்த்ர்யம்.

னென்னுமது வடபக்ஷ ப்ரஸித்திபோலே யாய்த்து. உகப்பார்க்கெளிய னென்னுமது விக்ருதியாய், ப்ரக்ருதிவத் பாவித்தே விட்டான்.

(காட்சிப் பழகிக் கிடப்பேனை) முன்புகண்ட காட்சியை ஸ்மரித்து அது கைம்முதலாக ஜீவித்துக் கிடப்போ மென்றால் அதுவு மொண்ணுதபடி அவ்வழி புல்லெழுந்து போய்த்து. (கிடப்பேனை) "'கிடந்தகிடையிலே பாடோடிக்கிடந்தாளாகாதே' என்று அகளங்க நாட்டாழ்வான் * வார்த்தை" என்றருளிச்செய்வர். இப்போது அவனை அணைக்கவல்ல இவளுக்குத்தேட்டம், இடம்வலம் கொள்ளுகையாய்த்து. (க) [யேது] சக்ரவர்த்தி-போக்கை அநுமதிபண்ணினன், ஸ்ரீகௌஸலையார் மங்களாஶாஸநம் பண்ணிவிட்டார்; அவ்வளவன்றிக்கே, பத்தொன்பதாம் பாஷை யாய்த்துத் தோழன்மார்படி. [रामस्य सुहृदः - ராமஸ்ய ஸுஹ்ருதஃ] தாய் தமப்பனுக்கு மறைத்தவையும் வெளியிடும்படி உட்புக்கவர்களிறே தோழன்மாராகிறார். தங்களைப்பேணுதே அவனுக்கே நன்மையெண்ணிப் போந்தவர்கள் படுகுலைப் பட்டார்களென்கிறது. [सर्वे - ஸர்வே] "ஒரு விபூதியாக ஸாம்யாபத்தி பெற்றிருக்குமாப்போலே; [मूढचेतसः - மூடசேதஸஃ] ஸுஹ்ருத்துக்களாகில் எழுந்திருந்து காலைக்கட்டி மீளாதொழிவா னென்னென்னில்; அறிவுகலந்தால் செய்யுமத்தை நெஞ்சில்

---

விவரணம் (இந்திறமித்யாதி.) இத்தால் பலிதம் (க்ருஷ்ணஶப்தார்த்தமித்யாதி.) (க்ருஷ்ணன் என்றால் உகப்பார்க்கு) என்ற வாக்ய விவரணம் (இவன் பவ்யனித்யாதி வாக்ய த்வயமும்.) (விக்ருதியாய்)-விகாரமாய்-வேறுயென்றபடி. (ப்ராக்ருதிவத்) (ஸ்வபாவம்)-பரத்வமென்றபடி.

(பாடோடி) என்றது - ஒரு பார்ஶ்வத்திலே பெறுமல் கிடக்கை, பலிதம் (இப்போதித்யாதி) இப்படி பாடோடிக்கிடந்தபேருண்டோ என்ன; பெருமாளுடைய தோழன்மார் கிடந்தாரென்கிறார் (யேது இத்யாதி.) துஶப்தார்த்தம் (சக்ரவர்த்தி யித்யாதி.) லோகத்திலே உள்ளது பதினெட்டு பாஷையாகையாலே எல்லாரையும் பற்ற இவர்களுடைய வ்யாவ்ருத்தி தோற்றுகைக்காக (பத்தொன்பதாம் பாஷையென்கிறது.) கீழ்-தாய் தமப்பனில் ஸுஹ்ருத்துக்கு ரூடியா யருளிச்செய்து, அவயவார்த்த விவக்ஷயா தாத்பர்யாந்தரம் (தங்களை யித்யாதி.) (ஸாம்யாபத்தி) ராமவிஶ்லேஷத்தில் எல்லார்க்கும் து:கமொத்திருக்கை.

---

(க) ரா - அ - சக - உ0.

வெளிச் செறிப்பில்லாதபோதும் செய்யப் போகாதிறே. அறிவு கெடுகைக்கு ஹேதுவென்னென்னில்; [ஶோகபாரேண சாக்ராந்தா: - ஶோகபாரேண சாக்ராந்தா:] மலை அமுக்கினாப்போலே ஶோகம் அமுக்காநிற்கச்செய்வதென்? [ஶயநம் நஜஹுஸ்ததா - ஶயநம் நஜஹுஸ்ததா] படுக்கையை விட்டெழுந் திருந்தார்களாகில் மீட்டுக் கொடுபுகுந்த வாசியன்றோ; தாங்காமே படுக்கையிற் கிடந்து போந்தவர்களன்றோ. (புண்ணில்) புண்ணின் விவரத்திலே புளியை ப்ரவேஶிப்பித்தாப்போலே.

(புறம் நின்று) வாசலுக்குப்புறம்பு ஒன்று சொல்லாதே கொள்ளுங்கோளென்கிறாளல்லள், என்னையும் அவனையும் சேர்க்கும்கூற்றிலே நின்று வார்த்தை சொல்லுமொழிய மீட்கும் கூற்றிலேநின்று வார்த்தை சொல்லாதே. என்னையும் அவனோடே சேர்க்கைக்கிடான வார்த்தை சொல்லுகையன்றிக்கே. எனக்கு அவன்பக்கல் ப்ராவண்யத்தைக் குலைக்கைக் கிடான வார்த்தை சொல்லாதே. அழகுசொல்லாதே. இப்போது மீட்கப் பார்க்கிறவர்கள் அவனுடைய தௌர்ஜந்யத்தைச் சொல்லுகிறார்களன்றே, "இப்போது, இவ்வாற்றாமையைப் பரிஹரித்தால் மேல்வரும் நன்மைகளைப்பாராய்" என்று அவற்றைச் சொல்லா நில்லாதே. (பேசாதே) இது ஸம்கமாத்ரமாய் அர்த்த ஸ்பர்ஶியன்றென்றிருக்கிறாள். நீங்கள் இதில் படுகிற நேர்த்தியைச் செயலிலே நேரப்பாருங்கோள்.

(பெண்ணின் வருத்தமித்யாதி) "உங்களிரண்டு தலைக்கு மொத்த உகப்புக்கு நாங்கள் சிலாக்கம் பண்ணும்படி யிருந்ததோ" என்ன; உகப்பு ஒத்தாலும் ஆணும் பெண்ணுமென்கிற வாசியில்லையோ?; "மூலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே" என்று பட்டருளிச்செய்தாராக ப்ரஸித்தமிறே.

---

படுக்கையில் கிடந்தவர்களெல்லாம் எழுந்திருக்கவில்லையோ லோகத்திலென்ன (தாங்காமேயித்யாதி.) அதாவது - சோகபாரத்தாலே கிடந்தவர்களாகையாலே ஸ்வவஶமல்லவென்றபடி. "அழகு" - நன்மை. (உகப்பு ஒத்தாலும்) அவன் என்தசை அறியானென்றபடி.

ஸாந்தீபிநி ஶிஷ்யனை யிறேபிறர்மிடியறியானென்கிறது. (பெருமான்) (க)"ஹீநோயாதநய்யா ப்ரபு:" "ஹீநோயாதந்யாப்ரபு:" என்கிறபடியே. அவனுக்கு நம்மை யொழியச் செல்லுவதானாலும் நமக்கு அவனையொழியச் செல்லாதே, நம்ஸத்தை நோக்கவேணுமே. போகத்துக்காகிலிறே அவர்வேண்டுவது, ஸத்தைநோக்குகைக்கு அவனுடைய ஸம்பந்தமுள்ள தொன்று அமையுமே அத்தைக்கொண்டுவந்து என்னை ஆஶ்வஸிப்பியுங்கோள். அவன்றான் இத்தனைபோது பசுக்களையும் விட்டுக்கொண்டு போகாநிற்குமே, பிறரை நலிகைக்காக தான் காட்டிக்குப்போகைக்கு உடைதோலுடுக்கிறே போவது; (உ)"கறையினார் துவருடுக்கை" என்கிறபடியே திருப்பீதாம்பரத்தை யிட்டுவைத்துப் போமே.

(அரையில் பீதகவண்ண வாடைகொண்டு) "மேலிட்ட வுத்தரீயமாக லாகாதோ" என்று நஞ்சீயர் கேட்க; "ஸ்வேதகந்த னுப்பைபோலேகாண்" என்றருளிச்செய்தாராம். (என்னை யித்யாதி) என்னையும் அவனையும் சேர்த்து போகத்திலே நிறுத்துங்கோளென்றால், அது இப்போது உங்களால் செய்யப்போகாதிறே. ஆனாலும், வாட்டத்தை அகஞ்சுரிப்படுத்தலாமே, அத்தைச்செய்யப் பாருங்கோள். அவனுடைய திருப்பீதாம்பரத்தைக்கொடுவந்து என்மேலே பொகட்டு என் ஸத்தையை நோக்கப் பாருங்கோள். ... ... ... ... ... க

ஆனால் ஸர்வஜ்ஞனன்றோ அறியானோவென்று வ்யாக்யாதா ஈடுபட்டு அருளிச்செய்கிறார் (ஸாந்தீபினி இத்யாதி.) ஸாந்தீபினியிடத்திலே எல்லாம் கற்றுக்கேட்டு ஸர்வஜ்ஞனாயிருக்கச்செய்தேயும் வெறுப்பாலே அறியா னென்கிறாள். இவளைப்பிரிந்து அவன் பெருமானாயிருக்கிறது எப்படியிருக்கிறதென்ன; பெருமாள் பிராட்டியைப் பிரிந்து ப்ரபுவாயிருந்தாப்போலே யென்கிறார் (ஹீநோயதநயா - ஹீநோயதநயா இத்யாதி.) மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (அவனுக்கு நம்மை யித்யாதி.) பீதகவாடை சாத்திக்கொண்டன்றோ விருப்பது, அத்தைக் கொண்டுவரப் போமோவென்ன; அருளிச்செய்கிறார் (அவன்றானித்தனை போதித்யாதி) பிறரை நலிகைக்காக - பெண்களை நலிகைக்காக. ... ... ... க.

(க) ரா - ஸு - கரு - ருஉ. (உ) தி - வாய் - ச - அ - ச.

பாலாலிலையில்துயில்கொண்ட பரமன்வலைப்பட்டிருந்தேனை
வேலால்துன்னம்பெய்தாற்போல் வேண்டிற்றெல்லாம்பேசாதே
கோலால்நிரைமேய்த்தாயனாய்க் குடந்தைக்கிடந்தகுடமாடி
நீலார்தண்ணந்துழாய்கொண்டு என்நெறிமென்குழல்மேல்சூட்டீரே.உ

ப - ரை.—பால் - பால்வடிகிற, ஆலிலையில் - ஆலந்தளிரிலே, துயில்கொண்ட - கண்வளர்ந்தருளின, பரமன் - அகடிதகடநா ஸமர்த்தனுடைய, வலை- வலையிலே, பட்டிருந்தேனை - சிறைப்பட்டிருக்கிற வென்னை, வேலால்- வேலாலே, துன்னம்பெய்தாற்போல் - துளைத்தாப்போலே, வேண்டிற்றெல்லாம் - உங்களுக்குத் தோற்றின கொடுஞ்சொற்களை யெல்லாம், பேசாதே - சொல்லாமல், ஆயனாய் - கோபகுலத்திலே யவதரித்து, நிரை - பசுநிரையை, கோலால் - சாத்துக்கோலாலே, மேய்த்து - மேய்த்தவனாய், குடந்தை - திருக்குடந்தையிலே, கிடந்த - கண்வளர்ந்தருளினவனாய், குடமாடி - குடக்கூத்தாடினவன் சாத்தியருளினதாய், நீல் ஆர் - கறுத்தநிறத்தையுடைத்தாய், தண் - குளிர்ந்து, அம் - அழகிதாயிருந்துள்ள, துழாய்கொண்டு - திருத்துழாய் மாலையைக்கொண்டுவந்த, என் - என்னுடைய, நெறி - நெறித்து, மெல் - மிருதுவாயிருந்துள்ள, குழல்மேல் - குழலிலே, சூட்டீர் - சூட்டுங்கோளென்கிறாள்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பாலாலித்யாதி) (க) "[illegible]" "கதந்வயம் ஸிஶுஸ்ஶேதே லோகேநாஶமுபாகதே | ஶாகாயாம்வடவ்ருக்ஷஸ்யபல்லவே" என்கிறபடியே - பால்யாயும் பருவத்தையுடைத்தான இளந்தளிரிலே; * "இளந்தளிரில் கண்வளர்ந்த" என்னக்கடவதிறே. (துயில்கொண்ட) யஶோதைப் பிராட்டியுடைய தொட்டிலிலே ரக்ஷகமுண்டான விடத்தில் கண்வளர்ந்தருளுமாப்போலே கண்வளர்ந் தருளினுனைத்தா, ஸப்ரமாதமான ஸ்தலத்திலே ஆலிலையிலே. (பரமன்) அகடிதகடநா ஸாமர்த்யத்தில் வந்தால் யஶோதாஸ்தநந்தயமு மொப்பன்று வடதளஶாயிக்கு. (வலைப்பட்டிருந்தேனை) பெரியாழ்வார் மகளிறே. பரிவரில்லாத விடத்திலே சாய்ந்தானென்று அதிலே நெஞ்சை வைத்திருக்கையாலே கால்வாங்கிப் போகமாட்டாதே சிறைப்பட்டிருந்தேனை.

---

இரண்டாம்பாட்டு. (பாலாலித்யாதி) "பாலாலிலை" பாலமான ஆலிலை என்றபடி - யஶோதாஸ்தநந்தயத்துக்கு அகடிதகடநாஸாமர்த்யம் - பிறந்த உடனே போகையும், பூதநாநிரஸநமும்.

---

(க) பார - ஆ - கஅஅ - கூச.

(வேலாலித்யாதி) ஸ்வப்ரயோஜநபரராயிருப்பார்க்குச் சொல்லுமாப்போலே சிலவற்றைச்சொல்லாதே. வேலால்துன்னம்பெய்தாப்போ லென்னுதல்; வேல் உள்ளே கிடக்கத் துன்னம்பெய்தாப்போ லென்னுதல். புண்ணிலே புளியை ப்ரவேஶிப்பித்தால் எரியுமித்தனை யிறே; இதாகிறது புண்ணைப் பெருப்பிக்குமித்தனையிறே. எனக்கோடுகிற தஶையறியாதே; உங்களுக்கு ப்ராதிபந்நங்களைச் சொல்லாதே.

(கோலாலித்யாதி) "அவனுக்கு என்வருகிறதோ" என்று அஞ்சின வெனக்கு அவனுக்கு ரக்ஷையுள்ளவளவும் சொல்லிப் பரிஹரிக்கவேண்டாவோ?; அவன்றானே ரக்ஷகனான செயலைச் சொல்லியன்றோ என்னைப் பரிஹரிப்பது. க்ஷத்ரியனாய்ப் பிறந்து கையிலே வில்லைப்பிடித்து ரிஷிகளைநோக்குமவனைப்போலல்ல. (குடந்தைக்கிடந்த குடமாடி) (க) "சீரார்குட மிரண்டேந்திச் செழுந்தெருவே யாராரெனச்சொல்லியாடும்" என்கிறபடியே - அவன் தன் வடிவழகை எல்லாரும் அநுபவிக்கலாம்படி ஸர்வஸ்வதாநம் பண்ணிக்குடமாடின ஆயாஸந்தீரத் திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தானாய்த்து.

---

எடுத்தபதத்துக்கு அவதாரிகை யருளிச்செய்கிறார் (ஸ்வப்ரயோஜநபாரித்யாதி.) ஸ்வப்ரயோஜநபரர், "உங்களுக்கொன்றும் பலியாது" என்றால் திரும்புவர்கள்; இவள் பரப்ரயோஜந பரையாகையாலே எது சொன்னாலும் திரும்பாளென்றபடி. (வேலால்) "ஆல்" என்று மேலும் இடமுமாய், வேலின் மேலே புரைந்தாப்போலே என்று இரண்டாமர்த்தம். பாதகத்வம் கீழேயும் சொல்லிற்றே, இங்கு வாசியேதென்ன வருளிச்செய்கிறார் (புண்ணிலே யித்யாதி.) (எனக் கோடுகிறதஶையறியாதே) என்றது - அவனுக்குப் பரிவரில்லையென்று எனக்கோடுகிற தஶையையறியாதே யென்றபடி. (ரக்ஷையுள்ள வளவும்) என்றது - பசுக்களை ரக்ஷிக்கையாலே அவன் றனக்கும் அவன்றானே ரக்ஷகனென்றிருக் கிறாளென்றபடி. (அவனுக்கென் வருகிறதோ) என்ற வாக்யம் "பாலாலிலை" இத்யாதிக்கு தாத்பர்யமாய், "கோலால்நிரை" இத்யாதியிலே நோக்காகத் தாத்பர்யாந்தரம் (அவன்றானே ரக்ஷகனனவித்யாதி,)

---

(க) சிரியதிரு.

(நீலார்தண்ணந்துழாய்கொண்டு) பசுமைமிக் கிருந்துள்ள திருத்துழாயைக்கொண்டு. இதுக்குப் பசுமையாவது - அநந்ய ப்ரயோஜநரிடுமதாகை. அதாவது - பெரியாழ்வாரிடுகை. வாயாலே மங்களாஶாஸநம்பண்ணக் கையாலே யிடுகையிறே. மிக்க சீர்த்தொண்டரிட்ட பூந்துளவிறே. தொண்டர்; சீர்த்தொண்டர்; மிக்க சீர்த்தொண்டர். தொண்டராகிறார் - கூழாட்பட்டவர்கள்; சீர்த்தொண்டராகிறார் - உபாஸகர்; மிக்கசீர்த்தொண்டராவார் - பெரியாழ்வார்போல்வார். ப்ரயோஜநாந்தரபரரிடுவது - (க)"ஜீர்ண ஶீர்ணமாலை" "தேஹிமேகதாமிதே" என்கிற பர்வதோஷத்தாலே பொரியெழுந்து வெந்துகிடக்கும். (நெறிமென்குழல்மேல்) நெறிக்கு மிருதுவானகுழலென்னுதல். அன்றிக்கே, பேணுக்குழலென்னுதல் ... ... ... ... உ.

மூ—கஞ்சைக்காய்ந்தகருவில்லிக் கடைக்கணென்னும்சிறைக்கோ
நெஞ்சூடுருவவேவுண்டு நிலையுந்தளர்ந்துநைவேனை [லால்
அஞ்சேலென்னனவனொருவன் அவன்மார்வணிந்தவனமாலை
வஞ்சியாதேதருமாகில் மார்வில்கொணர்ந்துபுரட்டீரே. (ங)

ப - ரை.—கஞ்சை - கம்ஸனை, காய்ந்த - நிரஸித்தவனாய், கரு - பெரிய, வில்லி - வில்போன்ற புருவத்தையுடையனான க்ருஷ்ணனுடைய, கடைக்கண் என்னும் - கடைக்கண்ணென்று சொல்லப்படுமதாய், சிறை - சிறகையுடைத்தான, கோலால் - கோலாலே, நெஞ்சு - என்மனஸ்ஸிலே, ஊடுருவ - நடுவே உருவிச்செல்ல, வேவுண்டு - வெந்து, அத்தாலே, நிலையும்தளர்ந்து - என் நிலைமையும் குலைந்து, நைவேனை - வருந்துகிற வென்னை, அஞ்சேலென்னனவன் - பயப்படாதே கொள் என்று சொல்லாதவனாய், ஒருவன் அவன் - என்னைக் கண்ணநீர்விழும்படி செய்தவனுடைய, மார்வணிந்த - திருமார்விலே சாத்தியருளின, வநமாலை - அழகிய திருத்துழாய்மாலையை, வஞ்சியாதே - வஞ்சனைபண்ணாமல், தருமாகில் - தந்தருளினனாகில், கொணர்ந்து - அத்தைக் கொண்டுவந்து, மார்வில் - என் மார்பிலே, புரட்டீர் - புரட்டுங்கோளென்கிறாள்.

---

பெரியாழ்வாரிடுமது அநந்ய ப்ரயோஜனமென்னு மதுக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (வாயாலே யித்யாதி.) நெறித்தல் - செறிந்திருத்தல்; கூச்சுக் கூச்சாக நிற்றல். இரண்டாமர்த்தத்துக்கு "மென்குழல்" என்று - அல்பமான குழலென்றாய், அத்தாலே - (பேணுக்குழல்) என்று பலிக்கிறது ... ... ... ... ... உ,

---

(க)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (கஞ்சைக்காய்ந்த) "வில்விழவு" என்று ஒரு வ்யாஜத்தைகயிட்டு அழைத்துத் தப்புவிளைந்ததென்று மாதுலனைக் கண்ணநீர் விழவிட்டு இழவுகொண்டாடியிருப்பானாகக் கம்ஸன்கோல, அவன் தன்னோடே போம்படி பண்ணினான். (கருவில்லி) ஆண்பிள்ளையன்றியே, பெண்பிறந்தாரை நலிகைக்கு வில்போலேயிருக்கிற புருவத்தையுடையவன். (கடைக்கண்ணென்னும்) முழக்கப்பார்ப்பது அந்யபரையிறே; சோலையைப் பார்ப்பாரைப்போலேயாய்த்து அநந்யபரையைப்பார்ப்பது (க)"ఊద్ర్రశ్చ శిఖాము క్తం ఖణ్డమపరాన్ పశ్యన్తి నస్వీకృతాన్" "தாத்ருஶ்யஃக ஞுமுக்த கண்டமபராந் பஶ்யந்தி நஸ்வீக்ருதாந்" என்னக்கடவதிறே. புருவத்தை வில்லாகவும் கண்ணை அம்பாகவும் சொல்லக்கடவதாயிருக்குமிறே.

(சிறைக்கோலால்) சிறகையுடைய கோலால். கழிசிறை வருமபோது தெரியாது, பட்டுக்கொடுநிற்கக் காணுமித்தனை. கண்கண்டிருக்க வொண்ணாதபடியிருக்கை. "நோக்குகின்றும்" என்று நோக்கிலிறே கண்ணுக்கு எட்டாதபடி போகலாவது. (நெஞ்சூடுருவ) தோற்புரையே போமதல்ல, நெஞ்சிலேபட்டு

மூன்றாம்பாட்டு. (கஞ்சையித்யாதி) கருமை-பெருமையாய், பெரியவில்லி என்று முந்தினது. கடைக்கண்ணை வேணுமோ, முழுக்கண்ணைப் பார்க்க வொண்ணாதோவென்ன; அருளிச்செய்கிறார் (முழுக்கப்பார்ப்ப தித்யாதி.) நாயகி யாகையாலே, மஹா ப்ரபுவானவன் மாணவிச்சோலையைக் கடைக்கண்ணாலே போக்யமாகப் பார்க்குமாப்போலே சற்றே கடைக்கண்ணாலே பார்க்கை. கீழ்ச்சொன்ன விரண்டுக்கும் ப்ரமாண மருளிச்செய்கிறார் (ఊద్ర్రశ్చః-தாத்ருஶ்ய இத்யாதி.) "ఊద్ర్రశ్చః" "தாத்ருஶ்ய:" என்றதுக்கு, கீழ்க்ரந்தாதி தெரியாமையாலே, "పశ్యన్తి" "பஶ்யந்தி" என்கிற தர்மஸகர்த்ருத்வாநுகுணமாக "தாத்ருஶ்ய:" என்றதுக்கு ஸ்திரீகளைச் சொல்லுகிற தென்றருளிச்செய்வர். అపరాన్ - సాధారణాన్, ముక్తకణ్ఠం పశ్యన్తి, స్వీకృతాన సాధారణాన్ ముక్తకణ్ఠం నపశ్యన్తి - அபராந் - ஸாதாரணாந், முக்தகண்டம் பஶ்யந்தி; ஸ்வீக்ருதாந ஸாதாரணாந் முக்தகண்டம் நபஶ்யந்தி என்றபடி. "வில்லி" என்றால் புருவத்தையுடையவனென்று சொல்லுமோ வென்ன: அருளிச்செய்கிறார் (புருவத்தையித்யாதி)

கழிசிறை - சாடு. சிறகையுடைய கழி - அர்த்தம், க்ஷாத்ரன் - த்வநி. கழிசிறை - கழுகினுடைய சிறகென்றபடி. "கடைக்கண் என்னும் சிறைக்

(க)

அவ்வருகேபோய்த்தது. (நிலையும் தளர்ந்து) எவுண்டதினேற்றம் எவ்வளவுபோருமென்னில்; நாலடிபோய் விழுகையன்றிக்கே. நின்ற நிலையிலே விழும்படியாகவாய்த்து அவனுடைய நோக்கு வித்யையிருப்பது. "ஸத்வித்யாநிஷ்டர். தஹரவித்யா நிஷ்டர்" என்னுமாப்போலே அவனுடைய நோக்கு வித்யாநிஷ்டரிறே இவர்கள். (நைவேனை) ஸந்திபந்தங்கள் குலைந்து ஶிதிலையாய்க் கிடக்கிறவென்னை.

(அஞ்சேலென்னான்) தன்முகமான அம்புதைந்தவுறைப்புத் தான் அறிந்தால் "அஞ்சாதேகொள்" என்று வந்து அணைக்கவேண்டாவோ? (அவனொருவன்) தன்கையிலம்பு பட்டவன் படுகிற நோவு கண்டு பொறுக்கமாட்டாதே, (க)"ஸஞ்ஜாதபாஷ்ப:" "ஸஞ்ஜாதபாஷ்ப:" என்று - கண்ணநீர் விழவிட்டானுமொருவன்; இது தானே போதுபோக்காக விருக்கிற இவனுமொருவன். (அவன் மார்வணிந்த வநமாலை) ஒருமாலை பெறவேணுமென்றல்ல இவளுக்கு நிர்ப்பந்தம், அவன் மார்விலே யாசைப்பட்டு இட்டமாலை வேணுமென்றாய்த்து. (வஞ்சியாதே தருமாகில்) நீங்கள்சென்று அறிவிக்கக்கொள்ளத் தன்னுடைய ஸ்மிதத்தாலும் வீக்ஷணத்தாலும் நீங்கள் சென்ற காரியத்தை மறப்பித்து (வஞ்சியாதே தருமாகில்) உங்களையும் என்னைப் படுத்திற்றுப் படுத்தாதே தருமாகில் (மார்வில்கொணர்ந்து புரட்டீரே) புண்பட்டவிடத்தே பரிஹரிக்கவேணுமிறே. * நெஞ்சூடுருவவேவுண்டிறே கிடக்கிறது; அவன் தன்னுடனே பரிமாற நினைத்து ஆசைப்பட்டதெல்லாம் மாலையிலிட்டுச் சொன்னபடி யென்றான்! ... ... ந.

கோலால்" என்று விஶேஷித்த துக்குத்தாத்பர்யம் (வரும்போதித்யாதி.) (நின்றநிலையிலே) என்றது - நோக்குக்கு விஷயபூதையான தான் நின்ற நிலையிலே என்றபடி.

"அஞ்சேலென்னானவனொருவன்" என்றபோதே - அஞ்சேலென்னுமொருவனை சக்ரவர்த்தித் திருமகனில் வ்யாவர்த்தி (தன்கையிலித்யாதி.) இத்தால் பலிதம் (உங்களையும்) என்றது. அதாவது - தன்னையும் ஸ்மிதவீக்ஷணங்களாலேயிறே வஞ்சித்ததென்றபடி. (அஞ்சேல்) அஞ்சாதே. தன்னுடனே யென்று - ஆண்டாளை, அவன் றன்னுடனே யென்றது - ஈஶ்வரனோடே என்னவுமாம்: மாலையிலிட்டு ஸம்ஶ்லேஷத்தை மறைத்துச் சொன்னபடி என்றான்! என்றபடி ... ... ... ... ... ந.

(க) ரா -கி - உச - உச.

மூ.—ஆரேயுலகத்தாற்றுவார்? ஆயர்பாடிகவர்ந்துண்ணும்
காரேறுழக்கவுழக்குண்டு தளர்ந்தும் முறிந்தும்கிடப்பேனை
ஆராவமுதமனையான்றன் அமுதவாயிலூறிய
நீர்தான்கொணர்ந்துபுலராமே பருக்கியிளைப்பைநீக்கிரே. (ச)

ப - ரை.—ஆயர்பாடி - திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியிற் பெண்களுடைய மநஸ்ஸை, கவர்ந்து - அபஹரித்து, உண்ணும் - அவர்களையநுபவிக்குமவனாய், கார் ஏறு - கறுத்த ரிஷபம்போலே மேனாணிப்பையுடைய க்ருஷ்ணன், உழக்க - துவக்க, உழக்குண்டு - அத்தாலே வருந்தி, தளர்ந்தும் - ஸந்திபந்தங்கள் குலைந்தும், இனி ஒரு அவயவியாக்கிக்காண வொண்ணாது என்னும்படி, முறிந்தும் கிடப்பேனை - மங்கிக்கிடக்கிற வென்னை, உலகத்து - இந்த லோகத்திலே, ஆற்றுவார் ஆர் - எத்தனையேனு மளவுடையார்க்கும் ஆற்றப்போமோ; ஆரா - காலதத்வமுள்ளதனையும் புஜித்தாலும் தெகுட்டாததான, அமுதமனையான்றன் - அம்ருதத்தையொத்தவனுடைய, அமுதம் - பரம போக்யமான, வாயில் - திருப்பவளத்தில், ஊறிய - ஊறின, நீர்தான் - நீரையாவது, கொணர்ந்து - கொண்டுவந்து, புலராமே - உலர்ந்துபோகாதபடி, பருக்கி - என்மீது தெளித்து, இளைப்பை - என்னுடைய ஆயாஸத்தை, நீக்கீர் - நீக்கப் பாருங்கோளென்கிருள்.

வ்யா.—நாலாம்பாட்டு. (ஆரேயுலகத்தாற்றுவார்) (க) "[Grantha]" "தக்கஸ்ய ஸக்ருஶம்பவேத்" என்றிருப்பார்க்குத்தான் ஆற்றப்போமோ? (உ) "[Grantha]" "ராமஸ்யவ்யவஸாயஜ்ஞா" என்றும், (௩) "[Grantha]" "ஏதத்வ்ரதம்மம" என்றும், (ச) "[Grantha]" "அவகாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே" என்றும் சொல்லுகிறபடிகளை அறிந்திருக்குமவளாகையாலே தரித்திருந்தாள்; ஆஶாலேஶமுடையாரை ஒருநாளும் விடேனென்றும், அவர்களை விடவேண்டிற்றாகில் நானுளேனாகே

நாலாம்பாட்டு. (ஆரேயித்யாதி) பிராட்டிதான் தரிக்கைக்கு ஹேதுவேதென்ன அருளிச்செய்கிறார் ([Grantha]- ராமஸ்யவ்யவஸாயஜ்ஞேத்யாதி.) ([Grantha] - அவகாஹ்யார்ணவம்ஸ்வப்ஸ்யே) என்றது-ப்ராணயித்வத்தைப்பற்ற. ஆகையாலே தரிக்கைக் குடலாயிருக்குமதொழிய, "[Grantha]" 'ஏதத்வ்ரதம்மம" என்றது தரிக்கைக்குடலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆஶாலேஶமித்யாதி.) (ரு) [Grantha]' "மித்ரபாவேந"

(க) ரா - ஸு - ௬க - ௩0. (உ) ரா - ஸு - கக - ச.
(௩) ரா - யு - க௮ - ௩ச. (ச) ரா - யு - ரு - க.
(ரு) ரா - யு - க௮ - ௩.

னென்றுமிறே அவர் சொல்லிவைப்பது, (க) "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்" "அப்யஹம்ஜீவிதம் ஜஹ்யாம்" என்றிருக்குமவரிறே.

[லக்ஷ்மணஸ்ய சதீமத: - லக்ஷ்மணஸ்யசதீமத:] அவர் தம்முடைய ஏவலாலேமாயா மிருகத்தின் பின்னே "அதுமாயை" என்றறியாதே பிடிக்கவொருப்பட்டபோதும் "இது மாயா மிருகம்" என்று சொல்லும்படி அவ்வளவிலும் தெளிந்திருக்கும் இளைய பெருமாள் படியையறிந்திருக்கையாலும்; [நாத்யர்த்தம் க்ஷுப்யதே தேவி - நாத்யர்த்தம் க்ஷுப்யதேதேவி] அவர் தலையாலே சுமக்கும்படி வல்லளையாய்ப் போந்தவளாகையாலே க்ஷோபஹேதுக்களுண்டாயிருக்கச்செய்தேயும் க்ஷோபிதையாய்த்திலள் - ஸத்தாநாமும் பிறக்குமளவாயிருக்கச் செய்தேயும் தரித்திருந்தாள்; [கங்கேவ ஜலதாகமே - கங்கேவஜலதாகமே] நிரந்தரமாக வர்ஷதாரை விழாநிற்கச்செய்தேயும் கங்கை தெளிந்திருக்குமாப்போலே.

(ஆர்பாடியித்யாதி) ராமாவதாரத்தில் குணஜ்ஞாநத்தாலே தரித்திருந்தாப்போலே யிருக்கப்போமோ, க்ருஷ்ணனுடைய தீம்பிலே புண்பட்டவர்களுக்கு. பஞ்சலக்ஷம்குடி யுண்டிறே திருவாய்ப்பாடி; அஞ்சலக்ஷங்குடியிற் பெண்கள்பக்கல் பண்ணும் வ்யாமோஹத்தை யெல்லாம் ஒருமடைசெய்து ஒருத்திபக்கலிலே பண்ணினல் பிழைக்கப்போமோ? (தள்ர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை) அவன் கண்ணற்றுக் துகைத்துப் பரிமாற அத்தாலே ஸந்திபந்தங்கள் குலைந்து "இனியொரு அவயவியாக்கிக் காணவொண்ணாது" என்னும்படி மங்கிக்கிடக்கிறவென்னை.

---

இத்யாதி. சொல்லிவைத்த தெங்கேயென்ன; அருளிச்செய்கிறார் (அப்யஹம்- அப்யஹமித்யாதி.) (க்ஷோபஹேதுக்க ளுண்டாயிருக்கச் செய்தேயும்) என்றதின் விவரணம் (ஸத்தாநாமித்யாதி.)

"காரேறுழக்க வுழக்குண்டு" என்றதுக்குத் தாத்பர்யம் (ராமாவதாரத்திலித்யாதி.) கவர்ந்து - க்ரஹித்து. கவர்ந்துண்கை - பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களுடைய மநஸ்ஸை அபஹரித்து அவர்களை அநுபவிக்கை, "உழக்க" துவக்க.

---

(க) ரா - ஆ - கυ - கக.

(ஆராவமுதமனையான்) இவளுடைய விஶல்ய கரணியும் ஸந்தாநகரணியுமிருக்கிறபடி. (தன் அமுதவாயிலித்யாதி) "மார் வில்கொணர்ந்து புரட்டீர்" என்றது - எல்லாம் பெற்றதில்லையே யாகிலும், அவனுடைய ஓரோ அவயவத்திலுள்ளத்தைக் கொடு வந்தாகிலும். (புலராமேபருக்கி) இது சருகாய்ப்போகாமே அந் நீரைக் கொடுவந்து தெளித்துப் பருகும்படி பண்ணி. உமிழ்நீர் மருந்தாகத் தீருங்காணும் என்னோய். (இளைப்பை நீக்கிரே) அவ் யவதாரேந என் தலைக்கு அவனைக்கொடுவரவேணுமிறே; அது செய்யவொண்ணாத பின்பு இத்தாலே என்னிளைப்பைப் பரிஹ ரித்துக்கொண்டு நிற்கப்பாருங்கோள். வாய் மருந்திட்டுத் தீர்க்க வேண்டும் நோயிறேயிது. ச.

அவ;—அஞ்சாம்பாட்டு. (அழிலுமித்யாதி) எனக்கே கூறு யிருக்குமது கிடையாதாகில் வெறுந்தறையிலே போகிறவந்தை யாகிலும் கொடுவந்து ஆஶ்வஸிப்பிக்கப்பாருங்கோளென்கிறாள்.

அழிலுந்தொழிலுமுருக்காட்டான் அஞ்சேலென்னானவனொருவன்
தழுவிமுழுசிப்புகுந்தென்னைச் சுற்றிச்சுழன்றுபோகானல்
தழையும்பொழில்வாய்நிரைப்பின்னே நெடுமாலூதிவருகின்ற
குழலின்துளைவாய்நீர்கொண்டு குளிரமுகத்துத்தடவீரே. (ரு)

ப - ரை.—அழிலும் - பக்திபண்ணினாலும், தொழிலும் - ப்ரபத்தி பண் ணினாலும், உரு - தன்வடிவை, காட்டான் - காட்டுகிறிலன்; என் முன்னே

"அமுதமனையான்" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் (இவளு டைய வித்யாதி.) திருப்பவளத்துநீர் இவளுக்கு இரண்டு கரணியும்;—விஶல் யகரணி - உள்ளில் வேதனையைப் போக்குகிறது; ஸந்தாநகரணி - மேலே ஸமாதாநம்பண்ணி அவயவங்களைப் பொருந்தப் பண்ணுகிறது. (எல்லாம் பெற்றதில்லையேயாகிலும்) என்றது - எல்லா அவயவங்களோடு ஸ்பர்ஶித்த மாலை கிடையாவிட்டாலும்; ஏகாவயவ ஸ்பர்ஶமான திருப்பவள ஜலத்தையாகி லும் கொண்டுவாருங்கோளென்றபடி. "பருக்கி"-தெளித்தென்னுதல்; பரு கும்படிபண்ணி யென்னுதல். வாய்மருந்தாவது - விஷய ப்ரவணரானவைத் யர்கள், ஆரேனும் ராஜதாராதிகளுக்கு பாம்பு முதலானவை கடித்தால் தத்பரி ஹாரார்த்தமாக அவர்கள் வாயிலே உமியவேணுமென்றால் அவர்கள் ஜீவித்தா லமையுமென்று அவர்களும் அநுமதிபண்ணினால் அவர்கள் அப்படியே உமி வார்கள், அத்தைச் செல்லுகிறது ... ... ... ௪.

வந்து, அஞ்சேல் என்னான் - பயப்படாதேயென்று ஒரு வார்த்தையும் சொல்லுகிறிலன் ; அவன் - அவனுங்கூட, ஒருவன் - ஒருவனாயிராநின்றான் ; புகுந்து - வந்து, என்னை—, தழுவி - அணைத்தும், முழுசி - மூக்காலே முழுசியும், சுற்றிச்சுழன்று - உரு வெளிப்பாட்டாலே சூழச்சூழவந்து, போகான் - என்னைவிட்டுப் போகிறானில்லை ; ஆல்-கஷ்டம்; தழையின் - பீலிகளாலாகிய, பொழில்வாய்-சோலையிலே, நிரை-பசுநிரைகளினுடைய, பின்னே-பின் குழையிலே, நெடுமால் - ஸர்வாதிகனான க்ருஷ்ணன், ஊதிவருகின்ற - ஊதிக்கொண்டுவருகிற, குழலின் - வேய்ங்குழலினுடைய, துளைவாய் - த்வாரங்களில் சோருகிற, நீர் - நீரை, கொண்டு - கொடுவந்து, குளிர - என் சரீரம் குளிரும்படி, முகத்து - முகத்திலே, தடவீர் - தடவப்பாருங்கோளென்கிறாள்.

வ்யா.—(அழிலும் தொழிலு முருக்காட்டான்) ஏதேனுமொன்றை ப்ரயோகிக்கிலும் உருக்காட்டுகிறிலன் ; ப்ரஹ்மாஸ்த்ர ப்ரயோகம் பண்ணிலு முருக்காட்டுகிறிலன் ; கண்ணநீர் விழுந்த வளவிலும் தன்னைக்காட்டுகிறிலன். (தொழிலும்) அதுக்கவ்வருகேயொரு நிலைநின்றாலும் தன்னைக்காட்டுகிறிலன். (தொழிலு முருக்காட்டான்) தொழுதார்கரு ஸ்வம்மோதான் இவ்வஸ்து. (க)"𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂" "பக்தாநாம்" என்றிருக்கிற வடிவைக் காட்டுகிறிலன். அவனுடைய ஆத்மாபஹாரமிருக்கிறபடி. (உ) "𑌚𑍋𑌰𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑌹𑌾𑌰𑌿𑌣𑌾" "சோரேணாத்மாபஹாரிணா" என்னக்கடவதிறே. பக்தி ப்ரபத்திகளிரண்டுக்கும் வாசியறுத்தார்களும், விக்ரஹ

அஞ்சாம்பாட்டு. (அழிலுமித்யாதி.) (எனக்கே கூறாயிருக்குமது) என்றது-வாகம்ருதத்தை. வெறுந்தரையிலே போகிறவை - குழலின் துளைவாய் நீர்.

அழுகை-பக்தி. தொழுகை-ப்ரபத்தி. ப்ரபத்தியை-ப்ரஹ்மாஸ்த்ர மென்கிறது. உரு-வடிவும், அழகும். (அழிலும்) என்றதுக்கு பக்தியாக்கி, (ஏதேனுமொன்றை) என்றது-அதினுடைய ஸ்வரூப விரோதித்வம் தோற்றுகைக்காக. "ஏதேனும்" என்ற வாக்ய விவரணம் (கண்ணநீர்) என்றது. "ப்ரஹ்மாஸ்த்ரம்" இத்யாதி வாக்யவிவரணம் (அதுக்கவ்வருகே) என்றது. இத்தால் பலிதம் (பக்தி ப்ரபத்திகள்) என்றது.) தன் விக்ரஹத்தைக் காட்டாதிருந்தால் அது ஆத்மாபஹாரமாமோ வென்ன ; ஏதேனுமாக, பிறரத்தைக்கொள்ளுகை ஆத்மாபஹாரமென்னு மதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (𑌚𑍋𑌰𑍇𑌣 - சோரேணேத்யாதி.) ஸ்வரூப குணங்களிருக்க "உருக்காட்டான்" என்பானென்

(க) ஜிதந்தா - க - ரு.　　(உ) பார - உ - சக - நுச.

மே யுத்தேஶ்யமென்னு மிடத்தை வெளியிட்டார்களும் ஆழ்வார்களிறே. இப்பக்திதான் கர்த்தவ்யமாய் ஸாதநபுத்யா பண்ணுகையன்றிக்கே தன்னடையே தவிரவொண்ணுதாய் வருமதென்றும், விக்ரஹத்துக் கவ்வருகுதேட்டமன்றென் றறியும்படியும் பண்ணினூர்கள் இவர்களிறே. ஆகையாலிறே காமிநிகள் பாசுரத்தை யாசைப்பட்டு அம்முகத்தாலே அநுபவிக்கிறது.

(அஞ்சே லென்னுனவனொருவன்) பிள்ளைகாள்! பிறர்படியறியாதொழிகிறூர் வேணுமாகில், தன்படி யறியாமை யில்லையே, நம்மைப்பிரிந்தார் தரிக்கமாட்டார்களென்று கடுகவந்து அணைத்துக் கொண்டு நிற்கவேண்டாவோ இவனுக்கு. (அவனொருவன்) ராமாவதாரத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்று; க்ருஷ்ணவதாரந் தன்னையும் வ்யாவர்த்திக்கிறது காணும் இப்போது. "கண்ணனென்னும் கருந்தெய்வம்" என்கையாலே - ஒருக்திமாத்ரமாய் அதின் முதன்மையே யாய்த்து நிலை நின்று போருவது. (தழுவி) தனக்குப் பிரிவா லுண்டான விடாயெல்லா மாறும்படி ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணி. (க) "ஸாடம் பரிஷஸ்வஜே" "ஸாகாடம் பரிஷஸ்வஜே" என்கிறபடியே. அக்ரூரனைக் கண்டதில்லை யென்னக்கடவதன்றே. (முழுசி) அத்தைவிடாஒரவயவத்திலே நின்று சுழிசுழிக்குமாய்த்து. (புகுந்தென்னைச் சுற்றிச்சுழன்று) இது விட்டுப் புறம்பு போகமாட்டாமையாலே

---

னென்ன அருளிச்செய்கிறூர் (விக்ரஹமே யித்யாதி.) பக்திதான் உபாயமாகாதோ, ஸ்வரூபகுணங்கள்தான் உத்தேஶ்யமன்றோவென்ன; அருளிச்செய்கிறூர் (இப்பக்திதா னித்யாதி.) இதுக்கு நியாமகமேதென்ன அருளிச்செய்கிறூர் (ஆகையாலிறே) என்று.

ராமாவதார வ்யா வ்ருத்தி மூன்றும்பாட்டிற் சொல்லுகிறதென்றபடி. "உருக்காட்டான்" என்றத்தைக் கடாக்ஷித்து "அஞ்சேலென்னுன்" என்றதுக்குத் தாத்பர்யம் (பிள்ளைகாள்) என்றது. (க்ருஷ்ணவதாரந் தன்னையும் வ்யாவர்த்திக்கிறது)என்றதுக்கு தாத்பர்யம்-க்ருஷ்ணவதாரம் ஸௌலப்யைகவிஷயமாகையாலே அத்தையும் வ்யா வர்த்திக்கிறதென்றபடி. உபபாதகம் (கண்ணனென்னும்) என்று. கருந்தெய்வமென்கையாலே என்றதுக்கு - "தெய்வம்" என்று சொல்லுகையாலே என்றபடி. (ஒருக்திமாத்ரமாய்) என்றது. கண்ணனென்று பேர் மாத்ரமா யென்றபடி. "முழுசி" என்றது - மூக்காலே

---

(க) ரா - ஆ - ௩0 - ௩௧.

சூழச்சூழ அங்கேவாராநிற்கும். (போகானல்) இது தனக்குப் போக்கு விட்டல்லது தரிக்க வொண்ணாமையாலே புறப்பட்டுப் போகாநிற்கும்; இதுவாய்த்து ஸம்ஶ்லேஷ க்ரமமிருக்கும்படி. இப்படி செய்கிறில னென்னுதல். அன்றிக்கே, உருவு வெளிப் பாட்டாலே நலிந்து விட்டுப்போகிறிலனென்னுதல்.

(தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே) (க) "தழைகளும் தொங்கலும் ததும்பி" என்கிறபாட்டின்படியாய்த்து வந்து தோற்றும்போதிருப்பது. தழை - பீலி. பசுக்கள் வரும்போது முற்குழையிலே வாராதே கடைக்குழையிலேயாய்த்து வருவது. பகலில் பசுக்களின் பின்னேபோன விடாயெல்லாம் தீரும்படி சோலை செய்துகொண்டாய்த்து வருவது. பெருங்குளம் கலங்கினாப் போலே காணும் அத்தனைபோதும் பெண்கள் படுமலமாப்புக் காண்கைக்காக. ஒரு தாய் தமப்பனுக்குப் பிறக்கையாலே அவர்கள் சொல்லிற்றுச் செய்யப்போனேன், "பிரியேன், பிரியில் தரியேன்" என்று, இவர்கள்தானே சென்று அணைக்க வேண்டும்படி தன் வ்யாமோஹமெல்லாம் குழலின் த்வநியிலே தோற்றும்படியாகவாய்த்துக் குழலூதுவது (குழலின் துளைவாய் நீர்கொண்டு) இது தன்னையும் புதைத்துவிடவேண்டும்படி போலே காணும் இவளுக்கு. (குளிர்முகத்துத்தடவீரே) அந்நீரைக்கொடு வந்து தடவி என்னிளைப்பை நீக்கிக்கொடு நிற்கப்பாருங்கோள். ரு.

---

முழுசி என்றபடி. போகான் - போகிறானில்லை. ஆல் - அசை. இது பூர்வாவஸ்தை.

(கடைக்குழையிலே யாய்த்து வருவது) என்ற இவ்வாக்யத்துக்கு ஶேஷமாக (அத்தனை போதும் பெண்களலமாப்புக் காண்கைக்காக) என்று மேலேயிருக்கிற வாக்யத்தைக்கூட்டி நிர்வஹிப்பது. தழைப்பின்னே வருவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பசுக்களி னித்யாதி.) "நெடுமால்" என்றதுக்கு வ்யாமோஹத்திலே நோக்காக தாத்பர்யம் (பெருங்குள மித்யாதி.) அத்தனைபோதும் பெண்களலமாப்புக் காண்கைக்காகப் பிரிந்துவரும்போது குளம் கலங்கினாப்போலே வருமென்றபடி. கலக்கத்தின் கார்யத்தை அருளிச்செய்கிறார் (ஒரு தாய் தமப்பனித்யாதி.) வாய்நீர் தன்னையும் ஒருக்காலே விட்டால் ஸாத்மியாமையாலே (புதைத்து) என்கிறது. புதைத்து விடுகை - சாடு. அல்பமாகவிடுகை-அர்த்தம். விரலாலே புதைத்துவிடுகை-த்வநி. ரு.

---

(க) பெரி - தி - ங - ச - க.

நடையொன்றில்லாவுலகத்து நந்தகோபன்மகனென்னும்
கொடியகடியதிருமாலால் குளப்புக்கூறுகொளப்பட்டுப்
புடையும்பெயரகில்லேன்நான் போட்கன்மிதித்தவடிப்பாட்டில்
பொடித்தான்கொணர்ந்துபூசீர்கள் போகாவுயிரென்னுடம்பையே.(கூ)

ப - ரை.—உலகத்து - இந்த லோகத்திலே, ஒன்று நடையில்லா - ஒரு மர்யாதை அற்றவனாய், நந்தகோபன் - ஸ்ரீநந்தகோபருடைய, மகன் என்னும்-பிள்ளையான க்ருஷ்ணனாய், கொடிய - ஸ்வகார்ய துரந்தரனாய், கடிய - பிறர் நோவறியாதவனான, திருமாலால் - ஸ்ரிய:பதியாலே, குளப்புக்கூறுகொளப்பட்டு - மிதித்தவிடத்திலே மிதியுண்டு, நான்—, புடையும் - பக்கத்திலுங் கூட, பெயரகில்லேன் - பெயர சக்தியற்றவளா யிராநின்றேன் ; போட்கன் - சுணைக்கேடனான க்ருஷ்ணன், மிதித்த அடிப்பாட்டில் - மிதித்தவிடத்திலுள்ள, பொடித்தான்கொணர்ந்து-பொடியைக் கொண்டுவந்து, பூசீர்கள்-பூசப்பாருங்கோள்; அது செய்தீர்களாகில், உயிர் - ப்ராணனானது, என்னுடம்பை - என்னுடம்பைவிட்டு, போகா - போகாது.

வ்யா.—ஆறும்பாட்டு. (நடையொன்றில்லாவுலகத்து) லோகத்தில மர்யாதையெல்லாம் குலைந்தாய்த்துக் கிடப்பது ; அதுக்குமேலே ஒன்று பத்தாய்க் குலைந்ததாய்த்து இவனைத தோற்றி ; அறுவெல்லாம் நிலைநின்றதாநிலும் இவ்வளவிலேவந்து என்முகத்திலே விழிக்கப்பெறில். (நந்தகோபன் மகனென்னும்) அவன் வயிற்றிலே இவனொருவன் எங்ஙனேவந்து தோற்றினபடி. (க) "எமபெருமான் நந்தகோபாலா வெழுந்திராய்" என்று-அவர்கள் பேற்றுக்கு பரிகாரமாக நினைத்திருப்பதும் இவனை. (உ) [நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்கணென்னை யுய்த்திடுமின்] என்னுற்றுமை கரைபுரண்டால் பொகடச் சொல்லுவதும் அவர் வாசலிலே. ஸ்ரீநந்தகோபர் தாம, சிறியாத்தானைப்போலே பரம தார்மிகராயிறே யிருப்பது.

(கொடிய) அவ்வளவல்ல, ஸ்வகார்யபரன். (கடிய) பிறர் நோவறியான். (திருமாலால்) பெற்றவர்களும் அங்ஙனேயாய்,

ஆறும்பாட்டு.—(நடையித்யாதி) "நடை-இல்லா, நடையொன்றில்லா" என்று பிரித்துத் தாத்பர்யம் (லோகத்திலித்யாதி.) "நடை" - நெறி.

(கொடிய) - ஸ்வார்த்தபரர். (அவ்வளவல்ல) - அவனளவல்ல. நந்தகோபரைக் கொண்டாடின வளவன்றிக்கே வெறுப்பு மோரர்த்தமாக்கி யருளிச்

(க) திருப்பாவை - கள. (உ) கஉ -ரு.

வளர்த்தவர்களும் இங்ஙனே யானால் நாம் இவனை வெறுக்கிற தென்?. இழவேயாய்ப்போருகிற ப்ரகரணமாகையாலே பேற்றுக்குப் பரிகாரமாகச் சொல்லலா மவற்றையெல்லாம் இழவுக்குப் பரிகாரமாகச் சொல்லுகிருள். (க) "அருளாததிருமாலார்க்கு" என்று அதுக்கு - "புருஷகாரமாக அநுஸந்திக்கிருர்" என்று முன்புள்ள முதலிகள் அருளிச்செய்யும்படி ; பிள்ளானை "இதுக்குக் கருத்தென் ?" என்று நான்கேட்டேன் ; "இப்படி நம்மை நலிகைக்கு குருகுலவாஸம்பண்ணிற்று அவளோடேயன்ரு" என்றுபணித்தார் ; இத்தைப் பட்டர்க்கு விண்ணப்பம்செய்தேன் ; "பேற்றுக்கடி அவளென்றிருந்தால் இழவுக்கும் அடி அவளென்று வெறுத்து வார்த்தைசொல்லத் தட்டுண்டோவென்றுர்" என்று நஞ்சீயரருளிசசெய்யும்படி. (குளப்புக்கூறு கொளப்பட்டு) கீழே "உழக்க வுழக்குண்டு" என்றதிறே புறப்பு போக்கில்லாமையாலே. துகைத்தவிடந்தன்னிலே துகைக்கு மிததனையாய்த்து.

(புடையும் பெயரகில்லேன்) இப்போது இவளுக்கு அவனைக் காண்கையன்ருய்த்துத் தேட்டம், தான் இடம் வலங்கொள்ள வாய்த்து. (நான்) (உ) [नैवदंभान्नमस्कान् -நைவதம்ஸாந்நமஸகாந்] அவனும் புடைபெயருகிறிலனென்று சொன்னானுண்டாகில் இவள் நோவுபடாள்போலே. அது செய்யாத போட்கனுய்து இவன். நம்மை இப்படி நோவுபடுத்திவைத்து இன்னமும் சிலரை நோவுபடுத்தப் போகாநிற்குமாய்த்து.

---

செய்கிருர் (பெற்றவர்களு மித்யாதி.) "மணநோக்க முண்டான்" என்று - அவள்நோக்கு இவனுக்கு ஊணகையாலே பிராட்டியை (வளர்த்தவர்களும்) என்கிறது. இவர்களை வெறுக்கலாமோவென்ன ; அருளிச்செய்கிருர் (இழவேயாயித்யாதி.) இப்படி வெறுத்த விடமுண்டோவென்ன; அருளிச்செய்கிருர். (அருளாத திருமா லித்யாதி.) (அதுக்கு)-பேற்றுக்கு. "குளப்புக்கூறு"-துகைத்துக் குளப்பில்கூறு கொள்ளப்பட்டது. மிதித்த விடத்திலே மிதிக்கப்பட்டதென்றபடி. "நான்" என்கையாலே - அவனன்றே இப்படிபட ப்ராப்தமென்கிறது (नैवदंभान्नमस्कान् - நைவதம்ஸாந் நமஸகாந்) என்று. "புடையும் பெயரகில்லேன்"-இடம்வலம் கொள்ளமாட்டேன். "நமஸகாந்" என்றவநந்தரம் "என்" என்றுகூட்டுவது. இத்தால்-அவன் நோவுபடுகிற தறியாமையாலே நோவுபடுகிருளென்றபடி. அன்றிக்கே, அதுதான் இவனுக்கில்லை. பரி

---

(க) தி - வாய் - க - ச - எ. (உ) ரா - ஸு - ௬௯ - ௩௨.

(போட்கனித்யாதி) அங்குப்போகிற விடத்தில் அவர்களை வஶீகரிக்கும்போது இப்பொடிகொண்டு காரியமில்லையிறே அவனுக்கு, நான் சொல்லுகிறவற்றைச் செய்யுங்கோள்;-பொடிபடத்தீரும். அவ்வடிப்பாட்டிற் பொடியைக்கொணர்ந்து பூசப் பாருங்கோள். அவனது ஒருவழியாயிருக்குமிறே, இவளுக்கு அதுதானேயிறே வழி. (போகாவுயிரென்னுடம்பையே) ஶஸ்த்ர விஷாதிகள் தாரகமாவதே! இவ்வுடம்புக்கு. அந்யார்த்தமாக நோக்கி யிருக்க வேண்டுவார்க்கும் தாந்தாம் முடிய விரகுண்டோ நினைத்தபடி. (க) [விஷஸ்யதாதா-விஷஸ்யதாதா] இவ்வளவிலே விஷத்தைத்தந்து நோக்குவாரொரு உதாரனைக்கிடையாதோ. [ஶஸ்த்ரஸ்யவா - ஶஸ்த்ரஸ்யவா]ஶஸ்த்ரம் தருவாரைப் பெற்றதாகில்தான் பொல்லாதோ?,

அவ;-எழாம்பாட்டு. (வெற்றியித்யாதி) (உ) "நஜீவேயம் க்ஷணமபி" "நஜீவேயம் க்ஷணமபி" என்று - மேல்விழுந்து வந்தணைந்திலனாகிலும் எனக்கு பாபுத்யதீநமாக வாகிலும் அவனைப் பெறிலமையும், ஆனபின்பு அத்தைச் செய்யுங்கோளென்கிறாள்.

வெற்றிக்கருளக்கொடியான்றன் மீமீதாடாவுலகத்து
வெற்றவெறிதேபெற்றதாய் வேம்பேயாகவளர்த்தாளே;
குற்றமற்றமுலைதன்னைக் குமரன் கோலப்பணைத்தோளோடு
அற்றகுற்றமவைதீர அணையவமுக்கிக்கட்டீரே. (எ)

---

ஹாராந்தாம் (அது செய்யாத போட்கனுய்த்திவ னித்யாதி.) "போட்கன்" - சுணைகேடன். இத்தை விவரிக்கிறார் (நம்மை இப்படி யித்யாதி.)

"என்னுடம்பைவிட்டு உயிர்போகா" என்று ஸம்தார்த்தம். (தாரகமாவதே) அபேக்ஷிதமாகவேணுமோ இவ்வுடம்புக்கென்றபடி. ஶஸ்த்ராதிகளை அபேக்ஷிக்கவேணுமோ, தானே முடிய வொண்ணாதோவென்ன; அருளிச்செய்கிறார் (அந்யார்த்தமாக வித்யாதி ) இத்தால்-ஒருத்தர் தரச்செய்கை யன்றிக்கே தானே முடியவொண்ணாதென்று தாத்பர்யம். இவ்விடத்திலே (ங) "நசாஸ்யமாதா" "நசாஸ்யமாதா" இத்யாதியைக் கண்டுகொள்வது. இப்படி அபேக்ஷித்த பேருண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (விஷஸ்யதாதா - விஷஸ்யதாதா) என்று. ... ... ... சு.

எழாம்பாட்டு. (வெற்றியித்யாதி) "கட்டீரே" என் கையாலே (பாபுத்யதீநம்) என்கிறது.)

---

(க) ரா - ஸு - உசு - நஅ. (உ) ரா - ஸு - சுசு - கO.
(ங) ரா - ஸு - நசு - நO.

ப - ரை.—வெற்றி - ஜயஸூசகமான, கருளக்கொடியான் றன் - கருடத்வஜத்தையுடையனுன ஸர்வேஶ்வரனுடைய, மீமீது ஆடா-மேன்மைக்குமேலே ஒன்றில்லாத, உலகத்து - லோகத்திலே, பெற்றதாய் - லோகத்தார்பெற்றதாகப்ரமித்த யசோதைப் பிராட்டியானவள், வெற்றவெறிதே - அற்ப ப்ரயோஜநமுமில்லாதபடி, வேம்பேபாக -வெறும் வேம்பாகவே, வளர்த்தாள் —; இப்படி யிருப்பதினுலே, குற்றமற்ற-ஸர்வேஶ்வரனை யொழிந்தவர்களை அணைக்க ஆசைப்படுகையாகிற குற்றமில்லாத, முலைதன்னை - என் ஸ்தநங்களை, குமரன் - யௌவநவயஸ்கனுன க்ருஷ்ணனுடைய, *கோலம் - அழகிதாய், பணைபருத்திருந்துள்ள, தோளோடு - திருத்தோளோடே. அற்ற - அவனுக்கே அற்றுத்தீர்ந்த, குற்றமவைதீர - குறைதீரும்படி, அணைய - நன்றாகப்பொருந்தும்படிக்கீடாக, அமுக்கிக்கட்டீர் - அமுக்கிக்கட்டி விடுங்கோளென்கிருள்.

வ்யா.—(வெற்றியித்யாதி) தன்னுஜ்ஞையாலே ஸர்வத்தையும் கீழ்ப்படுத்தி விஜயத்வஜமெடுத்திறே யிருப்பது, அம்மர்யாதை குலையவன்று ஒரு காரியம் பார்க்கிறது; ஈஶ்வராஜ்ஞை தான் நின்றவளவும் வரநடக்கிறதிறே. (க) "அகல்விசும்பும் நிலனும் இருளார்வினைகெடச் செங்கோல் நடாவுதிர்" என்றும், (உ) "𑌭𑍀𑌷𑌾𑌽𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾𑌤𑌃 𑌪𑌵𑌤𑍇" "பீஷாஸ்மாத்வாதபவதே" என்றும், (ங) "𑌮𑍇𑌘𑍋𑌦𑌯𑌃 𑌸𑌾𑌗𑌰𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃" "மேகோதயஸ்ஸாகர ஸந்நிவ்ருத்தி:" என்றும்சொல்லுகிறபடியே-தன்னுஜ்ஞைதான் ஒருவரால் அதிக்ரமிக்க வொண்ணுதபடியிறே நடத்துவது, (மீமீதாடாவுலகத்து) தன்மேன்மைக்குமேலே போகக்கடவ தன்றிக்கே யிருக்கிற லோகத்திலே, "மீது" என்று மேல். கருளக்கொடியான்றன் மேன்மைக்குமேலே ஒன்றில்லாத லோகத்திலே.

(வெற்றவெறிதே) ப்ரயோஜந நிரபேக்ஷமாகப் பிறர்க்கு அநர்த்தத்தை விளைப்பாருண்டாகாதே?. பரார்த்தமேயோவிதுக்கு, மற்றுமேதேனும் ப்ரயோஜநமுண்டோ. (பெற்றதாய்) "நந்தகோபன் மகனென்னும்" என்று - பெற்ற தமப்பனை வெறுத்தாள் - கீழ்ப்பாட்டில்; இங்கு - பெற்றதாயாரை வெறுக்கிருள். அவனை வெறுக்கிறதென்? அவனுக்கு ரக்ஷ்யவர்க்கம்பரப்புண்டே.

"வேம்பேயாக வளர்த்தாளே" என்னு மளவுக்கும் தாத்பர்யம் (தன் ஆஜ்ஞையாலே )என்று. மர்யாதை குலைகை - அவனுடைய ஸ்வாதந்த்ர்யமும் இவளுடைய பாரதந்த்ர்யமும் குலைகை. முந்தின "மீ" என்றது-மேன்மையை; இரண்டாவது-மேலென்றபடி. "மீது"என்று மேலாக்கி மேன்மையைச்சொல்லுகிறது.

(க) திருவி - ஙங. (உ) தை - ஆ - அ. (ங)

பசுக்களை நோக்கவேணுமிறே அவர்க்கு, ரக்ஷணத்திலே அந்ய பரரே அவர், நம்மோபாதியன்றே அவரும், அவனைநோக்கு கையே பணியாயிருக்கு மிவளைச் சொல்லீர் ; இவள் அவனைக் கட்டுவது அடிப்பதாக, அவனும் அழுவது முலையுண்பதாகப் புக்க வாறே, இவள்பெற்றவளாகாதே யென்றிருந்தோம், இப்போ தைச் செயலைப்பார்த்தவாறே "வளர்த்துக்கொள்ளி யாகாதே!" என்று தோற்றி யிராநின்றது. (வேம்பேயாக) வேம்பும் கரும்பு மாக வளர்க்கையன்றிக்கே, வெறும் வேம்பேயாக வளர்த்தாள். அவன் வேம்பானது வளர்த்த பொல்லாங்கு என்றிருக்கிறாள்.

அவனை யின்னாதாகிற தென்னென்னில் ; இவளன்றோ விப் படி வளர்த்தாள், "அவன் வாராதொழிகிறான், இழவு வுன்னது, நடுவே பெற்றதாயை இன்னாதாகிற தென்?" என்ன (குற்றமித் யாதி) என்பக்கல்தான் குற்றமுண்டோ. (குற்றமற்ற முலை) அவன்வேம்பானால், (க) "வேம்பின்புழு வேம்பன்றி யுண்ணாது" என்றிருக்கும் முலை ; * அவரைப் பிராயந்தொடங்கித் துவரைப் பிரானை யாதரித்தெழுந்த வென்தடமுலை ; * கோவிந்தனுக்கல் லால் வாயில்போகாமுலை. அநஸூயை, பிராட்டியைப்பார்த்து "ஸ்த்ரீக்கு பரதேவதை பர்த்தாவேகிடீர்" என்ன ; அது கொடு காரியமென்?, பெருமாள் குணவாங்களாய்க் கேட்டேன், நமக்கு அவர்பக்கலுண்டான நிருபாதிக ஸ்நேஹம் ஸோபாதிகமாய்த்

(அவனை) - நந்தகோபனை, (நம்மோபாதி) என்றது-கீழில் வாக்யத்துக்கு அநுகுணமாக. நமக்கு உத்தேஶ்ய வஸ்துவிலே பராக்காயிருக்குமாப்போலே அவரும் தமக்கு உத்தேஶ்யமான பசுக்களின்மேலே பராக்கா யிருப்பரென்னு தல். அன்றியே, மேலில் வாக்யத்துக்கு அநுகுணமாக, நாம் அவனை வளர்க் காதாப்போலே அவரும் அவனை வளர்க்கவில்லை என்னுதல்.

"பெற்றதாய்" என்றுவைத்து, "வளர்த்தாள்" என்றதுக்குக் கருத் தென்னென்ன ; அருளிச்செய்கிறார் (அவனைஇத்யாதி.) "இழவு உன்னது" என்றதுக்குத் தாத்பர்யம் - உன் குற்றத்தாலேயன்றோ இழந்தாயென்றபடி. அவனே என்று இருக்கிறதுக்கு ப்ரமாணத்வயம் (* அவரைப் பிராயமித் யாதி.) அவன் எப்படியிருந்தாலும் விடாய்தீர்ந்தமைக்கு ஸம்வாதமாக ஒரை திவ்ய மருளிச்செய்கிறார் (அநஸூயை யித்யாதி). குற்ற மறுகையாவது - வந்தபோது வருகிறானென்று ஆறியிராமை என்று. இரண்டாமர்த்தத்தை

(க) தி - மொ - கக - அ - எ.

தோற்றுநின்றதிறே. குணங்களை வ்யதிரேகித்து அந்த தர்மியை ப்ரதிபத்தி பண்ணவொண்ணாமையாலே க்ரமப்ராப்திபார்த்து ஆறியிருக்கவற்றோ இம்முலை. (குமரன்) இம்முலைக்குத் தக்க பருவத்தையுடையவன். (கோலப்பணைத்தோளோடு) நெஞ்சாய்த்துப் பொய்யாயிருப்பது, தோளுக்குக் குற்றமில்லை, அணைத்தே நிற்கவேண்டும்படியாயிருக்கும். இவளோடே கைசெய்து வைத்தபடி, இப்போதும் "கோலப்பணைத்தோள்" என்னும்படியிறே.

(அற்றகுற்ற மவைதீர) அத்தோளோடே யற்றதாய்த்து இம்முலைகள். இங்கே குடியிருப்பாய், அங்கே க்ருதஸங்கேதமாயாய்த்திருக்கிறது இவை. என்னைக்கூடாதே அங்கேயற்ற குறை தீரும்படி. (அணைய வமுக்கிக்கட்டீரே) அணையவென்றால் அவன் றான் இறாய்க்கும்போலே காணும். உஷையையும் அநிருத்தனையும் கூட விலங்கிட்டாப்போலே, அத்தோளையும் இம்முலைகளையும் கூட விலங்கிட்டு வைப்பாரைக் கிடையாதோ? ஆனவளவுமிறே மீட்கப்பார்ப்பது. ஸத்தாஹாநி பிறக்குமளவில் பின்னைச் சேர்க்கை பித்ராதிகள் தங்களுக்கே பரமாயிருக் குமிறே. எ.

உள்ளேயுருகிநைவேனை உளளோ இலளோவென்னாத
கொள்ளைகொள்ளிக்குறும்பனைக் கோவர்த்தனனைக்கண்டக்கால்
கொள்ளும்பயனொன்றில்லாத கொங்கைதன்னைக்கிழங்கோடும்
அள்ளிப்பறித்திட்டவன்மார்விலெறிந்து என்னழலைத்தீர்வேனே. (அ)

ப-ரை.—உள்ளே - உள்ளுக்குள்ளே, உருகி—, நைவேனை - வருந்துகிறவென்னை, உளளோ இலளோ என்னாத - இருக்கிறாளோ போய்விட்டாளோ என்று விசாரியாதவனாய், கொள்ளைகொள்ளி - என்னை ஸர்வ ஸ்வாப

---

அருளிச்செய்கிறார் (க்ரமப்ராப்தி இத்யாதி.) "வேம்பு" என்கையாலே - நெஞ்சில் பொய் தோற்றுகிறது. விஶ்லேஷித்தவள் தோளழகு சொல்லுவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (இவளோடே கைசெய்தித்யாதி.) கைசெய்கை - சாடு. ஸம்ஶ்லேஷிக்கை - அர்த்தம். அலங்கரிக்கை - த்வநி.

அற்ற குற்ற மவைதீர-அவனுக்கே அற்ற முலைகளை, விஶ்லேஷத்தால் வந்தகுற்றந் தீரவென்று ஸப்தார்த்தம். என்னைக்கூடாதே - என்னைப்போலே விஶ்லேஷித்திராதே. நிஷேதிக்கிறவர்கள் காட்டுவர்களோவென்ன அருளிச்செய்கிறார் (ஆனவளவு மித்யாதி.) எ.

ஹாரம்பண்ணினவனாய், குறும்பனை - குறும்படித்துத் திரியுமவனாய், கோவர்த்தநனை - கோக்களை விருத்திபண்ணுமவனான கிருஷ்ணனை, கண்டக்கால் - நான் பார்த்தால், கொள்ளும்பயனொன்றில்லாத - இனிக் கொள்ளுவதொரு ப்ரயோஜநமில்லாத, கொங்கைதன்னை - ஸ்தநங்களை, கிழங்கோடும் - அவற்றுக்கு ஆஶ்ரயமான ஆத்மாவோடேகூட, அள்ளிப்பறித்திட்டு - அள்ளிப்பிடுங்கி, அவன் - அவனுடைய, மார்வில் - திருமார்விலே, எறிந்து—, என் - என்னுடைய, அழலைத் தீர்வேன் - என்துःகம் தீர்வேனென்கிறாள்.

வ்யா—எட்டாம்பாட்டு. (உள்ளே யுருகிநைவேனை) அகவாயிலோட்டமறியாமேதானிருக்கிறானே ஆறுகளும் குளங்களும் நிரம்பினால் மிக்க நீராய்த்து வழிந்து போவது; அப்படியே செயலாலும் சொல்லாலு மறியலாய், விகல்பமாய் அகவாய் ஸைஹில்யம் பேச்சுக்கு நிலமல்ல. (உளளோ இலளோவென்னாத) ப்ரணயித்வம் குடிபோனால் நீர்மையும் குடிபோகவேணுமோ? (கொள்ளைகொள்ளி) என்பக்கல் தயைபண்ணத்தவிர்ந்தால். என்னிடையாட்ட மாராயாதொழிந்தால், என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணவேணுமோ?. (குறும்பனை) ஸ்ரீநந்தகோபன், நம்முடைய விஷயத்திலே குறும்படித்து மூலையடியே திரிகைக்கு ஒரு பிள்ளை பெற்று விட்டானாய்த்து. (கோவர்த்தநனை) பெண்களை வெறுந்தறையாக்கும்; பசுக்களை ஒன்று நூறாயிரமாக்கும். (கண்டக்கால்) அவன் பசுக்களின் பின்னே கைகழியப் போகையாலே காண்கை தானரிது, வந்திக்காணப் பெற்றதாகில்.

(கொள்ளும்பயனொன்றில்லாத) அவன் பசுக்களின்பின்னே போகையாலே இம்முலைகள்கொண்டு கொள்ளுவதொரு ப்ரயோஜநமில்லையாய்த்து. (கிழங்கோடும்) விவேகமுடையாரா யிருப்பார் "இதுக்கோராஶ்ரயமாயிருப்பதொரு ஆத்மவஸ்துவுண்டு, அது தான் நித்யம், அழியாததொன்று" என்றிருப்பார்களிறே; "அச்சேத்யம் - அதாஹ்யம்" "அச்சேத்யம் - அதாஹ்யம்" என்று சொல்லு

---

எட்டாம்பாட்டு —(உள்ளேயித்யாதி) *உள்ளுவா ருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறியுமவனாகையாலே அகவாயி லோட்டமறியுமிறே என்றபடி. "நைவேனை" என்பானென், இன்னபடியென்று சொல்லவொண்ணாதோ வென்ன; அருளிச்செய்கிறார். (ஆறுகளு மித்யாதி.) விகல்பமாய் - அதிகமாய்.

கிழங்கோடு - கொங்கையாகிற பக்திக்கு ஆஶ்ரயமான ஆத்மாவோடு.

கிற வது தன்னோடே பறித்தெறியப்பார்க்கிறாள். (அவன்மார்வி லெறிந்து) அவன் மார்விலே கிடக்கிலும் தன்னைப்படுத்திற்றுப் படுத்தும் அவனையுமென்று. இவற்றை உபேக்ஷித்துப் பறித்தெறியும்போதும் விழுந்ததை அவன் மார்வாகவேணும். (என்னழலைத் தீர்வேனே) அவன்றானே விரும்பிவந்து அணைக்கும்போதிறே போகத்துக்கு உடலாவது; இப்போது ஓடுகிற க்லேஶத்தைத் தவிர்க்கலாமிறே. அ.

அவ.—ஒன்பதாம் பாட்டு. (கொம்மை யித்யாதி) "கிழங்கோடும் அள்ளிப்பறித்திட்டு" என்கிறதென்? அது தனக்காஶ்ரயமாயிருப்பதோ ராத்மவஸ்து வுண்டானால் அதுக்கவ்வருகேபோய்ப் பெறலாவதோ ரநுபவமுண்டோ, அத்தைப் பெறப் பார்த்தாலோ வென்ன; பெற்ற இவ்வுடம்போடே அநுபவிக்கவேணுமென்று ஆசைப்பட்ட நான் அத்தைவிட்டு அவ்வருகேபோய் ஸாதநாநுஷ்டாநம் பண்ணவோ?.

கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தர்க்கோர்குற்றேவல்
இம்மைப்பிறவிசெய்யாதே இனிப்போய்ச்செய்யுந்தவந்தானென்;
செம்மையுடையதிருமார்வில் சேர்த்தானேலுமொருநான்று
மெய்ம்மைசொல்லிமுகம்நோக்கி விடைதான்தருமேல்மிகநன்றே. (கூ)

ப-ரை.—கொம்மை - குவிவாகிய, முலைகள் - ஸ்தநங்களினுடைய, இடர் - இடரானது, தீர - தீரும்படி, இம்மைப்பிறவி - இந்த ஜந்மத்திலே, கோவிந்தர்க்கு-கோரக்ஷணபரனான க்ருஷ்ணன் விஷயத்திலே, ஓர் குற்றேவல்- அந்தரங்கவர்த்திகளை, செய்யாதே - பண்ணாமல், இனி - இனிமேல், போய் - அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதத்திலேபோய், செய்யும் - செய்கிற, தவந்தான் - கைங்கர்யம், என் - என்ன பெருமையையுடையது; செம்மையுடைய- ஸ்பர்ஶலேஶத்திற்குப் பின்வாங்காமையாகிற செம்மையையுடைய, திருமார்

(சொல்லுகிறவது தன்னோடே பறித்தெறியப் பார்க்கிறாள்) என்றது இப்படி சொல்லப்படுகிற வஸ்துதன்னைப் பறித்தெறியப் பார்க்கிறாளென்றபடி அவன்மார்விலே எறிந்தால் ஸுகஹேதுவாமத்தனையன்றோ, "என்னழலைத் தீர்வேன்" என்கிறதென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவன்றானே யித்யாதி.) அ.

ஒன்பதாம் பாட்டு.—(கொம்மைமுலை யித்யாதி) (பெறப்பார்த்தாலோ வென்ன) என்று ஶங்கை. முலையாலே குற்றேவலுண்டோ வென்ன; அரு

வில் - திருமார்பிலே, சேர்த்தானேல் - அணைத்தானாகில், நன்று - அழகிது; இல்லாவிட்டால், ஒரு நான்று - ஒரு நாளிலே, முகம் நோக்கி - முகத்தைப் பார்த்து, மெய்ம்மை சொல்லி - உண்மைபேசி, விடைதான் தருமேல் - நீ வேண்டாபோ என்று அநுமதிபண்ணிவிடுமாகில், மிகநன்று-மிகவும் அழகிது.

வ்யா.—(கொம்மை முலைகள்) சமையவளர்ந்து, க்ஷாமகாலத்திலே ப்ரஜைகள் "சோறு, சோறு" என்றலைக்குமாப்போலே, "என்க்கடைத்த விஷயத்தைக்காட்டுக்காட்டு" என்று நெருக்குகிற இவற்றினிடரானது தீரும்படி. இவற்றினிடர் தீர்ந்ததாவது-கோவிந்தனுக் காளாய்த்து; அல்லாதபோது, இவனுக்கு நெஞ்சடையாமித்தனை. (கோவிந்தர்க்கு) ஸ்ரீவைகுண்டநாதனுக்காகவொண்ணாது, பசுக்களின் பின்னே திரியுமவனுக்காகவேணும். (ஓர் குற்றேவல்) முலை யெழுந்தவளுடைய குற்றேவலிறே. தந்தாமுக்கடைத்த கரணங்களைக்கொண்டு பண்ணும் கைங்கர்யமிறே தான் - குற்றேவலாவது.

(இம்மைப் பிறவிசெய்யாதே) (க) "[Sanskrit/Grantha text] [Sanskrit/Grantha text]" "காத்ரைஸ் ஸோகாபிகர்ஶிதை: - ஸம்ஸ்ப்ருஶேயம்" என்னுமாப்போலே இவ்வுடம்போடேயணைய வாசைப்பட்டுப் பெறாதே, இனி அவ்வருகேபோய் ஒரு ஶரீரபரிக்ரஹம் பண்ணிப் பெறும்பேறுகிறது - பஞ்சாக்நி மத்யஸ்தராய் நின்று தபஸ்ஸு பண்ணுவாரோபாதி என்றிருக்கிறாள். (செம்மையுடைய திருமார்வில்) அணைக்கப்புக்கால் இறுயாதமார்வாய்த்து. (சேர்த்தானேலும்) அம்மார்வோடே சேர்ந்தணைக் கைபாய்த்துப் பேறுவது; அது செய்திலனேயாகிலும். (ஒரு நான்று மெய்ம்மைசொல்லி) என்று மொக்கப் பொய்யே சொல்லவேணுமென்னும் நிர்ப்பந்தமுண்டோ?; ஒருநாள் மெய்சொன்னலாகாதோ?. இப்போது பொய்சொல்லுகையாவது - அருகேயிருக்கச்செய்தே பிரிய நினைக்கை. அகவாய் அங்ஙனே செல்லாநிற்க, "நின்னைப் பிரியேன், பிரியிலுமாற்றேன்" என்றாப்போலே சொல்லுகை.

---

ளிச்செய்கிறார் (தந்தாமுக்கித்யாதி.) "ஒரு நான்று மெய்ம்மைசொல்லி" என்று கூட்டி தாத்பர்யம் (என்று மொக்க வித்யாதி.) இவள் பொய்சொன்னளாகச் சொல்லுகிறது எத்தையென்ன; அருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி) அதாவது - பண்டு ஸம்ஶ்லேஷித்த ஸமயத்திலென்றபடி.

---

(க) ரா - ஸு - கூ0 - ரு.

(முகம்நோக்கி விடைதான் தருமேல்) நேர்கொடு நேர்முகம் பார்த்து "எனக்கு உன்பக்கலாதாரம் போராது, உன்னையுபேக்ஷித்தேன், நீபோ" என்று நம்போக்கை அநுமதிபண்ணுமாகில், அது மிகவும் நன்று. (சேர்த்தானேல் - நன்று, விடைதான் தருமேல் - மிக நன்று) - தன் மார்வோடே யணையும்படி ஸம்ஸ்லேஷிப்பித்தானாகில், நன்று - அழகிது; நீ வேண்டா போவென்று முகத்தைப்பார்த்து அநுமதிபண்ணிவிடுமாகில் மிகவும் நன்று. கலக்கவேணுமென்று ஆசைப்பட்டால் பின்னையுமிருந்து நோவுபட்டு ஸம்ஸ்லேஷத்தை ஆசைப்படுகைக் குடலிறே. நீவேண்டாவென்றால் முடிந்து பிழைக்கலாமே. பிராட்டியுடைய இரண்டாம் பிரிவுபோலே யிருப்பதொன்றிறே யிது.

மூ.—அல்லல்விளைத்தபெருமானை ஆயர்பாடிக்கணிவிளக்கை
வில்லிபுதுவைநகர்நம்பி விட்டுசித்தன்வியன்கோதை
வில்லித்தோலைத்தபுருவத்தாள் வேட்கையுற்றுமிகவிரும்பும்
சொல்லைத்துதிக்கவல்லார்கள் துன்பக்கடலுள்துவளாரே. (கo)

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

---

ப - ரை.—வில்லி புதுவைநகர் - ஸ்ரீவில்லிபுத்தூரி லெழுந்தருளியிருக்கிற, நம்பி-பூர்ணரான, விட்டுசித்தன்-பெரியாழ்வார் பெண்பிள்ளையாய், வியன்-விஸ்மயப்படத் தக்கவளாய், வில்லைத்தொலைத்த - வில் ஒப்புப்போராமையாலே காற்கீழ்க் கொண்ட, புருவத்தாள்-புருவத்தையுடையளான, கோதை-ஆண்டாள்; அல்லல் விளைத்த - தன்னை ஸம்ஸ்லேஷிக்க விரும்பினவர்களுக்குத் துன்பமே செய்து போருகையால் வந்த, பெருமானை - பெருமையையுடையனாய், ஆயர் பாடிக்கு - திருவாய்ப்பாடிக்கு, அணிவிளக்கை - மங்களதீபம்போன்றவனை,

---

கலக்கையை அபேக்ஷியாமல் பிரிவை அபேக்ஷிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கலக்கவேணுமென்றித்யாதி) அதாவது - ஸம்ஸ்லேஷத்தை அபேக்ஷிக்கை. (இரண்டாம் பிரிவு) - கேவல து:கமேயாய் முடிவுக்கு ஹேதுவாய்த் தென்றபடி.

"கொம்மை முலைகள் என்று தொடங்கி, திருமார்விற்சேர்த்தானேல் நன்று; அதுசெய்யாதே, ஒருநான்று மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடைதான் தருமேல் மிகவும் நன்று" என்று அந்வயம். "ஒரு நான்று மெய்ம்மைசொல்லி-திருமார்விற் சேர்த்தானேல் நன்று" என்றுகீழோடே கூட்டுதல். இந்தபக்ஷத்தில் (பிரிய நினைக்கை) என்றதுக்கு ஸ்வாரஸ்யமுண்டு. க.

வேட்கையுற்று - ஸம்ஶ்லேஷிக்க ஆசைப்பட்டு, மிகவிரும்பும் சொல்லை-மிக்க ஆதரத்தோடு அருளிச்செய்த இப்பத்துப்பாட்டையும், துதிக்கவல்லார்கள் - சொல்லவல்லவர்கள், துன்பக்கடலுள் - ஸம்ஸாரமாகிற துஃகஸாகரத்திலே கிடந்து, துவளார் - துவளமாட்டார்கள்.

வ்யா.—நிகமத்தில். (அல்லல்விளைத்த பெருமானை) (க) "ப³ஹவோ ந்ருப கல்யாணகு³ணா: புத்ரஸ்ய ஸந்தி தே" "பஹவோந்ருப கல்யாணகுணாঃ புத்ரஸ்யஸந்திதே" என்று - திருவயோத்யை ராமகுணங்களிலே கையடியுண்டு மற்றொன்றறியா திருக்குமாப்போலே யாய்த்துத் திருவாய்ப்பாடியிலுள்ளார் க்ருஷ்ணன்தீம்பிலே கையடியுண்டார்களா யிருக்கும்படி. ஊரை மூலையடியே நடந்து "வெண்ணெய் பெண்கள் இவை களவுபோய்த்து, (உ) "பாலும் பதின்குடங் கண்டிலேன்" என்று சொல்லும்படி பெரிய ஆரவாரத்தைப் பண்ணியாய்த்து வர்த்திப்பது. (ஆயர்பாடிக் கணிவிளக்கை) இவன் தீம்புக் கிலக்காகாதபோது ஊராக இருண்டாய்த்துக்கிடப்பது. ராமகுணங்கள் வேம்பாய் இவன் தீம்புகள் கரும்பாய், ப்ரகாஶத்தையும் பண்ணவாய்த்துத்திரிவது. (வில்லிபுதுவை யித்யாதி) இவளுடைய விருப்பத்தில் ஊற்றமாய்த்துச் சொல்லித் தலைக்கட்டப் பார்க்கிறது. இவ்வளவான ப்ராவண்யாதி ஶுபத்துக்கெல்லாம் வாய்க்கலை பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்பாய்த்து.

(வில்லைத்தொலைத்த புருவத்தாள்) தன்னோடு ஸாம்யங்கொண்டாடி யிருக்கு மவையெல்லாம் அழிக்கும்படியா யாய்த்து அவயவஶோபையிருக்கும்படி. வில்தான் ஒப்பாகப் போராதபடியான புருவத்தை யுடையவள். (வேட்கையுற்று மிகவிரும்புஞ்சொல்லை) அபிநிவேஶமானது விஞ்சி, அதுதான் (ங) "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்கிறபடியே-ஆஶ்ரயத்தளவல்லாதபடி அபிநிவேஶத்தை யுடையளாய்ச் சொன்ன வவளுடைய பாசுரத்தை.

---

பத்தாம்பாட்டு.—நிகமத்தில் (கையடியுண்டு)-ஈடுபட்டு. (வார்த்தை-பண்) வார்த்தை ப்ரகாரத்துக்கு, அடியாக - ஹேதுவாக. ப்ரபந்தங்களிலே சொல்லுகிற ஸ்ரீஸூக்திகளுக்கு ஹேதுவாய்த்து அவன் வ்யாபாரமென்றபடி. (இவன் தீம்புகள் கரும்பாய், ப்ரகாஶத்தையும்) என்ற ஸமுச்சயத்துக்குச்சேர "அணிவிளக்கு" என்று பதத்தைப் பிரித்துக்கொள்வது.

---

(க) ரா - அ - உ - உசு. (உ) தி - மொ - கo - எ - உ.
(ங) உ - திருவ - கoo.

"பகவதநுபவம் வழிந்து புறப்பட்டசொல்" என்றுதோற்றும்படியிருக்கை. (சொல்லைத் துதிக்கவல்லார்கள்) இவன் இப்போதாக இவளுடைய விருப்பத்தை ஸம்பாதிக்கவென்றால் செய்யப்போகாதே. அப்படி பாவபந்தமுடையளாய்ச் சொன்ன வவளுடைய பாசுரத்தைச் சொல்லவமையும். (துன்பக்கடலுள் துவளாரே) ஸம்ஸாரமாகிற து:கஸாகரத்திலே, மிருதுவாயிருப்பதொரு கொழுந்தை அக்நியிலே யிட்டாப்போலே, துவண்டு நோவுபடாதே, இவள்பட்ட க்லேஶமே க்லேஶமாக இவள் பாசுரமாத்ரத்தைச் சொன்னவர்கள் இவளாசைப்பட்ட பொருள் பெறுவார்கள். ௧0.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பதின்மூன்றாம் திருமொழி முற்றிற்று.

---

## பதினாலாந்திருமொழி

# பட்டிமேய்ந்து - ப்ரவேஶம்.

———(:o:)———

அவ.—ப்ராப்யப்ராபகங்களை நிஷ்கர்ஷித்து அந்த ப்ராப்யத்தை அப்போதேலபிக்கப் பெறாமையாலே கண்ணைஞ்சுழலையிட்டுக் காமன்காலிலே விழுந்து, அநந்தரம் சிற்றிலிழைத்து, பணிநீராடி, கூடலிழைத்து, குயில்வார்த்தைகேட்டு, ஸாக்ஷாத்கரிக்க வேணுமென்னும் ஆசைபிறந்து அப்போதே கிடையாமையாலே ஸ்வப்நாநுபவத்தாலே தரித்து, அதுதான் விஶதமாயிராமையாலே அவ்வநுபவத்துக்கு தேஶிகரான ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானை வார்த்தைகேட்டு, மேகதர்ஶநத்தாலே நொந்து அம்மேகங்களை வார்த்தைகேட்டு, ராமாவதாரத்துக்கு அங்குநின்றும் வந்த திருவடி தன்னையே தூதுவரவிட்டாப்போலே அம்மேகங்கள் தன்னையே தூதுவிட்டு, அவ்வர்ஷாவில் பதார்த்தங்கள் அவனுக்கு ஸ்மாரகமாய் பாதிக்க வொருப்பட்டபடிசொல்லி. அதைதான்முருகநின்று

---

இவன்பேர்க்க இச்சேதனன் இப்பாசுரத்தைக் கற்றனென்றால். ௧0.

ஜீயர் திருவடிகளே ஶரணம்

நலிந்தமைசொல்லி, பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பிலும் அவன் (க) "ஸத்யஜேயஸ்" "நத்யஜேயம்" என்ற வார்த்தையிலும் அதிஶங்கைபண்ணி, அவன் வார்த்தை பொய்யானாலும் "பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்பு நமக்குத் தப்பாது பலிக்கும்" என்று அத்யவஸித்து. அவன்படியாலு மிழக்கவேண்டா வென்று தெளிந்து, பின்னையும் இழவோடே தலைக்கட்டி அதுவும் பலியாமையாலே தானேபோக வொருப்பட்டுத் தனக்குக்கால்நடை தாராதபடி பலஹாநிமிக்குக் கால்நடை தருவாரை "என்னை அத்தேஶத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள்" என்றும், "அது மாட்டிகோளாகில் அவனோடு ஸ்பர்ஶமுள்ள தொருபதார்த்தத்தைக்கொடுவந்து என்னை ஸ்பர்ஶிப்பித்து ஆஶ்வஸிப்பியுங்கோள்" என்றும் நின்றது - கீழ்;

முதல்தன்னிலே அவனே ரக்ஷகனென்று அத்யவஸித்திருக்கும் குடியிலே பிறக்கச்செய்தேயும் தானே நோற்றுப் பெற வேண்டும்படியிறே இவளுக்குப் பிறந்தவிடாய். இப்படிப்பட்ட விடாயை யுடையளாய் இவள்தான் ப்ராப்யப்ராபகங்க ளவனே என்னுமிடம் நிஷ்கர்ஷித்து, அநந்தரம்பெற்றல்லது நிற்கவொண்ணாதபடியா யாய்த்துப் பிறந்த தஶை.

இவ்வளவாற்றாமை பிறக்கச்செய்தேயும் "அவ்வருகில் பேறு ஸாதிக்கும்போது இன்னம் இதுக்கவ்வருகேயொருபாகம் பிறக்க வேணும். ஆமத்தில் சோறுபோலே யாகவொண்ணாது. பரமபக்தி பர்யந்தமாகப் பிறப்பித்து முகங்காட்டவேணும்" என்று அவன்

அரு;—பட்டிப்ரவேஶே. திருப்பாவையில் ப்ரமேயம் (ப்ராப்யப்ராபகங்களையித்யாதி.) "நல்லவென்தோழி" இத்யாதியைப்பற்ற (பெரியாழ்வாரித்யாதி.) (அவன்படியாலும் இழக்கவேண்டாவென்று தெளிந்து) என்றது - "செம்மையுடைய - மெய்ம்மைப் பெருவார்த்தை" என்றத்தைப்பற்ற, (பின்னையும் இழவோடே தலைக்கட்டி) என்றது - "தம்மையுகப்பாரை" இத்யாதியைப் பற்ற.

ப்ரபந்நகுலத்திலே பிறந்தவளுக்கு இத்தனை ஸ்வயத்நங்கூடுமோ, கீழில் திருமொழிகளில் ப்ரமேயமெல்லாவற்றையும் நிகமிக்கிறதுக்குக் கருத்தென்னென்ன ; அருளிச்செய்கிறார் (முதல்தன்னிலேயித்யாதி.)

இத்தனை ஆற்றாமை பிறந்தால் முகங்காட்டாதிருப்பானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (இவ்வளவாற்றாமை இத்யாதி.)

(க) ரா - யு - கஅ - ௩.

தாழ்க்க; அநந்தரம் ஆற்றாமை கரைபுரண்டு பெறில் ஜீவித்தும் பெறுவிடில் முடியும்படியாய், நிர்ப்பந்தித்தாகிலும் பெறவேண்டும் படியாக; (க) "என்னவாவறச் சூழ்ந்தாய்" என்கிறபடியே அவனும்வந்து முகம்காட்டி விஷயீகரிக்க; பிறந்தவிடாயும் அதுக்கநுரூபமாகப் பெற்றபேறும் ஓராஶ்ரயத்திலிட்டுப் பேசவொண்ணாதபடி அளவிறந்திருக்கையாலே "கண்டீரே" என்று கேட்கிறவர்கள் பாசுரத்தாலும், "கண்டோம்" என்று உத்தரம் சொல்லுகிறவர்கள் பாசுரத்தாலும் தனக்குப் பிறந்தவிடாயையும் பெற்றபேற்றையும் அந்யாபதேஶத்தாலே தலைக்கட்டுகிறாள்.

இங்குப்பிறந்த பக்தியில் ஸாதநவ்யபதேஶத்தைத் தவிர்த்ததித்தனைபோக்கி ஆசையுங்குறைக்கவொண்ணாதே; அது குறைந்ததாகில் முதலிலேப்ராபகஸ்வீகாரந்தான் பிறவாதே. இனி இதினுடைய அருமையாலேசெய்து தலைக்கட்ட வரிதென்னுமத்தைப்பற்றவும் ஸ்வரூபஜ்ஞாநமுடையவனுக்கு ஸ்வரூபத்துக்கநுரூபமென்னுமத்தைப்பற்றவும் தவிர்த்த தித்தனைபோக்கி வஸ்துவினுடைய குணாதிக்யத்தையும் தவிர்ந்ததன்றே; ஸமஸ்த கல்யாண குணாத்மகமாயிருந்துள்ள விஷயமே உபாயமாகிறது, அக்குணங்கள்தான் ப்ராப்யமாகையும் தவிராதே. (உ) "[illegible]" "ஸோஶ்நுதே" என்கிறபடியே - அவ்வருகுபோனாலும் அநுபாவ்யமாகிறது இக்குணங்களிறே.

---

ஆஶ்ரயத்தில் ஒருக்தியாகப்பேஶ. ஸித்தஸாதநநிஷ்டையானவளுக்கு ஆற்றாமை ஸாதநமாகாதோவென்ன; அருளிச்செய்கிறார் (இங்குப்பிறந்த வித்யாதி.) ஆசைபிறவாவிட்டால் வரும் ஹாநியேதென்ன; அருளிச்செய்கிறார் (அதுகுறைந்ததாகிலித்யாதி.) (பிறவாதே) ஸாதநமானவிந்த பக்திதானே உபாயமாகையாலே என்றபடி. இப்படிப்பட்ட பக்திதான் த்யாஜ்யமாகைக்கும் உபாதேயமாகைக்கும் ஹேது வேதென்ன; அருளிச்செய்கிறார் (இனி இதினுடைய வித்யாதி) ஸ்வயத்நத்தாலே வருமது த்யாஜ்யம், வஸ்துவைலக்ஷண்யத்தாலேவரும் பக்தி உபாதேயமென்றபடி. அன்றிக்கே, ஶாஸ்த்ரங்கள் இத்தை த்யாஜ்யமென்று நிஷேதித்திருக்க ப்ரீதிரூபத்வம் சொல்லுகிறபடி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (இதினுடையவென்று,) அதாவது - அவன் குணாதிக விஷயமாகையாலே ப்ரீதிரூபத்வம் கூடுமென்றபடி. குணாதிக்யம் எல்லா வவஸ்தையிலு முண்டோவென்ன; அருளிச்செய்கிறார். ([illegible] - ஸமஸ்தகல்யாண குணாத்மகேத்யாதி.)

---

(க) தி - வாய் - க௦ - க௦ - க௦. (உ) தை - ஆ - க.

பிறந்த பக்தியும் அந்த பக்திக்கநுரூபமாகப் பெற்றபேறும் ஓராஸ்யத்திற் கிடக்குமளவல்லாமையாலே "கண்டீரே" என்று-கேட்கிறவர்கள் பாசுரத்தாலும், "கண்டோம்" என்று-சொல்லுகிறவர்கள் பாசுரத்தாலுமாகத்தான் பெற்றபேற்றைச்சொல்லித் தலைக்கட்டுகிறது. திருவாய்ப்பாடி வ்ருத்தாந்தத்தைச்சொல்லுகையாலே அந்யாபதேஸமாகையும் தவிராது; ஆனாலும் "விட்டுசித்தன் கோதைசொன்ன" என்கிறதுவும் தவிர்க்கவொண்ணாது. *

அவ —முதற்பாட்டு (பட்டியித்யாதி) * வானிளவரசாய், (க)"விண்ணாட்டவர்மூதுவர்" என்று சொல்லுகிறவர்கள் நியமிக்க அவர்களாலே நியாம்யனாய். அவர்கள் * சூட்டு நன்மாலைகள் தூயன வேந்தித் தங்கள் ஸ்வரூபத்துக் கநுரூபமாம்படி போதுபோக்கியிருக்கிறவளவிலே, "திருவாய்ப்பாடியிலே வெண்ணெய் திரளாநின்றது" என்றும், "நப்பின்னைப்பிராட்டி ப்ராப்தயௌவனையானாள்" என்றும் கேட்டு அவ்விருப்பு உண்டாநக்காட்டாதே இங்கே வந்தவதரித்து, ஸ்ரீ ப்ருந்தாவநத்திலே ஸ்வைரஸஞ்சாரம் பண்ணி அத்தாலே தன்னிறம்பெற்றுத் திரிகிறபடி.

மூ —பட்டிமேய்ந்தோர்காரேறு பலதேவற்கோர்கீழ்க்கன்றாய்
இட்டீறிட்டுவிளையாடி இங்கேபோதக்கண்டீரே?
இட்டமானபசுக்களை இனிதுமறித்துநீரூட்டி
விட்டுக்கொண்டுவிளையாட விருந்தாவநத்தேகண்டோமே (க)

ப - ரை. ஓர் - ஒப்பற்று, கார் - கறுத்திருந்துள்ள, ஏறு - ரிஷபம் போலே, பட்டிமேய்ந்து - ஸ்வேச்சாஸஞ்சாரம் பண்ணுமவனாய், பலதேவற்கு - நம்பி மூத்தபிரானுடைய, ஓர் - ஒப்பற்ற, கீழ்க்கன்றாய்-திருத்தம்பியாய், இட்டீறிட்டு - சபதம்பண்ணி, விளையாடி—, இங்கேபோத - இங்கேவர, கண்டீரே - பார்த்தீர்களோவென்ன ; இட்டமான - தனக்கு இஷ்டமான, பசுக்களை—,

---

தானன்றே சொல்லுகிறாள், இது அந்யாபதேஸமானபடி யெப்படியென்ன ; அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியித்யாதி.) அதாவது-"விருந்தாவநத்தேகண்டமைவிட்டுசித்தன் கோதைசொல்" என்கையாலே - அவர்களவஸ்தையை ப்ராப்தையான ஆண்டாள்சொன்னாளென்னலாமிறே. ... *

அரு ;—முதற்பாட்டு. "பட்டி" - களவு. பட்டிமேய்கையாலே, "கார்" என்கையாலே * வானிள வரசில் வ்யாவ்ருத்தி. "வானிளவரசாய்" என்று நாதர்திகள் சொல்லக்கேட்டென்றபடி.

---

(க) திருவி - உ.

இனிது - இனிதாக, மறித்து-மடக்கிமேய்த்து, நீரூட்டி - தண்ணீர் குடிப்பித்து, விட்டுக்கொண்டு - அவைகளை மேயவிட்டுக்கொண்டு, விளையாட —, விருந்தாவநத்தே - ஸ்ரீப்ருந்தாவநத்திலே, கண்டோம் -பார்த்தோமென்கிறார்கள்.

வ்யா.—(பட்டிமேய்ந்து) பரமபதத்தில் கட்டுண்டிருப்பாரோபாதியாய், ஸ்வைரஸஞ்சாரம்பண்ணுவது அவதரித்துப் போந்தவிடத்தே யாய்த்து. (க) "'வானிளவரசு' என்கிறபடியே - திருவநந்தாழ்வான் மடியிலும், ஸ்ரீஸேநாபதியாழ்வான் பிரம்பின் கீழிலும், பெரிய திருவடி சிறகின்கீழிலுமாய்த்து இத்தத்வம் வளருவது" என்றாய்த்து பட்டாருளிச்செய்வது. ஆனை கருப்பந்தோட்டத்தைப் புக்கால் திரியுமாப்போலேயாய்த்து இவனும் ஊரை மூலையடியே திரியும்படி. பரமபதத்தில் நூல்பிடித்துப் பரிமாறுவதுபோலன்றிக்கே, "வெண்ணெய் களவுபோய்த்து, பெண்கள் களவுபோய்த்து" என்னும்படியாக வாய்த்து மர்யாதைகளை யழித்துக்கொண்டு திரியும்படி. (ஓர்காரேறு) அபிமதலாபத்தாலே அத்விதீயனாய்த் தன்னிறம் பெற்று மேனாணித்திருக்கு மிருப்பு; பரம்பதத்தில் உடம்பு வெளுத்துப்போம்ல காணு மிருப்பது.

(பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்) வாஸனை யிருக்கிறபடி. பெண்களளவிலே தீம்புசெய்து திரியுமவன் இவனளவிலே பவ்யனாயிருக்கும். தனக்கு அபிமதமான விஷயங்களிலே சேரவிடுகைக்கு கடகனுகையாலே அவன் நினைவின்படியே யாய்த்துத் திரியும்படி. பெருமாளும் பிராட்டியு மாய்ப் பள்ளிகொண்டருளும் போது இளையபெருமாள் கையும வில்லுமா யுணர்ந்து நின்று நோக்கி, (உ)"[illegible]" "ரமமாணு:" என்கிறபடியே இருவரு

ஸூரிகளுக்குப்பாதந்த்ரனாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (வானிளவரசென்கிறபடியே யித்யாதி.) ஸ்வைரஸஞ்சாரம்பண்ணுவது என்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (ஆனையித்யாதி.) (மூலையடியே திருயும்படி) என்னுமத்தை உபபாதிக்கிறார் (பரமபதத்திலித்யாதி.)

ஸ்வைரஸஞ்சாரம் பண்ணப்போந்த விடத்தே இவர்க்குப்பாதந்த்ராக வேண்டுகிற தென்னென்ன அருளிச்செய்கிறார் (வாஸனையிருக்கிறபடி) என்று. வாஸனை-பரமபதத்தில் வாஸனை. (கீழ்க்கன்று) தம்பி. ஹேத்வந்தரம் (பெண்களளவிலேயித்யாதி.) இவர்கடகாரகக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (பெருமாளுமித்யாதி.) அதாவது - இளயபெருமாளைப்போலே இவர்க்கு க்ருஷ்ணனிடத்திலே ஸர்வேஶ்வரத்வப்ரதி பத்தி யுண்டாகையாலே கூடும்.

(க) பெரி - தி - ரு - சு - ரு. (உ) ரா பா - க - ருக.

மான கலவியில் பிறக்கும் ஹர்ஷத்தில் மூவராகச் சொல்லலாம் படி அந்வயித்து அவர்களுடைய ஸம்ஶ்லேஷத்துக்கு வர்த்தகரா யிருக்குமாப்போலே. க்ருஷ்ணன் தீம்பாலே ஏறுண்ட பெண் கள் நெஞ்சில் மறத்தைத் தன் இன்சொல்லாலே பரிஹரித்து, (க) "ராமேண ஸ்வாஸிதா கோப்ய:" "ராமேண ஸ்வாஸிதாகோப்ய:" என்கிறபடியே - அவர்களை ஆஶ்வஸிப்பித்துப் பொருந்தவிடுகை யாலே இவனளவில் பவ்யனாய்த்திருப்பது. இவன்றான் அவன் நினைவின்படியே திரியுமவனுமாய் ஓரளவில் நியமிக்கவும் கடவனா யாய்த்திருப்பது. (உ) "தன்னம்பியோடப் பின்கூடச்செல்வான்' என்னக்கடவதிறே. இவன்றான் ஓரடி பிற்படவிறே பாம்பின் வாயிலே விழுந்தது.

(இட்டீறிட்டு) இச்சேதநன் முக்தனானால் பகவதநுபவத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு (ங) "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" என்று - ஸாமகாநம் பண்ணுமாப் போலே, அவன்றான் இங்கே வந்தவதரித்து இப்பரிமாற்றத் தைப் பெறுகையாலே வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுப் பண்ணும் வ்யாபாரமிருக்கிறபடி. கீழே "ஏறு" என்று - ஜாத் யுசிதமாகப் பண்ணும் வ்யாபாரமிருக்கிறபடி. (ச) "'அவாக்யநாதர:' 'அவாக்யநாதர:, என்கிற தத்வம்' 'இட்டீறிட்டு' என்னும்படி யிருப்பதே! என்று சிறியாத்தான் போரவித்தராயிருக்கும்" என்று அருளிச்செய்வர். (விளையாடி) அச்செருக்குக்குப் போக் குவிட்டுப் பண்ணும் லீலையைச் சொல்லுகிறது. இதுதானே யிறே ப்ரயோஜநம். (இங்கேபோத) அங்கேபோனாலும் பெற வரிய பரிமாற்றத்தை அவன் இங்கே பரிமாறக் காணப்பெற்று ருண்டோ?;

---

இவன் சேரவிடும் ப்ரகாரத்தைக் காட்டுகிறார் (க்ருஷ்ணன் தீம்பாலேயித் யாதி-) ஆனால் வரவுக்கு நியாமகமில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (இவ ன்றானித்யாதி.) க்ருஷ்ணன் நியாமகனா யிருக்குமதுக்கு ப்ரமாணம் காட்டாமல் நியாம்யனாயிருக்குமதுக்கு ப்ரமாணம்காட்டுகிறார் (தன்னம்பியோடவித்யாதி.) நியாம்யனன்றிக்கே யிருந்தால் வரும்ஹாநியே தென்ன; அருளிச்செய்கிறார் (இவன்றான் ஓரடியித்யாதி.)

"இட்டீறு" - செருக்கால் வந்தவ்யாபாரம். இட்டீறிடுகை - ஶபதிக்கை; ஆனால் ஏகஶப்தத்தாலே சொல்லுவானென்னென்ன (கீழே) என்று.

---

(க) வி - பு - ரு - உச - உ0. (உ) பெரி - தி - க - அ - ரு.
(ங) தை - ப்ருகு. (ச) சாந்தோ - ங - கச - உ.

கண்டவர்கள் பாசுரமாயிருக்கிறதுமேல் ;-(இட்டமான பசுக்களை) யுவாக்களானவர்கள் அபிமதவிஷயத்திலும் கடகரை விரும்பியிருக்குமாப்போலே, இவனும் பசுக்களையாய்த்து விரும்புவது. * ஆகள்போகவிட்டுக் குழலூதவேணுமே. "நீ தாழ்த்ததென்" என்று மாதாபிதாக்கள் கேட்டால் "பசுக்களின் பின்னேபோனேன்" என்று சொல்லலாம்படி தனக்கு ஒதுங்க நிழலாயிருக்குமிறே அவை. (இட்டமான பசுக்களை) "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்கிறபடியே பரமபதத்திலுங்காட்டில் பசுக்களை மேய்க்குமத்தையாய்த்து விரும்பியிருப்பது. அவ்விருப்பிலும் வாய் வெருவிக்கிடப்பதும் கணுக்காண்பதுவும் இப்பசுக்களையாய்த்து.

(இனிதுமறித்து) இருவராகக்கலந்து பரிமாறுநின்றால் எதிர்த்தலையினுடைய நாமக்ரஹணம் பண்ணினால் அது ப்ரீதியாயிருக்குமாப்போலே யாய்த்து இவற்றின்பேரைச்சொல்லி யழைத்தால் அவற்றுக்கு ப்ரியமாயிருக்கும்படி. லோகத்திலே சேதநர் அஸங்க்யேபரா யிருக்கச்செய்தேயும் எல்லாருடையவும் * நாமரூப வ்யாகரணம் பண்ணுமாப்போலே. (நீரூட்டி) அவற்றுக்குத் தண்ணீர் பருகுகை அபேக்ஷிதமானால்தான் அரைமட்டுநீரிலே யிழிந்து பின்னே கையைக்கட்டிக் குனிந்துநின்று தண்ணீர்பருகக்காட்டுமாய்த்து இவன், பின்னை அவையுங்கூடக்குடிக்கும் ; (க) * தடம்பருகு கருமுகிலிறே. (உ) [ஸர்வத்ரைவாஸ்ய வர்த்தே ப்ரதநுவர்த்தே - ஸயத்ப்ரமாணம்குருதே லோகஸ்ததநுவர்த்ததே] காரயிதருத்வமி

பசுக்களோ இஷ்டம், பெண்களன்றோவென்ன ; அருளிச்செய்கிறார் (யுவாக்களித்யாதி.) பசுக்கள் கடகராகையைத்விவிதமாக வருளிச்செய்கிறார் (ஆகள்போகவித்யாதி.) இவை இஷ்டமென்கைக்குஹேத்வந்தரம் (நீதாழ்த்ததென்னித்யாதி.) இந்தஹேதுத்வயத்தாலே இந்த இஷ்டதையின் சரமாவதியைக்காட்டுகிறார் (திவத்திலும்) என்று.

"இனிது மறித்து" என்றதுக்கு - அவற்றுக்கினிதாம்படி அழைத்து என்றாக்கித் தாத்பர்யம் (இருவராகவித்யாதி.) "பசுக்களை" என்று பஹுவசநமா யிருக்க, எல்லாவற்றையும் மறிக்கக்கூடுமோ வென்ன ; அருளிச்செய்கிறார் (லோகத்திலேயித்யாதி.) "நீரூட்டி" என்றகாரயித்ருத்வத்துக்குத் தாத்பர்யம் (அவற்றுக்கித்யாதி.) அவன் குடிக்குமென்னு மதுக்கும், அத்தைக் கண்டு அவைகுடிக்குமென்னுமதுக்கும் ப்ரமாணத்வய மருளிச்செய்கிறார்

(க) தி - மொ - உ - ரு - ந. (உ) கீ - ங - உக.

ருக்கிறபடி. (க)“கன்றுமேய்த்து” இத்யாதி. *தடாகத்திலே ஒரு மேகம்படிந்தாப்போலே யாய்த்திருப்பது.

(விட்டுக்கொண்டு விளையாட) அபிமத ஸித்தியாலே தன் மேன்மை பாராதே, திருக்குழல்பேணாதே, திருப்பரியட்டம் பேணாதே, ஸ்வைரஸஞ்சாரம் பண்ணாநிற்கும்; அவைமேய்ந்து தண்ணீரும் பருகுகையாலே பின்னைத்தனக்கொரு கர்த்தவ்யாம் ஶமில்லை. நிரபேக்ஷனுக்கிறே லீலையில் அந்வயமுள்ளது. இந்த லீலைதானேயிறே ப்ரயோஜநமும். (விருந்தாவநத்தே கண்டோமே) ஸ்ரீவைகுண்டத்திலே கண்டாப்போலே யிருப்பதொன்றிறே திருவாய்ப்பாடியிலே காணுங்காட்சி. செருக்கராயிருக்கும் ராஜாக்கள் போகத்துக்கு ஏகாந்தமான ஸ்தலங்களிலே மாளிகை சமைத்து அபிமத விஷயங்களும் தாங்களுமாய் புஜித்தாப்போலே யிருப்பதொன்றிறே ஸ்ரீ ப்ருந்தாவநத்தில் பரிமாற்றம். க.

மூ.—அனுங்கவென்னைப்பிரிவுசெய்து ஆயர்பாடிகவர்ந்துண்ணும்
குணுங்குநாறிக்குட்டேற்றைக் கோவர்த்தனனைக்கண்டீரே?
கணங்களோடுமின்மேகம் கலந்தாற்போல்வனமாலை
மினுங்கநின்றுவிளையாட விருந்தாவநத்தேகண்டோமே. (உ)

ப - ரை.—அனுங்க - நான்நடுங்கும்படியாக, என்னை—, பிரிவுசெய்து - பிரித்துவைத்து, ஆயர்பாடி - திருவாய்ப்பாடியிற் பெண்களுடையமநஸ்ஸை, கவர்ந்து - அபஹரித்து, உண்ணும் - அவர்களை புஜிக்குமவனாய், குணுங்கு - முடைநாற்றம், நாறி - வீசாநின்றுள்ள, குட்டேற்றை - சேங்கன்றையொத்தவனாய், கோவர்த்தநனை - பசுக்களை வ்ருத்திசெய்து போருமவனான க்ருஷ்ணனை, கண்டீரே-பார்த்தீர்களோ வென்ன; மின்- மின்னலும், மேகம் - மேகமும், கலந்தாற்போல்-கலந்து வர்த்திக்குமாப்போலே, கணங்களோடு - தன்தோழன்மாரான * தன்னேராயிரம் பிள்ளைகளோடே, வநமாலை - வநமாலையானது, மினுங்கநின்று-விளங்கும்படிநின்று, விளையாட, விருந்தாவநத்தே கண்டோம்—.

(தடம்பருகித்யாதி.) பசுமேய்க்கை யினிதாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (கன்றுமேய்த்தித்யாதி.)

மேய்க்கிறவனுக்கு விளையாட்டுக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (அவைமேய்ந்தித்யாதி.) பலவேளையில் வைகுண்டத்திலே காணவேண்டாவோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டத்திலித்யாதி.) க

(க) திருநெ - கசு.

வ்யா.—இரண்டாம் பாட்டு. (அனுங்க) நான் ஜீவியாதபடியாகப் பிரிவை விளைத்து. "பிரியேன், பிரியலாற்றேன்" என்று சொல்லிவைத்திறே பிரிவது. இன்னம் ஒருக்கால் காணலாமோ வென்னும் ஆசையாலே ஜீவிக்கவும்வேண்டி முடியவும் பெறாதே நோவுபடுகிறபடி. (என்னை) பிரிவேயெருவாகப் பணைக்கைக்குத் தான் என்றிருந்தானே என்னையும். (ஆயர்பாடி கவர்ந்துண்ணும்) பட்டிமேயும்படி தன்னைச் சொல்லுகிறது. அகங்களில் சிறை செய்துவைத்தவற்றையே யாய்த்து விரும்பி யமுதுசெய்வது. தன்னை யாசைப்பட்டாரை உபேக்ஷித்துப் போந்தான். இப்போது ஆசைப்பட்டிறே நோவுபடுகிறது.

(குணுங்குநாறி) முடைநாற்றம். அநுபவிக்கவேணும்போலே காணும் இவள்தானாசைப்பட்டிருப்பது. (க) [தீக்ஷிதம் - தீக்ஷிதம்] திருமேனியிலே பூசின வெண்ணெயும், போர்த்தவுறப்புத்தோலும், யஜமாநவேஷம் தோற்றும்படியாக விருக்கும்படி. [வ்ரதஸம்பந்நம் - வ்ரதஸம்பந்நம்] ரிஷிசொன்னவளவன்றிக்கே, அவன் ஒரு பட்டினி விடச்சொல்லுமாகில் தாம் இரண்டு பட்டினி விடுவர். [வராஜிநதரம் - வராஜிநதரம்] நல்ல பரியட்டங்கள் சாத்துமதின்றிக்கே வராஜிநதரராயிருப்பர். [ஶுசிம் - ஶுசிம்] ஒருவரையும் ஸ்பர்ஶிக்கலாகாது. பிராட்டியொருத்தியையும் செய்யலாவதில்லையிறே யென்றால் அவள்தன்னை ஸ்பர்ஶிக்கிலும் அடுத்தடுத்து முழுகாநிற்பர்; இதுக்கெதிர்த்தட்டிறே (உ)"கறையினார் துவருடுக்கை" இத்யாதி. அவன் விரும்பாத ப்ரஹ்மசாரிநிறத்தாலென்ன ப்ரயோஜநமுண்டு; இப்படியே குணுங்குநாற்றமாய்த்து இவளுகப்பது. (குட்டேற்றை) அபிமதலாபத்தாலே மேனாணித்திருக்கும்படி. (கோவர்த்தநனை) பெண்களை வெறுந்தறையாக்கி, பசுக்களை, அபிவ்ருத்தமாக்கும் - ஒன்று நூறாயிரமாக்கும்.

---

இரண்டாம்பாட்டு. (அனுங்கவித்யாதி) "அநுங்க" - நடுங்க. "அநுங்க" என்று-விநாஶமாதல்; நோவுபாடாதல். அனுங்க வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பிரியேனித்யாதி,) இரண்டாமர்த்தத்திலேநோக்காகத் தாத்பர்யம் (பிரிவேயித்யாதி.) "ஆயர்பாடி" - ஆயர்பாடியிலுள்ள பெண்களை. "குட்டேறு"-இளரிஷயம். இப்படி ஜாத்யுசிதமான நாயகவேஷத்தை யாசைப்பட்டபேருண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (தீக்ஷிதம்-தீக்ஷிதமித்யாதி.)

---

(க) ரா - அ - கசு - உந.  (உ) தி - வாய் - ச - அ - ச.

(கணங்களோடு) * தன்னோராயிரம் பிள்ளைகளோடே. (மின்னித்யாதி) மின்னும் மேகமும் சேர்ந்தாப்போலே யாய்த்து ஶ்யாமமான திருமேனிக்கு பாபாகமாய் உஜ்வலமான வநமாலையானை ந்து வரும்படியாக. மாலையிடுவான் இவனுக்கு பவ்யனுயிறே யிருப்பது. “கர்ப்பதாஸர்” என்னுமாப்போலே. (விளையாட விருந்தாவநத்தே கண்டோமே) இம்மாலையிட்டால் விக்ருதராயிருக்கும் திருவாய்ப்பாடியிலே காண்கையன்றிக்கே, ஸ்ரீப்ருந்தாவநத்திலே ஸ்வைரஸஞ்சாரம்பண்ணி விளையாடக் கண்டோம். உ.

மூ.—மாலாய்ப்பிறந்தநம்பியை மாலேசெய்யும்மணாளனை
ஏலாப்பொய்களுரைப்பானை இங்கேபோதக்கண்டீரே?
மேலாற்பரந்தவெயில்காப்பான் வினதைசிறுவன்சிறகென்னும்
மேலாப்பின்கீழ்வருவானை விருந்தாவநத்தேகண்டோமே. (௩)

ப - ரை.—மால் - பெண்கள்பக்கலுண்டான ஆசைதானே, ஆய் - ஒரு வடிவாய்க்கொண்டு, பிறந்த - திருவவதரித்தவனாய், நம்பியை - ஸகலகல்யாண குணபரிபூர்ணனாய், மாலேசெய்யும்-யாவரும் தன்னை ஆசைப்படும்படி பண்ணுமவனாய், ஏலா - பொருந்தாத, பொய்களுரைப்பானை - பொய்களைச்சொல்லுமவனாய், மணாளனை- என்னைத் திருமணம்புணருகைக்கு யோக்யவனானவனை, இங்கேபோத-இங்கேவர, கண்டீரே -பார்த்தீர்களோவென்ன ; மேலால்-மேலே, பரந்த - பரவின, வெயில் - வெய்யிலானது, காப்பான் - திருமேனியில் உறையாமேகாக்கைக்காக, விநதை - விநதையென்பவளுடைய, சிறுவன் - பிள்ளையான பெரியதிருவடியுடைய, சிறகென்னும் - சிறகென்றுசொல்லப்படுகிற, மேலாப்பின்கீழ் - மேற்கட்டியின்கீழே, வருவானை - விளையாடிக்கொண்டு வருகிற க்ருஷ்ணனை, விருந்தாவனத்தே கண்டோம்—.

வ்யா.—மூன்றாம் பாட்டு. (மாலாய்ப்பிறந்த) பெண்கள்பக்கல் வ்யாமோஹந்தான் ஒரு வடிவு கொண்டாப்போலே யாய்த்திருப்பது. க)“ஸத்யம்ஜ்ஞாநம்” “ஸத்யம்ஜ்ஞாநம்” என்னுமாப்போலே.

மாலாகாரர்என்னுமல் “மாலையிடுவான்” என்பானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (கர்ப்பதாஸரித்யாதி.) (மாலையிடுவான்) இத்யாதி வாக்யத்வயத்துக்குத் தாத்பர்யம் - தானும் மாலாகாரர்மகளாகையாலே தானிட்டமாலையும் சாத்திக்கொண்டு அவன் விளையாடு மென்றிருக்கிறாள் என்றருளிச்செய்வர். உ.

மூன்றாம்பாட்டு. (மாலாயித்யாதி) மால்-ஈஶ்வரன். தர்ம்மியை தர்ம்மமாகச் சொன்னவிடமுண்டோவென்ன ; அருளிச்செய்கிறார் (ஸத்யம்ஜ்ஞாநம்-ஸத்யம் ஜ்ஞாநமித்யாதி.)

(க) தை - ஆ - க.

(நம்பியை) இதோருப்லக்ஷணமாத்ரமாய், சொல்லிச்சொல்லாத குணங்களால்பூர்ணனாயிருக்கை. (மாலேசெய்யும்) (க) "𑌤𑍇𑌨 𑌤𑍇𑌤𑌮𑌨𑍁𑌵𑍍𑌰𑌤𑌾𑌃" "தேநதேதமநுவ்ரதா:" என்னுமாப்போலே தன்னுடைய வ்யாமோஹத்தைக்காட்டியாய்த்து இத்தலைக்கு வ்யாமோஹத்தைவிளைப்பித்தது. (மணாளனை) தன்னுடைய செவ்விகொள்ள இட்டுப் பிறந்தான் அவன் போலேகாணும்.

(ஏலாப்பொய்களுரைப்பானை)· ஒற்று மஞ்சளும் மாளிகைச்சாந்துமாய்வந்தால் "இதெல்லாமெங்கிலும் பெற்றாய்" என்றுகேட்டால், "மற்றுண்டோ, நான் புறம்பறிவேனோ" என்னும். மெய்சொல்லுகை தேட்டமாகில் ராமாவதாரத்திலே போகவமையாதோ. (உ) "𑌸𑌤𑍍𑌯𑌵𑌾𑌦𑍀 𑌚" "ஸத்யவாதீச" என்னக்கடவதிறே (ங) "𑌯𑌥𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌵𑌚𑌨𑌶𑍍𑌚" "யதாத்ருஷ்டார்த்தவசநஞ்ச" என்னக்கடவதிறே. உபாயமாய் பூதஹிதமுமாயிருக்கும் இரண்டுவார்த்தை சொல்லாமையாலே அப்போதே மெய்யாயிருக்கும் - பெருமாள்வார்த்தை; இவன்வார்த்தை விழுக்காட்டில் மெய்யாயிருக்கும். ராமாவதாரத்தில் மெய்யும் க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யுமிறே ஆஶ்ரிதர்க்குத் தஞ்சம். ஏகரூபனாய், இரண்டுவார்த்தை சொல்லாதே ஆஶ்ரிதரக்ஷணம்பண்ணும் அவன்; தன்னையழியமாறிப் பொய்சொல்லிரக்ஷிக்கும் இவன். பகலையிரவாக்குவது, ஆயுதமெடேனென்று ஆயுதமெடுப்பது, எதிரிகள்மர்மங்களைக் காட்டிக்கொடுப்பதாயிறே ரக்ஷிப்பது. (பொய்களுரைப்பானை) ஒன்றுபோலேயிருப்பது நூறாயிரம்பொய்யாய்த்துச் சொல்லுவது. இவன்பொய் தேட்டமாயிறே "இங்கே போதக்கண்டீரே" என்கிறது.

---

"மாலேசெய்யும்"—தன்பக்கலிலே மாலையுண்டாக்குகை.

"ஏலா" — ஏரா. தகுதியன்றிக்கே என்றபடி. "பொய்களுரைப்பான்" என்கைக்கு பொய் தேட்டமாயிருக்குமோ, மெய்யன்றோ தேட்டமென்ன; அருளிச்செய்கிறார் (மெய்சொல்லுகையித்யாதி.) க்ருஷ்ணன் பொய்சொல்லுவனோவென்ன; அருளிச்செய்கிறார் (𑌯𑌥𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌵𑌚𑌨𑌃 யதாத்ருஷ்டார்த்த வசந மித்யாதி) க்ருஷ்ணன்வார்த்தை பொய்யாகிலும் உபாயபூதனுடைய வார்த்தையாகையாலே ஹிதமுமாயிருக்குமென்றபடி. பொய்யும் மெய்யும் ஹிதமாம்படி எப்படியென்ன; அருளிச்செய்கிறார் (இரண்டு வார்த்தை யித்யாதி.) (விழுக்காட்டிலே) கார்யத்திலே. '"தன்னுடைய ஸ்வாமித்வமும் அவனுடைய தாஸத்வமும்தோற்ற' சிறுவன், என்றபடி பாரீர்" என்று நம்பிள்ளை ஈடுபடுவர்.

---

(க)

(உ) ரா - அ - உ - ௩உ.

(ங)

(மேலாவித்யாதி) மேலேபரந்தவெய்யிலே நோக்குகைக்காக "'விநதை சிறுவன்' என்றபடி என்றான்! ஆண்டாள்" என்றருளிச்செய்வர் வித்தராய் அவனுக்குக் குடையிடுவான் இவனுக்கு பவ்யனாயிறேயிருப்பது; "கர்ப்பதாஸன்" என்னுமாப்போலே. (மேலாப்பின் கீழ்வருவானை) பெரியவுடையார் மேல்வெயிலே படாதபடி ஸம்பாதிமறைத்தாப்போலே, இவனையும் பெரியதிருவடி சிறகின்கீழேநின்று விளையாடக்கண்டோம். ௩.

மூ—கார்த்தண்கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்தி என்னை
ஈர்த்துக்கொண்டுவிளையாடும் ஈசன்றன்னைக்கண்டீரே?
போர்த்தமுத்தின்குப்பாயப் புகர்மால்யானைக்கன்றேபோல்
வேர்த்துநின்றுவிளையாட விருந்தாவநத்தேகண்டோமே. (ச)

ப-ரை. கார் - மேகத்திலே, கண் - குளிர்ந்த, கமலம் - தாமரையலர்ந்தாப்போலிருக்கிற, கண்என்னும் - திருக்கண்களாகிற, நெடு - போனவிடமெங்கும் போய்த தப்பாதபடி அகப்படுத்திக்கொள்ளவற்றான, கயிறு - பாசத்திலே, என்னை—, படுத்தி - அகப்படுத்தி, ஈர்த்துக்கொண்டு - இழுத்துக்கொண்டு, விளையாடும் - விளையாடுமவனாய், ஈசன்றன்னை - ஸர்வேஶ்வரனை க்ருஷ்ணனை, கண்டீரே—; முத்தின்குப்பாயம்போர்த்த - முத்துச்சட்டை பூண்டு, புகர் - புகரையுடைத்தாயிருப்பதொரு, மால் - பெரிய, யானைக்கன்றே போல் - யானைக்குட்டிபோலே; வெயிலும் கானலும் பாராதே பசுகளைப் புல்லுள்ளவிடந்தேடி மேய்க்கையாலே, வேர்த்துநின்று - வேர்வையுற்று நின்று, விளையாட விருந்தா வநத்தேகண்டோம்—.

வ்யா—நாலாம்பாட்டு. (கார்த்தண் கமலக்கண்ணென்னும்) மேகத்திலே ஶ்ரமஹரமான தாமரைபூத்தாப்போலே யாய்த்துத் திருக்கண்களிருப்பது. வடிவுதானே ஆகர்ஷகமா யிருக்கச்செய்தே அதுக்குமேலே அவயவஶோபையும் துவக்கவற்று. (க) "மேகஶ்யாமம்" "மேகஶ்யாமம்" என்னும்படியிறே வடிவுதானிருப்பது.

(விநதை சிறுவனென்றபடி என்றான்) என்றதுக்குத் தாத்பர்யம் - ஆண்டாள் பரிவளாகையாலே, பெரியதிருவடி, தம்முடையதாயாரை கத்ருவானவள் வெய்யிலிலே வைத்தபோது அவ்வெய்யில்தட்டாதபடி தம்முடையசிறகாலே கவித்துக்கொண்டு தாயாரை நோக்கினதாக மஹா பாரதத்திலே சொல்லுகையாலே அதுதோற்றச் சொன்னபடி என்றான்! என்று வித்தராகிறார் என்றருளிச்செய்வர். சிறகென்னும் மேலாப்பு—சிறகாகிற மேல்கட்டி. ௩.

(க) ரா - ஆ - அ௩ - அ.

" கைகேயி வயிற்றிலே பிறந்த தாபமாறுங்கிடீர் குளிர்ந்தவடிவிலே விழிக்கப்பெற்றேனாகில் " என்றானிறே. (கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்தி) திருக்கண்களாகிற பாஶத்திலே அகப்படுத்தி. (கமலக்கண்ணென்னும்) விகாஸம், செவ்வி, குளிர்த்தி, பரிமளம் தொடக்கமானவற்றை யுடைத்தாய், அகவாயில் அநுக்ரஹத்துக்கு ப்ரகாஶத்தைப் பண்ணுமதுவு மாய்த்துத் திருக்கண். (நெடுங்கயிறு) போன விடமெங்கும் போய்த் தப்பாதபடி அகப்படுத்தவற்றா யாய்த்திருப்பது. தப்பாதபடி வளைத்துக் குளிர நோக்கி, என்னை அநந்யார்ஹையாம்படி பண்ணி, என் கார்யம் என்புத்யதீந மல்லாதபடி என்னைத் தன்பக்கலிலே யிழுத்துக் கொண்டு, இதுவே லீலையாயிருக்கும் நிரபேக்ஷன். † (காரித்யாதி) வடிவழகைக்காட்டித் திருக்கண்களால் நோக்கிக் கொண்டிறே இவன் திரிவது. என்னைக் கண்ணழகாலே துவக்கி, நான் " அது அது " என்று வாய்வெருவும்படி பண்ணி, இதுதானே தனக்குப் போதுபோக்காகக்கொண்டு நிரபேக்ஷனா யிராநின்றான்.

(போர்த்த வித்யாதி) முத்துச்சடையிட்டாப்போலே குரு வெயர்ப் பரும்பிப்புகரையுடைத்தான யானைக்கன்றுபோலே யாய்த்து வேர்த்துநின்று விளையாடும்போதிருப்பது. (வேர்த்துநின்று விளையாட விருந்தாவநத்தே கண்டோமே) முதலிலே வேர்க்கக் கடவதன்றிக்கே யிருக்கும் பரமபதத்திலுமன்றிக்கே, தாய் தமப்பனுக் கஞ்சிவேர்க்கவும் மாட்டாதே ப்ரபுவாய் மாலையிட்டிருக்கும் திருவாய்ப்பாடியிலும் காண்கை யன்றிக்கே, ஸ்ரீப்ருந்தாவநத்திலே காணப்பெற்றோம். ச.

மூ.—மாதவனென்மணியினை வலையில்பிழைத்தபன்றிபோல்
ஏதுமோன்றுங்கொளத்தாரா ஈசன்றன்னைக்கண்டீரே ;
பீதகவாடையுடைதாழப் பெருங்கார்மேகக்கன்றேபோல்
வீதியாரவருவானை விருந்தாவநத்தேகண்டோமே. (ரு)

ப - ரை. மாதவன்-ஶ்ரியஃபதியாய், என்மணியினை-மாணிக்கமணிபோலே எனக்கு முடிந்தாளலாம்படி யிருக்குமவனாய், வலையில்-வலையினின்றும், பிழைத்த - தப்பித்திரிகிற, பன்றிபோல் - பன்றிபோலே, ஏதும் ஒன்றும் - தன்

---

நாலாம் பாட்டு. (காரித்யாதி) " கார் " என்றதுக்குத் தாத்பர்ய பேதத்தையும் காட்டா நின்றுகொண்டு ஸ்வாபதேஶத்திலே மீளவு மருளிச்செய்கிறார் (வடிவழகை யித்யாதி.) " குப்பாயம் " - சட்டை ச.

பக்கலுள்ள தொருபொருளையாயினும், கொள - பிறர்கொள்ளும்படி, தாரா - தாராதவனை, ஈசன் றன்னே - க்ருஷ்ணனே, கண்டீரே—; பீதகவாடை-திருப் பீதாம்பரமாகிற, உடை - திருப்பரியட்டமானது, தாழ - தாழ்ந்தசைந்துவர, பெரு - பருத்து, கார்-கறுத்த, மேகக்கன்றேபோல் - மேகக்கன்றானது ஆகாசப் பரப்படங்கலும் நிறைந்துவருமாப்போலே, வீதியார - திருவீதிநிறையும்படி, வருவானே - எழுந்தருளுகிற க்ருஷ்ணனே, விருந்தாவநத்தே கண்டோம்.

வ்யா.—அஞ்சாம் பாட்டு. (மாதவனென்மணியினை) தன்னுடைய ரஸிகத்வம் எனக்கு முடிந்தாளலாம்படி பவ்யனாயிருக்கிறவனே. (வலையில் பிழைத்த பன்றிபோல்) முதலிலே அகப்படாதத்தை அகப்படுத்தலாம்; அகப்பட்டுத்தப்பினத்தைப் பின்னை அகப்படுத்தப் போகாதிறே. ஆசைக்ககப்படா தொழிந்தால் பின்னை அகப்படுத்த பரிகரமில்லை. (ஏதுமொன்று மித்யாதி) தன் பக்கலுள்ளதொன்றும் தாராதே "இத்தலையிலுள்ளதெல்லாம் தன்னது" என்றிருப்பானொருவன்.

(பீதகவாடையுடைதாழ) திருப்பீதாம்பரமானது தாழ்ந்தலைந்துவா. (பெருங்கார்மேகக் கன்றேபோல்) பெருத்துக் கறுத்து அகவாயிலுள்ள தடங்கலும் நீராலே நிறைந்திருப்பதொரு மேகக் கன்றுபோலே. (வீதியாரவருவானை) அம்மேகமானது ஆகாஶப் பரப்படங்கலும் தனக்கிடமாக்கிக்கொண்டு வருமாப்போலேயாய்த்து வீதியெல்லாம் தனக்கிடமாக்கப் பண்ணிக்கொண்டு வரும்படி. (விருந்தாவநத்தே கண்டோமே) ஊரார் பரக்கக்காணுமிடத்திலன்றிக்கே நமக்கேயானவிடத்திலே காணப்பெற்றோம். ரு.

மூ.—தருமமறியாக்குறும்பனைத் தன்கைச்சார்ங்கமதுவேபோல்
புருவவட்டமழகிய பொருத்தமிலியைக்கண்டீரே?
உருவுகரிதாய்முகம்செய்தாய் உதயப்பருப்பதத்தின்மேல்
விரியுங்கதிரேபோல்வானை விருந்தாவநத்தேகண்டோமே. (சு)

---

அஞ்சாம் பாட்டு. (மாதவனித்யாதி) "எட்டினோடிரண்டெனும்கயிறு" என்கிறபடியே, "வலை" என்று - கயிற்றைச் சொல்லுகிறது.

ஆர-திறைய. (க) "పశ్చాద్గవాంగోపసుతైఃపరీతో జలస్వనానన్దితవిశ్వచేతాః। సమ్పూర్యవీథింసవిలాసమాయాద్గోపాలబాలఃకులదైవతంనః" - "பஶ்சாத்கவாம் கோபஸுதை: பரீதோவேணுஸ்வநாநந்திதவிஶ்வசேதா: । ஸம்பூர்யவீதிம்ஸவிலாஸமாயாத்கோபாலபால:குலதைவதம்ந:" இத்யேதத்நுஸந்தேயம். ரு.

---

(க) தி - ச - வி - அரு.

ப - ரை. தருமம் - தயையென்பதை, அறியா - முதலே யறியாதவனாய், குறும்பனை - ஶாத்ரவம்பாராட்டுமவனாய், தன் - தன்னுடைய, கை-திருக்கையிலுள்ள, ஶார்ங்கமதுவேபோல்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யொத்து, வட்டம்-வளைந்து, அழகிய - அழகிதாயிருந்துள்ள, புருவம் - புருவங்களை யுடையனாய், பொருத்தமிலியை - தன்னை நயந்தார்க்குக் கிட்டாதவனான க்ருஷ்ணனை, கண்டீரே—; உருவுகரிதாய் - கறுத்தவடிவையுடையவனாய், முகம்செய்தாய்-சிவந்த முகத்தையுடையனாய், உதயப் பருப்பதத்தின்மேல் - உதய பர்வதத்திலே, விரியும் - தோற்றுகிற, கதிர்போல்வானை - ஆதித்யனை யொத்தவனை, விருந்தாவநத்தே கண்டோம்—.

வ்யா.—ஆறும் பாட்டு. (தருமமறியா) ஆந்ருஶம்ஸ்யமிருக்கும்படி முதலிலே வ்யுத்பத்திபண்ணியறியான். (க) [ஆந்ருஶம்ஸ்யம்பரோ தர்ம: த்வத்த ஏவமயா ஶ்ருத:] - ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்ம: த்வத்த ஏவமயாஶ்ருத:] நீர்வரவிட்ட ஆளின்வாயிலே கேட்டவார்த்தையன்றே; அதுக்குமுன்னம் தம்முடைய வாயாலே யருளிச்செய்ய என் செவியாலே கேட்டதன்றோ? இருவருமாகக் கல்ந்து ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவிலே "நீர்விரும்பி யிருப்பதென்?" என்று கேட்க, "பிறர் நோவுபடக்கண்டால் பொறுக்கமாட்டோம், அதுவேகாண் நாம் விரும்பி யிருப்பது" என்றார். இருவரும் ஒன்றை நினைத்துக் கிடக்கிறார்கள். "இக்கலவிக்குப் பிரிவுவரில் செய்வதென்?" என்று கேட்டாள் அவள்; "நம்மைப் பிரிந்து நோவுபடவிடோம் காண் நாம்" என்றருளிச்செய்தாரானார் அவர். [மயாஶ்ருத: - மயாஶ்ருத:] "இது ஶ்ரவணமாத்ரமே யாய்ப்போமித்தனையோ. அநுஷ்டாநபர்யந்தமாகக் கட்வதன்றோ" என்று கேளீர். (குறும்பனை) ராஜபுத்ரர்க ளாகவேண்டாவோ ஆந்ருஶம்ஸ்ய முடையாராயிருக்கும்போது.

(தன்கையித்யாதி) புறம்பு ஒப்பில்லை. கையிலே வில்லிருந்தால், முகத்திலே யிருக்கக்கடவது கையிலே யிருந்ததீ! என்னும்படியிருக்கும்; புருவத்தைக் கண்டால் முகத்திலே யிருக்கக்கடவதோவில்லு. கையிலே யன்றோவிருப்பது என்னும்படி யா யிருக்கும். ஸர்வதாஸாத்ருஶ்ய மிருக்கும்படி. (பொருத்தமிலியை)

---

ஆறும் பாட்டு. (தருமமித்யாதி) தர்ம்மமறிந்தபேர்தா னுண்டோவென்ன; பெருமா ளறிவரென்கிறார் (ஆந்ருஶம்ஸ்யம்பரோ தர்ம: - ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்ம: இத்யாதி.) குரும்பன் - சாடு. வன்னியன் - அர்த்தம். இடையன் - த்வநி.

---

(க) ரா - ஸு - கஅ - சக.

இவ்வழகுண்டானால் ப்ரயோஜநமென்?, உகந்தார்பக்கல் ரஸம்தொங்கிலும் தொங்கான். (கண்டீரே) அவன் நம்மோடு பொருந்திற்றிலனென்று நமக்கு அவன்பக்கல் ஆசையற்றிராதே. தன்னோடு பொருந்தாமைகாணவாய்த்து இவளாசைப்படுகிறது.

(உருவித்யாதி) கண்டார்கண்குளிரும்படி இருண்டவடிவையுடைத்தாய், யௌவநத்தால்வந்த புகரொடுகையாலே முகம்செய்தாய், உதயபர்வதத்திலே தோற்றுகிற ஆதித்யனைப்போலே யிருக்கிறவனை. (க) [స్వయైవ ప్రభయా మేరు ముదయేవిమలోరవిః - ஸ்வயைவ ப்ரபயாமேரு முதயேவிமலோரவிः] திருவபிஷேகத்துக் கீடாக வொப்பித்து ஸிம்ஹாஸநத்திலே யெழுந்தருளி யிருக்கிற ஸமயமாகையாலே யெல்லாரோடும் நப்பிளித்தின சொல்லைச்சொல்லித் தண்ணளியோடே யிருந்தபடி. (உ) "తత్రగోవిన్దమాసీనం ప్రసన్నాదిత్యవర్చసమ్" "தத்ரகோவிந்தமாஸீநம் ப்ரஸந்நாதித்யவர்ச்சஸம்" என்கிறபடியே (விருந்தாவநத்தே கண்டோமே) திருவாய்ப்பாடியில் மத்யாஹ்நத்திலாதித்யனைப்போலே யாய்த்திருப்பது. சு.

மூ — பொருத்தமுடையநம்பியைப் புறம்போலுள்ளும்கரியானைக்
கருத்தைப்பிழைத்துநின்ற அக்கருமாமுகிலைக்கண்டீரே?;
அருத்தித்தாராகணங்களால் ஆரப்பெருகுவானம்போல்
விருத்தம்பெரிதாய்வருவானை விருந்தாவநத்தேகண்டோமே. (எ)

"தன்கைச்சார்ங்கம்" என்பானேன், வேறு வில்லில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (புறம்பொப்பில்லையென்று.) (ஸர்வதா ஸாத்ருஶ்யம்)-வடிவு மாத்ரமன்றிக்கே கார்யத்தாலு மென்றபடி.

(முகம்செய்கை) - தேஜஸ்ஸு ஒரு முகமாயிருக்கை. "உருவு கரிதாய், முகம்செய்தாய்" என்கிற இரண்டு விஶேஷணமும் - கதிருக்கு விஶேஷணம். இத்தால் - ப்ருந்தாவநத்தில் நெருஞ்சிற்பூ பொன்போலே யிருக்கையாலும் திருமேனி கறுத்திருக்கையாலும் உதயகிரியிலே கறுத்த ஆதித்யன் உதித்தாப்போலே யிருக்கிறதென்றபடி. உதயகிரியி லாதித்யனை ஒப்பாகச் சொன்ன விடமுணடோவென்ன; அருளிச் செய்கிறார். (స్వయైవ ప్రభయా - ஸ்வயைவ ப்ரபயேத்யாதி.) (நப்பிளித்தினசொல்) - சிரித்து விநோதம் சொல்லுகை. இத்தால்-ரூபஸாம்யமு மன்றிக்கே ஸௌலப்ய குணஸாம்யமும் சொல்லுகிறது "ఆదిత్యవర్చసమ్ - ஆதித்ய வர்சஸம்" என்கிறபடியே. ப்ருந்தாவநத்தே கண்டோமென்று பூரிப்பது. சு

(க) (உ) வி - பு.

ப - ரை. பொருத்தமுடைய - தன்னை யாசைப்பட்டவர்க ளிடத்துப் பொருந்தாத ஸ்வபாவத்தில், நம்பியை - பூர்ணனானவனாய், புறம்போல் - திருமேனி நிறம்போலே, உள்ளும் - உள்ளேயும், கரியானை - கறுத்தவனாய், கருத்தை - என் நினைவை, பிழைத்துநின்ற - தப்பிநின்றவனாய், அ - அளவிட்டுச் சொல்லவொண்ணாத அழகையுடைய, கரு - கறுத்து, மா - பெரிதாயிருந்துள்ள, முகிலை - மேகத்தையொத்த திருநிறத்தை யுடையவனை, கண்டீரே—; அருத்தி - அர்த்தித்வத்தை விளைப்பதான, தாராகணங்களால் - நக்ஷத்ர கணங்களாலே, ஆரப்பெருகு - மிகவும் நிறைந்திருந்துள்ள, வானம்போல் - ஆகாசம் போலே, விருத்தம்பெரிதாய் வருவானை - * தன்னேராயிரம் பிள்ளைகளாகிய பெரிய கூட்டத்தோடு வருமவனை, விருந்தாவநத்தே கண்டோம்—.

வ்யா.—ஏழாம் பாட்டு. (பொருத்தமுடைய நம்பியை) "பொருத்தமிலி" என்பது நாட்டில் பொருந்தாதாளவில் நிற்குமென்றன்றோ?. (நம்பியை) பொருத்தத்திலேயும் ஒருகுறை சொல்லலாமோ அவனை. (புறம்போலுள்ளுங்கரியானை) ஏகரூபனாயிருப்பா னொருவனுப்த்து. சக்ரவர்த்திக் திருமகனைப்போலே அகவாயொருபடியாய்ப் புறவாயொருபடியா யிருப்பானொருவனல்லன். (கருத்தை யித்யாதி) புறம்பும் உள்ளுமிருக்கிறபடி. கலக்கிறஸமயத்திலே "பிரியேன், பிரியில் தரியேன்" என்று சொல்லிவைக்குமிறே. நெஞ்சாலே பிரிவை நினைத்திருக்கச்செய்தேயும். அத்தை இவள் மெய்யென்று அத்யவஸித்திருக்கச்செய்தேயும் இவள் நினைவைத் தப்பிக்கொடுநிற்கும். (அக்கருமாமுகிலை) நினைவைத் தப்பினானென்று விடவொண்ணாதபடி யிருக்குமாய்த்து வடிவழகு.

(அருத்தியித்யர்தி) அர்த்தித்வத்தை விளைப்பதாய் ஸ்ப்ருஹணீயமா யிருந்துள்ள தாராகணங்களாலே மிகவும் நிறைந்திருந்துள்ள ஆகாசம்போலே.

---

ஏழாம் பாட்டு. (பொருத்தமித்யாதி) வெறுப்பா யிருக்கச்செய்தே "பொருத்தமுடையன்" என்னலாமோ, "பொருத்தமிலி" என்னவேண்டாவோ வென்ன (பொருத்தமிலி யித்யாதி) நாட்டாரைப்பற்றவும் பொருத்தமிருக்கையாலே வ்யங்க்யமாக "பொருத்தமுடையன்" என்கிறது. "நம்பி" என்றதும் - வ்யங்க்யம். சக்ரவர்த்தித் திருமகனுக்குப் புறம்பு ஶ்யாமமாய் உள்ளு தயை யுண்டாயிருக்கும். "கருத்து" - நினைவு. பிழைத்து - தப்பி.

தாராகணம் - நக்ஷத்ரகணம். சேதநர் ப்ரயோஜநார்த்தமாக நவக்ரஹங்களைம் அபேக்ஷிக்கையாலே (அர்த்தித்வத்தை விளைப்பதாய்) என்கிறது.

(விருத்தம் பெரிதாய் வருவானை) தேஜஃ பதார்த்தங்களி னுடைய திரள்போலேயாய்த்துத் தன்னோடொத்த தாரத்தை யுடையரான தோழன்மார்நடுவே வரும்படி. விருத்தமென்றது - ப்ருந்த மென்றபடியாய், மநுஷ்ய ஸமூஹத்தைச் சொன்னபடி. அன்றியே, "ஆரப்பருகும்" என்று பாடமானபோது-மிக்க விருப் பத்தையுடையராய்க் கொண்டு மநுஷ்யர்களுடைய. திரளாலே அபிநிவிஷ்டமாய்க் கொண்டு பார்க்கப்படா நின்றுள்ள மேகம் போலே யென்கிறது. (க) "நக்ஷத்ரஸமாயாந்தம் பஶ்யமானோ நராதிப:" "நக்ஷத்ரப்பஸமாயாந்தம் பஶ்யமானோ நராதிபஃ" என்னக்கடவ திறே. (விருந்தாவநத்தே) அத்திரளின்நடுவே சோலைப்பார்ப்பா ரைப்போலே காண்கை யன்றிக்கே, ஏகாந்தமாகக் காணப் பெற்றோம். எ.

வெளியசங்கொன்றுடையானைப் பீதகவாடையுடையானை
அளிநன்குடையதிருமாலை ஆழியானைக்கண்டீரே ?; [ல்
களிவண்டெங்குங்கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மே
மிளிரநின்றுவிளையாட விருந்தாவநத்தேகண்டோமே. (அ)

ப - ரை. வெளிய - வெண்மையை யுடைத்தாய், ஒன்று-ஒப்பின்றிக்கே யிருக்கிற, சங்குடையானை - ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை யுடையனாய், பீதகவாடை யுடையானை - சிவந்த திருப்பீதாம்பரத்தை யுடையனாய், நன்கு - மிக்க, அளி யுடைய-தயையுடையனாய், ஆழியானை - திருவாழியாழ்வானைத் திருக்கையிலே யுடையனான, திருமாலை - ஸ்ரீயபதியை, கண்டீரே—; களி-மதுபாநத்தாலே செருக்கித்திரிகிற, வண்டு - வண்டுகளானவை, எங்கும் - எல்லாத்திக்குக்களி லும், கலந்தாற்போல் - பரம்பினாற்போலே, கமழ் - பரிமளிதமாய், பூ - அழகிதா

"பெருகுவானம்" என்று முந்தினபாடம். தாராகணமென்று - நக்ஷத்ர ஸமூஹமாதல்; கணமென்று - மநுஷ்ய ஸமூஹமாதல். அப்போது, அருந் தித்து ஆராதேயிருக்கிற மநுஷ்யரென்றபடி. பார்க்கிறவர்களுக்கு மேகங்கள் போக்யமாமாப்போலே இவனும் போக்யமா யிருக்குமோ வென்ன ; அருளிச் செய்கிறார் (நக்ஷத்ரஸமாயாந்த - நக்ஷத்ரப்பஸமாயாந்த மித்யாதி.) (சோலை யித்யாதி) சோலைபார்க்கை-சோலையை ஸமுதாயேந மேலெழப்பார்க்கை. அப் படியன்றிக்கே ஏகாந்தத்திலே ஸாவயவமாகக் காணப்பெற்றோ மென்றபடி. விருத்தம் - வ்ருத்தம். எ.

(க) ரா - அ - ௩ - ௩௦.

யிருந்துள்ள, குழல்கள் - திருக்குழல்களானவை, தடம் - பெரிதான, தோள் மேல் - திருத்தோள்களிலே, மிளிர - நின்றலைய, நின்று - ஒருபடிப்படநின்று, விளையாட விருந்தாவநத்தே கண்டோம்—.

வ்யா.—எட்டாம் பாட்டு. (வெளியசங்கித்யாதி) ஶ்யாமமான திருமேனிக்குப் பரபாகமான வெண்மையை யுடைத்தாய், கடல் போலே யொப்பின்றிக்கே யிருக்கிற ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை யுடையனா யிருக்கிறவன். (க) "கையிலோர் சங்குடை மைந்நிறக்கடல்" என்னக் கடவதிறே. திருப்பீதாம்பரமும் சிவப்பாலே திருமேனிக்குப் பரபாகமாயிருக்குமிறே. (அளிநன்குடைய) அகவாயில் தண்ணளி மிக்கிருக்கும். அதுக்கு நிபந்தநம். (திருமாலை) பிராட்டியோட்டை வாஸநை. (ஆழியானை) ஸ்ரீ பாஞ்சஜந்யத்தோடே சொல்லில் கண்ணெச்சிலாமென்று, பிரித்து அநுபவிக்கிறாள்.

(களிவண்டித்யாதி) மதுபாந மத்தமான வண்டுகள் பரம்பினுப் போலே பரிமளிதமாய் தர்ஶநீயமாயிருக்கிற திருக்குழல்களானவை திருத்தோள்களிலே நின்றலைய. (மிளிரநின்று விளையாட) திருக்குழலைப் பேணியிருக்கும் திருவாய்ப்பாடியிலன்றிக்கே ஸ்ரீப்ருந்தாவநத்திலே காணப்பெற்றோம். அ.

மூ.—நாட்டைப்படையென்று அயன்முதலாத்தந்த நளிர்மாமலருந்தி
வீட்டைப்பண்ணிவிளையாடும் விமலன்றன்னைக்கண்டீரே?;
காட்டைநாடித்தேநுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய
வேட்டையாடிவருவானை விருந்தாவநத்தேகண்டோமே. (கூ)

ப-ரை. நாட்டைப் படையென்று - லோகங்களை ஸ்ருஷ்டியென்று, அயன் முதலா - சதுர்முகன் தொடக்கமான ப்ரஜாபதிகளை, தந்த - உண்டாக்கின, நளிர் - குளிர்ந்து, மா - பரப்பையுடைத்தாய், மலர் - செவ்வித்தாமரைப் பூவையுடைத்தான, உந்தி - திருநாபியிலே, வீட்டைப்பண்ணி - ப்ரம்ஹாவுக் கிருப்பிடத்தைப் பண்ணிக்கொடுத்து, இதுதானே ப்ரயோஜநமாக, விளையாடும் - லீலாரஸ மநுபவிக்கிற, விமலன்றன்னை - பரிசுத்தனானவனை, கண்டீரே—;

எட்டாம் பாட்டு. (வெளியசங்கித்யாதி) "அளி" - க்ருபை. (உ) "கூராழி வெண்சங்கு" என்னுமாப்போலே கூட வநுஸந்தியாமல் பிரித்து அநுஸந்திப்பா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்ரீ பாஞ்சஜந்யேத்யாதி.) அ.

(க) தி-மொ-எ-கo-உ. (உ) தி-வாய்-சு-க-க.

காட்டை - கம்ஸன் வரவிட்ட க்ஷுத்ரர்களிருந்த காட்டை, நாடி - தேடிச் சென்று, தேநுகனும் - தேநுகாஸுரனும், களிறும் - குவலயாபீடமென்னும் யானையும், புள்ளும் - பகாஸுரனும், உடன்மடிய - ஒரேமுயற்சியாலே மடிந்து போம்படி, வேட்டையாடி வருவானை - வேட்டையாடி வருமவனை, விருந்தாவநத்தே கண்டோம்—.

வ்யா.—ஒன்பதாம் பாட்டு. (நாட்டை யித்யாதி) சிறிதிடம் தானே கைதொட்டு ஸ்ருஷ்டித்து, இவ்வரு குண்டானவற்றை ஸ்ருஷ்டியென்று சதுர்முகன் தொடக்கமான ப்ராஜாபதிகளை யுண்டாக்கின, பரமஹரமாய் இவ்வருகு கார்யவர்க்கத்துக்கெல்லாம் காரணமாகப் போரும் பரப்பையுடைத்தாய் செவ்விப் பூவை யுடைத்தான திருவுந்தியிலே ப்ரஹ்மாவுக் கிருப்பிடத்தைப் பண்ணிக்கொடுத்து, இதுதானே தனக்கு ப்ரயோஜநமாகக்கொண்டு லீலாரஸ மநுபவிக்கிற. (விமலன்) இதொழிய ப்ரயோஜநாந்தரபரதையைக் கணிசியாமையால் வந்தஶுத்தி. "படை" என்கிற ஏகவசநம்- தனியே யென்கிறது. "அயன்றன்னைத்தந்த" என்று பாடமானபோது இவ்வருகுண்டான கார்யவர்க்கத்தையடைய நீயுண்டாக்கென்று சதுர்முகனைத் தந்தவென்றுகப்பெறில் அழகிது என்று போரவிரும்பி யருளிச்செய்வர்.

---

ஒன்பதாம் பாட்டு. (நாட்டையித்யாதி) தனியே ஒருவனைப்படையென்று சொல்லிற்றதுக்குச்சேர, "அயன் றன்னை" என்று பாடமாக வேணுமல்லது, "அயன் முதலா" என்றபோது "படையுங்கோள்" என்று பஹுவசநமாகவேணும்; அது இயலுக்குச் சேராது; ஆகையாலே "அயன் தன்னை" என்றால் அழகிதென்றபடி. "அயன் முதலாத்தந்த" என்றதுக்கு அநுகுணமாக "படையுங்கோள்" என்று பகுவசநமாகச் சொல்லாமல் ஏகவசநமாகச் சொல்லுவா னென்னென்ன (படையென்கிற வித்யாதி.) ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜககர்த்தாப்ரஹ்மாவாய், அவனுடைய நியோகமடியாக இவர்கள் செய்கிறார்களாகையாலே ஈஶ்வரநியோகம் அவர்களுக்கு இல்லை என்று நினைத்து ஏகவசநப்ரயோகம் பண்ணுகிறதென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்வர். (க) "తత్రోపనస్స దేనోక్తః ప్రజాస్స్రుజమహామతే" "தத்ரோபநஸ்ஸதேநோக்தஃ ப்ரஜாஸ்ஸ்ருஜமஹாமதே" என்னக்கடவதிறே. (தனியே என்கிறது)என்றது- ப்ரம்ஹா ஒருவனைச் சொல்லுகிற தென்றபடி. "நளிர்"-குளிர்த்தி.

---

(க)

ஸ்நஷ்டித்து விட்டோமாகில் மேலுள்ளது தானேசெய்து கொள்ளுகிறனவென்று விடுகை யன்றிக்கே, தானே கைதொட்டு வன்னியமறுத்துக்கொடுக்கும்படி சொல்லுகிறதுமேல் (காட்டை யித்யாதி) பைபல்கள் கிடந்த தூறுகளெல்லாம் புக்குத்தேடி, தேநுகன், குவலயாபீடம், பகாஸுரன் இவர்களடைய ஏகோத் யோகத்திலே நிரஸ்தர்போலே யிருக்க வாய்த்து அழியச்செய்தது. (விருந்தாவநத்தே) (க) "ஃருஃஸ" "பர்க்தாரம்" என்கிறபடியே அணைக்கைக்கு ஏகாந்தமானவிடத்திலே காணப்பெற்றோம். கூ.

மூ.—பருந்தாட்களிற்றுக்கருள்செய்த பரமன்றன்னைப் பாரின்மேல்
விருந்தாவநத்தே கண்டமை † விட்டுசித்தன்கோதைசோல்
மருந்தாமென்றுதம்மநத்தே வைத்துக்கொண்டுவாழ்வார்கள்
பெருந்தாளுடையபிரானடிக்கீழ்ப்பிரியாதென்றுமிருப்பாரே.(கo)

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

நாச்சியார்திருமொழி முற்றிற்று.

---

ப-ரை. பரு - பருத்த, தாள் - காலையுடைத்தான, களிற்றுக்கு - ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு, அருள்செய்த - க்ருபைசெய்தருளின, பரமன்றன்னை - ஸர்வஸ்மாத்பரனை க்ருஷ்ணனை, பாரின்மேல் - பூமியிலே, விருந்தாவநத்து - ஸ்ரீ ப்ருந்தாவநத்திலே, கண்டமை - கண்டமையை, விட்டுசித்தன் - பெரியாழ்வார் திருமகளாரான, கோதை - ஆண்டாளருளிச்செய்த, சொல் - சொல்லை, மருந்தாமென்று - பிறவிநோய்க்கு மருந்தாமென்று, தம்மநத்து - தங்கள் மநஸ்ஸிலே, வைத்துக்கொண்டு வாழ்வார்கள் - வைத்துக்கொண்டு வாழுமவர்கள், பெரு - நிரதிசயபோக்யமா யிருந்துள்ள, தாளுடைய-திருவடிகளையுடையனாய், பிரான் - உபகாரகனானவனுடைய, அடிக்கீழ் - திருவடிகளிலே, என்றும்-எக்காலத்திலும், பிரியாதிருப்பார் - பிரியாதிருக்கப்பெறுவர்கள்.

வ்யா.—நிகமத்தில். (பருந்தாளித்யாதி) பருத்துப்பெரிய காலையுடைத்தாய்; ஶரீரம்பெருத்ததனையும் பாடாற்ற வரிதாயிருக்குமிறே; அப்படிப்பட்ட ஆனையானது, தன்னிலமல்லாத வேற்று நிலத்திலே புக்கு முதலையின்வாயிலே யகப்பட்டு இடர்பட்ட அதினுடைய ஆர்த்தத்வநி செவிப்பட்ட வநந்தரம் ஆயுதாபரணங்களை

"நாடி" - தேடி. "களிறு" - யானை. கூ.

---

(க) ரா - ஆ - ௩௦ - ௩௯.

அக்ரமமாக தரித்துக்கொண்டு மடுவின் கரையிலே அலைகுலையத் தலைகுலைய வந்து, அது பட்ட புண்ணாறும்படி முகங்கொடுத்து, ரக்ஷகத்வத்தில் தன்னை யெண்ணினால் பின்னை யொருவரில்லாத படியா யிருக்கிறவனை. (க) "[illegible]" "பரமாபதமாபந்ந:" என்னுமாப்போலே. இதினுடைய விடாயடையத் தனக்கு பூர்வ க்ஷணத்தி லுண்டானபடியும், அதினிடரைப்பரிஹரித்தாப்போலே தன்னிடரைப் பரிஹரித்தபடியும் சொல்லுகிறது.

(பாரித்யாதி) ஸ்ரீ வைகுண்டத்தி லன்றிக்கே பூமியிலே யாய், அது தன்னிலும்திருவாய்ப்பாடியிலன்றிக்கே ஸ்ரீப்ருந்தாவநத்தே கண்டமையை. (விட்டுசித்தன் கோதை சொல்) காட்சிக்குக் கை முதலிருந்தபடி. (மருந்தாமென்று) இதுதான் ஸம்ஸார பேஷஜ மென்று தந்தாமுடைய ஹ்ருதயத்திலே வைத்துக்கொண்டு "[illegible]" "நபிபேதிகுதஸ்சந" என்கிறபடியே யிருக்குமவர்கள், பரமப்ராப்யமாய் நிரதிசய போக்யமாயிருந்துள்ள திருவடிகளை யுடையவன் திருவடிகளிலே. (பிரியாதென்று மிருப்பாரே) சிலரை "கண்டீரே" என்று கேட்கவேண்டாதே, என்று மொக்கத்தங்கள் கண்ணாலே கண்டு நித்யாநுபவம் பண்ணுமிதுவே யாத்ரையாகப் பெறுவர். ௧௦.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

நாச்சியார்திருமொழி பதிநாலாம்திருமொழி வ்யாக்யானம் முற்றிற்று.

---

நிகமத்தில். (பருந்தாளித்யாதி) இப்போது ஆனைக்கருள் செய்ததைச் சொல்லுவா னென்னென்ன ; அருளிச்செய்கிறார் (பரம[illegible]ாபந்ந இத்யாதி) (உ) "ఉక్త్యా ధనంజయవిభీషణలక్ష్యయా తే ప్రత్యాయ్య లక్ష్మణమునేర్భవతా వితీర్ణమ్। శ్రుత్వా వరం తదనుబంధమదావలిప్తే నిత్యం ప్రసీద భగవన్మయి రంగనాథ" "உக்த்யா தநஞ்ஜயவிபீஷணலக்ஷ்யயாதே ப்ரத்யாய்யலக்ஷ்மணமுநேர்ப்பவதாவிதீர்ணம் । ஶ்ருத்வாவரந்ததநுபந்தமதாவலிப்தே நித்யம்ப்ரஸீதபகவந்மயிரங்கநாத "என்கிற ஶ்லோகம் கைம்முதலுக்கு ஸம்வாதம். "பெருந்தாள்" என்கையாலே - ப்ராப்யாதிக்யமும் போக்யதையும் சொல்லுகிறது. ௧௦.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

நாச்சியார் திருமொழி அரும்பதம் முற்றிற்று.

---

(க) விஷ்ணுதர்மே - ௬௯ - ௪௭. (உ)